

ஓம்

தொல்காப்பிய முனிவரால் இயற்றப்பட்ட

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

(இரண்டாம் பாகம்)

உரைவிளக்கக் குறிப்புக்களோடு

டும் சேறலானும், தமதுரையுள் இவர் பெயரையே எடுத்துக் கூறலானும் பெறப்படும்.

இவர் இளம்பூரணர் கருத்தை மறுப்பது உகூஅ-ம் உஅக-ம் சாங.ச-ம் சச௦-ம் சூத்திரவுரை முதலியவற்றாலும், நச்சினார்க்கினியரிவருரையை மறுப்பது முதலியன செய்யுளியலுரையானும், இவர் பெயரை எடுத்துக்கூறுவது களவியல் ரு-ம் சூத் திரவுரை முதலியவற்றானுமறியப்படும்.

வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இவர்க்கு முந்தியவரென்பது, அவர் பெயரை கூசகூ-ம் சூத்திரவுரையுள் எடுத்துக் கூறலானும்,

பாட்டியன் மரபுநூலாரும் இவர்க்கு முந்தியவரென் பது அந்நூற் பெயரை கூகூக-ம் சூத்திரவுரையுள் எடுத்துக் கூறலானும் பெறப்படும். நன்னூலார்க்கும் இவர் பிந்தியவர்

என்பது அவர் கொண்ட பகுபதமுடிபை இவர் கூகூரு-ம் சூத்திரவுரையுள் எடுத்துக்காட்டி மறுத்தலானும், அவர் சூத்திர அடிகளை எடுத்துத் தொடுத்து கூகூ௦-ம் சூத்திரவுரையுட் கூற லானும் பிறவாற்றானும் அறியப்படும்.

இன்னும் இவர் பொருளதிகாரத்து ஏனையவியல்களுக்கும் உரைசெய்துள்ளாரென்பது உகூசு-ம் சூத்திரவுரையுள் களவியலுட் கூறினமென்றும் உகூஎ-ம் சூத்திர உரையுள் அகத்திணையியலுட் கூறினமென்றுங் கூறலானும், வேறு சூத்திர வுரைகளினுங் குறிப்பாக உணரக்கிடத்தலானும் அறியப்படும். அன்றியும், இவர் முன்னையவதிகாரங்கட்கும் உரை செய்திருக்கலாமென்பது சிற்சில சூத்திரவுரைகளானே ஒருவாறு ஊகிக்கலாம்.

இவர் ஊர் கால முதலியன அறியமுடியவில்லை. ஆயினும் இவர் காலம் 14-ம் நூற்றாண்டளவில் இருக்கலாமெனச் சிலர் கருதுவர். ஆராய்ந்துணர்க.

---

# சிறப்புப்பாயிரம்

"உயிரிளங்குமரன்" நாடக நூலாசிரியரும்,
கலாவிற்பன்னரும், கவிஞருமாகிய
**நவாலியூர், ஸ்ரீமாந் க. சோமசுந்தரப் புலவரவர்கள்**
இயற்றியது.

## ஆசிரியப்பா

விண்டொடு நெடுவரை மந்தரந் நிறுவி
அண்டரும் பிறரும் பண்டைநாட் கடையப்
புண்ணியப் பாற்கட லீன்ற தண்ணிய
விண்ணவ ரமுதம் வெள்கி வாயூற
நாற்பய னாகிய நாற்பய னுடனே

நாச்சுவை யென்று செவிச்சுவை யென்று
மேற்படு மொன்பது விதச்சுவை யென்று
பல்வகைச் சுவையு மெல்லவர் தமக்கும்
உண்டிட வுதவுந் தண்டா வமுதருள்
செந்தமிழ்த் தெய்வத் திருமொழிக் கடறருஞ்
சந்தனப் பொதியத் தவமுனி தனது
சுந்தரச் சேவடி தொழுதுகற் றுயர்ந்த
பல்காப் பியமுணர் தொல்காப் பியனருள்
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியநூல்
எழுத்துஞ் சொல்லும் பொருளு மென்ன
வழுத்திய மூன்று வகுப்பிற் றுங்கதன்
எழுத்தும் சொல்லும் பழுத்தநூற் புலவர்
உரையுடன் வைத்துப் புரைதப வாய்ந்து
கற்போர் முட்டறப் பொற்புடன் வெளியிட்
டந்நா ளருளின னங்கது போல
வன்னமும் பதமும் மாசறக் கற்ற
பின்னரா ராயும் பெரும்பொருள் கற்புழிக்
கொள்வோ ருள்ளமுங் கொடுப்போ ரறிவும்
ஒள்ளிய வுணர்வுபெற் றுவகை பூப்பக்
கண்ணிய வுரையொடு நுண்ணிதி னாய்ந்து

பொருத்தமும் விருத்தமும் திருத்தமுங் காட்டுங்
குறிப்பும் விளக்கமு நெறிப்பட வமைத்துப்
பேரா சிரியப் பெருநா வலன்றன்
உரைதனைத் தெளிவுற வுணர்த்துமோ ருரைதனை
திருவருள் கூட்டச் செய்தனன், யாரெனின்;
பொன்னிலங் காபுரிப் பொற்கொடி தனது
சென்னியி லணிந்த திருமணி முடிபோல்
மன்னுயாழ்ப் பாண வளநக ரதனில்
நன்னா வலர்புகழ் புன்னாலைக் கட்டுவன்
வளமிகு பதியுதி யிளவள ஞாயிறு;
கடவுட் கற்பிற் காசிபன் மரபு
புடவியில் விளக்கப் புகுந்த புதுமதி;
முந்நூல் மந்திர முதுமறை யாளன்;
சிங்நயக் குரிசில் செய்த மாதவம்;
தூவமர் தண்டமிழ்ப் பூவலயங்

தொழும்
நாவலர் பெருமான் நயந்திடு
மருமான்
தத்துவ நெறியறி வித்துவ
சிரோமணி
பொன்னம் பலப்பெயர்ப்
புண்ணிய னிடத்தும்
மன்னிய வளம்பெறு சுன்னை மா
நகரான்
குறுமுனி யென்ன வறிவினி
லுயர்ந்தோன்
மறுவறு குமார சுவாமியென்
றோதும்
வரமுறு புலவன் மாட்டும்
பெறுமிறை
தொன்னூற் கல்வித் துறையெலா
மொருங்கே
பண்ணுட் பயின்று பழகிய
பண்டிதன்;
இலக்கியப் பொன்மலை; இலக்கண
வரநதி;
நலத்தகு சைவ நன்னூற்

பாற்கடல்;
புண்ணிய நீறு சண்ணித்த
மேனியன்
அண்ணலைந் தெழுத்து
மெண்ணுநன் னாவினன்;
முன்னவன் சேவடி மன்னிய வுளத்தன்;
கற்றவர் விழையுங் கணேசைய னென்னும்
அற்புத நாமத் தருந்தவ; னதனைக்
கடும்போ ரேதுவிற் காகிதம்
முட்டி
இடும்பைமீக் கூர விரங்குமிந்
நாளிற்
கண்கவர் வனப்பு மெண்பெறு சிறப்பும்
நன்கொருங் கமைய வின்புடன் முயன்றே

xvii

எழுதா வெழுத்திற் பழுதறப்
பதிப்பித்
துழுவ லன்புட னுலகினுக்
களித்தனன்,
மன்னிய சிறப்பிற் சென்னையம் பதியிற்

றிருமகள் நிலையத் தொருதனி யதிபதி
ஈழ கேசரித் தாளினைப் பரப்புந்
தாமரச் சிறப்பிற் றண்டமி ழறிஞன்
நன்னய மிகுந்த **பொன்னைய** நாமம்
மண்ணகம் விளங்கிட வந்த
புண்ணிய முயற்சிப் புகழ்ப்பெரி
யோனே.

---

கொழும்பு அரசினர் கல்லூரித் தமிழாசிரியராயிருந்தவரும்,
வித்தகப் பத்திராசிரியரும்,

சுன்னுகம், அ. குமாரசுவாமிப் புலவரவர்களிடங் கற்று
விற்பன்னராகி விளங்குபவருமாகிய

**தென்கோவை, பண்டிதர் ஸ்ரீமாந் ச. கந்தையபிள்ளை**

அவர்கள் இயற்றியது.

## ஆசிரியப்பா

அமிர்தமா ருருவா மருணிலை
யளிக்குந்
தொல்காப் பியனெறி தோன்றத்

தெரிக்குந்
தொல்காப் பியமெனுந் தொல்லிய
னூலின்
மெய்ப்பாடு முதலாச் செப்புநான்
கியலேயும் பேரா சிரியராம் புலவர்
பெருந்தகை
உலகிய னுடி யுஞற்றுபே ருரையுடன்
பிரதிபல கொண்டு வழுவற நாடிக்
கற்றோர் மற்றோர் யாவருங் கையுறு
கனியெனச் செம்பொருள் கண்டுநனி மகிழக்
குறிப்புரை விரிவா னெறிப்பட நிகழ்த்தினன்;
பன்மாண் புறுவளம் பழுநிய
தொன்மா
இலங்கைப் பெயரிய வீழநன்
னுட்டின்
திருமுக மாகி மருவியாழ்ப் பாணப்
புன்னேயம் பதியிற் றன்னிகர் காசிப
குலவிளக் காகிக் குலவுபே ரறிஞன்;
iii

சின்னைய விப்பிரன் பன்னாட்
புரிதவப்
பெற்றியே யுருவா யுற்றிடு
புதல்வன்;
செந்தமி ழிலக்கணச்
செழுங்கடன் முகந்து
தண்டமிழ் வாணர் தமதுளப்
புலமெலாங்
குளிர்ப்பப் பொழியுங்
கொண்டலே யனையான்;
மணங்கமழ் தெய்வத் திளநலந்
திகழுங்
கந்தழி சான்ற விந்துமத நிலைஇய
அமலமுதற் படியாம் விமலவாழ் வருளும்
விக்கின விநாயகன் மெய்ப்பத நாளும்
மறவாது வழுத்தும் வரமுறு பெரியோன்;
இத்தலம் புகழு மிணையிலா
வியற்றமிழ்
**வித்துவ கணேச** விப்பிர மணியே.
இந்நா லுரையைமுன் னியம்புரைக் குறிப்புடன்
அழகுற வச்சி லமைத்து வழங்கும்
ஈழ கேசரி யிதழுக் கதிபனும்
**பொன்னைய** நாம மன்னிய

செம்மல்
தன்னுளங் கொண்ட
தமிழ்மொழி யார்வப்
பெற்றியு மம்ம பெறலருங்
குரைத்தே.



## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧ | ௨௧ | குறிப்புக்களை | சுவைக்குறிப்புக்களை |
| ௮ | ௨௪ | குறிப்பு | சுவைக்குறிப்பு |
| ௫ | ௨௭ | பொருளென்றது | பெயரென்றது |
| ௧0 | ௧௫ | கூறுதும் | கூறும் |
| ௧௨ | ௩௪ | சுருக்குதல் | கண்ணைச்சுருக்கி நோக்குதல் |
| ௧௯ | ௪ | மருட்கை | மருட்கைச் |
| ௨௯ | ௩௩ | வருவது | வருவன |
| ௩0 | ௩0 | உவகைப்பொருளாம்! | உவகைப்பொருளாம்; |
| ௩0 | ௩௨ | உணரவைத்தான் | உணரவைத்தான். சூதிரத்தில் எண்ணி உணரவைத்தான் எனினும் கருதிஉணரவைத்தான் எனினுமாம். |
| ௩௧ | ௩0 | இது | இவை |
| ௪0 | ௩௧ | ஒரு ஆண் மகனது | பெண்பாற் கைக்கிளை பற்றி ஒருஆண்மகனது |
| ௪0 | ௩௩ | வேண்டும். | வேண்டும். அது பொருந்துவது முற் பிறந்த மெய்ப்பாடுகளுக்கு முன்னேகூறினென்று கூறலா மெனினும்; அஃதாவது என்பதை அங்ஙனம் பிரித்துக் கூறும் வழக்கு வேறிடத்திற் காணுமையின் பிழை யிருத்தல்வேண்டுமென்றும். |
| ௪௪ | ௨௩ | போலர் | பேரலர் |
| ௪௭ | ௨௪ | அதுவோ | அதுவே |
| ௫௧ | ௧0 | ஞெழுங்க | ஞெமுங்க |

| | | | |
|---|---|---|---|
| ௫௬ | ௧௦ | அவை | இவை |
| ௫௮ | ௪ | மதலே | மாலே |
| ௬௧ | ௩௩ | தவிர்த்தல் | தவிர்தல் |
| ௭௬ | ௯௯ | இதனே | இவ்வுரைக்கருத்தை |

XX

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௭௮ | ௯௫ | பெறப்படும், | பெறப்படும். மார்பிற் சுணங்கு—மார்பின் முயக்கத்தாலாகிய (இவள் முலேயிற்) சுணங்கினழகையும். 'நின்மார்பு' என்னும் பிரயோகம் அடையடுத்தும் அடாதும் வருவனவும், நுந்தைமார்பு என்பதுபோல்வனவும் ஆரும் வேற்றுமைப் பொருளிலேயே கலியில்வருதலின் ஈண்டும் ஆருவதே பொருத்தமும் நேர் பொருளுமாதல் காண்க. நச்சிஞர்க்கினியரும் ஆருவதற்கு, தொல். எச்ச. ௬௭-ம் சூத்திர உரையில்உதாரணமாக இதனேயே காட்டுகின்றனர். கலியில் வேறு கூறுவர். அதனே உ.தாரணச் செய்யுளுரையிற் காண்க. |
| ௭௧ | ௩௩ | சிறப்பின்று | சிறப்பில |
| ௮௪ | ௮ | சுருக்குதல் | சுருக்கி நோக்கல் |

| | | | |
|---|---|---|---|
| ௮௪ | ௧௬ | வாய்மையல்லாத | வாயிற்பொருந்திய |
| ௮௫ | ௨௦ | தோலாகித் திரங்கிதுலை | தோலாந் தன்மையோடு திரங்கித்துளை |
| ௮௬ | ௪ | தன்னை | தான் |
| ௮௬ | ௧௮ | மகள் | மகன் |
| ௯௪ | ௭ | பொருந்தாது | பொருந்தாதும் |
| ௯௪ | ௭—௮ | (பயனின்றிக் கழிந்தது போல்) | பயனின்றிக் கழிந்தது போல் |
| ௧௦௯ | ௧௪ | உசுரு | உகரு |
| ௧௧௪ | ௨௮ | ஒடிற்றெனவா | ஒடிற்றெனலா |
| ௧௨௦ | ௭ | இம்முன்னமாதியவெ | இவ்வுதாரணங்களெ |
| ௧௨௬ | ௨௨ | ஒத்துவரல் | ஒத்தல் |
| ௧௨௬ | ௩௧ | இரட்டை | உவமை, இரட்டை |
| ௧௨௭ | ௨௭ | அது | அதுவும் |
| ௧௩௦ | ௩௧ | இழுக்கில | இழுக்கிலது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧௩௩ | ௩௧ | [4]என்பது...இல்லை | ——— |
| ௧௩௪ | ௨ | படாது | படாது, |
| ௧௪௧ | ௨௮ | சுருங்கல் | கண்மூடல் |
| ௧௪௯ | ௧௦ | ஒவ்வாதனவும் | ஒவ்வாதெனவும் |
| ௧௫௧ | ௧௩ | சிவத்த | சிவந்த |
| ௧௫௪ | ௧௪ | ணிருக்கழி | ணிருங்கழி |
| ௧௫௫ | ௩ | சொல்லுதும் | சொல்லும் |
| ௧௫௫ | ௨௩ | பாத்தியிற் | பாத்திக் |
| ௧௫௮ | ௧ | வாவிழை | வாலிழை |
| ௧௫௮ | ௧௧ | பண்புப் | பண்புங் |
| ௧௬௨ | ௩௨ | தன் | தங் |
| ௧௬௩ | ௩௧ | தந் | தன் |
| ௧௮௮ | ௨௫ | சேறுகி | சேறுக |
| ௧௮௯ | ௬ | மாந்தளிர்போலும் | கரிய |
| ௧௮௯ | ௧௧ | என்னூற் | எண்ணூற் |
| ௧௮௯ | ௧௪ | வந்தது | வந்தன |
| ௧௮௯ | ௨௮ | அவ்விடத்து | அவ்விடத்து. |
| ௧௯௧ | ௧௫ | குவிந்த | குவித்த |
| ௧௯௫ | ௩௪ | விரும்பிய | விரும்பிப் |
| ௧௯௬ | ௧௮ | துழாஅய் | துழாய் |
| ௧௯௬ | ௩௪ | உரைக்க | உணர |
| ௧௯௬ | ௩௯ | வேறுபடுவர் | இன்று வேறுபடுவர் |
| ௧௯௭ | ௩ | இன்று | ——— |
| ௧௯௭ | ௧௪ | இலை | ஓலை |
| ௧௯௭ | ௩௦ | ஆவி | ஆலி |
| ௨௦௨ | ௩௪ | [5]என...மாகும் | ——— |
| ௨௦௫ | ௩௪ | தொகுத்த...பாடம். | தொகு...இல்லை என்பது தொகுத்ததாமெனவும் பாடம். எண்ணி அம் மூன்றனையும் எனவும் பிரிக்கலாம். |
| ௨௧௫ | ௧௪ | படுத் | பகுத் |
| ௨௨௯ | ௮ | குற்றியலுகரம் | குற்றியலிகரம் |
| ௨௩௨ | ௪ | முற்றியலுகரம் | முற்றியலுகரமும் |

| | | | |
|---|---|---|---|
| | | [illegible] | [illegible] |
| உ௩௬ | ௬ | அசையும் | அசையையும் |
| உ௩௮ | உஉ | அகலல் | அகவல் |
| உ௪௧ | உ௧ | கருவிளம் | கருவிளங்காய் |
| உ௪௩ | உ௮ | எழுவாய்ச் | எழுவாய் |
| உ௪௪ | ௩உ | நிறையும் | நிறையுமென்பது |
| உ௪௮ | ௩௧ | அகவல்வெண்பா | அகவல், வெண்பா, |
| உ௫௫ | ௧௩ | மூவகை | மூவசை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௫௫ | ௧௫ | மூவகை | மூவசை |
| ௨௬௦ | ௬ | னுவலா | னுவலா |
| ௨௬௧ | ௪௧ | நேர்பு நிரை நிரைபு | நேர்பு நிரைபு நிரைபு |
| ௨௭௪ | ௨௬ | நாணுத்தலை | நீடுகொடி |
| ௨௭௧ | ௧௩ | உரியசைபாற் | உரியசையாற் |
| ௨௭௧ | ௨௭ | சீரன்று | சீரல்ல |
| ௨௮௪ | ௬ | நிரைதட்டல் | [3]நிரைதட்டல் |
| ௨௮௪ | ௨௨ | என்று பொருள் கொள்வேமோ | என்றுசொல்லாமோ |
| ௨௮௫ | ௨௬ | கொள்வேமோ | கொள்ளுதல் செய்யாமோ |
| ௨௮௭ | ௧௮ | திரிந்த நிலைமை | திரிந்த நிலைமை வஞ்சியுரிச்சீர் |
| ௨௮௭ | ௧௮ | ஒருமை | இயற்று என ஒருமை |
| ௨௮௭ | ௨௭ | நிரையிற்று | நிரையியற்று |
| ௨௮௮ | ௨௪ | அதன்மறுப்பு | அதன் மறுப்பு :— |
| ௩௦௬ | ௩௧ | நில்லாது | நில்லா |
| ௩௦௭ | ௩௦ | எட்டுக்கும் | எட்டற்கும் |
| ௩௧௦ | ௩௧, ௩௨ | சமனிலை, வியனிலை | சமநிலை, வியநிலை |
| ௩௧௫ | ௨ | தடப | தட்ப |
| ௩௬௧ | ௨௬ | ஆரிடம் | ஆரிடப்போலி |
| ௩௬௭ | ௩௧ | மணிகை | மணிவெண்ணகை |
| ௩௭௦ | ௩௦ | படுக்க | பருக்க |
| ௩௭௩ | ௨௭ | பண்ணை | பெண்ணை |
| ௩௮௩ | ௬௧ | நிம | நிர |
| ௩௮௪ | ௩௧ | கோடவின் (அற்றன்று) | கோடலின், 'அற்றன்று' |
| ௩௮௭ | ௧ | நிரை | நரை |
| ௩௯௪ | ௨௯ | சனம். என நெடிலுங் குறிலும் | சினம். என நெடிலும் நெடிலும் |
| ௩௯௪ | ௩௩ | இவற்றில் உயிர்கள் அனுவல்ல. | இவையும் வருக்கமெனப் படா. |
| ௩௯௬ | ௨௨ | இகரம் | அகரம் |
| ௪௦௩ | ௩௫ | செவ்வி | செவ் |
| ௪௧௮ | ௩௭ | எழுதப்பட்டது. அது | எழுதப்பட்டன. அவை |
| ௪௩௨ | ௧ | விருந்தினமா | விருந்தினவா |
| ௪௩௨ | ௫ | பவ | பல |

| | | | |
|---|---|---|---|
| ௪௬௭ | ௩௦ | நிற்றலிற் | நிற்றலிற் |
| ௪௬௮ | ௧௧ | உடையுறுப்புப் போறலி னால் | உறுப்புடைமையால் |
| ௪௬௮ | ௧௫ | (௪௩௩) | —— |
| ௪௭௬ | ௨௮ | பயன்று | பயின்று |
| ௪௭௧ | ௩௦ | "அடக்கியல்...ஒக்கும் என்னுஞ் சூத்திரத்தை. | "போக்கியல்.....வைப்பெனப்படுமே" என்னுஞ் சூத்திரவிதியை. |
| ௪௮௩ | ௩௨ | புகழ்தல். | புனைந்துரைத்தல். |
| ௪௮௪ | ௨௭ | திரை | திரைபோல்வது. |
| ௪௯௪ | ௨௪ | மதுலர | மதுரை |
| ௪௯௬ | ௨ | தரங்கவென் | தரங்கமென் |
| ௫௧௪ | ௩௨ | பிறிதொன்று—பொடி | பிறிதொன்று — ஆற்றத்தக்க பிறிதொன்று. உமியும் நீரும் பெய்து ஆற்றுவது இக்கால வழக்கு. பிறிதொன்றிற் பெய்து என்றுமிருந்திருக்கலாமோ என்பது ஆராயத்தக்கது. |
| ௫௧௪ | ௧௪ | ஆராகித்தது என்றது... உருகியது. | ஆராகித்தது என்றது.... அருது கடுகிச் சென்றது. செய்வது செல்வது என்றிருந்திருக்கலாமோ? ஆய்க. |
| ௫௫௪ | ௨௬ | ஆயினென்றே | ஆயினன்றே |
| ௫௬௩ | ௨௭ | நச்சினார்க்கினியர் | சிவஞானமுனிவர் |
| ௫௬௮ | ௨௫ | கண்டநங்கருங்கண்... பாடம் | கண்டனகண்...பாடம், அது பொருத்தமில்லை. |
| ௫௬௯ | ௧௧ | சுவா | [4]சுவா |
| ௫௬௯ | ௧௪ | [4]மந்திரம் | மந்திரம் |
| ௫௭௦ | ௨௭ | தோன்றுமை | பொருள் தோன்றுமை |
| ௫௮௪ | ௧௭ | பெருங்காண் | பெருங்கான் |
| ௫௮௬ | ௨௨ | கிழவி | கிளவி |
| ௫௮௭ | ௬ | கிழவி | கிளவி |
| ௫௯௦ | ௮ | வாயினெ | வாயிலெ |
| ௫௯௦ | ௨௧ | மென்பது; | மென்பது. |
| ௬௧௨ | ௨௦ | க-ம் சூத்திரம் | செய்யுளியல்க-ம் சூத்திரம் |

| | | | |
|---|---|---|---|
| ௬௨௪ | ௨௨ | ஏறெனப்படுதலின், | ஏறெனப்படுதலின், |
| ௬௩௫ | ௨௬ | [1] அல்லவை | [1] உரையின்படி, அல்லவை |
| ௬௩௯ | ௨௯ | கூறினமையான் | கூறினமை |
| ௬௪௨ | ௨௫ | மட்டிச்சுண்ணம்பு | மட்டி; சிப்பிவகையுளொன்று |
| ௬௪௪ | ௨௩ | ஆகும் | ஆரும் |
| ௬௪௯ | ௨௯ | வழங்கா... ஆராயத் தக்கது. | ஆறொடுதிரியாத: இயைபு நோக்கித் திரிந்து என்றும் பொருள் கொள்ளலாம். |
| ௬௫௧ | ௨௫ | சி. வை. தாமோதரம் பிள்ளை | —— |
| ௬௫௩ | ௩௦ | உள்ளது | உள்ளன |
| ௬௫௬ | ௩௭ | பிணவம் | பிணவல் |
| ௬௬௮ | ௨௯ | பரசுராமன் | பரசுராமன் தந்தை |
| ௬௭௦ | ௩௩ | இயல்பு | தொழில் |
| ௬௮௨ | ௩௧ | ஒன்பதாக | ஒன்பதாமோத்தாக |
| ௬௮௯ | ௩௦ | இலக்கண... நூலுள்ளும் | வழக்கு நூலாகிய இலக்கண நூலுள்ளும் |
| ௬௮௯ | ௯௧ | அற்றன்று... தில்லை. | —— |
| ௬௯௦ | ௯௦ | 'வேதப்... நூல் | —— |
| ௬௯௧ | ௩௨ | காண்டிகையுரை | விரிவுரை |
| ௭௦௭ | ௨௪ | கொண்டு | கொண்டமையின் |
| ௭௦௭ | ௩௨ | ஆதலின்... என்றார் | ஆதலின் இவர் கருத்துப் பொருந்தாது என்க. |
| ௭௨௧ | ௧௯ | தொல்-எழு. ௬௧ | —— |
| ௭௨௨ | ௭ | வகையினி | வகையினும் |
| ௭௨௯ | ௨ | கோர்த்தி | சேர்த்தி |
| ௭௩௪ | ௨௭ | ளகரம் ளகரம் | ளகரம் ரகரம் |
| ௭௫௮ | ௩௩ | ௯௬௩ | ௬௬௩ |

## சில பாடபேதக் கருத்து

| | | |
|---|---|---|
| கூக | உ | நிதிமேனின்றமரம் சி. வை., S. கனக...பதி.<br>நிதிமேனின்றமனம் ச. பவா ,,<br>நதிமேனின்றமரம் என்று மிருந்திருக்கலாம். |
| கூக | கஎ | அடுத்த மார்பு சி. வை., ச. பவா.,<br>S கனக. பதிப்பு.<br>வடுத்தமார்பு என்று மிருந்திருக்கலாம்.<br>இளம்பூரணருரை யுதாரணம்<br>நோக்கியுணர்க. |

# மெய்ப்பாட்டியற் சுருக்கம்

---

'மெய்ப்பாடாவது: உலகத்தாருள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதொருவழியால் வெளிப்படுதல்' என்றும், 'மெய்ப்பாடு - பொருட்பாடு' என்றுங் கூறு வர் பேராசிரியர். பொருள் - உள்ள நிகழ்ச்சி (சுவைக்குறிப்பு). பாடு - வெளிப்படுதல். படுதல் - தோன்றல் - வெளிப்படுதல். உலகத்தாருள்ளநிகழ்ச்சி என்றது,

உலகத்திலுள்ளானொருவன் ஒரு பொருளைத் தன் பொறியால் உணர்ந்தவிடத்து அப்பொருள் காரணமாக அவனுள்ளத்து நிகழும் நிகழ்ச்சி (சுவைக்குறிப்பு) என்றபடி. புலப்படுவதொருவழி என்றது சத்துவத்தினை. ஒருவ னுள்ளத்தே நிகழ்வது உடம்பின் வேறுபாட்டால் தோன்று மென்பது,

"அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்."

என்று தேவர் கூறுதலானும் அறியப்படும்.

இனி இளம்பூரணர்,

"உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதன்
மெய்ப்பா டென்ப மெய்யுணர்ந் தோரே."

என்று செயிற்றியனார் கூறலின், "அச்சமு (தலியனவு) ற்றான் மாட்டு நிகழும் அச்சம் (முதலியன) அவன்மாட்டு நிகழுஞ் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாந்தன்மை மெய்ப்பாடு" என்றும்,

‘மெய்யின்கட்பட்டுத் தோன்றலின்

மெய்ப்பாடாயிற்று’ என்றுங் கூறுவர். உய்ப்போன் - அநுபவிப்போன் (= சுவைப்போன்) என்றபடி.

“காதல காத லறியாமை யுய்க்கிற்பின்
ஏதில வேதிலார் நூல்.” (அதி. சச—செய். க0) என்னும் குறளுரையில்

‘உய்க்கிற்பின் - அநுபவிக்கவல்லனாயின்’ என்று பரிமேலழகர் கூறலுங் காண்க. உய்த்தல் - செலுத்தல்.

அஃது ஈண்டு மனத்தைச் செலுத்தி அநுபவித்தன்மேனின்றது.

“உய்த்தாடித் திரியாதே உள்ளமே” என்பது தேவாரம்.

2

‘மெய்ப்பாடு—மெய்க்கட்பட்டு விளங்குந் தோற்றம்’ என்பர் வீரசோழியகாரரும்.

சொற்பொருளால் வேறுபடினும் வரைவிலக்கணங்களை உற்று நோக்கும்போது யாவர் கருத்தும் ஒன்றாகும்.

இனி, நாடகநூலார் கூறிய மெய்ப்பாட்டுப் பொருள்கள் முப்பத்திரண்டென்றும், அவை பதினாறாயும், அப்பதினாறும் எட்டாயும் அடங்குமென்றுந் தொல்காப்பியனார் கூறுவர்.

மெய்ப்பாடுகள் முப்பத்திரண்டாவன: சுவைக்கப்படுபொரு ளும், அதனை நுகர்ந்த பொறியுணர்வும் அது மனத்துப்பட்ட வழி உள்ளத்து நிகழுங் குறிப்பும், அக்குறிப்புக்கள் தோன்றிய உள்ளங் காரணமாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய சத்துவங்களும் என்னும் நான்கனோடும் மெய்ப்பாடு எட்டையும் உறழ முப்பத்திரண்டு பொருளாம்.

**சுவைப்பொருளாவன:** நகை முதலிய

சுவைக்குக் காரண மாகிய பொருள்கள்.

**சுவையாவது:** நகை முதலிய சுவைக்குரிய பொருள்களும் சுவைப்போனுடைய பொறியுங் கூடியவழி நிகழு மனவுணர்ச்சி. இதுபற்றியே,

"இருவகை நிலத்தி னியல்வது சுவையே."

என்றார் பிறரும். இச்சுவையைக்குறித்துப் பேராசிரியர் உரைக்கு மிடத்து, "இருவகை நிலத்தி னியல்வது சுவையே" என்னுஞ் சூத்திரத்துள் இருநிலமென்பன உய்ப்போன் செயலுங் காண்போ னறிவும் என்னும் இரண்டிடமும் என்று பொருள் கூறுவார் கருத்தை மறுத்து, இருநிலமென்பன சுவைக்கப்படு பொருளுஞ் சுவைப்போனுமென்னும் இரண்டிடமுமே என்று நாட்டி யுரைத்தலின் அவருரையையும் விளங்குதற்பொருட்டு ஈண்டுக் காட்டுதும். அது வருமாறு:—

"இனி இருவகை நிலமென்பன உய்ப்போன் செய்தது காண்போற்கெய்துதலன்றேயெனின்,

சுவையென்பது ஒப்பிஞ ஞய பெயராகலான்
வேம்பு சுவைத்தவன் அறிந்த கைப்பறி விஜே
நாவுணர்விஞற் பிறஞுணரான், இவன்
கைப்புச் சுவைத்தா னெனக் கண்ணுணர்விஞன்
அறிவதன்றி. அதுபோல, அச்சத் துக்கு
ஏதுவாகிய ஒருபொருள் கண்டு அஞ்சி
ஓடிவருகின்ரு

3

ஞெருவஜே மற்ருெருவன் கண்டவழி,

இவன் வள்ளெயிற்றரிமா

முதலாயின கண்டு அஞ்சிஞனென்றறிவதல்லது வள்ளெயிற் றரிமாவிஜேத் தான் காண்டல்வேண்டுவதன்று. தான் கண்டா ஞயின் அதுவுஞ் சுவையெனவேபடும். ஆகவே, அஞ்சிஞஜேக் கண்டு நகுதலும் கருஜேசெய்தலும் கண்டோர்க்குப் பிறப்ப தன்றி அச்சம் பிறவாதாகலான் உய்ப்போன் செய்தது காண்போ ஞய்த்த அறிவின்பெற்றியாற் செல்லாதாகலின், இருவகை நில மெனப்படுவன சுவைப்பொருளும் சுவைத்தோனுமென இரு நிலத்தும் நிகழுமென்பதே பொருளாகல்வேண்டுமென்பது." கண்டோர்க்குச் சுவை பிறவாதென்று பேராசிரியர் மறுத்துக் கூறிய அதனுல் கண்டோர்க்கும் சுவை பிறக்குமென்று கூத்த நூலாருட் சிலர் கூறுவரென்பது பெறப்படும்.

**குறிப்பாவது:** பொறியுணர்வு மனத்துப்பட்டவழி உள் ளத்து நிகழுஞ் சுவைக்குறிப்பு.

**சத்துவமாவது :** அவ்வுள்ளநிகழ்ச்சி பிறந்தவழி உடம்பின் கண் தாமே தோன்றும் வேறுபாடு. அவையாவன : மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுக்கல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு என்னும் பத்துமாம். இளம்பூரணர்க்கும் இதுவே கருத்தென்பது, "பேயானும் புலியானும் கண்டாணொருவன் அஞ்சியவழி (அவன் கண்) மயக்கமும் கரப்பும் நடுக்கமும் வியர்ப்பு முளவாமன்றே, அவற்றின் அச்சத்திற்கேதுவாகிய புலியும் பேயும் சுவைக்கப் படுபொருள். அவற்றைக்கண்ட காலந்தொட்டு நீங்காது நின்ற அச்சம் சுவை. அதன்கண் மயக்கமும் காத்தலும் அச்சக்குறிப்பு. நடுக்கமும் வியர்ப்பும் சத்துவம். இவற்றுள் நடுக்கமும் வியர்ப்பும் பிறர்க்கும் புலனுவன என்று கொள்க. ஏனைய மனநிகழ்ச்சி. பிறவுமன்ன. இவற்றின் விரிவை நாடகநூலிற் காண்க." என்று கூறுதலான் அறியப்படும்.

இங்ஙனம் பேராசிரியரும் இளம்பூரணரும் மனத்து நிகழ்வன சுவையும் குறிப்பும் என்றும், அச்சுவை உடம்பின் வழியாகப் பிறர்க்குப் புலனுவது சத்துவம் என்றும் கூறுதலானே, சுவையும் குறிப்பும் அகத்து நிகழும் மெய்ப்பாடுகள் என்பதும், சத்துவம் புறத்து நிகழும் மெய்ப்பாடு என்பதும் பெறப்படும். இதுபற்றியே,



"உண்ணிகழ் தன்மை புறம்பொழிந் தோங்க
எண்மெய்ப் பாட்டி னியல்வது சுவையே."

என்றார் தண்டியாசிரியரும் என்க.

இனி, பேராசிரியர் கருத்தின்படி
தொல்காப்பியரும் புறத்து
நிகழுஞ் சத்துவத்தைபும் அகத்து நிகழுங் குறிப்பையும் சுவையு
ளடக்கி அகத்து நிகழுஞ்
சுவைமெய்ப்பாட்டையே கூறினா
ரென்பது, அவர் பொருளுஞ் சுவையுமாகப் பகுத்துக் கூறும்
மெய்ப்பாட்டுச் சிறப்புச் சூத்திரங்களாலே யறியப்படும்.
படவே,
அகத்துக்கண் சுவையானே சுவைக்குறிப்பும் அதனாற் சத்துவ
மாகிய புறத்து நிகழும் மெய்ப்பாடுகளும் தோன்றும் என்
பதும், புறத்து நிகழும் மெய்ப்பாட்டானே அகத்து நிகழுஞ்
சுவை அறியப்படுமென்பதும் பெறப்படும்.
ஆகவே, ஒருவனுள்
ளத்து நிகழுஞ் சுவையை அறிதற்குக் கருவி அச்சுவையாற்
றோன்றும் சத்துவங்களென்பதும், அவற்றை அறிதற்குக் கருவி

அறிவோனுடைய கண்ணும்
செவியுமென்பதும், சுவைக்குக்
காரணமாகிய சுவைக்கப்படுபொருளை
யறிதற்குக் கருவி
சுவைப்போனுடைய ஐம்பொறிகளென்பதும்
அறிந்துகொள்ளப்
படுமென்க. சத்துவங்களை அறிதற்குக் கருவி
அறிவோனுடைய
கண்ணும் செவியுமென்பது,

" கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி
னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோ ளெண்ணருங்
குரைத்தே."
என்று தொல்காப்பியனார்
மெய்ப்பாட்டியலினிறுதியிற் கூறுத
லானும், சுவைக்கப்படு பொருளை அறிதற்குக்
கருவி சுவைப்போ
னுடைய ஐம்பொறியென்பது
தொல்காப்பியர் பொருளும் சுவையு
மாகப் பகுத்துக் கூறலானும்,
" பொறியுணர் வொடுமொரு பொருளினை

யெதிர்ந்த

நெறியுடை மனத்து நிகழ்தரு பான்மை

அயலவ ருறப்புறத் தாய்ப்பொரு

ளெட்டின்

இயல்வது சுவையென் றியம்பினர்

புலவர்.''

என்னும் மாறனலங்கார சூத்திரத்தானும் அறிந்துகொள்க.

சுவைக்கப்படு பொருள்களை ஐம்பொறிகளாலுணர்ந்து சுவைக்குமாற்றிற் குதாரணம் வருமாறு:—

இவள் மேனி அணைபோலும்; இது பரிசத்தாலறிந்து

சுவைத்தது. இக்கனி அமிழ்தம்போலும்; இது நாவாலுணர்ந்து

5

சுவைத்தது. இவள் மேனி மாந்தளிர்போலும்; இது கண்ணு

லுணர்ந்து சுவைத்தது. இவள் கூந்தல் பூவின் நாற்றமுடையது; இது மூக்காலுணர்ந்து சுவைத்தது. இவள் மொழி யாழிசைபோலும் இனிமையுடையது; இது செவியாலுணர்ந்து சுவைத்தது.

புறத்து நிகழும் மெய்ப்பாட்டை யுணரும் கருவிக்குதாரணம் பின்னர்க் காட்டுதும்.

இனித் தண்டியலங்காரசாரநூலார், 'மெய்ப்பாடாவது, (ஒருபொருளை) நேராகக் கண்டதுபோலத் தோன்றுங் கருத்து' என்றும், 'இவை நாட்டியத்திலும் காப்பியத்திலும் செய்கைத் திறத்தினாலும் சொற்றிறத்தினாலும் தூண்டப்பட்ட வாசனையின் திண்மையால் தம்மவையேபோல அநுபவநிலையில் வந்து ஆநந்தமாகவே நிற்பன' என்றும் கூறுவர்.

செய்கைத்திறம் என்றது அவிநயத்தை. அவிநயம் எட்டுச் சுவையோடுங் கூடலாமென எட்டுவகையாம். அவற்றுள் வீரச்சுவை யவிநயமாவது :—

" வீரச்சுவை யவிநயம் விளம்புங் காலை
முரிந்த புருவமுஞ் சிவந்த கண்ணும்
பிடித்த வாளுங் கடித்த வெயிறும்
மடிந்த வுதடுஞ் சுருட்டிய நுதலும்
திண்ணென வுற்ற சொல்லும் பகைவரை
யெண்ணல் செல்லா விகழ்ச்சியும் பிறவும்
நண்ணு மென்ப நன்குணர்ந் தோரே."

என்பதாம்.

ஏனைச் சுவைக்குரிய அவிநயங்களையும், சிலப்பதிகாரம் அரங் கேற்றுகாதை நோக்கி அறிக. இவ்வபிநயத்தைப்பற்றிக் கம்பரும் ஒரு செய்யுளிற் கூறியுள்ளார். அது,

" கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுத
லேற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே."

(கம்பரா. பால. உண். உரு)

என்பது. மாது மறிக்கும் என இயைக்க. இன் உவமவுருபு.

**சொற்றிறமாவது :** வன்சொல் மென்சொல் முதலியன. அவ்வச் சுவைக்கேற்ப வன்மையும் மென்மையுமான

சொற்கள் தொடர்ந்திருப்பதே சுவைக்குக் காரணமாம். வன்மையு மென்

6

மையுமான எழுத்துக்கள் அவ்வச் சுவைக்கேற்பத் தொடர்தலேச் சுவைக்குக் காரணமாகக் கூறுவாருமுளர்.

சிருங்காரம் (உவகை), கருணை (அழுகை), சாந்தம் (சமநிலை): இவை மூன்றும் மென்மையான சுவை. ரவுத்திரம் (கோபம்), பீபற்சம் (இளிவரல்), வீரம்: இவை மூன்றும் வன்மையான சுவை. ஆசியம் (நகை), பயானகம் (அச்சம்), அற்புதம் (அதிசயம்): இவை மூன்றும் நடுநிலைச் சுவை என்பது ஒருசாரார் பாகுபாடு.

சிருங்காரமும் (உவகையும்), கருணையும் (அழுகையும்) மிகுமென்மை. ரவுத்திரமும் (கோபமும்), பீபற்சமும் (இளிவரலும்) மிகுவன்மை. ஆசியமும் (நகையும்), சாந்தமும் (சமநிலையும்), அற்புதமும் (வியப்பும்) சற்றுமென்மை. வீரமும், பயானகமும் (அச்சமும்) சற்றுவன்மை என்பது ஒருசாரார் பாகுபாடு.

இவைகளெல்லாம் அவ்வச் சுவைக்கேற்ப வன்மை மென்மை இடைமைச் சொற்களாலே ஆக்கப்படும் எனக. மென்மைக்கும் வன்மைக்கும் முறையே உதாரணம் வருமாறு:—

" கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ."

" பாம்பு கயிருக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயி

லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ."

" கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ."

இது சிருங்காரம் (உவகை). மென்மை.

" இடித்து ரப்பி வந்து போரெ திர்ந்த யேல டர்ப்பனென்
றடித்த லங்கள் கொட்டி வாய்ம டித்த டுத்த லங்குதோள்
புடைத்து நின்று ஆர்த்த பூசல் புக்க தென்ப மிக்கிடந்
துடிப்ப வங்கு றங்கு வாலி திண்செ வித்தொ ளைக்கணே."

இது ரவுத்திரம் (கோபம்). வன்மை. சொற்றிறம் என்ப தற்குப் பிறவாறு கருத்துக் கூறுவாருமுளர்.

இனி வடநூலார், ஒருவன் ஒருபொருளைக் கண்டவிடத்து அப்பொருள் காரணமாக அவன் மனத்துக்கண் சூக்குமமாகத்

தோன்றுங் காதன்முதலிய
சுவைத் தோற்றத்தை (அஃதாவது சுவையின்
முளையை) ஸ்தாயிபாவம் (நிலையான
மனக்கருத்து) என்றும், அச்
சுவைத்தோற்றத்திற்குக் காரணமான பொருளை
விபாவம் என்றும், அச் சுவைத்தோற்றத்தை
வெளியே வெளிப் படுத்தும் உள்ளநிகழ்ச்சியை (க்
குறிப்பை) அநுபாவம் என்றும், அச்
சுவைத்தோற்றத்தின் விரிவாய் உடம்பின்வழியாக
வெளிப்
படும் மனவிகாரங்களை (விறலை)ச் சாத்துவிகபாவம் என்றும், அதன்
வளர்வுக்குக் காரணமாய் அதனை நிறைவுபடுத்தி
நிற்பனவற்றை (துணைமெய்ப்பாட்டை)ச்
சஞ்சாரிபாவம் என்றும், அச் சுவைத்
தோற்றமானது வளர்ந்து அவனாலே சுவைக்கப்படுதலினாலே,
சுவையை இரசம் என்றுங் கூறுவர். எனவே ஒருவனிடத்துச்
சுவைத்தோற்றமானது விபாவங்களாற் றோன்றி
அநுபாவங்க
ளான் வளர்ந்து சஞ்சாரிபாவங்களாற் புஷ்டியடைந்து அவனாற்
சுவைக்கப்படுதலினாலே சுவை ஆகின்றது என்றபடி.. ஸ்தாயிபாவம்
எனப்படும் சுவைத்
தோற்றம் (சுவைமுளை) ஒன்பது வகைப்படும்.
அவையாவன: காதல், சிரிப்பு, துன்பம், கோபம், எழுச்சி (முயற்சி),

பயம், அருவருப்பு, ஆச்சரியம், அடக்கம் என்பன. காதலன்றி உவப்பும் உவகைக்கு ஏதுவாம். இவை ஒருவனுள்ளத்திற் றோன்றியபோது, நிலேயாய்த் தடைப்படாமல் வளர்ந்து பால் தயிரானாற் போலச் சுவையாக மாற்றமடைகின்றன. சுவையும் ஒன்பது வகைப்படும். அவையாவன : உவகை (சிருங்காரம்), நகை (ஹாஸ்யம்), அவலம் (கருணே), வெகுளி (உருத்திரம்), பெருமிதம் (வீரம்), அச்சம் (பயானகம்), இளிவரல் (பீபற்சம்), மருட்கை (அற்புதம்), நடுநிலே (சாந்தம்) என்பன. இவற்றுள், சாந்தம் உலகியல் நீங்கினார் பெற்றியாகலின் அஃதொன்று மொழித்து ஏனைய எட்டுமே நூல்களாற் கூறப்படுகின்றன.

அவலம், தனக்கு வருந் துன்பம் பற்றியது அவலம் என்றும் பிறர்க்கு வருந் துன்பம் பற்றியது கருணையென்றும் இரு வகைப்படும் என அறிந்துகொள்க. இனி விபாவமும் ஆலம்பந விபாவமும் உத்தீபந விபாவமும் என இருவகைப்படும்.

ஆலம்பந விபாவமாவது : ஒருவனுள்ளத்திற்றோன்றும் சுவைத் தோற்றத்திற்குக் காரணமாயுள்ள பொருள். உத்தீபந விபாவமாவது : அப்பொருளைச் சார்ந்தும் சாராமலும் பொருந்திச் ருக்குமமான சுவைத்தோற்றத்தை வளர்க்கும் பொருள்.

இளம்பூரணரும் பேராசிரியரும் உள்ளத்தில் நிகழ்வது குறிப்பு என்றும், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தால் உடம்பின்கணுண்டாகும் வேறுபாடு சத்துவமென்றுங் கூறுவர். வட நூலாருட் சிலர் உடம்பினுருவிலிருந்து தோன்றும் மனோதர்மத்தைக் குறிப்பு (அநுபாவம்) என்றும், உடம்பின்வழியாக வெளிப்படும் மன விகாரங்களைச் சாத்துவிகம் என்றுங் கூறுவர். சாத்துவிகபாவம் அநுபாவத்தினின்றும் வேறுபட்டதும் வேறு படாததுமாயிருத்தலினாலே அநுபாவத்துட் சாத்துவிகம் அடங்குமென்பாருமுளர். இவற்றின் வேறுபாடுகளை ஆராய்ந்துணர்ந்துகொள்க.

இனித் தொல்காப்பியர் கூறியவாறு, மெய்ப்பாடுகளையும், அவை உண்டாதற்குக் காரணமான பொருள்களையும் இங்கே காட்டுதும்.

மெய்ப்பாடுகள் எட்டாகும். அவையாவன: நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை என்பன.

இவற்றுள் நகைச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன : இகழ்ச்சியும் இளமையும், அறிவின்மையும், மடமும் என்பன. இவை காரணமாக நகை தோன்றும்.

அவலச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :—இகழ்ச்சியும், இழத்தலும், நிலை வேறுபடலும், வறுமையும் என்பன. இவை காரணமாக அவலம் ( அழுகை ) தோன்றும்.

இளிவரற்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :— மூப்பும், பிணியும், வருத்தமும், மென்மையும் என்பன. இவை காரணமாக இளிவரல் தோன்றும். இளிவரலெனினும், இழிபு எனினும், அருவருப்பு எனினு மொக்கும்.

வியப்புச்சுவைக்குக் காரணமாகிய பொருள்களாவன :— புதுமையும், பெருமையும், சிறுமையும், ஆக்கமுமென்பன. இவை காரணமாக வியப்புத் தோன்றும்.

அச்சச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :— வருத்

தூங் தெய்வமும், விலங்கும், கள்வரும், இறைவரும் என்பன. இவை காரணமாக அச்சந் தோன்றும்.

9

வீரச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :— கல்வி யும், தறுகண்மை (அஞ்சாமை) யும், புகழும், கொடையும் என்பன. இவை காரணமாக வீரம் பிறக்கும்.

வெகுளிச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :— தன்னுறுப்பைச் சிதைத்தலும், தன்குடிக்குக் கேடுசூழ்தலும், தன்னறிவையும் புகழையுங் கொன்றுரைத்தலும், தன்னை அலைவு செய்தலும் என்பன. இவை காரணமாக வெகுளி பிறக்கும்.

உவகைச்சுவைக்குக் காரணமான பொருள்களாவன :— செல்வநுகர்ச்சியும், அறிவுரையும், புணர்ச்சியும், விளையாட்டும் என்பன. இவை காரணமாக உவகை பிறக்கும்.

இவற்றுள் நகை முதலிய நான்கும் தன்கண் தோன்றும் பொருள் காரணமாகவும் பிறன்கண் தோன்றும் பொருள் காரணமாகவுந் தோன்றுவனவாம். அச்சமும் வெகுளியும் பிறன் கண் தோன்றும் பொருள் காரணமாகத் தோன்றும். வீரமும் உவகையும் தன்கண் தோன்றும் பொருள்காரணமாகத் தோன்றும். உவகை பிறரின்பம்பற்றியும் தோன்றும். நகை முதலிய இச்சுவைகள் எட்டனையும் பேராசிரியர் காட்டிய உதாரணங்களை நோக்கி அறிந்துகொள்க.

இனி, நகை முதலிய சுவைகளெட்டனையும் எளிதினறிந்து கொள்ளுதற்கு உதாரணமாக பிற்கால இலக்கியங்களுள் ஒவ்வொரு செய்யுள் எடுத்துக்காட்டி வடமொழி நூலின் விதியையுந் தழுவி முறையே விளக்குதும்.

## நகை

"திருதர்த மருளும் பெற்றே னின்னலம் பெற்றே னின்றே
டொருவருஞ் செல்வத் தியாண்டு முறையவும் பெற்றே னன்றே
திருநகர் நீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்த தென்று
வரிசிலை பிடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்."

இதன்கண், சூர்ப்பநகை கூற்றைக் கேட்டு இராமனுக்கு மனத்திற்றோன்றிய சிரிப்பு—ஸ்தாயிபாவம். சூர்ப்பநகையின் கூற்று—பொருள் (ஆலம்பனவிபாவம்). அவள் பேதைமையான

கருத்தைப் பலதரமும் நினைத்தல்—உத்தீபநவிபாவம். வெறுப்பு, எள்ளலுரை முதலியன—குறிப்பு (அநுபாவம்). இராமன் கடிவன கடிதல் (வரைவு) — துணைமெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). அவள் பேதைமைபற்றி வந்த நகை—சுவை (இரசம்) ஆகும்.

b

10

## அவலம்

உரனெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி-மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நானிருந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ விவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த வண்ணாவோ வண்ணாவோ.

இதன்கண், சூர்ப்பநகைக்குத் தன்னுறுப்பை யிழத்தலா லுண்டான துன்பம் — ஸ்தாயிபாவம். உறுப்பையிழத்தல் — பொருள் (ஆலம்பநவிபாவம்).

அற்றவுறுப்புக்களா லுண்டாகும்
வருத்தமும், இரத்தஞ் சொரிதலும்,
பிறர்க்கு காணலும் முத
லியன — உத்தீபநவிபாவம்.
உறுப்பையிழத்தலா லுண்டான
மயக்கம்,
அரற்றுரை முதலியன—குறிப்பு(அநுபாவம்).
கண்ணீர்
வார்தல், அழுகைக்குரல் முதலியன—விறல் (சாத்துவிகம்).
உறுப்
பறுதலா லுண்டான மனக்கலக்கம், சோர்வு
முதலியன — துணை
மெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). தன்
உறுப்பையிழத்தலா லுண்
டான அழுகை—சுவை (இரசம்) ஆகும்.

## இளிவரல்

காசொடு மணியும் பூணுங் கரியதாங் கனகம்
போன்றும்
தூசொடு மணியு முந்நூ ரேறரு தோற்றம்
போன்றும்
மாசொடு கருகி மேனி வனப்பழிந் திடலூர்

வந்தான்

சசியென் றுரு மெள்ளத் திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்,

இதன்கண் திரிசங்குவின் தோற்றத்தை ('உடம்பு வேறு

பாட்டை) க் கண்டு ஊரவர்களுக்கு உண்டான அருவருப்பு—ஸ்தாயிபாவம். திரிசங்குவின் தோற்றம்—பொருள் (ஆலம்பநவிபாவம்). அவனணிந்திருந்த வஸ்திரம், அணி, பூணூல் முதலியவற்றின் வேறுபாடு—உத்தீபநவிபாவம். அவனுடம்பின்கண் வைத்த வெறுப்பு, மயக்கம், எள்ளலுரை முதலியன—குறிப்பு (அநுபாவம்). அருவருப்பாலுண்டான நடுக்கம், புளகம் முதலியன—சாத்துவிகபாவம். மனத்தடுமாற்றம் முதலியன—துணை மெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). இளிவரல்—சுவை (இரசம்).

## வியப்பு

பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை
யல்லால் என்பிறங் கழகிற் கெல்லை யில்லையா மென்று
நின்றுள் கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே
கண்ட பெண்பிறந் தேனுக் கென்று லென்படும் பிறருக்
கென்றுள்.

இதன்கண், சீதையினழகைக்கண்டு சூர்ப்பநகைக்கு உண்டான ஆச்சரியம் — ஸ்தாயிபாவம். சீதையினழகு — பொருள் (ஆலம்பநவிபாவம்). அழகின் மிகுதி—உத்தீபநவிபாவம். அழகின் மயங்கலும், அதனைப் பலமுறை நோக்கலும், வியப்புரையும் — குறிப்பு (அநுபாவம்). பெண்பிறந்தேனுக்கென்றமை யானே பெண்களைக்கண்டு பெண்களுக்குக் காதலுண்டாகாமையாகிய பெண்டன்மை பெறப்படலின் அது தன்மையென்னும் துணைமெய்ப்பாட்டுளடங்கும். என்படும் பிறருக்கென்பதுமது. என்னை? ஆண்டன்மை பெறப்படலின். மயங்கிநிற்றல், களிப்பு முதலியன—விறல் (சாத்துவிகபாவம்). அழகின் புதுமைபற்றி உண்டான வியப்பு—சுவை (இரசம்) ஆகும்.

## அச்சம்

**கைத்தல மொன்று நீண்ட காய்ப்புடை வெரிநிற் போட்ட**
**வைத்தலை பிடிப்ப வொன்று புகாத்தலைப் பாகு பற்ற**
**மொய்த்தலை வெய்திப் பின்முன் பார்த்திடு முகத்த ராகி**
**யெய்த்தலி னிருதாள் சோர வேகுவார் வணிக ரெல்லாம்.**

இதன்கண், யாற்றினெழுந்த யானையைக்கண்டு வணிகருக்குண்டான பயம்—ஸ்தாயிபாவம். யானை—பொருள் (ஆலம்பநவிபாவம்). அதன் பெருமையும், வருகையும், தம்மைக் கொல்லும் என்ற நினைவும் தடுப்பாரின்மையும் — உத்தீபநவிபாவம். அடிக்கடி பின்பக்க நோக்கலும், ஓடலும் —குறிப்பு (அநுபாவம்). பயத்தாலுண்டான நடுக்கம், வியர்வை முதலியன—விறல் (சாத்துவிகபாவம்). வெரூஉதல், இடுக்கண் முதலியன— துணைமெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). களிற்றாலுண்டான அச்சம்—சுவை (இரசம்) ஆகும். இது விலங்குபற்றிய அச்சம்.

தடுத்து மற்றிவை யுரைத்தலும் வெய்யசூர் தடக்கை
புடைத்து வெய்துயிர்த் துரப்பியே நகைநிலாப் பொடிப்பக்
கடித்து மெல்லித ழதுக்கிமெய் பொறித்திடக் கனன்று
முடித்த னித்தலை துளக்கியே யின்னன மொழிவான்.

இதன்கண், சிங்கனுடைய வார்த்தையைக்கேட்டு சூரனுக்குண்டான கோபம்—ஸ்தாயிபாவம். சிங்கனுடைய வார்த்தை—பொருள் (ஆலம்பநவிபாவம்). அவைக்களமும், பகைவரை வியத்தலும் முதலியன — உத்தீபநவிபாவம். கைபுடைத்தல், வெய்



துயிர்த்தல், உரப்பல், நகைத்தல், இதழதுக்கல், கனலல், தலை துளக்கல்—குறிப்பு (அநுபாவம்). கோபத்தாலுண்டான நடுக்கம், வெயர்வை முதலியன—விறல் (சாத்துவிகபாவம்). முனிவு, மனத்தடுமாற்றம், நடுக்கம்

முதலியன—துணைமெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). தன் பெருமையைக் *கொன்றுரைத்தலால் வந்த வெகுளி—சுவை (இரசம்) ஆகும்.

## வீரம்

ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.

இதன்கண், இராமன் போரிலே சேனையிழந்து தனித்து நின்ற இராவணனைக் கொல்லாது நாளைவாவென நல்க எண்ணியது — ஸ்தாயிபாவம். இராவணன் — பொருள் (ஆலம்பந விபாவம்). அவன் தனிமை—உத்தீபநவிபாவம். நாளைவாவென்றல் — குறிப்பு (அநுபாவம்). இரக்கம் — விறல் (சாத்துவிக பாவம்). தன்வலி மிகுதியும், தனித்தவனைக் கொல்லுதல் முறையன்று என்னு நீதியை ஆராய்ந்த ஆராய்ச்சியும்—துணைமெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). உயிர்க் கொடைபற்றி வந்த வீரம்— சுவை (இரசம்) ஆகும்.

## உவகை

நல்லியன் மகர வீணைத் தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச வேல்கிடந் தனைய நாட்டத்
தெல்லியன் மதிய மன்ன முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந் தோகையி னுடி னுரே.

இதன்கண், இராமன் வில்வளைத்தமை பற்றி மகளிருக்குண்டான உவகைத்தோற்றம் ஸ்தாயிபாவம். இராமன் வில்வளைத்தமை—பொருள் (ஆலம்பந விபாவம்). அதனால் சீதை கல்யாணம் நிறைவேறுமென்ற கருத்து—உத்தீபநவிபாவம். பாடலும் ஆடலும்—குறிப்பு (அநுபாவம்). உவகையாலுண்டான புளகம் களிப்பு முதலியன—விறல் (சாத்துவிகபாவம்). உள்ளமகிழ்ச்சி—துணைமெய்ப்பாடு (சஞ்சாரிபாவம்). உவகை—சுவை (இரசம்) ஆகும். இச்செய்யுளிலும் முற்செய்யுள்களிலும் வந்த குறிப்புக்கள் வடமொழிநூல்களின் விதிப்படி எழுதப்பட்டன.

## 13

மெய்ப்பாட்டியலுக்கு உரைகூறிய உரைகாரர் சொல்லிய சில முறைக்கும் வடமொழி நூல்களிற் சிலர் கூறிய முறைக்கும் சில வேறுபாடுகள் காணப்படலின் அவற்றை உணர்ந்துகொள்ளற்பொருட்டு வடமொழி நூல்களிற் கூறும் மெய்ப்பாடுபற்றிய

விதிகளை இங்கே எடுத்துக்காட்டினும்.
வடநூல்களுள்ளும் வேறுபாடுகள் காணப்படலின்
அவ் வேறுபாடுகளையும் ஆராய்ந் துணர்ந்துகொள்க.

தொல்காப்பியர் கூறிய 'உடைமை யின்புறன் முதலிய' துணை மெய்ப்பாடுகள் முப்பத்திரண்டாவன :—உடைமை, இன்புறல், நடுவுநிலை, அருளல், தன்மை, அடக்கம், வரைதல், அன்பு, கைம் மிகல், நலிதல், சூழ்ச்சி, வாழ்த்தல், நாணுதல், துஞ்சல், அரற்று தல், கனவு, முனிதல், நினைதல், வெரூஉதல், மடிமை, கருதல், ஆராய்ச்சி, விரைவு, உயிர்ப்பு, கையாறு, இடுக்கண், பொச்சாப்பு, பொறாமை, வியர்த்தல், ஐயம், மிகை, நடுக்கம் என்பன. இவை தனித்தும் நிகழும்.

இப்பொது மெய்ப்பாடுகளையன்றி அகத்திணையுள் களவின் கண் நிகழும் மெய்ப்பாடுகளையுங் கூறுவான் தொடங்கிய ஆசிரியர்

தொல்காப்பியர், முதலில் ஒத்த கிழவனுங் கிழத்தியும் எதிர்ப்
பட்ட வழிப் பெரும்பாலுந் தலைவிபால் நிகழும் மெய்ப்பாடு
கூறுவான்றொடங்கிப், புணர்ச்சிக்குமுன் அவள்கண் நிகழும்
மெய்ப்பாடுகளை மூன்றுபகுதியாகவும், பின் நிகழும் மெய்ப்பாடு
களை மூன்று பகுதியாகவும் பிரித்துக் கூறினர். இது பேரா
சிரியர் கருத்து. புணர்ச்சிக்குமுன் ஒன்றன்பின்னொன்றாக நிக
ழும் மூன்றுவகை மெய்ப்பாடுகளுள் முதற்கண் நிகழும் மெய்ப்
பாடுகளாவன :—

"புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க்கின்மை."

. . . .

என்னும் நான்குமாம்.

இரண்டாவது நிகழும்

மெய்ப்பாடுகளாவன :—

"கூழை விரித்தல் காதொன்று களைதல்

ஊழுனி தைவரல் உடைபெயர்த் துடுத்தல்.''

என்னும் நான்குமாம்.

மூன்றாவது நிகழும்

மெய்ப்பாடுகளாவன :—

'' அல்கு றைவரல் அணிந்தவை திருத்தல்

இல்வலி யுறுத்தல் இருகையு மெடுத்தல்.''

என்னும் நான்குமாம்,

14

புணர்ச்சிக்குப்பின் ஒன்றன்பின்னொன்றாக நிகழும் மூன்று வகை மெய்ப்பாடுகளுள் முதற்கண் நிகழும் மெய்ப்பாடுகளாவன :—

'' பாராட் டெடுத்தன் மடந்தப வுரைத்தல்
ஈரமில் கூற்ற ;மேற்றலர் நாணல்

கொடுப்பவை கோடல் ''

என்னும் நான்குமாம்.

இரண்டாவதாக நிகழும்

மெய்ப்பாடுகளாவன :—

'' தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தல்.''

என்னும் நான்குமாம்.

மூன்றாவதாக நிகழும் மெய்ப்பாடுகளாவன :—

" புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைதல்."

என்னும் நான்குமாம்.

இளம்பூரணர் இவைகளைப் புணர்ச்சி நிகழாதவழி நிகழும் பத்தவத்தைக்கண் உண்டாகும் மெய்ப்பாடு என்றும், அப்பத்துள் ஆறும் அகத்திணைக்கேயுரியவாதலின் அவற்றையே கூறினார் என்றுங் கூறுவர். மேற்கூறிய அறுவகை மெய்ப்பாடுங் களவுக்கேயுரியன. சில கற்பினும் வரும். சில கைக்கிளை பெருந்திணைக்கண்ணும் வரும். ஆற்றாமை மிக்கவிடத்து மெய்ப்பாடின்றியும் புணர்ச்சி நிகழும் என்க.

இவையன்றி புணர்ச்சிக்கு நிமித்தமாய் களவு கற்பு என்னும் இரண்டற்கும் பொதுவான வேறுசில மெய்ப்பாடுகளுமுள. அவை "இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்" முதலாயினவாகும். இவையன்றி வரைந்தெய்தும் கூட்டத்திற்கு நிமித்தமான மெய்ப்பாடுகளுமுள. அவை முட்டுவயிற் கழறன் முதலியன. இன்னும் வரைந்தெய்தியபின் நிகழும் மெய்ப்பாடுகளுமுள. அவை தெய்வமஞ்சன் முதலிய பத்துமாம். இனி "ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" என்னுஞ் சூத்திரத்துட் கூறிய ஒப்புமைக்குரிய மெய்ப்பாடுகள் பிறப்பு குடிமையாதியன. இவை மெய்ப்பாட்டால் உணரப்படுமென்பர் பேராசிரியர். இளம்பூரணர் தலைவன் தலைவி என்னும் இருவர்க்குரிய ஒப்புப்பகுதி என்பர். 'நிம்புரி கொடுமை' முதலியன



வற்றைத் தலைவனுக்காகாத மெய்ப்பாடுகள் என்பர் பேராசிரியர். இளம்பூரணர் தலைவிகண் நிகழாத மெய்ப்பாடு என்பர். சிலர் இருவருக்கும் பொது என்பர். பொருத்தம் நோக்கிக்கொள்க.

இம் மெய்ப்பாடுகளெல்லாவற்றையும், பிறர் உணருங் கருவி கண்ணுஞ் செவியுமென்பர் தொல்காப்பியர். அது முன்னுங் கூறியுள்ளாம். புற மெய்ப்பாடுகள் கண்ணுஞ் செவியுமென்னுமிரண்டானுமுணர்தற்கு உதாரணம் வருமாறு :—

"இரண்டறி கள்விநங் காத லோளே
முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்

முள்ளூர்க் கான நாற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.''

(குறுந். 312)

எனபதனுள, அமராமுகத்தளாதலும் தமரோரன்னளாதலும் தலைமகன் தன் கண்ணு னோக்கியறிதலின் அது கண்ணுணர் வெனப்படும்.

"ஒழிகோ யானென வழிதகக் கூறி" (அகம் 110)
என்புழித் தலைமகன் மனத்து நிகழ்ந்த வழிவெல்லாம், ஒழிகோ யான் என்ற உரையானே தோழி உணர்ந்தமையின் அது செவி யுணர்வெனப்படும்.

# தொல்காப்பியம்



# பொருளதிகாரம்

## பேராசிரியம்

---

## ஆறுவது :

## மெய்ப்பாட்டியல்

---

[மெய்ப்பாடு இத்துணைய எனலும்
அவை இத்துணையவாய்
அடங்குமெனலும்] உசசு. பண்ணைத் தோன்றிய
வெண்ணான்கு பொருளுங்
கண்ணிய புறனே நானான் கென்ப.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், மெய்ப்பாட் டியலென்னும் பெயர்த்து. 1
மெய்ப்பாடென்பன சில பொருள் உணர்த்தினமையின் அப்பெயர்த்தாயிற்று.
இதனானே ஓத்து நுதலியதூஉம் மெய்ப்பாடு உணர்த்துதலென்பது பெற்றாம்.

[2] மெய்ப்பாடென்பது பொருட்பாடு; அஃதாவது, உலகத்தார்

[3] உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப் படுவதோராற்றான் வெளிப்படுதல். அதனது இலக்கணங்

---

1. மெய்ப்பாடென்பனவாகிய சிலபொருள் என்க.

2. மெய் — பொருள். பொருள் உள்ளதாகலின் அதனை மெய் என்றார்; ஆகுபெயரான்.

3. உள்ளநிகழ்ச்சி என்றது உள்ளத்தின்கண் நிகழும் நகை முதலிய குறிப்புக்களை, அவையே ஈண்டுப் பொருள் (மெய்) எனப்பட்டன. குணமும் பொருள் எனப்படுதலின் நகை முதலியன பொருள் எனப்பட்டன. படுதல் — வெளிப்படுதல். எனவே ஒருவன் உள்ளத்தே நிகழ்ந்த நகைமுதலிய குறிப்புப் புறத்தார்க்கு அவன் உடமபு வேறுபாட்டால் வெளிப்படுதல்



கூறிய ஓத்தும் [1] ஆகுபெயரான் மெய்ப்பாட்டியலென்றாயிற்று. மேலோத்தினோடு இவ்வோத்தினிடை இயைபென்னையோ

வெனின், [2] மேலை ஓத்துக்களுட் கூறப்படும் ஒழுகலாற்றிற்கும் [3] காட்டலாகாப்பொருள் (தொ. பொ. ருக) என்றவற்றிற்கும் எல்லாம் பொதுவாகிய மனக்குறிப்பு இவையாகலின் இவற்றை வேறுகொண்டு ஓரினமாக்கி மெய்ப்பாட்டியலென வேறோரோத் தாக வைத்தமையானே [4] எல்லாவற்றோடும் இயைபுடைத்தென் பது. இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், அம் மெய்ப்பாடு [5] பிறர் வேண்டுமாற்றான் இத்துணைப்பகுதிப்படு மென்றுணர்த்துத னுதலிற்று.

இதன் பொருள் : [6]
பண்ணைத்தோன்றிய எண்ணான்கு
பொருளும்—முடியுடைவேந்தருங்
குறுநிலமன்னரு முதலா

னோர் நாடகமகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங்கேட்டுங் காம நுகரும் இன்ப விளையாட்டினுள் தோன்றிய முப்பத்திரண்டு பொருளும், கண்ணியபுறனே நானான்கு என்ப—அவை கருதிய

---

மெய்ப்பாடு என்பது பேராசிரியர் கருத்தாம். இனி, இளம்பூரணர் அச்சமுற்றுன்மாட்டு நிகழும் அச்சம் அவன்மாட்டுச் சத்துவத்தி னாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாகுந்தன்மை மெய்ப்பா டெனக் கொள்ளப்படும் என்றும், மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று என்றுங் கூறுவர். இது

சிறந்த கருத்தே

யாகும். சத்துவம் — விறல். அது,— "சத்துவமென்பது சாற்றுங் காலை — மெய்ம்மயிர் குளிர்த்தல் கண்ணீர் வார்தல் — நடுங்கல் கடுத்தல் வியர்த்த றேற்றங் — கொடுங்குரற் சிதைவொடு நிரல் பட வந்த — பத்தென மொழிப சத்துவந் தானே" என்பதனு லறிக. குளிர்த்தல் — குற்சிதங்கொள்ளல் = சிலிர்த்தல்.

1. மெய்ப்பாட்டியல் — மெய்ப்பாட்டி னிலக்கணங் கூறுவ தென அவ்வோத்தின்மேனிற்றலின் ஆகுபெயர். இதுபோன் றன தொல்காப்பியர் கூறிய 'இருபெயரொட்டு' என்பது சேனாவரையர் முதலியோர் கருத்தாம்.

2. மேலையோத்துக்களுட் கூறப்படும் ஒழுகலாறென்றது அகத்தொழுக்கம் புறத்தொழுக்கங்களை. அவை முன்னுள்ள ஐந்தியல்களானும் கூறப்படுவனவாதலின் மேலையோத்துக்க ளென்றார். கூறப்படும் — கூறப்பட்ட என்றிருப்பது நலம்.

3. "ஒப்புமுருவும்" பொருளியல் ருஉ-ம் சூத்திரம்.

4. எல்லாவற்றோடும் — மேற்கூறிய எல்லாவியல்களோடும்.

5. பிறர் — நாடக நூலார்.

6. பண்ணை — விளையாட்டு.
பண்ணை – விளையாட்டாயம் என்றும்,
பண்ணையுடையது பண்ணை என்றும் இளம்பூரணர் கூறுவர்.

டியல்] பொருளதிகாரம்
க

பொருட்பகுதி, பதினாறுகி அடங்கும் நாடக

நூலாசிரியர்க்கு என்றவாறு.

[1] அது முதனூலை நோக்கிக் கூறியவாறுபோலும்.

முப்பத்திரண்டாவன யாவையெனின்,— ஒன்பது சுவை யெனப்பட்டவற்றுள் [2] உருத்திரமொழிந்த எட்டனையுங் கூறுங் காற் சுவைக்கப்படும் பொருளும், அதனை நுகர்ந்த பொறி யுணர்வும், அது மனத்துப்பட்டவழி உள்ளத்து நிகழுங் [3] குறிப்பும், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தாற் கண்ணீரரும்ப லும் மெய்ம்மயிர் சிலிர்த்தலு முதலாக உடம்பின்கண் வரும்
வேறுபாடாகிய [4] சத்துவங்களுமென நான்காக்கி, அச்சுவை யெட்டோடுங் கூட்டி, ஒன்று நான்கு செய்து உறழ, முப்பத்திரண்டா மென்பது. எனவே, சுவைப்பொருளும், சுவைபுணர்வும், குறிப் பும், விறலுமென நான்காயின. விறலெனினுஞ் சத்துவமெனினும் ஒக்கும்.

சுவைப்பொருளென்பன :—அறுசுவைக்கு முதலாகிய வேம்

புங் [5] கடுவும் உப்பும் புளியும் (மிளகும்) கரும்பும் போல்வன ;

அவையாமாறு :— நகைச்சுவைக்குப் பொருளாவன [6] ஆரியர் கூறுந் தமிழும், குருடரும் முடவருஞ் செல்லும் [7] செலவும், [8] பித்தரும் களியரும் சுற்றத்தாரை இகழ்ந்தாரும் குழவி கூறும் மழலையும் போல்வன.

அச்சப்பொருளாவன :—

---

1. அது—அவ்வாறு அடங்கல். முதனூல்—அகத்தியம்.

2. உருத்திரம்—வெகுளி. உருத்திரமொழிந்த எட்டாவன: நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், வீரம், உவகை. சமனிலை என்பன. 'உருத்திரமொழித்து ஒழிந்த' எனவும் பாடம்,

3. குறிப்பு—நகை முதலிய சுவைக்குறிப்பு.

4. சத்துவம்—விறல்; உடம்பின்கணுண்டாகும் வேறுபாடு. அவை முற்கூறப்பட்டன.

5. கடு—கடுக்காய். அது துவர்ப்புக்குக் காட்டப்பட்டது. உறைப்புக்குரியமுதலே சொல்லப்படவில்லை. அது மிளகு என்று கூறலாம். அது தப்பிற்றுப்போலும்.

6. ஆரியர்—வடமொழியாளராகிய ஆரிய தேசத்தவர். அவர் தமிழை எழுத்து நிரம்பக் கூறமாட்டாராதலின் அதுவும் நகைக்கேதுவாயிற்று.

7. செலவு—நடை.

8. பித்தர் முதலியோர் சொற்களும் நகைக்கேதுவாகலின் அவர்களையுங் கூறினர். நகைச்சுவைப் பொருள்களிவையெனச்



1 "வள்ளெயிற் றரிமா வரள்வரி வேங்கை
முள்ளெயிற் றரவே முழங்கழற் செந்தீ
யீற்று மதமா வேக பாதங்
2 கூற்றங் கோண்மா குன்றுறை யசுணம்."

என்று சொல்லப்பட்டனவே போல்வன.

இவற்றைச்

சுவைகோடலென்பதென்னையெனின், நகையும்

அச்சமு முதலாகிய உணர்வு முற்காலத்து உலகியலான் அறிவா ளொருவன் அவற்றுக்கு ஏதுவாகிய பொருள்பிற கண்டவழித் தோன்றிய பொறியுணர்வுகள் அவ்வச் சுவையெனப்படும். வேம்

பென்னும் பொருளும் நாவென்பொறியுந்

3 தலைப்பெய்த வழி

செயிற்றியங் கூறுமாறு :— " உடனிவை தோன்றுமிடம் யாதெனினே—முடவர் செல்லுஞ் செலவின் கண்ணும்......தோன்று மென்ப துணிந்திசி னோரே " என்பது. இதனை இளம்பூரணம்

நோக்கியறிக.

1. அரிமா—சிங்கம். வேங்கை—புலி. அரவு—பாம்பு. தீ—நெருப்பு. ஈற்று—ஈன்றணிமையான பசு. "புனிற்றுப் பாய்ந் தெனக் கலங்கி" (அகம். ருக) என்பதனைலறிக. மதமா—யானை. ஏகபாதம்—ஒற்றைக்கால். அது, பூதங்களுளொற்றைக்காலுடையனவுமிருப்பதாகச் சில புராணங்கூறலின் அவற்றைஉணர்த்தும்.

"ஒற்றைத் தாளின மூன்றுடைத் தாளின வுரைசால்
பொற்றைத் தாள்பல வுடையன பொருந்துதா ளொழிந்த
கற்றைச் செம்மயி ருடையன கணங்கணக் கிறந்த
மற்றைக் கைகளு மன்னதன் மையவென வழங்கும்."

என்பது உபதேச காண்டம், கைலைமான்மியச் சருக்கம், ௩௬-ம் செய்யுள். சேது புராணமும் பூதங்களுள் ஒற்றைக்காலுடையனவிருப்பதாகக் கூறுகின்றது. தேவர்களு ளொருபகுதியார்க்கும் ஒற்றைக்காலிருப்பதாகத் தேவாரமுங் கூறுகின்றது. "உள்ள மிக்கார் பரிமுகத்தின ரொற்றைக்காலர்க-ளெள்ளலில்லா விமையோர்கள்." எனத் திருக்கேதாரப் பதிகத்து (௪) வருதல் காண்க. இவை 'அணங்கு' ள் அடங்கும்.

2. கூற்றம்—இயமன். இறப்போர் இயமனைக்கண்டஞ்சுவதாக நூல்கள் கூறுவது வழக்கு. "அக்கா லரைக்கால்கண் டஞ்சா முன்" என்று கூறுதலுங் காண்க. கோண்மா—(இங்கே விதந்து சொல்லப்பட்டனவொழிந்த) கொலைத்தொழிலையுடைய மிருகங்கள். "ஊறுசெய்யுங் கோண்மாக்களை" எனக் கற்பியல் ௨௬-ம் சூத்திரவுரையுள் நச்சினார்க்கினியர் கூறலுங் காண்க. அசுணம்—அசுணப்பறவை. இதனை அசுணமா என்றுங் கூறுப. ஏகபாதம், கூற்றம், கோண்மா என்பன முன்னிருந்து அழிந்துபோன விலங்கின். சாதிகள் என்று கூறுவாருமுளர். அவர் கருத்துப் பொருந்துமாயினுங் கொள்க.

3. தலைப்பெய்தல்—கூடல். 'தலைப்பெய்துழியல்லது' எனவும் பாடம்.

யல்லது கைப்புச் சுவை பிறவாததுபோல, அப்பொருள் கண்ட

வழியல்லது நகையும் அச்சமும் தோன்ற. ஒழிந்த காம் முத

லியனவும் அன்ன. இக்கருத்தேபற்றிப் பிற்காலத்து நாடக

நூல் செய்த ஆசிரியரும்,

"இருவகை நிலத்தி னியல்வது சுவையே." (செயிற்றியம்)

என்றாரென்பது.

இனி, இருவகை நிலனென்பன 1 உய்ப்போன் செய்தது

காண்போர்க் கெய்துதலன்றேவெனின், சுவையென்பது 2 ஒப்

பிணைப பெயராகலான் வேம்பு சுவைத்தவன் அறிந்த கைப் பறிவினை நாவுணர்வினாற் பிறனுணரான், இவன் கைப்புச் சுவைத்தானெனக் கண்ணுணர்வினான் அறிவதன்றி; அதுபோல

அச்சத்துக்கு ஏதுவாகிய ஒரு பொருள் கண்டு அஞ்சி ஓடிவரு கின்றானொருவனை மற்றொருவன் கண்டவழி இவன் 'வள்ளெயிற் றரிமா' முதலாயின கண்டு அஞ்சினானென்றறிவதல்லது, வள்ளெயிற் றரிமாவினைத் தான் காண்டல் வேண்டுவதன்று; தான் கண்டானாயின் அதுவுஞ் சுவைப்பொருளெனவேபடும். ஆகவே 'அஞ்சி னானைக் கண்டு நகுதலுங் கருணைசெய்தலுங் கண்டோர்க்குப் பிறப்பதன்றி, அச்சம்பிறவாதாகலான் [3] உய்ப்போன் செய்தது [4] காண்போனுய்த்த அறிவின் பெற்றியாற் செல்லாதாகலின்,

1. உய்ப்போன் செய்தது காண்போர்க்கு எய்துதல் என்றது,—சுவைப்போன் நிகழ்த்திய சுவை அவன்மாட்டு நிகழும் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாதல் என்றவாறு. உய்த்தல் — அநுபவித்தல் — "காதல காதலறியாமை யுய்க்கிற்பின் — ஏதில வேதிலார் நூல்" என்னுங் குறளுரை நோக்குக. அன்றியும், சமநிலை என்னுஞ் சுவையை — "உய்ப் போர் சமணர் சாரணர்" என்று செயிற்றியங் கூறுகின்றதனானு மறியப்படும்.

2. ஒப்பினாகிய பொருளென்றது அறுவகைச் சுவைபோலச் சுவைக்கப்படுவதுபற்றி நகை முதலிய சுவைக்கும் சுவையென்று பெயராயிற்று என்றபடி. எனவே சுவைபோன்றது சுவை என்பது கருத்தாம்.

3. உய்ப்போன் செய்தது—சுவைப்போன் நிகழ்த்திய சுவை.

4. காண்போன் உய்த்த அறிவின் பெற்றியாற் செல்லா
தாகலின் என்றது, சுவைத்தோனுடைய மெய்ப்பாட்டைக்கண்டு இவன் சுவைத்தான் என்று அறிந்தோன் செலுத்திய அறிவின் றன்மையால் அவனுக்கு அச்சுவை நிகழாது என்றபடி. காண் போர்க்குஞ் சுவைபிறக்கும் என்பது கூத்த நூலாருட் சிலர் கருத்து. அவர் கருத்தையே ஈண்டுப் பேராசிரியர் மறுத்தனர் என்க.



1 இருவகை நிலமெனப்படுமென, சுவைப்பொருளுஞ் சுவைத் தோனுமென இருநிலத்தும் நிகழுமென்பதே பொருளாதல் வேண்டுமென்பது.

குறிப்பென்பது, கைப்பின் சுவையுணர்வு பிறந்தவழி வெறுப்பு முதலாயின உள்ளநிகழ்ச்சிபோல, அஞ்சுதக்கன கண்டவழி அதனை நோக்காது வெறுக்கும் உள்ளநிகழ்ச்சி. விறலென்பன, அவ்வுள்ளநிகழ்ச்சி பிறந்தவழி வேம்பு தின் ஞர்க்குத் தலை நடுங்குவதுபோலத் தாமே தோன்றும் நடுக்க முதலாயின. இவ்வகையால் இந்நான்கினையும் எட்டோடும் உறழவே முப்பத்திரண்டாயின.

இனி, அவை பதினாறாயினவாறென்னையெனின்,— வேம்பு முதலாயின பொருளும் அதனோடு நா முதலாயின பொறியும் வேறு வேறு நின்றவழிச் சுவை பிறவாமையானும் அவ் விரண்டுங் கூடியவழிச் சுவை பிறத்தலானும் [2] அவை பதினாறும் எட்டெனப்படும்; இனிக் குறிப்புஞ் சத்துவமென் பனவும், உள்ளநிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடுமென்ப ராகலின் அவ்வுள்ளநிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவ மாகலின் அவை பதினாறும் எட்டாயடங்குமாகலின், [3] அவை ஈரெட்டுப் பதினாறுமென்பது. மற்றிவை பண்ணைத்தோன்று வனவாயின், [4] இது பொருளோத்தினுள் ஆராய்வதென்னை [5] நாடக வழக்கத்தானே ஒருவன் செய்ததனை ஒருவன் வழக்கி னின்றும் வாங்கிக்கொண்டு பின்னர்ச் செய்கின்றதாகலானும், வழக்கெனப்படாதாகலானும், ஈண்டு ஆராய்வது 'பிறிதெடுத் துரைத்தல்' என்னுங் குற்றமாமென்பது கடா. அதுவன்றே, [6] இச்சூத்திரம் [7] 'பிறன்கோட் கூறல்' என்னும் உத்திவகையாற் கூறி அதுதானே மரபாயிற்றென்பது. (௧)

---

1. இருவகை நிலமென்பன சுவைக்கப்படுபொருளும் சுவைக் கின்றவனும் என்பது பேராசிரியர் கருத்து.

2. அவை—பொருளும் பொறியும்.

3. அவை—முப்பத்திரண்டும்.

4. இது—மெய்ப்பாடு.

5. நாடக வழக்கத்தானே செய்கின்றதாகலானும் என இயைக்க.

6. இச்சூத்திரம்—இச் சூத்திரப் பொருள்கள்.

7. பிறன்கோட்கூறல்—பிறன் மதமெடுத்துரைத்தல். எனவே கூத்தநூலார்க்குரியதை இப்பொருளியலுள் தாமும் எடுத்

[பதினாறுயடங்கியவை எட்டாயுமடங்குமெனல்]

உருல. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே

இது, மெய்ப்பாட்டின் அடக்கங் கூறுகின்றது.

இ—ள்: முப்பத்திரண்டு மெய்ப்பாடும் பதினாறாதலே யன்றி எட்டாதலும் உண்டு என்றவாறு.

அவை: வீரம் அச்சம் வியப்பு இழிபு காமம் அவலம் நகை நடுவுநிலை யென்பன. இவற்றின் விகாரமாகிய சத்துவங்களோட் டனையும் இவற்றுளடக்கி எட்டாக்கிக் கூறியவாறிதுவென்பது. நாலிரண்டாதலு முண்டென்றது பாலென்றதனான் எட்டாதலே யன்றி அவை ஒன்பதாதற்குப் பகுதியுமுடையவென்பது; என்னை?

"உருத்திரந் தன்னே டொன்ப தாகும்"

என்பவாகலின். 1 உம்மை, இறந்தது தழீஇயிற்றுதலான் இவை யும் பண்ணைத்தோன்றிய எண்ணான்கெனப்பட்டனவற்றுப் பகுதி யென இதுவும் பிறன்கோட் கூறியவாறாயிற்று. மற்றிவற்றது பயனென்னையெனின், பொருளதிகாரத்துக் கூறுகின்ற வழக் கியலே 2 அவைபுமென்பது 3 கூறி, அச்சுவைக்கு ஏதுவாய பொருளினை அரங்கினுள்நிறீஇ, அதுகண்டு குறிப்புஞ் சத்துவ மும் நிகழ்த்துகின்ற கூத்தனையும் அரங்கிற்றந்து, பின்னர் 4 அவையரங்கினோர் அவன்செய்கின்ற மெய்ப்பாட்டினை உணர் வராக வருகின்ற முறைமையெல்லாம் நாடகவழக்கிற்கே உரிய பகுதியெனவும், அப்பகுதியெல்லாம் ஈண்டுணர்த்தல் வேண்டுவ

துரைத்தார் என்றபடி. உத்திவகையாற் கூறி அதுதானே இதற்கும் (பொருளோத்திற்கும்) மரபாயிற்று என்க. கூறி — கூறப்பட்டு. அதுதானே — அங்ஙனங் கூறப்பட்ட அப்பொரு டானே. கூறியதுதானே என ஒரு சொல்லாகக் கொள்ளின் கூறப்பட்டதுதானே எனப் பொருள் கொள்க.

1. பாலும் என்பதிலுள்ள உம்மை

முப்பத்திரண்டு பதினொருதலேயன்றி எட்டாதலும் உடைய என நிற்றலால் இறந்தது தழீஇயிற்று.

2. அவையென்றது எட்டு மெய்ப்பாட்டினையும்.

3. கூறிக் கூறியவாறு என் இயைக்க.

4. அவை அரங்கு — அவையாகிய அரங்கு.

அ தொல்காப்பியம்

[மெய்ப்பாட்

தன்றெனவுங் கூறியவாறு. இங்ஙனம் அடங்குமென்பது நாடக

நூலுள்ளுஞ் சொல்லுபவோவெனின், சொல்லுபவாகலினன்றே

[1] அதன்வழி நூல்செய்த ஆசிரியர் செயிற்றியனார் சுவைபுணர்

வும் பொருளும் ஒன்றாக அடக்கிச் சுவையுங் குறிப்புஞ் சத்துவமு

மென மூன்றாக்கி வேறு வேறு இலக்கணங் [2] கூறி அவற்றை,

" எண்ணிய மூன்று மொருங்கு பெறுமென

நுண்ணிதி னுணர்ந்தோர் நுவன்றனர்

ரென்ப''

என்றோதினாயிற்றென்பது.

(உ)

[எண்வகை மெய்ப்பாடு இவை எனல்]

உருக. நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப.

இது, [3] பிறர்வேண்டுமாற்றானன்றி இந்நூலுள் [4] இவ்வாறு வேண்டப்படும் மெய்ப்பாடென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இச் சொல்லப்பட்ட எட்டும் மெய்ப்பாடென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலுமென மூன்றென்ப.

அழுகையென்பது அவலம் ; அஃது இருவகைப்படும் ; [5] தானே அவலித்தலும், பிறரவலங்கண்டு அவலித்தலுமென ; இவற்றுள் ஒன்று கருணையெனவும் ஒன்று அவலமெனவும் பட்டுச் சுவை ஒன்பதாகலுமுடைய வென்பது. இளிவரலென்பது இழிபு. மருட்கையென்பது வியப்பு ; அற்புதமெனினும் அமையும். அச்சமென்பது பயம். பெருமிதமென்பது வீரம். வெகுளியென்பது உருத்திரம். உவகையென்பது காம முதலிய மகிழ்ச்சி. இவை அவ்வெட்டுமாவன. இவற்றைச் சுவையெனவுங் குறிப்பெனவும் வழங்கினும் அமையும்.

---

1. அதன்வழி — நாடகநூலின்வழி.

2. கூறி ஓதிஞரென இயைக்க.

3. பிறர் — நாடகநூலார்.

4. இவ்வாறு — (சூத்திரத்துட் கூறும்) இத்தன்மையாக.

5. தானே அவலித்தல் அவலம். ஏனையது கருணை.

1

மற்று நகையை முன்வைத்ததென்னையெனின், 'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருட்கும்' (உ௪௯) இவை [2] என் னும் இயைபில்லனவல்ல என்றற்கு, விளையாட்டுப்பொருட்டாகிய நகையை முன்வைத்தானென்பது. அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன்பின் வைத்தான். இளிவரல் அதன்பின் வைத்தான்; அழுகையும் இளிவரலோடு இயைபுடைமையின். தானிளிவந்து பிறிதோர் பொருளை வியக்குமாதலின் இளிவரலின் பின் வியப்பு வைத்தான். வியப்புப்பற்றியும் அச்சம் பிறத்தலின் அச்சத்தை அதன்பின் வைத்தான். அச்சத்திற்கு மறுதலையாகிய வீரத்தை அதன்பின் வைத்தான். அவ்வீரத்தின் பயனாகிப் பிறர்க்கு வரும் வெகுளியை அதன்பின்னே வைத்தான். வெகுளிக்கு மறுதலையாகலானும் எல்லாவற்றினும் [3] ஈண்டு ஓது தற்குச் சிறந்ததாகலானும் முதற்கணோதிய நகைக்கு இயை புடைத்தாகலானும்

உவகையை அவ்விற்றுக்கண் ஸ்வ்த்தா னென்பது.

இவ்வெட்டனுள் முதனின்ற நான்கும் முற்கூறுதற்கும், இறுதிநின்ற நான்கும் பிற்கூறுதற்கும் காரணம் வருகின்ற சூத்திரங்களானும் பெறுதும்.

மற்றிவ் வெட்டனோடுஞ் சமநிலை கூட்டி ஒன்பதென்னுமோ நாடகநூலிற்போலவெனின், அதற்கு ஓர் விகாரமின்மையின் ஈண்டுக்கூறியதிலனென்பது ; [4] அதற்கு விகாரமுண்டெனின் முன்னையெட்டனுள்ளுஞ் சார்த்திக்கொள்ளப்படும். அல்லதூஉம்,

---

1.
மற்றுநகையை.........முன்வைத்தானென்பது என்றது. பண்ணைத்தோன்றிய பொருளோடு இயையும இயைபுடையனவே வேறல்ல என்பதை உணர்த்தவே விளையாட்டுப் பொருட்டாகிய நகையை முன்வைத்தானென்றபடி. விளையாட்டுக்கண் தோன்றும் எண்ணான்கு பொருளைக் கூறிய சூத்திரத்தோடு இயைபு காட்டவே இச்சூத்திரத்து

விளையாட்டுப்பொருட்டாகிய நகையை முன்வைத்தானென்பது கருத்து.
பண்ணை — விளையாட்டு.

2. என்னும் — சிறிதும்.

3. ஈண்டு என்றது ஈற்றினை.
சிறந்தபொருளை முதலில் வைத்தலன்றி ஈற்றிற் கூறுதலுமுண்டு. அது,— 'சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்' என்பதனாலறிக.

4. அதற்கு — சமநிலைக்கு. சமநிலை — சமமாக நிற்றல். அஃதாவது மனம் விகாரமின்றிச் சாந்தமடைந்து நிற்றல்.



[மெய்ப்பாட் அஃது [1] உலகியல் நீங்கினார் பெற்றியாகலின், ஈண்டு உலக வழக்கினுட் சொல்லியதிலனென்பது. ஒழிந்த எட்டும் [2] உலகிய லாகலிற் கூறினான், 'வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்' (பாயிரம்) என்று புகுந்தமையினென்பது. அவை எட்டு மாமாறு இனிக் [3] கூறுதும்.
(௩)

[பொருள்பற்றி நகைச்சுவை இத்துணைய எனல்]

உருஉ. எள்ள லிளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப.

இது, நிறுத்தமுறையானே நகைக்குறிப்பு நான்கென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : எள்ளுதலும் இளமையும் பேதைமையும் மடனுமெனக் கருதப்பட்ட நகை நான்கு என்றவாறு.

4 இவை நான்கும் பொருளாகிச் 5 சத்துவமுங், குறிப்பும், சுவையும் என்னும் மூன்றற்கும் முதற்கண்ணவாகலான் மூன்றனையும் 6 அடக்கிப் பொருட்பகுதியான் அவற்றைக் கூறுகின்ற வாறு இதுவென்பது. இவை நான்கும் ஒன்றிரண்டாகி எட்

டாதலும் உடைய.

எள்ளலென்பது, தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால்

எள்ளப்பட்ட வழித் தான் நகுதலுமென இரண்டாம். இளமை

யென்பது, தான் இளமையாற் பிறரை நகுதலும் பிறரிளமை

கண்டு தான் நகுதலுமென இரண்டு. 7 பேதைமையென்பது,

---

1. உலகியல் நீங்கினோர் — துறந்தோர்.

2. உலகியல் — உலகவழக்கு.

3. கூறும் — கூறுவான். என்றது ஆசிரியனை.

4. இவை நான்கென்றது எள்ளன் முதலிய நான்கை. பொருள் — சுவை பிறத்தற்குக் காரணமாகிய பொருள்.

5. இவை சுவையும் குறிப்பும் சத்துவமும் என்று மாறியிருப்பது நலம். தலைதடுமாற்றமென்னும் உத்தியாற் கூறினோரெனினுமாம். சுவைக்கு முதற்கண்ணது பொருளாதலின்.

6. அடக்கல் — பொருளுளடக்கல்.

7. இளம்பூரணர், பேதைமை என்பதற்கும் மடமை என்பதற்கும் வேறுபாடென்னையெனின், பேதைமை என்பது உய்த்துணர்ந்து திரியக்கோடல்; மடமை என்பது பொருண்மையறியாது திரியக்கோடல் என்பர்.

அறிவின்மை. மடமையென்பது பெரும்பான்மையுங் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. இவையுந் தன் பேதைமையா னகுதலும் பிறன் பேதைமையா னகுதலும், தன் மடமையான் நகுதலும் பிறன் மடமையான் நகுதலுமென இவ்விரண்டாம்.

எள்ளலென்பது இகழ்ச்சி.

1 "எள்ளி நகினும் வரூஉம்"

(கலி-௬௧) என்பது, தன்கண் நிகழ்ந்த எள்ளல்பொருளாக நகை பிறந்தது.

2 "நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே."

(அகம்-௨௪௮) என்பது, பிறரெள்ளியது பொருளாகத் தன்கண் நகைபிறந்தது; என்னை? தன் மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு. இது வெகுளிப்பொருளாக நக்கதன்றோவெனின், அது வீரர்க்கே உரித்தாகல் வேண்டும், இவள் அவனை வெகுண்டு தண்டஞ்செய்வாளல்லள் அதற்கே உவப்பினல்லதென்பது. அல்லதூஉம்,

3 "நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்."

(புற-எஉ)

என்றாற்போல வீரத்தொழுந்த வெகுளிநகையும் யென்றே அடக்கவேண்டும் ஈண்டென்பது.

எள்ளல்நகை

4 "நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே."

(கலி-கஙு) என்புழித், தன் இளமை பொருளாக நகைபிறந்தது.

---

1. எள்ளி நகினும் வரூஉம் என்பது தலைவிக்குக் குறை நயப்பித்த தோழி கூற்று. தலைவியே! அவன் குறையுற்று நிற்கின்ற காலத்து யான் இகழ்ந்து சிரித்தாலும் அவன் பலகாலும் வருவான் என்பது கருத்து. தன்கண் நிகழ்ந்த எள்ளல் பொருளாகத் தோழிக்கு நகை பிறந்தது.

2. தன் மகளை நோக்கி நீ மிகவும் நல்லை எனச் சிரித்துச் சென்றாள் என்றது, செவிலித் தாய் தன் மகள் தன்னை மதியாமை குறித்துச் சிரித்துச்சென்றாள் என்றபடி.

3. நகுதக்கனர் — சிரிக்கத்தக்கார். இவனது நாட்டை உயர்த்திச் சொல்வார் எம்மாற் சிரிக்கத்தக்கார் என்றமையின் வெகுளிபற்றிய நகையாயிற்று, இது எள்ளல் நகையுள் அடங்காது என்பது பேராசிரியர் கருத்து.

4. நடுங்குதல் காண்மார் நகை குறித்தனர்—தலைவியே உனது மெய்ந்நடுக்கத்தைக் காண்டற்கு ஒரு விளையாட்டைக் குறித்துச்சொன்னார். இது தலைவன் இளமைபொருளாக அவற்கு நகை பிறந்தது.

"திறனல்ல யாங்கழற யாரை [1] நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்."

(கலி-அ௬)

என்பதுமது.

அங்ஙனம் மகன் சிரித்தவழித் தாய்க்கு நகை தோன்றிற் றேல் அது பிறரிளமை பொருளாக நகை தோன்றிற்றாம்.

[2] "நாவொடு நவிலா நகைபடு நீஞ்சொல்."

(அகம்-க௬)

என்பது, பிறரிளமை பொருளாக நகைபிறந்தது.

"நகைநீ கேளாய் தோழி."

(அகம்-உசஅ)

என்பது, [3] தன் பேதைமை பொருளாக நகை பிறந்தது.

என்னை? தான் செய்த தவற்றிற்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக் கொண்டமையின்.

" நகையா கின்றே தோழி....
மம்மர் நெஞ்சினன் [4] ருெழுதுநின் றதுவே."

(அகம்-ருசு)

என்பது, பிறன் பேதைமை பொருளாக நக்கது.

[5] " நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே."

(குறு-கசுஅ)

என்பது, தன்மடத்தான் நகை தோன்றிற்று; என்னை? நீயிர் கூறியதனையே மெய்யெனக் கொண்டு மகிழ்ந்து நக்கனமென் றமையின்.

[6] " குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்."

(குற-கoகூரு)

என்பதும் அது.

---

1. நகும் என்றது தன் மகனை. தன் மகன் தன்னியல்பானே நக அதனைத் தன்னை நகுதலாகக்கொண்டு தலைவி யாரை நகும் என்றாள்.

2. பிறரிளமை பொருளாக நகை தோன்றியதென்றது குழவியின் நாவொடு பழகாத இளைய மழலைத் தீஞ்சொற்கேட்டு நகை

தோன்றிற்று என்றபடி.

3. தான் செய்த தவற்றை ஓராமை

பேதைமை என்க.

4. தொழுதுநின்ற பேதைமை கருதி நகையாகின்றுருள். இது தோழி கூற்று. பிறன் என்றது தலைவனை.
என

5. இது தலைவி கூற்று. தோழி கூற்றுமாம். நீயிர் கூறியதனை யாம் மெய்யெனக் கொண்டு நும்மொடு நக்கது மடமை என்ருள்.

6. ஒரு கண் சிறங்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் றன்னுள்ளே நகும். சிறங்கணித்தல் — சுருங்குதல், தலைவ



"நாநகை யுடைய நெஞ்சே நம்மொடு
[1] தான்வரு மென்ப தடமென் றோளி."

(அகம்-கஉக)

எனப் [2] பிறர்மடம் பொருளாக நகை
தோன்றிற்று. பிறவும்

அன்ன.

இவ்வோதப்பட்டவற்றுக்கெல்லாம் உவகை உரித்து. உள்

ளப்பட்ட நகை நான்கு என்றதனுன் உள்ளத்தோடு பிறவாத

நகையுமுள ; அவை,

" வறிதகத் தெழுந்த [3] வாயன் முறுவலள்."
(அகம்-ரு) என்றாற்போல வருவனவெனக் கொள்க. (ச)

[அழுகைச்சுவை இத்துணைய

எனல்] உருக. இளிவே யிழவே யசைவே வறுமையென
விளிவில் கொள்கை யழுகை நான்கே.

இது, முறையானே அழுகையென்னுஞ் சுவையினைப் பொருள்பற்றி உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : இளிவும், இழத்தலும், அசைதலும், வறுமையு மென இந்நான்கு பொருள்பற்றித் தோன்றும் அவலம் என்ற வாறு.

இளிவென்பது, பிறரான் இகழப்பட்டு எளியனாதல். இழவென்பது, தந்தையுந் தாயு முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் [4] நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவென்பது, [5] பண்டை நிலைமைகெட்டு வேறொருவாறாகி வருந்து

ளைக்குதலைக் கண்டு தானும் விடாது நோக்கி நக்கதுமடமை என்பது இவ்வுரையாசிரியர் கருத்துப்போலும். இவ் வுதாரணம் அத்துணைப் பொருத்தமாய்க் காணவில்லை.

1. தான்வருமென்றது மடம்பற்றியது. கொளுத்திய இன்பத்தைக்கொண்டு அதனை விடாமல் தானும் வருவேனென்று தலைவி கூறியது மடமை. கொளுத்தல் — அறிவித்தல்.

2. பிறர் என்றது தலைவியை. இது பொருள்வயிற் பிரியுந் தலைவன் கூற்று.

3. வாயண் முறுவல் — வாயிற் பொருந்திய நகை. இப்பாடமே பொருத்தமானது.

4. நுகர்ச்சி — அனுபவித்த பொருள்.

5. பண்டை நிலைமை — தான் முன்னிருந்த நிலைமை.

தல். வறுமையென்பது, போகந் துய்க்கப்பெறாத பற்றுள்ளம். இவை நான்குந் தன்கண் தோன்றினும் பிறன்கண் தோன்றினும் அவலமாமென்பது ; எனவே, இவையும் எட்டாயின. விளிவில் கொள்கை—கேடில் கொள்கை. அங்ஙனங் கூறிய மிகை யானே அழுகைக் கண்ணீர்போல உவகைக் கண்ணீர் வீழ்தலும் உண்டு ; அதனையும் அழுகைப்பாற் சார்த்தி உணரப்படும்.

"எழுதெழில் சிதைய வழுதன ளேங்கி
யடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
கூர்நுதி மழுங்கிய வெயிற்ற
ளூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே."

(அகம்-கஎசு)
என்பது, பரத்தையை நீ வெள்ளிலையென்று அழுதுவருகின்றா ளென்று தலைமகற்குச் சொல்லியதாகலின் இது [1] தன்கட் டோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது.

"கயமல ருண்கண்ணாய் காணா யொருவன்"

(கலி-நூஎ) என்னும் பாட்டினுள்,

"தானுற்ற,
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்"

எனத் தலைமகன் இளிவந் தொழுகுவது காரணமாக,

"சேயேன்மன் யானுந் துயருழப்பேன்"

என்றமையின் இது [2] பிறன்கட்டோன்றிய இளிவரல் பொரு ளாக அவலச் சுவை பிறந்தது. இது கருணையெனவும்படும்.

"மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே" (புறம்-உசக)

என்புழிக், கணவனை யிழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றாளை,

கண்ணீரே நீராக மெழுகு

1. தன் என்றது பரத்தையை. பரத்தை தன்னைத் தலைவனிகழ்ந்தமையின் தான் அவனால் இகழப்பட்டு எளியனாயினேன் என்று கருதியதனால் அவளுக்கு அழுகை பிறந்தது. இளிவரல் — இழிவு.

2. பிறன் என்றது தலைவனை. தலைவன் பலநாளும் இளிவந்து ஒழுகல்பற்றித் தோழி, யானுந் துயருழப்பேன் என்றமையின், இது பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாக அவலம் பிறந்
தது. இவ்வவலம் அவன்மீதுகொண்ட கருணையாற் பிறந்தமையின் இது கருணை எனப்படுமென்றார். கருணையாற் பிறந்த அழுகையைக் கருணையென்றதுபசாரம்.

டியல்] பொருளதிகாரம்
கரு

கின்றாளென்றமையின் இது [1] தன்கட்டோன்றிய இழவுபற்றிப் பிறந்த அவலச் சுவையாயிற்று.

[2]" ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே " (புறம்-உருரு)

என்பதும் அது.

" பின்றொடு முடித்த மண்ணு முச்சி " (அகம்-எந)

. . . . . .

எனனும பாட்டினுள்,

" அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையு மல்லை தெறுவர
வென்னு குவள்கொ லளிய டாளென
வென்னழி பிரங்கு நின்றொ டியானும் "

என்றவழி, தலைமகன் பிரிவிற்குத் தோழி படர்கூர்ந்தாளெனச் சொல்லினமையின், அது பிறன்கட்டோன்றிய [3] இழவுபற்றி அவலம் பிறந்ததாம்.

" துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
[4] னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சேன்."

(கலி-கநக) எனத் தன்கட்டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது.

" இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே " (புறம்-உ௫உ) என்பது, [5] பிறன்கட்டோன்றிய அசைவுபற்றிய அவலம்; என்னை ?

அள்ளிலைத்தாளி கொய்யாநின்றான்
இதுபொழுது என அவலித்துச்
சொல்லினமையின்.

---

1. தன் என்றது கணவனை யிழந்தாளை. அவளுக்குக் கண் கலுழ்நீர் கணவனையிழந்தமைபற்றி வந்ததாகலின் இழவுபற்றிய அவலமென்றார்.

2. ஐயோவெனின் — ஐயோவென் றரற்றுவேனாயின். இது கணவனையிழந்தாள் கூற்றாதலின் தன்கட்டோன்றிய இழவுபற்றி வந்த அவலமாயிற்று.

3. இழவு ஈண்டுப் பிரிவு. தலைவன் பிரிவுபற்றி வந்த அவலமாகலின் பிறன்கட்டோன்றியதாயிற்று.

4. தன் நெஞ்சாறு கொண்டாள் என்றமையானே தான் முன்னிலைமைகெட்டனனென்றாகலின், தன்கட்டோன்றிய அசைவுபற்றி வந்த அவலமாயிற்று.

5. பிறன் என்றது ஈண்டுத் தாபதனாயினானை. முன் மடமயிலைப் பிணிக்கும் வேட்டுவனாயிருந்தவன் இப்பொழுது அந்நிலைவிட்டு அள்ளிலைத் தாளிகொய்தலின், இது பிறன்கட்டோன்றிய அசைவாயிற்று.

"இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக னோக்கி
நீரொடு நிறைந்த விரிதழ் மழைக்கணோன்
மனையோ ளெவ்வ நோக்கி நினை இ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண" (புறம்-கசுச) என்புழி, முலைப்பசைகாணாது அழுகின்றது குழவியென்பது, 2 தன்கட்டோன்றிய வறுமைபற்றி அவலம் பிறந்தது. மகமுக னோக்கி அழுகின்றாள் என் மனைவியென்பது பிறன்கட்டோன்றிய வறுமையவலம்.

"இன்ன விறலு முளகொ னமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்
கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை" (புற-கக)

என்புழி, மூதிற்பெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற் கூற்றுக் 3 கண்ணோடாதாகலின் அவர் உவந்தனரென்பது பெற்றாம்; அதனானே 4 அஃது உவகைக்கலுழ்ச்சியாமென்பது. (ரு)

[இளிவரற்சுவை இத்துணைய
உருச.
எனல்]

மூப்பே பிணியே வருத்த மென்மையோ
டியாப்புற வந்த விளிவர னன்கே.

இது, மூன்றாம் எண்ணுமுறைநிறைமக்கணின்ற
5 இளிவரல் கூறுகின்றது.

இ—ள் : மூப்பும் பிணியும் வருத்தமும் 6
மென்மையுமென நான்கு பொருள்பற்றிப் பிறக்கும்
இளிவரல் என்றவாறு.

வருத்தமெனினும் முயற்சியெனினும் ஒக்கும். 'யாப்புற
வந்த' என்பது திட்பமுறவந்த என்றவாறு; அங்ஙனங் கூறிய

1. இல்லி — துவாரம்.

2. தன் என்றது குழவியை. குழவி தனக்குப் பாலின்றி
வறுமையுற்று அழுதமையின் தன்கண்வந்த வறுமைபற்றிய அவல
மாயிற்று. தன் மகமுகநோக்கித் தாயழுதாள் என்றது தன் மக
வுக்குப் பாலில்லாமையால் அதன் முகநோக்கி அழுதாள் என்ற
படி. ஆகலின் பிறன்கட்டோன்றிய வறுமைபற்றிய அவல
மாயிற்று. பிறன் என்றது மகவை.

3. கண்ணோடல் — இரங்கல்.

4. அஃது — அம்மூதிற் பெண்டிரழுகை.

5. இளிவரல் — எளிமை; இழிவு. 6. மென்மை
— வலியின்மை.

மிகையானே வீரமுதலாயினைபற்றியும் இளிவரல் பிறக்கும் என்ற வாறு. இவையும் முன்னையபோலத் தன்கட்டோன்றுவனவும் பிறன்கட்டோன்றுவனவும் பற்றி எட்டாதலுடைய வென்பது கொள்க.

[1] "தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
[2] றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே."
(புற-உசரு)

என்பது, தன்கட்டோன்றிய மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தது. என்னை? இளமைக்காலத்துச் செய்தன செய்யமாட் டாது இளிவந்தனம் இக்காலத்து என்றமையின்.

"மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
[3] முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல."

(அகம்-சு) என்பதும் அது.

" மூத்துத்தலை யிறைஞ்சிய நின்னொ டியானே
போர்த்தொழி றொடங்க நாணுவ லதனான்."

· என்பது, பிறன்கட்டோன்றிய மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தது.

" இமயமுந் துளக்கும் பண்பினை
⁴ துணையில ரளியர் பெண்டிரிஃ தெவனோ."
( குறு - கருஅ )

என்பது, தன்கட்டோன்றிய பிணிபற்றி இளிவரவு பிறந்தது; என்னை? மலையைத் துளக்கும் ஆற்றலையுடையாய் காமப்பிணி கூர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவது அன்றென இளி வந்து வாடைக்குக் கூறினமையின்.

" குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
யயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே." ( குறு - கஉஅ )

---

1. தொடி — பூண்.
2. இரும் — இருமல்.
3. முதுமையெள்ளல் என்றது தன்கட்டோன்றிய காரணமாகப் பிறந்த இளிவரல்.

மூப்புக்

4. துணையிலர் பெண்டிர் என்றது தலைவரைப் பிரிந்து காம நோயுழக்கும் பெண்டிர் என்றபடி. அதனால் இளிவரல் என்றார்.

பிணிபற்றிவந்த

3



[மெய்ப்பாட் என்பது, நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையிற் [1] பிறன்கட் டோன்றிய பிணியெனப்படும். இதனுள்,

"சேய ளரியோட் [2] படர்தி"
என்றமையின் இது பிறன்கட்டோன்றிய வருத்தமும் வந்த தாயிற்று.

[3] "யான்ற னறிவ ருனறி யலளே." (குறு-௩௩௭) என்பது, தன்கட்டோன்றிய வருத்தம்பற்றி வந்த இளிவரல்; என்னை? அது பின்னின்ற தலைமகன் கூறியதாகலின்.

"ஒன், றிரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லும்"

( கலி-சஎ )

என்பது பிறன்கட்டோன்றிய 4
வருத்தம்பற்றி வந்தது ; என்னை ? அவன் இவ்வாறொழுகுதல் நமக்கு இளிவரலாமென்னுங் குறிப்பினாற் கூறிக் குறை நயப்பித்தமையின்.

" வலியரென [5] வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்." (
புறம்-உ௩௯ )
எனத் தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றிய மென்மைபற்றி
இளிவரல் பிறந்தன ; என்னை ? மெலியார் இளிவந்தன கூறுவ
ராயினும் வலியார் மீக்கூறுவராயினும் இவன் அவை செய்யா னென்றலின்.

[6] " ஒருகை யுடைய நெறிவலோ யானு
மிருகை சுமந்துவாழ் வேன்."
( ப-உ0எ )

1. பிறன் என்றது நெஞ்சினை.
2. படர்தி என்றது விரும்புகின்றாய் என்றபடி. விரும்புதல்
பற்றி முயற்சிபற்றி வந்ததென்றார்.

3. யான், அவள் வருத்தும் பருவமுடையள் என்பதை அறி வேன். எனவே இளையள் விளைவிலள் என்றுதி; என்னை வருத் தும் பருவம் உடையள் என இரந்து பின்னின்ற தலைமகன் கூறின மையின் தன்கட்டோன்றிய வருத்தமாயிற்று. இரந்து பின்னிற் றல் — வருத்தம் (முயற்சி); இதனால் அவற்கு இளிவரல் பிறந்தது.

4. இரப்பான்போல் இளிவந்து கூறல்—வருத்தம் (முயற்சி).

5. வழிமொழியலன் என்பது — தன் மென்மைதோன்ற நின் றது. மெலியர் என்பது பிறர் மென்மைதோன்ற நின்றது.

6. ஒரு கையுடையது—யானை. எறிவலோ என்றமையான், எறிதல் வீரத்திற்கு இழுக்காகும் என்றபடி.



கல என்பது வீரம்பற்றி இளிவரல் பிறந்தது;

[1] இது, தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றுமையின் இலேசினாற் கொண்டா மென் பது.

(சு)

[மருட்கைச்சுவை இத்துணையது எனல்]

உடுரு. புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே.

இது, வியப்புணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : புதிதாகக் கண்டனவும், கழியப்பெரியவாயினவும், இறப்பச் சிறியனவும், ஒன்று ஒன்றாய்த் திரிந்தனவுமென நான்கும் பற்றி வியப்புத்தோன்றும் என்றவாறு.

'மதிமை சாலா மருட்கை' என்பது, அறிவினை உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமற் றிரித்து வேறுபடுத்து வருவதென்றவாறு. இவையுமெல்லாம் மேலனபோலத் தன்கட்டோன்றினவும் பிறன்கட்டோன்றினவுமென எட்டாதலுடைய.

"மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி யவரு
ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி
யோரியா னாகுவ தெவன்கொ
னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே."

(அகம்—அ௨)

என்பது, தன்கட்டோன்றிய புதுமைபற்றி

வியப்புப் பிறந்தது ;

என்னை ? தன் கருத்து வெளிப்படாது
தன்மெய்க்கட்டோன்றிய
புதுமையைத் தலைவி வியந்தாள்போலத்
தோழிக்கு அறத்தொடு
நின்றமையின்.

---

1. இவ்விளிவரல் தன்கண் பிறந்ததுமன்று. பிறன்கண் பிறந்ததுமன்று. வீரத்தின்கண் பிறந்தது என்றபடி. என்றது தனக்கும் இகழ்ச்சியாகாது யானைக்கும் இகழ்ச்சியாகாது வீரத்திற் கிகழ்ச்சியாமென்றபடி. இவ்விளிவு இரண்டிடத்தும் இல்லை. வீரத்திலுண்டு என்பது கருத்து. செயலால் வந்ததாகலின் வீரத்தில் இழிவுதோன்றும் என்க. " விலங்காமென மதவேழமு மெறியான் " என்பது சிந்தாமணி.

2. கண்டோர் பலருள் தனக்குமாத்திரம் நீர்வார கண்ணொடு நெகிழ்தோளானமை, புதுமை. ஆதலிற் புதுமைபற்றிய வியப்பு. புதுமை — முன்னில்லாதன தோன்றினமை.



" மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்
விழவுக்கள விறலியிற் றோன்று நாடன்."

(அகம்-அஉ) என்றவழிப் பண்டு ஒருகாலுங் கண்டறியாதபடி ஆடிற்று மயி லென்றமையிற் பிறபொருட்கட்டோன்றிய புதுமையாயிற்று.

"நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே."

(குறு-௩) என்பது பெருமை வியப்பு; என்னை? கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போல வழிமுறை முறை யாற் பெருகற்பாலதாகிய நட்பு, மற்றவனைக் கண்ணுற்ற ஞான்றே நிலத்தின தகலம்போலவும், விசும்பி னோக்கம்போலவுங், கடலி னாழம்போலவும் ஒருகாலே பெருகிற்றென்றமையின்; இது தன்கட்டோன்றிய [1] பெருமை வியப்பு; இது தலைமகன் கருத் தினுள் நட்பிற்குக் கொள்ளுங்காற் பிறன்கட்டோன்றிய பெருமை வியப்பாமென்பது கொள்க.

"மைம்மல ரோதி மணிநகைப் பேதைதன்
கொம்மை வரிமுலை யேந்தினு—மம்ம
கடையிற் சிறந்த கருநெடுங்கட் பேதை

²யிடையிற் சிறியதோன் றில்.''
என்பது, பிறன்கட்டோன்றிய சிறுமை வியப்பு.
தன்கட்டோன் றிய சிறுமை வந்துழிக் காண்க.

"எருமை யன்ன கருங்கல் விடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும."

(புறம்—௫) என்பது, நரிவெரூஉத்தலையார் தம்முடம்புபெற்று வியந்து கூறிய பாட்டாகலின், [3] இது தன்கட்டோன்றிய ஆக்கம்பற்றி வியப்புப் பிறந்ததாயிற்று.

---

1. தலைவி தலைவனொடுபட்ட தன் நட்பின் பெருமையைக் குறித்து வியந்தமையின் தன்கட்டோன்றிய பெருமை வியப்பா யிற்று. தலைவன் தன்னிடத்து வைத்த நட்பின் பெருமையைத் தலைவி வியந்ததாகக் கொள்ளுங்கால் பிறன்கட்டோன்றிய பெருமை வியப்பாமென்றபடி.

2. இது பேதையினது இடையின் சிறுமையை வியத்தலின் சிறுமைபற்றிய வியப்பாயிற்று.

3. இது தன்கட்டோன்றிய ஆக்கம் என்றது நரிவெரூஉத் தலையார் சேரமான் ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை

"உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி

[1]யிறப்ப நிழற்பயந் தாஅங்கு."

(நால-நூஅ) என்பது, [1] பிறபொரு ளாக்கம்பற்றிய வியப்பு.

இனி, மதிமை சாலா மருட்கையானே சிறுமைப்பொருள் பெருந்தொழில் செய்தலும், பெருமைப்பொருள் சிறுதொழில் செய்தலும் வியப்பாமெனக் கொள்க.

[2] "கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு."

(புறம்-எஎ) என்னும் பாட்டுச் சிறியோர் பெருந்தொழிலைச் செய்தது.

"அன்றொ ருவன்றன் னாண்டகைவிட் [3]டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய்."

(கலி-சஎ) என்பது, பெரியோன் சிறுதொழில் கூறலின் வியப்பாயிற்று.

புதுமையை ஆக்கத்துளடக்கி
முதுமையென்பது பாட மாகவும் உரைப்ப ;
அன்னதோர் வழக்கின்மையானும் புதுமை 4 ஒன்று
ஒன்றாய்த் திரியுமெனப்பட்டு அவ்வாக்கத்துள்
அடங் காமையானும் அஃதமையாதென்பது.

இங்ஙனம் இவை நான்கு
சூத்திரப்பொருளும், நாலுங்கு பதினாறாகியும்
முப்பத்திரண்டாகியும் விரியுமாகலின் இவற்றை
ஓரினமாக்கி முதற் சூத்திரத்து முன்
வைத்தானென்பது.

இனிவருஞ் சூத்திரநான்கினும்
எண்ணப்படும் பொருள்
ஒன்று இரண்டாகாமையின் அவை பதினாறேயாமென்பது ;
அஃதேயெனின், இத்துணையுங் கூறிவந்த முப்பத்திரண்டனை
யும் இனிக் கூறும் பதினாறனையும் நோக்கி முதற்
சூத்திரத்துள், —
யைக் கண்டபொழுதே சாபம்நீங்கித்
தமக்கியல்பான உடம்பைப் பெற்று
ஆக்கம் அடைந்தமையை (புறம்-ரு).

1. சிறிய வித்துப் பெரிய மரமானது ஆக்கம்.

2. கிண்கிணி களைந்தகால் என்றமையின்
குழவிப் பருவ முடையான் என்பதூஉம அவன்

போர்செய்யக் காலில் கழல் கட்டி என்றமையின் அவன் பெருந்தொழில்செய்ய முயன்றமை யும் பெறப்பட்டன.

3. என்னைச் சொல்லுஞ் சொல் என்பது பின்னின்றிரத்தலைக் குறித்தலின் சிறுதொழிலாயிற்று.

4. ஆக்கம் ஒன்று ஒன்றாய்த் திரிவது; புதுமை திரியாதாகலின் அதனுள் அடங்காது என்றபடி. அவ்வாறு



"பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளுங்
கண்ணிய புறனே நானான் கென்ப." (பொ-௨௪௯)

என்றானென்னுமோவெனின், என்னுமன்றே. பதினாறு பொருளும் மேற்கூறிய முப்பத்திரண்டு[1] மென்று படாமையி னென்பது; என்றார்க்குத் தன்கட்டோன்றுதல் பிறன்கட்டோன்றுத லெனப் பகுத்துப் பொருளுரையாது, [2] மேலனவும் இனி வருகின்றனவும் நானான்கேயாகலாற் 'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருள்' (௨௪௯) என்றானுமெனின், அங்ஙனங் கூறின் அவை 'கண்ணிய புறனே நானான் கென்ப' (பொ—௨௪௯) என்றும், 'நாலிரண் டாகும் பாலுமா ருண்டே' (௨௫௦) என்று

மடங்கக் கூறல் வேண்டாவாம்; வேண்டவே, இச்சூத்திரம் எட்டு

வகையாகியே செல்லுமென மறுக்க; அல்லதூஉம் இஃது உலக

வழக்காதலிற் பண்ணைத்தோன்றிய பொருள் ஈண்டு ஆராயா

னென்பது. அன்றியும் இவற்றைப் பண்ணைத்தோன்றிய பொருளெனின் [3] ஒன்றொன்றாக்கிக் கூறுது, கூத்தன் அரங்கினுள் இயற்றும் வகையானே சுவையுங் குறிப்புஞ் சத்துவமுமென வேறு வேறு செய்வான் ஆசிரியனென்பது. (எ)

[அச்சச்சுவை இத்துணையது எனல்]

உருசு. **அணங்கே விலங்கே கள்வர்த மிறையெனப்**

**பிணங்கல் சாலா வச்ச நான்கே.**

இது, முறையானே அச்சமுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தெய்வமும் விலங்கும் கள்வரும் தமக்கு இறைவ

ராயினருமென நான்கு பகுதியான் அச்சம் பிறக்கும் என்றவாறு.

1. என்று படாமையின்—என்று

சூத்திரப்பொருள் படா

மையின்.

2. மேலனவற்றையும் இனி வருவனவற்றையும் $(8 \times 4 = 32)$ முப்பத்திரண்டா மென்றுனெனின், முப்பத்திரண்டு பதினுரு மென்றும், பதினுறெட்டாமென்றும், ஒன்று ஒன்றுளடங்கக் கூறவேண்டாவாம் என்றபடி. அடங்கக்கூறல் வேண்டினமை யானே இச்சூத்திரம் நான்குவகையாகாது எட்டுவகையாம் என்ற படி. எனவே இதன் முதற் சூத்திரங்களும் எவ்வெட்டுவகையாம் என்றபடி. ஆகவே இந்நான்கு சூத்திரத்தானுய முப்பத்திரண் டும் வேறு. பண்ணைத் தோன்றிய முப்பத்திரண்டும் வேறு என்றபடி.

3. ஒன்றொன்றுக்கி—ஒன்றை யொன்று ளடக்கி. அடக்கி. அடக்கி என்று பாடமிருப்பினு மமையும்.

ஆக்கி—

டியல்]

பொருளதிகாரம்

உ

அணங்கென்பன : பேயும் பூதமும் பாம்பும் ஈறுகிய [1] பதி னெண் கணனும், [2] நிரயப்பாலரும், பிறரும் [3] அணங்குதற் றொழிலராகிய

சவந்தின்பெண்டிர் முதலாயினரும் 4 உருமிசைத் தொடக்கத்தனவு மெனப்படும். விலங்கென்பன : அரிமா முத லாகிய அஞ்சுதக்கன. கள்வரென்பார் : தீத்தொழில் புரிவார். இறையெனப்படுவார் : தந்தையரும் ஆசிரியரும் அரசரும் முத லாயினர். 'பிணங்கல் சாலா அச்சம் ' என்றதனான் முன்னைய போல இவை தன்கட்டோன்றலும் பிறன்கட்டோன்றலுமென் னுந் தடுமாற்றமின்றிப் பிறிது பொருள்பற்றியே வருமென்பது.

உதாரணம் :—

"யானை தாக்கினு மரவுமேற் செலினு
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
5 சூன்மகண் மாறு மறம்பூண் வாழ்க்கை."

(பெரும்பா-134-6) என்பதனுள், அணங்கும் விலங்கும் பொருளாக அச்சம் பிறத் தல் இயல்பென்பது கூறியவாறாயிற்று.

"ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
6 வெரூஉதுங் காணுங் கடை."

(கலி-அள)

இது, கள்வர் பொருளாக அச்சம் பிறந்தது; என்னை? அவனைக் கள்வர்பாற் சார்த்தியுரைத்தமையின்.

ர "எருத்துமே னோக்குறின் வாழலே மென்னுங் கருத்திற்கை கூப்பிப் பழகி—யெருத்திறைஞ்சிக்

1. பதினெண் கணங்களாவன: தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தருவரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதமும் வேதாளமும் தாராகணமும் போகபூமியினரும் ஆகாய வாசிகளும் என இவர்.

2. நிரயப்பாலர்—நிரயத் தலைவர். என்றது காலன் முதலியோரை. நிரயபாலகர் என்றும் பாடம்.

3. அணங்கல்—வருத்தல்.

4. உரும்—இடி.

5. சூல்—கரு.

6. வெரூஉதும்—அஞ்சுதும்.

7. எருத்து மேனோக்குறின்—கழுத்தை நிமிர்த்தி நோக்கின்.

வேந்து கண்டறியா என்க, அச்சத்தாற் கழுத்தை பாரார் என்றமையின் அச்சச் சுவையாயிற்று.
நிமிர்த்திப்



கால்வண்ண மல்லாற் கடுமான்றேர்க் கோதையை
மேல்வண்ணங் கண்டறியா வேந்து.'' (இ-வி-ப-கஉச)

இஃது, [1] இறைபொருளாக அச்சம் பிறந்தது.

பிணங்காத அச்சமென்னுது 'சாலா அச்சம்' என்ற மிகை யான் இந் நான்குமேயன்றி ஊடன் முதலியனவும் அச்சத்திற் குப் பொருளாமென்று கொள்க.

"சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவனின்
[2] ஞூணை கடக்கிற்பா ரியார்.''

(கலி—அக)

என்பது, புலவி பொருளாக அச்சம் பிறந்தது.

"அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரி [3] ஞெடுங்கிய விருக்கை.''

(அகம்-உ௩௬)

" அச்சா ருக வுணரிய வருபவன்
4 பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னுகுவல்."

(கலி-எ௫)

என வருவனவும் அவை. பிறவும் அன்ன.

(அ)

[பெருமிதச்சுவை இத்துணையது

எனல்]

உ௫எ. கல்வி தறுகண் ணிசைமை
கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே.

இஃது, ஆறும் எண்ணு முறைமைக்கண் நின்ற வீரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : கல்வியும் [5] தறுகண்மையும் புகழும் கொடையு மென்னும் நான்கும்பற்றி வீரம் பிறக்கும் என்றவாறு.

இச்சூத்திரத்துள் வீரத்தினைப்

பெருமிதமென்றெண்ணி

ஞன்; என்னை? எல்லாரொடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக நிற்றல் பெருமிதமெனப்படும் என்றற்கென்பது.

---

1. இறை—அரசன்.

2. ஆணை கடக்கிற்பார் யார் என்றமையின் அச்சமாயிற்று. புலவி—ஊடல்.

3. ஒடுங்கிய இருக்கை என்றது, ஊடற்கஞ்சி மகளிர்போல் அவன் ஒடுங்கியிருக்கின்ற இருக்கை.

4. பொய்ச்சூள்—பொய்ச் சத்தியம்.

5. தறுகண்மை—அஞ்சாமை.



கல்வியென்பது, தவமுதலாகிய விச்சை.

தறுகணென்பது,
அஞ்சுதக்கன கண்ட இடத்து அஞ்சாமை.

இசைமையென்பது,
இன்பமும் பொருளும் இறப்பப்பயப்பினும் பழியொடு வருவன செய்யாமை. கொடையென்பது, உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளுங் கொடுத்தல்.

உதாரணம்:

[1] "வல்லார்முற் சொல்வல்லே னென்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள்."
(கலி-கசக)

என்பது, கல்விபற்றிய பெருமிதம்; என்னை? என்னையுங் கல் லாமை காட்டினளெனத் தன் பெருமிதங் கூறினமையின்.

[2] "அடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன்
மன்றம் படர்வித் தவள்."

(கலி-கசக) என்பது தறுகண்.

"கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்
[3] பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்."

(அகம்-ககஉ) எனபது புகழ.

"வையம்,
புரவுக்கு முள்ளத்தே னென்னை யிரவுக்கு
மின்னா விடும்பைசெய் தாள்."

என்பது கொடை.
(கலி—கசக)

"தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
றபுதிகண் டஞ்சிச் [4] சிறை புக்க
வரையாஈவீகை யுரவோன் மருக."

(புற-சரு) எனபதுமது.

'சொல்லப்பட்ட பெருமிதம்' என்றதனாற் காமம்பற்றியும் பெருமிதம் பிறக்குமென்று கொள்க.

---

1. வல்லார் முற் சொல்வல்லேனாகிய என்னை என்றது கல்வி பற்றிய பெருமிதம்.

2. அடன்மாமேலாற்றுவேன் என்றது பெருமிதம்.

தறுகண் பற்றிய

3. பழியொடு வரூஉ மின்பம் வெஃகாமை—புகழ்பற்றிய பெருமிதம்.

4. சிறை—துலக்கோற்றட்டு. சிறைபுக்கது—கொடைபற்றிய வீரம்.



"பல்லிருங் கூந்தன் மகளி
ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே."[1]

(புறம்-எ௩)

என்பது, காம்ம்பற்றிய பெருமிதம். பிறவும் வருவன உளவேற் கொள்க. இது தன்கட்டோன்றிய பொருள்பற்றி வரும். என்னை? கல்வியும் தறுகண்மையும் ² இசைமையும் வேட்கையுங் கொடைத் தொழிலுந் தன்கண்ணவாகலின். (௬)

[வெகுளிச்சுவை இத்துணையது எனல்]

௨௫௮. உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே.

இஃது, ஏழாம் எண்ணு முறைமைக்கண் நின்ற வெகுளி உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: உறுப்பறையென்பது, கை குறைத்தலும் கண் குறைத்தலும் முதலாயின; குடிகோளென்பது, தாரமுஞ் சுற்றமுங் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கட் கேடு சூழ்தல்; அலையென்பது, கோல்கொண்டலைத்தன் முதலாயின; கொலை யென்பது, அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத் தல்: இவை நான்கும் பொருளாக வெகுளி பிறக்கும் என்றவாறு.

'வெறுப்பின்'

என்றதனுன் ஊடற்கண்தோன்றும் வெகுளி முதலாயினவுங் கொள்க.

3 "முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" (கலி—ருஉ) என்பது, உறுப்பறையான் வந்த வெகுளி.

---

1. முயக்கிடைக்குழைகவென்றமையின் முயக்கிடைக்குழையாமை வீரம் என்க.

2. இசைமையும் வேட்கையும் என்பது இசைவேட்கையும் எனவும் பாடம். சூத்திரக்கருத்திற்கதுபொருத்தம். உரைகாரர் காமமுங் கூறலின் அங்ஙனமுமிருக்கலாம். அங்ஙனேல் வேட்கை பின்வருதல் நலம்.

3. முறஞ்செவி...புலிசெற்று—முறம்போலும் செவியாகிய மறைப்பு இடமாக வந்து பாய்ந்து மாறுபாட்டைச்செய்த புலியை வெகுண்டு எனவே புலிபாய்ந்து தன் உறுப்பைக் கடித்தலால் வெகுடலின் உறுப்பறையான் வந்த வெகுளியாயிற்று.



"நின்மகன்,

படையழிந்து மாறின னென்றுபலர் கூற

மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்

முலையறுத் திடுவென் யானெனச் சினை இ."

(புற—உஎஅ)

என்பது, குடிகோள்பற்றி வந்த வெகுளி; என்னை? தன்மகன் மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தானென்று சினங்கொண்டாளாகலின்.

1 "நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி
யகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்."

(புறம்—ந00)

என்பதுமது.

2 "வரிவயம் பொருத வயக்களிறு போல

வின்னு மாறாது சினனே."

(புறம்—க00)

என்பதனுள், அலைபற்றிச் சினம் பிறந்தது; என்னை? புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போந்தும் அவ்வலைப்புண்டலை நினைந்து சினங்கொள்ளா நின்ற தென்றமையின்.

"உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை."

(புற-எ௨)

என்பது, கொலைபொருளாக வெகுளிச் சுவை பிறந்தது; என்னை? சிறு சொற் சொல்லுதலென்பது, புகழ்கொன்றுரைத்தலாகலின்.

"செய்தவ றில்வழி யாங்குச் 3 சினவுவாய்."

(கலி—அஎ) என்பது, ஊடற்கண்
4 தலைமகள் வெகுட்சி கூறியது. பிறவு மன்ன.

இன்னும் அவ்விலேசானே,

"நெருப்புச் சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை."
(புற—கஉ௫)

---

1. நேற்றுப் பகல் நீ யெறிந்தவனுடைய தம்பி, தமது குடியி லுள்ள தமையனைக் கொன்றமையின் குன்றிபோலச் சிவந்து சுழலுங் கண்ணனாயினன் என்றமையின் இது குடிகோள்பற்றி வந்த வெகுளி. குன்றி—குன்றுமணி. அகல்—மண்ணாலாயினும் உலோகங்களினாலாயினுஞ் செய்யப்படும் ஒருவகைச் சிறிய பாத்திரம். அது கண்ணின்வடிவிற் குவமை.

2. வரிவயம்—வரி பொருந்திய புலி.

3. சினவல்—வெகுளல்.

4. தலைமகள் வெகுட்சி—ஆறும் வேற்றுமைத்தொகை.



என்றாற்போலச் சினமில்லதனை உள்ளதுபோலக்

கூறுவனவுங் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக்கல்லது சுவை தோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படாவென்பது. [1] இது பிறன்கட் டோன்றிய பொருள்பற்றி வரும். (௧௦)

[உவகைச்சுவை இத்துணையது எனல்] ௨௫௧. செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்
றல்ல னீத்த வுவகை நான்கே.

இஃது, ஈற்றுக்கண்ணின்ற [2] உவகை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: செல்வமென்பது, நுகர்ச்சி; புலனென்பது, கல்விப் பயனாகிய அறிவுடைமை; புணர்வென்பது, காமப்புணர்ச்சி முதலாயின; விளையாட்டென்பது, 'யாறுங் குளனுங் காவுமாடிப் பதிஇகந்து வருதன்' (௧௬௧) முதலாயின. இவை நான்கும் பொருளாக உவகைச்சுவை தோன்றும் என்றவாறு.

உவகையெனினும் மகிழ்ச்சியெனினும் ஒக்கும்.

"உரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய
வளமையா னுகும் பொருளிது வென்பாய்."

(கலி—கஉ)

என்புழி, வளமையா னுகும் மனமகிழ்ச்சி இதுவெனக் கூறினமையின், இது செல்வம் பொருளாகப் பிறந்த உவகையாம்.

"நன்கலம் பெற்ற வுவகையர்."

என்பதும் அது.

"பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் [3] றாதுண்ணும்
வண்டிற் றுறப்பான் மலை."

(கலி—சo) என்பது, அறிவு பொருளாக உவகை பிறந்தது; என்னை? 'முகைப்பதம் பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை' காமத்திற்கு ஏதுவாமாகலின்.

---

1. இது—வெகுளி.

2. உவகைப் பொருள்களை "ஒத்தகாமத்தொருவனும்...... ஏக்கமுத்தம்மே" என்னுஞ் செயிற்றியனர் சூத்திரம் நோக்கியறிக. (இளம்பூரணருரை).

3. தாதுண்ணும் வண்டினென்றமையான் நகைப்பதம் பார்த்தல் பெறப்பட்டது. நகைப்பதம்—தன்னொடு நகும் பருவம்.



1 "இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பாம்—அகல்வானத்
தும்ப ருறைவார் பதி."

(நால-கங எ) என்பதும் அது.

"இலமல ரன்ன வஞ்செந் நாவின்."

(அகம்-கசஉ) என்னும் மணிமிடை பவளத்துள்,

"தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்

வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே."

என்பது, புணர்ச்சிபற்றிய உவகை; என்னை? அவள் இவ்வாறு முயங்கினமையான்.

"உவவினி வாழியென் னெஞ்சே."

என்றமையின்,

"துயிலின்றி யானீந்தத் தொழுநையம் புனலாடி

மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு
வான்மன்னே." (கலி—ந௦)

என்புழி, 'ஆறுடி விளையாடி மயிலியலார் மருவுண்டு மறைந் தமைகுவான்மன்' என்றமையின் இது விளையாட்டுப் பொருளாக உவகை பிறந்தது. 'அல்லல் நீத்த வுவகை' என்றதனுற் பிறர்

துன்பங் கண்டு வரும் உவகையும்
உவகையெனப்படாதென்பது.

இதுவுந் தன்கட்டோன்றிய பொருள்பற்றி வரும் என்றார்க்குப் பிறன்கட்டோன்றிய இன்பம் பற்றியும் உவகை பிறக்குமன்றே!

அஃதெப்பாற்படுமெனின், அதுவும் 'அல்லல் நீத்த வுவகை' என்றதனுன் உவகையெனப்படும். இனித் தன்கட்டோன்றிய பெருமிதமும் உவகையும் முற்கூறு து, பிறன்கட்டோன்றிய அச்சம் முற்கூறி, இதனை ஈற்றுக்கண் வைத்தமையான் [2] எடுத்தோதிய நான்கும்போலாது இது பிறன்கட்டோன்றிய இன்பம் [3] பொருளாக வருமென்பது கொள்க. (கசு)

---

1. கல்வியாளர் தம்முட் கூடி மகிழ்தல் அறிவுடைமைபற்றி
வந்த உவகை.

2. எடுத்தோதிய நான்கு—இச் சூத்திரத்தா லெடுத்தோதிய
நான்கு. இது—இவ்வுவகை.

3. பொருளாகவும் வருமென்றிருப்பது நலம். போலாது என்றது; அவை நான்குந் தன்கட்டோன்றிய பொருள்பற்றி வருவதாகலின்.



[மேற்கூறியவன்றி இவையு மெய்ப்பாடு முப்பத்திரண்டு உள எனல்]

௨௬௦. ஆங்கவை யொருபா லாக வொருபா
லுடைமை யின்புற னடுவுநிலை யருள
றன்மை யடக்கம் வரைத லன்பெனாஅக்
கைம்மிக னலிதல் சூழ்ச்சி வாழ்த்த
னாணுத றுஞ்ச லரற்றுக் கனவெனாஅ
முனித னினைதல் வெரூஉதன் மடிமை
கருத லாராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்த லைய மிகைநடுக் கெனாஅ
விவையு முளவே யவையலங் கடையே.

இச்சூத்திரம் முற்கூறிவந்த எண்ணான்குமன்றி இவை முப் பத்திரண்டும் அவைபோல மெய்ப்பாடெனப்படுமென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : ஆங்கவை ஒருபாலாக—எள்ளல் (உருஉ) முதலாக விளையாட் (உருக) டிறுதியாகச் சொல்லப்பட்ட முப்பத் திரண்டும் ஒரு கூறாக ; ஒருபாலென்பது, இனிச் சொல்லுகின்ற ஒரு கூறென்றவாறு : பின்னர் அவற்றையெல்லாம் எண்ணி, 'இவையு முளவே யவையலங் கடையே' (உகூ0) என்றான். ஈண் டெண்ணப்பட்டவையே ஆண்டு அடங்குவனவும் உள. அப் பொருண்மைய வல்லாதவிடத்து, இவை முப்பத்திரண்டும் ஈண்டு மெய்ப்பாடெனப்படும் என்றவாறு.

இவை முப்பத்திரண்டெனத் தொகை கூறியதிலனாலெனின், 'ஆங்கவை யொருபாலாக வொருபால்' என்றானாகலின் இரு கூறெனப்படுவன [1] தம்மினொத்த எண்ணுதல் வேண்டுமாகலின், அவை முப்பத்திரண்டெனவே இவையும் முப்பத்திரண்டு என்பது [2] எண்ணி

உணரவைத்தானென்பது.

உடைமையென்பது, செல்வம்; செல்வ நுகர்ச்சியாயின் உவகைப்பொருளாம்! இஃது அன்னதன்றி நுகராதே அச்செல்வங்

1. தம்மின் — தம்முள்; ஒன்றோடொன்று.

2. எண்ணியுணர — எண்ணுமுறையாக எண்ணியுணர. டியல்]



தன்னை நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம்; அஃதாவது, [1] 'நிதிமேனின்ற மனம்' போலச் செல்வமுடைமையான் வரும் மெய் வேறுபாடு. [2] இன்புறலென்பது, அவ்வுடைமையை நினையுந்தோறும் [3] இடையிட்டுப் பிறக்கும் மனமகிழ்ச்சி. நடுவு நிலையென்பது, ஒன்பது சுவையுள் ஒன்றென நாடக நிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை; அஃதாவது,

[4] "செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினு
நெஞ்சோர்ந் தோடா நிலைமை."

அது, காம வெகுளி மயக்க நீங்கினோர் கண்ணே நிகழ்வது; இது சிறுவரவிற்றாகலான் [5] இவற்றொடு கூறினன். அருளென்பது, மக்கண் முதலிய சுற்றத்தாரை அருளுதல்: அஃது,

" அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்."

(கலி-கக)

என்றாற்போல வருவது. ஆண்டைக் கருணையினை அழுகையென்ற மையின் இஃது அதனோ டடங்காது. தன்மையென்பது சாதித் தன்மை; அவையாவன: பார்ப்பாராயிற் [6] குந்தி மிதித்துக் குறுநடைகொண்டு வந்து தோன்றலும், அரசராயின் [7] எடுத்த கழுத்தொடும் அடுத்த மார்பொடும் நடந்து சேறலும், இடைய

---

1. நிதிமேல் நின்ற மனம்—பொன்னின்மேல் நின்ற மனம். மனம்போல என்றமையான் மனம் வேறுபடுதல்போல என்பது கருத்தாம். 'மரம்போல' என்னும் பாடம் பொருத்தமாகக் காணப்படவில்லை. பொருந்துமேற் கொள்க.

2. இன்புறல்—நட்டாராகிப் பிரிந்து வந்தாரைக் கண்டுழி வருவதோர் மனமகிழ்ச்சி என்பர் இளம்பூரணர்.

3. நினையுந்தோறும் என்றமையின் நினைதலும் இடையிட்டு நினைதல் என்பது பெறப்படும்.

4. சிவந்த சாந்தை அப்பினும் தன்னுடம்பைத் துணிப்பினும் பிளப்பினும் அதன்கண் மனம் அறிந்து செல்லாத நிலை என்றது சமாதி நிலையை. 'அப்பினும் துணிப்பினும்' அறியா நிலை என்றத னால் விருப்பு வெறுப்பு அற்ற சமநிலை பெறப்படும். சமநிலை—ஒருமருங்கோடாத மன நிகழ்ச்சி என்பர் இளம்பூரணர். செத்தல்—செதுக்கலுமாம்.

5. இவற்றொடு — இம் முப்பத்திரண்டோடு.

6. குந்தி மிதித்தல்—அழுந்த மிதியாது 'குந்திய நடையினர்' என்பர் கம்பரும்.

மெல்ல மிதித்தல்.

ராயிற் [1] கோற்கையுங் [2] கொடுமடியுடையும் விளித்த [3] விளையும் வெண்பல்லுமாகித் தோன்றலுமென் றின்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க. அடக்கமென்பது, உயர்ந்தோர்முன் அடங்கி யொழுகும் ஒழுக்கம்; அவை: பணிந்த மொழியுந் தணிந்த நடையுந் [4] தானை மடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயின. வரைதலென்பது, காப்பன காத்துக் கடிவன கடிந் தொழுகும் ஒழுக்கம்; அவை: பார்ப்பாராயின் முத்தீ வேட்டலும் புலவுங் கள்ளும் முதலாயின கடிதலுமென் றின்னோரன்ன கொள்க. வரைதலென்பது தொழிலாதலான் இது தன்மையெனப்படாது. அன்பென்பது அருட்கு முதலாகி மனத்தில் நிகழு நேயம். அஃதுடையார்க்குப் பிறர்கட் டுன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாதலின் அவ்வருளானே அன்புடைமை விளங்குமென்பது. இவையெல்லாந் தத்த மனத்தி னிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப்பட்டன. இனி வருகின்றனவற்றிற்கும் இஃதொக்கும். கைம்மிகலென்பது ஒழுக்கக்கேடு. அது சாதித் தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல். நலிதலென்பது, பிறர்க்கின்னா செய்து நெருங்குதல்; அது தீவினை மாக்கட்கண் நிகழும். அவரைக்கண்டு அச்சம் எழுந்ததாயின் அஃது அச்சத்தினுள் அடங்குமாகலின் அஃதன்று இஃதென்பது. [5] சூழ்ச்சியென்பது, சுழற்சி; சூழ்வருவானைச் சுழல்வருமென்பவாகலின்; அது வெளிப்படுவதோர் குறிப்பின் அவன்கட் டோன்றலின் அதுவும் மெய்ப்பாடு; அஃதாவது மனத்தடுமாற்றம். [6] வாழ்த்தலென்பது, பிறரால் வாழ்த்தப்படுதல்; இது பிறவினையன்றோவெனின், ஒருவனை நீடு வாழ்க என்று வாழ்த்தல் பிறவினையாயினும், அவன் வாழ்விக்கப்படுதலின் அவன் அவ்வாறுகூறல் அமைபுமென்பது.

---

1. கோல்—மூங்கிற்றண்டு.

2. கொடு மடி—வளைந்த மடி. இக்காலத்து கொடுக்கு என்பர். இலை முதலிய இடற்கு விடும் வளைந்த மடி என்பர் அகநானூற் றுரைகாரர்.

3. வினை—சீழ்க்கை.

4. தானை மடக்கல்—உடையை ஒதுக்கல்.

5. சூழ்ச்சி—எண்ணம் (சிந்தித்தல்) என்பர் இளம்பூரணர்.

6. வாழ்த்தல்—வாழ்த்தப்படுதல். வாழ்த்தல் — பிறரை வாழ்த்தல் என்றும், மனநிகழ்ச்சியாதலின் மெய்ப்பாடாயிற்று என்றும் இளம்பூரணர் கூறுவர்.



நாணுதலென்பது, நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி. துஞ்சலென்பது உறக்கம்; அது நடந்துவருகின்றான் கண்ணும் விளங்கத் தோன்றுதலின் அதுவும் மெய்ப்பாடெனப் பட்டது. அரற்றென்பது, அழுகையன்றிப் பலவுஞ் சொல்லித் தன் குறை கூறுதல்; அது, [1]'காடுகெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல்போல' வழக்கினுள்ளோர் கூறுவன. கனவென்பது, வாய் வெருவுதல்; அதனானும் அவனுள்ளத்து நிகழ்கின்ற தொன்று உண்டென்று அறியப்படும். முனிதலென்பது, வெறுத்தல்; அஃது அருளுஞ் சினமுமின்றி இடைநிகர்த்தாதல்;

'வாழ்க்கை முனிந்தான்' எனவும்,

[2] "உறையுள் முனியுமவன் செல்லு மூரே." (புறம்-கூகூ)
எனவுஞ் சொல்லுபவாகலின். நினைதலென்பது, விருப்புற்று நினைத்தல்; 'நின்னை மிகவும் நினைத்தேன்' என்பது வழக்காதலின்; அந் நினைவுள்ளம் பிறர்க்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று. வெரூஉதலென்பது, விலங்கும் புள்ளும்போல வெருவி நிகழும் உள்ள நிகழ்ச்சி; அஃது, அஞ்சவேண்டாதன கண்டவழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி. மடிமையென்பது, சோம்பு. கருதலென்பது, மறந்ததனை நினைத்தல். ஆராய்ச்சியென்பது, ஒரு பொருளை நன்று தீதென்று ஆராய்தல். விரைவென்பது, இயற்கை வகையானன்றி ஒரு பொருட்கண் விரைவுதொழில்பட உள்ளநிகழுங் கருத்து. உயிர்ப்பென்பது, வேண்டிய பொருளைப் பெறாதவழிக் கையற வெய்திய கருத்து. அது நெட்டுயிர்ப்பிற்கு முதலாகலின் அதனையும் உயிர்ப்பென்றானென்பது. கையாறென்பது, அவ்வுயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல். இடுக்கணென்பது, மலர்ந்த நோக்கமின்றி [3] மையலுணோக்கம்படவரும் இரக்கம். பொச்சாப்பென்பது, அற்றப்படுதல்; அஃதாவது, பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓர் [4] இகழ்ச்சியான் இடையறவுபடுதல். பொறாமையென்பது, அழுக்காறு; அஃதாவது, பிறர் செல்வங் கண்டவழி வேண்டாதிருத்தல். வியர்த்தலென்பது, பொறாமை முதலாயினபற்றி

---

1. இதனைக் கலிங்கத்துப்பரணி நோக்கியறிக.

2. உறையுள் முனியும்—உறைதலை வெறுக்கும். உறைதல்—இருத்தல்.

3. மையல்—மயக்கம்.

மனம் புழுங்குதல். ஐயமென்பது, ஒரு
பொருண்மேல் இரு
[1] பொருட்டன்மை கருதிவரும் மனத்
தடுமாற்றம். மிகையென்
பது, கல்லாமையுஞ் செல்வமும் இளமையும்
முதலாக வரும்
உள்ள மிகுதி. நடுக்கமென்பது, அன்பும்
அச்சமும் முதலாயின
உடம்பிற் புலப்படுமாற்றான்
உள்ள நடுங்குதல்; புதல்வர்க்குப்
பிணி இல்வழியும் எவனாங்கொலென்று
நடுங்குதல் அன்பான்
நடுங்குதலாம். அச்ச மென்னுஞ் சுவை
பிறந்ததன் பின்னர்
அதன்வழித் தோன்றிய நடுக்கம்
அச்சத்தாற்றோன்றிய நடுக்கமா

மென்பது.

இவை முப்பத்திரண்டும் மேற்கூறிய முப்பத்திரண்டும்
போல அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகி நிகழும் மெய்ப்
பாடெனக் கொள்க. இவையெல்லாம் உலகவழக்காகலான் இவ்
வழக்கேபற்றி நாடக வழக்குள்ளுங் கடிப்பட்டா வென்றவாறு.
மற்றிவற்றை எண்ணிய மாத்திரை யல்லது இலக்கணங் கூறு
கின்றிலனாலெனின், [2] சொல்லின் முடியும் இலக்கணத்தவாகலின்
சொல்லானுயினு னென்பது. உதாரணம் இக்கூறியவாற்றான் வழக்குநோக்கியுஞ்
செய்யுணோக்கியுங் கண்டுணரப்படும். (௧௨)

**[ஒரு தலைவனும் ஒரு தலைவியும் எதிர்ப்பட்டவழி**
**அவ்வெதிர்ப்பாடு தொடங்கிப் புணர்ச்சியளவும் நிகழும்**
**முப்பகுதி மெய்ப்பாடுகளுள் முதற்பகுதி இத்துணையது எனல்]**

உசுக. புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்த
னகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு
தகுமுறை நான்கே யொன்றென மொழிப.

இதன்மேலெல்லாம் அகத்திணைக்கும் புறத்திணைக்கும்
பொதுவாகி வரும் மெய்ப்பாடு கூறினன். இனி அகத்திணையுட்
பெரும்பான்மையாகி வரும் மெய்ப்பாடு கூறுவான் தொடங்கி,
அவற்றுள்ளுங் களவிற்குச் சிறந்துவரும் மெய்ப்பாடு கூறுவான்,
ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழி அவ்வெதிர்ப்பாடு
தொடங்கிப் புணர்ச்சியளவும் மூன்று பகுதியவாம் மெய்ப்பா
டெனவும், புணர்ச்சிப்பின்னர்க் களவு வெளிப்படுந் துணையும்

மூன்று பகுதியவாம் அவையெனவும், அவையாலும் ஓரோ

1. பொருள் தன்மை எனப் பிரிக்க

2. சொல்லின் முடியு மிலக்கணமென்றது அவ்வச் சொல்லானே அவ்வவற்றி னிலக்கண முடிந்து கிடத்தலை.



வொன்று நந்நான்கு பகுதியான் ஒன்றன்பின்னொன்று பிற க்கு மெனவுங் கூறுகின்றான். அவற்றுண் முதலன மூன்றினும் முன்னர்நின்ற ஒரு கூற்றினை இந்நாற்பகுதிக்கெண்கின்றது இச்சூத்திரமென உணர்க. ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்ட வழிக் காந்தொழுகும் உள்ள நிகழ்ச்சி பெண்பாலதாகலாற் பெரும்பான்மையும் அவள்கண்ணே ஈண்டுக் கூறுகின்ற மெய்ப் பாடு சிறந்ததென்பது.

**இ—ள்** : [1] புகுமுகம் புரிதல் என்பது, ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழித் தன்னை

அவன் நோக்குதற்கண் விரும் பும் உள்ள நிகழ்ச்சியும் ; புகுதலென்பது, தலைமகன் நோக்கிய நோக்கெதிர் தான்சென்று புகுதல் ; முகமென்பது அங்ஙனந் தான் புகுதற்கிடமாகிய நோக்கு ; நோக் கெதிர்நோக்குதலை முக நோக்குதல் என்பவாகலின் இந்நோக்கினை முகமென்றானென் பது. புரிதலென்பது, மேவுதல் என்றவாறு. அஃதாவது, தலை மகன் காண்டலைத் தலைமகள் வேட்டல் என்றவாறும். மற்றிது தலைமகற்கு உரித்தன்றோவெனின், அவன் தான் காண்பினல்லது தற்காண்டலை நயவான் ; அது தலைமையன்றாகலினென்பது ;

அது,

உ "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்

றானோக்கி மெல்ல நகும்."

(குற–கக0௪) என வரும்.

பொறிநுதல் வியர்த்தல் என்பது, தலைமகன் தன்னை நோக் . கியவழி உட்கும் நாணும் ஒருங்குவந்தடைதலின் வியர் பொறித்த நுதலளாதலும் ; அது,

₃ "பெரும்புழக் குற்றநின் பிறைநுதற் பொறிவிய
நுறுவளி யாற்றச் சிறுவரை திறவென."

(அகம்-கந.சு)

என வரும். இம்மெய்ப்பாடுந் தலைமகற்குரித்தன்று; நாணும் அவற்கின்மையின்.

உட்கும்

1. தலைவன்நோக்கெதிர் தானும்நோக்கித் தன்னைப்பார்த் தலை விரும்பல்.

2. நோக்காக்கால் தானோக்கி மெல்ல நகும் என்றதனுள் நகும் என்றதனால் தன்னை நோக்கலை விரும்பினாள் என்பது பெறப்படும்.

3. இவ்வுதாரணம் பொறிநுதல் வியர்த்தற்குணம் குண்டென்ற அத்துணைக்கே யுதாரணம்.

அவட்

கக.சு

நகுநய மறைத்தல் என்பது,
அதன்பின்னர்த் தலைமகன்கட்
டோன்றிய குறிப்புக்களான் நகுதற்கேதுவாகிய
நயனுடைமை
மனத்திற் பிறந்தவழியும், நகாது நிற்றலும்;
அது,
"முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
[1] நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு."
(குற—கஉஎச)
என வரும். மடமையால் தோன்றிய
நகையாகலான் இது மறைத்
தலுந் [2] தலைமகற்குரித்தன்று; எனவே,
அவற்காயின் நகை
தோன்றப்பெறுமென்பது; மற்று,
"சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்"
(குறு—கசுக)
என்னும் பாட்டினுள் 'நும்மொடு நக்க
வால்வெள் ளெயிறே'
என நகை [3] கூறிற்றாலெனின், அங்ஙனம்
மறைக்கப்பட்ட நகை
தலைமகன் அறிந்தது மெய்ப்பாடாமாகலான் [4]

அவ்வாறு கூறினு னென்பது.

சிதைவுபிறர்க்கின்மை என்பது, அங்ஙனம் நகுநய மறைத்த வழியும், உள்ளஞ் சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தலும் என்றவாறு; அது,

"அகமலி யுவகைய ளாகி முகனிகுத்
தொய்யென விறைஞ்சி யோளே."

(அகம்—அசு)

எனத் தலைமகன் அறிய மெய்ப்பட்டதென்பது. இதுவுந் தலைமகற் குரித்தன்று; தன்சிதைவுணர்த்தினல்லது மறைக்குந் துணைச் சிதைவின்மையின்; என்னை?

1. நகை மொக்குள் :— நகை முகிழ்ப்பு. வெளிப்படாத நகை. தனக்குண்டாய நகையைத் தலைவி நாணத்தாலும் உட்காலும் மறைத்தாளாகலின் அது பிறர்க்கு வெளிப்படாதாயிற்று. அந் நகை தலைவற்குச் சிறிது தோன்றினமையின் மெய்ப்பாடாயிற்று.

2. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிலுள்ள தலைமகட்குரித்

தன்று என்னும்
பொருத்தமில்லை.

பாடமும் அவட்காயின் என்னும் பாடமும் தலைமகற்குரித்து என்னும் பாடமும் அவற்

காயின் என்னும் பாடமுமே பொருத்தம். இது, சி. வை. தாமோ

தரம்பிள்ளை பதிப்பிற் பாடம்.

3. கூறிற்றலெனின் என்றிருப்பதே நலம்.

4. அவ்வாறு கூறுதல்—மெய்ப்பாடு எனக் கூறல். கூறி

ஞன் என்றது இந்நூலாசிரியனை. கூறினுள் என்று பாடங் கொண்டு அவ்வாறு என்பது நக்க என்பதைச் சுட்டிற்றுக் கோடல் நலம்.

5. தலைவன் தன் மனச்சிதைவு உணர்த்தினல்லது தலைவி போல மறைக்குமளவு சிதைவு நிகழாமையின் என்றபடி. எனவே இவற்குச் சிதைவு பெரிதுண்டாகுமென்பது கருத்து.

டியல்]
நடள

## பொருளதிகாரம்

"பெருமையு முரனு மாடூஉ மேன"

(தொல்-களவு-எ) என்பவாகலின்.

இவை களவிற் சிறந்தனவாவதல்லது கற்பினுள் வருவன வல்ல என்றுணர்க. 'சிதைவு பிறர்க்கின்மை' எனவே, சிதைவு

தலைமக னுணருமென்றானும்.

தகுமுறை நான்கு என்பது, இங்ஙனம் ஒன்றன்பின் ஒன்று தோன்றுதற்குத் தகுமெனப்பட்ட முறையானே வந்த அந் நான்கும் என்றவாறு; ஒன்றென மொழிப—களவிற்கு முதற்

கூறென்ப என்றவாறு.

இனி, இவை நான்கும் முறையானே

ஒருங்குவந்த செய்யுள் வருமாறு:

" யான்றற் காண்டொறுந் தான்பெரிது மகிழாள்
வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி
மிகைவெளிப் படாது நகைமுகங் கரந்த
நன்னுத லரிவை தன்மனஞ் சிதைந்ததை
நீயறிந் திலையா னெஞ்சே
யானறிந் தேனது வாயா குதலே." (இல-வி-பா-நக)

இஃது, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. இதனுள், 'கான்பெரிது மகிழாள்' என்புழிச் சிறிது மகிழுமென்றமையான் இது புகுமுகம் புரிதலாயிற்று. 'வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி' என்பது பொறிநுதல் வியர்த்தல். 'நகைமுகங் கரந்த' என்பது நகுநய மறைத்தல். 'மிகை வெளிப்படாது' என்புழி, மேல் 'அன்ன பிறவு மவற்றொடு சிவணி' (உசுஎ) என்னும் புறனடையாற் றழீஇயின [1] நகைமொக்குளும் பெற்றாம். 'தன்மனம் சிதைந்ததை நீயறிந்திலையால்' என்பது சிதைவு பிறர்க்கின்மை. பிறவும் அன்ன. (கந)

[இரண்டாம்பகுதி இத்துணையது எனல்]

உசுஉ. **கூழை விரித்தல் காதொன்று களைத**
**லூழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலோ**
**டூழி நான்கே யிரண்டென மொழிப.**

1. நகைமொக்குளும் நகுநய மறைத்தலில் அடங்குமென்றபடி. என்னை? புறத்தார்க்குப் புலனாகாது அரும்பிய நகையாதலின். அது தலைவற்குப் புலனாமென்றபடி.



இஃது, இரண்டாம்
மெய்ப்பாடுணர்த்துதல் நுதலிற்று;

என்னை ? உள்ளத்துச் சிதைவறிந்த
வழியன்றித் தலைமகளிடைத்

தலைமகன் சென்று கையுங் காலும்
மெய்யுறத்தீண்டிக் கண்ணுறு

ஞகலின், அங்ஙனஞ் சிதைவு பிறந்தது
எழுவாயாகப் பின்னர்த்

தலைமகன் மெய்யுற்றவழி நிகழ்ந்த
உள்ளநிகழ்ச்சியை இரண்

டாவதென்றானென்பது.

இ—ள்: கூழை விரித்தல் முதலாகிய
நான்கும் முறை

யானே இரண்டாவதெனப்படும் என்றவாறு.

இவற்றுக்குத் [1] தலைமகன்

ஏதுவாவதல்லது இவைதாம்
அவற்கு நிகழாவென்பது.

கூழைவிரித்தலென்பது, மெய்யு மெய்யுந்
தீண்டியவழி மெல்

லியன் மகளிர்க்கு வரும் வேறுபாடு
நான்கனுண் முதற்கண்ண

தெனப்படும்; என்னை? தன்னுள்ளத்தில் நிகழ்ந்த வேறுபாட்

டினை. அக்காலத்துத் தலைமகள் நிறையுடையளாதலாற் கரந்

தொழுகுதற்பாலளே; அங்ஙனங் கரக்குங்கால் தன்வயத்த

தாகிய உடம்புபற்றிவரும் வேறுபாட்டினைத் [2] தாங்கும்; அங்

ஙனந் தாங்குங்கால் உடம்பொடு தொடர்புடையவாகி வேறுபட்ட

தலைமயிரினது முடி உள்ள நெகிழ்ச்சியானே தன்வயத்ததன்றி

நெகிழும்; ஆகலின் இது முற்கூறப்பட்டது. [3] பிறசுவைபற்றி யும் உலகினுண் மயிர்க்குவந்த வேறுபாட்டினைக் கூறுப; என்னை? ஒன்றன் மதுரச்சுவைக்கு அதிசயங் கூறுவார் மயிரினைச்

[4] செவ்வனின்றனவென்பது [5] போலக் கொள்க. அக்கூறை

1. தலைமகன் ஏதுவாவதல்லது என்பதே பொருத்தமான

பாடம். கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிலுள்ள தலைமகள் என்

பது பொருந்தாது, அவட்கு என்பதும் பொருந்தாது. என்னை? தலைவிகண் கூழைவிரித்தல் முதலியன நிகழ்தற்குத் தலைமகன் காரணமாவதன்றி இவை அவன்கண் நிகழா என்பது கருத்தாக வின். இக்கருத்தே பொருத்தமென்பதைப் பதினைந்தாஞ் சூத்திர விரிவுரைநோக்கி அறிக.

2. தாங்கும்—அடக்கும், மறைக்கும்.

3. பிறசுவை என்றது மதுரச்சுவையை.

4. செவ்வனிற்றல்—நேர்நிற்றல்.

5. போலக் கொள்க என்பதை, போல இதனையுங் கொள்க

என விரித்துக்கொள்க. யாழிசை முதலிய மதுரச் சுவைபற்றி உடம்பு குற்சிதங்கொள்ளும், அதனால் மயிர் நேர்நிற்குமென்க. இதனை இக்காலத்து மயிர்க்கூச்செறிதல் என்பு.



ரு.சல் [1]விரித்தற்கு ஏதுவாயினாள் இவளாகலின், அதனைச் சினைவினையா னன்றி முதல்வினையாற் கூறினானென்பது.

காதொன்று களைதலென்பது, உறுப்பிடைப் பூட்டுறப் புனையாது [2] பெய்து வைத்தனவாதலால், தோடு முதலாயின எளி

தின் வீழ்வனவாயின ; [3] மற்று [4] அவை வீழ்தற்கு ஏதுவாய நெகிழ்ச்சி நிரம்பத்தோன்றாது இடைநிகர்த்ததாதலின் ஒன்று நிற்ப வொன்று வீழ்தலென்றானென்பது. இது கூழைபோலாது, [5] ஊறுணர்வுடைய உறுப்பாதலிற் காதின் வேறுபாட்டினைக் கூழை வேறுபாட்டின்பின் வைத்தான் ; என்னை ? கூழையிற் காது தனக்கு [6] உறவுடைமையின்.

ஊழணிதைவரலென்பது, அக் [7] கூழையுந் [8] தோடும் போலப் பெய்யப்படு முறைமையவாகிய வளைகளை முன்கைமேல் இறுகச் செறித்தலும் [9] விரற்செறியினைத் திருத்தலும் முதலாயின. இவை தோடுபோலச் [10] செறிவில்லன அன்மையின் அவற்றுப் பின்வைத்தான். உடைபெயர்த் துடுத்தலென்பது, உடுத்த உடையினைப் பலகாலும் அழித்துடுத்தல் ; அது கழ றொடிபோலாது செறிவுடைமையின் அவ்வுடை நெகிழ்ச்சியைத் தொடி நெகிழ்ச்சிக்குப்பின் வைத்தானென்பது ; மற்று,

" தொடிஞெகிழ்ந் தனவே தோள்சா யினவே."

(குறு—உநகூ) எனப் பிரிவின்கண் வந்த வேறுபாட்டினை ஈண்டுக் கூறாரோ வெனின், அவை இன்னதன்பின்னர் இன்னது தோன்று

---

1. விரித்தல் என்பது விரிதல் என்றிருத்தல் விரிதல்—சினைவினை, விரித்தல்—முதல்வினை.

வேண்டும்.

2. பெய்துவைத்தல்—இட்டுவைத்தல்.

3. மற்று அசை.

4. அவை—அத்தோடு முதலியவை.
யின் ஒன்று வீழ்ந்தது என முடிக்க.

நிரம்பத் தோன்றுமை

5. ஊறு—பரிசம்.

6. உறவு—பரிச உணர்ச்சியின் மிகுதியாலான தொடர்பு.

7. கூழை—பெய்துகட்டுவது;
சொருகிக்கட்டுவது என்றபடி.

8. தோடு—காதிற் பெய்வது. அதுபற்றியே போலப் பெய் யப்படுமென்றார்.

9. விரற்செறி—மோதிரம்.

10. செறிவில்லன அன்மையின் எனவே அறினுஞ் செறி வுடையன என்றபடி.

மென்னும் முறைமைய வல்லவாகலின்
ஈண்டுக் கூறுநர் ; அவை,

" வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே."
(தொல்-பொ-உ௬அ)

என்புழிச் சொல்லப்படுமென்பது. இவற்றிற்குச்
செய்யுள் :

" விண்ணுயர் விறல்வரைக் [1]கவாஅ
னொருவன்
கண்ணி னோக்கிய தல்லது தண்ணென
வுரைத்தலு மில்லை மாதோ வவனே
வரைப்பாற் கடவுளு மல்ல னதற்கே
யோதி முந்துறக் காதொன் றின்றிழ
நிழலவிர் மணிப்பூ ணெஞ்சொடு கழலத்
துகிலும் பன்முறை நெகிழ்ந்தன வே
நீயறி குவையதன் முதலே
யாதோ தோழியது கூறுமா றெமக்கே."
(இ. வி. ப. ருஉ)

என்றது, தோழிக்குத் தலைமகள்
அறத்தொடு நின்றது ; இத

னுள், 'ஓதி முந்துறு ஞெகிழ' என்பது கூழை விரித்தல்;
'காதொன்று ஞெகிழ' என்பது காதொன்று களைதல்; 'கிழ
லவிர் மணிப்பூ ணெஞ்சொடு கழல' என்பது ஊழணி தைவரல்;
'நெடிது நிமிர்ந்தன தாகிலும் பன்முறை' என்பது உடைபெயர்த்
துடுத்தலாயிற்று. இவை 2 பாடாண்கைக்கிளையுள் இக்காலத்துப்
பயின்றன. பிறவும் அன்ன.

(கச)

[மூன்றும் பகுதி இத்துணையது எனல்]

உகுரு. அல்கு றைவர லணிந்தவை திருத்த
லில்வலி யுறுத்த லிருகையு மெடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப.

இது, முறையானே மூன்றுவது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அல்குறைவரல் முதலாகக் கூறப்பட்டன நான்கும் மூன்ருவதெனப்படும் என்றவாறு.

மேலது உடைபெயர்த் துடுத்தலாகலான் அதன்வழித் தோன்றுவது உடை பெரிதும் நெகிழ்ந்து காட்டுதலாயிற்று;

---

1. கவாஅன்—மலைப்பக்கம்.

2. பாடாண்கைக்கிளை—ஒரு ஆண்மகனது வீரம் அழகு முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவது.



[1] அதனைப் பாதுகாத்தலான் அவ் [2] வற்றம் மறைக்குங் கையினை ‘அல்குறைவரல்’ என்ருனென்பது.

அணிந்தவை திருத்தலென்பது, [3] கடிசூத்திரமுதலாயின திருத்தல்; அஃது உடை நெகிழ்ச்சிபோலப் போற்றிச்செய்வ தாகலான் அதனை அல்குறைவரலின்பின் வைத்தான்.

இல்வலியுறுத்தலென்பது, புணர்ச்சியை வேண்டாதாள் போல்வதோர் வன்மை படைத்துக்கொண்டு செய்தல் ; என்னை? இல்லாத வலியை மிகுத்தலென்றமையின் அப்பொருட்டாயிற்று. அல்குறைவரலும் அணிந்தவை திருத்தலுந் தன் வலியின்மை காட்டவும் வலி தோற்றிக்கொண்டு செய்வதாகலின் அதனை இல் வலியுறுத்தலென்று மூன்றாமுறைமைக்கண் வைத்தானென்பது. இனி,[4] இறப்பிறத்தலான் [5] அதன் வலி தோற்றுவதெனவுஞ் சொல்லுப ; அஃதாவது, [6] முற்பிறந்தவற்றிற்கு முன்னே கூறினென்பது.

இருகையு மெடுத்தலென்பது, அங்ஙனம் [7] படைத்துக் கொண்ட வலியானுந் தடுக்கப்படாது நிறையழிதலிற் கைகள் தாமே முயங்கல் விருப்பத்தான் எழுவன போல்வதோர் குறிப்பு. இந்நான்கும் மேலனவுமெனப் பன்னிரண்டுபகுதியும் புணர்ச்சிக்குமுன் நிகழ்வனவாம்.

---

1. அதனை—அவ்வுடையின் சோர்வை.

2. அற்றம்—இரகசியத்தானம். அஃது

'' அற்றமறைத்தலோ

புல்லறிவு'' என்னுந் தேவர் குறளின் அடியின் உரை நோக்குக. சோர்வுமாம்.

3. கடிசூத்திரம் என்பது அரைப்பட்டிகை என்று இக்

காலத்து வழங்குவதுபோலும். முதலாயின என்றதனால் மேகலை முதலியனவுங் கொள்ளப்படும்,

4. இற்பிறந்நல்—உயர்குடிப் பிறத்தல்.

5. அதன்வலி—அவ் விற்பிறப்பின் வலி. இஃது இளம்பூரணர்

கருத்தாகலின் அவர் கருத்தையே ஈண்டும் பேராசிரியர் 'சொல்

லுப' எனக் குறித்திருத்தல் வேண்டும். ஆதலின், இற்பிறத்தலான் அதன்வலி எனக் கண்ணழித்தலே பொருத்தமாம். ஏனைப்

பாடம் சிறப்பின்று.

6. முற்பிறந்தவற்றிற்கு முன்னே கூறின் என்பதில் யாதோ பிழையிருத்தல் வேண்டும்.

7. படைத்தல்—உண்டாக்கல். என்றது உள்ளதை இல்லது போலக் காட்டல்.

1'சொல்லிய' என்றதனான் இவையெல்லாஞ் சொல்லப்படுவ தல்லது, ஈண்டுச் சொல் நிகழ்தல் வேண்டிலவென்பது. எண்ணு நிலைவகையால் தொகைபெற்ற நான்கென்னும் எழுவாய்க்கு மூன் றென்பது பெயர்ப்பயனிலையாய் வந்தது. இவை நான்குந் தலைமகற்குரியவல்ல; தான் அவற்றுக்கு ஏதுவாவதல்லதென உணர்க.

"ஓதியு நுதலு நீவி யான்றன்
மாதர் மென்முலை வருடலிற் கலங்கி
யுள்ளத் துகுநள் போல வல்குலின்
ஞெகிழ் நாற் கலிங்கமொடு புகுமிட னறியாது
மெலிந்தில ளாகி வலிந்துபொய்த் தொடுங்கவும்
யாமெடுத் தணைந்தொறுந் தாமியைந் தெழுதலி
னிம்மை யுலகத் தன்றியு நம்மை
நீளரி நெடுங்கட் பேதையொடு
கேளறிந் தனகொலிவள் வேய்மென் றோளே."
(இ. வி. ப. ௫௩௨)

இஃது இயற்கைப் புணர்ச்சிக்கட் டலைவன் தன்னிலையுரைத்தது. இதனுள் உடம்பும் உள்ளத்துருவன போன்றனவென்பது அல்குறைவரல்; என்னை? [2] அவ் வேறுபாட்டானே [3] அற்றப் படுதலின்.

" அல்குலின், ஞெகிழ் [4] நூற் கலிங்கம்."

என்பது அணிந்தவை திருத்தல்; அல்குலின் யாத்த நூலிற்கு ஞெகிழ்ச்சி கூறினமையின்.

" மெலிந்தில ளாகி வலிந்துபொய்த்
தொடுங்கவும்."

என்பது, இல்வலியுறுத்தல்;

---

1. சொல்லிய—இங்கே சொல்லப்பட்ட என்பது கருத்து. இவையெல்லாம் தலைவிகண் நிகழ்ந்தனவாகச் சொல்லப்படுவதல்லது இவற்றின்கண் தலைவிக்குச் சொன்னிகழ்தல் வேண்டிலவென்பது. எனவே இவை தலைவிகண் நிகழ்ந்தனவாகச் சொல்வதல்லது இவை குறித்துத் தலைவிக்குச் சொன்னிகழ்ச்சி இல்லை என்றபடி.

2. அவ்வேறுபாடு—உடம்பின் வேறுபாடு.

3. அற்றப்படுதல்—உடை சோர்வுபடுதல். இஃது அற்றம் படுதலின் என்று மிருந்திருக்கலாம்.

4. நூல்—ஞாண் (கயிறு). கலிங்கம்—வஸ்திரம். இக்காலத்து உடுக்கும் 'பாவாடை' போன்றதுபோலும்.

'யாமெடுத் தணைத்தொறுந் [1]தாமியைந் தெழுதல்.'
என்பது, இருகையுமெடுத்தல் ; அங்ஙனம் ஒடுங்கிய வழியும் உயிர்ப்பினளல்லள்போலத் தோள்களைத் [2] தன்வயத்தவாயின என்றமையின்.

'இம்மை யுலகத் தன்றியு நம்மைக், கேளறிந்தன.'
என்றமையின், இருவர் அன்பும் எழுமையுந் தொடர்ந்த [3]உழுவ லன்பெனச் சொல்லித் தன்னிலையுரைத்தாளும். பிறவும் அன்ன.
(கரு)

[புணர்ச்சிப்பின்னர் களவு
வெளிப்படுந்துணையு நிகழும்
முப்பகுதியுள் முதற்பகுதியாகும்
நான்காம்பகுதி
இத்துணையது எனல்]

உகூசு. பாராட் டெடுத்தன் மடந்தப வுரைத்த
ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல்
கொடுப்பவை கோட லுளப்படத்
தொகைஇ
யெடுத்த நான்கே நான்கென மொழிப.

இது, நான்காம்பகுதி கூறுகின்றது.

இ—ள்: பாராட்டெடுத்தல்—புணர்ச்சி நிகழ்ந்தபின்னர்த் தலைமகளை [4] இயற்பட நினையுங் குறிப்பும்; இது பாராட்டென்றது எடுத்தலென்றதனால் அதனை உள்ளமெடுத்தன்மேற்கொள்க. இது தலைமகற்கும் ஒக்கும்.

மடந்தபவுரைத்தல்—விளையாடும் பருவத்து நிகழ்ந்த [5] அறி மட நீங்கக் காமப்பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்றுதலும்; உரைத்தலென்றதனால் அக்காலத்துப் பாங்கிக்குச் சில கூற்றுமொழி கூறவும் பெறுமென்பது கொள்க. அவை [6] மேலே......

1. தாமியைந் தெழுதல் — தோள்கள் தாமாக வியைந் தெழுதல் என்க. இயைதல் — உடன்படல்.

2. தன்வயத்தவாதல்—தோள்கள் தாமே எழுதல்.

3. உழுவலன்பு—பேரன்பு.

4. இயல்—ஒழுக்கம்.

5. அறிமடம்—விளையாட்டையே அறியு மடமை. அதனையே பற்றிநிற்கும் அறிவுடையளாதலே.
என்றது

6. மேலையோத்து—களவு கற்பு முதலியன. ஆண்டுக் காட்டிய சூத்திர உதாரணங்களுள் தோழிக்கு அறிமடம் நீங்க உரைத்தமை காண்க என்றபடி.



யோத்துக்களுட் கூறப்பட்டன. மடந்தப வுரைத்தற்கு ஏது வாகிய கருத்து ஈண்டு மெய்ப்பாடெனப்படும்.

ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல்—அங்ஙனம் அறிமடங் கெடச் சொற்பிறந்தவழி இன்றளவுந் தமராற் கூறப்படாத கடுஞ்சொல் உளவாமன்றே, அவற்றை முனியாது ஏற்றுக் கொண்டு புறத்தார்க்கு இது புலனாங்கொலென்று நாணுதலும்.

கொடுப்பவை கோடல்—தலைமகனாற் கொடுக்கப்பட்ட தழையுங் கோதையுந் தாருங் கண்ணியுந் தோண்மாலையு முதலாயின கொண்டு கையுறை பாராட்டுதலும்; உளப்படத் தொகைஇ எடுத்த நான்கே நான்கென மொழிப—கொடுப்பவை கோடலகப்படத் தொகுத்தோதிய நான்கும் நான்காவது என்றவாறு.

'எடுத்த' என்றதனாற் கொடுப்பவை கொள்ளாது [1] மறுத்தன் முதலியனவுங் கொள்க.

புணர்ச்சிப்பின்னரல்லது பாராட்டுள்ளம் பிறவாமையானும், அதன்பின்னரல்லது பிறரொடு கூற்று நிகழாமையானும், அக்கூற்றுக்கேட்டல்லது தமரான் [2] ஈரமில் கூற்றங் கோடலின்மையானும், அவையெல்லாம் முடிந்தவழித் தலைவன்மேற் சென்ற உள்ளத்தாற் கொடுப்பவை கோடற்குறிப்பினளா மாகலானும் அம்முறையான் வைத்தானென்பது. இவற்றுக்குச் செய்யுள்,

"ஒருநாள் வந்து பலநாள் வருத்து
நின்னையே போனுநின் றழையே யென்வயி
னிற்பா ராட்டியுஞ் சொற்கொள வின்றியும்
யாயெதிர் கழறலிற் போலர் நாணியு
மயல்கூர் மாதர்க்குத் துயர்மருந் தாயினு
நோய்செய் தன்றாற் றானே
நீதொடக் கரிதவி ரேனரீடத் தானே." (இ. வி. ப. ருஙங)

இது கையுறை மறுத்தது; இதனுள் 'நிற்பாராட்டி' என்பது பாராட்டெடுத்தல், [3] 'சொற்கொளவின்றி' என்பது மடந்தபவுரைத்தல்; என்னை? கொளுத்தக்கொள்ளாதுவிடின் அது

---

1. கையுறை மறுத்தன் முதலியன.

2. ஈரமில் கூற்றம்—அன்பில்லா மொழி.

3. சொற்கொளலின்றி — தோழி தன்சொல்லைத் தலைவி கொள்ளுதலின்றியென்றமையினாலே, தன் மடமை நீங்கத் தலைவி சிலசொற் கூறினாளென்பது பெறப்படும். அதனால் மடந்தப உரைத்தலாயிற்று.



மடனுகாமையின். ‘யாயெதிர் கழறலிற் பேரலர் நாணி’ என்பது ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல்; [1]‘துயர்மருந்தாயினும்’ என்பது கொடுப்பவை கோடல். இத்தழை நின்கைப்பட்டவழிக் கரிந்து காட்டி நின் மெய் வெப்பங் கூறுதலின் இதனை அவள் காணின் ஆற்றாளாமெனப் [2]பின்னொருகாலத்து மறுத்தாளென்பது. (௧௮)

[ஐந்தாம்பகுதி இத்துணையது எனல்]

௨௧௫. தெரிந்துடம் படுத றிளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தலொடு
பொருந்திய நான்கே யைந்தென மொழிப.

இஃது, ஐந்தாங்காலத்து மெய்ப்பாடுணர்த்துகின்றது.

இ—ள்: மேற்கூறிய கொடுப்பவை கோடல் நிகழ்ந்தவழி அவ்வொழுகலாறு புறத்தார்க்கெல்லாம் ஐயமாகலின் அதன் வழித் தோன்றுவது தெரிந்துடம்படுதலென்றானென்பது.

தெரிந்துடம்படுதல்—[3]தலைமகனைத் தலைமகள் இவ்வொழுக

லாறு நிகழ்ந்தவாற்றைப் [4] பட்டாங்குணராதார் [5] தலைமை செய்தன ளிவளெனவுந், தகாத வொழுக்கின ளிவளெனவும் பல்லாற்றானும் இவள்கண்ணே [6] ஏதமிட்டுத் [7] துணிந்துந் துணியாதும் உரைப்பாராகலான் அதற்கு நாணி, இனி யாதுகொல்லோ செயற்பாலதென்று ஆராய்ந்து, இவ்வொழுகலாற்றினை அறிவிப்பேங்கொல் அறிவியேங்கொல்லெனத் தடுமாறிப், பின்னொருவகையான் ஆராய்ந்து முழுவதூஉஞ் சொல்லாது தன் குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண்டன்மைக்கும் ஏற்றவகையான் வேண்டு

1. துயர்மருந்தென்றதனால் அவள் கொள்ளத்தக்கது என்பது பெறப்படும்.

2. பின்னொருகாலத்து மறுத்தாள் என்பது பின்னொருகால் அதனை மறுத்தாள் என்றிருப்பது நலம்.

3. தலைமகனொடு என்றும் பாடமுளது. அதுவே பொருத்தம். தலைமகள் என்பதும் தலைமகளிடை என்றிருத்தல் வேண்டும்.

4. பட்டாங்கு—உண்மை.

5. தலைமைசெய்தல்—தன்னெண்ணங்கொண்டு நடத்தல்.

6. ஏதமிட்டு—குற்றமேற்றி.

7. துணிந்தும் துணியாதும்: அவள் ஏதத்தை (களவினை)த் துணிந்தும் துணியாதும்.



வன தெரிந்துகொண்டு, இன்னவாறு 1

பட்டதென்று தோழிக்கு உடம்படுதலுந் தோழியாற் செவிலிக்கு உடம்படுதலுமென இன்னோரன்ன [2] குறிப்பினைத் தெரிந்து உடன்படுதலும்.

திளைப்புவினை மறுத்தல்—அங்ஙனந் தமர்க்குத் தானுடம் பட்டதன்பின்னர்த் தலைமகனோடு பகலு மிரவும் பண்டு திளைத்த வாறு திளைத்தலை அச்சமு நாணு மடனுங் காரணமாக மறுத்தலும்; உடம்பாட்டின் பின்னர் மறுக்குமாதலின் அதனைத் [3] திளைப்புவினை மறுத்தலென்று இரண்டாவது வைத்தானென்பது.

கரந்திடத்தொழிதல்—அக்காலத்து இற்செறிக்கப்படுதலால் தான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவற்கு வெளிப்படாதொழுகுதலை உடையளாதலும்:

[4] தன்னிடத்தே தங்குதலை ' இடத்தொழிதல் ' என்றான்.

கண்டவழியுவத்தல்—அங்ஙனம்
கரந்தொழுகும் காலத்து
அவனை ஒரு [5] ஞான்று கண்டவழிக்
கழியுவகைமீதூர்தலும். இது
தலைமகற்கும் உரித்து.

[6] பொருந்திய நான்கே ஐந்தென
மொழிப—இவை நான்கும்
ஐந்தாங் கூறெனப்படும் என்றவாறு.

'பொருந்திய நான்கு' என்றது, இவை
இடையறவின்றி ஒருங்கு
தொடர்தலுமுடையவென்பது. இதனானே இவை
[7] நந்

1. பட்டது—நிகழ்ந்தது

2. குறிப்பு-சொல்லவேண்டிய குறிப்பு. தெரிந்து—ஆராய்ந்து. உடன்படல்-அறத்தொடு நிற்றல்.

3. கிளைப்புவினை—கூட்டம்.

4. தன் இடம்—தனக்குரிய இடம்.

5. ஞான்று—நாள்.

6. பொருந்திய நான்கு—தம்முட்டாம் இயைபுடைய நான்கு. இடையறவு—இடைவிடல். ஒவ்வொரு கூறுகச் செய்யப்பட்ட நந்நான்கும் தம்முட்டா மியைபுடைய என்பான் பொருந்திய நான்கென்றான் என்பது பொருந்திய நான்கு என்பது சிங்க நோக்காக முன்னும் பின்னும் இயையுமென்க.

7. இவை நந்நான்கு என்றது முற்கூறிய நான்கன் கூட்டங் களையுஞ் சேர்த்துக் கூறியதாகும்.



நான்கினோடு [1] வருகின்றதற்குச் சிறிது இடையறவும்படு மென்பது கொள்க.

புகுமுகம் புரிதல் முதலாயின நான்குந் தலைமகளனவேயாகி ஓரினத்தவாயின. அவற்றுப் பின்னர்த் தலைமகன் அவளைப் பொருந்தியவழிக் கூழை விரித்தல் முதலாயின நான்கும் நிகழ்ந் தமையின் அவையும் அவற்றோடு சிறிது இடையறவுபட்டன. அல்குல்தைவரல் முதலாயின

நான்கும் புணர்ச்சிக்கு மிகவும் இயைபுடைமையின் மேலவற்றோடொன்றாது வேறாயின. பாராட் டெடுத்தன் முதலாயின புணர்ந்து நீங்கியபின் நிகழ்ந்தமையின் அவையும் அவற்றிற் சிறிது வேற்றுமையுடைய. தெரிந்துடம் படுதன் முதலாயின களவு வெளிப்படுத்தற் குறிப்பினவாகலின் மேலனவற்றோடு தழுவாது வேறாயினவென்பது. இவற்றொடும் வருகின்ற நான்கன் வேறுபாடு ஆண்டுச் சொல்லுதும். அவ்வாறு நோக்கியன்றே இவ்வாறு சூத்திரப் பொருளினையும் இருபத்து நான்காக உடன்றோதாது வேறுபடுத்தோதிய கருத்தென்பது. இங்ஙனம் பொருத்தமின்றி வருவனவல்ல நந்நான்கு பகுதியாற் கூறியவை தம்முட்டாமென்பான் ‘ பொருந்திய நான்கு ’ என்றானென்பது. இவற்றுக்குச் செய்யுள் :—

“ அறியாய் கொல்லோ நீயே செறுவர
நோக்குதொறும் பனிக்கு நெஞ்சமொ டிவளே
யாய்க்கூறி வருளி னின்னெதிர் நாணி
மனைவயிற் பிரியலண் மன்னே யதற்கே
நினைவில ளிவளென வுரைத்தி
புனைதார் மார்ப காண்டியோ வதுவே.” (இ. வி. ப.
௫௩௪)

என்பது, பகற்குறிக்கட் டலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி வரைவு கடாயது. இதனுள் 'யாய்க்கறி வுறுலின்' என்பது, தெரிந்துடம்படுதலென்பது;

என்னை? அவள் நோக்குந்தோறும் [2] பனித்தலென் றறிவுறுத்தா னென்றமையின். 'நின்னெதிர் நாணி' என்பது, திளைப்பு வினைமறுத்தல்; என்னை? தமர்க்கு மறைத்தாள் இம்மறையினை

---

1. வருகின்றதற்கு என்றது நான்கு நான்காகக் கூறிய ஒவ்வொன்றற்கும் பின் வருவன. அது பின்னர்ப் பேராசிரியரால் விளக்கப்படுகின்றது.

2. பனித்தலென் றறிவுறுத்தாள் என்பது பனித்தலின் அறிவுறுத்தாள் என்றும் பாடமுள்ளது. அதுவே பொருத்தம்; என்னை? பனித்தல் அறிவுறுத்தற்கேதுவாகலின்.



யென்று தலைமகன் குறிக்குமென நாணி எதிர்ப்படாமையின். 'மனைவயிற் பிரியலள்' என்பது கரந்திடத்தொழிதல். 'புனைதார் மார்ப காண்டியோ வதுவே' என்பது, கண்டவழி உவத்தல்; என்னை? நிற்கண்டவழி நுதலுந் தோளும் பசலை நீங்கிய வாறு கண்டிலையோ வென்னுங் [1] குறிப்பினாற் [2] கூறினமையின். பிறவும் அன்ன. (கஎ)

[ஆறும்பகுதி இத்துணையது எனல்]

உசுசு. புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தலொடு
புலம்பிய நான்கே யாறென மொழிப.

இஃது ஆறாவது கூறுகின்றது.

இ—ள்: புறஞ்செயச் சிதைதல்—பூவுஞ் சாந்தும் பூணுந் துகிலும் முதலாயின கொண்டு [3] புறத்தே கோலஞ்செய்ய அகத்தே சிதைவுண்டாதலும்:

மேல்நின்றது கண்டவழி உவத்தலாகலானும், இது [4] காணாதவழி நிகழ்கின்றதாகலானும், அதற்கினமின்றியும் அதன்வழித் தோன்றியதெனப்படுமாகலான் இதனை இச்சூத்திரத்தின்முன் வைத்தானென்பது.

புலம்பித் தோன்றல்—அங்ஙனம் புனைந்தகோலந் [5] துணையொடு கழியப் பெறாமையிற் புல்லென்றழிந்த நெஞ்சினளாகலான், எல்லாச் சுற்றத்தார்க்கும் இடைநின்றேயுந் [6] தனியளென்பது அறிவியா நிற்றலும்.

1. குறிப்பு—உவகையையுணர்த்துங் குறிப்பு.

2. கூறியது தோழி என்க.

3. புறத்தே கோலஞ்செய்வோர்—செவிலி முதலாயினோர். அகத்தே தலைவிக்குச் சிதைவுண்டாயதற்குக் காரணம் அக்கோலத்தைத் தலைவன் காண்டலை நினைத்தமை என்க.

4. காணுதவழி—தலைவனைக் காணுத வழி.

5. துணை—தலைவன். கழிய—காலங்கழிய.

6. தனிமை — தலைவன்பால் அறிவு இடந்தமையானுண்டாயது. எனவே சுற்றத்தாரிடை நின்றும் அவரிடை நில்லாதவள் போல அவரை மறந்து நிற்றல்.



கலங்கி மொழிதல் — கையொடுபட்ட கள்வரைப்போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றந் தோன்றச் சொல்லுதலும்; அஃதாவது, தன்மனத்து நிகழாநின்றன தன்னையறியாமற் சில புலப்படச் சொல்லுதலாயிற்று.

கையறவுரைத்தல்—கலங்காது சொல்லுங்காற் செயலறவு தோன்றச் சொல்லுதலும்; அஃதாவது, [1] வன்புறை யெதிரழிந்து சொல்லுவனபோல்வன. புலம்பிய நான்கே ஆறெனமொழிப—இவை நான்குந் தனிமை விகற்பமாகிய ஆறுங்கூற்று என்றவாறு.

கையறவுரைத்தலென்பதனை ஈற்றுக்கண்
வைத்தான் கள

வொழுக்கத்தினுள் [2] இதனினாங்கு மெய்ப்பாடு கூறப்படா
தென்றற்கு. என்னை காரணமெனின், கையறவுரை தோன்றிய
தற்பின்னர் நிகழ்வன கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் மெய்ப்
பாடாவதன்றி [3] நற்காமத்துக்கு ஆகாவென்பது கருத்து;
என்னை? [4] கையறவுரைத்தலென்பது 'சொல்லாமரபி னவற்றொடு
கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்குதலை' (கககூ)
எல்லையாகவுடைமையின், அதனினும் இறப்பத் தோன்றுவன
[5] மன்றத்திருந்த சான்றவரறியத் தன் துணைவன் பெயரும்பெற்
றியுங் கூறி அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் புள்
ளொடு சொல்லியுங் நிகழும் மெய்ப்பாடாகலான், அவை 'நடுவ
ணைந்திணை' எனப்பட்ட நற்காமத்திற்கு இலக்கணவகையான்
ஏலாவாகலினென்பது.

கையறவு உரைத்தலென்றதனுன் இம் மெய்ப்பாடு மனத்
தளவேயன்றி [6] மாற்றத்தானும் பிறர்க்குப் புலனாக வெளிப்படு
மென்பது கொள்க.

---

1. வன்புறை—வற்புறுத்தல். எதிரழிந்து கூறல்—தோழி
வற்புறுத்தவுங் கேளாது எதிரழிந்து சொல்லல்.

2. இதனினாங்கு—இதனின் மேற்பட.

3. நற்காமம்—அன்புடைக்காமம்.

4. கையறவுரைத்தல் என்பது உடைமையின் இறப்பத்
தோன்றுவன மெய்ப்பாடாகலான் அவை ஏலா என இயைக்க.

உடைமையின் ஏலா என முடியும்.

5. மன்றத்திருந்த சான்றவரறியக் கூறுவதை, கலி. கசஉ-ம் செய்யுள் நோக்கி யறிக.

6. மாற்றம்—சொல்.
7



இவை எல்லாம் முறையானே
நிகழ்ந்தமைநோக்கி [1] யாழோர்
கூட்டத்தினைத் தொன்மையுந் (ருசகூ)
தோலும் (ருருo) போலப் [2] பொருட்டொடர்
நிலையாக்கி உரைப்பாருமுளர். அஃது ஆகா
மைக்குக் காரணங் களவியலுட் (கoக)
கூறினமென்பது. இவற்
றுக்குச் செய்யுள் :

'' இவளே,
அணியினும் பூசினும் பிணியுழந் தசைஇப்
பல்கிளை நாப்ப ணில்கிளை போல
மொழிவகை யறியாள் பொழிகண் ணீர்துடைந்

இயானே கையற வலம்வருங்
கூருய் பெருமநிற் றேறு மாறே." (இ. வி. ப. ருநரு)

என்பது, வரைவுகடாயது ; இதனுள் ' அணியினும் பூசினும் பிணியுழந் தசைஇ' என்பது புறஞ்செயச் சிதைதல். ' பல்கிளை நாப்ப ணில்கிளை போல ' என்பது புலம்பித் தோன்றல். ' மொழி வகை யறியாள் ' என்பது கலங்கி மொழிதல். ' யானே கையற [3] வலம்வரும் ' என்பது கையறவுரைத்தல் ; என்னை ? தன் கண் ணீர் துடைத்தலும் ஆற்ருளென்றமையின். பிறவும் அன்ன. (கஅ)

[மேற்கூறியவும் பிறவும் நடுவணைந்திணைக் காமவொழுக்கத்துக்குக் காரணம் எனல்] உகூ. **அன்ன பிறவு மவற்றெடு சிவணி மன்னிய வினைய நிமித்த மென்ப.**

இது மேலனவற்றுக்கு ஓர் புறனடை.

இ—ள் : அன்ன பிறவும்—மேற்சொல்லப்பட்ட இருபத்து

நான்கு மெய்ப்பாடு போல்வன பிறவும், அவற்றொடு சிவணி—அவற்றின் வேறன்றி அவை தம்முட் பகுதியாகி வருவன பிறவும், மன்னிய வினைய நிமித்தம் என்ப

—நிலைபெறத் தோன்றுங் காமவொழுக்கத்து நிமித்தமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

1. யாழோர் கூட்டம்—கந்தருவ மணம். யாழோர் கூட்டத்தினை என்ற பாடமே பொருத்தமாதல் காண்க.

2. பொருட்டொடர்நிலை என்பது கோவைஎன்னும் பிரபந்தத்தைக் குறித்ததுபோலும்.

3. அலம்வரல்—சுழற்சியுறல்.



'மன்னிய [1] வினைய' என்பது நடுவணைந்திணைக்கே யுரிய மெய்ப்பாட்டினவை என்றவாறு; என்னை? கந்தருவ வழக்கமல் லனவற்றை மன்னிய காம மென்றான்றே, [2] அஃது இடையறவு

படாதாகலின். எனவே, கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் வரை
யறையின்றி வேண்டியவாறு
வரப்பெறுமென்பதாம்; அவை
[3] மன்னிய வினையல்லாமையின்; என்னை? 'காமஞ் சாலா விளமை
யோள்வயி—னேமஞ் சாலா விடும்பை
யெய்துதலும்' (௫௦)
நாற்பத்தெட்டியாண்டையாளோடு
பன்னீராட்டையாள் கூட்டஞ்
சொல்லுதலும் ஒத்த காமமெனப்படா வாகலி
னென்பது. இவ்
வாறு கூறவே, கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும்
இவை வைத்த
முறையான் வரையறுத்துக் கூறப்படாவெனவும்,
அவை வருவன
வந்துழிக் கொள்ளப்படூஉமென்பதும்
பெற்றாம். இது [4] புல்
னெறி வழக்கமல்லாத கந்தருவ மணத்திற்கும்
ஒக்கும்.
'அன்ன பிறவு மவற்றொடு சிவணி'
(உ௬எ) வருவன

யாவையெனின், புகுமுகம் புரிதற்கட் டலைமகன் நோக்கியவழி

ஒரு வல்லிப் பொதும்பரானும் மற்றொன்றானுஞ் சார்புபெற்று மறைதலும் அவையில்லாதவழி இடர்ப்படுதலு மென்றாற் போல்வன புகுமுகம் புரிதலாயடங்கும்.

நகுநயமறைக்குங்கால்

தலைமகன்கட் டோன்றிய நகை முத

லாகிய குறிப் பேதுவாக, நகை தோன்றியதனை மறைக்குங்கால்

5 இதழ் மொக்குளுள் தோன்றுவது நகையெனப்படாது நகு

நய மறைத்தலின்பாற் படுமென்பது.

இனிச் சிதைவு பிறர்க்கின்மையின் கண்ணும்,

"நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்."

1. வினை—காம ஒழுக்கம்; வினையுள் நிமித்தம்—காமஒழுக்கத்

திற்குரிய நிமித்தங்கள். நிமித்தம்—ஏதுவான மெய்ப்பாடுகள்.

2. அஃது—கூத்துவை ஒழுக்கமாகிய அஃது. இடையறவு பட்டாமை—அன்பு இடையில் அற்றுப்போகாமை. எனவே ஏனைய இடையறவு படும் என்றபடி.

3. மன்னியவினை — அன்பு நிலைபெற்ற காம ஒழுக்கம்.

எனவே ஒத்தகாமம் என்றவாறு.

4. புலனெறி வழக்கம்—செய்யுள் வழக்கம். அஃது அல்லாத கந்தருவமணம்—உலகியலான கந்தருவ மணம்.

5. இதழ் மொக்குளுட்டோன்றுவது—உதட்டினுட் டோன்றுவது. என்றது இதழ்க்குவிவுட் டோன்றுவது என்றபடி.



என்றமையாற் கண்ணின் வேறுபாடுளவாமன்றே, அவை சிதைவு பிறர்க்கறிவிக்குமாயினும் ஆண்டுத் தானது மறைத்தானென்னுங் கருத்தினனாகலின் அதுவுஞ் சிதைவு பிறர்க்கின்மையாமென்பது; அவை யாவையெனின், [1] அமர்த்து நோக்காது அலமர நோக்குதலும் [2] நிலங் கிளைத்தலும் போல்வன.

மற்றுப் பொறிநுதல் வியர்த்தற்குப் புறனடையாற் கொள்வன யாவையெனின்,—புறனடையாற் கோடல் [3] ஆணையன்றாகலான் [4] உள்ளனவற்றிற்குக் கொண்டொழிக வென்றவாறு. ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறே வருவன அறிந்து அடக்கங் கூறுக.

மற்றும், 'பிறவு மவற்றொடு சிவணி' எனவே, மேற்கூறிய வற்றொடு பொருந்த வருவன கோடுமன்றே? 'அன்ன' என்ற தென்னையெனின்; அதனானே தலைமகற்குரிய மெய்ப்பாடு வேறுள வாயினுங் கொள்க. அவை [5] ஐயப்படுதலும் ஆராய்தலுந் துணிதலு முதலாயின.

மற்றுத் தலைமகட்குரிய மெய்ப்பாடுபோலத் தலைமகற் குரியனவும் இன்னமுறையனவென்று வரையறுத்துக் கூறுரோ வெனின்; அற்றன்று; தலைமகன் குறிப்புச் சிலபெற்றித் தலைமகள் குறிப்புப் பல பிறக்குமாதலானும் ஐய முதலாயின மெய்ப்பாடு காமப் புணர்ச்சிக்கு இன்றியமையாதன அன்மையானுந் தலைமகட்குரிய மெய்ப்பாடே சிறந்தனவென்று அவற்றை வரை

1. அமர்த்து நோக்கல்—விரும்பி நோக்கல். மாறுபட நோக்கல். கண்டாருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்— பேதைக் கமர்த்தன கண் (குறள்—கஅ௪) என்பதனுரை நோக்குக.

2. நிலங்கிளைத்தல்—காற் பெருவிரலால் நிலத்தைக் கிளைத்தல். கிளைத்தல்—தோண்டுதல்; கீறலுமாம்.

3. ஆணை—ஆசிரியன் கட்டளை.

4. உள்ளனவற்றிற்குக் கொண்டு எனவே, இல்லாதனவற்றிற்குக் கொள்ளவேண்டுவதில்லை என்றபடி. பொறிநுதல் வியர்த்தற்கண் அடங்குவன இல்லை. ஆதலால் உள்ளவற்றிற்கே கொள்க என்பது கருத்து.

5. ஐயம்—தலைமகளை ஐயஞ்செய்தல். ஐயம் முதலிய மூன்றும் கந்தருவ மணத்தின் முன் நிகழும் காட்சிக்குப் பின் நிகழ்வன.

யறுத்துக் கூறினுனென்பது. மற்றிவற்றை 'நிமித்தம்' என்ற தென்னையெனின், இவை முறையானே நிகழ்ந்து புணர்ச்சி நிகழு மாகலினென்பது. 'வினைய' என்பது ஆரும் வேற்றுமைப் பன்மையுருபு.

இம் மெய்ப்பாட்டினுட் கைக்கிளை பெருந்திணைக்கு வருவன வருமாறு:

"ஒருக்குநா மாடுங் குரவையு ளெம்மை
யருக்கினன் போனேக்கி யல்லனேய் செய்தல்
குருஉக்கட் கொலேயேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றே வாயர் மகன்." (கலி. க0ச)

எனப் புகுமுகம் புரிதல் கைக்கிளைக்கண் வந்தது.

1 "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே."

(கOரு)

என்பதனுன் இது கைக்கிளையெனப்பட்டது. மற்றிது முல்லைத் திணைப்பாட்டன்றேவெனின், அது 2 நிலத்தான் முல்லையாயிற்

றென்பது அகத்திணையியலுட் கூறினும்.

இனித் தொன்மையுந் (௩௪௬) தோலும் (௩௫௦) முதலாயின வனப்புக்களுட் புகுமுகம் புரிதல் முதலாயின பெருந்திணைப் பொருள்பற்றி வருவன வருமாறு அறிந்துகொள்க.

மற்றிவ்விருபத்துநான்கு மெய்ப்பாடுங் கற்பினுள் இம்முறையானே வரப்பெறுமேவெனின், அதற்கு இம்முறையான் இவை யனைத்தும் வரல் வேண்டுவதின்மையிற் களவிற்கே விதந்து கூறினனென்பது. அஃதென்னைபெறுமாறெனின், 'பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்' (௬௬௫) என்னும் உத்திவகை.

இனிக் கற்பினுள் வருவன வருமாறு:

"இனிதெனக் களவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே." (குறு. ௧௬௭)

என்பதனுள், நகுநய மறைத்தல் வந்தது.

1. முன்னைய மூன்று—ஆசுரம், இராக்கதம், பைசாசம்.

2. நிலத்தான் முல்லையெனவே ஒழுக்கத்தாற் கைக்கிளை என்றபடி. ஏறும், ஆயரும் முல்லைக் கருப்பொருள்கள். குரவையாடல் அந்நிலத்தார் தொழில்.

3. நுண்ணிதின் மகிழ்ந்தன்று என்றதனால் நகுநயம் மறைத்தலாயிற்று. நுண்மை—நுட்பம்.

[மெய்ப்பாட்

" மாணமறந் துள்ளா நாணிலிக் கிப்போர்

[1] புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே
யுறழ்ந்திவனைப்

பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினே

னென்றடி சேர்தலு முண்டு."

(கலி. அகூ)

இதனுட், சிதைவு பிறர்க்கின்மை வந்தவாறு

; ஒழிந்தனவும்
அன்ன.

[2] "நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண
னெம்மனை

நீசேர்ந்த வில்லினுய் வாராமற்

பெறுகற்பின்." (கலி. எஎ)

என்பது, [3] மடந்தபவுரைத்தல்.

இவையெல்லாங் கற்பின்கண்

வந்தன.

" அன்னை சொல்லு முய்க மென்னதூஉ
மீரஞ்சேரா வியல்பிற் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையு மொழிகம்."

(அகம். கூரு)

என்பதோவெனின், அது [4] 'பாராட்டெடுத்தல், மடந்தபவுரைத்
தல்' (உகூச) என்புழி அடங்குமென்பது.
(கக)

[மேற்கூறிய நிமித்தங்களின்றியும் புணர்ச்சி நிகழும் எனல்]

உகூஅ. வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே.

இது, மேலனவற்றுக்கோர் ஆவதோர் விதி கூறுகின்றது.

இ—ள்: 'மன்னிய வினைய' (உகூ௭) எனப்பட்ட புணர்ச்சி மேல் அறுவகையான் இருபத்துநான்கெனக் கூறப்பட்ட மெய்ப்

1. புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே என்பது சிதைவு பிறர்க்கின்மை. என்னை ? தன் நெஞ்சிற்குச் சொல்லினமையின்.
2. நோய் சேர்ந்த திறம்—நோவு சேர்ந்த திறம் என்பது நச்சினார்க்கினியருரை. நோ திறம் என்று பரிபாடலும் சிலப்பதி

காரமும் கூறுகின்றன. சிலப்பதிகார உரையாசிரியர் நோக்க திறம் என்பர். செவ் நோதிறம் வேறு, நோய்திறம் வேறு என்பர். ஆராய்ந்துணர்க. நோதிறம், பாலைப்பண் ஐந்தனுளொன்று. அது,—"தக்கராகம் நோதிறம் காந்தாரம் பஞ்சமமே, துக்கங் கழிசோம ராகமே—மிக்கதிறம், காந்தார மென்றைந்தும் பாலைத் திறமென்றார், பூந்தா ரகத்தியனார் போந்து" என்பதனாலறியப்படும்.

3. பெ ண்களுக்குரிய மடமை நீங்கு அறிவொடு கூடிச் சொன்னதனால் மடந்தையுரைத்ததாயிற்று.

4. தலைவி உடன் போவதைப் பாராட்டியதனால் பாராட் டெடுத்தலுள்ளும், உய்க்கம் ஒழிகம் என்றதனால் மடந்தப வுரைத் தலுள்ளும் அடங்கும் என்க.

டியல்] பொருளதிகாரம்

ருரு

பாட்டினை அம்முறையானே நிமித்தமாகக் கொண்டு வருதலின்மையும் உரித்தெனப்படும்; ஆற்றுமை வந்தவிடத்து என்றவாறு.

மேற்கூறிய இருபத்துநான்கிணையின்மை உரித்தென்பது 1 அதிகாரத்தாற் கொள்க.

" தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய [2] முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கென னல்லனோ யானே யெய்த்த
நோய்தணி காதலர் வரவின்
டேதில் வேலற் குலந்தமை கண்டே." (அக. உஉ)

" வளைந்துவர விளமுலை நெருழுங்கப் பல்லூழ்
விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே." (அகம். ருஅ)

என இவை, களவியலுள் (கககூ) உயிர்மெலிந்தவிடத்துப் புணர்ச்சி நிமித்தமெனக் கூறப்பட்டவையின்றியும் புணர்ச்சி நிகழ்ந்தவாறு; என்னை? முயங்குதொறு நகைதோன்றிற்றெனவே, பாராட்டெடுத்தன் முதலாயினவின்றியும் புணர்ச்சி நிகழ்ந்ததாம். ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இவை கண்டவழி புவத்த லாகாவோவெனின், ஆண்டுத் தன்னுவகை கூறுளன்றே [3] கரந்திடத் தொழிந்தாளாகலினென்பது.

" தண்டுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
மண்போன் ஞெகிழ்ந்தவற் கலுழ்ந்தே
நெஞ்சறை போகிய வறிவி னேற்கே."

(அகம். உகூ)

என்புழி, பாராட்டெடுத்தன் முதலாகிய பன்னிரண்டு நிமித்தமுமின்றி ஆற்றுமை [4] நிமித்தமாகக் கற்பினுட் புணர்ச்சி நிகழ்ந்தது. உம்மை [5] எதிர்மறை. உயிர் மெலிவிடத்து உடைமை புடைத்துமாம் அவ்வினையென்பது.

" 6 தொடிஞெகிழ்ந் தனவே தோள்சா யினவே."

(குறு. உருசு)

1. மேற்கூறிய உச மெய்ப்பாடும் அதிகாரப்பட்டு நின்றமையின் இன்மையுமரித்து என்பதற்கு அவை செயப்படுபொருளாக வருவிக்கப்படும் என்பது கருத்து.

2. முயங்குதொறு நகை தோன்றிற்றெனவே முன் னுயிர் மெலிவாகிய ஆற்றாமை யுடையளாயினள் என்பது பெறப்படும். நோய் தணி காதலர் என்பதனானும் அது பெறப்படும்.

3. அவன் காணுதவிடத்திருத்தலின் ஆண்டு உவகை கொள்வதன்றிக் கூறுள் என்பது கருத்து.

4. நிமித்தம்—காரணம்.

5. தொடி நெகிழ்ந்தன என்பது ஊழணிதைவரல்.



என்பதனுள், ஊழணிதைவரலென்னும் மெய்ப்பாடு வந்தது. பிறவும் அன்ன.

இனி மேற்கூறிய ஆறுமேயன்றி இன்னும் இவற்றொடு நான்கு கூட்டிப் [1] பத்தென்பாருமுளர்; அவை [2] இன்பமாதற் குரியன வன்மையின், வரையறைகூறுதொழிந்தானென்பது. (உ௦)

[புணர்ச்சிக்கு நிமித்தமான
வேறும் மெய்ப்பாடுகள் உள எனல்]

உகூகூ. [3] இவ்வயு முளவே யவையலங் கடையே.

இஃது எதிரது போற்றி இறந்தது காத்தது.

இ—ள் : அவையுமுளவே — எதிர்வருகின்றனவும் உளவா வது, அவையலங்கடையே — இறந்தனவற்றுக்கு இடனல்லாத விடத்தே என்றவாறு.

" இதனது கருத்து : மேற்கூறிய இருபத்துநான்குமல்லாத வழி இன்பத்தை வெறுத்தல் (உஎ0) முதலாக இனிக் கூறு கின்ற மெய்ப்பாடும் உளவாம் என்றவாறு. அவையல்லாத விடத்து இவையும் உளவாமெனவே, வருகின்ற மெய்ப்பாடுங் களவிற்குங் கற்பிற்கு முரியவெனவும், களவிற்கு வருங்கான்

1. பத்துக்கூறு இவை என்பதை உகூஉ-ம் சூத்திர உரை நோக்கியறிக. இளம்பூரணருரையில்

2. இன்பமாதற்குரிய வன்மையின் — நடுவணைந்திணைக்குரிய வன்மையின்.

3. அவையும் என்னும் பாடம் இவையுமென்றிருப்பதே பொருத்தம். 'அவையல்லாதவிடத்து இவையுமுள' எனப் பின் வரு முரையையு நோக்குக. அன்றியும் வருஞ் சூத்திரத்து அவதாரிகையையு நோக்குக. 'அவையு முளவே யவையலங் கடையே' என்பது இளம்பூரணர் தம்முரைக்கேற்பக் கொண்ட பாடம். அவர் இதற்குக் கொண்ட வுரையாவது :— அவையலங்

கடை — நடுவணைந்திணையல்லாத கைக்கிளைப் பொருட்கண்,—

அவையுமுள—மேற்சொல்லப்பட்ட புகுமுகம் புரிதல் முதலா யினவுமுள என்பது. இவ்வுரையில், அவை என்றது மேற்கூறிய மெய்ப்பாடுகளைக் குறிக்கின்றது. பேராசிரியருரையில் அவை மேல்வருஞ் சூத்திரப்பொருளைச் சுட்டுவதாகக் கொள்ளவேண் டும். மேல் வருவனவற்றை அவை என்று சுட்டல் வழக்கா றன்மையின் இவை என்ற பாடமே பொருத்தம் என்க. இவை என்பது அவை என வேறுபாடுணராதோரால் திருத்தி எழுதப் பட்டது.



ருள

முதற்கூறிய இருபத்துநான்கின் பின்னுமே இவை பெரும்பான்மையான் வருமெனவும், கற்பிற்காயிற் பயின்று வருமெனவுங் கூறியவாறு. அவை இனிக் கூறுகின்றான். (உக)

[களவுக்குங் கற்பிற்குமுரிய மெய்ப்பாடுகள்]

உ௭௦. இன்பத்தை வெறுத்த றுன்பத்துப் புலம்ப
லெதிர்பெய்து பரித லேதஞ் சாய்தல்

பசியட நிற்றல் பசலை பாய்த
லுண்டியிற் குறைத லுடம்புநனி சுருங்கல்
கண்டுயின் மறுத்தல் கனவொடு
மயங்கல்
பொய்யாக் கோடன் மெய்யே யென்ற
லையஞ் செய்த லவன்றம ருவத்த
லறனளித் துரைத்த லாங்குநெஞ் சழித
லெம்மெய் யாயினு மொப்புமை கோட
லொப்புவழி யுவத்த லுறுபெயர் கேட்ட
னலத்தக நாடிற் கலக்கமு மதுவே.

இது, மேல் 'இவையுமுள' (உசுகூ) எனப்பட்ட மெய்ப் பாடு கூறுகின்றது.

இ—ள் : எண்ணப்பட்ட இருபதும் 'மன்னிய வினைய நிமித் தம்' (உகஎ) என்பான் 'நலத்தகநாடின் அதுவே' யாமென்றா னென்பது. இவை புணர்ச்சிக்கு நிமித்தமாகாதனபோன்று காட் டினும் அவற்றை மிகவும் ஆராய்ந்துணரிற் புணர்ச்சிநிமித்த மேயாம் என்றவாறு.

இன்பத்தை வெறுத்தலென்பது, யாழுங் குழலும் பூவுஞ்

சாந்தும் முதலாக இன்பத்திற்கேதுவாகிய பொருள் கண்டவழி அவற்றின்மேல் வெறுப்புத் தோன்றுதல். [2] அவை காமத்திற்கு ஒருவகையான் ஏதுவாகலின் 'மன்னிய வினைய நிமித்தம்' (உகஎ) எனப்படுமாகலான் அவற்றை வெறுத்தல் புணர்ச்சிக் கேதுவாகாதன்றேயாயினும் அதனை ஆராய்ந்துணரின் நிமித்த மென வேண்டுமென்பான் 'நலத்தக நாடின் அதுவே' என்றானென்

1. நலத்தகநாடல்—நன்மைதக ஆராய்தல்.

நன்றாக ஆராய் தல்.

2. அவை—யாழ் குழன் முதலியன. கேதுவாய பொருள்கள்.

இவை இன்பத்திற்

8

பது. 'கலக்கமும்' என நின்ற உம்மை
மேற்கூறிய பத்தொன் பானையுந்
தழுவலின் இறந்தது தழீஇயிற்றும்.

"நின்வளித்த மைவென் மன்னே வல்கற்
புன்கண் மதலையொடு பொருந்திக் கொடுங்கோற்
கல்லாக் கோவல ரூதும்
வல்வாய்ச் சிறுகுழல் [1] வருத்தாக் காலே."

(அகம். எச) என்புழி, இன்பத்தை வெறுத்தனளாயினும் புணர்ச்சிக் கேதுவா மென்பது கருத்து.

"மணமசேர் பெண்ணை மடிவா யன்றி
றுணையொன்று பிரியினுந் [2] துஞ்சா காணெனக்
கண்ணிறை நீர்கொண்டு [3] கரக்கு
மொண்ணுத லரிவையா னென்செய்கோ
வெனவே." (அகம். ருo)

என்பதும் அது.

துன்பத்துப் புலம்பல் என்பது பிரிவாற்றாது துன்புறுங் காலை அவ்வாற்றாமை தலைமகற்கின்றித் தானே துன்புறுகின்றா ளாகச் சொல்லுதல். அவை கூட்டத்தை வெறுத்த குறிப்பா.

யினும் அக்கூட்டத்திற்கே நிமித்தமாகும் ஆராய்ந்துணரி

னென்றவாறு; அவை,

"நின்னுறு விழுமங் களைந்தோ

டன்னுறு விழும [4] நீந்துமோ வெனவே."

அகம். (கஎ0)

என வரும்.

எதிர்பெய்து பரிதலென்பது,

உருவுவெளிப்பாடு; அது, தலைமகனையும் அவன்

தேர் முதலாயினவற்றையுந் தன்னெதிர்

பெய்துகொண்டு பரிந்து கையறுதல்; அது,

"வாரா தாயினும் வருவது போலச்

செவிமுத லிசைக்கு மரவமொடு

துயின்மறந் தனவாற் றோழியென் கண்ணே."

(குறு. ௩0௧)

1. வருத்தாக்கால் நீ சொன்னவாற்றை நிச்சயித்திருப்பேன்; வருத்துவதால் அவ்வாறு இருக்கமாட்டேனாயினேன் என்றமை யின் குழலை வெறுத்துக் கூறியதாயிற்று. ஆதலின் இன்பத்தை வெறுத்தலாம்.

2. துஞ்சாகாணென என்றமையான் அன்றிலிசையை வெறுத்தமை தோன்றிற்று. அது காமத்தை மிகுத்தலான் பின் புணர்ச்சிக்

கேதுவாதலுங் காண்க.

3. கரக்கும்—அழித்து மறைக்கும்.

4. நீந்துமோ எனவே நீந்தமாட்டாமை பெறப்பட்டமை யின் துன்பத்துப் புலம்பலாயிற்று.



என்புழி, வாராதென்றுணர்ந்தது [1] இக்காலத்தாகலான், அதற்கு முன் [2] இன்னவாறு பட்டதன்று என்றமையின் எதிர்பெய்து பரிதலாயிற்று.

ஏதமாய்தலென்பது, கூட்டத்திற்குவரும் இடையூறுண் டென்று பலவும் ஆராய்தல்; அது, [3] நொதுமலர் வரையக் கருதுவர்கொல்லெனவும், பிரிந்தோர் மறந்து இனிவாரார்கொல் லெனவுந் தோன்றும் உள்ளநிகழ்ச்சி; அது,

"வாரார் கொல்லெனப் [4] பருவருந்

தாரார் மார்பநீ தணந்த ஞான்றே."

(அகம். ௧௫௦)

என வரும்.

பசியடநிற்றலென்பது, பசி வருத்தவும் அதற்குத் தளராது உணவு மறுத்தல்.

" அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் [5] பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி."

(அகம். ௪௮) எனவும்,

" இனியான் [6] உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்."

(கலி. ௨௩)

எனவும் வரும்.

பசலை பாய்தலென்பது, பசலை பரத்தல்; அது,

" கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்
கெனக்கு மாகா [7] தென்னைக்கு முதவாது

1. இக்காலம்—வரலில்லையென்று உணர்ந்த இக்காலம் (விடியற்காலம்) என்க. பிறகாலத்தாகலான் எனவும் பாடம். அது நன்கு பொருந்தும்.

2. இன்னவாறு பட்டதின்று — இவ்வாறு வாராதென்று

பட்டதன்று, வருவதுபோலவே பட்டது என்றபடி.

3. நொதுமலர்—அயலார்.

4. பருவரல்—துன்பப்பாடல்,

5. பழங்கண்—துன்பம்.

6. உண்ணலுஞ் செய்யேன் வாழலுஞ் செய்யேன் என்பது பொருள்.

7. என்னை—எனது தலைவன்.



பசலை யுணீஇயர் வேண்டுந்
[1] திதலை யல்கு [2] லென் மாமைக் கவினே.'' (குறு. உஎ)

என வரும்.

உண்டியிற் குறைதலென்பது, பசியட நிற்றலேயன்றிச் சிறிது உண்டியூட்டியவழிப் பண்டுபோலாது, கழியவுஞ் சிறிதுண்டல்; அது,

[3] "தீம்பா லூட்டினும் வேம்பினுங் கைக்கும்
வாரா யெனினு மார்வமொடு நோக்கு
நின்னிற் சிறந்தோன் றிலனே
யென்னினும் படாஅ லென்னிதற் படலே.'' (இ. வி. ப. ருகஎ)

என வரும்.

உடம்புநனி சுருங்கலென்பது, அவ்வுண்மை உயிரிற்செல்லாது உடம்பிற் காட்டுதல்; அது,

"தொடிநிலை நெகிழச் சாஅய்த் தோளவர்
கொடுமை கூறிய வாயினுங் கொடுமை
நல்வரை நாடற் கில்லை தோழியென்
நெஞ்சிற் பிரிந்தது மிலரே
கண்குறை நோக்கங் கடிந்தது மிலரே." (இ. வி. ப. ௪௬௬) என வரும்.

கண்டுயின் மறுத்தலென்பது, இரவும் பகலுந் துஞ்சாமை;
அது,
"புலர்குர லேனற் புழையுடை யொருசிறை
மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி யவரு
ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி
யோரியா னாகுவ தெவன்கொ
னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே."
(அகம். ௮௨) என வரும்.

---

1. திதலை—தேமல்.

2. என் மாமைக் கவின் பசலையுணியர் வேண்டும் என்பது பசலை பரத்தலைக் கருதுகின்றது. மாமை—மாந்தளிர்போலும் நிறம்; அது பசலையாலுண்ணப்படவேண்டும் என்று கூறினமையின் பசலை பரத்தலைக் கருதியதாயிற்று.

3. தீம்பாலூட்டினும் வேம்பினும் கைக்கும் என்றமை உணவின் வெறுப்பைக்காட்டலின் உண்டியிற் குறைதல் பெறப் பட்டது. கைக்கும்—வெறுக்கும்.

4. சாய்தல் என்பது உடம்பு நனி சுருங்கலைக் காட்டிற்று. டியல்]



கனவொடு மயங்கலென்பது, வழித் தலைமகனைக் கனவிற் கண்டு

[1] அரிதினில் துயிலெய்திய பின்னர் அவனன்மையின் மயங்கும் மயக்கம்.

"அலந்தாங் கமையலே னென்றானைப் பற்றியென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்."

(கலி. கஉஅ) என்பது கனவொடு மயங்கிற்று.

பொய்யாக்கோடலென்பது, மெய்யைப் பொய்யாக்கோடல்;
அது,

[2] "கனவினு னெய்திய செல்வத் தனையதே
ஐயவெமக்குநின் மார்பு."
(கலி. சுஅ) எனவும்,

"வானி னிலங்கு மருவித்தே நானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை."

(கலி. சுக) எனவும்,

"வருது மென்ற நாளும் பொய்த்தன
வரியே ருண்கண் ணீரு நில்லா."

(அகம். கசச)

எனவும் வரும்.

[3] மெய்யேயென்றலென்பது, பொய்யை மெய்யென்று துணிதல்; அது,

"கழங்கா டாயத் தன்றுநம் மருளிய
பழங்க ணோட்டமு னலிய
[4] வழுங்கின னல்லனோ [5] வயர்ந்ததன் மனனே.

(அகம். சுசு)

1. அரிதினில் தயிலெய்தல் — அரிதாக உ

றங்கல். பொய் யுறகககம.

2. கனவினெய்திய செல்வம் பொய்யாதல்போல நின்மார்பும் பொய்யாயிற்று என்பது மெய்யைப் பொய்யாகக் கோடல். அவன் மார்பை மெய்யாகப்பெற்றும் அரிதாதல் நோக்கிக் கனவின்கண் எய்திய செல்வமாயிற்றென்பது பொய்யாகக் கோடல்.

3. மெய்யேயென்றல்

மெய்யென்று துணிதல்.

என்பது தன் பொய்யான கருத்தை

4. அழுங்கல்—தவிர்த்தல்.

5. அயர்ந்ததன்மணன்—செய்ததன்மணம்; என்றது பரத்தை மணத்தை. பழங்கண்ணோட்டம் என்றதனும், நவிதர என்றதனும் பொய்யே புகுந்தான் என்று கருதினள் என்பது பெறப்படும். பழங்கணோட்டமும் என்பதும் பாடம். அதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு.



என்பது, தானே தன்மகனை வாயில்கொண்டு

புக்கானாயினும் அதனைப் பழங்கண்ணோட்டம் முன்

நலிதரப்பொய்யே புகுந்தா னென்று மெய்யாகத் துணிந்து கோடலின் அப்பெயர்த்தாயிற்று.

ஐயஞ்செய்தலென்பது,

"தூதவர் விடுதரார் துறப்பார்கொ லேநோக விருங்குயி லாலு மரோ."

(கலி. ௩௩.)

என்புழி, நம்மை இம்மைப்பிறப்பினுள் துறப்பார்கொல்லென வாழாதே ஐயஞ்செய்தமையின் ஐயமாயிற்று.

[1] அவன்றமருவத்தலென்பது :

"ஊர னூரன் போனுந் தேரும் பாணன் றெருவி னானே."

(இ வி. ப. ருடள)

என்பது, [2] அவன்றமரைக்கண்டு உவந்தது. இது முனிவெனப் படாதோவெனின், அது தலைமகனைப் புலந்தாற்போல்வதோர் முனிவாயினல்லது, பகைபட நிகழாக் குறிப்பெனப்படும்; அல்லாக்கால், அது பெண்டன்மையன்றாமாகலின்.

" அவர் நாட்டு, மாலைப் பொய்த மணங்கமழ [3]

ழுந்தியொடு

காலை வந்த [4] காந்தண் முழுமுதன்
மெல்லிலை குழைய முயங்கலு
மில்லுய்த்து நடுதலுங் கடியா தோட்கே.''

(குறு. ௩௬௧)

என்பதும் அது.

அறனளித்துரைத்தலென்பது, அறக்கிழவனை அன்பு செய்தல்; அது,

"பாங்கர்ப் பல்லி படுதொறும் [5] பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்தி.'

(அகம். ௯)

என வரும்.

1. அவன்றமர் என்றது பாணன் முதலியோரை.

2. அவன்தமர் என்றது ஈண்டுப் பாணனை.

3. உந்தி—ஆற்று வெள்ளம்.

4. அவன் நாட்டு ஆற்றுவெள்ளத்தோடுவரும் காந்தட் கிழங்கை உவந்தமையின் அவன்றமர் உவத்தலாயிற்று. அவள்

நாட்டுக் காந்தளாதலின் தமராயிற்று
5. பல்லியைப் பரவினமையின்
அறனளித்துரைத்தலாயிற்று.
பல்லியில் அதிட்டித்து நின்று சொன்னது
தரும தெய்வமென்று

கொண்டு அன்புசெய்து அதனைப் பரவினுள் என்க. அதிட்டித்து நின்று சொல்லுவித்தமையின் அத்தெய்வத்தைப் பரவினுள் எனினுமாம்.

டியல்]

# பொருளதிகாரம்

சஙா

ஆங்குநெஞ்சழிதலென்பது, அங்ஙனம் உரைக்குங்கால் நெஞ்சழிந்துரைத்தல்; எனவே, அறனளித்துரைத்தல் அழிவின்றென்றுமென்பது சொல்லினும்; அது,

"பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை
வழிபட் டிரக்குவேன் வந்தே னென்னெஞ்ச
மழியத் துறந்தானைச் சீறுங்கா லென்னை
யொழிய விடாதீமோ வென்று." (கலி. கசஙு)

எனவும் வரும்.

எம் [1] மெய்யாயினு மொப்புமை கோடலென்பது, யாதானும் ஒருபொருள் கண்டவிடத்துத் தலைமகனோ டொப்புமை கோடல்;

அது,

"கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப்
பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே."

(கலி. ௨0)

என, எம்மெய்யாயினும் ஒப்புமை கொண்டவாறு. 'எம்மெய் யாயினும்' என்றமையாற் கண்டபொருளும் கேட்டபொருளும் ஒப்புமைகொள்ளப்பெறுமென்றவாறு.

ஒப்புவழியுவத்தலென்பது, ஒப்புமையுண்டாகிய வழியே உவமைகொண்டு அதனானே உவகைதோன்றுவது. எனவே, முன்னது ஒப்பின்றி ஒப்புமை கொண்டதாயிற்று; என்னை? எம்மெய்யாயினுமென்றமையின்.

"காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்
தேமொழி கேட்ட லினிதுமற் றின்னாதே." (கலி. அ0)

என்பது, ஒப்புவழியுவந்தது; என்னை? [2] காமரு நோக்கினை யென்றமையின்.

[3]"பால்கொள லின்றிப் [4] பகல்போன் முறைக்கொல்காக்
கோல்செம்மை யொத்தி பெரும [5] மற் றெவ்வாதி." (கலி. அசு)

என வருவதூஉஞ் சொல்லுப.

1. மெய்—பொருள்.

2. காமருநோக்கு—விரும்பப்படும் அழகு. தந்தையேபோல் வான் மகனுதலின் காமருநோக்கென்றாள். பெரும என்றது மகனை. மகனைத் தந்தையொடு ஒப்புமைகண்டு உவத்தலின் ஒப்புவழியுவத்தலாயிற்று.

3. பால்கொளல்—ஒருபக்கஞ் சாய்தல.

4. பகல்—நுகத்து நடுவாணி.

5. மற்று—கோலின் செம்மையல்லாத பிறகுணம்,



உறுபெயர் கேட்டலென்பது, தலைமகன் பெரும்புகழ் கேட்டு மகிழ்தல் ; அது,

"பலவின் பழத்துட்டங்கு மலைகெழு [1] வெற்பனைப்
பாடுகம் வா."

(கலி. ௪௧)

எனவும,

"மென்றோ ணெகிழ்த்தான் [2] திறமல்லால்

யான்காணே

னன்றுதீ தென்று பிற.''

(கலி. க௺௨)

எனவும் வரும்.

கலக்கமென்பது, சொல்லத்தகாதன சொல்லுதல்; அது,

''ஐயயெனக் [3] காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே [4] மாய்ந்தான் கரந்து.''

(கலி. க௺௨)

எனவும்,

''பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப்
புறங்காலிற் போக விறைப்பேன் முயலி
னறம்புணை யாகலு முண்டு.''

(கலி. க௪௪)

எனவும் வரும். 'கலக்கமு நலத்தக நாடி னதுவே' (உ௭௦) என்

ஞது, கலக்கமென்பதனை [5] வேறு பெயர்த்து வைத்ததென்னை

யெனின், [6] இக்காலத்து அதனினாங்கு நிகழும் மெய்ப்பாட்டுக்

குறிப்புளவல்ல தலைமகட்கென்பது அறிவித்தற்கென்பது. இன்னும் அதனனே தலைமகற்காயின் அதனினாங்கு வருவதோர் கலக்கமும் உளதாமென்றது; அவை,

மடலூர்தலே வரைபாய்
தலே என்றற்றொடக்கத்தன ; அது,

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே."

(குறு. கள)

இதனுள் சாதல் எல்லையாகக் கூறியவாறு கண்டுகொள்க.

---

1. வெற்பனைப் பாடுகம்வா என்றது பெயர்கேட்டு மகிழ் தலைக் குறித்து நின்றது.

2. திறமென்றது—அவனழகு அவன் புகழ்குறித்து நின்றது.

முதலியவற்றை, அதுவும்

3. காண்கு—காண்பேன்.

4 மாய்ந்தான்—மறைந்தான். கனவிலே கணவனைக் கையாற் பற்றிக்கொண்டவளாக் கண்டு பின் விழித்துப்பார்த்துக் காணாமையின் கலக்கமுற்றாள். கனவிற் காணப்பட்டுப் பின் மறைந்தான் என்றதும் முந்நீர் இறைப்பேன் என்றதுஞ் சொல்லத்தகாதன.

5. வேறு பெயர்த்து வைத்ததென்றது—முன்னையவற்றோடு ஒருங்குவைத்தெண்ணாமையை.

6. இக்காலத்து—களவுக்காலத்து.

இவ்வாறு கூறவே, இச்சூத்திரத்துளோதிய இருபது மெய்ப்பாடுந் தலைமகற்கும் ஏற்றவகையானே கொள்ளப்படுமென்பது; அது,

[1] "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்
தெல்லுறு மௌவ னாறும்
பல்லிருங் கூந்தல் [2] யாரளோ நமக்கே."

(குறு. கக) என்பது, துன்பத்துப் புலம்பலாம்; என்னை? தானே துன்புறு கின்றாகத் தலைமகன் உரைத்தமையின்.

"அந்நீங் கிளவி யாயிழை மடந்தை
கொடுங்குழைக் கமர்ந்த நோக்க
நெடுஞ்சே ணாரிடை [3] விலங்கு மான்றே."

(அகம். ந) என்பது, எதிர்பெய்து பரிதல்; என்னை?

4 முற்காலத்து எதிர்ப் பட்டமை, பிற்காலத்துச் சொல்லினமையின். ஒழிந்தனவுந் தலைமகற்குரியனவாகி வருவன வந்தவழிக் கண்டுகொள்க.

இவையெல்லாம் அறனும் பொருளுமன்றி இன்பப்பொருள் நிகழ்ந்தவிடத்து அவரவருள்ளத்து நிகழ்வனவாதல் [5] வழக்கு நோக்கி உணரப்படுமென்பது. மேற்கூறிய நகை முதலாயவற்றுக்கும் இஃது ஒக்கும். இவ்வெண்ணப்பட்டனவெல்லாம் உள்ளத்து நிகழ்ந்தனவற்றை வெளிப்படுப்பனவாகலான் மெய்ப்பாடெனப்பட்டன. மேல்வருவனவற்றுக்கும் இஃது ஒக்கும். (உஉ)

[வரைவுக்கு நிமித்தமான மெய்ப்பாடுகள்]

உ௩. முட்டுவயிற் கழறன் முனிவுமெய்ந் நிறுத்த
லச்சத்தி னகற லவன்புணர்வு மறுத்த

றாதுமுனி வின்மை நுஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையொ[ன்]
ருயிரு நான்கே யுழிவில் கூட்டம்.

1. எவ்வி—ஒரு வள்ளல்.

2. யாரன்—எத்தன்மையான்.

3. விலங்கல்—குறுக்கிட்டுத் தடுத்தல்.

4. முற்காலத்துப் பாலைநிலத்தெதிர்ப்பட்டு வருந்திலைமையைப் பின்னும் போக்குவலித்த நெஞ்சிற்குக் கூறினமையின் எதிர்பெய்து பரிதலாயிற்று.

5. வழக்கு—உலகவழக்கு.

9



இது [1] வரைந்தெய்தும் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடு இவை எட்டுமென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: முட்டுவயிற் கழறல்—தலைக்கூட்டத்திற்கு முட்டுப் பாடாகியவழிக் கழறியுரைத்தலும்: அது,

" நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
2 பன்முட் டின்றாற் றோழிநங் களவே."

(அகம். கஉஉ)

என்பது; இது, தலைமகன் கேட்பக் [3] கழறியுரைத்தது.

[4] முனிவுமெய்ந் நிறுத்தல்—தலைமகளுள்ளத்து வெறுப்பு வெளிப்பட நிற்கு நிலைமையும்; அது,

5 "இன்னுயிர் கழிவ தாயினு நின்மக
ளாய்மல ருண்கட் பசலை
காம நோயெனச் செப்பா தீமே."

(அகம். ருஉ)

என்புழி, [6] வாழ்க்கை முனிந்து தலைமகள் சொல்லியது.

அச்சத்தினகறல்—தலைமகன் கண்வரும் [7] ஏதமஞ்சி அவனை நீங்குங் குறிப்பும்:

" மன்றுபா டவிந்து........மயங்கி

இன்ன மாகவு நன்னர் நெஞ்ச
மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்

கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்

1. வரைந்தெய்துங்கூட்டம்—மணச்சடங்குசெய்து புணரும் புணர்ச்சி.

2. பன்முட்டின்று—பல முட்டுப்பாட்டையுடைத்து. முட்டுப்பாடு—தடை. இது முட்டுவயிற் கழறல்.

3. கழறல்—இடித்துக்கூறல்.

4. முனிவுமெய்ந் நிறுத்தல்—தலைமகள் தன் வெறுப்பை வெளிப்படக் காட்டிநிற்றல்.

5. இன்னுயிர் கழிவதாயினுஞ் சொல்லாதீம் என்றதனால் உயிர் வாழ்க்கையை வெறுத்துக் கூறியதாயிற்று. இச்செய்யுள் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

6. வாழ்க்கை—உயிர்வாழ்க்கை.

7. ஏதம்—தீங்கு: என்றது வரும்வழியின் கட்டமங்கை. நீங்கல்—பிரிந்திருத்தல்.

பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற நின்றே." (அகம். கழ-அ) என்னும் பாட்டினை முழுதுங் கொள்க; அதன் கருத்தாவது; நாம் அவர் இருளிடை வருத லேதமஞ்சி அகன்று [1] வலித்திருப்பவும் என்னையும் நின்னையுங் கேளாது என்னெஞ்சு போவானேனென்றவாறாயிற்று.

அவன் புணர்வு மறுத்தல் — இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கெழுந்த உள்ள நிகழ்ச்சியும்; [2] அது தமரையஞ்சி மறுத்தமையானும், [3] இது வரைவு [4] கடாவுதற்குக் கருத்தாக லானுங் கிளைப்பு விணமறுத்தலோடு (உகரு) இது வேற்றுமையுடைத்து.

" நல்வரை நாட நீவரின்
[5] மெல்லிய லோருந் தான்வா ழலளே."

(அகம். கஉ) என்பது, தலைமகள் குறிப்பினைத் தோழி கூறியதாகலான் அஃது அவன்புணர்வு மறுத்தலெனப்படும். இஃது 'ஒன்றித் தோன்றுந் தோழி மேன' (௩௯) என்னும் இலக்கணத்தால் தோழி குறிப்பாயினுந் தலைமகள் குறிப்பெனவே படுமென்பது கொள்க.

தூது [6] முனிவின்மை—புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானுஞ் சொல்லுதலும்; அவை,

"கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநின் னல்லது பிறிதுயாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறவை கிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமா லலவ."

(அகம். கஎ0)

1. வலித்திருத்தல்—நெஞ்சைத் திடப்படுத்திருத்தல். 2. அரு—திளைப்பு வினைமறுத்தல்.

3. இது—அவன் புணர்வு மறுத்தல்.
4. கூடாவுதற் கருத்தென்றிருப்பதே பொருத்தம்.
5. 'மெல்லி யாளொரு நாள்வா ழலனே' எனவும்
பாடம். 6. முனிவின்மை—வெறுமை.
7. அலவன்—ஞெண்டு.



[மெய்ப்பாட் என்புழி, கூறப்பட்டனவெல்லாந் அதுதாகலின், தூதுவிடுதலை வெறுத்ததன்மை கூறியதாம் இப்பாட்டென்பது.

" புல்வீ [1] ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்
றீதி னெஞ்சத்துக் கிளவி நம்வயின்
† வந்தன்று வாழி தோழி நாமு
[2] நெய்பெய் தீயி னெதிர்கொண்டு
தாமணந் தனையமென விடுகந் தூதே."

(குறு. ௧௦௬) என்பதேதோவெனின், அது கற்பிற்கல்லது ஏலாது ; என்னை? களவினுள் நெய்பெய் தீயின்வந்து எதிர்கொளலாகாமையின்.

துஞ்சிச்சேர்தல்—மனையகத்துப் பொய்த்துயிலோடு மடிந்து வைகுதலும்.

துஞ்சுதலெனினும் மடியெனினும் ஒக்கும். வேண்டியவாறு கூட்டம் நிகழப்பெறாமையின் தலைமகனொடு புலந்தாள்போல, மடிந்தொன்றுமாதலின் அதனைத் துஞ்சிச்சேர்தலென்றானென்பது; எங்ஙனமோவெனின்,

[3] "என்மலைந் தனன்கொ றானே தன்மலை
யார நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே."

(குறு. கசுக)

என்புழி, என்னகாரியம் மேற்கொண்டுவந்தானென்றமையின் இது துஞ்சிச்சேர்தலாயிற்று. அல்லாக்கால் அங்ஙனஞ் சொல்லுதல் அன்பழிவெனப்படும்.

"ஆரிரு மணிவரை."

(கலி. சுஅ) என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"பின்னிநல் வேண்டுநீ பிரிந்தோனாய்ப் பொன்னீவிப்
[4] பூங்கண் படுகலு மஞ்சுவ ளுங்கிய

1. இற்றி—ஒருமரம்.

2. நெய்பெய்த் சுவாலித்தெழுமின் யார்க்குந் தெரியும். அது போல வெளிப்படவந்தெதிர்கொள்ளல் கற்பிற்கல்லது களவிற் கின்று என்றபடி.

3. என்மலைந்தனன்—என்னகாரிய

மேற்கொண்டு வந்தான்.

4. பூங்கண்படுதலு
லான கேடு மலையினும்
மஞ்சுவல்—கனவிலலையுந் துயரத்தா
லெரிதாகலின் கண்படுதற்கும் அஞ்சு
வேன் என்பது கருத்தாகலின் இதுவுந்
துஞ்சிச்சேர்தற் கருத்து
ளடங்கும் என்றபடி.. இது தோழி கூற்று. தலைவி கண்படுதற்கும் அஞ்சுவேன் என்றதனல் பிரிவையாற்றுது துயிலின்றி மடிந்து கிடக்கின்ருள் என்பது பெறப்படும். ஆதலிற் றுஞ்சிச்சேர்தல் ஆயிற்று.

† நயந்தன்று எனவும் பாடம்.



வருந்துயா ரவைந் தூக்கின்

மருங்கழி வாரா மலையினும் பெரிதே.''
என்னுஞ் சுரிதகமும் அது.

காதல் கைம்மிகல்—காமங் கையிகந்தவழி
நிகழும் உள்ள நிகழ்ச்சியும்: அது,

'' உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா

இருப்பினெம் மளவைத் தன்றே வருத்தின்
வான்றோய் வற்றே காமஞ்
சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே.''

(குறு. ௧௦௨.) என வரும்.

கட்டுரையின்மை—உரைமறுத்திருத்தலும்; அதனானே அதற்குத் தோழிகண்ணாயினுந் தலைமகன்கண்ணாயினும் உரைமுறை நிகழ்வதல்லது தலைமகள் உரையாளென்பது பெற்றாம்; அது,

1 ''யான்ற னறிவ றானறி யலளே
யாங்கா குவள்கொ றானே
பெருமுது செல்வ ரொருமட மகளே.''

(குறு. ௩௩௭) என்பது, தலைமகள் கட்டுரையாதிருத்தலின், தலைமகன் கூறி னெய்தல் வேண்டினமையிற் கட்டுரையின்மையின் வரைவு கடாவுதலாயிற்றென்பது. ஒழிந்தனவும் அவ்வாறே வரைவுகடாதற்கு ஏற்றவாறு [2] உரையிற் கொள்க.

என்றாயிருநான்கே

அழிவில்கூட்டம்—என்றெண்ணப்பட்ட மெய்ப்பாடெட்டும் பின் அழியாத

கூட்டத்திற்கு எதுவாம்
என்றவாறு. அஃதாவது, வரைந்தெய்துங்
கூட்டமென
உணர்க.

(உ௩)

1. இச்செய்யுள் குறுந்தொகையுள்
வேறுதுறைக்கு உதா
ரணமாகின்றது. பேராசிரியர் வரைவுகடாதற் கருத்தென்று
கூறலின் இவர் வேறுதுறையாகக் கொண்டவர்போலும். வரைவு
கடாதல் என்பது வரைவு வேண்டல் என்ற
கருத்துப்போலும்.
வரைவுகடாவல் தோழிகூற்றாகலின். இளம்பூரண
ரும் வரைவு
வேண்டலென்று கொள்ளுகின்றார் என்று உ. வே.
சாமிநாதைய
ரவர்கள் தமது குறுந்தொகையுரையுட் கூறியுள்ளார். ஆயின்
வெளிவந்த இளம்பூரணர் உரையுள் அவ்வாறு காணப்படவில்லை.
உரைகளையும் பின்னுள்ளார் ஏட்டுப்பிரதிகளில்
திருத்தி எழுதி
யுள்ளார்கள்போலக் காணப்படுகின்றது.

2. உரை—அவ்வவ்வாக்கியம்,

[வரைந்தெய்தியபின் தலைமகள்கண் நிகழு
மெய்ப்பாடுகள்]

௨௭௨. தெய்வ மஞ்சல் புரையறந் தெளிதல்
லில்லது காய்தல் லுள்ள துவர்த்தல்
புணர்ந்துழி யுண்மை பொழுதுமறுப்
பாக்க
மருண்மிக வுடைமை யன்புதொக
நிற்றல்
பிரிவாற் றாமை மறைந்தவை
யுரைத்தல்
புறஞ்சொன் மாணாக் கிளவியொடு
தொகைஇச்
சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே.

இஃது, அழிவில்கூட்டம்
நிகழ்ந்தபின்னர் வருதற்குரிய
மெய்ப்பாடு இவையென்கின்றது.

இ—ள்: இவ்வெண்ணப்பட்ட
பதினொன்றும் மேற்கூறிய

அழிவில் கூட்டமெனப்படும் என்றவாறு.

'செப்பியபொருள்' என்பது அழிவில்கூட்டமன்றே;

அதற்கு முற்படும் மெய்ப்பாட்டினையும் அழிவில் கூட்ட

மென்றதுபோல, பிற்படும் மெய்ப்பாட்டினையும் அழிவில் கூட்ட

மென்பான் மேற்கூறிய அழிவில்கூட்டமே இவையெனக் கூறிய

வாறு. எனவே, வரைந்தெய்தியபின்னர்த் தலைமகள் மனத்து

நிகழ்வன இவையென்பது கூறினாம்.

தெய்வமஞ்சலென்பது, தலைமகற்குத் தொழுகுலமாகிய

தெய்வமும் அவற்கு ஆசிரியராகிய தாபதரும் இன்னோரென்பது

அவனானுணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை

யஞ்சி ஒழுகுமொழுக்கம் அவள்கட்டோன்றும்; அங்ஙனம்

பிறந்த உள்ளநிகழ்ச்சியைத் 'தெய்வமஞ்சல்' என்றானென்பது.

மற்றுந் தனக்குத் தெய்வந் தன்
கணவனாதலான் அத்தெய்வத்

தினைத் தலைமகளஞ்சுதல் எற்றாற்றெனின், அவனின் தான்

வேறல்லளாக மந்திரவிதியிற் கூட்டினமையின் அவனான் அஞ்சப்

படுந் தெய்வந்தனக்கும் அஞ்சப்படுமென்பது. அல்லதூஉந் தலை

வற்கு [2] ஏதம் வருமெனவும்
அஞ்சுவளென்பது.

"தினைகாடச் சிறக்குநின் சினந்தணிந்
தீகெனக்

கனைகதிர்க் [3] கனலியைக் காமுற
லியைவதோ." (கலி. கரு)

1. அறிவில்கூட்டம்—இடையறவுபடாத
கூட்டம். என்றது

கற்பினை. மனமறிவில்லாத கூட்டம் என்பர்
இளம்பூரணர்.

2. ஏதம்— தீங்கு.

3. கனலி—ஞாயிறு. இது தெய்வம்.

என்பது, தெய்வத்திறநோக்கித் தெருமந்ததாம்; என்னை?
[1] அவற்கிலவெனவும் அன்னவெனவுந் தாம்வேண்டிய குறை
முடியாது · பிரிந்தார்மாட்டு எதஞ் செய்யுங்கொ லென்றஞ்சி
உரைத்தவாறு.

[2] "அச்சா ருக [3] வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னுகுவல்."

(கலி. எரு)

என்பதும் அது. இது,

" ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்."

(கசசு)

தலைமகள் கருத்தின்கண் நிகழுங் குறிப்பென்பது.

[4] புரையறந்தெளிதலென்பது,

தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள்
மனத்துப்படுதல்; அது,

" விரியுளைக் கலிமான் றேரொடும் வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றும்."

(கலி. எ௫)

என வரும். இஃது அவனொடு சொல்லப்படாது ஊடியிருப்பே னாயின், விருந்துகொண்டு புகுதரும்; அதனான் ஊடலை மறப்பே னென்றமையிற் புரையறந்தெளிதலாயிற்று.

இல்லது காய்தலென்பது,

களவின்கட்போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக்கொண்டு காய்தல்; அது,

"நற்று ரகலத்துக் கோர்சார் மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு."

(கலி. கூ௩)

என வரும்; இது கடவுளரையே கண்டு தங்கினானாயினும், நெட்டிருங் [5] கூந்தற் கடவுளரையே கண்டாயென்று இல்லது சொல்லிக் காயுமாகலின் அப்பெயர்த்தாயிற்று.

1. அவற்றிவை எனவும், அன்னை எனவும் என்றும் பாடங்களிற் சிதைவு இருத்தல்வேண்டும். 'அவற்றிவையென வினவுவளென்று தாம் வேண்டிய' என்றும் பாடம். 'கேள்கேடூன்றவும் (அகம். கூ௩)' என்றும், 'இல்லோர்க்கில்லென' எனவும் வருதலின், 'அவற்றிவளென' என்பது 'தமர்க்கிலவென' என்றுதல், 'இரவலர்க்கிலவென' என்றுதல் இருந்திருக்கலாம்போலும்.

2. அச்சு—அச்சம்.

3. உணரிய—உணர்ந்த.

4. புரைதல்—ஒத்தல் = இயைதல்.

5. கூந்தற்கடவுளரென்றது—பரந்தையரை.



உள்ளதுவர்த்தலென்பது, தலைமகனாற் பெற்ற தலையளி உள்ளதேயாயினும், அதனை உண்மையென்றே தெளியாது அருவருத்துநிற்கும் உள்ளநிகழ்ச்சி; அது,

“கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்” (அகம். ௧௭௯)

என்னும் பாட்டினுள்,

“வேப்புநனை யன்ன நெடுங்கண் ணீர்ஞெண்
டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல
தொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற்
றிதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
னீர்மலி மண்ணளைச் செறியு மூர.”

என்புழி, தலைமகன் வாயில்வேண்டச் சென்றானைப் [1] பிறர் கூறும் பழிக்கு வந்தாயென்றமையின் இஃது உள்ளதுவர்த்தலாயிற்று.

“பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்
விட்[2]டவள் வரமேனுக்கு [3] விருந்தேற்றுக் கொளநின்றாய்.”
(கலி. ௯௯)

என்பதும் [4] அது.

புணர்ந்துழிபுண்மையென்பது, முற்கூறிய இல்லது காய்தலும் உள்ள துவர்த்தலுமாகிய [5] விகாரமின்றிப் புணர்ச்சிக் காலத்துச் [6] செய்வன சென்ற உள்ளநிகழ்ச்சி; அது,

"குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளிபொறியின் மெய்யிற் கினிதா—மொளியிழாய்
யூடி யிருப்பினு மூர னறுமேனி
கூட லினிதா மெனக்கு.''

(ஐந். ஐம். ௩௦)

என்பது, என்னை? புணர்ந்துழியுண்மை கூறினள், விகாரமின்றி

யாதலின்.

1. பிறர்கூறும் பழிக்கு அஞ்சிவந்தாயென்றது இச் செய்

யுளில் 'வெண்குருகஞ்சி' என்ற இறைச்சியாற் பெறப்பட்டது.

2. அவள்--பரத்தை.

3. விருந்தேற்றுக்கொள—அவள் உன்னை விருந்தாக ஏற்றுக்

கொள்ள.

4. அது என்றது உள்ளதுவர்த்தலை. அவன் தன்பால்வந்த துண்மையாகவும் பரத்தை வரக்காணுமையின் வந்தாய் என்றமையின் அன்னதாயிற்று.

5. இல்லதை யுள்ளதாக்கிக் கூறலும் விகாரம். இல்லதாக்கி வெறுத்துக் கூறலும் விகாரம்.

உள்ளதை

6. செய்வன சென்ற—செய்வனவற்றிற் சென்ற. செய்வன— மேனி கூடல். கரணமுமாம்.

டியல்]
எ௩

# பொருளதிகாரம்

1 பொழுது மறுப்பாக்கமென்பது, களவின்கட் பகற்குறியும் இரவுக்குறியுமென வரையறுத்தாற்போல்வதோர் வரையறை யின்மையின் அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கமென்றவாறு; எனவே, களவுக்காலத்துப் பொழுது வரைந்துபட்ட இடர்ப் பாட்டினீங்கிய மனமகிழ்ச்சி ஆக்கமெனப்படும்; அது,

"அயிரை பரந்த வந்தண் பழனத்
தேந்தெழின் மலர தூம்புடைத் திரள்கா
லாம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவ
ளிடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்

தொழுதுகாண் [2] பிறையிற் றோன்றி யாநுமக்
கரியே மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே.''

(குறு - களஅ) என்பதனுள், தொழுதுகாண் பிறையில் தோன்றினமென்பது; களவுக்காலத்து இடையீடு பெருகிற்றெனக்கூறி அங்ஙனம் வரைந்தபொழுதினை மறுத்தகாலத்து நடுங்கலானீரென்றமையின் இஃது அப்பொருட்டாயிற்று.

அருண்மிகவுடைமையென்பது, களவுக்காலத்துப்போலத் துன்பமிகுதலின்றி, அருண்மிகத்தோன்றிய நெஞ்சினளாதல்;

அது,

" நின்ற சொல்லர் நீடுதோன் [3] றினிய
ரென்று மென்றோள் பிரிபறி யலரே.''

(நற்றி - க)

எனவரும்.

அன்புதொக நிற்றலென்பது, களவுக்காலத்து விரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேற் பெருகிய விருப்பினானே ஒருங்கு தொக நிற்றல்;

" எம்போற்—புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
[4] வென்ன கடத்தளோ மற்றே.''

(அகம் - களசு)

என்புழி, புதல்வற்பயந்து நின்னின்றுறையுங் கடத்தினம் யாமென்றமையின் இஃது அன்புதொக நிற்றலாயிற்று.

1. பொழுதை மறுத்தலாய ஆக்கம்.
பெறல். மறுத்தகாலம்—கற்புக்காலம்.
மறுத்தல்—நீக்கப்

2. பிறை—மாதப்பிறை; கார்த்திகைப் பிறையுமாம்.
3. 'இனியர்', 'பிரிபறியலர்' என்றமையின், அன்பின்மிக்க
அருளாயிற்று.

4. என்ன கடத்தள்—என்ன கடமையினள்.
கடமையேமென்பது பெறப்பட்டது.
எனவே யாம்



பிரிவாற்றாமையென்பது, களவிற்
பிரிவாற்றுதல் வேண்டு மாறுபோலக் கற்பினுட்
பிரிவாற்றுதல் வேண்டப்படாமை; என்னை?
புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்தல்
கற்பிற்கு வேண்டுவதன்றாகலினென்பது.

"இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பின

டடமென்றேள் பிரியாமை பொருளாயி னல்லதை."
(கலி - உ)
என்புழி, இனைய கற்பினளைப் பிரியாமை பொருளாயினன்றி நும்மால் தரப்படும் பொருள் பொருளாகுமோ என்றதன் கருத்தாவது: பிரிவாற்றாமையின் இவள் இறந்துபடுவள், பின்னை அப்பொருள்கொண்டு ஆற்றும் இல்லறம் யாண்டையதெனத் தலைமகள் பிரிவாற்றாமை கூறியவாறாயிற்று.

[1] மறைந்தவை யுரைத்தலென்பது, களவுக்காலத்து நிகழ்ந்தனவற்றைக் கற்புக்காலத்துக் கூறுதல்; அவை,

" களவினு ணிகழ்ந்த வருமையைப் புலம்பி
யலமர லுள்ளமொ டளவிய விடத்தும்."

(தொல் - கஎசு) என்புழித் தோன்றிய மனக்குறிப்பு; அது,

" முயங்கல் விடாஅ லிவையென மயங்கி
யாமே மென்னவு மொல்லார் தாமற்
றிவையா ராட்டிய பருவமு முளவே
யினியே; புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொண் மென்முலை
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்
வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுத ருமஞ் சினரே." (அ

கம் - உகூ ) என்பது, [2] முன்னிலைப்
புறமொழியாகலான் [3] மறைந்த ஒழுக் கத்துக்கண்
நிகழ்ந்த பொருளைக் கற்பினுள்
உரைத்தவாறாயிற்று.

புறஞ்சொன்மாணுக்கிளவியென்பது,
தலைமகற்குவந்த புறஞ்
சொல்லின் பொல்லாங்கு குறித்து எழுந்த
கிளவி ; அவற்கு
வரும் பழிகாத்தலுந் தனக்கு அறமாதலின்
அதுவுங் கற்பின்
கண்ணே நிகழுமென்பது ; அது,

1. மறைந்தவை—களவினிகழ்ந்தவை.
மறைவு—களவு.

2. முன்னிலைப்புறமொழி—முன்னிலையில்வைத்துப் பிறரைக் கூறுவதுபோலக் கூறுமொழி.

3. மறைந்த ஒழுக்கம்—களவொழுக்கம்.



" களிறு கவர் கம்பலை போல

[1] வலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.''
(அகம் - சுகூ) என்றாற் போல்வன.

கிளவியொடுதொகைஇயென்பது,
இதனோடுந் தொகுத் தென்றவாறு;
சிறந்தபத்தும் என்பது, விதந்தோதிய பத்தும்
செப்பிய பொருள் என்பது, அழிவில்
கூட்டமெனச் செப்பிய கற்பின்கண் வரும்
மெய்ப்பாடெனப்படும் இவையும் என்பது.

மற்றுப் பதினொன்றனை யெண்ணிச் 'சிறந்த பத்து இவை' என்றதென்னையெனின்,—அதனை,

" ஒன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே.''
(ருருசு)
என்ற மரபியற் சூத்திரம்போல மொழிமாற்றி யுரைக்கப்படும்; அங்ஙனஞ் சிறந்த பத்தும்

புறஞ்சொன்மாணாக் கிளவியொடு [2]
தொகைஇயெனக் கூட்டியுரைக்க.
சிறந்தபத்தென்றதனான் இவையன்றிக்
கொள்க.
கற்பினுள் வரும் மெய்ப்பாடு பிறவுமுளவேற்
(உச)

உ௭௩. பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே.

இதுவும் அம்மெய்ப்பாட்டுப் பகுதியே கூறுகின்றது; மேற் களவியலுள்,

"ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப." (௯௦)

என்றான், அவ்வொப்பினது பகுதி இத்துணைக் குறிப்பு உடைத் தென்ப துணர்த்தினமையின்.

இ—ள்: ஒத்த பிறப்பும் ஒத்த ஒழுக்கமும் ஒத்த ஆண்மையும் ஒத்த பிராயமும் ஒத்த உருவும் ஒத்த அன்பும் ஒத்த நிறையும் ஒத்த அருளும் ஒத்த அறிவும் ஒத்த செல்வமுமெனப் பத்துவகைய தலைமகளொப்பினது பகுதி என்றவாறு.

---

1. அலர்—பரத்தைவீடு சேறலால் வரும்

பரிமொழி.

2. பத்தும்தொகை இயெனவே பதிறென்றென்பது பெறப்படும்.



இவை தலைமகற்கு மெய்ப்பாடெனப்படாவோவெனின் படுமாயினும் அஃது ஒப்பினது வகையென்றதனனே தலைமகட்கே உரிமைகொளப்படும்.

குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை யென்னையெனின், பிறப்பென்பது குடிப்பிறத்தல்; அதற்குத்தக்க ஒழுக்கங் குடிமை எனப்படும். குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமையென்றா னென்பது; அதனை [1] ஊராண்மையெனவுஞ் சொல்லுப. ஆண்மை புருடர்க்காம். அஃது [2] ஆள்வினை யெனப்படும். இது தலை மகட் கொப்பதன்றாலெனின், [3] குடியாண்மை யென்புழி ஆண்மையென்பது இருபாற்கும் ஒக்குமாதலின் அமைபு மென்பது. யாண்டென்பது ஒத்தவாறென்னையெனின், பன்னீரி யாண்டும் பதினாறியாண்டுமே பெண்மையும் ஆண்மையும் பிறக் கும் பருவமென்பது ஒத்தினுள் ஒப்ப முடிந்தமையின் அது வும் ஒப்பெனவே படும். 'உருவு நிறுத்த காம வாயில்' என் பது, பெண்மை வடிவும் ஆண்மை வடிவும் பிறழ்ச்சியின்றி அமைந்த வழி அவற்றுமேல் நிகழும் இன்பத்திற்கு வாயி லாகிய அன்பென்றவாறு.

இங்ஙனம் ஓதியவகையான் இவை ஒன்பதாகலிற் பத்தாமா றென்னையெனின், காமவாயிலெனப்பட்ட இயற்கையன்பு வடிவு பற்றியல்லது தோன்றாமையானும், குணம்பற்றித் தோன்றுவன செயற்கையன்பாகலானும், உருவினை அன்பிற்கு அடையாகக் கூறினாயினும் உருவு சிறப்புடைமையின் அதனை நாம் பகுத் தெண்ணிக்கொண்டாமென்பது; என்னை?

"வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு." (குறள். ௬௩௨)

என்புழி, [4] கற்றறிதலென்பதனை இரண்டாக்கி ஐந்தென்ப வாகலின்.

அஃதேல், உருவென்பது குறிப்பின்றாகலின் மெய்ப்பாடாமா றென்னையெனின், அவ்வுருவுபற்றி மனத்தின்கட் பிறப்பதோர் தருக்குண்டன்றே அதனான் அது மெய்ப்பாடெனப்படும். நிறை யென்பது, மறைபிறரறியாமை (கலி. கஙக) நெஞ்சினை நிறுத் தல். அருளென்பது, எல்லாவுயிர்க்கும் இடுக்கண் செய்யாத அருளுடையராயிருத்தல்; அதுவுங் காமத்திற்கு இன்றியமை யாததோர் குறிப்பு. உணர்வென்பது, அறிவுடைமை; அஃதா வது, உலகியலாற் செய்யத்தகுவது அறிதல். திருவென்பது, பொருளுடைமையும் பொருள் கொணர்ந்து துய்த்தலுமின்றி எஞ்ஞான்றுந் திருத்தகவிற்றாகியதோர் உள்ள நிகழ்ச்சி. அது [1] வினையுளுடைமை யெனவும்படும். இவையெல்லாம் இருவர்க்குந் தம்மின் ஒக்கும் பகுதியெனவும் இவைபற்றி மெய்ப்பாடு பிறக்கு மெனவுங் கூறியவாறு.

'வகை' என்றதனான், ஆண்மை பெண்மை என்பது பிறப் பொப்புமையெனவும், குடிமை வகையென்பது இருவர்க்கும் இள மைப் பருவத்தே தங்கிய ஒழுக்கமெனவும், பிறப்பினது வகை யென்பது அந்தணர்க்கு [2] நான்கும் அரசர்க்கு மூன்றும் வணி கர்க்கு இரண்டும் வேளாளர்க்கு ஒன்றுமெனவுங் கூறுக. இனி, 'ஏவன் மரபி னேனோர் பாங்கினும்' (உ௪) 'அடியோர் பாங் கினும் வினைவல பாங்கினும்' (உரு) தம்மின் ஒத்த பிறப்புக் காரணமாக உள்ளத்து வருங் காமக்குறிப்பு முதலாயினவுங்

கொள்க. இவ்வெண்ணப்பட்டன ஒத்துவரினன்றி அறிவுடையார்கட் காமக்குறிப்பு நிகழாமையின் இவற்றையும் ஈண்டு மெய்ப்பாடென்றோதினானென்பது. அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும் (உரு) வரும் இக்குறிப்பு முதலாயவற்றை இலேசினாற் கொண்டான், அவை பிறழ்ந்து வருமாகலி னென்பது.

உதாரணம்,

"அவனுந்தா
னேன விதணத் தபிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்

.. வினையுளுடைமை—இவினைக்காலத்தும்
செல்வம் உடையர்

போலிருத்தல்.

2. நான்கு—நான்குவருணத்தும்
பெண்கோடல் உரித்தாதல்;

ஏனையவுமன்ன.

எஅ



தேனி னிறலென வேனி யிமைழத்திருக்குங்
கானக நாடன் மகன்."

(குலி - நக) என்பது [1] பிறப்பொப்புமை.

"உள்ளினெ னல்லனே யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன வினியோள்
2 மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே."
(நற் – ந) என்பது, தலைமகன் தனது
இல்லறத்தைத் தலைமகள்மேல் வைத்துச்
சொல்லினமையிற் குடிமையாயிற்று.

"கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவுங்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவு
மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்து."
(அகம் - கூந) என்புழி, இன்ன காரணத்திற்
பிரிந்துபோந்து வினைமுடித்தன மாயினும் அவளை '
முயங்குகஞ் சென்மோ' என்றமையின் தன்
ஆள்வினைக்குத்தக்க பெண்மையான் அவள்
ஆற்றியிருந்தாளென் பதூஉம் கருதிய கருத்தினுற்
காமக்குறிப்புப் பிறந்தமையின், அஃது
ஆண்மையாயிற்று.

"என்றூ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்."
(கலி - கஅ) என்பது, [3] யாண்டு.

"முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு

4 நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்ற
கிற்பாரியார்.''

(கலி - ௬௦அ)

என்பது, உருவு.

1. இருவரும் வேடசாதியிற் பிறந்தமைபற்றிப் பிறப்பொப்புமை என்றார். நச்சினார்க்கினியர் இதனைக் குலத்திற் சிறிதுயர்ந்தாரேயினும் ஒப்பாமென்றது கானகநாடன் என வந்தமையிற்போலும். கலி - ௩௯ உரை நோக்குக.

2. மனைமாண் சுடரொடு என்றமையான் பெறப்பட்டது.

இல்லற நிகழ்ச்சி

3. யாண்டு—பருவம். என்தோள் எழுதிய என்றதனும், மைந்துடை மார்பு என்றதனும் பருவம் பெறப்படும். எழுதற்குக்காரணம் தோளிற்கொண்ட விருப்பமாதலின் பருவம் பெறப்படும். மைந்துடைமார்பு என்றதனால் தலைவனிளமை பெறப்படும்.

4. நல்லேன் என்று தருக்கிய என்றதனால் உருவாலாகிய மெய்ப்பாடு பெறப்படும்.



'' நின்மக ளுண்கண் 1 பன்மா ணோக்கிச்

சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகன்மா யந்திப் படுசுடர் அமையத்
தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள்.''

(அகம் - சஅ) என்பது, உருவுநிறுத்த காமவாயில்.

'' கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந்து.''

(கலி - ருஎ)

என்புழி, முன்னத்திற் காட்டுதலல்லது
தானுரையானென்பது தலைமகனிறையுடைமை
கூறியவாறு.

'' அவன் வயிற்
2 சேயேன்மன் யானுந் துயருழப்பேன்.''

(கலி - ருஎ) என, தன்னிறையுடைமை
காரணத்தாற் காமக்குறிப்பு நிகழ்ந்த வாறு.

3 '' பெண்ணன் றுரைத்த லெமக்காயின்.''

(கலி - ருஎ) என்பதும் அது. இது, தோழி
கூற்றன்றோவெனின், அதுவும் தலைமகள்
குறிப்பெனவே படுமென்பது முன்னர்க் (உஎகூ
) கூறினுமென்பது.

4 "தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்."
(அகம்-ச) என்பது அருள்பற்றிப் பிறந்த காமக்குறிப்பு.

"அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதரும்."
(அகம்-உஉ) என்னும் பாட்டினுள்,

1. பன்மாணோக்கி என்றதனானும், நோக்கி என்றதனானும் உருவுநிறுத்த பெறப்படும்.

அவன் ` மறைதேஎம்
காமவாயில் என்பது

2. சேயேன்—தூரியேன். உறவில்லாதேன். அவன் துயர் கண்டு துயருழப்பேன் என்றதனால் தோழியின் நிறையுடைமை பெறப்பட்டது. என்னை? அவன் துயருக்கிரங்கித் துயருழந் தமையைப் பிறரறியாமை மறைத்தமையின். இதுவும் முன்னதுந் தோழி கூற்றாதலின் இவ்வுதாரணங்கள் சிறப்பின்று.

3. நமக்காயின் நின்வருத்தத்திற்கு நானும் வருந்தினே னென்று கூறல் பெண்டன்மையன்று என்றமையின் இதுவும் நிறையாயிற்று, என்னை? தன்வருத்தத்தை மறைத்தமையின்.

4. தாதுண்பறவை—வண்டு. அதன் னெனவே அருள்பற்றியதாயிற்று.

வருத்தத்திற்கஞ்சிய

[1] "தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப."
(அகம் - உஉ)

என்பது, இருவருணர்வும் ஒத்தவாறு; தலைமகள் குறிப்பு உணர்ந்து வந்தனனென்றமையின். இது, 'செல்வம் புலன்' (உடுசு) என்புழிப் [2] புலனெனப்படாது காமத்திற்கே உரித் தாகிய உணர்வாகி வேறு கூறப்பட்டது.

"நெய்த னெரிக்கவும் வல்ல னெடுமென்றோட்
பெய்கரும் பீர்க்கவும் வல்ல னிளமுலைமேற்
றொய்யி லெழுதவும் வல்லன்றன் கையிற்
சிலைவல்லான் போலுஞ் செறிவின னல்ல
பலவல்லன் றோளாள் பவன்." (கலி - கசந)

என்பது, திருவினற் காமக்குறிப்புப் பிறந்தவாறு; என்னை? இனையனவல்லனுதல் செல்வக்குடிப் பிறந்தாரை அறிவிக்குமாக லின் அது காமக்குறிப்பினை நிகழ்த்துமென்பது. இது தலை மகட்கும் ஒக்கும்.

[3] "உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்
னிழிந்ததோ கூனின் பிறப்பு."
(கலி - கூச)

என்பதும் [4] பிறப்புவகையின்பாற்படும். பிறவும் இவ்வாறே கொள்க. (உரு)

[* தலைமகன்கண் நிகழாத மெய்ப்பாடுகள் ]

உஎச. நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
யின்புற லேழைமை மறப்போ டொப்புமை
யென்றிவை யின்மை யென்மனார் புலவர்.

இது காமக்குறிப்பாகாதன கூறுகின்றது.

---

1. இது தலைவி கூற்று. தனது வேட்கையையுடைய உள்ளத்தில் நமது வேட்கையும் வாய்ப்ப, என்றதனால் இருவர் வேட்கையு மொத்தவாறு காண்க. இது பேராசிரியர் கருத்து. அகநானூற்றுக் குறிப்புரைகாரர் வேறுபொருள் கூறுவர்.

2. புலன் என்பது கல்விபற்றிய அறிவாதலின் அது வேறு என்றபடி.

3. உழுந்து—உழுந்தம் பணியாரம். துவ்வா—அநுபவிக்கப் பட்டு இருக்கிற. இருக்கிற என்பது சொல்லெச்சத்தான் வருவிக்கப்பட்டது. கலி—உரை நோக்குக.

4. கூறுங் குறளுமாதலின் பிறப்புவகையுளடங்கின.

* இளம்பூரணர் இவை தலைமகன்மாட்டு நிகழாத மெய்ப்பாடுகள் என்பர். இருவர்கண்ணும் நிகழாதன என்று கூறுவாரும் உளர். எது *பொருத்தமென்பது சங்க இலக்கியநோக்கி ஆராய்ந்து கொள்ளத்தக்கது.



இ—ள்: நிம்பிரி — [1] பொறாமை - தோன்றுங் குறிப்பும்; அவை 'இந்நாட் சிறிது பொறுத்தாய்' என்றாற்போல்வன. கொடுமை — கேடுசூழ நினையுந் தீவினையுள்ளமும்; வியப்பு — தலைமகள்பால் தெய்வத்தன்மை கண்டான்போல் வியந்தொழுகுதலும்; இனி குணத்தின்மேற்கொண்டு தன்னை வியத்தலெனினும் அமையும். புறமொழி—புறங்கூற்றும்; வன்சொல்—கண்ணோட்டமின்றிச் சொல்லுஞ் சொற்களும்; பொச்சாப்பு — [2] கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தலும்; மடிமை—சோம்புள்ள மும். குடிமை—இவள் இழிந்த பிறப்பினளெனத் தன்னை நன்கு

மதித்தொழுகுதலும்; இன்புறல்—ஒருவரொருவரிற்றுமே இன்புறுகின்றாராக நினைத்தலும்; ஏழைமை—நுழைந்த வுணர்வின றன்றி வரும் வெண்மையும்; மறப்பு—மறவியும்; ஒப்புமை—இன் ஞளையொக்கும் இவளென்று அன்புசெய்தலும்; என்றிவை இன்மை என்மனார் புலவர் — இவையெல்லாம் [3] இன்றி வருந் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

எனவே, அவைதம்மை வரையறுத்துக் கூறாது அவற்றுக்கு ஆகாதன வரையறுத்துக் கூறினானென்பது. தலைமகட்குரிய மெய்ப்பாடாயின வரையறுத்துக் கூறினமையின் அவற்றுக்கு ஆகாதன கூறல்வேண்டுவதன்றென்பது. ஆகாதவற்றுக்கு உதாரணங் காட்டலாவதில்லை. (உகூ)

[மெய்ப்பாடுகளை அறிதற்குக் கருவி இவை எனல்] உஎ௩. கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரு

முணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி
னன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே.

இது, மேற்கூறிய மெய்ப்பாட்டிற்கெல்லாம்

புறனடை.

"எள்ள லிளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான்கு."

(உருஉ)

1. பொருமை—பொறுத்திராமை. அது சிறிது பொறுத்தாய் என்றதுஹல், பொறுத்திராமை தோன்றிற்றுப்போலும்.

2. கடைப்பிடி—உறுதி.

3. இன்றிவரும் மெய்ப்பாடு எனவே இவ்வ தலைமகன் கண்

மிகுரா என்றபடி.

II

என்புழி, நகைக்கேதுவாகிய பொருள் கூறியதல்லது அப பொருள்பற்றிப் பிறந்த நகையுணர்வு புலப்படுமாறு இன்னவா றென்றிலன். இனி, 'உடைமை யின்புறல்' (உ௯௦) என்றற் றொடக்கத்தனவினும் அவ்வாறு எண்ணியதல்லது அவை உணரு மாற்றுக்குக் கருவி கூறியதிலன். அங்ஙனமே பிறவுங் கூறிய திலனாகலான் அதனை ஒருவாற்றாற் கூறுகின்றான்.

**இ—ள் :** கண்ணானுஞ் செவியானும் யாப்புற அறியும் அறி வுடையார்க்கல்லது (உ௬௧) மெய்ப்பாட்டுப் பொருள்கோடல் ஆராய் தற்கு அருமையுடைத்து என்றவாறு.

மற்று மனத்து நிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணானுஞ் செவியானு முணர்தலெவ்வாறென்னையெனின்,—மெய்ப்பாடுபிறந்த வழி உள்ளம்பற்றி முகம் வேறுபடுதலும், உரை வேறுபடுதலு முடைமையின் அவை கண்ணானுஞ் செவியானு முணர்ந்து கோடல் அவ்வத்துறை போயினாரது ஆற்றலென்பது கருத்து.

1" இரண்டறி கள்விநங் காத லோனே
முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான நாற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
யமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே." (குறுந். ௩௧௨)

என்பதனுள், அமராமுகத்தளாகுதலும் தமரோரன்னளாகுதலும் தலைமகற்குப் புலனாகலின் அவை கண்ணுணர்வெனப்படும்.

"ஒழிகோ யானென வழிதகக் கூறி." (அகம். ௧௧௦)

என்புழி, தலைமகன்மனத்து நிகழ்ந்தவழிவெல்லாம் ஒழிகோயானென்ற உரையானே உணர்ந்தமையின் அது செவியுணர்வெனப்படும். இங்ஙனம் உணர்தலும் உணர்வுடையார்க்கன்றிப் பெரிதும் அரிதென்பான் 'எண்ணருங்குரைத்து' என்றானென்பது. (௨௭)

மெய்ப்பாட்டியல் முற்றிற்று.

1. இரண்டறிகள்வி என்னும் பாடத்திற்கு இருவேறுகலாற்றை அறிந்த கள்ளத்தன்மையுடையாள் என்பது பொருள். இரண்டறிகளவின் என்னும் பாடத்திற்கு இரண்டாந்தன்மையள்; அறியப்படுங் களவின்கண் என்பது பொருள்.

இரண்டாந்தன்மை—நம்மோரன்னளாதலும், தமரோரன்னளாதலும்.

# மெய்ப்பாட்டியல்

# உதாரணச்செய்யுளுரை

———•———

## உ௫உ-ம் சூத்திரம்

1. (அவன்றான் குறையுற்று நிற்கின்ற காலத்து) யான் தன்னை இகழ்ந்து சிரித்தாலும் பலகாலும் வருவான். இது தோழி தலைவிக்குக் குறை நயப்பித்தது.
(கலி. 61)

2. (மனைப்புறத்தே வந்துநின்ற எந் தலைவனைக்கண்ட அன்னை யானவள்) என்னை நோக்கி நீ மிகவும் நல்லை எனக்கூறி நக்குச் சென்றாள். இங்கே அன்னைக்குத் தன்னைத் தன் மகள் இகழ்ந்தாள் (மதித்திலள்) என்பது காரணமாக நகை பிறந்தது. இங்கே தலைவி கூற்றைத் தன் கூற்றாகத் தோழி கூறினாள் என்க.
(அகம். 248)

3. நம்மாற் சிரிக்கத்தக்கார் இவன் ஆளும் நாட்டை மிகுத்துச் சொல்லுவார். சிரிக்கத்தக்கார் என்பது வெகுளிபற்றி வந்த சிரிப்பு.
(புறம். 72)

4. நினது பொய்ந்நடுக்கத்தைக் காணும்படி. ஒரு விளையாட்டைக்குறித்துக் கூறினார் அன்றி, உண்மையாகக் கூறினரல்லர் என்றபடி. நகை - விளையாட்டு. இது தோழி கூற்று. (கலி. 13)

(தன் இளமை என்றதில் தன் என்றது தலைவனை.) தொல்— உரை.

5. (இது தனக்குப் பின்புறம் வந்துநின்ற தலைவனைக்கண்டு நக்கபுதல்வனை நோக்கித் தலைவி கூறியது) இந்த நன்குமதிக்கும் மகனல்லாதவள் பெற்ற மகன், நற்குணங்களல்லாதவற்றை நீ பொவ்வாதேகொள் என்று யாங் கோபிக்க யாரைநோக்கி நகும். இது தலைவி கூற்று. இது தன் இளமை பொருளாக நகை பிறந்தது. தன் என்றது புதல்வனை.

(கலி. 86)

6. நாவாற் பழகாத (பிறர்) நகைக்கத்தக்க இனியசொல்.

இது பிறரிளமை பொருளாக நகை பிறந்ததற்குதாரணம். தொல் —உரையுள் பிறர் என்றது புதல்வனை. புதல்வன் இளமைச் சொல் காரணமாக நகை பிறந்தது என்றபடி. நாவொடு பயிலாத தீஞ்சொல்-மழலை, நகை - மகிழ்ச்சிநகை. (அகம். 16)

7. ஒரு சிரிப்பு வார்த்தையைத் தோழியோ நீ கேள். இது தோழி கூற்று. (அகம். 248)



8. பாணன் மயக்கம் பொருந்திய மனத்தையுடையோனைத் தொழுது நின்றது எனக்குச் சிரிப்பாகின்றது. இது தலைவி கூற்று. பிறன்பேதைமை - பாணனாகிய பிறனது பேதைமை. (அகம். 56)

9. யாம் உம்மோடு மகிழ்ந்து சிரித்த தூய வெள்ளிய பற்கள். இது தலைவி கூறியது. (குறுந். 169)

10. நேரே குறிக்கொண்டு நோக்காத் துணையல்லது ஒரு கண்ணை சிறங்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் தன்னுள்ளே மகிழாநிற்கும். சிறங்கணித்தல் - சுருக்குதல்; போல என்றதனால் வெளிப்படாமல் நோக்கினாள் என்பது பெறப்படும். இது பரிமேலழகர் கருத்து. (குறள். 1095)

11. பெருமை பொருந்திய மெல்லிய தோளையுடையாள் (தலைவி) நம்மொடு தாம் வருமென்ப. அது குறித்து நாம் நகையுடையேம். நாணகையுடையோர் என்றும் பாடத்திற்கு நாளும் நகையுடையம் என்க. (அகம். 121) (தலைவியின் மடத்தை நினைத்துச் சிரித்தமையின் பிறர்மடமென்றார். தொல் - உரை.)

12. சிறிது உள்ளத்தெழுந்த

வாய்மையல்லாத சிரிப்பை யுடையவள். (உண்மையல்லாத சிரிப்பாதலின் உள்ளத்தோடு பிறவாத நகையென்றார்.) (அகம். 5)

## உருரு-ம் சூத்திரம்

1. சந்தனக்குழம்பாலெழுதிய தொய்யிற்கோலஞ் சிதைய அழுதனளாய் ஏங்கி அழுத்திவிட்டதுபோல உருவுகொண்டதே மலையும் பலமுறை நொடித்தலாற் சிவந்த மெல்லிய விரலையும் பலமுறை நெருடுதலாற் கூரிய நுதி மழுங்கிய எயிற்றையுமுடையளாய் ஊர்முற்றும் நின்னியல்பைச் சொல்லிவருவாள். (அகம். 176) அத்தகைய அவள் நின்னைக் காணும்படி செல்வாய். இது தோழி சொல்லியது. தன் என்றது பரத்தையை. (தொல்—உரை)

2. கயம் - குளம். உண்கண் - மையுண்ட கண். உரைக்கல்லான் - உரையான். பெயரும் - வந்துசெல்லும். அவனுக்கு உறவில்லாதவளாகிய யானும் வருத்தத்திலே வீழ்ந்து அழுந்துவேன். (கலி. 37)

இளிவரல்-எளிமை.
அவலம்-அழுகை. (தொல்—உரை) இவ் வவலம் கருணைபற்றி வந்தது; என்னை? தலைவன் இளிவந்தொழுகல்பற்றிப் பாங்கி இரங்கினமையின்.

3. கண்ணினின்றுஞ் சொரிகின்ற நீரே நீராகக்கொண்டு சாணகத்தான் மெழுகுவாள். ( புறம். 249 ) இழவு - கணவனை இழத்தல் (தொல்—உரை)



4. ஐயோ என்று யான் அரற்றின் அவ்வுரைவழி வந்து புலி தாக்குமென்று புலிக்கு அஞ்சுவேன். இது, கணவனையிழந் தாள் காட்டிற் கணவனுடம்பைத் தழீஇநின்று கூறியது.
(புறம். 255)

5. தெய்வத்தை ஒத்த கற்பொடு மடம்பொருந்த மெலிந்து நின் வருத்தத்தினிடத்தாயுமல்லை. அச்சம் வர எத்தன்மையாகு வாளோ? இவள் அளிக்கத்தக்காள் என்று என் வருத்தத்திற்கு இரங்கும் நின்னொடு யானும். இது தோழி கூற்று. என்பொருட்டு வருந்தினளென்றுதோழியழிவிற்குத் தலைவி இரங்கினள் ஆதலின் அதனை உட்கொண்டு என்னழிபிரங்கும் நின் என்றாள் என்க.
(அகம். 73)

6. இது மடலேறுகின்ற தலைவன் சான்றோர்க்குக் கூறியது. ஒருத்தி மயங்கினமழைக்கு நடுவில் மின்னுப்போல வந்து தோன்றி தன்னொளியோடே தன்னுருவையும் என்னைக் காணப் பண்ணி என்னை அளிக்குந்தன்மையளாய் அளித்துப் பின்னர் என்னெஞ்சைத் தான் வரும் வழியாகக் கொண்டுவிட்டாள். அதனை முதலாகக்கொண்டு துயிலேன். (கலி. 139)

7. மனையின்கணியங்கும் மடப்பத்தையுடைய மயிலை அகப்படுத்திக்கொள்ளும் சொல்லாகிய வலையுடைய வேட்டைக்காரனையிவன் முன்பு; இதுபொழுது அள்ளிலைத் தாளிகொய்யாநின்றான். இது தாபதவாகை என்னுந் துறை. (புறம். 252)

8. பாலின்மையின் தோலாகித்திரங்கி துளை தூர்ந்த பொல்லாத வறிய முலையை வறிதே சுவைக்குந்தொறும் அழுகின்ற தனது பிள்ளையினது முகத்தைப் பார்த்து நீரால் நிரம்பிய ஈரிய இமையையுடைய குளிர்ந்த கண்ணையுடைய என்மனைவியது வருத்தத்தைப் பார்த்து (இந்த வருத்தந் தீர்த்தற்குரியாய் நீயென) நினைந்து நின்பால் வந்தேன், நல்ல போரையுடைய குமண! இது காடுபற்றியிருந்த குமணனைப் பெருந்தலைச்சாத்தனார் சென்று பரிசில் கடாயது. (புறம். 164)

9. (யானையை வெட்டி வீழ்த்திய வாள்வெற்றியராய் எந்தலைவரொடு கிடந்தார் எம் புதல்வர்.) இப்பெற்றிப்பட்ட வென்றியும் உளவோ நமக்கென்று சொல்லி முதிய மறக்குடியிற் பிறந்த பெண்டிர் இன்புற்று உவகையால் அழ அதுகண்டு நாணித் கூற்றம் இரங்கிய போர்க்களம். (புறம். 19)

### உருஎ-ம் சூத்திரம்

1. பூண்செறிந்த தலையையுடைய பரிய தண்டுக்கோலை ஊன்றித் தளர்ந்து இருமல் இடையே நெருங்கின சில வார்த்

[மெய்ப்பாட்

தையையுடைய

பெரியமுதுமையையுடையேமாகிய எங்களுக்கு.
(புறம். 243)

2. புதல்வன் தாயேயென்று வஞ்சனையமைந்த பொய்ம் மொழிகளை அவர்தம்மிடத்திற் சாய்ந்து எம்பாற் பலகாற் சொல்லி எம்முதுமையை யெள்ளாதேகொள். அம்முதுமைக்கு நாங்கள் பொருந்துவோம். இது தலைவி கூற்று. (அகம். 6)

3. முதுமையுற்றுத் தலைவணங்கிய நின்னோடு போர்த்தொழிலைச் செய்தற்கு நாணுவேன், அதனல்.

யானும்

4. வாடைட்யே நீ இமயத்தையும் துளக்கும் இயல்பினை யுடையாய். துணையில்லாதவர்; இரங்கத்தக்கார்;பெண்கள்; அவர் களோடு மாறுபடுமிஃது என்ன பயனைத் தரும். (குறுந். 158)

5. கிழக்குக் கடலின் அலையிடத்தான பறத்தல் வலிகெட்ட நாரை வலிய தேரையுடைய சேரனது 'தொண்டி' யென்னுமூரின் முன்றுறையிடத்துள்ள அயிரைமீனாகிய அரிய இரையை விரும்பினாற்போல சேயனும் அரியனுமாயினானை உள்ளினை; கிட்டாமையின் நோயையுடையையாயினாய் நெஞ்சே நோயைத் தரும் ஊழினையுடையாய். (அணவரல் - தலையை எடுத்தல் என்பது சாமிநாதையர் உரை.) இது அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகள் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது. (குறுந். 128)

6. வருத்துதலால் வருந்துந்தகையளென யான் அவனை அறிவேன். அவள் தன்னை அத்தகையளென அறிந்திலள். (குறுந். 337)

இது இரந்து பின்னின்ற தலைவன் கூற்றாதலின் தன்கட் டோன்றிய உயர்ச்சிபற்றி வந்த இளிவரலென்றார்.

7. என்னிடத்து ஒரு காரியத்தை இரந்து நிற்பான்போல தன்னைப் பிறரா விகழப்பட்டு எளியனாந்தன்மை தோன்றவும் சிலமொழி கூறும். இது தோழி கூற்று. (கலி. 47)

8. இவர் நம்மில் வலியரென்று கருதி அவர்க்கு வழிபாடு கூறியறியான். இவர் நம்மில் எளியரென்று கருதி அவரின்கண் மிகுத்துச் சொல்லியறியான். (புறம். 239)

9. ஒரு கையையுடைய யானையை எறிவேனோ? யானும் இரு கையினைச் சுமந்து வாழ்வேன்.

௨௫௫-ம் சூத்திரம்

1. தினைப்புனத்தில் ஒருபால் நின்றோனாகிய மலர்தார் மார்பனைக் கண்டோர் பலர். தோழியே! அவருள் அரிய இருட்

கங்குலில் படுக்கையொடு பொருந்தி நீர்வாரும் கண்ணோடு நெகிழ் தோளினையுடையேன் யாதொருத்தியுமே. அங்ஙனமா தற்குக் காரணம் என்னையோ? (அகம். 82)

2. நல்ல மந்தித்திரள் ஆச்சரியப்பட்டு நோக்க மூங்கில் வளராநின்ற மலைப்பக்கத்து உலாவியாடும் மயில் விழவுக்களத் திற் புக்கு நடிக்கின்ற விறலிபோலத் தோன்றுகின்ற நாட்டை யுடையவன். (அகம்.82)

3. நிலத்தினும் அகலமுடையது; வானினும் உயர்ந்தது; கடலினும் அளவிடற்கரிய ஆழமுடையது; சாரலிடத்து வலிய தண்டையுடைய குறிஞ்சிமரத்தினது மலர்களைக்கொண்டு பெரிய தேனைச் செய்யும் (மலை) நாட்டையுடையவனொடு தலைவனோடு நட்பு. (குறுந். 3)

இது தலைமகள் கூற்று.

4. குவளைமலரையணிந்த ஒதியையும் முத்துமணிபோலும் நகையையுமுடைய பேதைத்தன்மையையுடையாளது திரண்ட கச்சினையுடைய முலையினை ஏந்திநும் கடைவிழியிற் சிறந்த கரு மையையுடைய நெடிய கண்களையுடைய அப்பேதையினது இடையினும் சிறியதொன்று இல்லை.

இது இடையின் சிறுமையை வியந்தலின் பிறன்கட்டோன்

றிய சிறுமை வியப்பு.

5. எருமைபோலும் வடிவையுடைய கரியகற் பொருந்திய இடந்தோறும் பெற்றம்போலப் பரக்கும் யானையையுடையவாய் வலியையுடைய காட்டிற்குள்ளாகிய நாட்டினையுடையாய்! நீயோ பெரும! (புறம். 5)

6. கிள்ளியெடுக்கும் அளவினையுடையதொரு ஆலம்வித்து முளைத்து கொம்பர்களால் நெருங்கி மிகநிழலைப் பயந்தாற் போல. (நாலடி. 28)

7. சதங்கை களைந்த காலிலே ஒள்ளிய வீரக்கழலைக் கட்டி இது சிறியோன் தொழில். (புறம். 77)

8. அவ்வியல்பினையுடையானொருவன் தன்னுண்டகைமையைக் கைவிட்டுச், சுடரிழாய்! என்னை நோக்கிக் கூறும் பல காரியங்களும் மாட்சிமைப்படுஞ் சொல்லைக் கேட்பாயாக. (கலி. 47)

உருசா-ம் சூத்திரம்

1. யானைவந்து தாக்கினும் பாம்பு தன்மேல் வரினும் வலிய இடியேறு ஒலிப்பினும் தன்கருமாறுத மறத்தன்மை பூண்ட வாழ்வையுடைய. (பெரும்பாண், 134)

2. யாம் நின்னைக் காணுமிடத்து வெருவுவோம், ஆதலால், எங் கூந்தலைத் தீண்டாதேகொள். நீ நீங்கென்றாள் தலைவி.

தலைவனைக் கள்வர்போலச் சார்த்தியுரைத்தமையின் கள்வர் பொருட்டுத் தோன்றிய அச்சமென்றார். நச்சினார்க்கினியர் வெருவுதலென்னும் மெய்ப்பாடென்பர். (கலி. 87)

3. கழுத்தையெடுத்து மேல்நோக்கின் வாழமாட்டேமென்னுங் கருத்தினாலே கைகூப்பி வணங்கிப் பழகிக் கழுத்தை வளைத்துத் (தலையிறைஞ்சிக்) கடுமான்றேர்க்கோதையின் கால் வண்ணமேயன்றி மேல்வண்ணம் கண்டறியமாட்டா அரசுகள். கோதை—சேரன். (இ. வி. ப. 124)

4. ஆராய்ந்து நான் செய்யாதவற்றைச் சொல்லிச் சினவாதே. நின்னாணையைக் கடப்பார் யார்? ஆணை—கட்டளை. (கலி, 81)

5. அழகு விளங்குகின்ற சாந்தினோடு அழகிய பட்டிமைப்ப வளைந்த குழையையணிந்த மகளிரைப்போல ஒடுங்கியிருக்கின்ற இருக்கை. (அகம். 236)

6. அச்சமே வழியாக உணர்ந்தும்படி வருபவனுடைய பொய்ச்சூளுக்கு அஞ்சிப் புலவேனுருகுவேன். (கலி. 75)

## உ௫௭-ம் சூத்திரம்

1\. நாவினாலே வார்த்தைசொல்ல வல்லார் முன்னே சொல்

ஓதல் வல்லேனாகிய என்னைப் பிறர்முன்னே ஒன்றையுங் கல்லாத தன்மையேனாகக் காட்டியவள். 'வல்லோர் முற்சொல் வல்லேன்' என்றது தன் பெருமிதங் கூறியது. (கலி. 141)

2\. போர்புரிந்து வெற்றியையுடைய குதிரை மீதே யிருந்து

போர்த்தொழிலை நடத்துவேனாகிய என்னை அம் மாவல்லாத மடன்மாவிலே யேறி அக்களத்தேயன்றி மன்றின்கண்ணே தன்னை உள்ளுவித்தவள். அடன்மா மேலாற்றுவேன் பற்றிவந்த பெருமிதம்.

என்றது தறுகண்
(கலி. 141)

3\. நீங்காத காதலையுடையராயிருஞ் சான்றோர் பழியொடு

வரும் இன்பம் விரும்பார்.

எனவே புகழொடு வருமின்பத்தை விரும்புவர் என்றமையால் புகழ்பற்றிவந்த பெருமிதங் கூறியவாறு. (அகம். 112)

4\. உலகத்தையெல்லாம் பாதுகாத்தலை முயலும் உள்ளத்தையுடையோனாகிய என்னை ஒருவர்பால் ஒன்றை யிரத்தலை

முயலும் இன்னாதாகிய வருத்தத்தைச் செய்தவள். 'புரவூக்கும் உள்ளத்தேன்' என்றமையின் கொடைபற்றிய பெருமிதம். (கலி. 141)

5. தன்னகம் புக்க குறிய நடையையுடைய புறவின் அழிவிற்கு அஞ்சித் துலைபுக்க, வரையாத ஈகையையுடைய வலியோனது வழியிலுள்ளாய், இதுவுமது. (புறம். 43)

6. பலவகைப்பட்ட கரிய கூந்தலையுடைய பொதுப் பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடை என் மாலை துவள்வதாக. தார்குழைக என்றது துவளாமை குறித்தலின் காமம் பற்றிய பெருமிதம். (புறம். 73)

உருஅ-ம் சூத்திரம்

1. முறம்போலுஞ் செவியாகிய மறைப்பிடமாக வந்து பாய்ந்து மாறுபாட்டைச்செய்த புலியைக் கோபித்து. (கலி. 52)

எனவே புலி பாய்ந்து தன்னுறுப்பைக் கடித்தலால் உறுப் பறையான் வந்த வெகுளி என்றார்.

2. நின்மகன் படைக்குத் தோற்றுப் புறங்கொடுத்தான் என்று பலர் கூறக்கேட்டு, என்மகன் மண்டியபோரிற் புறங் கொடுத்தானாயின் அவன் பாலுண்ட முலையை யறுத்திடுவேன் யானென்று கோபித்து. (புறம். 278)

3. நேற்றுப் பகல் நின்னால் எறியப்பட்டவனுடைய தம்பி அகலினிடத்துப்பெய்த குன்றிமணியைப்போலக் கோபத்தாற் சுழலுங் கண்களையுடையனாகி. (புறம். 300)

4. புலியைப் பொருத வலிய

இன்னுமாறாது கோபம்.

களிற்றின் சினம்போல

(புறம். 100)

5. எனது மிக்கவலிக்கு அஞ்சாதே மாறுபடுஞ் சினம் பெருகிப் புல்லிய வார்த்தைகளைக்கூறிய சினம்பொருந்திய அரசரை. (புறம். 72)

6. யான்செய்த தவறில்லாதவிடத்து

பாய்.

எங்ஙனஞ் சினப்

(கலி. 87)

7. நெருப்புத் தன் வெம்மையாறுதற் கேதுவாகிய நிணமடைந்த கொழுவிய தடி (இறைச்சி). எரியாது பூத்துக்கிடக்கும் தழல்போலும் நிணந்தங்கு கொழுங்குறை எனினுமமையும்.
(புறம். 125)

12



## உருகூ-ம் சூத்திரம்

1. நீதான் வலியுடைத்தாகிய மனத்தையுடையை. தேடும் பொருளைத் தேடிமுடித்த செல்வத்தான் உண்டாகும் பொருட்டான் இவ்வின்பமென்று கூறுகின்றவனே! (கலி. 12)

2. நல்ல கலங்களைப்பெற்ற மகிழ்ச்சியை யுடையார். கலம்—ஆபரணம். என்பது வன்மையானும் மகிழ்ச்சி.

3. பெண்டிரது நலத்தை நுகர்ந்து தண்ணியமலைச்சார விடத்துத் தாதையுண்ணும் வண்டு அப்பூவைத் துறக்குமாறு போல அவளைத் துறக்கின்றவனுடைய மலை. முகைப்பதம்—அலரும் பருவம். நகைப்பதம்—தன்னொடு நகையாடி இன்பம் நுகர்தற்கேற்ற பருவம். (கலி. 40)

4. தம்முட் பகையில்லாரும் கூரிய அறிவுடையாருமாகிய கல்விப்பெரியார் தம்முட்கூடி மகிழ்தலினும் இன்பமுடைத்தாயின் தேவருலகை யாம் பார்ப்போம். (நாலடி. 14-7)

5. வடித்த நரம்பையுடைய யாழைப்போல இனிய மொழிகளைக்கூறி வளையினது முட்டுவாயின் வடுப்பொருந்த எம்மைக் கூடினுள். (அகம். 142)

6. யாம் துயிலின்றி யாமக்கடலை நீந்தத் தான் மயில்போலும் இயலினையுடைய பரத்தையர் மருவுதலை நுகர்ந்து அவருடனே பழகிய புனலையுடைய மடுக்களையாடி. நாணமு மறந்து அவளிடத்தே மயங்கிருப்பான். (நச்சினார்க்கினியரால் புனல் தொழுவை என மாற்றிப் பொருள்கொள்ளப்பட்டது. மடுவிலுள்ள நீராடி. என்று நேரேயும் பொருள்கொள்ளலாம்.)

(கலி. 30)

## உகூக-ம் சூத்திரம்

1. யான் தன்னை நோக்குங்கால் (நாணி) நிலத்தை நோக்குவான்; யானோக்காக்கால் தான் என்னை நோக்கி மெல்ல நகுவான்.

(குற. 1094)

2. பெரிய புழுக்கத்தையடைந்த பிறைபோலும் நெற்றியின்கண் எழுந்த புள்ளியமைந்த வியர்வையைச் சிறிய காற்று ஆற்றச் சிறிதுபொழுது இருப்பாய் என்று தலைவன் கூறு.

(அகம். 136)

3. முகையது முகிழ்ப்பினுள்ளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல நின்பேதை என்னொடு நக்க நகையது முகிழ்ப்பினுள்ளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு.

(குறள். 1274)

4. நும்மொடு நகைத்த வெள்ளிய எயிறு. இது தலைவி கூறியது.

(குறு. 169)

5. அகத்தே பொலிந்த மகிழ்ச்சியளாய் நாணினால் முகத்தை வளைத்து விரைய வணங்கினள் (தாழ்த்தாள்). (அகம். 86)

யான் தன்னைக் காணுந்தோறும் தான் பெரிது மகிழ்வாளாய் (மிகுதி மகிழ்ந்தவளாய்) ஒளிபொருந்திய நுதல் வியர்ப்ப நாணித் தலை வணங்கி அதிகம் வெளிப்படாது ஒருதலையுடைய முகத்தை மறைக்கு நல்ல நெற்றியையுடைய பெண்ணின் மனஞ் சிதை வற்றமையை நெஞ்சே யறிந்திலை; அது உண்மையாதலை யானறிவேன். (இலக்கண. பக். 592)

1.

## ௨௯௨-ம் சூத்திரம்

விண்ணின்கணுயர்ந்த வலியமலையின் பக்கத்தே ஒருவன் கன்றுநோக்கியதன்றி என்னொடு குனிச உரையாடியதுமில்லை. அவன் மலையுறை தெய்வமுமல்லன். அவன் கன்றுநோக்கிய

அதற்கே ஓதிக்கு முற்பட்டுக் காது ஒருகுழை நெகிழ, ஒளிவிளங்கு கின்ற மணியாற்செய்த பூண்கள் நெஞ்சொடும் கழல, உடையும் பலதரம் நெகிழ்ந்து சோர்வுற்றன. அதன்காரணம் நீயறிகுவாய்.

அந்நோக்கினியல்பு கூறுமாறு எமக்கு எத்தன்மையது.

## ௨௯௩—ம் சூத்திரம்

1. யான் தனது கூந்தலையும் நுதலையும் நீவி அழகிய மெல்லிய மூக்கினை வருடலினால் மனங்கலங்கி உடம்பும் உள்ளம் போல உருகுபவன்போல அல்குலின் மேலணிந்த செறிந்த நூலையுடைய வஸ்திரத்தோடு சாருமிடமறியாது பெரியாதவன்போல் வாளாய் வலிந்து பொய்யுற்றனைசெய்து ஒடுங்கவும் யாமெடுத்து அணைக்குந்தோறும் தாமே உடன்பட்டெழுதலின் வேய்போலும் மென்றோள் நீண்ட அரிபரந்த கண்களையுடைய பேதையோடு நம்மை இம்மையுலகத்தன்றி உம்மையிலும் கேளாந்தன்மையை அறிந்தனபோலும்.

உசுசு-ம் சூத்திரம்

1. ஒருநாள்போலப் பலநாளும் வந்து வருந்தும், நின்னை யொக்கும் நினது தலைமையும் என்னிடத்து நின்னைப் பாராட்டியும் யான் சொல்லுஞ் சொல்லை ஏற்றுக்கொள்ளாதும், நாய் எதிரே கழறி யுரைத்தலினாலே பெரிய அவருக்கு நாணியும் மயக்கமடைகின்ற மாதினுக்கு அவள் துயரை நீக்கும் மருந்தாயினும்; இவிடத்து நீ தொடக்கிதலினாலே (அவனுக்கு) நோயைச் செய்தற்கேதுவாயது. நோய்செய்தது அதனால் நின்றலைமையும் நின்னையொக்கும் என முடிக்க. (இ. வி. ப. 533)

உ௬௫-ம் சூத்திரம்

1. தாய் இவளை வருந்த நோக்குந்தோறும் நடுங்கும் நெஞ்
சினல் அவட்கு அறிவுறுத்தலின் நின்னெதிர் வருதற்கு நாணி
மனைவயிற்பிரியலாளுள். அதனை நீயறியாய்போலும். அவள்
மனையிடத்தினின்று பிரியாத அதனல் புனைதார்மார்ப! என்
நினைவிலள் அவள் என்று கூறுகின்ருய். உன்னைக்கண்ட இப் பொழுது அவள் பசலைநீங்கி உவகையடைந்தவாற்றைக் காண்
பாய். (இ. வி. ப. 534)

உ௬௬-ம் சூத்திரம்

1. இவள் யான் அணியினும் பூசினும் பிணியுழந்து வருந்திப்
பல சுற்றத்தின் நடுநிற்பினும் நில்லாதவள்போல (தனிமை

யுழ்று) சொல்லும்வகையறியாளாய்ப் பொழிகின்ற கண்ணீரைத் துடைத்து யானே செயலற மனஞ்சுழல்வாள் நின்னைத் தெளியுமாற்றை இறைவனே சொல்வாய்.

## உகூஎ-ம் சூத்திரம்

1. ஆயர்மகன் ஆயத்தோடே நாமாடுங் குரவைக்கூத்திலே நம்மை அருமைசெய்தான்போலே நோக்கி நமக்கு வருந்தத் தகும் நோயைச்செய்தல், நிறத்தையுடைய கண்ணையுடைய கொலேயேற்றை யான் கொண்டேன் என்று மனச் செருக்கன்றோ? அது வேறொன்றல்லவே என்றாள். இது புகுமுகம் புரிதல். எமக்கு வருத்தத்தைச்செய்தல் என்றதனால் இவளும் எதிர்நோக்கினள் என்பது பெறப்படும். (கலி. 104)

2. தானட்ட புளிப்பாகரை இனிதென்று கணவனுண்டலின் ஒள்ளிய நுதலையுடையாளது முகம் நுட்பமாக மகிழ்ந்தது.

(குறு. 167)

3. நெஞ்சே இவனைப் பொய்சொல்ல விடேமென்று மாறு பட்டுக் கோபிக்கின் தப்பினேனென்று வணக்கஞ்செய்தலும்

இவனுக்குப் பரிகாரமுண்டு. ஆதலான் நம்மை மறந்து ஒருகாலமும் நாம் மாட்சிமைப்பட்டிருக்க நினையாத நாணமில்லாதவனுக்கு இவ்வூடற் போரைத் தோற்று அதனாலுள்ள பயனைக் காண்பாய் என்று ஊடல் தீர்ந்தாள். (கலி. 89)

4. நின்னுடைய பாணன் நோவுசேர்ந்த திறப்பண்ணைப் பண்ணி எம்முடைய மனையிடத்தே நீசென்று சேர்ந்த பரத்தையர் மனையை என்னைக்கேட்டு வராதிருத்தலை யான்பெறின். (கலி. 77)

5. எமது அன்னையின் கழற்றுரைக்கும் உய்வேம்; சிறிதும் இரக்கம் பொருந்தாத வியல்போடுங்கூடிய பொய்ம்மொழியைக் கூறுகின்ற சேரிப்பெண்டிரின் அலரையுநீங்குவேம். (அகம். 65)



உகூஅ-ம் சூத்திரம்

1. காவலரறியாமற் தன்னைவிரும்பும் உள்ளத்தே எம்மேலுள்ள வேட்கை வாய்ப்ப

இனிய உயிருங்குழைய முயங்குந்தோறும் உடம்பு பொலிந்து இளைத்த நோய்தணி காதலர் ஈண்டு வர வேலன்பொருட்டு எந்நோய் தணித்தமையை அறிந்து யான் நக்கேனல்லனோ? தோழீ! முயங்குதொறும் நக்கனனல்லனோ என்க. (அகம். 22)

தமது வேட்கைபொருந்திய உள்ளத்தே எமது வேட்கையும் வாய்ப்ப என்று பொருள்கொள்வர் பேராசிரியர்.

2. புணைந்து வருதலையுடைய இளமுலை அழுந்தவும் பல முறை தொடி விளங்கும் முன்கை வளைந்து புறஞ்சுற்றவும் நின் மார்பைக் கூடுதலின் இன்பமாகின்றது. (அகம். 58)

3. தண்ணிய மழைத்துளிக்கேற்ற பகரம் உழுது சிவந்த வயலின் மண்போல நெஞ்சு நெகிழ்ந்து அவனைக் கலுழ்ந்து நெஞ்சு கீழற்றுப்போன அறிவுடையேற்கு. (அகம். 26)

4. வளை நெகிழ்ந்தன. தோள் மெலிந்தன. (குறுந். 239)

உ௫௦-ம் சூத்திரம்

1. ஊதிப் பழகாத கோவலர்கள் (சிறுவர்) ஊதுகின்ற வலிய வாயையுடைய சிறிய வேய்ங்குழலோசை வருத்தாக்கால்.

(அகம். 74)

கல்லா—என்னை வருத்துமென்றறியாத எனினுமாம்.

2. இரவில் மனையைச்சேர்ந்த பனையிலுள்ள மடிந்த வாயை யுடைய அன்றில் தன் சேவலாகிய ஒன்றுபிரியினுந் துயிலாது காண். அங்ஙனமாக நான் பிரிந்து யாதுசெய்வேனென்று கண்கள் நிறைந்த நீர்கொண்டு (பின் அதனை அரித்து) மறைப்பாள்.

(அகம். 50)

3. நினது மிக்க துன்பை நீக்கிறேன் தனது மிக்க துன்பத்தை நீக்குவாளோ.

(அகம். 170)

4. எந்தலைவர் தேர் வாராதாயினும் வந்ததுபோலக் காதி ணிடத்து ஒலிக்கும் ஒலியானே தோழி எங் கண் துயிலை மறந்தன.

(குறுந். 302)

5. தாரையணிந்த மார்பனே ! நீ பிரிந்தகாலை வாரார்கொல் என்று துயருறுவாள். (அகம். 150)



6. அன்னாய் வாழி. நான் சொல்வதை விரும்பு. அன்னை யாகிய நின்மகள் பாலுமுண்ணுகின்றிலள். துன்பங்கொண்டு மிகவும் நிறம் வேறுபட்டாள். என்று வினவுகின்றாய்.
(அகம். 48)

7. இப்பொழுது
செய்யேன்.

உண்ணுதலுஞ் செய்யேன் ; வாழுதலுஞ்
(கலி. 23)

8. கன்றுமுண்ணாமலும் கறக்கும்
பாத்திரத்திலும் பொருந்

தாது நல்ல பசுவின் பால் நிலத்திலே சொரிந்து (பயனின்றிக் கழிந்ததுபோல்) என்றலைவற்கும் பயன்படாமலும் எனக்கு மாகாமலும் தேமல் பரந்த அல்குலையுடைய மாந்தளிர்போலும் நிறம் பசலை பரத்தல்வேண்டும். (குறுந். 27)

. 9. இனிய பாலையூட்டினும் அதனை வேம்பினுங் கைத்து வெறுப்பாள். நீ வாராதொழிவாயாயினும் உன்வருகையை விருப்போடு நோக்குவாள். எந்தலைவி நின்னினுஞ் சிறந்ததொன் றிலள். எனது சொல்லினும் லெப்படி?

அமைகின்றிலள் - இதனைப்படுத
(இலக். பக். 537)

10. வளைநிலை நெகிழ மெலிந்து என தோள்கள் அவர்

கொடுமையைக் கூறியவாயினும், தோழீ! கொடுமையோ நல்வரை நாடன்கண் இல்லை. அவர் என் நெஞ்சிற் பிரிந்ததுமிலர்; யாம் மெலிய எமது நோக்கத்திருத்தலை நீக்கியதுமிலர்.

(இல. ப. 466)

11. தோழியே! முற்றிய கதிரையுடைய தினைப்புனத்தின் ஒருபக்கத்தில் நின்றோனாகிய பரந்த தாரையணிந்த மார்பனைக் கண்டோர் புலர்தில். அவருள் அரிய இருட் கங்குலிலே படுக்கையொடு பொருந்தி நீர்வடியுங் கண்ணோடு நெகிழ்ந்த தோளையுமுடையேன் யானொருத்தியேயாகுதல் என்னையோ! (அகம். 82)

12. நின்னைப் பிரிந்தவிடத்து வருந்தி உயிர்வாழேனென்று கூறினவனைப் பிடித்துக்கொண்டு நீகொண்ட என்நலத்தை இனித் தாராயென்று வளைத்துக்கொள்வேன்போலவும், அவ்விடத்தே என்னுடைய கரிந்த அழகை யான் பெறும்படி புல்லிக் கூடி இனி வருந்தாதேகொள் என்று என்னையும் அளிப்பான் போலவும் (கனவிற் கண்டேன்). (கலி. 128)

13. ஐய நின் மார்பினிடத்து நீ விரும்பாத முயக்கம் கனவின்கண் வரப்பெற்ற செல்வத்தனையதொன்றாயிருக்கும். (பயனில்லை என்றபடி) (கலி. 68)

14. தான் சூளுற்ற சூளுறவினைப் பாதுகாத்தவனாய்ப் பொய்த்தவனுடைய மலையாயிருந்தும் மழைபெய்தலால் விளங்

டியல்]

## பொருளதிகாரம்

. கூரு

கும் அருவியையுடைத்தாயிரா

வியப்போ).

நின்றது. (இஃது என்ன

(கலி. 41)

15. தலைவர் வருவேமென்ற நாளும் பொய்த்தன; வரி பொருந்தியமையுண்ட கண்களில் நீரும் நிற்கின்றில. (அக. 144)

16. கழங் காடலை ஆடும் நம்மாயத்தார் நடுவே அன்று நமக்கு அருளிய பழங்கண்ணோட்டம் தன்னை வருத்தலால், செய்த தன்மணத்தைச் சிறிது தவிர்ந்தானல்லனோ. (அகம். 66)

17. ஒரு தூதாயினும் அவர் வரவிடாராய்த் துறப்பாரோ? துறவாரோ கூறாய். குயிலும் நோவுதரும்படியாகக் கூவும். குயில் கூவும் என்றதனால் அவர் குறித்த வேனில் வந்ததெனக் குறிப்பித்தாள்.

18. தலைவன் பரத்தையர் ஊரினிடத்தான்போலும். அவனைத் தேரும் பாணன் நந்தெருவின்கண் நிற்கின்றான்.
(இல. ப. 537)

19. தலைவர் நாட்டு மலையிலே நேற்று மாலையிற் பெய்த வெள்ளத்தாரையாலாகிய மணங்கமழாநின்ற ஆற்றோடு இன்று வைகறையில் வந்த காந்தளின் முழுக் கொடியை மெல்லிய இலைகள் குழையத் தழுவலையும் இல்லிற்கொணர்ந்து நடுதலையும் நீக்காதாள்மாட்டு. (குறுந். 361)

20. பக்கத்தே பல்லி சொல்லுந்தோறும் கடவுளை வணங்கி கன்றுகள் மன்றிற்புகும் மாலைக்காலத்தே நின்றோளையடைந்து, வணங்கி நின்றோளையெய்தி என்க. (அக. 9)

21. பழிநீங்கும் ஞாயிறே! உலகியலறியாதாரிடத்துக் கழியச் சீறுதற்கு விரைந்து செல்வையென்று (என் வருத்தங் கண்டார்) கூறக்கேட்டு நின்னை வழிபட்டு நீ அவரைமிகச் சீறாத படி இரந்துகொள்வேனாக வந்தேன். நீ என்னெஞ்சங் கெடும் படி என்னைக் கைவிட்டவனைக் கண்டு சீறும்பொழுது என்னை நீங்கவிடாதே கொள் என்று. (கலி. 143)

22. பெருங்கல்லின் நெருக்கத்தால் எய்த அம்பு ஓடாத அரிய வழியிடத்துப் பெருமையையுடைய கழுத்தினையும் அழகையுமுடைய ஏற்றின் பின் நீங்காமற்றிரியும் பிணையையும் காணாதிருக்கின்றீரோ! அவை நீர் அறியப் பிரியாவே! (ஆதலால் எம்மையும் உடன்கொண்டு சென்மின்.) (கலி. 20)

23. ஐயனே! விருப்பம் மருவுகின்ற அழகினையுடையாய்! அத்தா! அத்தா!! என்று கூறும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது. அஃதொழிந்து நுந்தையால் நலனுண்ணப்பட்டு மெலிந்து நின்றவரது எவ்வநோய் காணுங்கால் அஃது இன்னாது. (கலி. 80)

கூசர் **தொல்காப்பியம்**

[மெய்ப்பாட்

24. பெருமா! நுகத்துப் பகலாணிபோல் ஒரு பக்கத்தைக் கொள்ளுதலின்றி முறைமை செய்தற்குச் சாயாத கோல் செவ்விதாக நிகழ்த்துதலின் அவனை ஒப்பாய், மற்றுள்ள குணங்களில் அவனையொவ்வாதே கொள். (கலி. 86)

25. காவலன் யானைக்கெறிந்த கவண்கல் பலவின் பழத் துட்டங்கும் சிறிய மலைகள் பொருந்திய பெரிய மலையினையுடையவனைப் பாடுகம் வா! (கலி. 41)

26. வெயிலே என்றானை மெலிவித்தானது வடிவழகின் தன்மையை யான் விரும்பிக் காண்பதல்லது அவன் செய்த நன்று தீதென்று சொல்லுகின்ற பிறவற்றைக் காணேன். (கலி. 141)

27. யான் அவனைப் பிடித்துக்கொண்டு காண்பேனாகப் பை யென விழிப்ப யான் பிடித்த கையுள்ளே மறைந்து தோன்றாயினான். (கலி. 142)

28. கடற்றெய்வமே என்னைப் பாதுகாவானாய்த் துறந்தவனை யான் தேடிக் காணுமிடத்தை நீ விட்டுப்போகாமல் ஏறுவாயாயின், நின்னிடமெல்லாம் வெறு மணலாகும்படி என் காற்புறத்தாலே நின்னுடைய நீரெல்லாம் போம்படி இறைப்பேன். அது முடியுமோ என்னின், அங்ஙனம் முயலின் அதற்கு அறக்கடவுள் உதவியாதலு முண்டாயிருக்கும் என்றுங் கூறினாள். (கலி. 144)

29. ஆடவர், தமக்குக் காமங்காழ்க் கொள்ளிற் குதிரையாகப் பனைமடலையும் ஊர்ப; பூவாகத் திரண்ட சுரும்பையுடைய எருக்கம் பூமாலையையுஞ் சூடுப; மடலூர்ந்து வீதியிலே செல்லும்போது பிறர் தம்மைக்கண்டு ஆரவாரிக்கவும்படுவர். தங்கருத்து முற்றாதாயின் சாதலுக்குரிய வரைபாய்தல் முதலிய வேறு செயலையும் உடையராவர். (குறு. 17)

30. நெஞ்சே! எவ்வியென்னும் வள்ளலையிழந்த வறுமையையுடைய யாழ்ப்பாணரது பொற்றாமரைப் பூவில்லாத வறிய தலையைப்போலப் பொலிவிழந்து வருந்துவாய். மனைப் படப்பையிலுள்ள மரத்தே படர்ந்த ஒளிபொருந்திய முல்லை மலர் நாறுகின்ற பலவாகிய கரிய கூந்தலையுடையாள் நமக்கு எத்தகைய உறவினையுடையளாவளோ! (அயலாள்போலும்).
• (குறு. 19)

31. அழகிய இனிய சொல்லையும் அழகிய இழையையுமுடைய மடந்தையின் வளைந்த குழையோடு மாறுபடுகின்ற நோக்கம் நெடிய தூரிய அரிய (காட்டு) வழியில் (நின்னைத்) தடுக்கும்பொழுது. (அகம் 3)

டியல்]
கூள

# பொருளதிகாரம்

## உஎக-ம் சூத்திரம்

1. நொச்சி வேலியாகச் சூழ்ந்துநிற்கின்ற இத்தனது உறந்தையிலுள்ள கன்முதிர்ந்த புறங்காட்டினையொத்த பல முட்டினையுடையது தோழி நமது கள்ளப்புணர்ச்சி. நொச்சிவேலிப் புறங்காடு என்க. புறங்காடு ஊரின் புறத்தேயுள்ள காடு.

(

அகம். 122)

2. இனிய உயிர் நீங்குவதாயினும் நின்மகளது அழகிய குவளை மலர்போலும் மையுண்ட கண்ணின் பசலை காமநோயால் உண்டானதென்று சொல்லாதீம்.
(அகம். 52)

தலைவி கூற்று. இன்னுயிர் கழிவதாயினும் என்பது வாழ்க்கை முனிந்தது.

3. யாம் இத்தன்மையமாகவும் எமது நல்ல நெஞ்சமானது
என்னொடும் நின்னொடும் ஆலோசியாது
கைகடந்து சிறு மலை
கள் பொருந்தி இருண்ட வழி நுணுகிய
வருதற்கரிய மலையின்
கண் மழையையுடைய மேகம் நீர்வடிந்து
(நிறையப்பெற்ற)
நுணுகிய அரிய கண்ணையுடைய
யானைப்படுகுழியை வழியில்
இரவின்கண் மிதிப்புழி (அக்குழியின் மிதித்தலை நோக்கி) மிதி
யாமல் அவர் தளிரடியைத் தாங்கும்படி இன்று சென்றது.

(அகம். 128)

4. நல்லவரை நாடனே! நீ இரவில் வரின் மெல்லியருன்
உயிர் வாழாள். ஒரும் - அசைநிலை.
(அகம். 12)

5. கடற்கரைச் சோலையும் எமது
தலைவரிடம் எமக்காகச்
சென்று தூது கூருது; தேன் மொய்த்த நறுமலர்களையுடைய
புன்னையுஞ் சொல்லாது; அலவ! ஒருவனுகிய நின்னையல்லது
தூது போக்குதற்கு வேறொன்றையுமிலேன். கரிய கழியின்கண்
மலர்ந்த கண்போலும் நெய்தற்பூவின் கமழாநின்ற இதழ் நாற்
றத்தை அமிழ்தாக விரும்பி அதன் தண்ணிய
தாதை ஊதிய வண்டுக் கூட்டங்கள் களிப்பாற் சிறந்து சிறகைக் கிளர்த்துகின்ற
துறையை யுடையனுகிய நீயே (சென்று) அத்தூதைச் சொல்ல
வேண்டும். (அகம். 170)

6. புல்லிய வீழையுடைய இற்றியினுடைய கல்லிற் படர்ந்த
வெள்ளிய வேர் வரையினின்றும் கீழிழிகின்ற அருவிபோலத்

தோன்றும் நாட்டையுடைய தலைவனது
குற்றமற்ற நெஞ்சிற்
றோன்றிய சொற்களை உரைக்குந் தூது
நம்மாட்டு நயப்பைத் தந்தது. தோழியே!
ஆதலால் நாமும் நெய்பெய் தீயைப்போலக்
கிளர்ச்சியோடு அத்தூதை எதிர்கொண்டு அவன்
மணந்தகாலத்
தன்மையொத்த அன்பையுள்ளேம் என்று
சொல்லித் தூதுவிடு
வேம்.
(குறுந். 106)

13



7. தன் மலையின்கணுள்ள சந்தன நாறும் மார்பன், மழைக் கண் நனைந்த யானைபோல வந்துநின்றான். என்ன காரியம் மேற் கொண்டு வந்தானோ? (குறுந். 161)

8. அவள் அங்ஙனமான இடத்து அவள் பூப்போலுங்கண் பாடின்மையைநீவிப். படுதற்கும் யானஞ்சுவேன்; அதற்குக் காரணமென்னெனில் அத்துயிலிடை நினைத்து வருந்தத்தக்க கன வாற் பின்னர்த்தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைத் தூக்கிப்பார்க்கில் அஃது எல்லையறியவொண்ணாத மலையினும் பெரிதாயிராநின்றது. இனி இவ்வருத்தம் உறாதபடி நீ வரை யாமற் பிரியப்பட்டாளோடு கொண்ட உறவு பின்னுதலைக் கொடுத்தல்வேண்டும். (கலி. 48)

9. தலைவரை நினைப்பின் மனம் வேகும். அங்ஙனம் நினையாதிருப்பேமாயின் அவ்விருத்தல் எம்மளவின் அடங்குந் தன்மையதன்று. காமநோயோ எம்மைவருத்தி வானத்தைத் தோய்வதுபோன்ற பெருக்கத்தையுடையது. எம்மால் மருவப்பட்ட அத் தலைவர் சான்றோரல்லர். (குறுந். 102)

10. யான் அவளை வருத்துந் தன்மையனென்பதை யறிவேன்; தான் என்னை வருத்துந் தன்மையளென்பதை அவள் அறியாள். தான் எத்தன்மையள் ஆவளோ? பெரிய முதிய செல்வத்தை உடையோரது ஒப்பற்ற மடைமையையுடைய மகள். (குறுந். 337)

## ௨௭௨-ம் சூத்திரம்

1. காதலர் செல்லும் அரிய வழியிடத்தில்சினைக்கொம்புகள் வாடும்படியாகச் சிறக்கும் நின் சினந்தணிவதாக என்று பரவிச் செறிந்த கதிரையுடைய ஞாயிற்றை யாம் வேண்டிக் கோடலும் நங்கற்பிற்கு இயைவதொரு காரியமோ? அல்லவே. (கலி. 16)

2. தன் பொய்ச்சூளுக்கு நாம் அஞ்சும் அச்சமே தான் ஊடலுணர்த்தும் வழியாக என்புலவியை உணர்த்த வருபவனது பொய்ச்சூளுக்கு அஞ்சி யான் ஊடேனாயிருப்பேன். (கலி. 75)

3. விரிந்த தலையாட்டத்தையுடைய மனச் செருக்குற்ற குதிரைபூண்ட தேரில் ஏற்றிக்கொண்டுவந்த விருந்தினரை ஏற்றுக் கோடலால் ஊடலை மறந்திருப்பேன் என்றும். (கலி. 75)

4. நல்ல தாரையணிந்த மார்பிற்கு ஓர் சார்பாகப் பொருந்திய நெடிய கரிய கூந்தலையுடைய கடவுளரெல்லாருக்கும் முட்டுப்பாடு ஆகுதலும் உண்டு. (கலி. 93)

நச்சினார்க்கினியர் மார்பிற்கும் கடவுளர்க்கும் முட்டுப்பாடாகுதலும் உண்டு என்பதைத் தனித்தனி கூட்டியுரைப்பர்.

5. வேம்பின் அரும்பையொத்த நீண்ட கண்களையுடைய நீர்வாழ் ஞெண்டு இரையைத் தேடுகின்ற வெள்ளிய குருகுக் கஞ்சி அயலிலுள்ளதாகிய தழைத்த பகன்றையையுடைய அரிய அள்ளலாகிய சேற்று நிலத்தின்கண் தோமலைப்போல வரிபொருந்த ஓடி விரைந்து தன்னுடைய நீர்மலிந்த மண்ணிற் றெண்டிய புற்றின்கண் அடங்கியிருக்கு மூரனே! (அகம் 176)

6. அகப்பட்ட பரத்தையரது நெஞ்சு வலிதென்றறியாது பாகனைத் தேரொடும் போகவிட்டு அவள் உன்னை விருந்தாக எதிர்கொள்ள அவள் வரவினைக் கருதிநின்ற நீ. (கலி. 69)

7. குளிரான மாரிக்காலத்தேயாயினும் தென்றற்காற்று வீசின் உடம்பிற்கினிதாகும். (அதுபோல) தோழீ இ! ஊடியிருப் பினும் ஊரனுடைய நல்ல மேனியைக் கூடுதல் எமக்கு இன்பமாகும்.

(ஐங். 32)

8. அயிரைமீன் பரந்த அழகிய வயலிடத்தே தாங்குகின்ற அழகுமலர்ந்த உட்டுளையமைந்த திரண்ட தண்டையுடைய ஆம்பற்பூவைப் பறிப்போர் புனல் வேட்கையை அடைந்தாற்போல இவள் முலையிடைக் கிடந்தும் நடுங்கலுறுகின்றீராயினீர். தொழுதுகாணும் மூன்றாம் பிறைபோல யாமுமக்கு அரியேமாகித் தோன்றிய களவுக்காலத்து மிகவும் பொறுத்தீர் இதற்கு நோவேன்யான்.
(குறுந். 178)

9. நிலைதவறாத வாய்மையையுடையவர்; நெடிதாகத் தோன்றுகின்ற இனிமையையுடையவர். (நற். 1)

10. எம்மைப்போலப் புல்லிய உளைபோன்ற மயிரினையுடைய புதல்வனைப் பயந்து நெல்லையுடைய நெடுநகர்க்கண் நின்னையின்றியிருப்ப என்ன கடமையையுடையள்.
(அகம். 176)

இது தோழி கூற்று.

11. தாமுடைய இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருளில்லை

யென்று கூறி வந்திரந்தவர்க்குச் சிறிதுங் கொடாதிருத்தல் இழிவாமென்றுகருதிக் காட்டைக் கடந்துபோய்த் தேடுதலைக் கருதின பொருள் நின்கு மதிக்கும் பொருளாயினும் அருந்ததி போலே எல்லோருக்குந் தொழுது வாழ்த்தும்படி விளங்கிய கற்பினை யுடையவளுடைய காமச்செவ்வியாற் பெருமையை யுடையவாய மெல்லியவாகிய தோள்களைப் பிரியாதிருத்தல் நின் மனத்திற்குப் பொருளாயிருக்குமாயின் அதுவே லது பிரிகின்றது பொருளாகுமோ? பொருளாவதல்

(கலி. 2)

12. இவற்றை முயங்கலை விடுகவென்று சொல்லத் தாம் மயங்கி யாம் ஒழியுமென்னவும் உடன்படாராய் இம்முலைகளைப்



பாராட்டிய் பருவமுமுள. இப்பொழுது புதல்வனைத் தடுத்த பாலொடு சாய்ந்து தேமலையணிந்த இனிய மென்முலைகளை அகலம் பொலிய முயங்கலை யாம் வேண்டினேம். தாம் தீம்பால் படுதலை அஞ்சினர். பருவம் என்றது களவுக்காலத்தைக் குறித்ததென்பர் பேராசிரியர்.

272-ஞ் சூத்திர உரையுள் மறைந்தவையுரைத்தல் என்பதனுரை நோக்குக. (அகம். 26)

13. குறுமகளைக் கொண்டனை என்ப. அது, களிற்றைப் பிடித்த காலத்துப் பேரொலிபோலப் பலர்வாய்ப்பட்டு அலராகின்றது. (அகம். 96)

## உ௭௩-ம் சூத்திரம்

1. இவளேயன்றி, அவன்றானும் தினைப்புனத்திலிட்ட பரணிடத்து எரிந்த அகிலின் புகையாலுண்ணப்பட்டு ஒளிமழுங்கித் திரியும் மதியம் வானிடத்தே சென்று அம்மலைத் தலையிலே தங்கிற்றாயின் அதனை அந்த மலையிலே வைத்த தேனினது இருலென்று கருதி அதனை அழித்தற்குக் கண்ணேணி முதலியன சமைத்திருக்கும் காடு அகன்ற நாட்டையுடையவன் மகன். (கலி. 39)

2. யான் - நினைத்த வினையை முடித்தாலொத்த இன்பத்தைத் தருவோள் மனையின்கண் மாட்சிமைப்பட்ட தீபத்தை ஏற்றி அதனொடு வருந்துகின்ற மாலைப்பொழுது என்று. (நற். 3)

3. தஞ் சுற்றத்தாரது கேட்டைப் பாதுகாக்கவும் அவர்களுண்ணவும் சுற்றமல்லாத சுற்றத்தாரை (என்றது நண்பர்களை) நண்புசெய்து ஒழுகவும் தம் ஆள்வினைக்கு எதிர்ப்பட்ட உள்ளத்தோடு விரும்பி. (அகம். 93)

4. நீ விரும்பித் தலைவி தோளிலெழுதிய தொய்யில் தருகின்ற அழகினையும் இவள் மார்பில் நின்னை வலியாகவுடைய சுணங்கின் அழகையும் கைவிடல் ஒல்லுமாயின் நினைத்துப்பார். (கலி. 18)

5. அது கேட்டவன் நீ இங்ஙனம் இகழ்ந்து கூறுதலால் நின்னோடு ஒன்றுங் கூறேன்; முல்லையினது முகையையும் பீலி முருந்தையும் நிரைத்தாலொத்த பல்லும் பணைபோலுந் தோளும் பெரிய அமர்செய்யும் உண்கண்ணும் யான் நல்லேனென்று நின்னுடைய தகுதியைப் பிறர் நச்சுதலின்றி நீதானே நச்சியிருக்கின்ற சொல்லையுடையவளே! நின்னொடு மறுமாற்றஞ் சொல்லுதலை யார் நிகழ்த்துவாரென்றான். (கலி. 108)

6. நின் மகளது மையுண்ட கண்களைப் பலதரம் மாட்சிமைப்பட நோக்கி அக்குன்றுநாட்டுக்குரியோன் சென்றான். பகல்நீங்கும் அந்தியாகிய சுடர்படுகின்ற காலத்து (மாலைக்



காலத்து) அவன் மறைந்த திக்குநோக்கித் தோழீ! இவன் ஒரு புருஷனே என்று வியந்து கூறினாள். (அகம். 48)

7. கட்டுதல் மாட்சிமைப்பட்ட கண்ணியையுடையனாய் வில்லையுடையனாய் வரும்; அங்ஙனம் வந்து என்னைப் பார்த்துத் தானுற்ற நோயை மிகவுங் குறிப்பாலே யானுணரக் காட்டுவ தன்றிக் கூற்றாற் கூறானாய்ப் பலகாலும் மீண்டுபோம்; அது கண்டு அவனேயன்றி அவனிடத்து மிகவும் உறவில்லாத யானும் அவன் என்செய்கின்றானென்னும் நிலைவு மிக்குத் துயில்பெறேனாய் வருத்தத்திலே விழுந்து அழுந்துவேன். (கலி. 37)

8. நமக்காயின் நின் வருத்தத்திற்கு யாமும் வருந்திரேமென்று கூறுதல் பெண்டன்மையன்று. (கலி. 37)

9. தாதை உண்ணுகின்ற பறவை (வண்டு) வருந்துதலுக்கு அஞ்சி மணியின் நாவை ஒலியாவண்ணங் கட்டிய மாட்சிமைப் பட்ட தொழிலமைந்த தேரையுடையோன். (அகம். 4)

10. தனது வேட்கை நிறைந்த உள்ளத்தின்கண் எமது வேட்கையும் வாய்ப்ப என்பது பேராசிரியர் கருத்து. (காவலரறியாமல்) தன்னை நச்சுதலையுடைய உள்ளத்தில் எம்முடை நசை (வேட்கை) வாய்ப்ப என்பது அகநானூற்றுக் குறிப்புரைகாரர் கருத்து.

11. என்றோளைத் தொழில்கொள்கின்ற அவன் நெய்தற் பூவைப் புறவிதழொடித்து மாலைகட்டிச் சூடவும் வல்லன். நெடிதாகிய மென்றோளிலே காமன் சிலையாகிய எழுது கரும்பை எழுதவும் வல்லன்; இளமுலைமேற் றொய்யிற்குழம்பாற் கொடி எழுதவும் வல்லன்; இவையொழிந்து நீங்கியிருந்து மனம் வேட்கை யடக்கி யிருக்குமிடத்துத் தன்கையில் வில்லைத் தொழில்கொள்ள வல்ல காமனை ஒக்கும்; அதுவன்றி வேட்கை நிகழ்ந்து கூடுங் காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லன். (கலி. 143)

12. பலவுங் கூடின உழுத்தம் பணியாரத்திலுங்காட்டில் துய்க்கப்பட்டிருக்கின்ற கூன் சாதியினுடைய பிறப்பு நின்னிற் றாழ்ந்ததோவென்றாள். (கலி. 94)

---

# உவமையியற் சுருக்கம்

ஒரு பொருளை அறியாத ஒருவனுக்கு அதனை அறிவிக்குங்கால் அதனோடொத்த வேறொரு பொருளைக் காட்டி இதுபோலும் இது என்று கூறுவதே உவமையாம்.

ஆதலின், அவ்வுவமையும் பொருளைப் புலப்படுத்த வந்ததே

யாம். பேராசிரியரும், உவமவியலிற்கு அதற்கு முதலி லுள்ள ஓத்திேைடு இயைபுகூறுங்கால், "மற்றிதுமேலெவ்வோத் திேைடியைபுடைத்தோவெனின், மேற்பொருள்புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோ டியைபுடைத்து; என்னை ? உவமத்தானும் பொருள்புலப்பாடே கூறுகின்ருஞகலின். எங்ஙனமெனின் ? ஆபோலும் ஆமா என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி, அதனைக்கண்டுழி ஆபோலும் என்னும் உவமைபற்றி ஆமாவிதுவென்று அறியுமாகலான்" என்று கூறுதலானே உவமை பொருளைப் புலப்படுத்தற்பொருட்டே புலவர்களாலெடுத்தாளப் படுவதென்பது பெறப்படும். பொருளைப் புலப்படுத்தற்கேயன்றி, அப் பொருளைப் புனைந்துரைத்தல் காரணமாகவும் உவமை கூறப் படும். அங்ஙனமாதல், 'கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ' என்புழிக், கண்ணின் பிறழ்ச்சியை ஐயவுவமை வாய்பாட்டாற் புனைந்துரைத்தல் காரணமாகக் கயலின் பிறழ்ச்சி

இங்கு எடுத் துக் காட்டப்பட்டதன்றிப், பொருளைத் தெரிக்கக் காட்டப்பட்ட தன்றுதலானுணரப்படும். அன்றிக் கண்ணின் பிறழ்ச்சி தெரியாதானுக்கு அப்பிறழ்ச்சியை உணர்த்துமாறு கயலின் பிறழ்ச்சியை எடுத்துக்காட்டி இதுபோலும் இது என்று காட்டின் அதுவும் பொருள் புலப்படுக்கவந்ததேயாம்.

ஒரு பொருளுக்கு ஒரு பொருளை உவமிக்குங்கால், தொழிலும், பயனும், வடிவும், நிறமும் என்னும் நான்கனுள் ஒன்றுனே உவமிக்கப்படும். எங்ஙனமெனின் ? "புலிபோலும் மறவன்" என்புழி மறவனுடைய பாய்தற்றொழிலிற்குப் புலியின் பாய்தற்றொழிலை எடுத்துக்காட்டி, புலிபாய்வதுபோலப் பாயும் மறவன் என உவமித்தமையின் இது வினையுவமையாம். "மாரி யன்னகை" என்புழிக் கையின் கொடைப்பயனை யுணர்த்தற்கு மழையை எடுத்துக்காட்டி, மழைபோல மிகக்கொடுக்குங் கை

யென அதன் பயன்பற்றி உவமித்தமையின் இது பயனுவமை யாம். "துடிபோலுமிடை" என்புழி மேலுங்கீழும் அகன்று நடுவே ஒடுங்கியிருக்கு மிடைக்கு, அங்ஙனமொடுங்கியிருக்கும் துடியை எடுத்துக்காட்டித், துடிபோலும் இடையென உவமித்த மையான் இது வடிவுவமையாம். "பவளம் போலும் வாய்" என்புழி வாயின் செந்நிறத்தை உணர்த்துதற்குச் சிவந்த பவளத்தை எடுத்துக்காட்டிப் பவளம் போலும் வாயென உவமித் தமையின் இது நிறவுவமையாம். இங்ஙனம் நான்குவகையாக உவமித்தல்பற்றியே தொல்காப்பியரும் "வினை பயன் மெய் உரு என்ற நான்கே—வகைபெறவந்த உவமத் தோற்றம்" என்றார். உவமைகள் "வினை பயன் மெய் யுரு" என்ற நான்கனுள் ஒவ்வொன்றேபற்றி வருதலன்றி இரண்டும் மூன்றும் நான்கும் பற்றியும் வரும். அங்ஙனமாதலை "பிறைபெயிறு", "அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி—கையாடுவட்டிற்றோன்றும்" என்னு முதாரணங்களில் வைத்து உணர்ந்துகொள்க. பிறை, எயிற் றுக்கு நிறமும் வடிவும்பற்றி உவமஞ் செய்யப்பட்டது. பிறவும் இங்ஙனம் வரும் உவமைகளை இன்னதின்னதுபற்றி வந்ததென உய்த்துணர்ந்துகொள்க.

இனி, ஒன்றை உவமிக்குங்கால் உவமேயப் பொருளினும் உவமைப்பொரு ளுயர்ந்ததாக விருத்தல்வேண்டும். ஏனெனின்? உவமைப்பொரு ளிழிந்ததாயிற் கேட்போனுக்குப் பொருட்கண் மனஞ் செல்லாதாகலான். உயர்ந்ததாயின் அவ்வுயர்ச்சிபற்றிக் கேட்போனுக்குப் பொருட்கண் மனஞ்சென்று அதனையும் அதன் மேன்மையையும் அறிந்துகொள்வான் என்றபடி. "பொன் மேனி" என்புழி பொன்னி னுயர்ச்சிபற்றிப் பொருளாகிய மேனிக்கண்ணே கருத்துச் சென்று அதனையும் அதன் சிறப்பையுங் கேட்போன் உணர்ந்துகொள்ளும் என்பது கருத்தாம். அதுபற்றியே, "உயர்ந்ததன்மேற்றே உள்ளுங்காலை" என்றார் தொல்காப்பியரும். உவமையையும் பொருளையும் பேதமாகக் கூறாது ஒன்றாக்கி "வாயே பவளம்", "வாய் பவளமாக" "வாயாகிய பவளம்" என்பனபோல அபேதமாகக் கூறுவது முண்டு. இவற்றை இக்காலத்தார் உருவகமென்பர்.

இனி, வினை முதலிய நான்கும்பற்றி ஒன்றை உவமிக்குங் கால் அவ்வுவமை பொருளின்கணுள்ள சிறப்பும், அழகும்,



காதலும், வலியும், இழிவும் என்னும் ஐந்தையும் இடமாகக் கொண்டு தோன்றும். அங்ஙனந் தோன்றுமாற்றை,

முரசு முழங்குதானை மூவருங் கூடி

யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை எழாஅத்
கோடியர் தலைவ கொண்ட தறிநு.

என்புழி, நிருத்த கீத வாச்சியம் என்னும் மூன்றோடுங் கூடிப் பாட்டுத் தோற்றம்பெற்றுச் சிறப்படைந்ததற்கு அரசர் மூவருங் கூடி அரசவையிருந்த தோற்றம் அவ்வவைக்குச் சிறப்பளித் தமையை உவமை கூறுதலானே, சிறப்பை யிடமாகக்கொண்டு பிறந்ததெனப்படுதலானும், 'ஓவத்தன்ன விடனுடை வரைப்பின்' என்புழி, ஓவம்போன்ற செயற்கை யழகையுடைய இட' மென்றமையான், அங்ககரினது செயற்கையழகையே இடமாகக் கொண்டு பிறந்ததெனப்படுதலானும், "பாவையன்ன பல ராய் மாண்கவின்" என்புழி, மகளிரிடத்துள்ள காதலை யிட மாகக்கொண்டு பாவையன்னவென்று கூறுதலின், இவ்வுவமை காதல் நிலைக்களமாகப் பிறந்ததெனப்படுதலானும், "அரிமா வன்ன அணங்குடைத்துப்பின்" என்புழி, பகைவரைக் கொல்லு தற்கு வலியே காரணமாகலின் அது காரணமாக அரிமாவை உவமை கூறுதலின், வலியை நிலைக்களமாகக் கொண்டு பிறந்த தெனப்படுதலானும், "அரவு நுங்குமதியின் நுதலொளி கரப்ப" என்புழி, நுதலொளி குறைந்தமைக்கு அரவு நுங்குமதியை உவமை கூறினமையின் இது இழிபை நிலைக்களமாகக் கொண்டு பிறந்ததெனப்படுதலானும் அறிந்துகொள்க.

இன்னும் உவமை, சுட்டிக்கூறும் உவமையும் சுட்டிக்கூறா வுவமையுமென இரண்டுவகைப்படும். சுட்டிக்கூறும் உவமையாவது பொதுத்தன்மையை வெளிப்படையாகச் சுட்டிக்கூறும் உவமை. அங்ஙனம் கூறாதது சுட்டிக்கூறா வுவமையாகும். "பவளம்போற் செந்துவர்வாய்" என்புழி உவமானம் உவமேயம் என்னும் இரண்டற்கும் பொதுத்தன்மையாகிய செம்மையை யிதுவென்று இங்கே சுட்டிக் கூறினமையின் இது சுட்டிக்கூறிய வுவமையாகும். "பவளவா" யென்புழி அங்ஙனங் கூறாமையிற் சுட்டிக் கூறா வுவமையாகும். சுட்டிக்கூறும் உவமை விரியுவமையென்றும், சுட்டிக்கூறா வுவமை தொகையுவமையென்றுங் கூறப்படும். உவமை கூறுங்கால் உவமேயத்தோடு ஒத்த குணமுடையவற்றையே எடுத்து ஒப்புமை கூறவேண்டும். ஒவ்வாதவற்றை





எடுத்து உவமை கூறின் அது வழுவாம். ஆமாவெதுபோலு மெனின் ஆப்போலுமென அதனோடொத்த குணமுடையதையே ஒப்புமை கூறுவதன்றி அதனோடொவ்வாதவொன்றை உவமை கூறுதலாகாது. இதுபற்றியே

தொல்காப்பியரும் "உவமையும் பொருளும் ஒத்தல்வேண்டும்" (சூ. 283 ) என்றார். இச்சூத் திரத்திற்கு இவ்வாறு பொருள் கூறுதலே பொருத்தமென்பது எமது கருத்து. பேராசிரியரும் இளம்பூரணரும் வேறு வேறு கருத்துக் கூறுவர். சூத்திரப் போக்குநோக்கிப் பொருந்து வதை ஆராய்ந்துகொள்க.

இனி, உவமையை உவமேயமாகவும், உவமேயத்தை உவமை யாகவும் மாறிக் கூறினும் அஃது உவமையாம். எங்ஙனமெனில், "பவளம்போலும் வா" யென்பதை வாய்போலும் பவளமென்று மாறி உவமஞ் செய்யினும், அஃதும் உவமையாகக் கொள்ளப் படும். அங்ஙனம் மாறிக் கூறுங்கால் ஆண்டும் உவமையாக நின்ற உவமேயப் பொருளே உயர்ந்ததாகக் கருதப்படும். இவ் வாறு மாறிக் கூறுவனவற்றை "விபரீத உவமை" யென்பர்

தண்டியாசிரியர்.

இன்னும் மிகப் பெரிய பொருளையெடுத்தும் மிகச் சிறிய பொருளையெடுத்தும் உவமிக்குங்காலும் இன்பமுறும் சிறப்பிற் றீராதவாய்க் கேட்டார் மனங்கொள்ளுமாறு (விரும்புமாறு) வரும் உவமைகளையே எடுத்துக் கூறல்வேண்டும். ஏனெனின்? அவ்வாறு கூறலே ஆன்றோர் மரபாதலின்.

"மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்."

என்றவழி சிறிய கூந்தலுக்கு மிகப் பெரிய பரப்பையுடைய கடலையும் சிறிய நுதலுக்கு மிகப் பெரிய பரப்பையுடைய மதியையும் உவமை கூறலாமோவெனின்? அவ்வுவமைகள் பெருமையுடையனவாயினும் சிறப்புடைமையிற் றீராது கேட்டார் மனங்கொள்ளுமாறு நிற்றலான் அவை கூறத்தக்கனவேயாம்.

இனி, உவமையைக் காட்டும் உருபுகள் 'அன்ன' முதலாக முப்பத்தாறும், பிறவும் தொல்காப்பியனாராற் கூறப்பட்டுள்ளன.

அவையன்றி உவமான உவமேயங்களுக்கு இடைவருஞ் சொல்

லெல்லாம் உவமை உருபாகு மென்பாருமுளர். அன்ன முதலிய

உருபுகளுள் வினைமுதலிய நான்கற்கும்

உரியவாகவரும் உருபுக பொருளதிகாரம்

கஈஎ

ளிவை யிவையென்றும் அவை உரியவாதற்குக் காரணம் மரபு பற்றி யறியப்படும் என்றுந் தொல்காப்பியர் கூறுவர். அவ் வாற்றைப் பின்வரும் உவம வியலிற் காண்க. உவம வுருபுகள் தொக்குவருதலும் விரிந்துநிற்றலும் பற்றி வினைமுதலிய உவமப்பகுதி நான்கும் எட்டாதலுமுள.

இன்னும் உவமை பெருமையுஞ் சிறுமையும்பற்றி மெய்ப் பாடுகள் எட்டோடுங் கூடிவரும், பெருமையுஞ் சிறுமையும்பற்றி வாராது மெய்ப்பாடெட்டோடு மாத்திரம் வருதலேசிறப்பென்பர் பேராசிரியர். உவமையானே உவமேயத்துக்குற்ற பொருள்கள் அறியப்படும். அறியுங்கால் மரபுபற்றி அறியப்படும். அடையும் பொருளுமாய்வரும் உவமேயத்திற்கு அடையும் பொருளுமாயே உவமையும் வருதல் வேண்டும். சிறுபான்மை அடையின்றியும் உவமை வருமென்க. இனி உவமேயப்பொருள்களை உள்ளுறுத்து வைக்கப்படும் உள்ளுறை உவமைகளும் செய்யுளிடத்து வரும். அவைகளை ஓர்ந்துணர்க. அவ்வுள்ளுறை வினை பயன் மெய் உரு பிறப்பு எனவரும் பொதுத்தன்மைகளானே ஐந்து வகைப்படும் என்க. உள்ளுறையுவமைகளைத் தலைவி சொல்லுங்கால் தானறிந்த பொருளானே சொல்லுவள். தோழி சொல்லுங்கால் தந்நிலப் பொருளானே சொல்லுவள். தலைவன் உள்ளுறை சொல்லுங்கால் தன்னறிவுடைமை தோன்றச் சொல்லுவான். அவன் எந்நிலப்பொருளானுஞ் சொல்லுவான். இவர்களல்லாத கூற்றுக்குரிய ஏனையோர் சொல்லுங்காலும் எந்நிலப் பொருளானுஞ் சொல்வர். தோழியுஞ் செவிலியும் உள்ளுறை சொல்லுங்கால் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்பக்கூறுவர். உவமைகள் இன்பமுந் துன்பமுந் தோன்றச் சொல்லப்படும் என்க.

இன்னும் முற்கூறிய இலக்கணங்களின் வேறுபடவரும் உவமைகளும், ஒவ்வாதெனக்கூறி ஒப்பாகக்கொள்ளும் உவமைகளும், பெருமையுஞ் சிறுமையுந் தோன்றக் கூறாமல் இயற்கைபடக் கூறும் உவமைகளும், உவமேயத்தை உவமையாக்கிக் கூறும் உவ

மைகளும் உளவென்க. உவமைக்குவமை கூறலாகாது. கூறிற் குற்றமாகும். நிரனிறையாகவும் உவமைகள் கூறப்படும். இவற்றை யெல்லாம் ஆன்றோர் செய்யுள் நோக்கியும் பின்வரும் 'உவமவியல்' நோக்கியு மறிந்துகொள்க.

---

# ஏழாவது : உவமவியல்

[ உவமையின் பொதுவிலக்கணமும்
அவற்றின் பெயராதியவும் உணர்த்தல் ]

உஎசு. வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், உவமவியல் என்னும் பெயர்த்து. உவமம் என்பது, ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல். இதனானே இவ்வோத்து நுதலியதூஉம் உவமப் பொருளே கூறுதலாயிற்று. மற்று அகம் புறம் என்பனவற்றுள் இஃது என்ன பொருளெனப்படுமோ வெனின், [1] அவ்விரண்டுமெனப்படும்; "மெய்ப்பாடுபோல" என்பது; என்னை?

"உவமப் பொருளி [1] னுற்ற துணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான."

(உசூரு)

என மேல் வருகின்றதாகலின்.

மற்றிவ் விருதிணைப் பொருளும் உவமம்பற்றி வழக்கினுள் அறியப்படுதலானும், உவமம்பற்றியும் பொருள் கூறுகின்றா னென்பது. மேல் அகத்திணையியலுள் (சகூ) உவமத்தினை இரண்டாக்கி ஓதினான், உள்ளுறையுவமம் ஏனையுவமமென; அவ் விரண்டனையும் ஈண்டு விரித்துக் கூறுகின்றவாறு; அவற்றுள்,

ஈண்டு ஏனையுவமத்தினை முற் கூறினன்; அஃது அகத்திணைக்கே [3] சிறந்ததன்றாயினும் [4] யாப்புடைமை நோக்கி ; உலக வழக்

1. அவ்விரண்டும் என்றது அகம்புறம் என்னும் இரண்டையும். மெய்ப்பாடும் இரண்டற்கும் வருமென்றபடி.

2. 'உற்றதுணரும்' என்றதனுல் அகம்புறமாகிய உவமிக்கப்படும் பொருளெல்லாங் கொள்ளப்படும் என்பதற்காக இச்சூத்திரங் காட்டப்பட்டது.

3. சிறந்ததின்றாயினும் எனவும் பாடம். அது சிறப்பு.

4. யாப்புடைமை—இயைபுடைமை. பரப்புடைமை எனவும் பாடம். ஏனையுவமத்தினை முற் கூறற்குப் பரப்புடைமையே நோக்கமாதல் காண்க. சேனாவரையரும் சொல்லதிகாரத்து உரியியலில் 'குறிப்பும் பண்பும் இசையும் என்பவற்றுள் குறிப்புப் பரப்புடைமை நோக்கி முற் கூறினார்' என்று கூறுதல் காண்க. உள்ளுறையுவமம் செய்யுட்குமாத்திரம் வரும். ஏனையுவமம் வழக்குச் செய்யுள் இரண்டற்கும் வரும் என்றபடி.

கினுஞ் செய்யுள் வழக்கினும் வருமாகலானுமென்பது. அஃதேதல் உள்ளுறையுவமஞ் செய்யுட்கே உரிமையின் அதனைச் செய்யுளியலுட் கூறுகவெனின், உவமப் பகுதியாதலொப்புமை நோக்கி ஓரினப் பொருளாக்கி ஈண்டுக் கூறினானாயினும், வருகின்ற செய்யுளியற்கும் இயையுமாற்றான் [1] அதனை ஈற்றுக்கண் வைத்தான். அது செய்யுட்குரித்தென்னுங் கருத்தானென்பது. எனவே, எழுத்தினுஞ் சொல்லினும்போலச் செய்யுட்குரியன செய்யுட்கென்றே ஓதலும் [2] ஒருவகையாற் பெற்றாம்.

மற்று, 'பாடல் சான்ற புலனெறி வழக்கம்' (நுஉ) [3] அல்லாத வழக்கு, ஆராயப் பயந்ததென்னையெனின்,—அப்புலனெறி வழக்கிற்கு உறுப்பாகிய வழக்கினை ஆராய்தலும் அதற்கு உபகாரமுடைத்தாகலா லென்றவாறு. மற்றிது, மேல் எவ்வோத்தினோடு இயைபுடைத்தோவெனின், மேற் பொருள்புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோடு இயைபுடைத்து; என்னை? [4] உவமத்தானும் பொருள் புலப்பாடே கூறுகின்றானாகலின், எங்ஙனமோவெனின்,—'ஆபோலும் ஆமா' என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி அதனைக் கண்டால் ஆபோலும் என்னும் உவமையேபற்றி ஆமா இதுவென்று அறியுமாகலானென்பது.

இவ்வோத்தின் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உவமத்திற்கெல்லாம் பொதுவிலக்கணங் கூறி, அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

1. அதனை—உள்ளுறையுவமையை. ஈற்றுக்கண் வைத்தமையாலே அடுத்துவரும் செய்யுளியற்கு உரித்தென்பது பெறப்படும் என்றபடி.

2. ஒருவகையாற் பெற்றாம் என்றது சூத்திரத்தாற் கூறாது அதிகாரத்தாற் பெறவைத்தமையை. எழுத்ததிகாரத்தும் சொல்லதிகாரத்தும் சூத்திரங்களால் செய்யுட்குரியவற்றைச் செய்யுட்குரியவென எடுத்தோதுவர்; எடுத்தோதாதவற்றை அதிகாரத்தாற் பெறவைப்பர். அவ்வாறே ஈண்டும் உள்ளுறையுவமையதிகாரத்தைச் சாரச் செய்யுளியலை வைத்தமையால் செய்யுளுக்கே உள்ளுறை உவமை உரித்தென்பது ஓதியதாயிற்று என்றபடி.

3. அல்லாத வழக்கு—உலகவழக்கு.

4. உவமை பொருள் புலப்பாடும் அலங்காரமும்பற்றி வருமென்பர் இளம்பூரணர். அவருரை நோக்குக.



இதன் பொருள்: தொழிலும், பயனும், வடிவும், வண்ணமும் என்னும் நான்கெனப்படுங் கூறுபட வரும் உவமத் தோற்றம் என்றவாறு.

1 'உவமம்' என்பதனை வினைமுதலாகிய நான்கினொடுங் கூட்டி வினையுவமம் பயனுவமம் மெய்யுவமம் உருவுவமமெனப் பெயர் கூறப்படும்.

வினையாற் பயப்பது பயனாதலின்
பயத்திற்குமுன் வினை

கூறப்பட்டது ; அதுபோலப் [2] பிழம்பினால் தோன்றும் நிறத்தினை [3] அதற்குப்பின் வைத்தான் ; பயனும் பொருளாக நோக்கி மெய்யினையும் [4] அதனுடன் வைத்தானென்பது. மற்று மெய்யெனப்படுவது பொருளாதலின் அதன் புடைபெயர்ச்சியாகிய வினை பிற்கூறுகவெனின்,—வினையுவமந் தன்னுருபு தொக்கு நில்லாது விரிந்தே நிற்றற் சிறப்புடையனவும் உளவாக நோக்கி அது முற்கூறினானென்பது. அது 'புலிமறவன்' எனத் தொகாது 'புலியன்ன மறவன்' என விரிந்தே நிற்றலும், 'புலிப்பாய்த்துள்' எனத் தொக்குவருதலும் உடைத்தென்பது. தொகை நான்கென எண்ணிக்கொடுத்தான்.

வரலாறு :— 'புலியன்ன மறவன்' என்பது வினையுவமம் ; அது பாயுமாறே பாய்வனென்னுந் தொழில்பற்றி ஒப்பித்தமையின் ; அற்றன்றித் தோலும் வாலுங் காலும் முதலாகிய வடிவும் ஏனைவண்ணமும் பயனும் ஒவ்வாவென்பது ; ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும்.

"மாரி யன்ன வண்கைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே."

(புறம். கூங)

என்பது பயவுவமம் ; என்னை ? மாரியான் விளைக்கப்படும் பொருளும், வண்கையாற் பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு.

1. உவமம் என்பது என்றிருப்பது நலம். கூறப்படும் என்பது பயனிலையாதலின். கூட்டி—கூட்டப்பட்டு. கூறப்படும் என்பதைக் கூறுதல்செய்யப்படும் எனவிரித்து எழுவாயும் பயனிலையுமாக்குவாருமுளர். (பிரயோகவிவேகம்)

2. பிழம்பு—திரட்சி. என்றது ஈண்டு வடிவினை.

3. அதற்கு—வடிவிற்கு.

4. அதனுடன்—பயனுடன்.



'துடியிடை' என்பது மெய்யுவமம்; அல்குலும் ஆகமும் அகன்றுகாட்ட [1] அஃகித் தோன்றும் [2] மருங்குலால் துடி அதனோடு ஒத்தது.

'பொன்மேனி' என்பது உருவுவமம்; பொன்னின்கண்ணும் மேனியின்கண்ணுங் கிடந்த நிறமே ஒத்தன; பிற ஒத்திலவென்பது. இந்நான்கும்பற்றி உவமந் தோன்றுமென்பது கருத்து. 'உவமத் தோற்றம்'

என்பது மூன்றுவதன் தொகை,

உவமத்தாற் பொருள் தோன்றும்

தோற்றமென்றவாறு.

மற்று 'அடைசினை முதல்' (தொ. சொ. உசு) என்றாற் போல, அடையெனவே [3] இந்நாற்பகுதியும் அடங்கக் கூறிப் 'பண்புத்தொகை' என்புழி வண்ணம் வடிவு முதலாயின அடக்கியவாறுபோலப் [4] பண்பென்று அடக்குதல் செய்யாது ஈண்டு நான்கெனப் பகுத்ததென்னையெனின்,—இது பொருளாராய்ச்சியாகலான் [5] கட்புலனும் பண்பும் உற்றுணரும் பண்பும் வேறாக நோக்கி வடிவினையும் உருவினையும் வேறுபடுத்தான்; என்னை? வடிவுபற்றிய பண்பு இரவின்கண் [6] உற்றுணரப்படும்; வண்ணமாயின் அவ்வாறு உற்றுணரப்படாதென்பது. [7] அல்லாக்காற் பகற்குறிக்கட் கூறப்படும் வண்ணம் முதலாயினவும் இரவுக்

1. அஃகி—சுருங்கி.

2. மருங்குல்—இடை.

3. இந்நாற்பகுதி—வினை பயன் மெய் உரு.

4. வண்ணம் வடிவு முதலிய நான்கையும் அடையெனக் கொண்டு அவ்வடைதன்னையும் பண்பென்று அடக்கிக் கூறலாமே? இங்ஙனம் நான்கெனப் பகுத்ததென்னை? என்று வினவி விடை கூறுகின்றார்.

5. வடிவு.

கட்புலனும் பண்பு—நிறம் (உரு). உற்றுணரும் பண்பு—

6. உற்றுணரப்படும் என்பது (உருவாக) உற்றுணரப் படும் என்று S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் காணப்படு கின்றது. உரு என்பது நிறத்திற்கே முன்பின் வாக்கியங்களிற் காணப்படுதலின் வடிவையும் உரு என்று ஈண்டுக் கூறல் மயக் கமாமாதலின் 'உருவாக' என்பது ஈண்டு வேண்டியதின்று. உற்றுணர்தல்—பரிசித்தறிதல். பண்பினை என்பது பண்பு என் னும் இரவின்கண் என்பது இரவின்கண்ணும் என்றுந் திருத்தப் பட்டன; அவ்வாறிருத்தலே பொருத்தமாதலின்.

7. அல்லாக்கால்—உற்றுணரப்படுமாயின்.



கக்ங

குறிக்கண் எய்துவான் [1] சொல்லும் வடிவும் பண்பும் ஒன்று கக் [2] கூறினனென்பது; அல்லதூஉம், உணர்த்துகின்ற திணைப் பொருளினை எளிதிற் புலப்படுத்த லுபகாரம் நோக்கியும் அவ் வாறு பகுத்தானென்பது.

"களிற்றிரை தேரிய பார்வ லொதுக்கி
யொளித்தியங்கு மரபின் வயப்புலி போல." (அகம். உஉ)

என்புழி, பார்வலொதுக்கமாகிய வினை, பண்ணெனப்படாது; என்னை? பண்பென்பது [3] குறிப்பின்றி நிகழுங் குணமாகலினென்பது. [4] அடையெனினும் அதுவேயெனக் கூறி மறுக்க. எனவே பார்வலொதுக்கமெனப்பட்ட வினைப்பகுதியாற் பிழையாமற் கோடற்குப் [5] பார்வலொதுங்கி நின்றானென்பதும் பிறர்க்கஞ்சிப் பார்வலொதுங்கி நின்றானல்லனென்பதுஞ் சொல்லி, அவன் தலைமைக்கேற்ற உவமையாதலின், அது [6] பொருட்டோற்றமாயிற்று.

1. சொல்லும் என்பது செல்லும் என்றிருத்தல்வேண்டும்.

2. கூறினுமென்பது கூறின் என்றிருத்தல்வேண்டும். இப்படிப் பாடம் உள்ளது. கூறின் செல்லும் என முடிக்க. கட்புலனும் பண்பு வடிவு என்றும், உற்றுணரும் பண்பு உரு (நிறம்) என்றும் பவானந்தம்பிள்ளை பதிப்பிலும் S. கனகசபாபதிப் பிள்ளை பதிப்பிலும் மாறி எழுதப்பட்டது. அது பொருத்தமில்லை என்பது பின் பேராசிரியரே, 'வடிவுபற்றிய பண்பினை யிரவின்கண் உற்றுணரப்படும். வண்ணமாயி னவ்வாறுற்றுணரப் படாது என்று கூறலானும்', தண்டியாசிரியர் 'வடிவும் பண்பினு ளடங்குமென்று கொண்டாரேனும் இந்நூலுடையார் கட்புலனும் பண்பும் உற்றுணரும் பண்பும் என வேறாகக் கொண்டார். அங்ஙனங் கோடல் வடிவுபற்றிய பண்பு இருளின் கண்ணு முற்றுணரப்படும்; வண்ணமாகிய (கட்புலனும்) பண்பு இரவின் கண் அவ்வாறுணரப்படாதாதலின் வடிவினைக் கூட்டி நாலென்றார்' என்று வரும் மாறனலங்காரத்து உரையானு முணரப்படும். (உவமையலங்காரம் க-ம் சூத்திரம்.)

3. குறிப்பின்றியெனவே, வினை மனத்தாற்குறித்துச் செய்யப்படுவதென்றாயிற்று.

4. அடையெனினும்=அவ்வினையை அடையென்று சொன்னாலும்; அதுவேயென்றது குறிப்பின்றி நிகழும் குணமாகிய அப்பண்பே என்றபடி.

5. பார்வலொதுங்கி நிற்றல்—பார்வைக்கு மறைந்து நிற்றல். ஒதுங்கி நின்ருன் என்பது ஒதுங்குகின்ருன் என்றும் பாடம்.

6. தலைமைக்கேற்ற உவமையாதலின் பொருட்போற்றமாயிற்று என்றது — புலி தலைமகனுடைய தலைமைக்கேற்ற

15



" மாரியன்ன வண்கை "

(புறம். கங௩)

என்பதூஉடம் பண்பாயின், அதன் நிறத்து மேற்கொண்டு வண்கை யுங் கரிதெனல் வேண்டுமாகலின் அது பண்பென அடங்காது.

" அணைத்தோள் "

(கலி. அஎ) என்பதும் அது.

" உருவுகிள ரோவினைப் பொலிந்த பாவை
யியல்கற் றன்ன வொதுக்கினள் "

(அகம். கசக)

என்றக்கால், வ்டிவுபற்றி உவமங்கொள்ளவே, உயிரில்லாதாள் போல அச்சமின்றி, இரவிடை வந்தாளென்னும் பொருள்

தோன்றும். வடிவு பண்பெனப்படாது; 1
பண்பு இழிபாகலின்.

"மாரிப் பீரத் தலர்சில கொண்டே" (குறுந். கூஅ)

காட்டி,

2 "இன்ன ளாயின ளன்னுதல்" (குறுந். கூஅ)

என்றவழி, குறித்த பருவங் கழிந்ததென்னும் பொருண்மை விளங்கிற்று. இது உருவுவமம்.

3 இவ்வாறு பொருளுணர்த்துதற் பகுதிநோக்கி 'உவமப் பகுதி' என்றானென்பது; என்றார்க்கு, இந்நான்கு பகுதியே யன்றி அளவுஞ் சுவையுந் தண்மையும் வெம்மையும் நன்மையுந்

உவமையாதலின், புலிபோலப் பிழையாமற் கோடற்குப் பார்வ
லொதுங்கினனன்றிப் பிறர்க்கஞ்சி
ஒதுங்கினனல்லன்; என்னும்
பொருள் தோற்றமாயிற்று என்றபடி.

1. பண்பு இழிபாகலின் என்பது

பண்பியாகலின் என்

றிருத்தல்வேண்டும். பண்பையுடையது பண்பி. என்னே? நிறத்தை யுடையது வடிவாகலின். முன்னும் 'பிழம்பினுற் றேன்றுவது நிறம்' என்றும், 'மெய்யெனப்படுவது பொருளாதலின்' என்றுங் கூறுதலானும், பின்னும் 'ஓடற்சொற்றில் வடிவிற்கல்ல தின்

மையின் அவ்வடிவிற்கேற்றது பண்பாயின்,

பண்பு—நிறப்பண்பு

ஓடிற்றெனவாகாமையின் (உவம. கஎ) என்று கூறுவதனுலும் அறியப்படும். வடிவு பண்புக்காதாரமாதல்பற்றிப் பண்பி என்ருர்.

2. இன்னள் — இத்தன்மையள். என்றது, இப்பூவினைப் போலப் பசப்புற்ருள் என்றபடி. பசந்தமைக்குக் காரணம் பருவங் கழிதல்.

3. உருவுவமம் என்பது முன்

வாக்கியத்தோடு சேரல்

வேண்டும் இன்னள் என்பது உருவுவமங்

குறித்து நின்ற

தென்றபடி.



நீமையுஞ் சிறுமையும் பெருமையும் முதலாயினபற்றியும் உவமப்பகுதி கூருரோவெனின்,—அவையெல்லாம் இந்நான்கனுள் அடங்குமென்றற்கும் அந்நான்கும் இன்ன பொருட்பகுதி உடைய வென்றற்குமன்றே அவற்றை 'வகைபெற வந்த' என்பானுயிற் றென்பது.

" பறைக்குர லெழிலி "

(அகம். உரு)

என்றக்காற் பறையும் எழிலியும் [1] ஒத்தல் வினைபற்றி உவமை கொள்வான் ஒன்றற்குக் குரல்கூறி ஒன்றனை வாளாது கூறினானாயினும் வினையுவமத்தின் வகையெனப்படும்.

" கடைக்கண்ணாற் கொல்வான் போனோக்கி "

(கலி. ருக)

என்பதூஉம் அதன்வகை.

'வந்த' என்றதனான் இல்லாத வினை வருவித்துஞ் சொல்லப்படும்; அவை,

" விசும்புரி வதுபோல் "

(அகம். உச)

எனவும்,

" மணிவாழ் பாவை நடைகற் றன்ன "

(நற். கஅச) எனவும்,

" வான்றோய் வன்ன குடிமையும் "

(பாயிரம்) எனவும் வரும்.

இவை, [2] உவமையும் பொருளுமாகிய

வினைபற்றி வந்தில

வாகலின் அதன் வகையெனப்பட்டன. 'அன்ன' [3] 'ஆங்க' என்பன இடைச்சொல்லாகலின் வினைப்பின்னும் வந்தன. 'நடை கற்றன்ன' என்புழிக் கற்று என்னும்

வினையெச்சந் [4] தன்

1. ஒத்தல்—ஒலித்தல்

என்றிருத்தல்வேண்டும்.

2. உவமையும் பொருளுமாகிய வினைபற்றி வந்தில என்றது உவமையாயும் உவமேயமாயும் நிற்குந் தொழில்பற்றி வந்தில என்பது கருத்து.

3. ஆங்க என்பதற்கு உதாரணம் இறந்ததுபோலும். செய்யுள் வழக்கில் ஆங்கு என்றே காணப்படுகின்றது; ஆதலின் இது ஆராயத்தக்கது.

4. தன் எச்சவினை இகந்ததாயினும் என்றது தனக்குரிய முடிக்குஞ் சொல்லாகிய வினையை நீங்கியதாயினும் என்றபடி. கற்று என்பது அன்ன என்னும் குறிப்பாகிய பிற கருத்தாவின் வினையொடு முடிதலின் அவ்வாறு கூறினர். அன்றி, இடைச் சொல்லாதல் நோக்கிக் கூறினர் எனினுமாம்.



னெச்சவினை இகந்ததாயினும் அஃது உவமப்

பகுதியாகலான் அங்ஙனம் வருதலும் 'வகை' என்றதனானே கொள்ளப்படும்.

"கொன்றன்ன வின்னா செயினும்" (குறள். ககூ—கூ) என்பதும் அது.

"இணரெரி [1] தோய்வன்ன வின்னா செயினும்" (குற. நக—அ) என்பது, வினைப்பெயர்பற்றி உவமஞ் சென்றது.

[2] "பொன்மரம் போலக் கொடுக்கும்" என்பது, பயவுவமத்தின் பகுதியாய் அடங்கும்; என்னை? [3] மழைத்தொழிலாகிய பெயலாற் பயந்த விளையுளுடன் இடை யிட்டுப் போய் உவமங்கொள்ளாது கொடைப்பொருள் இரண்டும் ஒத்தமையின் மெய்யுவமம் எனப்படாது கொள்வார்க்குப் பயம் ஒத்தலாற் பயவுவமத்தின் வகையாயிற்று. 'நிலம்போலுங் கொடை' என்பதும் அது.

"தெம்முனை யிடத்திற் சேயகொல்" என்னும் எல்லைப் பொருண்மை மெய்யுவமத்திற்கு வகையெனப் படும்; அஃது [4] அளவாகலினென்பது. [5] இடைக்கிடந்த நிலம்

இரண்டிஃனயும் வடிவுபற்றி
உவமஞ்செய்தானென்பது. மற்றுச்

---

1. தோய்வு—தோய்தல். தொழிற்பெயர். விஃனப்பெயர்— தொழிற்பெயர்.

2. பொன்மரம்—கற்பகமரம். அது பின் கச-ம் சூத்திரத்

துட் காட்டிய "புத்தேளுலகிற் பொன்மரம் புல்ல" னுல் அறியப்படுகின்றது.

என்பத

3. 'மழைத்தொழிலாகிய.....கொள்ளாது' என்பது ஈண்டியையில்லாத வாக்கியம் மாறி எழுதப்பட்டதுபோலும். அன்றி பயனுவமையை வகையுளடக்கியதற்கு ஏதுக் கூறியதெனின் பயனுவமை கொள்ளுங்கால் இடையிட்டுத்தான் கொள்ளவேண்டும் என்பது ஒரு நியதியா? என்பது ஆராயத்தக்கது.

4. அன்னவாகலின் என்பது முன்னுள்ள பாடம். அது பொருத்தமில்ஃல.

5. இடைக்கிடந்த நிலம்—இடை கிடந்த நிலம் என்று பாடம் உள்ளது. அதுவே பொருத்தம். இடை—வெளி. இரு பக்கத்துச் சேஃனக்கும் நடுவே கிடந்த வெளி நிலம். இடத்திற் சேய—இடத்திஃனப்போலத் தூரிய. இஃது அண்மைத் தூரம் "தெய்வுஃனயிடத்திற் சேயகொல்' இ. வி. சுஙகூ-ம் சூத்திர உரைப் பாடம்.

சேய்மை அண்மை குணமாம் பிறவெனின்,—அற்றன்று; 'துடி யிடை' என்றவழி அதன் இடை நுணுக்கமுங் குணனாகும்,

அவ்வாறு கொள்வார்க்கு என்பது; எனவே நிறப்பண்பு அல்லனவெல்லாம் மெய்யுவமத்தின் வகையெனப்படுவனவாயின. குணமாதலொப்புமையான் அவை நிறப் பண்பிற்கு இனமென வும்படும். அவ்வாறு திரிபுடைமையின் அவற்றை விதந்தோதாது 'வகை' என்றதனாற் கொண்டானென்பது.

"தளிர்சிவந் தாங்குச் சிவந்த மேனி"

என்பது, உருவுவமத்தின் வகையெனப்படும்; என்னை? உவமத் தாற் கொள்ளப்பட்ட பொருள் [1] நிறமாயினும் அதனை வினை விரித்தாங்கு விரித்தமையின் அவ்வேறுபாடு நோக்கி வகை யெனப்பட்டது. பிறவும் அவ்வாறே கொள்க. இப்பகுதியுடைமை நோக்கி 'வகைபெற வந்த' என்றானென்பது. (க)

[வினை முதலிய நான்கும் கலந்தும் வருமென்று எய்திய திகந்துபடாமற் காத்தல்]

உஎஎ. விரவியும் வரூஉ மரபின வென்ப.

இஃது, எய்தியது இகந்துபடாமற் காக்கது; நான்கென மேல் (உஎசு) தொகை கொடுத்தமையின் அவை வேறு வருத லெய்தியதனை அவ்வாறேயன்றி விரவியும் வரும் என்றமையின்.

இ—ள்: அந்நான்கும் ஒரு பொருளோடு ஒரு பொருள் உவமஞ் செய்யும்வழி ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் விரவியும் வரும் அதன் மரபு என்றவாறு.

"செவ்வா னன்ன மேனி" (அகம். கடவுள் வாழ்த்து) என வண்ணம் ஒன்றுமேபற்றி உவமஞ் சென்றது.

"அவ்வா  

விலங்குபிறை யன்ன விலங்குவால்
வைவொயிற்று''

(அகம். கடவுள்.)

என்றவழி, [2] வண்ணத்தோடு வடிவுபற்றி
உவமஞ் சென்றது.

1. நிறம்—செம்மை.
அதனை—அச்செம்மை நிறத்தை. வினை
விரித்தாங்கு விரித்தது என்றது சிவந்தாங்குச்
சிவந்த என விரித்
தமையை.

2. வண்ணம்—வெண்மை, வடிவு—வளைவு.



"காயா மென்சினை தோய நீடிப்
பல்[1] றுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்த
ளணிமலர் நறுந்கா தூதுந் தும்பி
கையாடு வட்டிற் றோன்று
மையாடு சென்னிய மலைகிழ வோனே."
(அகம். க0௮)

என்புழி, ஆடுதற்றொழில்பற்றியும்[2]
வடிவுபற்றியும் வண்ணம்
பற்றியும் வந்தது. பிறவுமன்ன.
'மரபின' என்றதனான் அவை
அவ்வாறு விராய்வருத
லும் மரபே; [3] வேறுவேறு வருதலே மரபெனப்படாதெனக் கொள்க. (உ)

[பொருளினும் உவமை
உயர்ந்துவரல்
வேண்டுமெனல்]

உஎஅ. உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை

இஃது, எய்தாதது எய்துவித்தது.

இ—ள்: உவமையெனப்பட்டது உயர்ந்த
பொருளாகல் வேண்டும் என்றவாறு.

எனவே, உவமிக்கப்படும் பொருள்[4]
இழிந்துவரல்வேண்டு மென்பது,

"அரிமா வன்ன [5]அணங்குடைத் துப்பின்"

(பட்டின. ௨௯௮)

எனவும்,

1. துடுப்புப்போலும் பூவரும்பு. பூமடலுமாம். துடுப்பு—நெய்த்துடுப்பு. (அஃதாவது சுருக்கு சுருவம்) சூடாமணி நிகண்டு பா ௧௧.

2. வடிவு—வட்டம். வண்ணம் (-நிறம்), நீலவட்டாயின் நீலம். செம்மைவட்டாயின், வண்டு காந்தட்டாதின் அளைதல்பற்றியுவமையாம். காந்தள் கைக்கு வடிவும் நிறமும்பற்றி வந்த உவமையாகும்.

3. வேறுவேறு வருதல்மாத்திரம் மரபென்று கொள்ளப்படாது. விரவி வருதலும் மரபாகும் என்பது கருத்து.

4. இழிந்துவரல்—உவமையினும் இழிந்துவரல்.

5. அணங்கு—வருத்தம். இது வலிபற்றியது. வருத்துதல்பற்றி வினையுவமையாகும்.

வலியால்

[1] "மாரி யம்பின் மழைத்தோற் சோழர்"

(அகம். ௩௩௬) எனவும்,

[2] "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்"

(அகம். ௧எ௬) எனவும்,

"பொன் மேனி"

எனவும் வரும்.

இவற்றுள், உவமையுயர்ச்சியானே உவமிக்கப்படும்பொருட்குச் சிறப்பெய்துவித்தவாறு கண்டுகொள்க.

'உள்ளுங்காலே' என்றதனுன் 'முன்னத்தி னுணருங் கிளவி' (தொ. சொ. ௪௫௬) யான் உவமங் கோடலும், இழிந்த பொருள் உவமிப்பினும் உயர்ந்த குறிப்புப்படச் செயல்வேண்டு மெனவுங் கொள்க. அவை: 'என் [3] யானை', 'என்பாவை' என்றவழி, அவைபோலும் என்னுங் குறிப்புடையான், பொருள் கூறிற்றிலனாயினும், அவன் குறிப்பினுன் அவை வினையுவமை யெனவும் மெய்யுவமையெனவும்படும். [4] இவற்றுக்கு நிலைக்களங் காதலும் நலனும் வலியுமென்பது சொல்லுதும்; அவை பற்றுது சொல்லுதல் குற்றமாகலின்.

"அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு." (குறள். ௧௦௮௧)

1. மாரி—மேகம். அது மழையைப் பெய்து பயிர்களை வளர்த்துப் பயன்றரல்போல் அம்பும் பகைவரைக் கொன்று பொருட்பயன் விளைத்தலின் பயவுவமை என்பதற்கு உதாரணமாகக் காட்டினார். வென்வேல் என்று முன்னும், மழைத்தோல் என்று பின்னும் வருதலின், மாரியீகை என்னும் பாடம் பொருத்தமோ என்பது ஆராயத்தக்கது. 'மாரியீகை' தாமோதரம்பிள்ளை பதிப்பிற் பாடம். அவ்வாறே பேராசிரியர் பாடங்கொண்டு பயவுவமைக்குக் காட்டினாரோ என்பது ஆராயத்தக்கது.

2. கடல்—வடிவுவமை.

3. யானை—வினையுவமை.

பாவை—வடிவுவமை.

4. இவற்றுக்கு நிலைக்களங் காதலும் நலனும் வலியுமென்பது சொல்லுதும் என்பது. இவற்றுக்கு நிலைக்களம் சிறப்புங் காதலும் நலனும் வலியும் என்பது சொல்லும் என்றிருத்தல் வேண்டும். சொல்லும் என்றது ஆசிரியனை. அவன் சொல்லுதலை உஎகூ-ம், உஅ௦-ம் சூத்திரங்களானறிக.

என்பது, ஐயுற்று [1] முன்னத்தான்
உவமஞ்செய்தது. [2] தாமரை
யன்று முகமேயெனத் துணிந்தவழியும், [3] மழையன்று வண்
டிருத்தலிற் குழலேயெனப் பொருட்குக் காரணங் கொடுத்த
வழியும் [4] மதியங்கொல்லோ மறுவில்லையென்று
உவமைக் குறை பாடு கூறுதலும்,

"நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
யை[5]தேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளரும் கிளியு மன்று."

(கலி. ருரு)

என்பனவுமெல்லாம் அவை. இவற்றுண் [6]
மலையுஞ் சுனையும் உவமையின்மையின்
அவற்றைப் பிறையோடும் மதியோடும் உடன்
வைத்து உவமைபோலக் கூறி எதிர்மறுத்தது
என்னை யெனின்,—அவையாமாறு 'முதலுஞ்
சினையும்' என்புழிச் சொல்லுதும்.

"என்ற வியப்ப வென்றவை யெனுஅ" (தொ.

உவம. கக) என மேல்வருஞ் சூத்திரத்துள் என்றவென்பதோர் உவமவுருபு கூறினமையின் 'வாயென்ற பவளம்' எனவும், 'வாய் பவளமாக' எனவும், 'வாய் பவளம்' எனவும் வருவனவும் அக்குறிப் புவமையின் பகுதியெனவே படும். இவற்றை வேறுவேறு பெயர் கொடுத்து விரித்துக் கூறுது முன்னத்தி னுணர்வனவே [7] இவை யெல்லாமென்னுந் துணையே இலேசினாற் கூறி ஒழிந்ததென்னை யெனின்,—இவற்றாற் செய்யுள் செய்வார் செய்யும் [8] பொருட்

---

1. முன்னம்—குறிப்பு. ஐயவாய்பாட்டாற் கூறினும் அவை குறிப்பால் உவமையாதல் பெறப்படும் என்றபடி.

2. இதனைத் தண்டியாசிரியர் உண்மை உவமை என்பர்.

3. தேற்றவுவமை என்பர்.

4. விலக்குவமையுளடங்கும்.

5. தேய்ந்தன்று—தேய்ந்தது. ஏனையவுமன்ன.

6. மலை—மலையிடம். சுனை—சுனையிடம். வருஞ் சூத்திரத்து உரை நோக்குக.

7. இவையெல்லாம்—இம்முன்னமாதியவெல்லாம்.

8. பொருட்படை—பொருளடுக்கு.
பொருட்டிரள் எனினு மாம.



படைப் பகுதி எண்ணிறந்தனவாகலின், அப்பகுதியெல்லாங் கூறாது பொதுவகையான் வரையறைப்படும் இலக்கணமே கூறி யொழிந்தானென்பது. 'வாயென்ற பவளம்' எனவும், 'வாய் பவளமாக' எனவும், 'வாய் பவளம்' எனவும் வந்த [1] பவளக் குறிப்புவமைகளை இக்காலத்தார் உருவகமென்றே வழங்குப. இனி,

"வாய் பவளம்"

எனவும்,

"கண்ண் கருவிளை"

எனவும் பெயர்ப் பயனிலை வரின் அவற்றை ஒற்றுமை காட்டி உருவகம் என்று [2] ராகலின் அதுவும் உவமையெனவே படுமென் பது. (ரு)

[உவமை பிறக்குமிடம் இவை எனல்]

உஎகூ. சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பு நிலைக்கள மென்ப.

இதுவும், எய்தாதது எய்துவித்தது.

இ—ள்: வினை பயன் மெய் உரு என்பனபற்றி உவமை கூறுங்கால் இவை நான்கும் இடனாகப் பிறக்கும் உவமை என்றவாறு.

'நிலைக்களம்' என்பது, அவை அவ்வாறு உவமை செய்தற்கு முதலாகிய நிலைக்களமென்றவாறு.

> "முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
> [3] யரசவை யிருந்த தோற்றம் போலப்
> பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
> கோடியர் தலைவ கொண்ட தறிந்து." (பொருந. ருச)

என்பது, சிறப்பினாற் பெற்ற உவமமாகலிற் சிறப்பு நிலைக்களனாகப் பிறந்தது.

1. பவளம் என்ற சொல் ஈண்டு வேண்டியதில்லை.
2. ஆகலின் என்பது ஆயினும் என்றிருப்பது நலம்.
3. இப்பாட்டிற் போல என்பதைப் பாடல்பற்றிய என்பதனோடு முடிக்க. தோற்றம் அவைக்குச் சிறப்பளித்ததுபோலப் பாடலும் நிருத்தகீத வாச்சியத்தோடு கூடித் தோற்றம்பெற்றுப் பாட்டிற்குச் சிறப்பளித்தமையின், தோற்றம்போல என்பதைச் சிறப்பு நிலைக்களனாகப் பிறந்த வுவமை என்றுரர் என்க. சிறப்





[1] "ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்:"

(புறம். உடுக) என்புழி, அங்கரினது செயற்கை நலந் தோன்றக் கூறினமை யின் அதற்கு நிலைக்களன் நலனாயிற்று.

[2] "பாவை யன்ன பலராய் மாண்கவின்" (அகம். கூஅ) என்புழி மகள்கட் காதல் காரணமாக உவமை பிறந்தது; 'என் யானை' என்பதும் அது.

"அரிமா வன்ன வணங்குடைத் துப்பின்" (பட்டின. உகூஅ) என, ஒருவன் வலி காரணமாக உவமம் பிறந்தமையின் அதற்கு நிலைக்களம் அவன் வலியாயிற்று.

இவ்வாறு கூறவே, உயர்ந்த பொருளின் இழிந்ததெனப் பட்ட பொருள் யாதானும் இயைபில்லதொன்று கூறலாகாதெனவும், உவமையொடு முழுதும் ஒவ்வாமை மாத்திரையாகி அதனை

[3] டொக்கும் பொருண்மை உவமிக்கப்படும் பொருட்கண்ணும் உளவாகல் வேண்டுமெனவுங் கூறி, அவைதாமும் [4] பிறர் கொடுப்

பப் பெறுவனவும், ஒரு பொருட்கண் தோன்றிய [5] நன்மை
பற்றியவும், காதன் மிகுதியால் உளவாகக்கொண்டு உரைப்பன வும், தன்றன்மையால் [6] உளவாயின வலிபற்றினவுமென நான்கா

பாவது பிறர் கொடுக்கப் பெறுவது என்றும், இயல்புவகையா னன்றி விகாரவகையாற் பெறுவது என்றும் பேராசிரியர் கூறுவர்.

இனி, போல என்பதை இப்பாட்டின் இறுதியில் வரும் இன்மைதீர வந்தனன் என்பதனோடு முடித்துப் பயனுவமையாக நச்சினார்க்கினியர் கொள்வர். அம்முடிபின்படி, சிறப்பு நிலைக்கள மாகப் பிறந்த பயனுவமையாகக் கொள்ளுங்கால், தோற்றம் பெற்று அவை சிறப்புற்றதுபோல யானும் நின்பொருள் பெற் றுச் சிறப்படைய வந்தேன் என்பது கருத்தாகக் கொள்க. முந் திய முடிபே பேராசிரியர்க்குக் கருத்தென்பது, உதாரணங் காட்டுமிடத்து நான்கடியையுமே காட்டியதாலறியப்படுகின்றது.

1. ஓவம்—ஓவியம். வரைப்பு—நகர்.

2. பாவை—வடிவுவமை. மகளிற்கொண்ட காதல்பற்றிப் பாவை என்றலின் காதல்பற்றி என்றார். யானை என்பதும் காதல் நிலைக்களனாகப் பிறந்த வினையுவமை.

3. ஒக்கும் பொருள்—பொதுத்தன்மை.

4. பிறர் கொடுக்கப் பெறுவன—சிறப்பு.

5. நன்மைபற்றிய—நலம்பற்றி வருவன.

6. உளவாயினவாகிய வலி பற்றின என்க.

மென்றவாறு. இவற்றுக்கெல்லாம் வினை பயன் மெய் உரு என்னும் நான்குந் [1] தலைப்பெய்புமென்பது.

சிறப்பென்பது, உலகத்துள் இயல்புவகையானன்றி விகார வகையாற் பெறுஞ் சிறப்பு. நலனென்றது அழகு. காதலென்பது அந்நலனும் வலியும் இல்வழியும் உண்டாக்கியுரைப்பது. வலியென்பது தன்றன்மையானே உள்ளதோர் வலியெனக் கொள்க. இவற்றை நிலைக்களமெனவே இவை பற்றாது உவமம் பிறவாதென்பதாம். தன்மேல் வருகின்ற பகைவனைப், 'பகைவன் புலிபோலும்' என்று [2] அவன் வீரக் குறிப்பு அறியாமற் கூறுங் குறிப்பு இன்மையின் அவ்வுவமைக்குத் தோற்றம் ஆண்டில்லை; [3] தன் வினையுவமமாகவிற் றிரியாதாயினுமென்பது.(ச)

[இதுவுமது]

உ௮௦. கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்.

இது மேற்கூறிய நிலைக்களத்திற்கு ஓர் புறனடை.

இ—ள்: அங்கிலேக்களம் நான்கேயன்றிக் கிழக்கிடு பொருளோடு ஐந்தெனவும்படும் என்றவாறு.

கிழக்கிடு பொருளென்பது, கீழ்ப்படுக்கப்படும் பொருள்.

4 "கிளை இய குரலே கிழக்குவீழ்ந் தனவே"

(குறுந். ௩௩௭).

என்புழி, கீழ் வீழ்ந்தன என்பதனைக் கிழக்கு வீழ்ந்தன என்பவாகலின். ஒரு பொருளின் இழிபு கூறுவான் உவமத்தான் இழிபு தோன்றுவித்தலின் அதுவும் நிலைக்களமாமென்றவாறு.

---

1. தலைப்பெய்தல்—கூடல். நான்குந் தலைப்பெய்யுமெனவே பதின்மூன்றும் என்றபடி.

2. ஒருவன் தன் பகைவனை, அவனுடைய வீரக் குறிப்பை அறிதற்குமுன் பகைவன் புலிபோலும் என்று கூறுங் குறிப்பு இன்மையின் அவ்வுவமைக்குத் தோற்றம் ஆண்டு இல்லை என்பது கருத்து.

3. தன் என்பது தான் என்றிருப்பது நலம். தான் என்றது உவமையை. தன்வினை உவமமாதலிற் பிரியாதாயினும் என்று கண்ணழித்துப் பொருள் கொள்ளினுமமையும். ஆகலின்—இன், நீக்கம்.

4. கிழக்கு வீழ்ந்தன—கீழ் வீழ்ந்தன. என்றது தலையிற் கிளைத்த மெல்லிய மயிர் கீழே தாழ்ந்தன என்றபடி.

[1] "உள்ளூ தாவியிற் பைப்பய [2] நுணுகி"
(அகம். எக)
எனவும்,
[3] "அரவு நுங்கு மதியி னுதலொளி கரப்ப"
எனவும் வரும்.
இவை பொருளன்றி உவமையுங் கிழக்கிடப்பட்டனவா
லெனின், அங்ஙனமாயினும் அவை பொருளோடு சார்த்தி நோக்க
உயர்ந்தனவெனப்படும்.
(ரு)

[முதல் சினைபற்றி உவமை வருங்கால்
இவ்வாறு வரல்வேண்டும் எனல்]
உ௮௧. முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு
நுதலிய மரபி னுரியவை யுரிய.
இது, மேற்கூறி வருகின்ற உவமை,

முதல்சினைபற்றி வருங்
கால் இன்னவாறாகவென்கின்றது.
இ—ள்: முதற்பொருளுஞ்
சினைப்பொருளும் என்னும் அவ்
விரண்டு பொருட்குங் குறித்தவகையான்
மரபுபடவரின் உரி
யவை உரியவாம் என்றவாறு.
இதன் கருத்து: முதலொடு முதலும்,
சினையொடு சினை
யும், முதலொடு சினையும், சினையொடு
முதலும் வேண்டியவாற்
றான் உவமஞ் செய்தற்கு உரியவெனவும்,
அங்ஙனஞ் செய்யுங்
கால் மரபு பிறழாமைச் செய்யப்படுமெனவுங்
கூறியவாறு.
சு "வரைபுரையு மழகளிற்றின் மிசை"
(புறம். ரு அ)
என்பது, முதற்குமுதலே வந்து
உவமையாயிற்று;
ரு "தாமரை புரையுங் காமர் சேவடி"
(குறுந். கடவுள்)

என்பது சினைக்குச் சினையே வந்து உவமையாயிற்று.

1. உள்ளது ஆவி — கண்ணாடியின் ஊறிய ஆவி.

உள்ளே (வாயான்)

2. நுணுகல்—சுருங்கல் (குறைதல்). நுணுகுதற்கு இழிவுபற்றி வந்த உவமை. இழிபு—குறைவு.

ஆவி

3. அரவு—பாம்பு. அரவு நுங்குமதி ஒளிமறைய என்றபடி.

ஒளிமறைதல்போல

4. வரையும் களிறும் முதற் பொருள்கள்.

5. தாமரை—தாமரைப்பூ. இது சினை.



"நெருப்பி னன்ன சிறுகட் பன்றி"

(குறுந். கசுo) என்பது, முதல் உவமமாகப் பொருள் சினையாகி வந்தது.

" அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் கா ணூஉ.."

(கலி. அச) என்பது, சினையுவமமாக உவமிக்கப்படும் பொருண்முதலாயிற்று.

'நுதலிய மரபு' என்றதனால்,

" விசும்பி னன்ன [1] சூழ்ச்சி."
(புறம். உ)

என்றக்கால், விசும்பென்பது முதலாதல் கருதி புணர்தல்வேண்டும்; முதற் சினைப்பகுதி அதற்கு இன்மையினென்பது. இனி,

" வேயமன் றன்று மலையு மன்று "
(கலி. ருரு) என்றவழியும், மலைநோக்காது மலையுள்வேயெழும் இடங்கருதி அவ்விடமன்றென்றவாறெனக் கொள்க.

" பூவமன் றன்று சுனையு மன்று "
(கலி. ருரு) என்பதற்கும் ஒக்கும்.

உரிய என்னாது 'உரியவை' என்றதனால் திணையும் பாலும் மயங்கிவரும் உவமையுங் கொள்ளப்படும். அவை,

" மாரி யானையின் வந்துநின் றனனே "

(குறுந். கசுக) என்பது திணை மயங்கிற்று.

[2] "கூவற்,
குராலான் படுதுய ரிரவிற் கண்ட
வுயர்திணை [3] யூமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே"

(குறு. உஉச) என்பது உயர்திணைப்பாள் மயங்கிற்று.

"கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்"

(பெரும்பாண். எரு) என்பது, ஒருமை பன்மை மயங்கிற்று.

"இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்று" (அகம். கடவுள்)

என்பது [4] அஃறிணைப்பான் மயங்கிற்று; பிறவுமன்ன.

---

1. சூழ்ச்சி—ஆராய்ச்சி.
2. கூவற்குராலான்—கிணற்றில் வீழ்ந்த குராற்பசு. குராற்பசு—கபிலைப்பசு.

3. ஊமன் — ஆண் பால்.

4. அஃறிணைப்பால் என்றது ஒருமை பன்மையை. எயிறு பன்றிக் கோடுகள். இவை பன்மை.



இக்கருத்து அறியார் இவற்றையும், "செப்பினும் வினவினுஞ் சினைமுதற் கிளவிக்கு"

(தொ. சொ. கசு)

என்புழி, இலேசுகொண்டு உரைப்ப. (சு)

[தொகையுவமையிற் பொதுத்தன்மையை அறியுமாறு இவ்வாறெனல்]

உஅஉ. [1] சுட்டிக் கூறா வுவம மாயிற் பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே.

இஃது, எய்தாதது எய்துவித்தது.

இ—ள்: உவமத்திற்கும் பொருட்கும் பொதுவாகிய ஒப்பு
மைக் குணம் நான்கினையும் விதந்து சொல்லி உரையாதவழி
அவ்விரண்டனையும் எதிர்பெய்து கூட்டி ஆண்டுப் பொருந்திய
தொன்று பொருந்தியதுபற்றி வினை பயன் மெய் உருவென்
னும் நான்கினுள் இன்னதென்று சொல்லப்படும் என்றவாறு.

'பவளம்போற் செந்துவர்வாய்' என்பது, சுட்டிக்கூறிய வுவமம்; என்னை? இரண்டிற்கும் பொதுவாகிய செம்மைக்
குணத்தினைச் சொல்லியே உவமஞ் சொல்லினமையின். அது 'பவளவாய்' என்கின்றவழிச் சுட்டிக்கூறா வுவமமாம். ஆண்டுப் பவளத்தினையும் வாயினையுங் கூட்டிப்பார்த்துச் செம்மைக்குணம்
பற்றி உவமஞ் செய்ததென்று அறியப்படும்; அல்லாக்கால், வல்லென்ற கல்லிற்கும் மெல்லென்ற இதழிற்கும் உள்ளதோர் ஒப்புமை ஆண்டில்லையென்பது; பிறவுமன்ன. (எ)

[உவமையும் பொருளும் ஒத்துவரல் வேண்டுமெனல்] உஅ௩. [2] உவமையும் பொருளு மொத்தல் வேண்டும்.

இதுவும் அது.

இ—ள்: உவமானமும் பொருளுந் தம்மின் ஒத்தனவென்று உலகத்தார் மகிழ்ச்சி செய்தல்வேண்டும் என்றவாறு.

---

1. சுட்டிக்கூறு வுவமையைத் தொகையுவமை என்பர் தண்டியாசிரியர். பொதுத்தன்மை தொகுவது தொகையுவமை என்றும் உருபு கூடத்தொகுவது தொகையுவமை என்றும் இருபாலாகக் கூறுவர் ஆசிரியர்.

2. இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் இரட்டைக் கிளவியானும் நிரனிறை சுண்ணமாய் வரினும் அடையடுத்து வரினும்



"மயிற்றோகை போலுங் கூந்தல்"
என்பதன்றிக்,

"காக்கைச் சிறகன்ன கருமயிர்"

யான்று சொல்லின்,
அஃதொத்ததெனப்படாதென்றவாறு.

"புலிபோலப் பாய்ந்தான்"

என்பதன்றிப் பிழையாமற் பாயும்
என்பதேபற்றிப் .

"பூசைபோலப் பாய்ந்தான்" எனின், அதுவும்
ஒப்பென்று கொள்ளாது உலகமென்றவாறு. ஈண்டு
ஒத்தவென்பதனை,

1 "ஒத்த தறிவான்" (குறள்.
உஉ—ச) என்பதுபோலக் கொள்க.

[ உவமேயமும் உவமமாகக்
கூறப்படுமெனல் ] உஅச. பொருளே யுவமஞ்
செய்தனர் மொழியினு
மருளறு சிறப்பினஃ துவம மாகும்.

இது மேற்கூறியவாறன்றி வருவதோர்
உவமை விகற்பங் கூறுகின்றது.

இ—ள்: 'உயர்ந்ததன் மேற்றே
யுள்ளுங்காலை' (உஎஅ)

என்புழி, உவமம் உயர்ந்துவரல் வேண்டுமென்றான்; இனிப் பொருளினை உவமமாக்கி உவமையை உவமிக்கப்படும் பொருளாக்கி மயங்கக் கூறுங்காலும் [2] அஃது உவமம்போல உயர்ந்த தாக்கி வைக்கப்படும் என்றவாறு.

"வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை" (சிறுபாண். எஉ—ங)

தொழிற்பட்டு வரினும் ஒன்றும் பலவுமாகி வரினும் உபமேயமு மவ்வாறே வருதல்வேண்டும். அவ்வழியன்றி மிக்குங் குறைந்தும் வருவது குற்றமென்றவாரும் என்று பொருள்கொள்வர். அது பொருத்தமாகவே தோன்றுகின்றது. இதனை உவமையும் பொருளு மொத்தல்வேண்டும்; அன்றேல் வழுவாம் என்று அபவாதம் விதிக்க வந்ததாகக் கோடலுமாம். சரசுவதி கண்டாபரணம் என்னும் வடநூற் கருத்து மிதனோடொப்புடையது. அபவாதம்—வழு.

1. ஒத்தது—உலகத்தார் ஒப்புக்கொண்டது. 2. அஃது—உவமேயம். (பொருள்)



என்றவழி, வருமுலையும் திருமுகமும்

ஈண்டு உவமையாகி முகை

யும் பூவும் பொருளாயின; [1] ஆண்டு முலையும் முகமும் உயர்ந்த

வாகச் செய்தமையின் அவையே உவமமாயின.

இவை உவமத்தொகையாங்கால் 'முலைக்கோங்கம்', 'முகத் தாமரை' எனப்படும். இவற்றை வேறு உருவகமென்றும் பிறர் மயங்குப. சிறப்பென்றதனுன் ஒப்புமை மாத்திரையன்றித் தான் புனைந்துரைக்கக் கருதிய முலையினையும் முகத்தினையும் உயர்ந்த பொருளாகிய உவமத்தினும் உயர்ந்தவாகச் சிறப்பித் துரைத்தானென்பது. 'மருளறு சிறப்பின்' என்றதனுன், அங் ஙனஞ் சிறப்பிக்குங்கால் மயக்கந்தீரச் சிறப்பித்தல்வேண்டும். [2] அஃது உலகினுள் உயர்ந்ததென்று [3] ஒப்ப முடிந்த பொரு ளினையுஞ் சிறப்பித்தற்கு உவமஞ் செய்பவோவெனிற் செய்யா ரென்பது; என்னை? 'முகமொக்குந் தாமரை' என்றால் முகத் திற்குந் தாமரைக்குஞ் சிறப்புடைமை மயங்கி வாராது; பின் னும் முகத்திற்கே சிறப்பாமென்பது கருத்து. அஃதெனப்பட் டது [4] பொருளாகலான் 'உயர்ந்ததன்மேற்று' (உஎஅ) என் னும் விதி அப்பொருட்கு எய்துவிக்க. (கூ)

[பெருமையும் சிறுமையுமாய உவமைகளும் சிறப்பிற் றீராவாயிற் கொள்ளப்படுமெனல்]

உஅரு. பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக் குறிப்பின் வருஉ நெறிப்பா டுடைய.

இஃது, உவமத்திற்கு ஆவதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

1. ஆண்டு—பொருள் உவமையாயவிடத்து. செய்தமையின் என்பதில் செய்தமைக்குக் கருத்தா கவி.

2. அஃது—அஃதேல் என்றிருப்பது நலம்.

3. ஒப்ப முடிந்த பொருள் — ஏற்றுக்கொள்ள (அங்கீகரிக்க) முடிந்த பொருள். அஃது உவமை. முலையன்ன கோங்கம் என்றவழிக் கோங்கமுகை இயல்பாகச் சிறந்தது. அதனை முலையோடுவமித்தவழி முலைக்கே சிறப்பாகுமன்றி இயல்பாகச் சிறந்த கோங்கிற்குச் சிறப்பாகாது என்றபடி. முகமொக்குந் தாமரை என்பதற்கும் அவ்வாறே கொள்க. முடித்த—முடிந்த என்றிருப்பது நலம். மாறிக் கூறுங்கால் உவமையாக வரும் முலைக்குச் சிறப்பு ஆக்கிக்கொண்டதன்றி இயல்பன்று என்றபடி.

4. பொருள்—உவமேயம்.



இ—ள்: இறப்ப உயர்வும் இறப்ப இழிவும் உவமிக்குங்கால் இன்னவாகச் செய்யாது சிறப்புடைமையில் தீராவாகிக் கேட்டார்

மனங்கொள்ளுமாற்றான் வருதலே வழக்கு வலியாக வுடைய என்றவாறு.

"அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோ
ருசாஅப் போல வுண்டே நுசுப்பு."

என்றவழி, உலகத்தார் அவாப்போலப் பெரிதாகிய அல்குலெனக் கூறிபெரும் பரப்பிற்றாகக் கூறினும் அது சிறப்பிற்றீராக் குறிப் பிற்றுதல் வழக்குண்டாகலின் உடம்படப்படும் என்றவாறு.

"மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்."

(குறுந். கஉகூ) என்றவழி, கடல்போன்றது கூந்தலெனவும், கடனடு எழுந்த எண்ணாட் பக்கத்து மதிபோன்றது நுதலெனவுங் கூறினான். அதனாற் கடல்போலும் மயிரென்றதும், பல காவதப் பரப் புடைய மதிபோன்றது நுதலென்றதுங் கழியப் பெரியவாயினும், அது வழக்காதலிற் சிறப்பிற்றீராது மனங்கொள வந்ததெனவே படும்.

"சுரும்பு [2]மூசாச் சுடர்ப்பூங் காந்தள்"

(திருமுரு. சங) என்பதும் அது.

"சான்றோ

[3]ருசாஅப் போல வுண்டே நுசுப்பு''

என்றவழியும் நுண்ணுணர்வின் ஆராய்ச்சி ஒருவர்க்கும் புலனாகாததனை ஒக்கும் இடையென்றமையின் அதுவுங் கழியச் சிறிதாக உவமித்தார்.

"யானை யனையவர் நட்பொரீஇ [4]நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்''

(நால. உகரு) என்பதும் அது. இவையுஞ் (சிறுமையுஞ்) சிறப்பிற்றீராக் குறிப்பின் வந்த [5]வழக்காறல் அமைந்தனவென்பது. பிறவு மன்ன.

1. கதுப்பு—முற்பக்க மயிர்.
2. மூசாத—மொய்யாத.
3. உசாஅ—ஆராய்ச்சி. நுண்மைபற்றிய உவமை.
4. நாய் இழிந்ததாயினும நட்புபற்றிக் கூறலின் சிறப்பிற் றீராது என்றபடி. இவையும் அமைந்தன என இயையும்.
5. வழக்காதலின் என்றிருப்பது நலம்.

இவ்வாறன்றி ' மேரு மால்வரை காம்பொத்து விண்முகடு குடையொத்து விண்மீன் கணம் முத்துப்போன்றன ' என வடிவு பற்றி உவமங் கூறுதல் [1] தமிழ் வழக்காகின்றதென்பது.

இனி,

[2] " வள்ளத்தி னீர்கொண் டுமிழ்ந்த முகிலைச்சாந்து மறுகிற்பரந்
தள்ளல் யானையெல்லா மடிவழுக் கினவே."

என்பதோவெனின், அவ்வாற்றானும் இன்பங் கொள்வார்க்கு அவையும் இழுக்கில் என்பது.

" சோறு வாக்கிய கொழுங் கஞ்சி
யாறு போலப் பரந்தொழுகி."

(பட்டின. ௪௪—௪௫)

என்பதோவெனின், யாறென்ற துணையானே பேர்யாறெனக் கொண்டு உலகிறந்தனவாகாமைக்கன்றே,

[3] " ஏறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி."

(பட்டின. சகூ—சஎ) என்பதாயிற்றென்பது.

(கo)

[ உவம உருபுக ளிவையெனல் ]

உஅகூ. அவைதாம்,
அன்ன வேய்ப்ப வுறழ வொப்ப
வென்ன மான வென்றவை யெனாஅ
வொன்ற வொடுங்க வொட்ட வாங்க
வென்ற வியப்ப வென்றவை
யெனாஅ
வெள்ள விழைய விறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப வாங்கவை
யெனாஅக்
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப வாங்கவை யெனாஅப்
புல்லப் பொருவப் பொற்பப் போல

1. தமிழ் என்பது தமீஇ என்றும் பாடமுள்ளது. இதுவும் பெருமைபற்றியதாயினும் சிறப்பிற்சீராமையிற் றழுவப்பட்டு வழக்காகின்றது என்பது கருத்து. தமிழ் வழக்காகின்றது என்பதும் பொருந்துமேற் கொள்க.

2. வள்ளம்—சிறு கிண்ணம். மகளிரின்

மிகுந் கூறலின்

இதுவும் இழுக்கில என்றபடி.

3. பேராறு ஏறுழக்கச் சேருகாது; கெழுமாது; ஆதலால் சிற்றுறென்றபடி.

தேரோடத் துகள்

வியல்]

பொருளதிகாரம்

கஙக

வெல்ல வீழ வாங்கவை யெனாஅ
நாட நளிய நடுங்க நந்த
வோடப் புரைய வென்றவை யெனாஅ
வாறு றவையு மன்ன பிறவுங்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே.

இஃது, உவமத்தினையும் பொருளினையும் ஒப்பிக்குங்கால் இடைவருஞ் சொல் இனைத்தென்கின்றது. 'அவைதாம்' என் ...து வினை பயன் மெய் உருவென்னு நான்குவகையு மென்ற வாறு.

இ—ள்: இவை எண்ணப்பட்ட

முப்பத்தாறு சொல்லும் இவையேபோல்வன பிறவும் வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் வேறுபடு குறிப்பினவாகி வரும் என்றவாறு.

'ஆறுறவையும்' என்பது அவை முப்பத்தாறு மென்ற வாறு, 'பல்குறிப்பின' என்பது அவை இடைச்சொல்லாகித் தொக்கு வருவனவுந் தொகாதே நிற்பனவும் வினைச்சொல்லாகி வேறுபட நிற்பனவுமெனப் பலவாமென்றவாறு.

இவ்வோதிய வாய்பாடெல்லாம் நான்கு உவமத்திற்கும் பொதுவென்பது ஈண்டுக்கூறி, இனி அவை [1] சிறப்புவகையான் உரியவாறு இதுவென்பது மேற்கூறுகின்றான்.

'பிறவும்' என்பதனான் எடுத்தோதினவேயன்றி நேர நோக்க துணைப்ப மலைய ஆர அமர அனைய ஏர ஏர்ப்ப செத்து அற்று கெழுவ என்றறற்றொடக்கத்தன பலவும், ஐந்தாம் வேற்றுமைப் பொருள்பற்றி வருவனவும், எனவென்னெச்சங்கள்பற்றி வருவனவும், பிறவுமெல்லாங் கொள்க. ஈண்டு எடுத்தோதியவற்றுள் [2] வரையறை வகையுமென

மேற்கூறப்படுவன பொது
வகையான் வருமாற்றுக்கும் உதாரணம், அவற்றை [3] உரிமை

1. சிறப்புவகை என்றது வினை பயன் மெய் உரு என்பவற்றிற்குத் தனித்தனி உரியவாம் வகையை.
2. வரையறை வகையவென்றது, வினையுவமை இவை பயனுவமை இவை என்றாற்போல வரையறை செய்யப்பட்ட வகையை யுடையவற்றை. கூறப்படுவன வருமாற்றுக்கும் என இயைக்க.

3. உரிமைவகை என்றது வினைக்குரியன இவை பயனுக்குரியன இவை என உரிமை கூறும் வகையை. என்றது சிறப்புச் சூத்திரத்துட் காட்டும் உதாரணங்களை.


வகையான் உதாரணங் காட்டும்வழிக் காட்டுதும். ஆண்டு எடுத்
தோதாதன ஆறெனப்படும்; அவை, ஒன்ற என்ற மாற்ற
பொற்ப நாட நடுங்க என்பன. அஃதேல் ஆண்டு வரையறை
கூறப்பட்டன எண்ணான்கு முப்பத்திரண்டாயினவாறென்னை,—
முப்பதேயாகல்வேண்டுமால்
அவையெனின், அவற்றோடு புற

னடையாற் கொண்டவற்றுள்ளும் நேரா நோக்க என்னும் இரண்டு
கூட்டி ஒதினான் ஆண்டென்பது.

அவை; பொதுவகையான் வருமாறு :—

"வே[1]லொன்று கண்ணார்மேல் வேட்கைநோய் தீராமோ
கோலொன்று கண்ணொன்று கொண்டு."
என்பது வினையுவமம்.

"மழையொன்று வண்டடக்கை வள்ளியோர் பாடி."
என்பது பயனுவமம்.

"வேயொன்று தோளொருபால் வெற்பொன்று தோளொருபால்."
என்பது மெய்யுவமம்.

"குன்றியுங் கோபமு மொன்றிய வுடுக்கை."
என்பது உருவுவமம்.

ஒழிந்தனவும் இவ்வாறே நான்கு பகுதியும்பற்றி வருமாறு
கண்டுகொள்க.

'வாயென்ற பவளம்' என்றது பண்புவமைபற்றி வந்தது. இது 'வாயாகிய பவளம்' என்று ஆக்கச் சொல்லானும் வரும்.

"மணிநிற [2] மாற்றிய மாமேனி"

என்பது உருவுவமம்.

"மதியம் பொற்ப மலர்ந்த வாண்முகம்"

என்பது மெய்யுவமம்.

"வேயொடு [3] நாடிய தோள்"

என்பது, நாடவென்பது வந்த மெய்யுவமம்.

"படங்கெழு நாக [4] நடுங்கு மல்குல்"

என்புழி, நடுங்கவென்பது மெய்யுவமம்பற்றி வந்தவாறு. இவ் வோதிய வாய்பாட்டோடு பொருந்தவருஞ் சொல்லெல்லாம்

---

1. ஒன்ற என்னும் உவம உருபிற்குதாரணம்.
2. மாற்ற என்பதற் குதாரணம்.
3. நாட என்பதற் குதாரணம்.
4. நடுங்க என்பதற் குதாரணம்.



கஉஉ 'பல்குறிப்பின' என்பதனாற்

கொள்ளப்படும். இப்பகுதியெல்லாம் புறனடையாற் கொள்வனவற்றிற்கும் ஒக்கும். இச்சொற் பரப்பெல்லாம் நோக்கி,

"உவமச் சொல்லே வரம்பிகந் தனவே"

என்று ஓதி உரைப்ப; அவை அவ்வச் சொல்லுள் அடங்குமாற்றான் வரம்பிகந்தனவாகா வென்பது.

இனி, 'பிறவும்' என்றதனால் ஓதப்பட்டன வருமாறு:

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று."

(குற. ௨௨) என்பதனுள், துணைப்பவென்பதூஉம் அற்றென்பதூஉம் வந்தன.

"குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்." (குற. ௯௬௫) என்று அனையவென்பது வந்தது. பிறவுமன்ன.

"கயமூழ்கு மகளிர்[1] கண்ணின் மாறும்."

(குறு. ௯) என, இன்வேற்றுமையும் உவமவுருபோடு வந்தது.

"குளித்துப் பொருகயலிற் கண்பனி மல்க."

என்பது உவமவுருபின்றி இன்னுருபு[2]

தன்பொருட்கண்ணும் வந்தது.

" தாதுணம் புறவெனத் துதைந்தநின்

னெழினலம்."

என்பது, எனவெனெச்சத்தால் உவமம் வந்தது. [3]

பிறவுமன்ன.

இவை எல்லாம் வரைவின்றி நான்குவமமும்பற்றி வருமாறு கண்டுகொள்க. ஐந்தாம் வேற்றுமைப் பொருள் வந்த உவமங்களும் பிறவும்

உவமத்தொகையெனப்படா; தொகைப்

படாமையி [4] னென்பது. * அங்ஙனந் தொகைப்பட்ட வழியும் மற்று [5] மேலுரிமை கூறுகின்றதாமென்பது.

---

1. கண்ணின்—இன்னைச்சாரியை என்றுகொண்டு செய்யுள் விகாரத்தால் இரண்டாவது தொகச்சாரியை நின்றதெனலாம்.

2. தன்பொருள்—ஒப்புப் பொருள். ஐந்தாம் வேற்றுமைக்குரிய ஒப்புப் பொருள் என்றபடி.

3. பிறவுமென்றது எனவென் னெச்ச

முதலியவற்றை.

4. 'என்பது' என்றது வேண்டியதில்லை.

5. மேலுரிமை கூறுகின்றதாமென்பது என்றது உக-ம் சூத்திரம் நோக்கி. கூறுகின்றது—கூறப்படுகின்றது. கூறுகின்றுமென்பது என்று மிருந்திருக்கலாம். தொகைப்படல்—உருபுகள் தொகைப்பட்டுவரல். தொகை—தொகுதல்.

* ஈண்டு வாக்கியம்

விடப்பட்டிருத்தல்வேண்டும்.

"மதியொத்தது மாசற்ற திருமுகம்."

என்றவழி, உவமமாயினும் உவமத்தொகையெனப்படாது [1] தொகைப்பாடின்மையினென்பது. (கக)

[ வினை உவம உருபுகளிவையெனல் ]

உ௮எ. அன்ன வாங்க மான விறப்ப
வென்ன வுறழத் தகைய நோக்கொடு
கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்.

இது, மேற் பொதுவகையாற் கூறியவாறன்றி வினை யுவமைக்கட் சிறந்து வருவன இவையென வரைந்து கூறுகின்றது.

இ—ள்: இவ்வெட்டும் வினையுவமம் என்றவாறு.

"எரியகைந் தன்ன தாமரைப் பழனத்து."

(அகம். கoசு) எனவும்,

"கயநா டியானையின் முகனமர்ந் தாங்கு."

(அகம். சு)

எனவும்,

"கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்."

(குறுந். சு)

எனவும,

"புலிவிறப்ப வொலி தோற்றலின்."

எனவும்,

"புலியென்னக் [2] கலிசிறந் துராஅய்."

எனவும்,

"மின்னுற [3] மிமைப்பிற் சென்னிப் பொற்ப."

(திருமுரு. அரு) எனவும்,

"பொருகளிற் [4] றெருத்திற் புலித்தகைப் பாய்த்துள்." எனவும்,

---

1. தொகைப்பாடின்மையின்—தொகைப்படுதலின்மையின். ஒத்தது என்பது முற்றாய் நின்று முகத்திற்குப் பயனிலையாதலின்; ஆண்டுத் தொகைப்பாடில்லை என்றபடி. மதிமுகம் எனவரிற்றான் தொகையாகும். இஃது உவம உருபே பயனிலையாய் விரிந்து நிற்றலின் தொகுக்கமுடியாது என்றபடி.

2. கலி—ஒலி.

3. இமைப்பு—விளக்கம்.

4. எருத்து—பிடர்.

"மாஞேக்கு நோக்கு மடநடை யாயத்தார்.
எனவும் வரும்.

இனிக்,

"கார்மழை முழக்கிசை கடுக்கும்."
எனவும்,

"யாழ்கெழு மணிமிடற் றந்தணன்."
(அகம். கடவுள்) எனவும்,

"ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல."
(அகம். உஉ) எனவும்,

[1] "ஒழுகை நோன்பக டொப்பக் குழீஇ."
எனவும்,

"குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவிங்கு [2]
திவவின்."

(பெரும். கச)

எனவும், பிறவாய்பாட்டாற் சிறுபான்மை வரும் வினையுவமம் பொது விதியாற் கொள்ளப்படும்.

பிறவுமன்ன. (கஉ)

உசஅ. அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்.

இஃது, எய்தியது இகந்துபடாமற் காத்தது.

இ—ள்: வினைக்கே உரிமையெய்தியதாகக் கூறிய அன்ன வென்பது நான்குவமைக்கும் உரிமையொக்கவரும் என்றவாறு.

அவை:—

" மாரியன்ன வண்கை."

(புறம். கருந) எனவும்,

" இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்று."

(அகம். கடவுள்)

எனவும்,

" செவ்வா னன்ன மேனி. (அகம். கடவுள்) எனவும் [3] ஒழிந்த மூன்றற்கும் பெருவரவினான் வந்தவாறு வழக்கு நோக்கி உணர்க. (கரு)

---

1. ஒழுகை—சகடம். பகடு—எருமையாண்.
2. திவவு—நரம்புக்கட்டு.

3. ஒழிந்தமூன்று—வினையொழிந்த பயன் மெய் உரு என்ற மூன்று.



[பயவுவம உருபுக ளிவையெனல்]

உ௮௬. எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல விழ
வென்றுங் கெட்டே பயனிலை யுவமம்.

இது, முறையானே பயனிலை யுவமைக்குச் சிறந்த வாய்பாடு இவையென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இவை எட்டும் பயனிலையுவமம் என்றவாறு.

[1] "எழிலி வான மெள்ளினன் றருஉங்

[2] "கவிகை வண்மைக் கடுமான் றோன்றல்."
எனவும்,
"மழைவிழை தடக்கை வாய்வா [3] ளெவ்வி."
எனவும்,
"புத்தே ளுலகிற் [4] பொன்மரம் புல்ல."
எனவும்,
"விண்பொரு புகழ் விறல் வஞ்சி."
(புறம். கக)
எனவும்,
"கார்கள்ள வுற்ற பேரிசை யுதவி."
எனவும்,
[5] "இருநிதி மிக்கும் பெருவள் ளீகை."
எனவும்,
"விங்கு [6] சுரை நல்லான் வென்ற வீகை."
எனவும்,

"விரிபுனற் பேர்யாறு விழ யாவதும்
வரையாது சுரக்கு முரைசா றோன்றல்."
எனவும் இவை ஓதியமுறையானே
பயவுவமைபற்றி வந்தன. இவை எட்டும்
'பெருவரவின' எனவே, சிறுவரவினுள்

"அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்."
எனவும்,

---

1. எழிலி—மேகம்.
2. கவிகை—இடக்கவிந்த கை.

3. எவ்வி—ஒரு வள்ளல்.

4. பொன்மரம்—கற்பகம்.

5. இருநிதி — சங்கநிதி பதுமநிதி குபேரனை. இஃது ஆகுபெயர். உடையவன். என்றது

6. சுரை—மூலமடி.



"மகன்று யாதல் புரைவதா லெனவே." (அகம். கசு)

எனவும்,

"ஊறுநீ ரமிழ் தேய்க்கு மெயிற்றாய்." (கலி. ௨0)

எனவும்,

"பல்லோ ருவந்த வுவகை யெல்லா
மென்னுட் பெய்தந் தற்றே."

எனவும்,

"யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தருஉம்." (கலி. ௨௬)

எனவும்,

"உருமெனச் [1] சிலைக்கு மூக்கமொடு."

எனவும்,

"யாழ் [2]செத்,
திருங்கல் விடரளை யசுண வோர்க்கும்." (அகம். அஅ)

எனவும்,

"செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை." (முரு. ரு)

எனவும்,

"விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்து." (பத். மலை. உ)

எனவும் வரும்; பிறவுமன்ன. மேலைச் சூத்திரத்திற் சொல்லிய வாறே இதற்கும் வேண்டுவன உரைத்துக்கொள்க. (கச)

[ மெய்யுவம உருபுக ளிவையெனல் ]

உகூ௦. கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய
ஒட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென்
றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்.

இது, முறையானே மெய்யுவமத்திற்குரிய வாய்பாடு கூறுகின்றது.

இ—ள் : இவ்வெட்டும் மெய்யுவமம் என்றவாறு.

"நீர்வார் [3] நிகர்மலர் கடுப்ப."

எனவும்,

"மோட்டிரும் பாறை யீட்டு [4] வட் டேய்ப்ப." (அகம். கரு)

எனவும்,

---

1. சிலைத்தல்—ஒலித்தல்.

2. ஒசத்து—கருதி.

3. நிகர்மலர் — இணைமலர் (தம்முளொத்தமலர்). நிகர்—ஒளியுமாம்.

4. வட்டு—உருண்டை.

"வேய்மருள் பணைத்தோள் ஞெகிழ."

(குறு. ருகஅ) எனவும்,

"உரல் புரை பாவடி."

(கலி. உக) எனவும்,

"முத்துடை [1] வான்கோ டொட்டிய முலைமிசை."

எனவும்,

"பாம்புரு வொடுங்க வாங்கிய நுசுப்பின்."

எனவும்,

"செந்தீ யொட்டிய வெஞ்சுடர்ப் பரிதி."

எனவும்,

"கண்ணொடு நிகர்க்கும் கழிப்பூங் குவளை."

எனவும், இவை ஓதிய முறையானே மெய்யுவமத்துக்கண் வந்தவாறு.

இவற்றை உரிமை கூறிப் பெருவரவினவெனவே ஒழிந்தனவுஞ் சிறுபான்மை வருமென்பதூஉம் அவை பொதுச் சூத்திரத்தான் (உஅக) அடங்குமென்பதூஉங் கொள்க.

அவை :—

" கடல்போற் றோன்றல காடிறந் தோரே."[1]

(அகம். க) எனவும்,

" அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி."[3]

(அகம். கக) எனவும்,

" புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்."

(அகம். கஉ) எனவும்,

" சேயிதழ் முனைய வாகி"

(அகம். ககூ)

எனவும,

" மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ
வரிற்குங்கும்." (கலி. உ0) எனவும்,

" கண்போன் மலர்ந்த சுனையும்."

எனவும்,

" நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த."

(கலி. உஉ) எனவும்,

" முழவுறழ் தடக்கையி னியல வேந்தி."

(முருகு. உகரு)

1. வான்கோடு—வெண்கோடு.
2. இறந்தோர்—கடந்தோர்.
3. சுடர்நெடுங்கொடி—விளக்கின் நெடிய வரிசை. வியல்]

எனவும் வரும். இவை புறனடையாற் கொண்டனவிழ்ந் எடுத்தோதியனவும் பொதுவிதியான் வந்தவாறு." (கரு)

[ உரு(நிற)வுவம உருபுக ளிவையெனல் ] உ௬௬. போல மறுப்ப வொப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றொத்துவரு கிளவி யுருவி னுவமம்.

இது, நான்காம் எண்ணு முறைமைக்கண் நின்ற உருவுவ மத்திற்குரிய வாய்பாடு கூறுகின்றது.

இ—ள் : இவ்வெட்டும் உருவுவமம் என்றவாறு.

அவை :—

" தன்சொல் லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோனே."

(ஐங்குறு. ௪௧)

எனவும்,

1 " மணிநிற மறுத்த மலர்ப்பூங் காயா."

எனவும்,

"ஒண்செங் காந்த ளொக்கு நின்னிறம்." எனவும்,

"வெயிலொளி [2] காய்த்த விளங்குமணி
யழுத்தின." எனவும்,

[3] "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்."
(அகம். கடவுள்)

எனவும்,

"தண்டளிர் வியப்பத் தகைபெறு மேனி."

எனவும் வரும்.

நளிய நந்த என்பன இக்காலத்து அரியபோலும்; அவை வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, இவைபோல உரியவன்றி உருவுவமத்தின்கண்ணும் பொதுச் சூத்திரத்தான் (உஅகூ) வருமெனப்பட்ட வாய்பாடு சிறு வரவின வருமாறு.

---

1. மணி—நீலமணி.

2. காய்த்தமணி என்க. காய்த்த—காயச்செய்த. வெயில் வெப்பத்துக்கும் வெப்பமளித்த என்றபடி. இது உவமையாய் நின்றது.

3. கார்—கார்காலம்.

" துளிதலைத் [1] தலைஇய மழையே ரம்பால் "
எனவும்,
(அகம். அ)

" நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம் "
(அகம். ௩௧)
எனவும்,
[2] " செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம் "
(கலி. ௧௫)
எனவும்,
" மாயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை "
(அகம். ௧௯)
எனவும்,
" பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி "
(கலி. உ௧)
எனவும்,
[3] " எரியுரு வுறழ விலவ மலர "
(கலி. ௩௩)
எனவும,

" பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு "
(முரு. உ)
எனவும,

" பொன்னுரை கடுக்குந் [4] திதலையர் "
(முரு. கசரு)
எனவும்,
" தீயி னன்ன வொண்செங் காந்தட்
டுவழ் [5] கவித்த புதுமுகை [6] யூன்செத்து."
(மலைபடு. கசரு—சு)
எனவும் வரும்; பிறவுமன்ன.
(சுசு)

[ இன்ன உவமைக்கு
இன்ன வாய்பாடு உரியவென்றற்குக்
காரணம் வரலாற்று முறையா
னறியப்படுமெனல் ]

உகூஉ. தத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

இது, நான்கு உவமைக்கும்
ஒரோவொன்று எட்டாகக் கூறிய
வாய்பாட்டிற்கெல்லாம் புறனடை.

இ—ள்: இன்னதற்கு இன்ன வாய்பாடு
உரியதென்றற் குக் காரணம் என்னையென்றார்க்கு,

அவை தத்தம் [7] வரலாற்று முறைமையானே அவ்வவ பொருடோன்ற நிற்கும் என்றவாறு.

---

1. தலைஇய—பெய்த.
2. செயலை—அசோகு.
3. எரி—நெருப்பு,
4. திதலை—தேமல்.
5. கலித்தல்—தழைத்தல்.
6. ஊன் செத்து—தசையென்று கருதி.
7. வரலாறு—மரபு.



"புலி பாய்ந்தாங்குப் பாய்ந்தான்"
என வினையுவமத்திற்கு

வந்த ஆங்கென் கிளவி 'தளி[1] ராங்குச் சிவந்தமேனி' எனிற் பொருந்தாது.

இனி, எள்ளவென்பது பயவுவமைக்கு ஏற்குமென்றான் ;

அது, 'புலியெள்ளும் பாய்த்தாள்' எனலாகாது ; என்னை ? புலிக்கு வலி கூறினன்றி அதனோடு உவமிக்கப்பட்ட சாத்தற் குப் புகழாகாதாகலானென்பது. ஒருவனை வென்றி கூறுங்கால் அவனோடு ஒப்பிக்கின்ற புலியேற்றினை அவனைக்கண்டு எதிர் நிற்கலாற்றாது புறங்கொடுத்ததெனலும், நடுங்கிற்றெனலும், கண்[2] சிம்புளித்ததெனலும், அவற்குப் புகழாமென்பதே கருதிக் கூறின் கூறின உவமை [3] வெளிப்பாடுமின்றி அவற்கது புகழு மாகாதென்பது கருத்து.

இனி, மழையினைக் கொடைக்கு இழித்துச் சொல்லவும் பெறுபவன்றே ; அவ்வாறு சொல்லினும் அதனை அவனின் இழித்து நோக்காது உலகமாதலின்.

விழைய வீழ புல்ல மதிப்ப வெல்ல என்பனவும், உவமை தான் பொருளையொத்தற் கவாவினவென்று பொருள் தோன்ற நிற்குமென்றவாறு. கள்ளவென்பதூஉம் அதன் குணம் அதன் கண் இல்லாமற் கதுவிற்றென்னும்பொருட்டு. பொருவவென் பதூஉம் மழையினையும் ஒருவனையும் [4] உறழ்ந்துணைச் சிறந்தா னெனச் சொல்லுதல். இவ்வாற்றான் இவை உரிமை கூறப்பட்டன.

இனி, மெய்புவமத்திற்கு

உரியவென்பட்டனவும் அவ் வாறே ஒரு காரணமுடையபோலும். கடுப்ப என்றக்கால் வினைக்கும் பயத்திற்கும் ஏலாது; என்னை? கடுத்தலென்பது ஐயுறுதல். [5] புலியோடு மறவனை ஐயுறவேண்டுவதோர் காரண

1. ஆங்கு என்பது பாய்ந்தாங்கு எனச் செய்யுள் வழக்கில் வினையோடியைந்தன்றி வாராமையிற் பொருந்தா தென்றூர்.

2. சிம்புளித்தல்—சுருங்கல்.

3. வெளிப்பாடு—வெளிப்படுதல் (தோற்றம்).

4. உறழ்தல்—மாறுபடல்.

5. இது முதலாகக் கடுத்த என்னும் உவம உருபு வினை பயன் உரு என்னும் மூன்றற்கும் பொருந்தாமைக்குக் காரணங் கூறுகின்றார். புலியொடு மறவனை என்னும் வாக்கியத்தில் வினை பற்றி என்பது விடப்பட்டிருத்தல்வேண்டும்.



மின்மையானும், மழையின் விளைத்த பயத்தோடு உவமித்தலின்

மழையோடு ஒருவனை ஐயஞ்செய்தல் வேண்டுவதின்மையானும்,

வடிவுகண்டவழி ஐயம் பிறக்குமாகலானும், உருவென்பது குண மாகலாற் [1] பொருள் வேற்றுமை அறிந்தவழி ஐயஞ் செல்லா தாகலானும் மெய்க்குரிமை கூறினானென்பது. ஏய்த்தலென்

பதூஉம் பொருந்துதலாகலின் வடிவிற்கேற்கும். மருள புரைய ஒட்ட ஒடுங்க என்பனவும் கடுத்தல்போலும் பொருண்மைய; என்னை? மருட்சியும் புரையுணர்வுங் கவர்த்தலைக் காட்டுதலா னும், ஒட்ட ஒடுங்க என்பனவும் இரண்டனையும் [2] ஒன்றென்னும் பொருண்மையவாகலானுமென்பது. நிகர்த்தலும் அவ்வினைப் பொருளென்பதனைக் காட்டுதலின் வடிவிற்கேற்றது. ஓடவென் பதும் ஓடுதற்றொழில் வடிவிற்கல்லதின்மையின் அவ்வடிவிற்கேற் றது. பண்பாயிற் பண்பு நிறப்பண்பு ஓடிற்றெனலாகாமையின்.

இனி, உருவுவம வாய்பாட்டிற்குங் காரணங் கூறுங்கால், போலுமென்பது இடைச்சொல்லாகலானும், [3] மரீஇவந்த வினைப் பாற்பட்டதாகலானும், அதற்குக் காரணம் கூறப்படாதென்பது; அஃதேல், அதனை இவ்வெட்டற்கும் முன்பு கூறியதென்னை, பொருளுடையவற்றைப் பிற்கூறியெனின், அதுவும் அன்னவென் பதுபோல மற்றை மூன்று உவமத்தும் பயின்று வருமென்பது எய்துவித்தற்கென்பது. மறுப்ப ஒப்ப என்பன முதலாயினவும் ஒரு காரணமுடையவென்பது ஆசிரியன் பெருவரவினவாக உரி மைப்படுத்துக் கூறினமையின் அறிந்தாம். அல்லதூஉம் 'மர பிற்றோன்றும்' என்றதனான் இவையெல்லாம் மரபுபற்றி அறி யல்வேண்டும் எனவே தலைச்சங்கத்தார் முதலாயினார் செய்யுட் களுள் அவ்வாறு பயின்று வருமென்பது இவ்வாறு சூத்திரஞ் செய்தலானென்பது. அறிந்தாமன்றே,

1. பொன்கடுக்கு மேனி என்பதில் பொன்னும் மேனியு மாகிய பொருள்களின் வேற்றுமை அறிந்தவிடத்து அப்பொருள் களின் குணத்தில் ஐயஞ் செல்லாது. ஆகலின் ஐயம் பொருள் களின்கண்ணேயே (வடிவின்கண்ணேயே) தோன்றும் என்றபடி.

2. ஒன்று — அபேதம்.

3. மரீஇவந்த—தொன்றுதொட்டு வந்த. உவமவியல் ௨௪-ம் சூத்திரம் நோக்குக.

[உவமை எட்டாகுமெனல்]

உகூகூ. *நாலிரண் டாகும் பாலுமா ருண்டே.

இதுவும், மேலனவற்றையே பகுக்கின்றது.

இ—ள்: வினை பயன் மெய் உரு எனப்பட்ட நான்கும் எட்டாம் பகுதியும் உண்டு என்றவாறு.

அவை: உவமத்தொகை நான்கும் உவமவிரி நான்குமென எட்டாதலும் உடையவென்றவாறு. அவை:— புலியன்ன பாய்த்துள் 'புலிப்பாய்த்துள்' எனவும், மழையன்ன வண்கை 'மழை வண்கை' எனவும், வேயன்ன தோள் 'வேய்த்தோள்' எனவும், பவளத்தன்ன வாய் 'பவளவாய்' எனவுந் தொகைவிரி பற்றி நான்கும் எட்டாயினவாறு. [1] சொல்லோத்தினுள்

இவ் வாய்பாடு விரிந்து வருமாறு கூறாது ஆண்டுத் தொகையாராய்ச் சிப்பட்ட மாத்திரையானே கூறினான்; அவ்வுவமத்தான் ஈண் டுக் கூறப்படுதல் [2] பொருளினவாகலானும், இடைச்சொல்லே யன்றிப் [3] பொருள் பயப்பனவும் அவ்வுருபாகலானும், அதன் விரிவினை ஈண்டுப் பெயர்த்து கூறி அதன்றொகையொடு படுப்ப இத்துணைப் பகுதியவாம் அந்நால்வகை யுவமமும் என்றானென்பது.

இதுவுமொரு கருத்து:— முன்னர் எவ்வெட்டாகக் கூறி யவை ஒவ்வொன்றும் இரண்டு கூறாகி எட்டாம் பகுதியுடைய வென்றவாறு. யாங்ஙனமெனின்,—அன்ன என்னுஞ் சொன் முத . லாகிய எட்டனுள் அன்ன ஆங்க மான என்ன எனப்பட்ட நான்கும் [4] வேறொரு பொருளை உணர்த்தாமையின் ஓரினமாகி

---

* இதற்கு வேறு பொருள் கூறுவர். இளம்பூரணர்.

1. சொல்லோத்து—தொல்லதிகாரம்.
2. பொருளின—பொருள்மாத்திரைய.
3. பொருள்—உவமப்பொருள்.

4. வேறொரு பொருளை

யுணர்த்தாமையினென்றது—உவமையும் உவமேயமும் வேறல்ல ஒன்றேயென்னும் ஒரேபொருளை

உணர்த்தலின் என்றபடி. புலியன்ன மறவன் என்றவழி அன்ன வென்பது மறவன் புலியே வேறன்று என்பதை யுணர்த்திநிற்கு மென்றபடி. ஏனைய மூன்றுருபுமன்ன. இதுவே கருத்தாதல் விறத்தன் முதலியவற்றிற்குப் பின்னர்க் கூறும் பொருளான் உணர்க.



ஒன்றாகவும், [1] சிறப்ப உறழ தகைய நோக்க என்னும் நான்கும் ஒரு பொருளுடைமையின் [2] ஒரு பொருளாகவும், இவ்வாறே இன நோக்குதற் குறிப்பின [3] வாயிற்று; [4] இவ்வாற்றான் இரண்டெனவும்படும் எட்டுமென்றவாறு. இதனது பயன் இவ்

விரண்டு கூற்றான் அடக்கப்படும் வினையுவமைச்சொல்லெட்டும் (உஅ.ா) என்றவாறு. சிறத்தல், இனமாகச் செறிபுமென்னும் பொருட்டு. உறழ்ச்சியுந் தன் இனமாகக்கொண்டு மாறுதற் பொருட்டேயாம். தகுதி அறிவெனப்படுவது என்னும் பொருண்மைத்தாகலின் அவற்றோடொக்கும், நோக்கென்பதூஉம் அவ்

வடிதே இவையாக்கி நோக்குதற்பொருட்டு. இவ்வாற்றான் இரண்டெனவும்படும் எட்டுமென்றவாறு. இதனாற் பயன் :—ஒகிய வாய்பாடு எண்ணான்கற்கும் இன்ன வாய்பாடும் இன்ன வாய்பாடும் ஒரு பொருளவென்று அறிதலுங் கந்தம் மாயிற் பொருள் தோன்ற வருமென்பதும் இடைச்சொல்லென்றலும், ஒப்பில் வழியாற் பொருள்செய்யினும் [5] இசைச்சொல்லாகா ; [6] தெரிநிலை வினை உருபாயினும் என்பதறிவித்தலுமெனக் கொள்க. மேல் வருகின்றனவற்றிற்கும் இஃதொக்குமென்பது.

இனிப், பயவுவமை வாய்பாடு எட்டனுள்ளும் என்னி

பொருவ கள்ள வெல்ல என்னும் நான்கும் உவமத்தின் விழித் தற் பொருளவாகி ஒன்றுபடக்கும்; என்னை? மழையைப் பொரீஇச் சொல்லுதலும் அதனது தன்மைக்குணங் கொள்ளப்

1. விறத்தன் முதலிய நான்கும் ஒரு பொருள் என்பதை விறத்தல் இனமாகச் செறிதல் என்று தொடங்கும் வாக்கியங் களானுணர்க.

2. ஒரு பொருளாக—ஓரினமாக என்றிருப்பது நலம்.

3. ஆதலின் என்றிருப்பது நலம்.

4. இவ்வாக்கியம் வேண்டியதில்லை.

5. இசை—இடை என்றிருத்தல்வேண்டும்.

அணிபொருட்கண் நான்குமென இரண்டாம். கடுப்ப மருள புரைய ஓட என்னும் நான்கும் ஐயப் பொருளவாகி ஒன்றும். ஓடவென்பது உவமத்தின்கண்ணும், பொருளின்கண்ணும் உணர்வு சென்றோடுதற்கு' என்னும் பொருள் தோன்றவும் சொல்லின் அதுவும் ஐயமெனப்பட்டதுபோலும். இனி, ஏய்ப்ப ஒட்ட ஒடுங்க நிகர்ப்ப என்னும் நான்கும் ஐயமின்றி உவமையும் பொருளும் ஒன்றென உணர்வு தோன்றும் வாய்பாடாகலின் இவை நான்கும் ஒன்றெனப்பட்டு இவையெட்டும் (௨௯௦) இரண்டாயின.

இனி, உருவின் (௨௯௧) கண்ணும், போல ஒப்ப நேர நளிய என்னும் நான்கும் மறுதலையின்றிச் சேர்தலென்று சொற்கு வாய்பாடாகி வருதலின் அனையவும் ஒன்றெனப் பட்டன.

“நளியென் கிளவி செறிவு மாகும்.” (தொல். சொல். ௩௨௩) என்றதனால், அது செறிவு சேர்க்கையென்னும் பொருட்டேயாயிற்று. இனி,

மறுப்ப காய்த்த வியப்ப நந்த என்னும் நான்கும்
உவமை யோடு மறுதலை தோன்றி நிற்கும்
பொருளாகலின் நான்கும்
நூன்றெனப்பட்டு இவையும் இரண்டாயின.
நந்துதலென்பது கேடு. வியத்தலென்பது
உவமையான் வியக்கத்தக்கது பொருளெனவே
அதன்கண் அக்குணமின்றென மறுத்தவாறும்.
காய்த்தலென் பதூஉம் உவமையைக்
காய்ப்பித்தலாகலின் அதுவும் மறுத்த
லென்பதன் பொருளெனப்பட்டது. இவ்வாறு
இவையெல்லாந் - தொகுப்ப எட்டாதலும்
உண்டென்பது இதன் கருத்து.

1. அதனை — உவமையை.

2. போல்வான் — போலும்படி. இஃது என்றுதல்போல் வனவாய் இழிவினையே காட்டலின் என்று மிருந்திருக்கலாம்.

[1] இவற்றுட் பலவற்றையுஞ் செயவெனச்ச வாய்பாட்டால் ஓதியது என்னையெனின் அஃது, 'உடம்பொடு புணர்த்தல்' (௲௫) என்பதனான் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச் சொற்போல நிற்குமெனவும், அவையுந் தெரிநிலைவினை யுவமை யாய் வருமெனவும் அறிவித்தற்கென்க. [2] இவற்றை இவ்வாறு எட்டாகச் சொல்லுதல் பெரிதும் நுண்ணுணர்விற்றெனவுணர்க. (௧அ)

[ மெய்ப்பாடு எட்டன்வழிப் பெருமையும் சிறுமையுந் தோன்றுமெனல் ]

உ௬௪.

## பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன் வழிமருங் கறியத் தோன்று மென்ப.

இது, மேற்கூறிய உவமை இன்னுமொருவாற்றான் எட்டெனப்படுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: பெருமைபற்றியுஞ் சிறுமைபற்றியும் ஒப்புமை கொள்ளப்படும் உவமை மேற்கூறிய மெய்ப்பாடெட்டன்வழித் தோன்றுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

மெய்ப்பாடு எட்டென்பன :—

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" (தொ. மெய்.

ரு)

என மெய்ப்பாட்டியலுள் மேற்கூறப்பட்டன.

"களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா"

(அகம் கசு)

என்பது, நகையுவமம்; என்னை? தலைமகனைக் கண்டறியாதாள் போலக் கரந்தொழுகுகின்ற பரத்தை அவனோடு ஒப்புமை

1. இளம்பூரணரும் பல்குறிப்பின என்றதனால் இச்சொற்கள் பெயரெச்ச நீர்மையவாய் வருவனவும், வினையெச்ச நீர்மையவாய் வருவனவும், முற்று நீர்மையவாய் வருவனவும், இடைச்சொல் நீர்மையவாய் வருவனவும் உள எனக் கொள்க. புலிபோன்ற சாத்தன், புலிபோலுஞ் சாத்தன் என்பன பெயரெச்சம். புலிபோன்று வந்தான், புலிபோலப் பாய்ந்தான் என்பன வினையெச்சம். புலிபோலும் புலிபோன்றனன் முற்று. அன்ன இன்ன இடைச்சொல் என இச்சூத்திர உரையுட் கூறுதல் காண்க.

2. இச்சூத்திரத்திற்கு எட்டாகும் பகுதியுமுள என்று பொருள்கொண்டு சிறப்புச்சூத்திர நான்கனுள்ளுங் கூறிய 32-ம் எட்டாகும் என்று பொருள் கூறின் நலம். பேராசிரியர் கருத்தெல்லாம் இவற்றுளடங்கும்.



கண்டு தணிநின்று விளையாடும்

புதல்வனைக்கொண்டு மகிழ்கின் றனை,
வாயிற்கதவம் மறைந்துநின்ற தலைமகள் நீயும்
அம்மக விற்குத் தாயே காண் என்றவழிக்,
களவு கண்ட பொருளோடு கையகப்பட்ட
கள்வர்போலச் செய்வதறியாது தடுமாறி முகம்
வேறுபட்ட நிலைமையை உவமித்துச் 1
சிரித்தமையின் நகை யுவமமாயிற்று.

"[2] கலங்கவிழ்த்த [3] நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்"

(யா. வி. ப. ௩௧௮)

என்பது அவலவுவமை; கலங்கவிழ்ந்த
நீகாமன்போலப் புலம்பினொன்றமையின் 4
அப்பெயர்த்தாயிற்று.

"பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு"

(முத்தொ. ௮௮) என்பது, இளிவரலுவமம்;
என்னை? தலைமகன்மாட்டு. இன்ப
விளையாட்டெய்துவார் பலரையுங் கண்டு நெஞ்சு தீரப் புன்க
ணெய்தித் தனிநின்றும் புகப்பெறாது இளிவந்தமையின் அப்.

பெயர்த்தாயிற்று.

"ஈரத்து ளின்னவை தோன்றி னிழற்கயத்து
5 னீருட் குவளைவெந் தற்று" (கலி. சுக)

என்பது, மருட்கையுவமம்; என்னை? நிழற்கயத்தின் குவளை வேவனவின்மையின் இஃது அற்புதமாயிற்று.

"சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
6 பாம்பகத்துக் கண்ட துடைத்து" (நால. கஙு—ரு)

என்பது, அச்சமாகலின் அச்சவுவமை.

---

1. சிரித்தது—தலைவி.

2. கலம்—தோணி.

3. நாய்கன்—மீகாமன்.

4. அப்பெயர்த்தாயிற்று என்றது அவல உவமை என்னும் அப்பெயரை யுடைத்தாயிற்று என்றபடி.

5. ஒன்றை நெருப்பு வேவச்செய்யுமன்றி நீர் வேவச்செய்யாது. செய்யுமாயின் அது அற்புதமாகும். ஆதலின் நீருட் குவளை வெந்தற்று என்றது அற்புதவுவமையாயிற்று என்றபடி. மருட்கையெனினும், அற்புதம் எனினும் அதிசயம் எனினு மொக்கும். முன்னையபோல இதுவும் 'அப்பெயர்த்தாயிற்று' என்று மிருந்திருக்கலாம்.

6. பாம்பைக் காணுவார்க்கு அச்சமுண்டாதலின் அச்சமென்றார்.

"மல்லரை [1] மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பட்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்" (கலி. ருஉ)

என்பது, பெருமிதவுவமை.

"கூற்று வெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே"

(புறம். சஉ) என்பது, [2] வெகுளியுவமம்.

"பாடிச் சென்ற பரிசிலர் போல
வுவவினி வாழி தோழி"

(அகம். கூரு)

என்பது, உவகையுவமை; பிறவுமன்ன.

இவற்றான் எண்வகை மெய்ப்பாடும்பற்றி உவமை எட்டெனப்படுமென்று அறிந்து கூறினான்.

"பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீரா"

(தொ. உவ. கo)

என்புழிப், [3] பெற்றுமாகலின் மெய்ப்பாடெட்டன்வழித் தோன்றுமென்றது 'மருங்கறிய' என்றதனாற் பெருமையுஞ் சிறுமையும்பற்றி வருதல் வழிமருங்கெனவும், அவை பற்றாது மெய்ப்பாடெட்டும்பற்றி [4] வாளாது உவமை வருதல் செவ்விதெனவுங் கொள்ளப்படும்.

" நீருட் குவளைவெந் தற்று "

(கலி. சுக)

என்பது, பெருமைபற்றியது; என்னை? உலகநடை யிறந்த தோர் உவமைகூறி அதனோடு தலைமகன் [5] ஈரத்தினை ஒப்பித் தமையின்.

" களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா " (அகம், கசு) என்பது, [6] தனக்கு நிகராமல் இழிந்துரைத்தமையிற் சிறுமை பற்றி வந்ததாம்.

---

1. மறஞ் சாய்த்தமை வீரத்தாலாதலின் வீரம் என்றார். பெருமிதம்—வீரம்.

2. வெகுளி—கோபம்.

3. செயப்படு பொருள் 'பெருமையுஞ் சிறுமையும்பற்றி வருதல்' எனப் பின் வரவின் முன் வாளா பெற்றுமாகலின் என்றார்.

4. வாளாது என்பது ஈண்டு வேண்டியதில்லை.

5. ஈரம்—அன்பு.

6. தனக்கு என்றது தலைவியை.

உவமையும் மெய்ப்பாடும் பொருள்களை அறிவிப்பனவாகி அவை வேறு வேறு பொருள் அறிவித்தலின் [1] ஒத்து வேறுடையனவாயினும் சிறுபான்மை மயங்கியும் வருமென்றற்கு இது கூறவேண்டியதென்பது. (கக)

[உவமையானே உவமேயப் பொருட்கேற்றன அறிந்து துணியப்படுவனவு முளவெனல்]

உகூ. உவமப் பொருளி னுற்ற துணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான.

இஃது, எய்தாததெய்துவித்த லுதலிற்று. உவமையோடு பொருள் [2] ஒவ்வாதனவும் ஒப்புமை சார்த்திக்கொள்ளுமாறுணர்த்

தினமையின்.

இ—ள்: உவமப் பொருளின் — உவமையெனப்பட்ட பொருளான்; இன் உருபு ஆன் உருபின்கண் வந்தது; உற்றதுணருந் தெளிமருங்குள — உவமிக்க வரும் பொருட்குற்றதெல்லாம் அறிந்து துணியும் பகுதியுமுள; திறத்தியலான — அங்ஙனந் துணியப்படும் பொருட்டிறம் பலவாகி வரும் இலக்கண வகையான் என்றவாறு.

[3] அப்பகுதி பலவும் உற்றுணராமற் சொல்லியவழியும் அஃது, உணர வருமென்பது கருத்து. திறத்தியல் எனப்பட்ட பகுதியாவன,—மேற் கூறப்பட்ட மெய்ப்பாடெட்டும்பற்றி உவமங் கொள்ளுங்கால் [4] 'உற்றதுணருந் தெளிமருங்கென' உவமானவடைக்கு உவமேயவடை குறைந்து வருவனவும், யாதும் அடையின்றி வருவனவுமென்று இவ்விரண்டும் உற்றுணராமற் சொல்லியவழி, அவற்றுக்கும் உவமைப் பொருளே தெளிமருங்காமெனவும் [5] வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாதவழியும் [6] அதுவே தெளிமருங்காமெனவும் இன்னோரன்ன கொள்க.

---

1. ஒத்து—ஒத்து என்றிருத்தல்வேண்டும். ஒத்து—இயல்.
2. ஒவ்வாதனவும் என்றிருப்பது நலம்.
3. அப்பகுதி—உவமிக்கப்படும் பொருட்பகுதி.
4. உற்றதுணருந் தெளிமருங்கெனவே என்றிருத்தல்வேண்டும். இவ்வாக்கியம் இல்லாமலுமிருக்கலாம்.
5. வாளாது—அடையின்றி.
6. அது—வாளா கூறியது.



உதாரணம்,

"களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங்

கிளையா." (அகம். கசு)

என்றவழிக், கண்டோர்க்கெல்லாம் பெருநகையாகக் [1] களவுண்

டாகப்படுநரிற் கலிழ்ந்து நிலங்கிளையாவென உற்றதுணரக் கூறிய

திலனுயினுங் கைகொடுபட்ட களவுடையார்போல நின்றாளென்

னும் உவமைப் பொருளானே எள்ளுதற் பொருள் தோன்றி

நகை புலப்படுவதாயிற்று.

"சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்

பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்

கட்டி னிணக்கு மிழிசனன் கையது

போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ

ஊர்கொள வந்த பொருநனொ

டார்புனை தெரியல் நெடுந்தகை போரே.

(புறம். அஉ)

என்னும் பாட்டினுள் உவமப் பொருளாகிய [2] போழ்தூண்டூசிக்

குப் பல அடைகூறி அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழி

லினை யாதுமோர் அடையின்றி வாளாது

கூறிருணுபினும் உவ
மப் பொருளானே போர்த்தொழிற்
குற்றதும் உணரக் கூறிரு
ணும். என்னை? உண்டாட்டும் கொடையும்
உரனொடு நோக்கி
மறுத்தலும் முதலாகிய உள்ளக்
கருத்தினான், ஒரு கணத்
துள்ளே பல வேந்தரை ஒருங்கு
வேறற்கு விரைகின்றது
போர்த்தொழிலென்பது
தெளியப்பட்டமையின்.

3 "உழுத நோன்பக டழிதின் றாங்கு."
(நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே.)
(புறம். கஉரு)

ஏனவும்,

---

1. களவு உடம்படுநரின் என்றிருப்பது நலம்.

2. போழ்தூண்டு ஊசி — வாரைச் செலுத்தும் ஊசி. போழ்—வார். தூண்டல்—செலுத்தல். போழ் தூண்டூசிக்கு அடைகள் சாறுதலைக் கோடலும் பெண்ணினலும். இரண்டற்கும் போதற்பொருட்டுக் கட்டிலைப் பின்னி முடித்தற்காக இழிசனன் கையூசி விரைதல்போல இவனும் உண்டாட்டுக்கும் கொடைக்கும் உரனொடு நோக்கி மறுத்தற்கும் போதற்காக விரைந்து போர் செய்கின்றான் என்றபடி. உரனொடு நோக்கி மறுத்தல் என்பது எக்கருத்தில் வந்தது என்பது நன்கு புலப்படவில்லை. ஆயினும் அறிவொடு நோக்கி மறுத்தல்—வாதுசெய்தல் என்று கூறலாம், உரனோக்கி மறித்தல் எனவும் பாடமுள்ளது. உள்ளக் கருத்தினால் விரைகின்றது போர் என்க.

3. உழுத பகடு தான் விளைத்த நெல்லையுண்ணாது வைக்கோலை உண்ணுமாறுபோல நின் முயற்சியாற் செய்த பொருளை நீயுண்ணாது கள்ளையுண்ணா நின்றாய்; அது உனக்கு அமிழ்தாகுக என்றபடி.

வியல்]

# பொருளதிகாரம்

கரு௬

1 "மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி."

(புறம். ௧௮0)

என்றாற்போல்வனவும் அவை.

இனி, வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாதவழித்

தெளியுமாறு;

"உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
2 கச்சாணி யன்னா ருடைத்து." (குறள். ௬௬௭)

என்பதனுள், அவர் செய்கை வன்மை கூறாராயினும் அச்சாணியென்று உவமப் பொருள்தானே அச்செய்கை வன்மை கூறிற்று.

3 "வேனிற் புனலன்ன நுந்தையை
நோவார்யார்." (கலி. அச)

என்பதும் அது. ஒழிந்தனவுமன்ன. இனி உவமத்தின் உற்றதுணர்கவென்றது பொருளென்றதனால் பொருட்கு அடுத்த அடையும் உவமவடைக்[4]கேற்றது உணரப்படாதன களையப்படுமென்பது. அது,

"பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்
இனமீ னிருக்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்."

(குறுந். கூ)

என்றவழிப், பாசடை நிவந்த கணைக்காலென நெய்தலாகிய பொருட்கு வந்த அடையிரண்டுங் கண்ணெனப்பட்ட உவமத்திற்கேற்ப வாராமையான் அவை தெளிமருங்கில வென்று களைந்துகொள்க. ஒழிந்தனவுமன்ன. மற்றுப்,

"புறமதி யன்ன திருமுக மிறைஞ்சி."

என்றவழி, அகத்துத் தோன்றும் மறுப்போலப் புறத்து மறு மதிக்கில்லையென்பதூஉம், புறமதிபோலக் கறைதீர்ந்த முகமென்பதூஉம், உவமப் பொருளின் உற்றதுணருந் தெளிமருங்கென்றதனாற் கோடுமோவெனின், அங்ஙனங் கொள்ளாமைக்கன்றே வருகின்ற சூத்திரமென்பது. (உ0)

1. மருந்து கொண்மரம் என்றதனான் பலவடு விரவப்பெற்றமையும், மரம் அழியாமையும் பெறப்படும்.

2. அச்சாணி சிறிதாயினும் பெரும் பாரத்தையுடைய பண்டியைக் கொண்டுய்க்குமாறுபோலப் பெரிய காரியங்களைக் கொண்டு செலுத்துபவர் என்றபடி. எனவே அதன் செயல் வன்மை கூறிற்று.

3. வேனிற்புனல் பலருமாடற் கிடங்கொடுத்தல்போலப் பல மகளிரும் புணர்ந்து விளையாடற்கிடமானவன் என்றபடி.

4. ஏற்றதுணரப்படாதன—'உற்றதுணரப்படாதன' என்றிருத்தல்வேண்டும்; சூத்திரப்பகுதியாதலின்.



[ உவமப் பொருள் மரபுபற்றி யறியப்படுமெனல் ]

உ௬௬. உவமப் பொருளை உணருங் காலை
மரீஇய மரபின் வழக்கொடு படுமே.

இது, மேலதற்கோர் புறனடை;

மேல் உவமப்பொரு

ளானே உற்றதுணரச்செயல்வேண்டு

மென்றான். இனி அங்

ஙனம் உணருமாறு இது கூறிற்றாதலின்.

இ—ள் : உவமப்பொருளான்

உற்றதுணருங்காலை மரீஇவந்த

வழக்கொடுபடுத்து அறியப்படும்

என்றவாறு.

அவை வருமாறு :—

" களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா."
(அகம். கசு) என்பது, களவுடம்படுநர்க்குள்ள வேறுபாடு உலகத்து அடிப் பட வந்த வழக்காதலான், [1] அஃது ஏதுவாக அதனையும் அறிந்துகொள்ளப்படு மென்றவாறு. எனவே, உலகத்து வழக் கினுள் அடிப்படத் தோன்றும் உவமையாயிற்றாயினும் உவமப் பொருள் புலப்பாடு செய்யாது,

" புறமதி போலு முகம் "
என்றது [2] போலவென்பது இதன் கருத்து.
(உக)

[ அடையும் பொருளுமாக வரும் உபமேயத்திற்கு அடையும் பொருளுமாகவே உவமையுங் கூறல்வேண்டுமெனல் ]

## உ௬எ. இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே.

இஃது, எய்தாததெய்துவித்தது ; அடையொடு வந்த பொருளொடு புணர்க்குமாறு கூறினமையின்.

இ—ள் : இரட்டைக் கிளவி — அடையும் அடையடுத்த பொருளுமென இரண்டாகச் சொல்லப்படுங் கிளவி ; இரட்டை வழித்தே—அடையும் அடையடுத்த பொருளுமென இரண்டாக்கி நிறுத்தப்படும் உவமையின்வழித்து என்றவாறு.

---

1. அஃது—அடிப்பட வந்த வழக்கு. அதனையும்—உவமப் பொருளையும்.

2. போல—போல்வது என்றிருப்பது நலம். மதியுவமை யாயினும் புறமதியை உவமை கூறல் அடிப்பட வந்த வழக்கன் றென்றபடி.

அது,

"பொன்காண் கட்டளை கடுப்பத் [1] தன்ன
பைம்பூண் சுண்ணம் புடைத்த மார்பினன்."

(பெரும்பாண். உஉ0) என வரும.

தன் பைம்பூண் புடைத்த செஞ்சுவட்டினையும் மார்பினையும் பொன்னுரையோடுங் கல்லோடும் உவமித்தமையின் இரட்டைக்கிளவி இரட்டை வழித்தாயிற்று. இரட்டைக் கிளவியெனப் [2] பொருளினை முற்கூறியதனான் இரண்டு பொருளினை ஒன்றாகக் கூட்டி உவமிக்கக் கருதினான் உவமையினையும் இரண்டு ஒன்றாக்கியே உவமிக்குமென்பது கருத்து. உம்மையான் [3] ஒற்றைக் கிளவியும் இரட்டைவழித்தாகி வருவன கொள்க.

அது,

"கருங்கால் வேங்கை வியுகு துறுக
என
விரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை." (குறு. சஎ)
வரும். இரும்புலிக் குருளை [4] யென்றதனையே துறுகல்லோடும் வேங்கைவீயோடும்

தாயிற்று.

ஒப்பித்தமையின் இப்பெயர்த்

(௨௨)

[உள்ளுறை உவமம் இவ்வாறு வருமெனல்] ௨௯௮. பிறிதொடு படாது
பிறப்பொடு நோக்கி
முன்னை மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வருஉந் துணிவினோர்
கொளினே.

---

1. 'தன்ன—பைம்பூண்' என்றே பேராசிரியர் பாடங் கொண்டார் என்பது 'தன் பைம்பூண்' என்ற அவர் உரையால் விளங்குகின்றது. 'சண்பின் புன்காய்ச் சுண்ணம்' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். பெரும்பாண் ௨௨0-ம் அடி. (டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு நோக்குக.)

2. பொருள்—உவமேயம்.

3. ஒற்றைக் கிளவி—உவமேயம். புலிக்குருளை உவமேயம். புலிக்குருளைபோல வீயுகு துறுகல் தோன்றுமென்றதனால் வீயுகு துறுகல் புலிக்குருளைக்கு உவமையாயிற்று என்றபடி. 'அடையொடு பொருட்கடை புணர்க்கு மதிரட்டை' என்னுஞ் சூத்திரத்து (மாறனலங்காரம். ௧0௩.) உரையுள்ளும் ஒற்றைக் கிளவி இரட்டுறவழித்தாதற்கு இச்செய்யுளையும் உதாரணமாக எடுத்துக்காட்டுதல் காண்க.

4. இரும்புலிக் குருளை யென்றதனை என்பது இரும்புலிக் குருளையொன்றனையே என்றிருப்பது நலம். என்று அதனையே எனவும் பிரித்தும் பொருள்கொள்ளலாம்.

20



[உவம

இது மேலெல்லாம் ஏனையுவமங் கூறி உள்ளுறையுவமம் உணர்த்துதல் நுதலிற்று. [1] மேல் இசைதிரிந் திசைக்குமெனப் பட்டவற்றின் பகுதியாயினும் இதனை ஆண்டுக் கூறாது ஈண்டுக் கூறினான் உள்ளுறை யுவமமாகலானும் இவ்வோத்து உவம வியலாகலானுமென்பது.

இ—ள்: பிறிதொடு படாது — உவமையோடு உவமிக்கப் படும் பொருள் பிறிதொன்று தாராது, பிறப்பொடு நோக்கி— உவம நிலங்களுட் பிறந்த [2] பிறவிகளோடு [3] சார்த்தி நோக்கி, முன்னை மரபிற் கூறுங்காலை—கருத்தினான் இதற்கு இஃது உவமையென்று சொன்ன மரபினாற் கூறுங்காலை, துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே—இன்ன பொருட்கு இஃது உவமமாயிற்றென்பது துணிந்து கொள்ளத் தோன்றும் அவ்வாறு துணிந்து கொள்ளும் உணர்வுடையோர் கொள்ளின் என்றவாறு.

எனவே, அஃது எல்லார்க்கும் புலனன்று நல்லுணர்வுடையோர்க்கே புலனென்பதூஉம், அவர் [4] கொள்ளச் செய்யவேண்டுமென்பதூஉங் கூறியவாறு. இதனானே செய்யுளுட் பயின்று

வருமென்பது கூறினனும். அவற்றிற்கு உதாரணம் மேற் காட்டுதும். மற்றிதனை உவமையென்றதென்னை? உவமையும் உவமிக்கப்படும் பொருளுமாக நிறீஇக் கூறுனுமினெனின்? அங்ஙனம் கூறுனுயினும் உவமம்போன்று பொருள் கொள்ளப்படுதலின் அதனை உவமையென்றான். [5] அஃது ஒப்பினுகிய பெயரென்பது; என்னை? இவற்றை உவமப் போலியென்பது கூறுமாகலின். (உரு)

## [ உள்ளுறை உவமையின் வகை ]

உகூகூ. உவமப் போலி யைந்தென மொழிப.

இது மேற்கூறிய உள்ளுறையுவமை ஐவகைப்படுமென்கின்றது.

---

1. மேல் என்றது பொருளியல் க-ம் சூத்திரத்தை.

2. பிறவி—உள்ளுறைப் பொருள்.

3. சார்த்தி—உவமையைச் சார்த்தி.

4. கொள்ள—உள்ளுறைப் பொருளைக் கொள்ளத்தக்கதாக.

5. ஒப்பினுகிய பெயர் என்றது—உவமம்போன்று பொருள் கொள்ளப்படுதலின் இதனையும் உவமையென்றுர் என்றபடி.

இ—ள் :

உள்ளுறையுவமை ஐந்துவகையெனக் கூறுவர் புலவர் என்றவாறு.

அவையைந்துமாமாறு 1 முன்னர்ச் சொல்லுதும். இதனது பயம் ஏனையுவமத்திற்கு நிலக்களம் ஐந்து ஓதினான், அவ் வாறே இதற்கு நிலக்களம் ஓதாது அவைபோறலின் அவையே நிலக்களமாமென்றலும் ஏனையுவமத்துள் 2 ஒரு சாதியோடு ஒரு சாதியினை உவமித்தல் வழக்கன்றாயினும் உள்ளுறையுவமத்திற்கு அமையுமென்றலுமென்பது. (உச)

[மேற்கூறிய உள்ளுறை ஐந்து இவையெனல்] கூ௦௦. தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினு முறுப்பினு

முருவினும்

பிறப்பினும் வருஉந் திறத்திய லென்ப.

இது மேற்கூறிய ஐந்தும் இவையென்கின்றது.

இ—ள்: வினை பயன் மெய் உருவென்கின்ற நான்கினுனும் பிறப்பினுனும் வரும் மேற்கூறிய ஐந்தும் என்றவாறு.

உறுப்பென்றது மெய்யினை; உடம்பினை உறுப்பென்பலாக லானும் மெய்யுவமமெல்லாம் உறுப்பினையேபற்றி வருதல் பெரும்பான்மையவென்றற்கும் அவ்வாறு கூறினனென்பது. 'தவலருஞ் சிறப்பி னத்தன்மை நாடின்' என்றதனன் வினையுவமத்தினும் உள்ளுறையுவமமே செய்யுட்கும் பொருளிலக்கணத்திற்குஞ் சிறந்ததென்பது.

அவை வருமாறு:—

"கரும்புநடு பாத்தியிற் [3] கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வ னீன்றவெம் [4] முயங்க
லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே."

(ஐங்குறு. சுரு)

என்பது வினையுவமப் போலி; என்னை? தாமரையினை விளைப்பதற்கன்றிக் கரும்புநடுதற்குச் செய்த பாத்தியுட் டானே விளைந்த தாமரை கரும்பின் பசிதீர்க்குமாறனென்றான். இதன்

1. முன்னர் என்றது வருஞ் சூத்திரத்தை.

2. சாதி—பிறப்பு என்பது பேராசிரியர்கொண்ட கருத்து. என்னை? பின் பிறப்பென வருதலின் கூ0எ-ம் சூத்திர உரை நோக்குக.

3. கலித்த—முளைத்த.

4. முயங்கல்—தழுவற்க.



கருத்து,—[1] அது காதற் பரத்தையர்க்கும் இற்பரத்தையர்க்கும் என்றமைக்கப்பட்ட கோயிலுள் யாமுமுளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம், அதுபோலவென்பதாகலான், உவமைக்குப் பிறிதொரு பொருள் [2] எதிர்ந்து உவமஞ்செய்யாது ஆண்டுப் [3] பிறந்தனவற்றோடு [4] நோக்கிக் [5] கருத்தினாற் கொள்ள வைத்தலின் இஃது உள்ளுறை யுவமமாயிற்று. அவற்றுள்ளும்

இது சுரும்பு பசிகளையுக் தொழிலோடு விருந்தோம்பு தற்றொழில் உவமங்கொள்ள நின்றமையின் வினையுவமப் போலியாயிற்று.

இங்ஙனங் கூறவே, [6] இதனை இப்பொருண்மைத்தென்பதெல்லாம் உணருமா [7] றென்னையெனின், முன்னர்,

"துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே."

(உகூஅ) எனல்வேண்டியது இதன் அருமை நோக்கியன்றேயென்பது.

அல்லாக்காற், 'கரும்புநடு பாத்திக் கவித்த தாமரை—சுரும்புபசி களையும் பெரும்புன லூர' என்பது [8] பயமிலவென்பது கூறலாமென்பது.

"கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே."

(ஐங்குறு. கஉ)—————

1. கரும்புபோல்வர் — பரத்தையர். பாத்திபோன்றது — கோயில். தாமரைபோன்றவள்—தலைவி. சுரும்புபோல்வர்—விருந்தினர் என உள்ளுறைப் பொருள் கொள்ளப்பட்டது.

2. பிறிதொரு பொருள் என்பதனைக், கொள்ள வைத்தலின் என்பதனோடு இயைக்க. எதிர்ந்து—எதிராக வைத்து.

3. பிறந்தன—உவம நிலங்களுட் பிறந்த உள்ளுறைகள். உள்ளுறையாகிய உவமேயப் பொருள்கள் தோன்றற்கு இடம் உவமைகளாதலின் உவமநிலம் என்றார்.

4. நோக்கல்—உள்ளுறையோடு உவமையைச் சார்த்தி நோக்கல். இதனை 'பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி' என்பதன் (உகூஅ) உரை நோக்கி அறிக.

5. கருத்திறைற் கொள்ள வைத்தலின் என்பதற்குச் செயப்படுபொருள்—பிறிதொருபொருள் என்பது.

6. இதனை—இவ்வுவமையை.

7. என்னை—எவ்வாறு.

8. பயமில கூறலாம் என்றது—பயன்படாதவற்றைச் சொல்வதாக முடியுமென்றபடி. பயமிலவென்பது என்பதில் 'என்பது' என்றது வேண்டியதில்லை. பிரதி எழுதுவோராற் சேர்க்கப்பட்டதுபோலும்.

வியல்]

# பொருளதிகாரம்

கருள

என்பது பயவுவமப் போலி. இதனுட் தலைமகன் கொடுமை கூறியதல்லது அக்கொடுமைக் கேதுவாகியதொன்று விளங்கக் கூறியதிலளாயினும் இழிந்தவேழும் உயர்ந்த கரும்பிற் பூக்கு மெனவே [1] அவற்றிற்கும் இழிபுயர்வாமென்பதொன்றில்லை; [2] எல்லாரும் இன்பங் கோடற்குரியர் தலைமகற்கென்றமையின்,

யாமும் பரத்தையரும் அவற்கு ஒத்தனமென்றமையின் அவை கூறினாளென்பது.

"நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை [3] வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் [4] வயவு நோய்க்கே."

(ஐங்குறு. நுக) என்பதும் அது. நீருறை கோழி நீலச் சேவலை அதன் கூருகிர்ப் பெடை நினைந்து கடுஞ்சூலான் வந்த வயாத் தீர்தற்பயத்த தாகும், அதுபோல நின்மார்பு நினைந்து தன் வயவுநோய் தீரும் இவளுமென்றவாறு. புளிங்காய் வேட்கைத்தென்பது நின் மார்புதான் இவளை நயவாதாயினும் இவடானே நின்மார்பை நயந்து பயம்பெற்றாள்போலச் சுவைகொண்டு சிறிது வேட்கை தணிதற் பயத்ததாகும்; புளியங்காய் நினைய வாய்நீர் ஊறு மாறுபோல என்பது.

"ஒன்றே னல்லெ னொன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெறிநாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரு நாடனொ
டொன்றேன் றோழி [5] யொன்றி னானே."

(குறுந். உ0அ)

என்பது மெய்யுவமப் போலி; என்னை?
மிதியுண்டு வீழ்ந்த
வேங்கை குறையுயிரொடு மலர்ந்தாற்போல
யானும் உளே
னாயினேனென்றமையின்.

1. அவற்றிற்கும் என்றது வேழத்தையும் கரும்பையும். இப்பாடத்திற்கு உம்மை வேண்டியதில்லை. அவற்கும் என்றும் பாடமுள்ளது. அவற்கு என்பது பின்வருந் தலைமகனைக் குறிக்கும். அப்பாடமே சிறந்தது.

2. எல்லாரும் என்றது உயர்ந்தோருந் தாழ்ந்தோருமாகிய எல்லா மகளிரும் என்றபடி.

3. வயாஅம்—கருப்பத்தா லுண்டான வேட்கை தீரும் என்றபடி.

4. வயவுநோய்—கருப்பத்தா லுண்டான வேட்கை நோய்.

5. என்றிசினோனே எனவும் பாடம்.

"வண்ண வொண்டழை நுடங்க வாலிழை
யொண்ணுத லரிவை ¹பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே." (ஐங். எஅ)

இஃது உருவுவமம். நீ புனலாடிய ஞான்று பரத்தை பாய்ந் தாடிய புனலெல்லாம் தண்ணென்றிசினெனக் கூறியவழி, அத்தடம் போல இவள் உறக்கையிற் தெளிந்து தண்ணென்றிசினென்பது கருதியுணரப்பட்டது; அவளொடு புனல்பாய்ந்தாடிய இன்பச் சிறப்புக் கேட்டு நிலையாற்றுமென்பது கருத்து. ²இது சிற மன்றெனின் சிறப்பாம் பண்பாகலின் அச்சிறப்பொடு சிறப்பில் லாத பண்புக் கொள்ளப்படுமென்பது,

"வகைபெற வந்த உவமத் தோற்றம்." (உ. எசு)

என்புழிக் ³கூறினென்பது.

⁴"பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ ஊர
எந்நலந் தொலைவ தாயினுந்
துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே." (ஐங். சுஅ)

என்பது பிறப்புவமப் போலி. நல்ல குலத்திற் பிறந்தும் இழிந்தாரைத் தோய்ந்தமையான் அவர் நாற்றமே நாறியது, அவளையே பாதுகாவாய், மேற்குலத்துப் பிறந்த எம்மைத் தீண்டலென்பான் அவையெல்லாம் விராகக் கூறாது பொய்கைப்பள்ளிப் பிறந்த நீர்நாய் முன்னாட்டுண்ட வாளைமீன் புலவு நாற்றத்தோடும் பின்னாளும் அதனையே வேண்டுவான் என்றமையிற் பரத்தையர் பிறப்பு இழிந்தமையுந் தலைவி பிறப்பு உயர்ந்தமையுங் கூறி அவன் பிறப்பின் உயர்வுங் கூறினமையின் இது பிறப்புவமப் போலியாயிற்று. இவையெல்லாம் கருதிக் கூறிச் செய்யுட்குச்

1. பண்ணை—விளையாட்டு.

2. இது என்றது தன்மையை. தன்மை நிறமல்லாத பண்பு.

3. கூறினன் என்பது கூறினானென்றிருத்தல் வேண்டும். உவமவியல் க-ம் சூத்திர விரிவுரை நோக்குக. இலேசினன் ஆசிரியன், கூறினனென்றல் சிறப்பின்று. கூறினனெனின், 'என்புழி' என்பது என்பதனுல் என்றிருத்தல்வேண்டும்.

4. பொய்கைப்பள்ளி—உயர்குடிக்கும், நீர்நாய் — தலைவற்கும். வாளை—பரத்தையர்க்கும் உவமை என்க. பள்ளி—இடம் (படுக்கை) பொய்கைப்பள்ளி என்றதனுல் தலைவியுயர்ச்சியுங் கூறியதாயிற்று.

# பொருளதிகாரம்

வியல்]

கரு௯

தலைவிக்குவமையே பிறப்பித்தவாறாயிற்று. அல்லாக்கால்,

[1] "வெள்ளை யாம்பலடை கரை.'

(ஐங். சக)

என்றதனாற் பயமின்றென்பது. (உரு)

[ கிழவியுந் தோழியும் உள்ளுறை சொல்லுங்கால் இவ்வாறு சொல்லவேண்டுமெனல் ]

கூ0க. கிழவி சொல்லி னவளறி கிழவி
தோழிக் காயி னிலம்பெயர்ந் துரையாது.

இது மேற்கூறிய உள்ளுறையுவமைக்காவதோர் இலக்கணம்.

இ - ள் : ஐந்துவகைப்பட்ட உவமப் போலியும் பிறிதொடு படாது பிறப்பு நோக்கி உணரக் கூறியவழி, அக்கூற்றுத் தலைமகட்குந் தோழிக்கும் உரித்தாங்காற், தலைவிக்காயின் அவளறி யுங் கருப்பொருளானே செய்யல்வேண்டுங்,

தோழிக்காயின் அந்
நிலத்துள்ளனவெல்லாஞ்
சொல்லவும்பெறும்; பிறநிலத்துள்ளன
அறிந்து சொல்லினளாகச் செய்யுள்
செய்யப்பெறா ரென்றவாறு.

இதனது பயம்: தலைமகள்,
அந்நிலத்துள்ளனவெல்லாம்
அறியுந்துணைப் பயிற்சியிலளெனவும்
அவளாயத்தாராயின் அந்
நிலத்துள்ளன அறியச்
[2] சிதைந்தின்றெனவுங் கூறியவாறு.

"ஒன்றே னல்லெ னென்று வென்."

(குறுந். உ0அ)

என்னும் பாட்டினுட், பொருகளிறு மிதித்த
நெரிதாள் வேங்கை
மரம் [3] படப்பையிலுள்ளதாகலானுந்
தன்னாற் பூக்கொய்யப்படு
மாகலானும் அஃது அவளறி
கிளவியெனப்பட்டது.

"தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலை."

(ஐங்குறு. சுக) என்பது தோழி கூற்று.
என்னை? அவற்றின் செய்கையெல்லாம் அறியாளன்றே தலைமகள், பெரும் பேதையாதலினென்பது.

1. வெள்ளையாம்பல் என்பது மேற்கூறிய செய்யுளில் வரும் வெண்பூ என்பதன் பொருள். அடைகரையையுடைய பொய்கை என்க. வெள்ளை யாம்பற்பூ என்றதனால் தலைவி பசப்புடையள் என்னும் உள்ளுறை பெறப்பட்டது.

2. சிதைதல்—அழிதல்.
சிதைந்தின்று—குற்றமின்று.

3. படப்பை—தோட்டம்.



1 அதிகாரத்தானின்ற உள்ளுறையுவமையென்பதனை அவளறி கிளவியென்றதற்குப் பெயர்ப் பயனிலையாகவும் நிலம் பெயர்ந் துரையாதென்னும் முற்று வினைக்குப் 2 பெயராகவும் வேறு வேறு சொல்லிக் கொள்க.
(உசு)

[ தலைவன் உள்ளுறையை இவ்வாறு சொல்லுவனெனலும்
ஒழிந்தோர்க்கு இடம் வரைவின்றெனலும் ] ௩௦௨. *கிழவோற் காயி னுரனொடு கிளக்கு
மேனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே.

இதுவும் அது.

இ—ள்: கிழவோன் சொல்லும் உள்ளுறையுவமந் தன் [3] னுடைமை தோன்றச் சொல்லப்படும். ஏனோரெனப்பட்ட பாங்கனும் பாணனு முதலாயினோர் சொல்லுங்காலை மேற்கூறிய வகை யானே இடம் வரையப்படாது, [4] தாந்தாம் அறிந்த கிளவியா னும் நிலம் பெயர்ந்துரையாத பொருளானும் அந்நிலத்துள்ள பொருளானும் உள்ளுறையுவமை சொல்லப்பெறுப என்றவாறு.

"கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றுக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு
நுந்தை நும்மூர் வருது
மொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே."
(ஐங். ௯௨)

1. 'அதிகரித்து நின்ற' என்றிருப்பது நலம்.

2. பெயர்—எழுவாய்.

3. உடைமை—அறிவுடைமை என்றிருப்பது நலம். உரன் என்பதற்கு அறிவு என்பது பொருளாதலின். இளம்பூரணரும் அறிவொடு என்று கூறல் காண்க.

4. தாந்தாம் அறிந்த கிளவியானும் என்பது தானறிந்த கிளவியானும் என்றிருத்தல்வேண்டும். தான் அறிந்தகிளவியானும் நிலம் பெயர்ந்துரையாத கிளவியானும் என்பனவற்றை மேலே 'மேற்கூறிய வகையானே' என்பதன்முன் வைத்து, அவற்றோடு எனஎன்பதோர் சொற்சேர்த்து, "தானறிந்த கிளவியானும் நிலம் பெயர்ந்துரையாத கிளவியானும்" என மேற்கூறிய வகையானே இடம் வரையப்படாது; எந்நிலத்துள்ள பொருளானும் உள்ளுறையுவமஞ் சொல்லப்பெறும் எனத் திருத்தி எழுதிக்கொள்க. எந்நிலம் அந்நிலம் என மயங்கி எழுதப்பட்டது. 'இடம் வரை வின்றே' என்பதன் உண்மைக் கருத்தை நோக்குவோர்க்கு இது புலனும். இங்ஙனம் மாறியும் மயங்கியும் எழுதப்பட்டன பல உள. அவற்றை ஆங்காங்குக் காட்டுதும். இதுவே பொருத்த மாதல் ௩௦-ம் சூத்திர உரை நோக்கித் தெளிக.

*சூத்திர முறையை நோக்கும்போது இச்சூத்திரத்தில் யாதோ பிழை இருப்பதாகத் தோன்றுகிறது.

21

என்றவழிக், தாய்போன்று நும்மைத் தலையளிப்பலெனத் தலை

மகன் தலைமை தோன்ற உரனொடு கிளந்தவாறு காண்க. [1] ஒழிந்தோராயின் வரையறையின்மையிற் காட்டாமாயினும். அவை வந்துழிக் காண்க. (உஎ)

## [இன்பமுந் துன்பமுந் தோன்ற உவமை சொல்லப்படும் எனல்]

௩0௩. இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு
முவம மருங்கிற் றோன்று மென்ப.

இதுவும் மேலதற்கே யாவதோர் வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற்கூறப்பட்ட உள்ளுறையுவமம் இன்ப துன் பங்கள் தோன்றச் சொல்லவும்படும் என்றவாறு.

" கழனி [2] மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்."

(குறுந். அ) என்பது பலவகையின்பமும்

வருந்தாது பெறுவரென்பதற்கு உவமையாகி வருதலின் இனிதுறு கிளவியெனப்பட்டது.

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் [4]கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத்து."

(ஐங்குறு. உச)

என்பது தலைமகன் [5]கொடுமை கூறினமையின் துனியுறு கிளவி யாயிற்று. இவ்விரு பகுதியும்படச் செய்யப்படும் மேற்கூறிய உள்ளுறையுவமமென்பது இதன் கருத்து. மருங்கென்னும் மிகை யானே ஏனையுவமத்தின்கண்ணும் இப்பகுதி கொள்ளப்படும்.

அவை :—

1. ஒழிந்தோர்க்காயின் என்றிருத்தல் நலம்.
2. மாஅத்து—மாமரத்தினது. வாளை தனக்குரிய உணவன்றி

உகுதிம்பழத்தையுங் கதுவுமூர் என்றமையானே பலவகையின்பமென்றார். பலவகையின்பமும் என்று பொருள் கொண்டமையான் 'மரத்து' என்று பாடங்கொண்டாரோ என்பதும் ஆராயத்தக்கது. மரத்து என்பது சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்புப் பாடம்.

3. சா—சாக.

4. கள்வன்—ஞெண்டு.

5. நண்டும் முதலையும் அன்பின்றித் தன் கிளைக்கே கொடுமை செய்தல்போலத் தலைமகனும் தன் கிளைக்கு அன்பின்றிக் கொடுமை செய்பவன் என்பதாம்.



"மருந்தெனின் மருந்தே [1] வைப்பெனின் வைப்பே." (குறு. எக)

என்பது இனிதுறு கிளவி;

[2] "கராத்தின் வெய்யவெந் தோள்." (ஐங். ஐம். உச)

என்பது துனியுறு கிளவி.

(உஅ)

[தலைவி உள்ளுறை கூறும் நிலம் இவை எனல்]

கூ0ச. கிழவோட் குவம மீரிடத் துரித்தே.

இஃது, அவ்வுள்ளுறையுவமையை வரையறுத்துணர்த்து

தல் நுதலிற்று.

இ—ள்: தலைமகள் இரண்டிடத்தல்லது உள்ளுறையுவமை சொல்லப்பெறுள் என்றவாறு.

இரண்டிடமென்பன மருதமும் நெய்தலும்; அந்நிலத்துப் பிறந்த பொருள்பற்றியல்லது உள்ளுறையுவமஞ் சொல்லுதல் கிழத்திக்குரித்தன்றென்பது கருத்து. இவ்விடத்து உரிமை யுடைத்தெனவே குறிஞ்சிக்கண் அத்துணை யுரித்தன்றென்றவாறு.

" தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம்."

(அகம். சசு) என்றவழி, வண்டூது பனிமலரெனப் பிறர்க்குரிய மகளிரெனவும் அவரை நுயப்பாயெனவும் உள்ளுறையுவமம் மருதத்துக் கண் வந்தது.

" அன்னை வாழிவேண் டன்னை கழிய
முண்டக மலருந் தண்கடற் சேர்ப்ப
னெந்தோ டுறந்தன னாயி
னென்னுங் கொல்லவ னயந்த தோளே."

(ஐங். க0அ) என்பது நெய்தல். இதனுட் கழிய முண்டக மலருமென முள் ளுடையதனைப் பூமலருமென்று உள்ளுறுத்ததனான் [3] இருவர் காமத்துறைக்கண்ணும் ஒருதலை இன்னு ஒருதலை இனிதென்று

1. வைப்பு—வைப்புநிதி.

2. கராம்—முதலை.

3. இருவர்—தலைவனும் தலைவியும். ஒருதலை இன்னு என்றாள்; தங்ஙேரனைத் துறந்தமைபற்றி. ஒருதலை இனிது என்றாள்: அவன் நயந்த தோளின்மையின் எந்தோள் வாடுமென்று விரைந்து வரைவான் என்பதுபற்றி. முள்ளி முள்ளாற் றுன்பஞ் செய்தலும் பூவாலின்பஞ் செய்தலுமுடையதுபோல இவனும் ஒருபக்கத்தாற் (பிரிதலாற்) றுன்பமும் ஒருபக்கத்தால் வரைந்து (புணர்வாறுதலின்) இன்பமுஞ் செய்தலுடையனென்பதாம்.



ளென்பது. என்னேறெந்தனனென்பது முள்ளுடைமையோடொக்க, என்னுங்கொல் அவனைத்தோடோவென்றவழி [1] அவன் அன்பிற்றிரியாமை கூறினமையின் முண்டக மலர்ச்சியோடொப்பிக்கப்படும். பிறவும் அன்ன.

"குன்றக் குறவர் புல்வேய் குரம்பை
மன்று டிலாமறை மறைக்கு நாடன்
புரையன் வாழி தோழி விரைபெய
வரும்பணி யாசைஇ கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே." (ஐங். உ௫உ)

என்னுங் [2]குறிஞ்சிப் பாட்டினுள் வறுமைகூர்ந்த புல்லேவற் குரம்பையை மனைப் புறந்தைக்காற்போல, வாடைசெய்யும் நோய்தீர்க்க வந்தனனென்று உள்ளுறையுவமஞ் செய்தவாறு கண்டுகொள்க. இனிக் கிழவோட்குவமம் பிரிவிடத்துரித்தென்பது பாடமாக உரைப்பாருமுளர். யாதானுமொரு நிலத்தாயினும் பிரிந்திருந்தவிடத்து உள்ளுறையுவமங் கூறப்பெறுங் கிழத்தி என்பது [3]இதன் கருத்து. 'பெருங்கள் வாடையின் முந்து வந்தனனே' என்பது [4]பிரிவன்றாகலின், சிறிதுமென்றலே வலிதென்பது. (௨௯)

*[தலைவன் உள்ளுறை கூறுதற்கு வரையறையில்லை எனல்]*

௩௰. **கிழவோற் காயி னிடம்வரை வின்றே.**

மேல் "உரனொடு கிளக்கும்" என்றதல்லது இன்னவழிச் சொல்லப்பெறுந் தலைமகனென்றிலன், அதனான் அவற்கு எல்லா நிலனும் உரியவாமென்கின்றானென்பது.

இ—ள்: தலைமகற்கு இடவரையறை இல்லை என்றவாறு.

வரையறை யில்லனவற்றுக்கு வரையறை கூறுமே முடியாவோவெனின் அங்ஙனமாயினுங் கிழத்திக்குந் தோழிக்கும் இடம் வரையறுத்ததனைக் கண்ட மாணாக்கன் இவ்வாறே தலைமகற்கும் இடம் வரையறுப்பக்கொலென்று கருதிக் கருதற்க வென்றற்கு இது கூறினானென்பது. (௩௰)

---

1. அவன் என்றிருப்பது சிறப்பு.

2. குறிஞ்சிப்பாட்டு என்றது, குறிஞ்சி ஒழுக்கத்திற்குரிய பாட்டு என்பது கருத்து.

3. இதன்—இப்பாடத்தின்.

4. வந்தது புணர்ச்சிப்பொருட்டாகலின் பிரிவன்றுமென்ற படி.



[தோழியும் செவிலியும் உள்ளுறை கூறுமாறு இவ்வாறெனல்] கஎசு. தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்

கூறுதற் குரியர் கொள்வழி யான.

இது தோழியுஞ் செவிலியும் உள்ளுறையுவமங் கூறுமிட முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாற்றான் உள்ளுறையுவமங் கூறப்பெறுப தோழியுஞ் செவிலியும் என்றவாறு.

காலமுமிடனும் பொருந்துதலென்பது வெளிப்படக் கிளவாது முன்னத்தான்

மறைத்துச் சொல்லவேண்டியவழி அவ் வாறு சொல்லப்பெறும் அவருமென்றவாறு. இங்ஙனம் கூறவே,

"ஏனோர்க் கெல்லை யிடம்வரை வின்று."

(க.0உ) என்றவழி எல்லாரும் உள்ளுறையுவமஞ் சொல்லப்பெறுவரென் பது பட்டது; அதனை நற்றாயும் ஆயத்தாருந் தந்தையுந் தன்னை யரும் உள்ளுறையுவமை கூறப்பெறுரெனவுந், தோழி கூறின் விலம் பெயர்த்துரையாக பொருளான் ஒருவழிக் கூறுமெனவுஞ், செவிலிக்காயின் இடம் வரைவின்றெனப்பட்ட வகையாற் பொருந்தும்வழிக் கூறுதற்குரியளெனவுங் கூறினும் இச்சூத் திரத்தானென்பது. கொள்வழியென்றதனாற் தோழிக்குப்போல விலம் பெயர்த்துரையாக பொருளான் உள்ளுறையுவமங் கூறு தலே செவிலிக்கு மரித்தென்பது கொள்க.

மற்று திணைமயக்

கம் அகப்பொருட்கே யுரியவாக விதந்தோதியதென்னை? புறப் பொருட்கு வாராதனபோலவெனின் ஆண்டு வருதல் அரிதாக லின் இவ்வாறு அகத்திற்கே கூறினானென்பது.

"வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரு
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந."

(புறம். சஉ) என்றக்கால், பகை வேந்தனை

வென்றிகொள்ளுங்கால் [2] அவர் தாமே தத்தம் பொருள் பிறர்க்களிப்பாரென்னும் பொருள்

---

1. மூன்னாம்—குறிப்பு.

2. இவை—இவ்வுள்ளுறைகள்.

3. வன்புலம் மென்புலம் என்றதனுனே வென்றோர் வலியார் என்பதும் தோற்றோர் மெலியார் என்பதும், மெலியார் வலியார்க்குத் திறை கொடுப்பர் என்பதும் உள்ளுறையாகத் தோன்றிற்றென்று கொண்டார்போலும்.



தோன்றினும் தோன்றுமென்பதல்லது ஒருதலையாக உள்ளுறை

புவமங் கோடல்வேண்டுவதன்று. என்னை?

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூர்."

(ஐங்கு. உச)

என்றாற்போலக் கூறுது, அந்நாட்டுக் [1] கருங்களமர் முதலாயினர் வருந்தாமற் பெறும்பொருள் பிறநாட்டார்க்கு விருந்து செய்யத்தகுமென்று அந்நாட்டினது வளமை கூறினமையினென்பது. தோழி பொருந்தியவழிக் கூறுமாறு முன் காட்டப்பட்டன. செவிலி பொருந்துவழிக் கூறுவனவுங் கண்டுகொள்க. இலக்கணமுண்மையின் [2] அவையும் உளவென்பது கருத்து. (கூக)

[ வேறுபடவரு முவமைக ளிவையெனல் ]

கூ०எ. வேறுபட வந்த வுவமத் தோற்றங்
கூறிய மருங்கிற் கொள்வழிக்
கொளாஅல்.

இது மேலெல்லாம் இருவகை யுவமமுங் கூறி இன்னும் ஏனையுவமப்பகுதியே கூறுவான் எய்தாததெய்துவித்தது.

இ—ள்: வேறுபட வந்த உவமத் தோற்றம்—வேறுபாடு தோன்றவந்த உவமைச்சாதி, தோற்றமெனினும் பிறப்பெனினுஞ் சாதியெனினும் ஒக்கும்; கூறிய மருங்கிற் கொள்

வழிக் கொளாஅல்—அங்ஙனம் வேறுபடவந்தனவாயினும் மேற் கூறிய பகுதியானே கொள்ளுமிடனறிந்து கொளுத்துக என்ற

வாறு.

கொளுவுதலென்பது 'கொளாஅல்' என்பதாயிற்று.

வேறுபட வருதலென்பது:— உவமைக்கும் பொருட்கும்

[3] ஒப்புமை மாறுபடக் கூறுதலும்: ஒப்புமை கூறாது [4] பெயர்

போல்வனவற்று மாத்திரையானே மறுத்துக் கூறுதலும்,

---

1. கருங்களமர்—பறையர். சேனாவரையரும் வெண்களமர் கருங்களமர் என்பன பண்பு குறியாது சாதிகுறித்து வந்ததென்பர். (சொல். கிளவி. கஎ-ம் சூத்திர உரை நோக்குக.)

2. அவை என்றது உதாரணங்களை.

3. ஒப்புமை மாறுபடக் கூறலும் என்ற பாடமே பொருத்தம். என்னை? ''வையங் காவலர்'' என்ற உதாரணம் அதற்கே காட்டப்படலின்.

4. பெயர்போல்வனவற்றான் மறுத்துக்கூறற்குதாரணம் பின்காட்டும் ''கண்ணனவனிவன் மாறன்'' என்பது. இது வேற்றுமையணியுள் அடங்கும்.

1 ஒப்புமை மறுத்துப் பொருளை நாட்டிக் கூறுதலும், 2 ஒப்புமை மறுத்தவழிப் பிறிதோருவமை நாட்டுதலும், 3 உவமையும் பொருளும் முற்கூறி நிறீஇப் பின்னர் மற்றைய ஒவ்வாவென் றலும், 4 உவமைக்கு இருகுணங் கொடுத்துப் பொருளினை வாளாது கூறுங்கால் உவமையினை இரண்டாக்கி ஒன்றற்குக் கூறிய அடை ஒன்றற்குக் கூறாது கூறுதலும், 5 ஒப்புமை குறைபட உவமித்து மற்றொரு குணங்கொடுத்து நிரப்புதலும்,
6 ஒவ்வாக்கருத்தினான் ஒப்புமை கோடலும், 7 உவமத்திற்கன்றி உவமத்திற்கு ஏதுவாகிய பொருட்குச் சில அடைகூறி அவ்வடை யானே உவமிக்கப்படும் பொருளினைச் சிறப்பித்தலும், 8 உவமானத்தினை உவமேயமாக்கியும் அது விலக்கியுங் கூறுதலும்,
9 இரண்டு பொருளானே வெவ்வேறு கூறியவழி ஒன்று ஒன்
றற்கு உவமையென்பது கொள்ளவைத்தலும் இன்னோரன்ன
வெல்லாம் வேறுபடவந்த உவமத்

தோற்றமெனப்படும்.

இவற்றைக் கூறிய மருங்கிற் கொளுத்துதலென்பது, முற் கூறிய வினையுவமத்தின்பாலும் பிற்கூறிய உள்ளுறையுவமத்தின் பாலும் படுத்துணரப்படுமென்பது.

வினையுவமத்தின்பாற்படுத்தலென்பது வினை பயன் மெய் உரு என்ற நான்கும்பற்றி வருதலும் அவற்றுக்கு ஓதிய ஐவகை நிலைகளனும்பற்றி வருதலுமெனக் கொள்க.

உள்ளுறையுவமத்தின்பாற்படுத்தலென்பது, இவ்வினையுவமம்போல உவமையும் பொருளுமாகி வேறுவேறு விளங்கவாராது குறிப்பினாற் கொள்ள[10]வருதலின் இக்கருத்தினானே [11] இதனை [12] ஈண்டு வைப்பானாயிற்று.

1. இது தோற்றவுவமையுளடங்கும்.
2. இது பிறிது பொருளுவமை.
3. இது வேற்றுமையணி.
4. மறு பொருளுவமையுளடங்கும்.
5. பல பொருளுவமையுளடங்கும்.
6. கருத்துவமையுளடங்கும்.
7. மறுபொருள் உவமையுளடங்கும்.

8. தற்குறிப்பேற்றம்.

9. எடுத்துக்காட்டுவமை.

10. வருதலின் என்பது வருதல், என்றிருத்தல்வேண்டும்.

11. இதனை—இவ்வேறுபட வந்த உவமத்தினை.

12. ஈண்டு—உள்ளுறையுவமை அதிகாரப்பட்ட இடத்து.



வரலாறு :—

(க) "வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
வொடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலல்
மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
யகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே."
(புறம். 8)

] என்னும் பாட்டினுள் "கடந்தடு தானைச் சேரலாதனை" என்னுந் துணை உவமத்திற்கு வந்த அடையினைப் பொருட்கு மறுத்துக்கொள்ள வைத்தானென்பது. என்னை? "வெஞ்சுடர் வழி" என்னுந்துணை உவமத்திற்குரிய அடையினைப் பொருட்கு மறுத்துக்கொள்ள வைத்தானென்பது. "இனிப் பொழுதென வரைதி" என்பது தொடங்கிப் பாட்டு முடிகாறும் பொருட்குரிய அடை யினை உவமத்திற்கு மறுத்துக்கொள்ள வைத்தானென்பது. என்னை? வெஞ்சுடர்வழித் தோன்றிய அரசனைத் தண்சுடரோடு பழிப்பான் பொருளோடுவமஞ்செய்தானென்பது.

[ என்னும் பாட்டினுள் "கடந்தடு தானைச் சேரலாதனை" என்னுந் துணை உவமத்திற்கு வந்த அடையினைப் பொருட்கு மறுத்துக்கொள்ள வைத்தானென்பது, இனிப் "பொழுதென வரைதி" என்பது தொடங்கிப் பாட்டு முடிகாறும் பொருட் குரிய அடையினை உவமத்திற்கு மறுத்துக்கொள்ள வைத்தா னென்பது. என்னை? வெஞ்சுடர்வழித் தோன்றிய அரசனைத்

தண்சுடரோடு [2] பழிப்பான் பொருளை உவமஞ் செய்தமையா னென்பது.]

1. 'என்னும் பாட்டினுள்' என்று தொடங்கும் இவ்வாக்கியம் பின் பகரக் கோட்டினையடுத்த வாக்கியம்போலிருப்பிற் பொருத்தமாகும். என்னை? 'வெஞ்சுடர்வழி' என்பது பாட்டினுள்ள அடிகளுளொன்றாகக் காணப்படாமையானும், ஏனைய வாக்கியம் முன்வந்தமையானும் 'என்னை? வெஞ்சுடர்வழி' எனப் பின் வரும் வாக்கியமோ இங்குஞ் சேர்த்துப் பிழையாக எழுதப்பட்டிருத்தல்வேண்டுமென ஊகிக்கப்படுதலானுமென்பது. இப்பாட்டினுள் உவமம்—அரசன், உவமேயம்—சந்திரன் எனக் கொள்க.

2. பழிப்பான் — 'உவமிப்பான்' என்றிருத்தல்வேண்டும். அங்ஙனமே டாக்டர் உ. வே. சாமிநாதையரும் புறநானூற்றில் இப்பாட்டி னடிக்குறிப்பிற் கூறியுள்ளார். ஆண்டுக் காண்க.



[பொருளை யுவமஞ்செய்தனர்] 'மொழியினும்' (உஅச) மென் றதனாற் பொருளினை உவமையாகக் கூறாது, உள்ளுறையுவமம்

கடையாயினர் [1] கதியிற் செல்லு மதியமென்று பாட்டுடைத் தலைவன் தலையாயினர் கதியிற் செல்லுமென்றான். பொழுதென வரைதியெனவே, நாடோறும் நாழிகை வேறுபட்டு எறித்தி யென்றதனன் இவன் [2] பொழுது செய்யானெனவும், புறங் கொடுத் திறத்தியெனவே, தோற்றார்போன்று ஒளிமழுங்கிச் செறிகின்றாயெ [3] (னவும், விளங்கித் தோன்றலெ) ன்றதனாற் [4] (தொடர்கின்ற) சுடர்போல விளங்கிப் பிறர் தோற்றோடக் காயும் இவனெனவும், மாறி வருதியெனவே, திங்கடோறும் மாறிப் பிறத்தியென்றதனன் இவன் நிலைபெற்றானெனவும், மலை மறைந் தொளித்தியெனவே, மலைசார்ந்தவழித் தோன்றாயென்றத னன் இவன் தன்னாட்டு [5] மலைமீக் கூறுமெனவும், அகல் விசும்பி னுமெனவே, இவன் இவ்வுலகத்து நிலைபேறுடையனெனவும், பகல் விளங்காயெனவே, இவன் இருபொழுதும் விளங்குமென வுங் கொள்ளப்படும். முற்பகுதியும் பிற்பகுதியும் வேறுபடு தலின் வேறுபட வந்ததாயிற்று. மற்றவையும் அன்ன.

இக்கூறிய அடையெல்லாம், வினை பயன் மெய் உருவெனக் 'கூறிய மருங்கிற் கொள்வழிக்' 6 கொளுவுவதாகக் காட்டுவன வற்றிற்கும் இஃதொக்கும்.

(உ) "கன்னா னவனிவன் மாறன் கமழ்துழாய்க்
கன்னி யவற்கிவற் கு வேம்புதார்—வண்ணமு
மாய னவனிவன் சேயன் மரபொன்றே
யாய னவனிவன் கோ."

என்பது, பெயருந் தாரு முதலாயினபற்றி மாயனோடு உவமங் கருதி மறுத்துரைத்தவாறு. 7 பெயரென்பது பொருளுணர்த்து தலின் அதனை வடிவின்பாற்படுத்துணர்க.

---

1. கதி—செலவு.

2. பொழுது செய்யாமை—காலங்குறித்துத் தோன்றுமை. எனவே தான் விரும்பிய காலத்துத் தோன்றுவான் என்றபடி.

3.—4. இப்பகரக் கோட்டினுள்
அடைத்தவையும் வேண் டியதில்லை.

5. மலைமீக் கூறும்—மலையிலுள்ளாராலும்

புகழப்படுவான் என்பது. இவன் மலைக்கண் மறையான் என்றபடி.

6. 'கொளுவுவதாகக் காட்டுவனவற்றிற்கும்' என்பது, 'கொளுவுக இனிக் காட்டுவனவற்றிற்கும்' என்று பாடமுள்ளது. அதுவே பொருத்தமாதல் காண்க.

7. பெயரும் வடிவுளடக்கப்படும் என்றபடி.



(௩) "அடிநோக்கி னூழ்கடல் வண்ணான்றன் மேனிப்
படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரோன்—முடிநோக்கித்
தேர்வளவ னாத றெளிந்தேன்றன் சென்னிமே
லாரலங்க லொன்றிற்றுக் கண்டு."

என்பதனுள், ஆழ்கடல் வண்ணனையுங் கொன்றைத்தாரோனையும் உவமை [1] கூறி அவற்றை மறுத்துத் தேர்வளவனெனத் தெளிந்தேனெனப் பொருளையே நாட்டுதலின் அஃது உவமம் வேறுபட வந்ததாயிற்று.

(௪) [2] "இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த
வந்தரத்தா னென்னிற்
பிறையில்லை—யந்தரத்துக்
கோழியா னென்னின் முகமொன்றே கோதையை
யாழியா னென்றுணரற் பாற்று."

என்பதனுள், இந்திரனையும் இறையோனையும் முருகனையும் ஒப்பு மறுத்து நெடியோனை உவமங் கூறலின் ஒப்புமை மறுத்துப் பிறிது நாட்டியது.

(ரு) 1. " சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமகனுங்
கொற்றப்போர்க் கிள்ளியுங் கேழொவ்வார்—பொற்றொடீ
[3] யாழியுடை யான்மகன் மாயன் சேயனே
கோழி யுடையான் மகன்."

என்பதனுள் உவமையும் பொருளும் முன் ஒருங்கு நிறீஇப் பின்னர் ஒவ்வாமை கூறுதலின் இதுவும் பின்னும் வேறுபட வந்ததாயிற்று.

2. "புனனாடர் கோமானும் பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு படுப—புனனாடன்
[4] னேற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவ
னேற்றிரந்து கொண்டமையா னின்று."

என்பதுவும் அது.

(கூ) [5] " ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலி
னீர்த்துறை படியும் பெருங்களிறு போல
வினியை பெரும வெமக்கே."

(புறம். கூச)

---

1. கூறி அவற்றை எனப் பிரிக்க.

2. கோதையாகிய இவனை இந்திரனென்னின் அவற்குக் கண் ஆயிரம்; இவற்கு இரண்டே. ஆதலால் அவனல்லன் எனப் பொருள் விரித்துரைத்துக்கொள்க. ஏறூர்ந்த அந்தரத்தான்—சிவன். கோழியான்—கோழிக்கொடியோன்=முருகன்.

3. ஆழி—சக்கரம். மாயன் — கரியன். சேயன் — செந்நிறமுடையன். கோழி—உறையூர்.

4. ஏற்று—எதிர்த்து. எறிந்து—கொன்று.

ஏற்று—யாசித்து.

5. ஊர்க்குறுமாக்கள் என்னுஞ் செய்யுளில் அமைந்துள்ள வேறுபடவந்த உவமத் தோற்றம் என்பதன் விளக்கமாவது:



என்னும் பாட்டினுள் உவமையாகிய பொருளினை யானையுங் கடாமுமெனை இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடு கழாலின் நீர்த்துறை படியுமென்னும் அடைகூறி [1] ஊர்க்குறுமாக்கள் போல்வாரைத் துன்னருங் [2] கடாஅத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபடவந்த உவமைத்தோற்றமெனப்பட்டது.

(எ) "முதிர்கோங்க முகையென முகஞ்செய்த குரும்பையெனப் பெயறுளி [3] முகிழெனப் பெருத்தநின் னிளமுலை." (கலி. ருசு)

என்றவழி, முதிர்கோங்கும் முற்றிய குரும்பையும் பெரியவாக லின் அவைபோலப் பெருத்தநின் இளமுலையென்றல் ஒத்தது, பெயறுளிமுகுளஞ் சிறிதாக இவற்றோடு அதனை உடன் கூறி அப்பெயறுளி முகுளத்திற்கில்லாத பெருமைக்குணம் [4] பொருட்குப் பின்னர் விதந்து கூறுதலின் அதுவும் வேறுபட வந்த உவமையாயிற்று.

(அ) "மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பா ரியாங்கண்ட தில்."

(குறள். ௧௦௭௧)

என்பது ஒவ்வாப் பொருளை ஒப்புமைகொண்டது. என்னை? மக்களைக் கயவர் ஒவ்வாரென்னுங் கருத்தினன் மக்கள்போல்வர் கயவரென்றமையின் அதுவும் வேறுபடவந்த உவமையாயிற்று.

(ஆ)

"நெடுந்[5] தோட் டிரும்பனை நீர்நிழல் புரையக்
குறும்[6] பல முரிந்த குன்றுசேர் சிறுநெறி."

யானை இனிமை செய்தற்கு ஊர்க்குறுமாக்களைச் சொல்லி அது மதம் பட்டவழி இன்னா செய்தற்கு அவர்போல்வாரை இன்னாரென விதந்து சொல்லாமையின் வேறுபடவந்த உவமமாயிற்று என்பது. ஊர்க்குறுமாக்களுக்கு வெண்கோடு கழுவுமிடத்து களிறு இனியது. அவர்போல்வாருக்கு மதம்பட்டவழி இன்னாது என்பது செய்யுட்கருத்து.

1. போல்வாரை என்ற பாடமே பொருத்தம். போல் அவரை என்ற S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் பாடம் பொருத்தமில்லை.

2. கடாத்திற்கு—கடாமாகிய உவமைக்கு.

3. முகிழ்—குமிழி—முகுளம் என்பதும் குமிழிக்குப் பெயர்.

4. பொருள்—உவமேயம். பின்னர்—பின். விதந்து—தெரித்து என்றது பெருத்த எனத் தெரித்துக் கூறினமையை. பெருமை, குமிழியாகிய உவமைக்கில்லாதபடியாற்றான் பின் தெரித்துக் கூறினாரென்றபடி.

5. தோடு—இதழ். 6. புல—புலவாய்.



என்பதனுள் உவமையாகிய நிழல் பொருட்கெய்தியது [1] உவம

வினையன்றே, அதற்கு நெடுந்தோடும் பெருமையும் அடையா

கக் கூறினான்; கூறவே,

பனைநிழலோடொக்குங் குன்றஞ்சேர்

சிறுநெறி முடிந்தவழிச் சென்றுபுகும் ஊர்க்குவமை நெடுந்

தோடென்று கொள்ளவைத்தமையின் அதுவும் வேறுபடவந்த

உவமையாயிற்று.

(கo) "மண்படுதோட் கிள்ளி மதவேழ மாற்றரசர்

வெண்குடையைத் தேய்த்த

வெகுளியால்—விண்படர்ந்து

பாயுங்கோ ளொன்று பனிமதியம்

போல்வதூஉந்

தேயுந் தெளிவிசும்பி னின்று.''

என்பதனுள், [2] உவமானத்தினை உவமேயமாக்கி அதனையே விலக்கினார்; என்னை? வெண்குடையென்று யானை குத்துமென்று மதியினைக் குடையுடனொப்பிப்பான் மதியினைக் குடையாகவே கூறிக், தேயுந் தெளிவிசும்பினின்று என்பதனாற் குடையோடு உவமை கூறியதை விலக்கினமையின் அதுவும் வேறுபடவந்த உவமைத் தோற்றமாயிற்று.

(கக) "அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

(குறள். க)

என்றவழி, இரண்டு பொருள் வேறுவேறு கூறியதன்றி, 'அகர முதல எழுத்தெல்லாம் அதுபோல'

என்றானும் 'ஆதிபகவன்
முதற்று உலகம் அதுபோல' என்றானும்
ஒன்றாகத் துணியு
மாற்றான் உவமையும் பொருளுங் கூறாமையின்
அதுவும் வேறு
படவந்த உவமமாயிற்று. பிறவுமன்ன. இவை
ஏனையுவமத்திற்
கெல்லாம் பொதுவிலக்கணம்.

[ஒவ்வாதெனக் கூறி உவமையாக்கலும்
உளவெனல்]

௩௦அ. ஓரீஇக் கூறலு மரீஇய பண்பே.

இதுவும் ஏனையுவமத்திற்காவதோர்
இலக்கணமுணர்த்து
தல் நுதலிற்று.

---

1. உவமவினையின்றே என்பதற்கு வினையுவமமன்றே என்பது கருத்து. பனைநிழல் முடிந்தவழி நெடுந்தோட்டு நிழல் தோன்றுதல் சிறுவழி முடிந்தவழிச் சென்று புகும் ஊர் தோன்றுதற்குவமையாதலின் வினையுவமம் எனப்பட்டது.

2. குடைக்கு உவமானம்—மதி. அதனை ஈண்டு உவமேயம் ஆக்கி என்றது குடைக்குவமானமாகிய மதியைப் பின் குடை
யாகிய உவமேயமாக்கி என்றபடி. தன்னையுங்
குடையென்று

தன்மேலும் பாயுமோவென்று கருதி அவ்வச்சத்தால் மதி தேயு மென்று மதியைக் குடையாகக் கூறினமையே உவமேயுமாக் கியதாம்,



இ—ள் : ஒரீஇக் கூறலும்—ஒக்குமெனக் கூறாது ஒவ்வாதெனக் கூறுதலும், உம்மை இறந்தது தழீஇயிற்று ; மரீஇய பண்பு—அதுவும் உவமையாதற்கு அடிப்படவந்த வழக்கு என்றவாறு.

உதாரணம் :

" யாங்ஙன மொத்தியோ விலங்குசெலன் மண்டிலம்." (புறம். அ)

எனவும்,

" மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி."

(குறள், ௧௧௧அ)

எனவும வருமட.

[1] "நின்றோ ரனையை நீ."
என்பதும் அது.
இவற்றுள் யாங்ஙனம்
ஒத்தியோவென்பது ஒவ்வாயென்
னும்பொருட்டு. காதலை வாழிமதி
யென்றவழியும், யான் காதலி
யாமையான் மதியமே! அவள் வாண்முக
மொவ்வாயென்றவின்
ஒரீஇக் கூறிற்று. [2] இதுவும் [3] மரீஇய
பண்பாகலானும் உள்

ளுறையுவமம்போலக் குறிப்பினான் உவமங்கோட லொப்புமை
யானும் ஈண்டு வைத்தானென்பது. பண்பென்றதனான் அது
வும் இலக்கணத்தோடொக்கும் என்றவாறு.

இவற்றையும் வேறு
படவந்த உவமமென்றோவெனின்,
உவமையும் அவ்வழி மாறு
பட வருமாறு உவமத்துக் கூறினான்,
உவமையின்மை கூறு
தலும் உவமையெனப்படுமென்றற்கு இது
கூறினானென்பது.
இவற்றுள்ளும் வேறுபடவந்த இலக்கணம்

மேலைச்சூத்திரத்துள் அடங்கும்.

(௯௯)

[உவமை பெருமையுஞ் சிறுமையுந் தோன்றாமலுங் கூறப்படுமெனல்]

௩௦௧. உவமத் தன்மையு முரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான.

இஃது எய்தாதது எய்துவித்தது; மேல் எனையுவமங் கூறுங்கால், உவமிக்கப்படும் பொருட்குப் பெருமையுஞ் சிறுமை

---

1. நின்போல்வாரை யொப்பை நீயெனவே, நின்போல்வாரில்லையென்று ஒவ்வாமை கூறியதாயிற்று.
2. இதுவும் என்றது இச்சூத்திரத்தை.
3. மரீஇய பண்பு—மரபாகவந்த தன்மை,

யுஞ் சிறப்பக் கூறல்வேண்டுமென்றான்; அவ்வாறன்றி உவம முங் கொள்ளப்படுமென்றமையின்.

இ—ள்: உவமத்தன்மையும் உரித்தெனமொழிப—விகார வகையாற் பெருமையுஞ் சிறுமையும் ஒரு பொருட்குக் கூறாது உ பட்டாங்கு உவமங் கூறுதலும் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர், பயனிலை புரிந்த வழக்கத்தான—அதனானும் ஒரு பயன் தோன்றச் சொல்லுத னெறிப்பாட்டின்கண் என்றவாறு.

அது,

"பாரி பாரி யென்று பலவேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்."

(புறம். ௧0௭) என்னும் பாட்டினுள் உலகளித்தற்கு மாரியும் உண்டென உவ மித்துச் சிறப்பித்துக் கூறுவான், மாரியைச் சிறப்பித்துப் பாட்

டுடைத் தலைவனுகிய பாரியை உயர்த்துக் கூறுதான்போல இயல்பினுன் உவமை கூறினுனும்; இது மாரிக்கும் பாரிக்கும் ஒரிழி பில்லையென்னுந் தன்மைபடக் கூறவே அவனுயர்வு கூறுதலிற் [3] பயனிலைபுரிந்த வழக்கெனப்படுமென்பது.

" கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் [4] புழுகின்
விஸ்லோர் [5] தூணி வீங்கப் பெய்த
[6] வப்பு நுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
[7] செப்பட ரன்ன செங்குழை யகந்தோ
[8] திழுதி னன்ன தீம்புழற் [9] றுய்வா
[10] யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்

---

1. அவ்வாறல்றி உவமமும் என்பது அவ்வாறன்றியும் உவமம் என்றிருப்பது நலம்.

2. பட்டாங்கு—உண்மை. உண்மை, இயல்பு தன்மை என்பன ஒருபொருளன. இளம்பூரணர் தன்மையென்பதற்கு உவமையது தன்மை என்பர். தன்மை—குணம்.

3. பயன்—பிரயோசனம்.

4. புழுகு—மொட்டு. எஃகின் எனவும் பாடம்.

5. தூணி—அம்பறுத்தூணி.

6. தூணி வீங்கப்பெய்த அப்பு நுனை, இருப்பை அரும்புக்

ருவமை.

7. செப்படர்—செப்புத் தகடு.

8. இழுது—வெண்ணெய்.

9. துய்வாய்—என்றது பூவை. உவம ஆகுபெயர்.

10. உழுது காண்டல்—தாள் நீக்கிக் காண்டல்.



துப்பி னன்ன செங்கோட் [1] டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்.''

(அகம். ௬) எனவும்,

"நீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற வணிலொடு [2] கருப்பை யாடா
தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தோட்
டத்திலை வேய்ந்த [3] எய்ப்புறக் குரம்பை.''

(பெரும். அ௫) என்றாற்போல்வனவும் அது.

"கொல்வினைப் பொலிந்த.''

என்பதனுள் இங்கிலத்தின் மக்கள் அம்பினை உவமையாக்கி

ஆண்டையவாகிய இருப்பையின் பூங்கொத்தை உவமிக்கப்படும் பொருளாக்கியும், உவம நிலத்திற்கேற்ற வெண்ணெய்த் திரளொடு, கழன்ற பூவினை உவமஞ்செய்தும், அந்நிலத்தியல்பு கூறினமையின் அது பயனிலை புரிந்த வழக்கெனப்பட்டது. பிறவும் அன்ன.

உவமத்தன்மையுமென்ற உம்மையான் உவமத்தன்மையே யன்றி வாளாது தன்மை கூறுதலும், அந்நிலத்திற்கே பயனிலை யெனப்படுவனவுங் கொள்க. அவை:—

"மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
[4] யீன்பிண வொழியப் போகி நோன்கா
ழிரும்பு தலையாத்த திருந்து[5]கணை விழுக்கோ
லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
யிருநிலக் [6] கரம்பைப் படுநீ றாடி
நுண்புல் லடக்கிய வெண்பல் லெயிற்றியர்
[7] பார்வை யாத்த பறைதாள் விளவி
னீழன் முன்றி னிலவுரற் பெய்து." (பெரும்.

௮௯—௯௭) என்றவழி உவமஞ்செய்யாது அந்நிலத்தியல்பு கூறப்பட்டதாயினும் உவமத்தாற் [8] பொருட்பெற்றி தோன்றச்செய்தார்போல

---

1. இயவு—வழி.
2. கருப்பை—காரெலி.

3. எய்—முட்பன்றி.

4. ஈன்பிணவு—ஈன்றபெண். ஈன்பிஞ எனவும் பாடம்.

5. கணை—திரட்சி.

6. கரம்பை—பாழ்நிலம்.

7. பார்வை—பார்வை மிருகம்.

8. பொருள்—உவமேயம்.



களள.

அங்கிலத்திற்குப் பயப்பாடு வெளிப்படச் செய்யாமையின் உவம விலக்கணத்துள் 1 இதனையும் இலேசினற் கொண்டாமென்பது.

அற்றன்று;

"மரபே தானும்." (தொ. செய். அ0)

என்புழி, "நாற்சொல்லிய" லெனச் சொற்றன்மையுங் கூறப் பட்டமையின் உவமையாராய்ச்சியுள் அது

[2] கூறுமெனன்பது.

[3] உம்மை இறந்தது தழீஇயிற்று ; என்னை? உயர்ந்ததன்மேற் றன்றி, உயர்பிழிபுடைத்தல்லாத தன்மையுவமையுங் கொள்க வென்றமையின்.

(௩௪)

[தடுமாறு உவமமும் உளவெனல்]

௩௧௦. தடுமா றுவமங் கடிவரை யின்றே.

இதுவும் உவமத்திற்கேயாவதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தடுமாறுவமம்—உவமையும் பொருளும் வேறு நிறீஇ இதுபோலும் இதுவென்றது அவ்விரண்டனையும் [4] ஐயுறச் சொல்லுந் தடுமாறுவமம், இனி அவ்வாறன்றி உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமையாக்கியுந் தடுமாறச் சொல்லு

தலும் தடுமாறுவமமெனப்படும்; கடிவரை இன்று—அவ்விரண்டும் உவமமென்று சொல்லற்பாட்டிற் கடியப்படா என்றவாறு.

"அரிமல ராய்ந்தக ணம்மா கடைசி
திருமுகமுந் திங்களுஞ் [5]செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா தணங்காகி
யையத்து நின்ற தரா."

(பொய்கையார்)

என்பதனுள் உவமையினையும் பொருளினையும் வேறுவேறு துணியாது ஐயுற்று வையத்தும் வானத்துஞ் செல்லாது; அரா வென்றமையின் இது தடுமாறுவமமாயிற்று.

"தளிபெற்று வைகிய தண்கனை நீல
மனிபெற்றார் கண்போன் மலரு—மளிபெற்ற

1. இது தன்மையணியுளடங்கும்.

2. கூருங்கலின் என்பது என்றிருப்பது நலம்.

3. உம்மை—உவமத்தன்மையும் என்றதிலுள்ள உம்மை.

4. உவமையுற என்றும் பாடம்; அது சிறப்பின்று.

5. செத்து—(ஒன்றாக) நினைத்து.
23



{உவம

நல்லார் திருமுகத் தோற்றத் தளிபெற்ற
கல்லாரம் போன்மலருங் கண்.''

என்புழி, நீலத்தோடு கண்ணிணையும் கண்ணிணோடு நீலத்தினையும் ஒன்றற்கொன்று உவமையாக்கியும் பொருளாக்கியும் ஒருங்கே தடுமாறக் கூறினமையின் இதுவுந் தடுமாறுவம மெனப்பட்டது. பிறவும் அன்ன. (கரு) 1

[உவமைக்குவமை இல்லையெனல்]

கஉக. அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே.

இஃது எய்தியது மறுத்தது; என்னை?

வேறு ஒரு பொரு
ளோடு ஒரு பொருளை உவமித்து நிறீஇ
அப்பொருளோடு பிறி
தொரு பொருளை உவமித்தலும்
உவமையென்று கொள்ளுவா
ருளரேனும் அது கொள்ளப்படாது
பொருள் விளங்காமைபி
னெனக் கூறி விலக்கியுமையின்.

இ—ள்: அடுக்கிய தோற்றம் — உவமையும் பொருளும்
நிறுத்தி அடுக்கிய தோற்றம், விடுத்தல் பண்பு—சிறப்பினவா
கக் கொள்ளப்படா என்றவாறு.

° "மதியத் தன்ன வாண்முகம் போலும்
பொதியவிழ் தாமரைப் புதுப்பூம் பொய்கை."

என்றக்கால் மதியத்தன்ன வாண்முகத்தினைத் தாமரையென்
றமையின் அவை ஒன்று ஒன்றனோடு பொருந்தாவென்பது
கருத்து.

"இலங்குவளை யன்ன நலங்கே ழாம்பற்
போதி னன்ன தாதவிழ் கைதை."

என்றக்கால், ஒன்று ஒன்றனோடு ஒரு
[3] வண்ணத்ததாய் உவ
மைக்கேற்பினும் ஒன்றற்கொன்று
உவமையாய் நின்றது. நின்றுற, [4] மற்றும்
அதனோடு உவமங்கொள்ளப்படாது; இது
வரை
யறையுடைமையின் விலக்கப்பட்டது.
மற்று,—

1. இதனை இதரவிதரமென்பர்
வடநூலார்.

2. மதியத்தன்ன வாண்முகம்
என்பது துணிக்கப்பட்டு
வேறு முடிபுபெறின்
உவமைக்குவமையாகுங் குற்ற மாகாது;
பெருது வருதலின் ஒன்று ஒன்றனோடு
பொருந்தாது குற்ற
மாம என்றபடி.

3. வண்ணம்—நிறம்.

4. மற்றும்—மற்று என இருத்தல்
வேண்டும். அதனோடு—

உவமைக் குவமையாய் நின்றதனோடு. இவ் வாக்கியத்தில் பிழை யிருத்தல் வேண்டும்.

"ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த [1] குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நெறிச்சினை வேங்கை நாண்மலர் நச்சி."
(சிறுபா. கசு)

என்பதூஉம் அடுக்கிய தோற்றமெனப்படாதோவெனின், படாதன்றே; யானைக்கைபோலுங் குறங்கு; குறங்குபோலும் வாழை யெனவடுக்கிச் சொல்லாது குறங்கினையுடையாளென்று துணித்துக் கூறியபின்னர்க் குறங்கென மால்வரை ஒழுகிய வாழை யென்றானாதலினென்பது. தோற்றமென்றதனான் உவமையும் பொருளுமாக நிறீஇ உவமவுருபு தோன்றக் கூறுங்கால் அடுக்கப்படுவதென்பது.

(கூசு)

[உவமை நிரனிறையாகவும்

௯௧௨. [2] நிரனிறுத் தமைத்த னிரனிறை சுண்ணம்
வரைநிலை வைத்த மூன்றலங் கடையே.

இதுவும் எய்தாதன வரையறையுடைமையிற் கூறியவற் றோடு இனமாகலின் உவமத்திற்காவதொன் றுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நிரனிறுத்து அமைத்தல் நிரனிறை—உவமையையும் நிரலே நிறுத்துப் பொருளினையும் நிரலே நிறுத்து ஒப் புமை கூறின் அது நிரனிறையெனப்படும், சுண்ணம் வரைநிலை வைத்த மூன்றலங் கடையே—சுண்ணத்தினை [3] வரைந்த நிலைமை யான் வந்த சுண்ணமும் அடிமறியும் மொழிமாற்றுமென்னும் மூன்றுமல்லாத இடத்து என்றவாறு.

---

1. குறங்கின் என்பது குறங்கெனவரு மதற்கு உவமை யாகாது தாஞ் துணிக்கப்பட்டுநின்று பின்வரும் ஓதி முதலிய வற்றோடும் எண்ணப்பட்டு உடைய என்னும் (தொக்குநின்ற பொருளாகிய) பெயரெச்சத்தோடு கூடி விறலியர் என்னும் பெயர்கோடலின் உவமைக் குவமையாகாது என்றபடி.

2. இளம்பூரணர் இச் சூத்திரத்தையும் இதற்கு முற் சூத்திரத்தையும் ஒன்ருக்கி, இச் சூத்திரத்து 'வரைநிலைவைத்த' என்பதை 'வரைநிலை வந்த' எனப் பாடங் கொண்டு இம் மூன்றுமல்லாதவிடத்து உவமை பல அடுக்கிவருதல் கொள்ளப் படாது என்பர்.

3. வரைதல்—நீக்கல். வந்த என்று பொருள் கூறலின் வைத்த' என்பது 'வந்த' என்றிருத்தல் வேண்டும்போலும்.



சுண்ணத்தினை வரைந்தநிலைமையான் வந்தனவெனவே சுண்ணந்தவிர மூன்றுளவோவெனின் அதனை[1] ஒருவரை விலக்க மூவரும் வந்திலரென்றாற்போலக் கொள்க.

உதாரணம்,

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண் கண்மேனி

மதிபவள முத்த முகம்வாய் முறுவல்

பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்

வடிவினளே வஞ்சி மகள்."

என வரும். நிரனிறுத்தலென்றது அமைத்தவென்றதனான் நிரனிறையன்றி அமைத்துக்கொள்வதும் உண்டு; அது,

2 "களிறுங் கந்தும் போல நளிகடற்

கூம்புங் கலனுந் தோன்றுந்

தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே."

எனவரும்; பிறவுமன்ன.

என்றாக்கு, 'நிரனிறுத்தமைத்த நிரனிறை எனைவரை நிலைவைத்த மூன்றலங்கடையே' என்றது, சுண்ணத்தினை வரைந்தோதியது என்னையெனின்? அவை மூன்றுஞ் சுண்ணம்போலச் சுண்ணஞ் செய்யப்படுதலின், அவ்வாற்றாற் சிதர்ந்து கிடப்ப உவமையுங் கூறின் அது பொருள் விளக்காதென்பது

அறிவித்தற்கென்பது. என்னை?
அடிமறியுள் ஓரடியுள் உவமங்

கூறி ஓரடியுட் பொருள்வைத்தால் இனிது பொருள்கொள்ளாது அடிமறிக்குங்காலேப் [3] பிறிது பிறிதாகலுடைத்து. இனி ஓரடியுள் உவமங் கூறிப் பின்னர் எத்துணையுஞ் சென்று பொருள்

கூறி மொழி மாற்றிக்கொள்ள வைப்பின்
அதுவும் உவமத்தாற்

பொருள் தோன்றாது. சுண்ணத்திற்கும்
அஃதொக்கும்.

இனி, [4] இவ்வோத்தினிற் கூறுகின்ற
உவமங்களுட் சில

வற்றையுஞ் சொல்லதிகாரத்தினுள்ளுஞ்
செய்யுளியலுள்ளும்

1. மூவருள்
ஒருவரும் அடங்குதல் போல என்பது கருத்து.

2. எதிர் நிரனிறை.

3. பிறிது பிறிதாகல்—உவமை வேறும்
பொருள் வேறு

மாகல்.

4. இவ்வோத்தினிற் கூறுகின்ற சில என்பது உவமைகளையும் வேறுபடவந்த உவமங்களையும் ஒரீஇக் கூறுவனவற்றையும் தடுமாறுவமங்களையும் நிரனிறை உவமைகளையும் குறித்து நின்றது. சொல்லதிகாரத்தில் கூறுவன சில என்றது குறிப்புப் பொருள், ஏது, பண்புத்தொகை (உருவகம்), உவமத்தொகை, பொருள்கோள் முதலியவற்றை. குறிப்புப்பொருள் அணியில் ஒட்டணியாகின்றது. செய்யுளியலுட் கூறுவன் சில என்றது



சொல்லுகின்றன சில பொருள்களையும் வாங்கிக்கொண்டு, மற்று அவை செய்யுட்கண்ணே அணியாமென [1] இக்காலத்தாசிரியர் நூல்செய்தாருமுளர். அவை ஒருதலையாகச் செய்யுட்கு அணி யென்று இலக்கணங் கூறப்படா. என்னை? வல்லார் செய்யின் அணியாகியும் அல்லார் செய்யின் அணியன்றாகியும் வரும், [2] தாங்காட்டிய இலக்கணத்திற் சிதையாவழியுமென்பது. என்னை?

> "நாயகர்க்கு நாய்கள்போ னட்பிற் பிறழாது
> கூஉய்க் குழாஅ முடன்கொட்கு—மாய்படை
> பன்றி யனையர் பகைவேந்த ராங்கவர்
> சென்றெவன் செய்வர் செரு."

என்றவழி, நாய்போலும் நட்புடையர் படையாளரென்பது வினையுவமம்; பன்றியனையர் பகைவேந்தரென்பது நாய்க்குப் பகையாகிய பன்றிபோல [3] வென்பது வேற்று வேந்தர் பகைவ ராதலால் அவ்வுவமை [4] விலக்கரிது. அன்றாமாயினும் அஃதணி

யெனப்படாது; உவமைதான்
உயர்ந்ததின்மையின் அது குற்ற மன்றோவெனின்?
"பேரு ரட்ட கள்ளிற்
5 கோரிற் கோயிற் றேருமா னின்னே."
(புறம். ௩௦௦) என்பது குற்றமன்றாகலின் 6
அதுவுங் குற்றமன்றெனப்படும். இனிப்
பொன்மாலையும் பூமாலையும்போலப்
பொலிவுசெய்தலின் 7 இதுவுங் குற்றமாகாது
8 மேலதே குற்றமென்பது. அற்

தொடைகளுட்சில, உள்ளுறை, இறைச்சி,
மெய்ப்பாடு முதலிய
வற்றை.

1. இக்காலத் தாசிரியர் என்றது தமிழில் அணிநூல்கள் செய்த தண்டி முதலிய ஆசிரியர்களைக் குறிக்கும். அணிநூல் என ஒரு நூல் இருந்ததாகவுஞ் சிலர் கருதுவர்.

2. தாம் என்றது அணிநூல் செய்தோரை.

3. என்பது என்னுஞ் சொல் ஈண்டு வேண்டியதில்லை.

4. விலக்கலரிது—விலக்கக்கூடாது.

அன்றுமாயினும் என்பதற்கு விலக்குதலரிதன்றுமாயினும் என்பது பொருள். விலக்கலாமாயினும் என்பது கருத்து.

5. ஓரில்—ஒரு வீட்டின்கண். கோய்—கள்முகக்கும் பாத்திரம். அது இழிவுடையதாகாததுபோல இதுவு மிழிவுடைத்தாகாதென்றபடி.

6. அதுவும்—அவ்வுவமையும்.

7. இது—கோய் வருஞ் செய்யுள். கோய் என்னும் உவமை உயர்ந்த பொன்மாலைபோலப் பொலிவு செய்யாதாயினும் அதிற் சிறிது குறைந்த பூமாலைபோலப் பொலிவுசெய்யுமென்றபடி.

8. மேலது—பன்றியனையர் பகைவேந்தர் என்னுஞ் செய்யுள்.



றன்று, இன்ன சொல்லும் இன்ன பொருளுமுடையன பொன் மாலையெனவும் பூமாலையெனவும் வரையறுத்துக் [1]கூறலன்மையின் அதனும் அதனைக் குற்றமென்று இலக்கணத்தார் கூறின் நிரம்பாது. அல்லதூஉம் பொருளதிகாரத்துட் பொருட் பகுதிகளெல்லாம் செய்யுட்கு அணியாகலான்; அவை, "பாடலுட் பயின்றவை" யெனப்பட்டன என்றதனான் அவையெல் லாந் தொகுத்து அணியெனக் கூறாது, வேறு சிலவற்றை வரைந்து அணியெனக் கூறுதல் பயமில் கூற்றாமென்பது.

இனி, இரண்டு பொருளெண்ணி,

அவற்றை வினைப்படுக் குங்கால் ஒருங்கென்பதோர் சொற்செய்தல் செய்புட்கு அணி யென்ப. பிறவும் இன்னோரன்ன பலவுஞ் செய்புட்கணியாமென் பது அவர் கருத்து. ஒருங்கே யென்பதேயன்றி மூன்று தாழிசையுண் மூன்று பொருள்கூறி எனவாங்கென்பதொரு சொல்லான் முடிந்தவழியும் எனவாங்கு என்பதோர் மொழி யில் எனவென்பது ஓரலங்கார மெனல்வேண்டுமாகலான் அவ் வாறு வரையறுத்துக் கூறலமையாதென்பது. பிறவும் அன்ன.

இனி, 2 அவற்றைப் பொருளுறுப்பென்பதல்லது, அணி யென்பவாயிற் சாத்தனையுஞ் சாத்தனலணியப்பட்ட முடியுந் தொடியும் முதலாயவற்றையும் வேறு கண்டாற்போல அவ்வணி யுஞ் செய்புளின் வேறாகல் வேண்டுமென்பது.

இனிச் செய்யுட் கணிசெய்யும் 3
பொருட்படை எல்லாங் கூறாது சிலவே கூறி
ஒழியின் அது குன்றக் கூறலா (கூகூக) மென்பது.
4 அவை யாவையெனின்,

" அகமனர் கேள்வ னகற்சி நீத்தற்கு
மகவொடு புகுந்த மகவுநிலை யெனாஅ
மறுக்குங் காலை மறுத்துரை மொழியாது
குறிப்புவேறு கொளீஇய குறிப்புநிலை யெனாப்
புலவிக் கண்ணும் போக்கின் கண்ணு
மழுதலு மழாஅதலு முயங்கலு மென்றாங்
கிருவகைப் பட்ட மங்கல மெனாஅப்

1. கூறலன்மையின்—கூறல் கூடாமையின்.

2. அவற்றை என்பது உவமங்களுட் சிலவற்றையும் சொல்லதிகாரத்துள்ளும் செய்யுளியலுள்ளுங் கூறிய சிலவற்றையுஞ் சுட்டிநின்றது.

3. பொருட்படை—பொருட்டிரள்.
4. அவை—அப் பொருட்படை.



புலம்புறு காலை யறிவொடு படாது
புலம்புகொள வந்த செய்வினை யெனாஅ
வின்றே ரன்ன பலபொருட் பகுதி
நன்னெறிப் புலவர் நாட்டல்வகை யுடைய."
என்றோர் சூத்திரஞ் செய்யின் அவையும் அலங்காரமெனப்படு
மென்பது; அவற்றுக்கு உதாரணம்,

"ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்." (அகம். ரு)

என்பது மகவுநிலை.

"ஓவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றி." (அகம். ரு)

என்பது குறிப்புநிலை; என்னை? தலைமகன் [1] போக்கினை உவக்கும் குறிப்பல்லாத குறிப்பாகலின் அஃதணியெனப்படும்.

"தும்முச் செறுப்ப வழுதாள்." (குறள். கங௧அ)

என்பது, புலவியுளழுதமங்கலம்.

"பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
.................................
மோயின ளுயிர்த்த காலை." (அகம். ரு)

என்பது போக்கின்கண் அழாதமங்கல நிலை.

"விளிநிலை [2] கொளாஅ டமியண் மென்மெல
நலமிகு சேவடி நிலமிசை வடுக்கொளாஅக்
குறுக வந்து கூரெயிறு தோன்ற." (அகம். ரு)

என்பது, அறிவொடு படாது புலம்புகொளவந்த செய்வினை; என்னை? கேளாது கேட்டாள்போல் வந்தமையின், [3] அதுவும் அலங்காரமெனப்படுமென்று சூத்திரஞ் செய்துகொள்ளல்வேண்டுஞ் செய்யுட்கு அணி வேறு கூறினென்பது.

இனி, இங்ஙனங் கூறினவெல்லாங் குற்றமென்று கொள்ளப்படா; என்னை? [4] வேறு காரணமுணரப்பெறாது பிறழ்ந்து

1. போக்கு—பிரிந்து போதல். உவக்குங் குறிப்பல்லாத குறிப்பு—வெறுப்பு.

2. கேளாள் எனவும் பாடம்.

3. அதுவும் என்பது இன்னோரன்னவும் என்று பாடமுள்ளது. அது மிகப் பொருத்தமேயாம். என்னை? முன் சொன்னவற்றையெல்லாம் தொகுத்துநிற்றலின்.

4. 'வேறு காரண முணரப்பெருது பிறழ்ந்து இடையறவு பட்டகாலே' என்பது 'பொருளதிகாரமுறை பெருது பிறழ்ந்து இடையறவுபட்டகாலே' என்று பாடமுள்ளது. அதுவே பொருத்தமாம். என்னை? பின்னரும், 'பகுத்தோதிய இலக் கணத்திற் பிறழ்ந்தவையெல்லாம் குற்ற'மென வருதலின். இங்



இடையறவுபட்டகாலே இடர்ப்பட்டுச் செய்தனவாதலான் அவை யும் அவ்வாற்ருனமைபுமென்பது.

இனி ஆநந்தவுவமையென்பன சில குற்றம் அகத்தியனுர் செய்தாரெனக் [1] கூறுபவாகலின் அவையிற்றை எவ்வாறு கோடு மெனின், அவைகள் தாம் அகத்துள்ளும் பிற சான்ருேர் செய்யு ளுள்ளும் வருதலிற் குற்றமாகா. அகத்தியனாற் செய்யப் பட்ட மூன்று தமிழினும் அடங்காமை, வேறு ஆனந்தவோத் தென்பது ஒன்று செய்தாராயின், அகத்தியமுந் தொல்காப்பிய மும் நூலாக வந்த சான்ருேர் [2] செய்யுங் குற்றம் வேறு படாவென்பது.

அஃதேதற் செய்யுட்கு இவை யணியென்பதூஉம் இவை குற்றமென்பதூஉம் மூன்றதிகாரத்துள்ளும் இவ்வாசிரியர் யாண்டுங் கூறுரோவெனின், செய்யுளியலில் முப்பத்துநான் குறுப்புக் கூறி அவற்றதியைபு நல்லிசைப்புலவர் செய்யுளுறுப் பெனவும், அவை தொடர்ந்த தொடர்நிலை எண்வகையாற், தொடர்நிலைச் செய்யுட்கு [3] வனப்பெனவும் பகுத்தோதிய இலக் கணத்திற் பிறழ்ந்தவை எல்லாங் குற்றமென்பதுங் கொள்ள வைத்தானென்பது.

(கூஎ)

உவமவியல் முற்றிற்று.

---

ஙனமே செய்யுளியல் க-ம் சூத்திர விரிவுரையிலுங் கூறல் காண்க. "அவ்வாற்றான்...இடையறவுபட்டகாலை இடர்ப்பட் டுச் செய்தமையான் குற்றமென்று கொள்ளப்படா" என்று இவர் கூறியது, தாங்கூறியவற்றையும் அணியெனக் கொள்ள லாம் என்பதற்கு நியாயங்காட்டியதன்றி, அஃதுண்மையென் பது இவர் கருத்தன்று. அணிகொள்ளும் பிறரை மறுத்துரைத் தற்கு இங்ஙனம் பழித்துரைத்தார் என்க.

1. யாப்பருங்கல விருத்தியுடையாரும், ஆளவந்தபிள்ளையா சிரியரும் என்பர். 'தீயி னன்ன வொண்செங் காந்தள்' என்னும் மலைபடுகடாத்து கசுரு-ம் அடியுரையில்

இதனை மறுத்தல் காண்க.
நச்சினார்க்கினியரும்

2. செய்யுங் குற்றம்—செய்யுட் குற்றமென்று பாடமுள்ளது. அதுவே பொருத்தமாதல் செய்யுளியல் க-ம் சூத்திர விரிவுரை நோக்கியறிக.

3. வனப்பு—அம்மை முதலியனவாகச் செய்யுளியல் க-ம் சூத்திரத்துளோதியன.

# உவமவியல்

## உதாரணச்செய்யுளுரை

உளகூ-ம் சூத்திரம்

1. மேகம்போன்ற கொடைக்கையையுடைய தேரைக் கொண்ட வேளாயைக் காணச் செல்வாயாக. (புறம். கருரு)

2. களிறுகிய இரையைத் தேரும்படி பார்வைக்கு ஒதுங்குதலோடு மறைந்து செல்லுகின்ற தன்மையினையுடைய வலிய புலியைப் போல.

(அகம். உஉ)

3. வடிவுவிளங்குகின்ற ஓவியத்தொழிலாற் பொலிந்த பாவை நடையைப் பயின்றாற் போன்ற நடையையுடையள்.

ஓவுவினை—ஓவினை என நின்றது. (அக—141) ஓவு—சித்திரம். "ஓவுறழ் நெடுஞ்சுவர்" என்பது பதிற்றுப்பத்து (சூஅ.—கஎ) ஓ என்பதுஞ் சித்திரத்துக்குப் பெயராக வரும்போலும்.

(அகம். கசஉ)

4. அணைத்தோள்—அணைபோன்ற தோள்.
(கலி. அசூ)

5. மழைக்காலத்தில் அலருகின்ற பீர்க்கின் மலர்கள் சில வற்றைக் கைக்கொண்டுகாட்டி இப்பூவை யொத்தாள் நல்ல நுதலையுடையாள். என்றது இப்பூவினிறத்தை (பசப்பை) அடைந்தாள் என்றபடி.
(குறுந். சூஅ)

6. பறைக்குர லெழிலி—பறைபோன்ற ஒலியை யுடைய மேகம்.
(அகம். உந)

7. தன் கடைக்கண்ணாற் கொல்லுவான்போலப் பார்த்து—.
கொல்லுதல்போல எனினுமாம்.
(கலி. ருக)

8. ஆகாயம் உரிவதுபோல். (அகம். உச) 9. மணிகள் போல.

பதிக்கப்பெற்ற பாவை நடை பயின்ருற் (நற். கஅச)

10. வானந் தோய்ந்தால் ஒத்த விசாலமான குடிப்பிறப்பும். (பாயிரம்)

11. கொன்ருலொத்த துன்பங்களேச் செய்யினும். (குறள். கoக)

12. பல சுடரையுடைய பெரிய நெருப்பு வந்து தோய்ந்தா லொத்த இன்ஞதவற்றைச் செய்யினும். (குறள். ௩oஅ)

13. கற்பகம்போலக் கொடுக்கும்.

24



14.

போர்முனையின் இடத்தினைப்போலத் தூரமோ! என்றது அண்மைத் தூரத்தினை.

15. தளிர் சிவந்தாற்போலச் சிவந்த மேனி.

உளஎ-ம் சூத்திரம்

1.

செவ்வானத்தையொத்த மேனி.
(அகம். கடவுள் வாழ்த்து)

2. அவ்வானத்தில் விளங்கும் பிறையையொத்த கூரிய பன்றிக் கோடுகள். (அகம். கடவுள் வாழ்த்து)

3. காயா மரத்தின் மெல்லிய கொம்பரிற் பொருந்தப் படர்ந்து பல துடுப்பினையொத்த பூங்கொத்துக்களைத் தாங்கிய விளங்குகின்ற குலைகளையுடைய காந்தளின் அழகிய மலர்களினுள்ள நறிய தாதுக்களை(ப் படிந்தும் எழுந்தும்) ஊதும் வண்டுகள் கையினாலெறிந்து விளையாடும் வட்டைப்போலத் தோன்றும், மேகம் படிந்து அசைகின்ற சிகரத்தினையுடைய மலைக் குரியோனே. துடுப்பு—நெய்த்துடுப்பு (சுருக்குச்சுருவம்). சூடாமணி நிகண்டு பார்க்குக. (அகம். கoஅ)

உளஅ-ம் சூத்திரம்

1. சிங்கத்தையொத்த

யுடைய.

வருத்துதலையுடைய வலியினை

(பட்டின. உகூஅ-ம் அடி)

2. மழைபோற் சொரிகின்ற அம்பினையும் மேகம்போலும் கரிய பரிசையையுமுடைய சோழர். மாரியம்பு—பயவுவமை. மாரி பயிரை விளைத்துப் பயன்செய்தல்போல அம்பு பகைவரை அழித்துப் பயன்செய்வது பயம். (அகம். கஙக)

3. கடலைக் கண்டாலொத்த இடமகன்ற பரப்பினையுடைய.

(அகம். எசு)

4. இக்கனவிய குழையையுடையாள் தெய்வ மகளோ? மயில் விசேடமோ? ஒரு மானுட மகளோ? இவளை இன்னள் என்று துணியமாட்டாது என்னெஞ்சு மயங்கும். (குறள். ௧௦அக)

5. நுதலையும் முகத்தையும் தோள்களையும் கண்களையும் சாயலையும் சொல்லையும் நோக்கி (உவமை கூற) நினைந்து நுதல் வியப்பையுடைத்தாய்த் தேய்ந்தது: ஆயினும் பிறையுமன்று. முகம் மறுவற்றது: ஆயினும் மதியுமன்று. தோள் மூங்கிலின் றன்மை நெருங்கிற்று: ஆயினும் அது பிறக்கும் மலையிடமுமன்று. கண் பூவின்றன்மை நெருங்கிற்று: ஆயினும் அது பிறக்கும் சுனையிடமுமன்று. சாயலிருந்தபடி மெத்தென நடக்கும். ஆயினும் மயிலுமன்று. சொல்லுச் சொல்லத் தளரும்: ஆயினும் கிளியுமன்று. (கலி. ருரு)



உஎகூ-ம் சூத்திரம்

1. முரசொலிக்கின்ற சேனைகளையுடைய மூவரசரும் கூடி அரசின் அவையாக இருந்த தோற்றம்போலப் பாடல்பொருந் திய பயனையுடைய யாழைக்கொண்ட கூத்தர் தலைவ! பிறர் மனத்துட் கொண்டவற்றைக் குறிப்பால் அறிபவனே!
(பொருந. ருசஎ)

2. ஓவியம்போன்ற அழகினையுடைத்தாகிய இட்முடைய இல்லின்கண்.
(புறம். உருக)

3. பாவையையொத்த பலராய்ந்து செய்த மாட்சிமைப் பட்ட அழகு.
(அகம். கூஅ)

4. சிங்கத்தையொத்த வருத்துதலைக் கொண்ட வலியினை யுடைய.
(பட்டி. உகூஅ)

## உஅ0-ம் சூத்திரம்

1. நிலைத்த மெல்லிய மயிர்க்கொத்துக்கள் கீழே தாழ்ந் தன.
(குறுந். ருருஎ)

2. கண்ணாடியினுள்ளே ஊதிய ஆவிபோல மெல்லமெல்ல நுணுகுதலுற்று.
(அகம். எக)

3. பாம்பு மறைத்த மதிபோல நெற்றியொளி மறைய.
(அகம். ருகரு)

## உஅக-ம் சூத்திரம்

1 மலையையொக்கும் இளைய களிற்றின்மேல். (புறம். நஅ)

2. செந்தாமரை மலரையொத்த அழகிய சிவந்த அடி. (குறுந். கடவுள்)

3. நெருப்பினையொத்த (சிவந்த) சிறிய கண்ணையுடைய பன்றி. (அகம். அச)

4. தாமரையின் இலையின்கீழ் மறைந்து நின்ற அழகிய இதழ்களையுடைய அரும்பைப்போலக் கையிற்கொண்ட பச்சைக் குடைநிழலிலே தோன்றும் நின்னுடைய புதல்வனைக் கண்டு. (கலி. அச)

5. ஆகாயத்தையொத்த அகன்ற சூழ்ச்சி. (புறம். உ)

6. மழைக்கண் நனைந்த யானைபோல வந்துநின்றான். (குறுந். கசுக)

7. கிணற்றில் வீழ்ந்த குராற்பசு படுந் துயரத்தை இரவிலே கண்ட உயர்திணையாகிய ஊமனைப்போல என்பொருட்



டுத் தோழிபடும் வருத்தத்தினால் உண்டான என்துயரைப் பொறுக்கமாட்டேனாயினேன். ஊமன் — பேசமாட்டாதவன். (குறுந். உஉச)

8. காட்டிடத்தேயிருக்க ஏறுகளையொத்த கூற்றுவனைப் போன்ற நிலையொத்திய பெரிய கையையுடைய புறங்கொடாத

கொடை.

8. விரிந்த புனலையுடைய பெரிய யாற்றை ஒப்ப எவற்றையும் வரையாது கொடுக்கும் புகழ் மிக்க தோன்றல்.

9. நெருப்புப் போன்ற வெள்ளிய கதிர்கள் பசையறக் காய்தலின். (அகம். க)

10. மகனுக்குத் தாயாதல் ஒப்புதென்று. (அகம். கக)



11. வைறுஇன்று நீர் அமிழ்தினை ஒக்கும் எயிற்றினை உடையாய். (கலி. உ0)

12. பலர் மகிழ்ந்த மகிழ்ச்சியை எல்லாம் என்னுள்ளத்தே பெய்துவிட்டாற்போலும்.

13. யானைத்திரளை ஒத்த முழங்குகின்ற ஓசை நடக்கும் மாலைக்காலம் வந்து வருத்தத்தைத் தரும். (கலி. உக)

14. இடிபோல ஒலிக்கும் சங்கத்தோடு.

வென்ற தோளை

யுடையாய். நீ வந்தால் நின்னிலைப்பை ஆற்றும். (கலி. உ०)

14. கண்ணைப்போல (க் குவளைப் பூக்களை) மலர்ந்த சுனை

களும்.

15. நறிய முல்லையின் தம்முள் ஒத்த முகையை ஒப்ப

நிரைத்த.

16. முழவையொத்த பெருமையையுடைய தனது கையி

னாலே அவர்கள் கையினைப் பொருந்த எடுத்துக்கொண்டு. இதற்கு நச்சினார்க்கினியர், இயல என்பதை முன்கூட்டித் தழீஇ என்பதை இங்குக் கூட்டிப் பொருள் கொள்வர்.

## உசகை-ம் சூத்திரம்

1. தன் சொல்லை மெய்யென்று உணர்ந்தார் மேனியை

பொன்போலப் பசப்புறச் செய்வான் ஊரன். (ஐங்குறு. சக)

2. நீலமணியின் நிறத்தை ஒத்த மலரையுடைய பொலி

வான காயா.

3. ஒள்ளிய செங்காந்தட் பூவை யொக்கும் உன்னுடைய நிறம்.

4. வெயிலொளியை (காயச்செய்த) ஒத்த விளங்குகின்ற மாணிக்க மணியமூத்தின.

5. கார்காலத்து விரிந்த கொன்றையின் பொன்போலும் புதிய மலர்.
(அகம். கடவுள்)

6. தண்டளிரை ஒப்பத் தகைமை பெற்ற மேனி.

7. துளியை இடங்கடோறும் பெய்த மழையை யொத்த கூந்தல். இனித் துளிதலைத் தலைஇய மணியேரைம்பால் என்பதும் பாடம். இதற்கு துளிகள் தன்னிடத்துப் பெய்யப்பெற்ற நீல மணியை ஒத்த கூந்தல் எனப் பொருள்கொள்க.
(அகம். அ)

8. நெருப்புப்போலக் கோபித்த வெப்பம் விளங்குகின்ற ஞாயிற்று மண்டிலம். (அகம். ௩௧)

9. அசோகின் றளிரை ஒக்கும்

அத்தன்மையாகிய நிறம்.
அழகையுடைய நிறம்.
(கலி. கரு)

10. குவளையின் நறிய இதழை
கொண்ட குளிர்ந்த இமை.
ஒக்கும் நீர்த்துளியைக்
(அகம். கக)

11. பாலுமயங்கும் மருப்பினையும்
அடியையும்.
உரலையொத்த பரந்த
(கலி. உக)

) வியல்] பொருளதிகாரம்
கக்ங

12. எரியினிறத்தை ஒப்ப இலவுமலர.
(கலி. ரு ரு)

13. பலரும் புகழுகின்ற ஞாயிற்றைக் கடலின்கண் கண்டாற்போல.
(முருகு. உ)

14. பொன்னுரை விளங்கினாற்போலும்
தேமலையுடைய
ராய.

(முருகு. கசரு)

15. தீயினை ஒத்த ஒள்ளிய செங்காந்தளின் செருக்கி வளர்ந்த புதுமுகையை ஊனுகக் கருதி. மழையாலே

(மலைபடு. கசரு)

## உ௲௪-ம் சூத்திரம்

1. தாஞ்செய்த களவினைத் தாமே உடன்படுவாரைப்போலத் தலைகவிழ்ந்து நிலத்தைக் காலாற் கிளைத்து. (அகம். கசூ)

2. தோணியைக் கடலிற் செல்லும்போது கவிழச்செய்த வணிகனைப்போல, துயரத்தைக்களையுந் துணை வேறின்றிப் புலம்புமென்னிலையைக் கண்டும் போகமாட்டேன் என்று கூறுகின்றாய்.

(யா. வி. ப. ௩௧அ)

3. பெரிய செல்வரது வீட்டின்கண் (அதன் வாயிலையடைந்த) வறியார்போல மீண்டுவரும் மீளச்செல்லும், திரும்பிவரும் என்னெஞ்சம். (முத்தொள்ளாயிரம் அஅ)

4. அருளினிடத்தே இத்தன்மையவாகிய கொடியவைதோன்றின் நிழலையுடைய குளத்துள் நீருள்நின்ற குவளைவெந்ததன்மைத்து. (கலி. சக)

5. சாந்தம் உள்ளிடத்தே உண்டென்று செப்பைத் திறந்து பாம்பை அவ்வுள்ளிடத்தே கண்ட தன்மையையுடைத்து.

(நாலடி. கஉசூ)

6. மல்லரை மறத்தைக் கெடுத்த திருமால்போலே கல்லுயர்ந்த அகற்சியையுடைய சாரலிற் றன் சுற்றத்திற்கு நடுவே கூடித்திரியும் நாடனே ! கேள். (கலி. ருஉ)

7. இயமன் வெகுண்டாலொத்த வலியோடு பகையைக்கொண்ட இரு அரசரது மண்ணைக்கொள்ள நோக்கினுய்.

(புறம். சஉ)

8. உதியஞ்சேரலாதனைப் பாடிப்போன பரிசில் பெறுவாரைப்போல இப்பொழுது உவப்பாய் தோழி. (அகம். சரு)

உசுள-ம் சூத்திரம்

1. பொன்னை உரைக்கும் (கட்டளைக்கல்) உரைகல்லையொப்பத் தனது பசிய அணிகள் புடைத்ததாலுண்டான செஞ்சுவட்டையுடைய மார்பு. (பெரும்பாண். உஉ௦)



இதற்குரிய பாடம் இப்போது டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பில் வேறுவிதமாக உள்ளது. அப்பாடம் இங்கே கொள்ளலாகாது. கொள்ளிற் பேராசிரியர் இங்கே கூறிய உரையோடு மாறுபடும்.

2. கரிய காலையுடைய வேங்கையின் பூக்கள் சொரிந்த பாறைக்கல் கரிய புலிக்குட்டிபோலத் தோன்றும் காட்டின் கண். (குறுந். சள)

௩௦௦-ம் சூத்திரம்

1. கரும்பு நட்ட பாத்தியில் தானே முளைத்த தாமரைப் பூ வண்டின் பசியை நீக்கும் பெரிய நீரையுடைய ஊரனே! புதல்வனையீன்ற என்னை முயங்காதே கொள். அம்முயங்கல் உன் மார்பினழகைச் சிதைப்பதாகும். (ஐங்குறு. சரு)

2. கரையில் நின்ற வேழம் கரும்பைப்போலப் பூக்கும் நீர்த்துறை பொருந்திய ஊரன் கொடுமையை நாணி நாம் நல்லன் என்பேம். நல்லன் அல்லன் என்னும் எனது பெரிய மெல்லிய தோள்கள். இதன் பின்னடி வேறு விதமாக ஐங்குறுநூற்றுப் புத்தகப் பிரதியில் காணப்படுகின்றது. (ஐங்குறு. கஉ)

3. நீரினுறைகின்ற கோழியின் நீலநிறம் பொருந்திய சேவலைக், கூரிய உகிரையுடைய பேடை நினைந்து தன் வேட்கை தீருமூரனே! இவள் வேட்கை நோய்க்கு நின் பரந்த மார்பு புளிங்காய் வேட்கைபோன்ற தன்மைத்து. (ஐங்குறு. ருக)

4. தோழீ! யான் தலைவனோடு பொருந்தாத இயல்பினை யுடையனல்லேன் பொருந்துமியல்பினேன். ஆயினும் நொது மலர் வரைவொடு புகுமொரு காரணத்தினால் மலையினிடத்து ஒன்றோடொன்று பொருத களிறுகளால் மிதிக்கப்பட்ட நெரிந்த அடியையுடைய வேங்கைமரம் குறமகளிர் தங்கூந்தலின்கண் அணிந்துகொள்ளும்பொருட்டு ஏறவேண்டாமல் நின்றபடியே கொய்யும்படி தாழ்ந்து மலர்தற்கிடமாகிய நாட்டையுடைய தலைவனொடு பொருந்தேன். (குறுந். உ0அ)

5. அழகிய ஒள்ளிய தழையசையத் தூய அணியையணிந்த ஒள்ளிய நெற்றியையுடைய பரத்தை விளையாட்டாகப் பாய்ந்தாளாகத் தேனைப் பொருந்திய நறிய குவளைமலர் படிந்து நாறலால் தண்ணென்றிருந்தது பெரிய துறைநீர். (ஐங்குறு. எங)

6. பொய்கையைத் தனக்குப் படுக்கையிடமாகக் கொண்ட புலான்மணங் கமழும் நீர்நாயானது வாளைமீனை நாட்காலத்தே இரையாகப் பெறுகின்ற ஊரனே! எனது அழகு கெடினும் பிற பெண்டிராகிய பரத்தையரைத் தோய்ந்த மார்பைப் பெரும! பொருந்தேன். (ஐங்குறு. கூங)

7. தனது பார்ப்பைத் தின்னும் அன்பில்லாத முதலையோடு வெள்ளிய ஆம்பற்பூவையுடைய பொய்கையையுடையது அவனூரென்று சொல்வர். அதனால் தன் சொல்லை மெய்யென்று கொண்டாரது மேனியைப் பொன்போற் பசப்புறச் செய்வான் ஊரன். (ஐங்குறு. சுக)

## கூ௦உ-ம் சூத்திரம்

1. கரிய கோட்டினையும் சிவந்த கண்களையுமுடைய ஈன்றணிமையையுடைய எருமை ஆவானது தன் காதலையுடைய குழவிக்கு, ஊறுகின்ற முலையை வாய்ப்பெய்தூட்டும் நுந்தையின் நும தூர்க்கு வருவேம். ஒள்ளிய வளையையணிந்த மடந்தையே! நின்னை யாம் வரையுமாட்சிமை பெற்றால். (ஐங்குறு. கூஉ)

## கூ௦கூ-ம் சூத்திரம்

இச்சூத்திர உதாரணங்கள்

முன்வந்துள்ளன ஆதலால்
உரை எழுதவில்லை.

## ௩௦௪-ம் சூத்திரம்

1. அன்னையே! கழியிடத்துள்ள
முள்ளி மலருகின்ற குளிர்ந்த கடற் சேர்ப்பன்
எனது தோள்களை விரும்பாது துறந்தானாயின்
அவன் விரும்பிய தோள் வேறு யாதாம். எவன் என்
என மருவிற்று. கொல் அசை. 'எவன்கொல்'
என்றும் பாடமுள்ளது.
(ஐங்குறு. ௧௦௮)

2. குன்றக்குறவனது புல்லால் வேய்ந்த
சிறுகுடிலாகிய மன்றை அசைகின்ற இளைய
மேகங்கள் மறைக்கின்ற நாட்டை
யுடையோன் உயர்ச்சியையுடையோன்.
வாழ்வாயாக, தோழி!
விரைந்து பெய்கின்ற அரிய நீர்த்துளிகளை அளைந்த
கூதிர்க்காலத்துப் பெரிய தண்ணிய வாடையினும்
முற்பட்டு வந்தான்.
(ஐங்குறு. உரு௩)

## ௩௦௫-ம் சூத்திரம்

1. வன்னிலத்தினின்றும் வந்த
சுற்றத்தார்க்கு விருந்து செய்யும்
மென்புலத்தார்களையுடைய நல்ல
நாட்டையுடைய வேந்தே!

(புறம். சஉ)

2. தாய் சாவப் பிறக்கும் புள்ளியையுடைய நண்டிேனாடு தன் பிள்ளையைத் தின்னும் முதலையையுடையது அவனூர்!

(ஐங்குறு. சஉ)

௩.0எ-ம் சூத்திரம்

1. பூமியைக் காக்குமரசர் வழிபாடு சொல்லி நடக்க நுகரும் இன்பத்தை விரும்பிய பூமி பிறவேந்தருக்குப் பொதுவென் கஙகூ



னும் வார்த்தைக்குப் பொருது தன்னொடு இடஞ் சிறிதென்னும்
மேற்கோள் செலுத்த மாடியாத உள்ளத்தையும் பொருளைப் பாது
காவாது வழங்கும் வண்மையையும் வஞ்சியாது எதிர்நின்று
கொல்லும் படையையுமுடைய சேரலாதனை எவ்வாறொப்பை,
தடைப்பட்டுச் செல்லும் கதியையுடைய மதிமண்டிலமே! கா
லத்தை நீ தோற்றுதற்கென வரைந்து

கொள்கின்ருய் (இராப்
பொழுதை நினக்கென வரைந்துகொள் கின்ருய் எனினுமாம்)
தோற்ருர் போன்று ஒளி மழுங்கிச் செல்கின்ருய் (வெஞ்சுடர்
மண்டலத்திற்குப் புறங்கொடுத்துச் செல்கின்ருய் எனினுமாம்)
திங்கடோறும் மாறிமாறித் தோன்றுவாய். (திசைமாறித் தோன் றுவாய் எனினுமாம்) மலே சார்ந்தவழி அதன்கண் மறைந்து
ஒளிப்பாய். அகன்ற பெரிய வானின்கண்ணும் பல கிரணங்
களேயும் பரப்பிப் பகலில் விளங்காய். இதனுட் சில பாட
பேதங் கொண்டு வெங்கதிர் மண்டிலத்திற்கேற்பப் பொரு
ளுரைப்பர் புறநானூற் றுரையாசிரியர். (புறம். அ)
2. அவன் கண்ணன் என்ற பெயருடையோன். இவன்
மாறன் என்ற பெயருடையோன். அவற்கு மாலே கமழுந்
துழாஅய் மாலே. இவற்கு மாலே வேப்பம் பூமாலே. நிறமும்
அவன் கரியோன். இவன் செய்யன். ஒன்ருகிய மரபும் அவன்

இடையன். இவன் அரசன். எனவே அவனினும் இவனுயர்ந்
தவன் என்றபடி. இது உயர்ச்சிபற்றி வந்த பொருள் வேற்
றுமை. பெயரும் பொருளாதலின்.

3. அடியை நோக்கின் கடல்வண்ணனாகிய திருமாலையொப்
பன். மேனியினியல்பை நோக்கின் பசிய கொன்றை மாலையை
யணிந்தோனை (சிவனை) ஒப்பன். முடியை நோக்கி அவன் தலை
யின்மேல் ஆத்திப் பூமாலை தோன்றியது கண்டு தேரையுடைய
சோழனுதல் தெளிந்தேன்.
(தண்டி. ப. ௩௬)

4. கோதையை இந்திரனென்னில் அவற்கு ஆயிரங்கண் இவனுக்கு கண் இரண்டே உள்ளன. ஆதலால் அவனல்லன். சிவனென்னின்
அவனுக்குப் பிறையுண்டு. இவற்கில்லை. ஆத
லால் அவனுமல்லன். வானிலுள்ள
கோழிக்கொடியோன் (முருகன்) என்னில்
அவற்கு முகமாறு இவற்கு ஒன்று. ஆதலா
லவனுமல்லன். இவனை சக்கரத்தையுடைய
திருமாலென்று உரைக்கற்பாற்று.
(முத்தொள்ளாயிரம்)

5. பொற்றொடீஇ! வளைந்த வில்லையுடைய காமனும் சோழவரசனாகிய வெற்றி பொருந்திய கிள்ளியும் நிறத்தாலொவ் வார். ஏனெனில் திருமாலின் மகன் (காமன்) கருநிறத்தன். உறையூரையுடைய சோழன் மகன் செந்நிறத்தன்.

6. சோழனுந் திருமாலும் தொழிலின் வகையான் வேறு படுவர். ஏனெனின்? சோழன் எதிர்த்துக் கொன்று பகைவர்பா

வியல்]

## பொருளதிகாரம்

கஆஎ

வெய்திய பூமியை, மாயன் இன்று

மாவலிபால் கையேற்று

இரந்து பெற்றமையால.

7. ஊரின்கணுள்ள சிறுபிள்ளைகள் தன் கோட்டைக் கழு வுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட் படியும் பெரிய களிறு அவர்க்கு எவ்வாறு இனிதாம். அவ்வாறு பெரும! நீ எங்களுக்கினியை. மற்றதனுடைய மதம் பட்ட நிலைமை (அவர் போல்வார்க்கு) எவ்வாறு இன்னாதாம் அதுபோலப் பெரும! நீ நின் பகைவர்க்கு இன்னாய். (புறம். ௯௪)

8. முதிர்ந்த கோங்கின் இளமுகை போலவும் அடிவரைந்து தோற்றின (தென்னையின்) குரும்பை போலவும் மழைத் துளியி லுண்டான குமிழி போலவும் பெருத்த நின்னிளைய முலை. (கலி. ௫௬)

9. வடிவான் முழுது மக்களையொப்பர் கயவர். அக் கய வரை யொப்பாரை யாங் கண்டதில்லை. (குறள். ௧0௭௧)

10. நெடிய இலைகளையுடைய கரிய பனையினது நீரின்கண் தோற்றும் நிழலை ஒப்பக் குறிய பலவாகி முரிவுபட்ட குன்றின் மீதுள்ள சிறிய வழி.

11. மண்ணுலகைச் சுமக்கின்ற தோளையுடைய கிள்ளியின் மதியானை பகையரசரின் வெள்ளைக் குடையைத் தேய்த்த கோ பத்தால் விண்ணிலும் புகுந்து பாயுமோ என்று குளிர்ந்த சந் திரன் அவ் விசும்பினின்று தேய்வான். (தண்டி. ப. ௫அ)

12. எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன. அதுபோல, உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து. (குறள். ௧)

௩0௯-ம் சூத்திரம்

1. பொருள் முன் எழுதப்பட்டது.

2. வில்வீரர் தம் தூணி நிறையப் பெய்த கொற்றொழி லாற் பொலிந்த கூரிய குறிய மொட்டம்பின் நுனையையொப்ப அரும்புகளை யீன்ற இருப்பையின் செப்புத் தகட்டை யொத்த சிவந்த குழையின் அகந்தோறும் வெண்ணெய்த் திரளையொத்த இனிய துளையையுடைய துய்போலும் வாயைக் கொண்ட பூக்கள் தாள்நீக்கிக் கண்ட துளையை யுடையனவாய் ஆர்க்கை விட்டுக் கழன்று வானினின்று விழும் ஆலிபோலக் காற்றுற் சிதறி வீழப் பவளம் போன்ற சிவந்த மேட்டையுடைய வழி யிடத்தே இரத்தத்தின் மேலுள்ள நிணம்போலத் தாங்கும் காடு என்க. இவற்றில் வரும் உவமைகளும் தன்மை தோன்றக் கூறியனவேயாம். (அகம். கூ)



3. நீண்ட தாளினையுடைய இலவமரத்தினது அசைகின்ற கொம்பு காய்த்த பஞ்சினையுடைய அழகினை உடைத்தாகிய பசிய காயினது முதுகு விரிந்து பஞ்சி தோன்றினாலொத்த வரியை முதுகிலேயுடைய அணிலோடே எலியுந் திரியாதபடி யாற்றினது அறலை யொக்கும் முதுகினையும் கொழுவிய மட விணையுமுடைய நெடிய மேட்டுநிலத்தில் நின்ற

சந்தினது வேலின்
முனையையொத்த கூர்மையினையுடைய
முனையினையுடைய இலை
யாலே வேய்ந்த எய்ப்பன்றி முதுகுபோலும்
புறத்தினையுடைய
குடிலில்.

(பெரும்பாண். அ௩-அ) 4. பிள்ளைப்
பெற்ற எயிற்றி மான்றோலாகிய படுக்
கையிலே அப்பிள்ளையோடே முடங்கிக்
கிடக்க ஒழிந்தோர்
போய், பூண் தலையிலே யழுத்தின நன்றாகிய
திரட்சியையும்
வலியை யுடைத்தாகிய வயிரத்தினையுமுடைய
சீரிய கோல்
செருகின உளிபோலும் வாயினையுடைய
பாரைகளாலே கட்
டிகள் கீழ்மேலாகக் குத்துகையினாலே,
கருநிலமாகிய கரம்பை
நிலத்திலுண்டாகிய புழுதியை யளைந்து
நுண்ணிய புல்லரிசியை
வாரியெடுத்துக்கொண்ட வெள்ளிய
பல்லையுடைய எயின் குடி
யிற் பிறந்த மகளிர் பார்வைமான்
கட்டிநின்ற தேய்ந்த
தாளினையுடைய விளவினது நிழலையுடைய

முற்றத்திடத்துத்
தோண்டின நிலவுரலிலே அப் புல்லரிசியைச்
சொரிந்து குறிய
வயிரமாகிய உலக்கையாலே குற்றி.
(பெரும்பாண். அகூ-எ)

நடகூ0-ம் சூத்திரம்

1. வரிபொருந்திய மலர்போலும் அழகிய
கண்ணையுடைய
அழகினையுடைய மாமை நிறத்தைக்கொண்ட
பரதவப் பெண்
ணின் அழகிய முகத்தையும் சந்திரனையும்
ஒன்றாகக் கருதி
சுழற்சியுற்று பூமியிலும் ஆகாயத்திலுஞ்
செல்லாமல் ஐயத்
தின் கணின்றது (இராகு என்னும்) பாம்பு.
இது ஐயவுவமைப்
பாற்படும்.
(பொய்கையார்)

2. நீர்த்துளி பொருந்தித் தண்ணிய
சுனையில் வைகிய நீல
மலர் அன்புடைய பெண்களது கண்போல
மலர்ந்தன. அன்பு
பெற்ற பெண்களது திருமுகத்தின்
பொலிவிலே அவர்கள்
கண்ணும் வண்டையுடைய நீலமலர்போல
மலரும்.

## ௲கக-ம் சூத்திரம்

1. இழுக்கப்பட்டு நிலத்தே செறியுங் கரிய பிடியினது
பெருமையையுடைய கைபோல(த் தாழும் அடியோடு தொடர்பு
பட்டு) முறையாற் பருத்து பெருமையையுடைய மலையிலே
ஒழுங்குபட வளர்ந்த வாழையெனத் திரண்டு ஒரு குறங்குடனே
ஒரு குறங்கு நெருங்கியிருக்கின்ற குறங்கினையும் வாழைப் பூ
வெனப் பொலிந்த பனிச்சையினையும் (பனிச்சை-முன்னுச்சி
மயிர்).



## ௲கஉ-ம் சூத்திரம்

1. கொடியும் குவளைப் பூவும் தாமரைப் பொகுட்டும்
(முறையே) போலும் நுசுப்பையும் மையுண்டகண்களையும் மேனியையும், மதியும் பவளமும் முத்தும் (முறையே) போலும் முகத்தையும் வாயையும் பல்லையும், பிடியும் மானும் மயிலும் (முறையே) போலும் நடையையும் நோக்கையும் சாயலையும் உடைய வடிவையுடையவளாவள் வஞ்சியிலுள்ள (மகள்)பெண்.

2. யானையுந் தூணும் போல நீர் செறிந்த கடலிலே பாய் மரமும் தோணியுந் தோன்றும். தோன்றலை மறந்தோரது துறை பொருந்திய நாட்டின்கண். தோன்றல்—பெருமை.

3. நாயகர் - தலைவர். குழாம் - கூட்டம். படை - சேனை.

4. பெரிய ஊரிலே யட்ட கள்ளை முகத்தற்கு ஒரு வீட்டி லுள்ளே கட்கோலயைத் தேடுவதுபோல நின்னைத் தேடுகிறான். கோய் - கள் முகக்கும் பாத்திரம். (புறம். ௲00)

---

௲௬௫.

# ஏட்டாவது: செய்யுளியல்

*[செய்யுட்குறுப்பாவன இவையெனல்]*

மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை யெனாஅக்
கேட்போர் களனே காலவகை யெனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ
முன்னம் பொருளே துறைவகை யெனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையி
னாறு தலையிட்ட வந்நா லைந்து
மம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனாஅப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

என்பது சூத்திரம்.

இவ் [1] வோத்து என்ன [2] பெயர்த்தோவெனின், செய்யு ளியலென்னும் பெயர்த்து; செய்யுளிலக்கணம் உணர்த்தினமை யான் அப்பெயர்த்தாயிற்று. எனவே, ஓத்து நுதலியதூஉஞ் செய்யுளிலக்கண முணர்த்துதலென்பது பெற்றாம். மேற்பாயிரத்துள்,

"வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளும்."

(பாயிரம்) [3] ஆராய்வலென்று புகுந்தமையால் [4] எழுத்தினுஞ் சொல்லி னும் வழக்கிற்குஞ்

செய்யுட்கும் வேண்டுவன [5] விராய்க்கூறிப்

1. ஓத்து—இயல்.
2. பெயர்த்து—பெயரையுடையது.
3. ஆராய்வல்—ஆராய்வேன்.
4. எழுத்தினுஞ் சொல்லினும்—எழுத்ததிகாரத்துஞ் சொல்லதிகாரத்தும்.
5. விராய்—கலந்து.

பொருளதிகாரத்துள்ளும் இதுகாறும் பெரும்பான்மையும் வழக்
கிற்கு வேண்டுவனவே கூறிவந்தான், 1 அப்பொருள்பற்றிச்
செய்யுள் 2 கூறுமாகலின் இவ்வதிகாரத்துட் செய்யுளிலக்கண மெல்லாந் தொகுத்துக்
கூறுகின்றது இவ்வோத்தென்பது.
எனவே, முற்கூறிய எழுவகையோத்தும் வழக்கிற்குஞ் செய்
யுட்கும் பொதுவென்பதூஉம், 3 இது செய்யுட்கே உரித்தென்
பதூஉம் பெற்றாம். மற்றிதனை யாப்பதிகாரமென வேறோ ரதி
காரமாக்கி 4 உரைப்பாருமுளர். அங்ஙனங் கூறின் வழக்கதி
காரமெனவும் வேறு வேண்டுமென மறுக்க. அல்லதூஉம், எழுத்
துஞ் சொல்லும் பொருளு[5]மென மூன்றற்கும் மூன்றதிகார

மாக்கி அதிகாரமொன்றற்கு ஒன்பது ஓத்தாகத் 6 தந்திரஞ் செய்ததனோடு மாறுகோளாம் இதனை வேறோரதிகாரமென் பார்க்கென்பது.

மற்று, 7 ஓத்து நுதலியதெல்லாம் நுதலுவதன்றே ஓத்தி னுள் வைத்த சூத்திரம்; அதனான், இதன் முதற் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இவ்வோத்தினு ளுணர்த்தப்படுகின்ற செய்யுட்குறுப்பாவன இவையெனவே, அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

1. அப்பொருள் என்றது தான் சொல்லுமாறு அதிகரித்து எடுத்துக்கொண்ட அப் பொருளை. எழுத்தினுஞ் சொல்லினும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவன கூறினான்; பொருளினும் அவ்வாறே பெரும்பாலும் வழக்கிற்கும் சிறுபான்மை செய்யுட்கும் வேண்டுவன கூறி வந்தான். இனிச் செய்யுள் கூறுவதற் கியைபென்னையெனின்? தான் சொல்லுமாறு எடுத்துக்கொண்ட அப் பொருள்பற்றிச் செய்யுள் கூறலின் அதுவும் இயைபுடைத் தாயிற்று என்றபடி.

2. கூறும்—கூறுவான். என்றது ஆசிரியனை. ஆகலின் இவ் வோத்துத் தொகுத்துக் கூறுகின்றது எனவியைக்க.

3. இது—இவ்வோத்து.

4. உரைப்பாரு முளர் என்றது குளவியலுரையாசிரியரை.
என்னை? முதலாஞ் சூத்திர உரையுள் எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும வல்லாரைத் தலைப்பட்டு என்று அவரே கூறலின்.

5. என மூன்றற்கும் என்பது, எனுமூன்றற்கும் என்றே பாடம் இருந்திருத்தல் வேண்டும். அப்படி யிருத்தலே பொருத்தமாகும்.

6. தந்திரம்—நூல்.

7. ஓத்ததிகாரம் எனவும் பாடம்.



இ-ள்: இக்கூறப்பட்ட முப்பத்துநான்கும் பேரிசைப்புலவர் செய்யப்படுஞ் செய்யுட்கு உறுப்பாமெனை அவ்வாறு செய்தல் வன்மையாற் கூறினர் புலவர் என்றவாறு.

அப்பெயர், பெயர்; அம்முறை, முறை; அத்தொகை, தொகை. தொகை 'ஆறு தலையிட்ட வந்நா லைந்தும்' எனவும், 'எட்டு' எனவும் இருவகையால் தோன்றக் கூறியது, எனைய

போலாமல் எட்டுறுப்பும் ஓரோர் செய்யுட்கு [1] ஓரோவொன் றேயும் வருமென்பதறிவித்தற்கும், [2] அவைதாம் அச்செய்யுள் பல தொடர்ந்தவழியே பெரும்பான்மையும் உறுப்பாமென்பதறி வித்தற்கும் அவ்வாறு கூறினர் என்க. எனவே, ஒழிந்த உறுப்பு இருபத்தாறும் [3] ஒன்றொன்றனை இன்றியமையாவென் பது பெற்றாம்.

இனி, மாத்திரையென்பது
எழுத்திற்கோதிய மாத்திரை களைச் [4] செய்யுள் விராய்க்கிடக்கும் அளவையென்றவாறு. [5] மாத் திரையது மாத்திரையினை ஈண்டு மாத்திரையென்றான். அது 'மாத்திரையளவும்' (ருகச) என்பதனாற் பெற்றாம்.

1. ஓரோவொன்று — ஒவ்வொன்று. வனப்பெட்டனுள் ஒன்றே ஒரு செய்யுட்கு வருதலும் என்றபடி. வனப்புக் கூறுமிடத்து இளம்பூரணர் காட்டிய உதாரணங்களை நோக்கும் போது அவர்க்கு, பல தொடர்ந்தவற்றிலன்றித் தனிச் செய்யுளிடத்தேயே வனப்பு வருமென்பது கருத்துப்போலத் தோன்றுகின்றது. பல தொடர்ந்த தொடர்நிலைச் செய்யுளைப் பற்றித் தொல்காப்பியர் ஒன்றுங் கூறாமையின் பிற்காலத்துத் தொடர் நிலைச் செய்யுள்களை உதாரணங் காட்டல் பொருந்துமோ என்பது ஆராயத் தக்கது.

2. அவைதாம் என்றது அவ்வெட்டுந்தாம் என்றபடி.

3. ஒன்றொன்றனை இன்றியமையாமையாவது:— மாத்திரையை எழுத்தும் எழுத்தை அசையும் அசையைச் சீரும் என்று இங்ஙனம் ஒன்றையொன்று இன்றியமையாமை. எனவே வனப்பெட்டும் ஒன்றையொன்று இன்றியமையாதன வல்ல என்றபடி.

4. செய்யுள் விராய்க் கிடக்கும் அளவை என்றது—செய்யுள் முழுவதையும் படிக்குமிடத்து அதன்கண் விரவிக் கிடக்கும் ஓசையின் அளவு என்றபடி. நச்சினார்க்கினியர் மாத்திரை என்றது எழுத்துக்குரியதாக எழுத்ததிகாரத்தோதிய மாத்திரைகள் தத்தம் அளவின் இறந்து பாவின் ஓசை வேறுபாடுகளை உணர்த்தி விராய் நிற்கும் ஓசை என்பர்.

5. மாத்திரையினது மாத்திரை என்றது—மாத்திரையினளவு என்றபடி.



எழுத்தியல் வகையென்பது, [1] மேற்கூறிய எழுத்துக்களை [2] இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு. அசைவகையென்பது, அசைக் கூறுபாடு; அவை: இயலசையும் உரியசையுமென இரண்டாம். யாத்த சீரென்பது, (௧௯௦) பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு; எனவே, அசைபல தொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம் [3] வகையாற்

பொருள்பெற்று நிற்

றலும், அவ்வாறன்றிச் சீர்முழுதும் ஒரு சொல்லாங்கால் அவ் வசை பொருள்பெறாது நிற்றலும் அடங்கின. தேமா என்று

அசை பொருள் வேறுபெற்றன; சாத்தன்

எனப் பொருள்

வேறுபெறாதுநின்ற அசையாற் சீர் யாத்து

நின்றது. பொருள்

பெறநின்ற எழுத்தும் அசையுஞ்

சிறப்புடையவென்பாருமுளர்.

அற்றன்று, பொருள்பட நிற்பன எழுத்து

யாண்டுமின்மை

யானும், பொருள்பெறநின்ற அசையாகிய தேமாவென்னுஞ் சீரும் அவ்வசைச் சிறப்பினாற் சிறப்புடைச் சீரெனப்படாமை

யானும் சாத்தன் எனத் தன்பொருளோடு

தான் [4] துணிந்து

நின்றவழி அதுவுஞ் சிறப்புடைச்

சீரெனவும்படுமாதலானு

மென்பது.

அடியென்பது, அச்சீர் இரண்டும்

பலவுந் தொடர்ந்தாவ

தோர் உறுப்பு.

யாப்பென்பது, [5] அவ்வடிதோறும் பொருள்பெறச்
வதோர் செய்கை.

செய்

மரபென்பது, காலமுமிடனும்பற்றி வழக்குத் திரிந்தக்
காலுந் திரிந்தவற்றுக்கு ஏற்ப, வழுப்படாமைச் செய்வதோர்

---

1. மேற்கூறிய
எழுத்து.

எழுத்து — எழுத்ததிகாரத்துட் கூறிய

2. இயற்றிக்கொள்ளுதல் என்றது, எழுத்தியலிற் கூறிய முப்பத்துமூன்று எழுத்துக்களையும் செய்யுட்கேற்பப் பதினெந் தாக இயற்றிக் கோடலே. அதனை 'மாத்திரையளவு மெழுத்தியல் வகையும்' என்னும் உ-ம் சூத்திரவுரையுட் காண்க.

3. வகை—அசையின் வகைகள்.

4. துணிந்து—துண்டுபட்டு—பிரிந்து.

5. அடிதோறும் என்று பாட்டிற்கியைய உரைகாரர் கூறினும், உரை முதலிய ஏனை அறுவகை நிலங்களினும் இவ்வியாப்பு அமையும். என்னை? அவையும் யாப்பெனக் கூறப்படலின். ௧௬௬-ம் சூத்திரம் நோக்குக.

முறைமை. மற்றுச் சொல்லோத்தினுட் கூறிய மரபிற்கும், மர
பியலுள் உரைப்பனவற்றுக்கும், இதற்கும் வேற்றுமையென்னை யெனின்,—இது செய்யுட்கே உரித்து; அவை வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவென்பது; அல்லதூஉம் அவற்றது வேறு பாடு முன்னர் அகத்திணையியலுள் கூறிவந்தாம்.

தூக்கென்பது, [1] பாக்களைத் துணித்து நிறுத்தல்.

தொடைவகை என்பது, தொடைப்பகுதி பலவுமென்ற
வாறு; அவை வரையறையுடையனவும் வரையறையில்லனவு மென இருவகைய. [2] இப்பகுதியெல்லாம் அடியாற் கோடலின் அடிக்கும் இஃதொக்கும்.

நோக்கென்பது மாத்திரை முதலாகிய உறுப்புக்களைக் கேட்டோர்க்கு நோக்குப்படச் செய்தல்.

பாவென்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத் தின் சொல்லுந் தெரியாமற் பாடமோதுங்கால், அவன் சொல்லு கின்ற

செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர் தற்கேதுவாகிய பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை.

அளவியல் என்பது, [3] அப்பாவரையறை.

திணையென்பது, அகம்புறமென்று அறியச்செய்தல்.

கைகோளென்பது, அவ்வத் திணையொழுக்க விகற்பம் அறியச் செய்தல்; அது களவுங்கற்பும்.

கூற்றுவகையென்பது, அச்செய்யுள் கேட்டாரை இது சொல்லுகின்றார் இன்னாரென உணர்வித்தல். [4] 'இவை' என்

---

1. 'பாக்கள் என்றது பரந்துபட்டுச் செல்லும் ஓசைகளை.

2. இப்பகுதி என்றது இருவகைத் தொடைப் பகுதியை. அடிக்கும் ஒக்கும் என்றது தொடைகள் வரும் அடியும் வரையறையுடையனவும் இல்லனவும் என இரண்டாமென்றபடி.

3. அப்பாவரையறை என்றது அடிவரையறை யுள்ளனவும் இல்லனவும் ஆகிய பாவின் அளவியல் என்றபடி. இது பேராசிரியர் கருத்து. சஎ0-ம் சஎ௫-ம் சூத்திர உரை நோக்குக.

4. இவை என்பது பாடமாயின் என்றது. கூற்றிவை என்று பாடமாயின என்றபடி.. எண்ணிய மூன்று என்றது திணையும் கைகோளும் கூற்றும் என்ற மூன்றையும். எனவே திணையுங் கைகோளும் கூற்றுமாகிய இவ்வெனத் தொகுத்துக் கூறியதாகக் கொள்க என்றபடி. தொகுத்ததர்ம் என்பது தொகுத்தவாறே பிறிதில்லை எனவும் பாடம்.



பது. பாடமாயின், எண்ணிய மூன்றனையுந் தொகுத்தவாறே

பிறிதில்லை.

கேட்போர் என்பது, இன்னார்க்குச் சொல்லுகின்றது இது

வெனத் தெரித்தல்.

களமென்பது முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்

குறி பகற்குறி முதலாயினவும் உணரச்செய்தல். மற்றுத் தன்மை

முன்னிலை படர்க்கையுமாம்.

[1] காலவகையென்பது, சிறுபொழுது பெரும்பொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின.

பயனென்பது, [2] சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தல்.

மெய்ப்பாடென்பது சொற் கேட்டோர்க்குப் பொருள் [3] கண்கூடாதல்.

எச்சவகையென்பது, சொல்லப்படாத மொழிகளைக் குறித்துக்கொள்ளச் செய்தல்; அது [4] கூற்றினுங் குறிப்பினும் வருதலின் 'வகை' என்றான்.

[5] முன்னமென்பது, உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோரும் தத்தம் வகையான் ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச் செய்தல்.

பொருளென்பது, புலவன் தான் [6] தோற்றிக்கொண்டு

செய்யப்படுவதோர் பொருண்மை.

துறைவகையென்பது, முதலும் கருவும் முறைபிறழ வந்தாலும் இஃது இதன்பாற்படுமென்று ஒரு துறைப்படுத்தற்கு

---

1. காலமென்பது முக்காலத்தும் திணை நிகழ்ச்சிக்கண்ணே

பொருள் உணர்ச்சி நிகழக் கூறல் என்பர் நச்சினார்க்கினியர்.

2. சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச் செய்

தல்—பாட்டிற் சொல்லப்பட்ட பொருள் தோன்றச் செய்தல்.

பொருளானே பிறிதொரு

3. கண்கூடு—பிரத்தியக்ஷம். நேரே கண்டதுபோறல்.

4. எச்சவகையை ருகஅ-ம் சூத்திர உரை நோக்கியுணர்க.

5. முன்னம் என்பது கூறுவோரையும் கூறக்கேட்டோரையும் குறிப்பான் எல்லாருங் கருதும்படி செய்தல் என்பர் நச்சினார்க்கினியர்.

6. தோற்றி—உண்டாக்கி.

ஏதுவாகியதோர் கருவி அச்செய்யுட்குளதாகச் செய்தல்; அவை யும் பலவாதலின் 'வகை' என்றானென்பது.

[1] மாட்டென்பது, பல்வேறு பொருட் பரப்பிற்றாயினும் அன்றாயினும் [2] நின்றதனோடு வந்ததனை ஒருதொடர் கொளீஇ முடித்துக்கொள்ளச் செய்தல்.

வண்ணமென்பது, ஒரு பாவின்கண்ணே நிகழும் விகற்பம். எனவென்பன, எண்ணிடைச் சொல்.

ஓசை

யாப்பியல்வகையின் ஆறுதலையிட்ட அந்நாலைந்துமென்பது, யாப்பிலக்கணப் பகுதியாகிய இருபத்தாறுமென்றவாறு; இவை யாப்பிற்கு இன்றியமையாத இலக்கணப் பகுதியென விதந் தோதவே: இனிக் கூறும் உறுப்பெட்டும் இன்றியமையாமை இல்லையென்றவாறு.

"அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியையே புலனே யிழைபெனுஅப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ."

என்பது, இக்கூறப்பட்ட எண்வகை வனப்பொடு முன்னர்க் கூறிய இருபத்தாறுந் தொகுப்ப முப்பத்துநான்கு உறுப்பா மென்றவாறு. மற்றிவற்றை வனப்பென்று கூறற்குக் காரணம் அவற்றைக் கூறும்வழிச் (௫௪௭) சொல்லுதும்.

நல்லிசைப் புலவர் செய்யுளென்பது, இவ்வுறுப்பனைத்துங் குறையாமற் செய்யப்படுவன நல்லிசைப் புலவர் செய்யுஞ் செய்யுளெனப்படு மென்றவாறு. நல்லிசைப் புலவர் செய்யுள் எனவே,

1. மாட்டென்பது அகன்றும் அணுகியும் கிடந்த பொருள்களைக் கொண்டுவந்து தொடராகக் கூட்டிமுடித்தல் என்பர் நச்சினார்க்கினியர். ஆயினும் அவர் சிலஇடங்களில் தூரமான அடிகளை வலிந்துகொண்டுவந்து கூட்டல் சிறப்பின்று.

2. நின்றதனோடு வந்ததனை ஒருதொடர் கொளீஇ துக்கொள்ளச் செய்தல் என்றது,

முடித்

'முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே.' (பட்டி. ௨௧௮-௨௦)

என நின்ற அடிகளோடு,

'வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.'

என வருமடிகளை நெஞ்சே! அவள்தோள் கோலினுந் தண்ணிய வாதலான் வயங்கிழையொழிய வாரேன் என ஒருதொடர் கொளீஇ முடித்துக்கொள்ளச் செய்தலை.

செய்யு

[1] எழுநிலத்தெழுந்த செய்யுளுள்ளும் [2] அடி வரையறையுடைய வற்றுக்கே இவ்விலக்கணமென்பதூஉம், திணையே கைகோளெனக் கூறும் உறுப்பு முதலாயினவெல்லாம் [3] ஏனை அறுவகைச்செய் யுட்கும் உறுப்பாகாவென்பதூஉம், அவை[4]யொழிந்த உறுப்பி னுள் ஏற்பன பெறுமாயினும் ஆண்டு வரையறையின்மையிற் கூறுனென்பதூஉம், அவை செய்தாரெல்லாம் இவற்றானே நல் லிசைப்புலவ ரெனப்படாரென்பதூஉம் பெற்றாம்.

இனி, நூலும் உரையுஞ் செய்தார் நல்லிசைப்புலவரென் பது, அவற்றைப் [5] நூலினுள் உரையினுளெனவ் ஈதற்கு இடை யின்றி வைத்தமையிற் பெறுதுமென்பது.

வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனர்

என்பது, [6] இங்ஙனங்

கூறிய நல்லாசிரியரிலக்கணமே

கூறியொழிந்தார், எல்லாவற்

1. எழுநிலத் தெழுந்த செய்யுளாவன—பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. வாய்மொழி யென்பதற்குக் குறிப்புமொழி என்பது பேராசிரியர் கருத்து. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் மந்திரம் என்ப.

2. அடிவரையறையுடைய என்றது

பாட்டை.

3. ஏனையறுவகைச்செய்யுள் என்றது எழுநிலத்தெழுந்த செய்யுள்களுள் பாட்டொழிந்த உரை முதலிய ஆறையும். சஎஎ-ம் சூத்திரம் நோக்குக.

4. ஒழிந்தஉறுப்பு என்றது நிலேயே கைகோள் யனவொழிந்த மாத்திரை முதலிய உறுப்புக்களை.

முதலி

5. நூலினான் உரையினான் என்பது 'நூலினான உரையினான' என்றிருத்தல் வேண்டும். என்னை? சஎஎ-ம் சூத்திரத்தின் தொடக்கமாதலின். இதற்கு—பாட்டிற்கு. இடையின்றி வைத்தல்—அடுத்து வைத்தல். அதனை சஎகூ-ம் சூத்திர முடியப் பாட்டிலக்கணமும் அதன்பின் நூலிலக்கணமும் உரையிலக்கணமுங் கூறுதலானுணர்க.

6. 'இங்ஙனங் கூறிய நல்லாசிரிய ரிலக்கணமே கூறி யொழிந்தார் எல்லாவற்றான் எல்லா மமையச் செய்யுஞ் சுவடுடையராகி அவ்வத் துறைபோயினோர் தாமுமென்றவாறு' என்பது, 'இங்ஙனங் கூறி அந் நல்லாசிரியரிலக்கணமே கூறியொழிந்தாரல்லர் வல்லவாற்றான் எல்லா மமையச் செய்யுஞ் சுவடுடையராகி வகுத்துரைத்தார் அவ்வத் துறைபோயினோர்தாமும் என்றவாறு' என்றிருத்தல் வேண்டும். என்னையெனின்? இச் சூத்திரத்துக் கருத்துரையுள் பேராசிரியர் 'செய்யுட்குறுப்பாமென... அவ்வாறு செய்தல் வன்மையாற் கூறினார்' என்று கூறுதலானும், நச்சினார்க்கினியரும் விரிவுரையுள் 'கூறி வல்லிதின் வகுத்துரைத்தனர் என மாறுக' எனக் கூறுதலானும், பதவுரையுள், 'இம் முப்பத்துநான்கும் நல்லிசைப்புலவர் செய்யப்படுஞ் செய்யுட்

றூனும் எல்லாமமையச்செய்யுஞ் சுவடுடையராகி அவ்வத்துறை போயினர் தாமும் என்றவாறு; எனவே, இவ்வுறுப்பமையச் செய்தனவே செய்யுளெனப்படுவனவென்று சிறப்பித்தவாறு.

மற்று, 'கூறி' எனவும் 'உரைத்தனர்' எனவும் இருகாற் சொல்லியதென்னையெனின்,—[1] அச்செய்யுளானே கூறி அவற்றுப் பொருளுரைத்தாரென்றவாறு; என்றூர்க்கு, செய்யுட்குற்றம் ஈண்டோதாரோவெனின், [2] ஓதல்வேண்டுமே? இவ்விலக்கணத்துப் பிறழ்ந்துங் குன்றியும் வருவனவெல்லாம் வழுவென்பது அறியவைத்தா[3]னல்லனே, ஆசிரியனென்பது.

---

குறுப்பாமெனக்கூறி, அங்ஙன மிலக்கணமே கூறிவிடாதே, அவற்றைத் தாஞ் செய்தல் வன்மையி லமைந்து சுவடுபட வகுத்த அவ்வத் துறையெல்லாம் போயினர்' என்று கூறுதலானும் என்பது. நச்சினர்க்கினியர் உரைத்த பதவுரையுள்ளும் 'வகுத்த' என்பது வகுத்துரைத்தனர் என்றிருத்தல்வேண்டும். என்னையெனின், வகுத்த என்றிருப்பின் இப்பதவுரைக்குப் பயனின்மையின்றி முடிதலானும், 'கூறிவல்லிதின் வகுத்துரைத்தனர்', என மாறுக என அவரே விரிவுரையுட் கூறலானுமென்க. ஏட்டுப் பிரதி சிலவற்றுள் 'நல்லாசிரியரிலக்கணமே கூறியொழிந்தாரல்ல ரவற்றூனெல்லா மமையச்செய்யும்' என்று காணப்படலானும், வல்லிதின் என்பதற்கு இவ்விரிவுரையுள் பொருளின்றி முடிதலானும், 'கூறிவிடாதே' என்று நச்சினர்க்கினியருரையுட் காணப்படலானும், யாம் மேற்கூறியவாறே பதவுரை இருத்தல் வேண்டுமென ஊகிக்கப்பட்டது. 'எல்லாவற்றூன்' என்பது தாமோதரம்பிள்ளை பதிப்பிற்பாடம். அது 'வல்லவாற்றூன்' என்றுமிருக்கலாம். இங்ஙனமன்றிக் கூறியொழிந்தார் என்பதை முற்றூக்கின், 'வல்லிதின்' என்பதற்குப் பொருளின்றூம். ஆதலிற் பொருத்தநோக்கிக்கொள்க.

[இவ்வாறு உரைவாக்கியங்களுள் உண்மையறியமுடியாமற் பிறழ்ந்து கிடப்பன பல. அதற்குக் காரணம் ஏடெழுதுவோர், அதன்முதலியன நின்று இடையிலற்றுக் கிடக்கும் வாக்கியங் களைப் புள்ளிபோடாமற் பின்சேர்த்தெழுதியதும் தாமுஞ் சில சேர்த்து எழுதியதும் மாறிஎழுதியதுமேயாம்.]

1. அச்செய்யுளானே கூறி அவற்றுப் பொருளுரைத்தார் என்றது நல்லிசைப்புலவர் செய்த செய்யுளானே அதற்குரிய உறுப்புக்கள் கூறி, அவ்வுறுப்புக்களின் பொருளும் கூறினார் என்றபடி. பொருள் என்றது ஈண்டு இலக்கணத்தை.

2. ஓதல்வேண்டுமே — ஓதல்வேண்டாம்; ஏ எதிர்மறை.

3. அல்லனே—என்பதில் ஏகாரம் எதிர்மறை. வைத்தானும் என்று பொருளாம். அல்லனே என்பது அல்லனேல் என்று பாடமிருந்திருத்தல்வேண்டும். இப்பாடமுடிபிற்கு ஓதல்வேண்டுமே என்பதில் ஏகாரம் தேற்றப்பொருளில் வந்ததாகும்.

மற்றுச் செய்யுளுறுப்பு ஈண்டோதினர்; செய்யுள் யாண்டோதுபவெனின், அறியாது கடாயினாய், — உறுப்பென்பன உறுப்புடைப் பொருளின் வேறெனப்படா; பொருள் எனப் படுவன உறுப்பே, அவற்றது ஈட்டத்தினை முதலென வழங்குபவாகலான் உறுப்பினையே சொல்லியொழிந்தார்; முதற் பொருளதிலக்கணமென, உறுப்பிலக்கணத்தினையே வேறுபடுத்துக் [1] கூறலாவதின்மையானும், உறுப்புரைப்பவே [2] அவ்வுறுப் புடைய பொருள் வழக்கியலாற் பெறலாமாகலானுமென்பது.

மற்று, யாத்த சீரேயடியாப்பென்றதென்னை? தளையென்பதோர் உறுப்புப் [3] பிறர் வேண்டுபவாலெனின், — [4] இவருஞ் சீரது தொழிலே தளையென வேண்டுப; தளைத்தலிற் றளையாதலானும் வேறு [5] பொருளென வேண்டாரென்பது; [6] என்றாக்கு, அசையின்றிச் சீருமில்லை; சீரின்றி அடியுமில்லையாம் பிறவெனின், அற்றன்று; உறுப்பும் உறுப்புடைச் செய்யுளும்போல [7] அவை கொள்ளப்படும்; தளையென வேறொன்றின்மையிற் கொள்

---

1. கூறலாவதின்மையானும் — கூறும்வழக்கு இல்லாமையானும்.

2. உறுப்புடைப்பொருள் — செய்யுள்.

3. தளைவேண்டுவார் சிறுகாக்கைபாடினியார் முதலிய ஒருசாராசிரியர்.

4. இவர் — தொல்காப்பியர். தளையாதலானும் என்றதன் உண்மையை நோக்குமிடத்து வேறும் எண்ணப்பட்ட வாக்கிய மிருந்து சிதைவுற்றதுபோலத் தெரிகின்றது.

5. பொருள் — உறுப்பு.

6. என்றார்க்கு என்றது — சீரதுதொழிலே தளையாதலின் தளையென ஒருறுப்பில்லை என்றார்க்கு என்றபடி.. சீரியைந்தமையைத் தளையென வேண்டாது தளையில்லையெனின்? அசையியைந்ததே சீராதலின் சீரென ஒருறுப்பும் வேண்டியதில்லையாகும்; சீரியைந்ததே அடியாதலின் அடியென ஒருறுப்பும் வேண்டியதில்லையாகும் பிறவெனின்? என்க.

7. அவை—சீரும் அடியும். சீரைப்பிரித்து அசைகொள்ளப்படும். ஆதலால் அசை இயைந்ததைச் சீரென வேண்டினார். அடியைப்பிரித்துச் சீர்கொள்ளப்படும். ஆதலிற் சீரியைந்ததை அடியெனவேண்டினார்; உறுப்பியைந்ததை உறுப்புடைச் செய்யுளென வேறுவேண்டினாற்போல என்பது. அசையியைந்து சீரென வேறொன்று காணப்பட்டாற்போலவும் சீரியைந்து அடியென வேறொன்று காணப்பட்டாற்போலவும், சீரியைந்து தளையென வேறோருறுப்புக் காணப்படாமையின் தளையென வேறொன்று இவர் வேண்டாராயினார் என்றப்படி. சீர்

ளான்; என்னை? அது குறளடியென வேறுறுப்பாயினமையி னென்பது; தளையென்று இதனைக் கோடுமேல் அதனைக் குற ளடியெனலாகாதென்பது; அல்லதூஉம், ஈரசை கூடி ஒரு சீரா யினவாறுபோல இருசீர் கூடியவழி அவ்விரண்டனையும் ஒன் றென்று கோடல்வேண்டும்; கொள்ளவே, [1] நாற்சீரடியினை இடை துணித்துச் சொல்லுவதன்றி, நான்கு பகுதியானெய்திக் [2] கண் டம்பட்ச் சொல்லுமாறில்லையென்க. 'யாத்தசீர்' என்றதனானே அசைதொறுந் துணித்துச் சொல்லப்படா சீரென்பதூஉம், அச் சீரான் அடியானவழிச் 'சீரியைந்திற்றது சீரெனவே' படுமென் றதனாற் சீரொல்லாந் துணித்துச் சொல்லப்படுமென்பதூஉங் கூறினான் இவ்வாசிரியனென்பது; அற்றன்றியும், அவ்வாறு தளைகொள்வார் சீரானடிவகுப்பதூஉங் குற்றமென மறுக்க. மற் றுத் தொடை கூறியதென்னை? அடியிரண்டு தொடுத்தற்றொழி லல்லது இன்மையினெனின், அற்றன்று; தொடுத்தற்றொழின் மாத்திரையானே தொடையென்றானல்லன்; அவ்வடிக்கண் நின்ற எழுத்துஞ் சொல்லும் [3] பிற பொருளாகலான் அவற்றானே தொடை கொண்டமையின் வேறுறுப்பென்றானென்பது. அஃதேல், சீருஞ்சீரும் இயைந்தவழி அவையிடமாக நின்ற அசையால் தளைகொள்ளாமோவெனின்,—கோடுமன்றே; அதனை அடியென்னுமாயினென முற்கூறியவாறே கூறி மறுக்க; அல் லதூஉம், அவ்விரண்டசையுங் [4] கூடிச் சீராமன்றேவெனினென் பது. மற்று நாற்சீரடியுள் இருசீரியைந்தவழிக் குறளடியென்னு

---

கூடிய உறுப்பைத் தளையென்று கொண்டால் அதனை அடி

யெனலாகாது என்றபடி.

1. நாற்சீரடியினை இடைதுணித்துச் சொல்லுவதன்றி என்றது. முதலிருசீரியைந்து ஒருதளையாயும், மூன்றுஞ் சீரும் நாலாஞ்சீரு மியைந்து ஒருதளையாயுங் கொள்ளப்படுங்கால், அவ்விரு தளைக்கும் (முதலிரு சீருக்கும் பின்னிரு சீருக்கும்) இடையே துணித்துச் சொல்வதன்றி என்றபடி. நான்கு பகுதியானெய்திக் கண்டம்படச் சொல்லுமாறில்லை எனவே நான்கு சீராகத் துணித்துச் சொல்லுமாறில்லை என்பது கருத்தாகும்.

2. கண்டம்—துண்டு.

3. பிறபொருள்—அவ்வடியைவிட வேறானபொருள். அவற்றுள்—எழுத்தானுஞ் சொல்லானும் எதுகை மோனை முதலியன எழுத்துத்தொடை. முரண்முதலியன சொற்றொடை.

4. கூடிற் சீராமன்றே என்பதும் பாடம். அதுவே பொருத்தம்.



மாகலின், அதனைத் தளையென்றுமோவெனின், அங்ஙனங் கொள்ளின் இருசீரடிக்கண் தளை வேண்டாதாகும்; ஆகவே, [1] ஒருவழிக் கொண்டு ஒருவழிக் கொள்ளாமை 'மயக்கக் கூறல்' (கூகூ) என்னுங் குற்றமாமென்பது; அல்லதூஉம், [2] அங்ஙனமன்றி வருமாயின் அடிக்கெல்லாம் பொதுவகையால் தளையுறுப்பெனப்படாது. எழுத்தும் அசையும்போல [3] யாண்டும் வருவன வெல்லாம் உறுப்பெனப்படுவனவென்றற்கு,

" இனை நூன் முடிபு தன்னூன் மேற்றே."

என்பதனாற் காக்கைபாடினியார் ஓதிய தளையிலக்கணம் [4] ஈண்டுங் கோடல்வேண்டுமெனின், அதுவே கருத்தாயின் [5] அவர்க்கும் [6] இவர் முடிவேபற்றித் [7] தளை களையல்வேண்டும்; அல்லதூஉம், இவர்க்கு [8] இளையரான காக்கைபாடினியார் தளை கொண்டிலரென்பது [9] இதனாற் பெற்றும். தளைவேண்டினார் பிற் காலத்து ஓராசிரியரென்பது; என்னை?

" வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலதி னுண்மை வாலிதின் விரிப்பின்."

1. நாற்சீரடியுள் இருசீரியைந்ததனைத் தளை என்று கொள்ளுதலும், இருசீரடியுள் தளை என்றுகொள்ளாது குறளடியென்று கொள்ளுதலும் வரையறையின்றி மயங்கக்கூறலாம் என்பது கருத்து.

2. அங்ஙனமன்றி வருமென்றுகொள்ளின், எல்லாவடிக்கும் பொதுவிலக்கணமாக உறுப்பெனப்படாமையின் அது பொருந் தாது என்றபடி.

3. யாண்டும் வருவன—எல்லா அடிக்கண்ணும் வருவன. எழுத்தும் அசையும் யாண்டும் உறுப்பாய்க் கோடல்போலத் தளையும் குறளடிக்கண்ணும் அல்லாதவடிக்கண்ணும் வருவன வெல்லாம் உறுப்பென்று கொள்ளற்குத் தம்மோடொத்த நூலாசிரியர்கொண்ட தளை இலக்கணம் இவருங் கோடல்வேண்டும். கொள்ளின் யாண்டுந்தளையு முறுப்பாகக் கொள்ளலாம் என்றபடி.

4. ஈண்டும்—இந் நூற்கண்ணும்.

5. அவர்—காக்கைபாடினியார்.

6. இவர்—தொல்காப்பியர்.

7. தலைகளைதல்—தலையை நீக்கல்.

8. இளையரென்றது—ஒருசாலை மாணாக்கராதல் பற்றிப் போலும்.

9. இதனால் என்பது பின்வரும் 'தலைவேண்டினார்......ஓராசிரியர்' என்னும் வாக்கியத்தைச் சுட்டிநின்றது.

ளியல்]
உகங

# பொருளதிகாரம்

எனக் கூறி, வடவேங்கடந் தென்குமரியெனப் பனம்பாரனார் கூறியவாற்றானே எல்லைகொண்டார் காக்கைபாடினியார்; ஒழிந்த காக்கைபாடினியத்து,

" வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்."

(சுருக)

எனத் தென்றிசையுங் கடலெல்லையாகக்

கூறப்பட்டதாகலான்

அவர் குமரியாறுள்ள காலத்தாரல்லரென்பதூஉம், [1] குறும்பனை நாடு அவர்க்கு நீக்கல் வேண்டுவதன்றென்பதூஉம் பெற்றாம். பெறவே, [2] அவர் இவரோடு ஒரு சாலை மாணாக்கரல்லரென்பது எல்லார்க்கும் உணரல்வேண்டுமென்பது.

மற்றிது முறையாயவாறென்னையெனின், — மாத்திரை எழுத்தினது குணமாதலானும், அசையுஞ் சீரும் அடியும் தூக்கும் பாவும் வண்ணங்களுமென்ற இன்னோரன்னவெல்லாம் மாத்திரைநிமித்தமாகத் தோன்றுவனவாதலானும், அது முன் (௩௧௪) வைத்தான். அக்குணத்திற்குரிய எழுத்தினை அதன்பின் வைத்தான். அவ்வெழுத்தான் அசையும், (௩௧௫) அசையாற் சீரும், (௩௨௪) சீரான் அடியும், (௩௪௯) அவ்வடி பெற்றவழி அதனை ஆக்குமாறறியக்கூறும் யாப்பும் (௩௯௦) அவ்வடியகத்தன சொல்லும் பொருளுமாகலான் அதன்பின் மரபும் வைத்தான். அவ்வடியிரண்டினைத் தொடுக்குங்கால் அவற்றை ஓரடியென ஒரு தொடர்ப்படாமைத் துணிப்பது தூக்காகலான் (௩௯௯) அதனைத் தொடைக்குமுன் (௪௦௦) வைத்தான். அவ்வடியிரண்டு தொடுத்தவழியுங் கொள்ளப்படும் நோக்கென்பதறிவித்தற்கு (௪௧௯) அதனைத் தொடைப்பின் வைத்தான். அவ்வடி இரண்டும் பலவுந் தொடர்ந்தவழி முழுவதுங் கிடப்பது பாவாகலான் அதனை அதன்பின் (௪௨௨) வைத்தான். அப்பாத் [3] துணிந்த [4] துணிவினை (௫௦௧) [5] எண்ணுதலான்

அளவினை (சுகூகூ) அதன் பின் வைத்தான். திணையுந் திணைக்குறுப்பாகிய (சுகூ) ஒழுக

1. குறும்பனைநாடு—கடல்கோட்குமுன் தென்றிசைக்கண் இருந்ததொருநாடு.

2. அவர் என்றது பிற்காலத்திருந்த காக்கைபாடினியாரை.

3. துணிந்த—வரையறுத்த.

4. துணிவு—வரையறை. துணியினை என்றிருப்பது நலம். துணி—துண்டு=அடி.

5. எண்ணுதல்—அளவுசெய்தல்.



லாறும் அவ்வொழுக்கத்தவாகிய கூற்றும் (ருoகூ) அதன்பின்
வைத்தான். கேட்போருங் (ருoஅ) கேட்கும் (ருகஈ) இடனும்
(ருகo) அதுபோலப் புலப்படாத காலமும்

(ருகஎ) இவற்ருற்
பயனும் (ருகடு) பயனது [1] பாத்துவரும்
மெய்ப்பாடும் (ருகசு)
இவ்வற்றினெல்லாம் ஒழிந்துநின்ற எச்சமும்
(ருகஅ) அவ்வெச்
சத்தோடுங் கூட்டிபுணரப்படும் முன்னமும்
(ருகசு) அம்முறை
மையான் அதன்பின் வைத்தான்.
அவற்றிற்கெல்லாம் பொது
வாகிய பொருளை (ருஉ0) அதன்பின்
வைத்தான். அப்பொருட்
பிறழ்ச்சியை ஒருப்படுக்குந் துறையை
அதன்பின் (ருஉக) வைத்
தான். மேல் (ருஉஉ) எச்சமும்
மாட்டுமின்றியும் வருமென்ப
வாகலான் மாட்டினைத் துறைவகையின்பின்
வைத்தான். அவற்
றுள் எச்சத்தினை முன் ஓதினன் அது
செய்யுட்க[2]ணின்றி

வருஞ் சிறுபான்மையாதலானென்பது. வண்ணம் பாவினதுபகுதி யுறுப்பாதலான் அதனை அவற்றுப்பின் (ருஉச) வைத்தான். வனப்பினை (ருஉரு) எல்லாவற்றுக்கும்பின் (ருசஎ) வைத்தான்.

அவற்றை ஒன்றொன்றாக நோக்குங்கால் அவ்வெட்டுமின்றியுஞ் செய்யுள் செய்பவாகலினென்பது.

மற்றிவ்வுறுப்பினையெல்லாம் ஆசிரியன் [3] குறியென்றுமோ உலகு குறியென்றுமோவெனின், அவ்விரு திறத்தானும் ஏற்பனவறிந்து கொள்ளப்படுமென்றொழிக. இவற்றை [4] உயிருடையதனுறுப்புப்போலக் கொளின் உயிர் வேறு கூறல்வேண்டுவதாம், அவ்வாறு கூறாமையிற் கலவையுறுப்புப்போலக் கொள்க.

(க)

[மாத்திரையளவும் எழுத்தியல்வகையும் உணர்த்துதல்] ருகச. அவற்றுள்,

மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு
மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

1. பரம்—மேல். பயனது பாத்துய்ப்ப வரும் என்றும் பாடம். ஆயின் திருக்கோவையாருரையுள்ளும், பயனென்பது நெஞ்சினடுத்ததோர் மெய்ப்பாடு காரணமாகத் தன்வயினிகழ்ந்த சொல்லானெய்துவது என்று வருதலின் முன்னையதே பொருத்தம்போலும்.

2. இன்றி—இல்லாமல். வருவிப்பது என்றபடி.

3. குறி—பெயர்.

4. உயிருடையது—உயிருடைப் பொருள். உயிர் வேறு கூறுமையின் உயிரில்லாததோர் கலவையுறுப்புப் போலக் கொள்க என்றபடி. உயிர் என்றது செய்யுளைக் குறிப்பால் உணர்த்தி நின்றது.



இது, நிறுத்தமுறையானே முதற்கணின்ற மாத்திரையும் எழுத்தியலு முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மாத்திரைகள் பலதொடர்ந்து செய்யுட்கண்விராய் நிற்கும் அளவையும், எழுத்துக்களியற்றப்பட்டு எழுத்ததிகாரத்தின்வேறுபட்ட தொகையுமென இரண்டினமும் மேல் எழுத்தோத்தினுட் கூறப்படாதனவல்ல, அவையே : அவற்றை ஈண்டு வேண்டுமாற்றாற் கொள்க என்பான் மேற்கிளந்தவகையிற் பிறழாமற் கொள்க என்றானென்பது.

[1] அன்ன எனவே, [2] இம்மாத்திரையளவும் எழுத்தியல் வகையும் வேறென்பதூஉம், வேறாயினும் ஆண்டுக் கூறியவற்றொடு வேறுபடாமைக் கொள்கவென்பதூஉம் உரைத்தானும்; எனவே, 'எல்லாவழியும் [3] வரையாது எய்தற்பாலவாகிய மாத்திரைகள், ஓரோவழி வரையப்படுமாயினும் அவை முற்கூறாத வேறுசில மாத்திரையுமல்ல; ஈண்டுப் பதினைந்து எழுத்தென்று கூறிப் [4] பயங்கோடுமாயினும் ஆண்டை முப்பத்துமூன்றெழுத்தின் வேறுபடப் பிறந்தன சிலவெழுத்து மல்லவென்பான் மேற்கிளந்தன்ன என்றானென்பது. மாத்திரையென்றொழியாது மாத்திரையளவும் என்றதனான் அம்மாத்திரையை விராய்ச்செய்யும் அளவை ஈண்டுக் கூறினானென்பது கருத்து.

மற்று, எழுத்தியல் வகையினைமாட்டேற்றான் முப்பத்துமூன்றெனக் கொள்வதன்றிப் பதினைந்தென்று கொள்ளுமாறென்னையெனின் எழுத்தோத்தினுட் குறிலு நெடிலும் உயிருமெய்யும் [5] இனமூன்றுஞ் சார்பெழுத்து மூன்றுமெனப் பத்தும் இயல்புவகையான் [6] ஆண்டுப் படுத்தோதினான்; உயிர்மெய்யும் உயிரளபெடையுந் தத்தம் வகையாற் கூடுமாறும் ஐகாரம் ஔகாரம் போலிவகையாற் கூடுமாறும் யாழ்நூலகத்து

---

1. அன்ன என ஒப்புக் கூறியதனானே.

2. இம்மாத்திரையளவு என்றது இச்செய்யுளியலிற் கூறும் மாத்திரையளவு என்றபடி.

3. வரையாது—நீக்கப்படாது.

4. பயம்—பயன்.

5. இனமூன்று—வல்லினம், மெல்லினம், இடையினம்.
6. ஆண்டு என்றது எழுத்ததிகாரத்தை.



ஒற்றிசை நீளுமாறும் ஆண்டுத் 1
தோற்றுவாய் செய்தான்.
செய்யவே அவை ஈண்டுக் கூறும்
எழுத்தியல் வகையோ
டொக்குமென்று உய்த்துணர்ந்துகொள்ள
வைத்தானென்பது. இவற்றோடு
மகரக்குறுக்கமும் கூட்டிப் பதினெழுத்து
என்
பாருமுளர். அதனாற் பயனென்னையெனின்
பாட்டுடைத் தலை
வன் கேட்டுக்குக் காரணமாமென்பர்;
மற்[2] றுயிர்மெய்த் தொடக்

கத்து ஐந்தனையும் மேல்
எழுத்தென்றிலகைலான் ஈண்டு எழுத்
தியல்வகையுள் எழுத்தாக்கி
அடக்குமாறென்னையெனின்? ஈண்டு
அன்னவெனவே, ஆண்டு [3] இரண்டெழுத்தின்
கூட்டமெனவும்
[4] மொழியெனவும் [5] போலியெனவுங்
கூறினுயினும் அவற்றை

[6] எழுத்தியல்வகையெனப் பெயர் கொடுப்பவே [7] ஆண்டு நின்ற வகையானே ஈண்டு எழுத்தெனப்படுமென்பதாயிற்று. இதன்

கருத்து: இயலென்றதனுன்
இயற்றிக்கொள்ளும் வகையான் எழுத்து
இனையதென்றுனும். வகையென்பதனுன் • முப்
பத்துமூன்றினைக் குறிலும் நெடிலுமென்றற்
றொடக்கத்துப்
பெயர் வேறுபாட்டாற் பத்துவகைப்பட
இயற்றுதலுங் [8] கூட்ட
வகையானிரண்டும்,
[9] போலிவகையானிரண்டும், [10] யாழ்நூல்
வேண்டும்வகையா னென்றுமென
ஐந்துவகையானியற்றுதலு
மென இருவகையுங் கொள்ளப்படும்;
அல்லதூஉம், செய்யுட்

கள் அவ்வெழுத்துவகையான்
இன்னோசையவாக விராய்ச்

1. தோற்றுவாய் செய்தல் — தோன்றுதற் கிடஞ்செய்தல்.

தொடக்கஞ் செய்தல்.

2. உயிர்மெய்த் தொடக்கத்து ஐந்து, உயிர்மெய், உயிரள

பெடை, ஐகார ஔகாரப் போலி, ஒற்றளபெடை. எழுத்ததிகாரத்தினுள்.

ஆண்டு—

3. இரண்டெழுத்தின் கூட்டம் என்றது, உயிர்மெய்யை.

4. மொழி என்றது அளபெடையை.

5. போலி என்றது ஐகார ஔகாரப் போலியை.

6. எழுத்தியல்வகையெனப் பெயர் கொடுத்தது, இச்சூத்திரத்துள் (2) என்க.

7. ஆண்டு நின்றவகையென்றது வகையாய் நின்றமையை.

எழுத்தன்றி எழுத்தின்

8. கூட்டவகையானிரண்டு என்றது —

உயிர்மெய்யையும், உயிரளபெடையையும்.

9. போலிவகையானிரண்டு ஐ. ஔ.

10. யாழ்நூல்—இசைநூல்.

ஒன்று—ஒற்றளபெடை.

ளியல்] பொருளதிகாரம்

செய்தலுங் கொள்க. மற்றளபெடையை

மேல் மொழிபென்ருன்

ஈண்டெழுத்தென்றுணுகலின், இதனை [1] ஓரெழுத்தென்று கோடுமோ இரண்டெழுத்தென்று கோடுமோ எனின்,

"நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே."

(தொ. எழு. சக)

என்று கூறியவாற்ருன், ஆண்டு இரண்டெழுத்தெனக் கொள்ளக் கிடந்ததாயினும் [2] முன்னர்ப் போக்கி,

"அளபெடை யசைநிலை யாகலு முரித்தே."

(ந௨க)

என்றவழி, எழுத்து நிலைமையும்

எய்துவிக்குமாகலான் எதிராது நோக்கி ஈண்டு ஒரெழுத்தென்று கோடுமென்பது. இனி அவற் றுட் குறிலும் நெடிலும் குற்றுகரமும் அசைக்குறுப்பாம்;

மற்று,

"ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி."

(நகரு)

என்பதனான்

ஒற்றும் அசைக்குறுப்பாகாவோவெனின்,— [3]அச் சூத்திரத்தானன்றே [4] அவை குறிலும் நெடிலும் அடுத்து வந்தும் வேறுபடாது [5]நேர்நிரையாத லெய்தியது நோக்கி அவை அசைக்குறுப்பாகாவென்றதென்க. மற்று இடைநின்று நிரை யாதலை விலக்காவோவெனின்,— [6] அன்னதோர் விதியுண்டாயி னன்றே இவை இடைபுகுந்து விலக்கவேண்டுவதென மறுக்க. நெடிலும் அளபெடையிரண்டும் உயிரும் உயிர்மெய்யும் வல்லின மும் மெல்லினமும் இடையினமும்

ஐகாரக் குறுக்கமும் ஔகா ரக் குறுக்கமுமெனப் பத்துந் தொடைக்கு உறுப்பாம். குறி லும் நெடிலும் அளபெடையிரண்டும் இனம் மூன்றும் ஆய்த மும் வண்ணத்திற்கு உறுப்பாம். இங்ஙனமே வேறுபடவந்த பயனோக்கி எழுத்தினை இயற்றிக் கோடலின் 'எழுத்தியல் வகை' என்றானென்பது ; அஃதேல், ஒற்றுங் குற்றிகரமும்________

1. ஓரெழுத்தென்றும் ஓரிரண்டெழுத்தென்றுங் கோடுமோ வெனின் என்பது தாமோதரம்பிள்ளை பதிப்பு.

2. முன்னர்—பின்.

3. அச்சூத்திரம்—ஒற்றொடு வருதலென்ற சூத்திரம். அச் சூத்திரத்தானன்றே எய்தியது நோக்கி ஆகாவென்றதென்க.

4. அவை—மெய்.

5. நேர் நிரை—நேரும் நிரையும்.

6. அன்னதோர் விதி—ஒற்றிடை நிற்குமென்ற விதி.





ஈண்டோதியதென்னையெனின்,—ஒற்று

அளபெடையான் அசை

நிலையுஞ் சீர்நிலையுங் கோடலின், ஈண்டு ஒற்றுக் கூறினன். குற்றிகாரமும் உயிராயினும் ஒற்றுப்போல எழுத்தெண்ணி அடி வகுக்குங்கால் எண்ணப்படாதென்றற்குக் கூறினனென்பது;

அஃதேல்,

"ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்."

(௩௨௦)

என்பவாகலின், அதனை ஈண்டுத் தழாஅற்கவெனின், அக்கருத்தி னால் அவ்வாறும் அமையுமென்பது; அற்றன்று, இதனை மேற் புள்ளி பெறுமென்றிலனாதலான் புள்ளி பெறுமென்றற்கும்,

"ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்."

(௩௨௦)

என்றானென்பது.

இனி, ஒரு சாரார் மாத்திரையென்றது

[1] எழுத்தலோசை

யாகிய குறிப்பிசை கொண்டானென்பர். அக்குறிப்பிசை உறுப் பாக வருஞ் சான்றோர் செய்யுள் யாண்டுங் காணாமையின் நாம் அது வேண்டாமாயினும். சிறுபான்மை ஒரோவழி வரினும்

அத்துணையானே அஃது, இன்றியமையாத உறுப்போடு எண்ணப்படாதென மறுக்க. உறுப்பன்று என்றார்க்குக் குறிப்பிசை யாண்டுப் பெறுதுமெனின்,

"அசையுஞ் சீரு மிசையோடு சேர்த்தி."

(௩௨௩)

என்புழிப், பெறுதுமென்பது.

இனி,

"எழுத்தியல் வகையும் மேற்கிளந் தன்ன"

என்பதனையும் எழுத்திலக்கணத்திற்றிரியாமற் செய்யுள் செய்க வென்றவாறென்பவெனின், அஃதே கருத்தாயிற் சொல்லோத்தினுள்ளும் எழுத்திலக்கணமாகிய [2] மயக்கமும், [3] நிலையும் முதலாகிய இலக்கணத்திற் றிரியாமற் சொல்லாராய்தல் வேண்டுமெனவும், இவ்வதிகாரத்துள்ளும் 'எழுத்தியல் வகையும் சொல்லியல் வகையும் மேற்கிளந்தன்ன' எனவுஞ் சூத்திரஞ் செய்வான்மன் ஆசிரியனென மறுக்க.

---

1. எழுத்தல் ஓசையாகிய குறிப்பிசையை ௩௨௩-ம் சூத்திர உரையுட் காண்க.

2. மயக்கம்—இடைநிலை மயக்கம்.
3. நிலை—முதனிலை ; இறுதிநிலை. ளியல்]

## பொருளதிகாரம்

மற்று,

மாத்திரையளவைக்கு இலக்கணங் கூறுமி
னெனின்,—அதுவும்

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி."

(௩௨௩)

என்புழி, வல்லோராறெனப் பாவொடு
பொருந்தக் கொளக்
கூறுமென்பது ; அல்லதூஉம்,
மாத்திரையினை அளவைப்பட

நிறுத்துக என்ப தோரிலக்கணமாதலின், இங்ஙனம் வரையறை யுடைத்தாக நோக்கிச் செய்யுளுறுப்பென்றுணுமென்பது.

மற்று, மாத்திரையினை அளவைப்பட
நிறுத்தாக்காற் படுங் குற்றம்
என்னையெனின்,—அற்றன்று ;

'வரகு வரகு வரகு வரகு'

என்னும் அடியிணை,

'பனுட்டுப் பனுட்டுப் பனுட்டுப் பனுட்டு'[1]

என நிறுத்தின் அது மாத்திரைவகையாற் சிதைவுபட்டதாம்.

"அம்ம வாழி கேளாய் தோழீ"

என்றாற் பின்னர்நின்ற இருசீரும் நெடிலாதல் இன்னுதென்றுங்,

தோழியெனப் பின்னர்நின்ற சீரைக் குறுக்கினவழி இன்னோசைத்தாமென்றும் அவ்வாறே செய்யுள் செய்ப. பிறவுங் கொச்சகக்கலியுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் இவ்வாறே கண்டு கொள்க.

(உ)

[அசைவகை யிவையெனல்]

௩௧௫. குறிலே நெடிலே குறிலிணை குறினெடி
லொற்றொடு வருதலொடு மெய்ப்பட
நாடி
நேரு நிரையு மென்றிசிற் பெயரே.

இது, நிறுத்தமுறையானே அசைவகை

புணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: குறிலும் நெடிலுந் தனித்து வந்தும், குறில் இரண்டு இணைந்து வந்துங் குறிற்பின்னர் நெடில் இணைந்து வந்தும் அவை ஒற்றடுத்தும் முறையானே நேர்நிரையாகையானே நேரசையும் நிரையசையுமென்றும் என்றவாறு.

"குறிலே நெடிலே யொற்றொடு வருதலொடு."

எனவும்,

---

1. 'பஞட்டுப் பஞட்டு......' என்னும் ஓசை நீண்டு காட் • டவின் வழு.



"குறிலிணை குறினெடி லொற்றொடு

வருதலொடு."

எனவும், வேறு நிரனிறீஇப் பொருளுரைக்க. 'மெய்ப்பட நாடி.' என்பது பொருள்பெற ஆராய்ந்து; எனவே, இப்பெயர் ஆட்சி காரணமேயன்றிக் குணங் காரணமாகலு முடையவென்றவாறு.

உயிரில்லெழுத்தல்லாதன (௩௱௫) தனித்து நிற்றலின் இயலசை யென்னும் பொருள்பட நேரசையென்றாயிற்று.

அவை இரண்டு நிரைதலின் இணையசையென்னும் பொருள் பட நிரையசையென்றாயிற்று; அல்லதூஉம், 'மெய்ப்பட நாடி.' என்றதனன் அவ்வாய்பாடே அவற்றுக்குக் காரணமென்பதூஉங் கொள்க. [1] உடம்பொடு புணர்த்தல் (௬௬௫) என்பதனால் உதாரணமுங் கூறியவாறு. அவை நேர்நிரையெனச் சொல்லிக் கண்டு கொள்க. அ ஆ எனவும், அல் ஆல் எனவும், பல பலா எனவும், புகர் புகார் எனவும், பிறவும் இவ்வாறு வருவனவெல்லாங் கொள்க.

மற்று, குறினெடிலென எழுத்தாக ஓதியதென்னை? சொல்

லாயவழி அசையாகாவோவெனின்,—அவை ஒற்றொடு வருத லென்றதனானே, சொல்லாதலும் நேர்தாகவே அவை இரு வாற்றானும் [2] அசையாமென்பது [3] சீரின்றன்மைக்கண் வந்தது.

'உள் ளார் தோ ழி' என நேரசை நான்கும் வந்தன.

'வரி வரால் கலா வலின்' என நிரையசை நான்கும் வந்தன.

(ரு)

---

1. உடம்பொடு புணர்த்தல் என்பதனை உடம்படு புணர்த்தல் (உடம் படுபு உணர்த்தல்) என்று பாடமிருப்பதாக, டாக்டர் உ. வே. சாமிநாதையர் நன்னூல் சங்கர நமச்சிவாயருரைப் பதிப்புட் கூறியுள்ளார். இங்கே உடம்பொடு புணர்த்தலால் அமைந்து கிடந்ததென்றது நேரு நிரையுமென்று கூறிய அசைப் பெயர்களே அவற்றிற் குதாரணமாயமைந்து கிடக்குமாறு சொன் னமையை.

2. அசையாமென்பது என்பதில் முற்றுத்தரிப்பு இருப்பதே பொருத்தம். பின்வரு முதாரணங்கள் சீரின்கண் அசை வந்ததற்குக் காட்டியனவாதலின்.

3. சீரின் றன்மைக்கண் வந்தது என்பதில் யாதோ பிழை இருத்தல்வேண்டும். அவ்வாக்கியம் உதாரணங்களை விளக்க வந்ததாகத் தோன்றுகின்றது. அசையாமென்பது வந்தது என்று முடிக்கில் உதாரணம் என்பது பின்வரல்வேண்டும்.



[இதுவுமது]

௩௨௬. இருவகை-யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப.

இது, சொல்லாத அசைக்கூறுஞ் சொல்லுகின்றது.

இ—ள்: இருவகை யுகரமென்பன: குற்றுகர முற்றுகரங்கள்; அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒரு சொல் விழுக்காடுபட இயைந்துவரின் நிறுத்தமுறையானே நேரசையோடொன்றிவந்த குற்றுகரமும் அதனோடு ஒன்றி வந்த முற்றுகரமும் நேர்பசையெனப்படும்; நிரையசையோடொன்றிவந்த குற்றுகரமும் அதனோடொன்றிவந்த முற்றுகர

மூம் நிரைபசை எனப்படும் என்றவாறு.

இயைங்தென்றூன் இருவகை உகரமும்[1] இரு பிளவுபடாது ஒன்றாகி வரல்வேண்டும், அங்ஙனம் அசைபாங்காலென்றற்கு. இருவகை உகரமும் ஒருகாலத்து ஒன்றன்பின் வாரா, வேறு வேறு வருமென்பது. இருவகை[2] உகரமும் இறுதிக்கண் நின்று அசையாக்குமென்பதென்னை பெறுமாறெனின்?—குற்றுகரம் ஈற்றுக்கணல்லது வாராமையானும்,

"நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்."

(நஉக)

என்பதனானும் பெறுதுமென்பது; அல்லதூஉம், நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரம்[3] இறுதிக்கண் நேரசையல்லது

1. இரு பிளவுபடாது என்றது வருஞ்சொல்லோடு சேர்ந்து வேறசையாகாமல் ஒருசொல் விழுக்காடுபட நிற்றலை. உண்டுடுத்து இதில் உண்டு என்பது குற்றுகரமேனும் வருஞ்சொல்லோடு சேர்ந்து வேறசையானமையால் நேர்பன்றானமை காண்க. பிறவாறும் பிளவுபடுவன ஆகா என்க.

2. குற்றியலுகரம் மொழி ஈற்றுக்கண் வருதலானே இறுதி நின்று அசையாமென்பதும், முற்றியலுகரம் நிற்றலின்றே ஈற்றடி மருங்கினும் என்ற விதிப்படி அடியீற்றில் நில்லாதெனவே இடைக்கண் புணர்ச்சிவகையான் நிற்குமாதலின் மொழி இறுதிக்கண் நின்று அசையாமென்பதும் பெறப்படும் என்க. புணர்ச்சிவகையான் வந்ததற்கு உதாரணம், 'நாணுத்தளை' 'விழவுத்தலைக் கொண்ட' என்பன. இவற்றில் வருமுகரம் புணர்ச்சிபற்றி வந்தன. நாண் உகரம்பெற்று நாணு எனவும், விழா என்பது குறுகி உகரம்பெற்று விழவு எனவும் நின்றன. எழுத்ததிகாரம் நோக்குக.

3. இறுதிக்கண் நேரசையல்லது நிரையசையடுத்து வருத லின்மையானும் என்பதில் அல்லது என்பதை நீக்கிக்கொள்க.



நிரையசை அடுத்து வருதலின்மையானும்
அது பெறுதுமென்
பது. முன்னர் நேரசை நான்கும்
நிரையசை நான்குமென
எண்வகையான் அசை கூறி
அவற்றுப்பின் இருவகை யுகர
மும் வருமெனவே, அவை
குற்றுகரத்தோடு எட்டும் முற்றுக

ரத்தோடு எட்டுமாகப் பதினாறு உதாரணப் பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுட் [1] குற்றெழுத்துப் பின்வரும் உக

ரம் நேர்பசையாகாதென்பது,

"குறிலிணை யுகர மல்வழி யான."
(நஎ)

என்புழிச் சொல்லுதும்; ஒழிந்தன
குற்றுகர(ம்) நேர்பசை மூன்

றும் நிரையசை நான்குமாயின.

உதாரணம்:

வண்டு, நாகு, காம்பு எனவும், வரகு, குரங்கு,
மலாடு, மலாட்டு எனவும் இவை
குற்றுகரம் அடுத்து நேர்பும்
நிரைபும் வந்தவாறு.

இனி, முற்றுகரம் இரண்டசைப்
பின்னும் வருங்காற்
குறிலொற்றின் பின்னும், நெடிற்பின்னுமென
நேரசைக்கு இரண்
டல்லதாகாது. நிரையசைக்கண்ணும்
குறிலிணைப்பின்னும் குறி
னெடிற் பின்னுமல்லதாகாது.

உதாரணம்: [2] மின்னு, நாணு எனவும்,
உருமு, குலாவு என
வும் வரும். வாழ்வு, தாழ்வு என
நெடிலொற்றின்பின்னும் முற்
றுகரம் வந்ததாலெனின்,—அவை
ஆகாவென்பதூஉம் இக்காட்
டிய நான்குமே ஆவனவென்பதூஉம்

முன்னர்,

"நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்."

(௩௨௧)

என்புழிச் சொல்லுதும்.

இனி, ஒரு சாரார் நேர்பசை,

நிரைபசையென்பன வேண்டா

வென்ப; என்னை? குற்றுகர

முற்றுகரங்களை வேறாக்கி

நுந்தை, நேரசை யிறுதிக்கண்ணும்

நிரையசை யிறுதிக்கண்ணும்

அடுத்துச் சின்னுந்தை, இரானுந்தை என வரும். அப்போது, முறையே நேர்பு நிரைபு ஆகாது. எனவே குற்றுகரம் இறுதிக் கண்ணே வந்து நேர்பு நிரைபு ஆகும் என்றபடி. இதனை கூும் சூத்திர உரை நோக்கியறிக.

1. குற்றெழுத்துக்குப்பின் வரும் உகரம் அது என்பது போல்வது. இது முற்றுகரமாவதன்றிக் குற்றுகரமாய் நேர்பசை யாகாது.

2. மின்னு—குறிலொற்றின்பின் வந்தது.

நாணு—நெடிற்

பின் வந்தது. உருமு—குறிலிணைப்பின் வந்தது. குலாவு—குறி னெடிற்பின் வந்தது. ஒரு சாரார் என்றது சிறுகாக்கை பாடினியார் முதலானோரை. அமையாதே—அமையாதா?

உ-உ-க

அலகிட அமையாதே?

[1] ஞாயிறு எனக் குற்றுகரங் குறிலிணை

யாய் அலகுபெறுமாறெனக் குற்றங் கூறுப. [2] முற்றுகரமும் தேமாவென நேரசையாயிற்றுப்போல, மின்னு என்றவழியும் வேறலகுபெற அமையுமென்பது; அற்றன்று; [3] குற்றுகரத் திணைக் குற்றெழுத்தென்ப; வேறு குற்றுகரம் வேண்டா தாரும். என்றூர்க்கு [4] வேண்டினூனயுங் குற்றங் கூறுவரவர்; என்னை? குற்றியலுகரம் அரைமாத்திரைத்தாகலின், [5] ஒற்றுப் போல ஓரசையுள் ஒடுக்கி அலகிடப்படும். அற்றன்றேற் குற் றெழுத்தாக்கி அலகுவைக்கவே அமையுமென்பதாம் அவர்

1. ஞாயிறு—நேர்நிரை. இதில், 'யிறு' குறிலிணையாக வைக் கப்படும். என—என்னுமென்று மிருக்கலாம்.

2. முற்றுகரமும் அமையுமென்பது என முடிக்க. தேமா என என்பது தேமா என்பது என்றிருத்தல்வேண்டும்.

3. நேர்பு நிரைபு எனக் குற்றுகரத்தை வேறசையாக வேண்டாதாரும் குற்றுகரத்தைக் குற்றெழுத்தாக வைத்தே அசைகொள்வர். ஆதலின் இவ்வாசிரியரும் ஞாயிறு முதலிய வற்றை மாத்திரம் குற்றெழுத்தாக வைத்து அசைகொண்டார். ஆகலின் யாண்டும் அவ்வாறு கோடல்வேண்டுமென்பது நியதியன்று. ஆதலின் அற்றன்று என மேலே கூட்டுக. என்றூர்க்குக் கூறுப என இயைக்க. அவர் என்றது குற்றுகரத்தைக் குற்றெழுத்தாகக் கொள்ளும் ஒரு சாரரை.

4. வேண்டினனே என்றது குற்றுகரம் வேண்டினனே என்றபடி. வேண்டினன் — குற்றுகரத்தை (நேர்பு நிரைபு என) வேறசையாக வேண்டினன்; என்றது இந்நூலாசிரியரை.

5. ஒற்றுப்போல ஓரசையுள் ஒடுக்கி அலகிடப்படும் என்றது வரகு என்புழி கு என்பதை ஒற்ருகக்கொண்டு வர என்பதை நிரையசையாகக் கோடலே. அலகு வைத்தல் என்றது கு என்பதையும் குற்றெழுத்தாகக் கொண்டு வரகு என்பதை நிரை நேர் எனக் கோடலே. குற்றுகரம் ஒற்றுந் தானுமாகி அரைமாத்திரை என்றது ஒற்றுக்குரிய அரைமாத்திரை தன்னுள் அடங்கத்தான் தனக்குரிய மாத்திரையோடு நிற்றலே. தனி மெய்யாயின் ஒடுங்கியிசைக்கும்; மெய்யின்மேல் அரைமாத்திரையான குற்றுகரமுஞ் சேர்ந்து நிற்றலின் அகன்று இசைக்கும் என்றூர். ஒடுங்கியிசைத்தல் முன்னின்ற ஓரசையுள் ஒடுங்கி யிசைத்தல். நாள் என்றவழி முன்னின்ற நெட்டெழுத்துள் மெய் ஒடுங்கி இசைத்தலும் நாடு என்றவழி டுகரம் ஒடுங்கியிசையாமையும் செவி கருவியாகவுணர்ந்துகொள்க. செயற்பாலது ஓரசையாக்குதல் எனக் கண்ணழிக்க.

* நேர்புஅசை நிரைபுஅசைகளைத் தொல்காப்பியர் கொண்டமைக்கு இளம்பூரணர் கூறுங் காரணத்தையும் ஈண்டுக் காட்டுதும். அது வருமாறு:—

கருத்து. அதற்கு விடை:— குற்றுகரம் ஒற்றுப்போன்று ஒடுங்கி நில்லாது; என்னை? தன்னான் ஊரப்பட்ட ஒற்றுந் தானுமாகி அரைமாத்திரைத்தாகியும், ஒடுங்கி இசையாது அகன்று இசைக்கும், அதனால் ஒற்றென்றலுமாகாது; பின்னும் ஒரு மாத்திரைத்து ஆகாமையிற் குற்றெழுத்தெனலுமாகாது; மற்று, அதனான் அதனை ஒற்றென [1] அடக்கார்; குற்றெழுத்தென எற்று அலகு [2] கொள்ளார்; இனி, அதனைச் செயற்பாலதோர் அசையாக்குதலென்பது நோக்கி நேர்பசை நிரைபசையென வேண்டினானென்பது. அவை வண்டு, கொண்டி என ஓசையொவ்வாமை செவி கருவியாக உணர்ந்துகொள்க. அஃதேல், ஞாயிறு, வலியது என்றவழிக் குறிலிணை யுகரமெனக் குற்றெழுத்தாக்குவது எற்றுக்கெனின், அளபெடையை ஓசையிற் சிதையாது [3] நிலப்படையுள் [4] அலகு சிதைத்தாற்போலக் குற்றுகரத்தைக் குற்றெழுத்துப்போல அலகுபெறுமென்பது இலக்கணமில்லதோர் வழுவமைதிதாணுயதனை இலக்கணமாக ஒத்துக்கொண்டு இலக்கண வகையாற் குற்றுகரமாதலை விலக்கு

வாரும் உளரோவென மறுக்க. அஃதாக, [5] முற்றுகரம் ஒரு மாத்திரையாகலிற் குற்றெழுத்தாக்கி நேரும் நிரையும் ஆக்கப் பெறுவோவெனிற் பெறு; என்னை?

---

"அஃதேல் நேர்பசை நிரைபசையெனக் காக்கைபாடினியர் முதலாகிய ஒருசாராசிரியர் கொண்டிலராலெனின், அவர் அதனை இரண்டசையாக்கி உரைத்தாராயினும், அதனை முடிய நிறுத்தாது, வெண்பாவீற்றின்கண் வந்த குற்றுகர நேரீற்றியற்சீரைத் தேமா புளிமா என்னுமுதாரணத்தான் ஓசையூட்டிற் செப்பலோசை குன்றுமென்றஞ்சி, காசு பிறப்பு என உகர வீற்று வுதாரணங் காட்டினமையானும், சீருந் தளையுங் கெடு வழிக் குற்றியலுகரம் அலகுபெறுதென்றமையானும், வெண்பா வீற்றிலும் உகரஞ் சிறுபான்மை வருமென உடன்பட்டமையானும் நேர்பசை நிரைபசை என்று வருதல் வலியுடைத்தென்று கொள்க." என்பதே.

1. அடக்கார்—அடக்கான் என்றிருப்பது நலம்.

2. கொள்ளார்—கொள்ளான் என்றிருப்பது நலம்.

3. நிலப்படை என்றது ஓசைக்கு இடமாகிய எழுத்தை.

4. அலகு சிறைத்தல்—அசைக்குரிய எழுத்தாகக் கொள்ளாது விடல்

5. முற்றுகரம் ஈற்றில் நின்று நேராதற்கன்றி நிரையாதற்கு உதாரணம் காணப்படவில்லை. ஆதலின், நிரை என்பது பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது. நேராக்கப் பெறுவோ எனின் என்றிருப்பது நலம்.

'வண்டு வண்டு வண்டு வண்டு' என
நின்றவழிப் பிறந்த அகவலோசை,

'மின்னு மின்னு மின்னு மின்னு'
என நின்றவழியும் பெறப்படுமாதலின், 1
அதுவும், அது பட்
டதே பட்டு அவ்வகையே பெறுமென்றானென்பது;
அல்லதூஉம்,
வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகரவீற்றான் இற்றவழி, கொல்லு என முற்றுகரவீற்றான் இறுபாயினும் ஒத்தவோசையாம்.

இனி, உகரவீறல்லாத
தேமாவென்பதனுன் வெண்பா
2 முடியாவென்பர்; அதனாலுங் குற்றுகரத்தின்
செய்கை முற் றுகரத்திற்கும் வேண்டி நேர்பு
நிரைபு கொண்டானென்பது. அற்றன்றியுங்
குற்றுகரஞ் சார்ந்துதோன்றுமாறுபோல 3 அம்
முற்றுகரமும் வருமொழி காரணமாக
நிலைமொழிசார்ந்து தோன்றுத லொப்புமை
நோக்கியும் அதனைக் குற்றுகரம் போல
ஓரசைக்கு உறுப்பாம் என்றானென்பது.

'எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.'
(௩௫௫)

என்பதனான் அவை அவ்வாறாதல் அறிந்துகொள்க. இவையும் [4] ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்ற பெயர். ஆட்சி,

'நிரையவ ணிற்பி னேரு நேர்பும்'
(௩௭௭) எனவும்,

'நேரீற் றியற்சீர் நிரையு நிரைபும்.''
(௩௭௯) எனவும் வருமென்பது. இருவகை யுகரமும் அடைந்துவந்த [5] இயலசையிரண்டும், நேர்பும் நிரைபுமென்றாலும், நேரும் நிரையுமென்னும் பொருண்மையவேயாகலான் அவற்றது பெய———

1. அதுவும் என்றது முற்றுகரத்தை. அது என்றது குற்றுகரத்தை. வண்டு என்று முடியினும் கொல்லு என்று முடியினும் நேர்பசையாகக் கொள்ளப்படும் என்றவாறு.

2. முடியாளென்றது வெண்பாட்டீற்றடியை.

3. அம்முற்றுகரம் என்றது மின்னு முதலியவற்றிலுள்ள முற்றுகரங்களை. இவை நிலைமொழிபற்றித் தோன்றுதலை எழுத் ததிகாரம்

புள்ளிமயங்கியலிற் காண்க.

4. ஆட்சி என்றது ஆசிரியர் சூத்திரங்களில் ஆளுதலை.

5. இயலசை யிரண்டு - நேர் நிரை.

29



தான் இவற்றையும் பெயர்கொடுத்தான்
1 ஆகுபெயராக்கியென்
பது. எனவே, நேர் நிரையின்பின்
உகரம் வருதலின் நேர்பு
நிரைபெனக் கூறுங் காரணமாதலும்
பெற்றாம். (௪)

[குற்றுகரம் இவ்விடத்து
நேர்பசையாகாவெனல்]

௫௧௭. குறிலிணை யுகர மல்வழி யான.

இஃது, எய்தியது ஒருமருங்கு மறுத்ததாம் ; எய்தாதது எய்துவித்ததூஉமாம் ; வழுவமைத்ததெனினும் அமையும். தனிக் குறிலானொழிய நேரசைப்பின்னும் *இருவகையுகரம் வந்து நேர்பசையாதலை விலக்கினமையின் எய்தியது ஒருமருங்கு மறுத்ததாம். குற்றுகரங் குற்றெழுத்துப்போன்று அலகு பெறுமென்றமையின் எய்தாதது எய்துவித்து வழுவமைத்ததாம்.

இ—ள் : இருவகை உகரமும் இருகுறிலிணைவழி நேர்பசையாகாது என்றவாறு.

கரு மழு என முற்றுகரம் நேர்பசையாகாது நிரையசை

யாயிற்று, என்றார்க்குக் * குற்றுகரம்
விலக்கியதென்னை? குறி ' வினை வந்தவழிக்
குற்றுகரமாகாதென்பது,

'நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.' (தொ. எழு. ௩௬)

என்றதனுற் பெறுதும் பிறவெனின், அது
நோக்கிக் கூறினு

னல்லன்; எற்புழிக் கோடல் என்பதனுன்
ஞாயிறும் வலிபது

என ஓரசைப்பின்னர் வந்தவழி இது
குற்றுகரமேயாமன்றே,

ஆண்டும் அது குறிவினை யுகரமெனவே
படுமென்பது; பட்

டக்கண்ணும்
குற்றுகரமேயென வழுவமைத்தவாறு. குறிவினை

யெனக் குற்றுகரத்தையும் உடம்பொடு
புணர்த்தல் (௬௧௫) என்

சிதைத்துச் செய்யப்படாது என்றவாறு.

இங்ஙனம் முதற்கண் வரையறுப்பவே இடையும் இறுதியும் மேலோதியவாற்றான் நேரசையாமென்பது. மொழி சிதைத்தலென்பது, விட்டிசையாத மொழியை விட்டிசைத்து மொழிதல். எனவே, [3]விட்டிசைத்த மொழியாயின் அது மொழி சிதைத்தெனப்படாது இயல்பாமென்பது பெற்றும். கரு மழு என முதற்கண் மொழி சிதைத்து நேரசையாகாமையும் குறிலிணையெனப்பட்டு நிரையசையாயினவாறும் கண்டுகொள்க.

'அஆ விழ்ந்தான்' (நாலடி. கூ)

எனவும்,

"அஉ வறியா வறிவி லிடைமகனே.
நொ அலைய னின்னாட்டை நீ."

எனவும் இவை விட்டிசைத்தலின் மொழி சிதையாது தனிக் குறில் முதற்கண் நேரசையாயினவாறும், அவை குறினெடிலும் குறிலிணையுமெனப்பட்டு நிரையசையாகாதவாறும் கண்டு கொள்க.

இனி, விட்டிசைக்கும் இடந்தான்

மூன்றென்பது உரை

யிற் கொள்க. அவை,

'அஆ விழந்தான்' எனக் குறிப்பின்கண் வீந்தலும்,

'அஉ வறியா' எனச் சுட்டின்கண்

வருதலும்,

'நொ அலையல்' என ஏவற்கண் வருதலுமென விட்டிசைக்கு மிடந்தான் மூன்றெனப்பட்டது. முதலசையென்பது, நேரசை

1. நிரைந்தமையின் என்று மிருந்திருக்கலாம்.

2. நிரையசை ஆகாமல் மூன்றெழுத்தும் தனித்தனி நேரசை யாதலும் பின் இரண்டுங் குறிலிணையாக ஒன்று நேரசையாதலும் முதற்கண்ணேயோ எனவும் எய்தியதென்க. ஆகாது என்பதில் து விடப்பட்டது.

3. விட்டிசைத்தல்—பிளந்திசைத்தல்



யென்பாருமுளர். [1] அது விகுந்தோதல்வேண்டா, தனிக்குறி லான் அசையாமெனப்பட்டது நேரசையேயென்பது பெறுதுமாகலான். மற்றும்,

'இடைக் குறுக்கம்'

என்றவழி, [2] விட்டிசைத்து மொழி சிதையாதாகலான் அவ் விரண்டெழுத்துங் கூட்டி நேர்பசையென்னுமோவெனின்,— அவை பிளவுபட நிற்றலின் இயைந்திலவென மறுக்க. (எ)

[குற்றியலுகரம் அலகு பெறுதெனல்]

## ௬௨௦. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.

இஃது, எய்தாதது எய்துவித்து ஐயம் அறுத்தது.

இ—ள்: மேற்கூறிய எழுத்திலக்கண வகையானும ஈண டோதும் அசைக் குறுப்பாமாற்றானும் எல்லாங் குற்றியலிகரம் ஒற்றெழுத்தியற்றேயாம் என்றவாறு.

3 தேற்றேகாரம் அடுத்துக் கூறியவாறு. எனவே எழுத் தோத்தினுள்,

"மெய்யி னெல்லாம் புள்ளியொடு நிலையல்." (தொ. எழு. ௧௦௪)

எனக் கூறி,

"குற்றிய லுகரமு மற்றென மொழிப." (தொ. எழு. ௧௦௫)

எனக் குற்றுகரத்திற்குப் புள்ளி பெறுதலுங் கூறினன்; அது போலக் குற்றிகரமும் புள்ளிபெற்று நிற்றல் உடைத்தெனவும், ஈண்டுக் குற்றுகரம் நேர்பும் நிரைபுமாகியவாறுபோலத் தானும் ஓர் அசையாகுங் கொல்லென்று ஐயுறுவது வேண்டா, ஒற்று நின்றுங்கு நின்று இயலசை உரியசைகளைச் சார்ந்து வருதலும் ஒற்றுப்போல் எழுத்தெண்ணப்படாமையுமுடைத்து என்றவாறு மாயிற்று.. எனவே, ஒற்றெழுந்தியற்றாயினுங் குற்றுகரம் இக ரக் குறுக்கம்போலிது செய்யுட்கு உபகாரப்பட்டதோர் அசை

1. அது—நேரசை, முதலசையென விதந்து ஓதல்வேண்டா

என்றபடி.

2. விட்டிசைத்து மொழிசிதையாது" நிற்றலின் பின்னு என்பதுபோல நேர்பசையாகக் கொண்டாலென்னையெனின்? இஉ என்று பிளவுபட்டிசைத்தலின் நேர்பு என்று கொள்ளலாகாதென்றபடி.

3. இயற்றே என்பதில் ஏகாரம் தேற்றம் என்றபடி.



வேறுபாடு தோன்ற நிற்குமென்றவாறாயிற்று. மற்று எண்ணப் படாதென்றது ஈண்டுக் கூறல்வேண்டுமே?

"உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ."

(௩௫௬) என்புழிப் பெறுதுமாலெனின், அது குற்றுகரத்திற்கே கூறிய தென்பது ஆண்டுச் சொல்லுதும்.

உதாரணம்:

1 "மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னும்."

(தொ.

சொல். உஎசு) எனவும,

"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை,"

(குற. உருசு) எனவும் இவை இயலசை சார்ந்து ஒற்றியற்றுகிக் குற்றிகரம் வந்தவாறு. [2] நாகியாது வரகியாது எனக் குற்றிகரம் உரியசை சார்ந்து ஒற்றியற்றுகி வந்தவாறு. அது நிரையும் நிரைபுஞ் சார்ந்து ஒற்றியற்றுமாறு இல்லை போலும். இவற்றையெல்லாம்

'ஒற்றெழுத்தியற்றே' என்பதனுற் புள்ளியிட்டெழுதுக. இது சொல்லிய காரணம்: குற்றுகரம் அரைமாத்திரைத்தாகியும் ஒற்றியற்றுகாது நேரும் நிரையும் ஆகியவாறுபோல அதற்கு இனமாகிய குற்றிகரமும் அரைமாத்திரைத்தாகி வேருசை யாங் கொல்லென்று ஐயுருமற் காத்தவாறு.

• மற்று ஆய்தத்தினையும் ஒற்றியற்றென்னுமோவெனின், அஃது எழுத்தோத்தினுள்,

"எழுத்தோ ரன்ன"

என்பதனுற் பெற்றுமென்பது. மற்று,

(தொ. எழு. கசக)

சான்றோர் செய்யு ளல்லவெனமறுக்க. [1] இனி, ஒற்றும் எழுத்துமென உம்மையோ டெண்ணலுமாகாது; இவ்வோத்தினுள்,

"உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ." (௩௨௯) என ஒற்றினையும் எழுத்தென்றாகலின். (அ)

[நேர்பும் நிரைபுங் கொள்ளுங்கால் வருமொழியைச் சிதைத்து இருவகை யுகரமுங் கோடலாகாதெனல்] ௩௨௧. முற்றிய லுகரமு மொழிசிதைத்துக் கொளாஅ நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்.

இதுவும் ஐயம் அறுத்தது; இருவகை யுகரமொடு நேரும் நிரையும் இயையின், அவை நேர்பும் நிரைபுமாமென்றான், அவற் றுண் முற்றுகரம் ஈறாகி நிற்குஞ் சொல், உலகத்து அரிய வாயினவாதலிற் [2] புணர்ச்சிக்கண் வந்த உகரமே ஈண்டு நேர் பும் நிரைபுமாவனவெனவும் புணர்ச்சிக்கண்ணும் நிலைமொழித் தொழிலாகிய உகரமும், [3] நிலைமொழி யீறுகெட்டு நின்ற உக

ரமுமே கொள்ளப்படுவன எனவும், [4] வருமொழித் தொழிலாகிய

---

1. இனி ஒற்றியற்று என்பதற்கு ஒற்றியற்றுமாம் எழுத்தியற்றுமாம் என்று பொருள்கொண்டு ஒற்ருக நீக்கவும்படும்; எழுத்தாகக் கொண்டு அலகிடவும்படும் என்பாருமுளர். அங்ஙனம் உம்மைத் தொகையாகக் கோடற்கு ஒற்றினையும், 'உயிரிலெழுத்தும்' என்ற சூத்திரத்துள் எழுத்தென்றே கூறலின், ஒற்றும் எழுத்தெனப்பட்டு எழுத்தென்றதனுள் அடங்குமாகலின் அங்ஙனம் உம்மைத் தொகையாகக் கோடல் பொருந்தாதென்றபடி. இவற்குப்பின்னுள்ள நச்சினர்க்கினியரும் ஒற்றும் எழுத்தும் என்று பொருள்கொள்வர்.

2. புணர்ச்சிக்கண் வந்த உகரம்—மின்னு பன்னு உரினு பொருநு முதலியன.

3. நிலைமொழி ஈறுகெட்டுநின்ற உகரம்—மேவுஞ்சீர்—மேவுசீர் எனவும், விரவுங்கொடி—விரவுகொடி எனவும் மகரங்கெட்டு நின்றாற்போல்வன. ௩௨௨-ம் சூத்திர உரை நோக்குக.

4. வருமொழித் தொழிலாகிய ஒற்று உறுப்பாவன என்றது நாணுத்தளை, சேற்றுக்கால் என்பனபோல்வனவற்றில் வருவன. நாணுத், சேற்றுக் என்ருலும் ஒற்று உறுப்பாக நேர்பு என்றே கொள்ளப்படும். "குற்றியலுகரமு முற்றியலுகரமும்—ஒற்றொடுந் தோன்றி நிற்கவும் பெறுமே" என்பது சூத்திரம். வருமொழி யுகரம் 'நாணுடை அரிவை' என்பனபோல்வனவற்றில் வருவன. அவை நாணு எனப் பிரித்து வழங்கி நேர்பசையாக்கப்படா என்றபடி.

நெடுமாவும் புளி மாவுமாவதல்லது நேர்பசையும்
நிரைபசையுமாகாதென்பதாம். விக்குள் கடவுள்
என்பனவும் அன்ன. (௧௦)

[அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துக எனல்]

௩௨௩. அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ
ராறே.

இது மேற் கூறப்பட்டனவற்றுக்கும் இனி வருஞ் சீர்க்கு மெல்லாம் புறனடை.

இ—ள்: அசைகளையும் சீர்களையும் இசையோடு சேர்த்தி வேறுபடுத்து உணர்த்துதலும் அச்சிசைப்புலனிலக்கணத் தோயினோரது நெறி என்றவாறு.

துறை

மேல் (௩௧௧) மாத்திரையென்பதோர் உறுப்புரைத்தான்; அதனான் அசை சீர்களது ஓசையை அளந்து கூறுபடுத்து இன்னோசையும்

இன்னுவோசையு முணர்த்துக. [1] எழுத்தியல் வகைக்கும் இஃதொக்கும்.

"குருந்துக் குறைத்துக் கொணர்ந்து தாது
கருப்புச் சுறும்பர் பாய்." (யா. வி. பா. கக—கஅக) எனின், வெண்பாவீற்றடி. இன்னோசைத்தன்றாம்;

"கருப்புக் கொழுந்து கவர்ந்து"
என முடிக்கின் இன்னோசைத்தாய் [2] வெறுத்திசையின்றாமென் பது.

1. எழுத்தியல்வகைக்கும் இஃதொக்கும் என்றது, மாத்திரையைக் கொண்டு எழுத்துக்களையும் இன்னோசைத்தாக்க லுக்கும் இஃதொக்கும் என்றபடி.

2. வெறுத்திசை—வெறுக்கப்படும் இன்னு ஓசை. 'ஒழு கிசையென்பது. வெறுத்திசையின்மை' என்னுந் தண்டியலங் காரச் சூத்திரத்துப் பழைய உரை நோக்குக. இவ்வுரையாசிரி யரே இன்னோசையும் இன்னு ஓசையுமெனக் கூறுதலானும் வெறுத்திசை இன்னுவோசை என்பதறியப்படும்.



"நிலமிசை நீடுவாழ் வார்." (குறள், ங)

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய."

(௩௭௦) என. வெண்பாவிற்கு ஓதிய அளவடியேயாயினும் [3] இக்காட்டிய அலகிடுகையாற் கலித்தளைதட்டுத் துள்ளலோசையும் பிறக்கும்.

---

1. நீடுகொடி—நேர்பு நிரை. இதனைப் பிறர் வகையுளி செய்து மாவருவாய் ஆக்குவர்.

2. வகையுளியாவது. நீடுகொடியை மாவருவாய் எனவும், வாழ்வார் என்பதை வாழ் வார் எனவும் பிரித்து வகுத்தல். ஓரசையாய் நிற்கவேண்டிய எழுத்தை வேறுகப் பிரித்தும் ஒரு சொல்லாய் நிற்கவேண்டிய அசைகளை வேறுகப் பிரித்தும் சீர் செய்தலின் வகையுளியாயிற்று. நீடுகொடி என்பதனை நேர்பு நிரை என்று கொள்ளவேண்டும். அதனை வகையுளி செய்வோர் நீ எனவும் டுகொ எனவும் டி எனவும் பிரித்து மாவருவாய் ஆக்குவர் என்றபடி. இது எழுத்து வகையுளி. நீடுவாழ்வார் என்புழி வாழ்வார் என்னும் ஒரு சொல்லில் வாழ் என்பதனைப் பிரித்து நீடு என்பதனோடு சேர்த்து நீடுவாழ் எனவும் வார் என்பதை வேறு அசைச்சீராகவும் கோடல் வகையுளியாமென்க. இது சொல் வகையுளி.

3. இக்காட்டிய அலகிடுகை என்றது. இங்கே காட்டிய அலகிடுகையை. அஃதாவது, பன்னிரண்டு எழுத்தடி முதலியவற்றிற்கு நான்கு சீர்க்கும் வெண்சீரைக் கொடுத்து அலகிட்டமையை. இவைகளை நீட்டியுச்சரிக்கக் கலித்தளைதட்டுத் துள்ளலோசை



"மாசேர்வாய் மாசேர்வாய் பாதிரி பாதிரி"

எனவும்,

பிறக்கும் என்பது பேராசிரியர் கருத்து. அதனை இச்சூத்திர உரை இறுதியில் 'மற்று அதன்கண் துள்ளலோசை பிறந்ததா லெனின், அவற்றுக்கண் ஒரு மாத்திரை கொடுப்பத் துள்ள லோசை பிறந்ததாயினும்.........அங்ஙனம் நீட்டிச் சொல்லாது அகவலோசைப்படச் சொல்லுகவென்பது இதனாற் பெற்றுமாக லின்' என்பதனானறிக. இனி இயற்சீர் வெண்டளையன்றி வெண் சீர் வெண்டளை கலிக்கண் வரின் அது அலகிடு முறையாற் கலித் தளையாகக் கொள்ளப்படும் என்பது இதன்கண் பின்வரு முறை யாற் பேராசிரியர் காட்டலானும் ௩௯௭-ம் சூத்திர உரையுள் "அளவுஞ் சிந்துமல்லாத ஏறிய நிலமெல்லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மில் தளைவகை யொக்குமென்றுணர்களின் என் பது" என வருதலானும் ௩.௭௩-ம் சூத்திர உரையானும் அறிக. இன்னணங் கொள்வது சீர்வகையடிக்கன்றிக் கட்டளை யடிக்கன்று என்பது பேராசிரியர் கருத்து. கட்டளையடிக்கா யின் 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' என்னுஞ் சூத்திர விதிப்படி கொள்ளப்படுமென்பது அவர் கருத்து. அலகிடு முறை என்றது பன்னிரண்டு எழுத்தடிக்கு மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய் என அலகிட அது கலித்தளையாதலும் அப்பன்னிரண்டெழுத்தடிக்கே மாசேர்வாய் மாசேர்வாய் பாதிரி பாதிரி என அலகிட வெண்பாவடியாதலும் ஆகிய முறைமை. (அலகிடல்—எழுத்தெண்ணி அசைசீர் அடிகளை வகுத்தல்.) இத னைப் பின் பேராசிரியர் கூறுமாற்றானுமறிக. இன்னும் இதனை ௩௭௦-ம் சூத்திர உரை நோக்கியும் அறிந்துகொள்க.

ியல்] பொருளதிகாரம்

௨௮௮

" புலிவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்."

எனவும் இவை வெண்சீரொன்றியுங் கலித்தளை தட்டன. இனி, இவற்றை இயற்சீர் கொடுத்துச் சொல்லுங்காலுஞ் செப்பலோசை சிதையும்; என்னை?

1" காருருமு காருருமு காருருமு 'பாதிரி."

எனவும்,

" காருருமு காருருமு காருருமு காருருமு."

எனவும்,

" நரையுருமு காருருமு காருருமு காருருமு."

எனவும் இவை இயற்சீரான் வந்தும் வேற்றுச் சந்தப்பட்டுச் செப்பலோசை சிதைய நிற்குமென்பது, அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துக. இன்னோரன்ன பிறவும் பெரிதும் எஃகுசெவியும், நுண்ணுணர்வும் உடையார்க்கன்றி உணரலாகா.

" ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய்."

என்றக்கால், ஞாயிறு புலிவருவாய் என இயற்சீரின் பின்னர் நிரையசை வந்து,

" சீரியை மருங்கி னோரசை யொப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்." (௩௯௭)

என்பதனான், ஆசிரியத்தளையாயினும் அஃது ஆண்டுக் கலித்தளைப்பாற்படுமென்பது,

" அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி."

என்பதனான் உணரப்படும். இன்னோரன்ன பலவுமுள; அவை யெல்லாம் வரையறுத்து இலக்கணங் கூறப்படா, அவற்றை அவ்வாறு வேறுபடுத்துணர்த்துதல் அவ்வத்துறை போயினார் கடனென அடங்கக் கூறல்வேண்டி,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே."

என்றானென்பது.

உம்மையான் அடியினை வகுத்துணர்த்துதலுங் கொள்க; அது,

"நுதல இமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே." (அகம். கடவுள்)

என்புழி, இகலட்டு என்னுஞ் [1] சீர் எழுத்து முதலாக வின்டியவழியிற், குறித்த பொருளை முடிய [2] நாட்டும் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது இகலட்டுக் கையதென மேலடியொடு பொருள் கூடியும் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்தியதே யாம். இன்னும் இவ்விலேசானே [3] எழுத்தல்லோசையும் அசையொடுஞ் சீரொடுஞ் சேர்த்தி வகுத்துணர்த்தலுங் கொள்க; அவை,

[4] "கச்சீ றென்னுக் கண்டோட்டுப் பெண்மை."

என்றாற்போல்வன.

இனி, [5] அசைகளொன்றெனவும், மூன்றெனவும், அவையுஞ் சீரும் இசையொடு

செப்பலோசை

சேர்த்தி என

1. சீர் அடங்காது கூடியும்

இயைக்க.

வருத்துணர்த்தியது என

2. நாட்டியாபும் என்னும் முன் பாடம் பொருந்தாது. என்னை? யாப்பென்னும் உறுப்பாவது குறித்த பொருளை நாட்டுவதே என அதனை விளக்கவந்ததாதலின். (எ-ம் சூத்திரம் நோக்குக) ஆதலால் முடிய நாட்டும் யாப்பு என அதற்கடையாய் வந்ததென்க. பவானந்தம்பிள்ளை பதிப்பு நோக்குக.

3. எழுத்தலோசை—குறிப்பிசை.

4. சுஃறு என்பது—குறிப்பிசை. இஃது ஒலிக்குறிப்பு;

5. அகவலோசை மூன்றுவகை; ஏந்திசையகவல், தூங்கிசையகவல், ஒழுகிசையகவல் என்பன. ஏந்திசையகவல், நேரும் நேருமொன்றுவது. தூங்கிசையகவல், நிரையும் நிரையுமொன்றுவது. ஒழுகிசையகவல் நேரும் நிரையுங் கலந்து வருவது. செப்பலும் ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என மூன்றுவகைப்படும்.

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே." (௩௪௧)

எனப் பொருளுரைத்து, மற்றதனைக் கலித்தளையெனவுங் காட்டுப; அற்றன்று, [1] கடியாறு என்னுஞ் சீரின் உறழ்ந்த ஆசிரியவடியும் அதுவே வாய்பாடாக [2] வருமாகலின். மற்றதன்கண் துள்ளலோசை பிறந்ததாலெனின், — அவ்வீற்றுக்கண் [3] ஓரோமாத்திரை கொடுப்பத் துள்ளலோசை பிறந்ததாயினும் அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்திச் சொல்லுக எனவே அங்ஙனம் மாத்திரை நீட்டிச் சொல்லாது அகவலோசைபடச் சொல்லுகவென்பது இதனாற் பெற்றாமாகலின் அது பொருளன்றென்பது. (௧௧)

[சீராமாறும் அதன் வகையும்]

௩௨௪. ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

இது, முறையானே அசைபுணர்த்துச் சீராமாறுணர்த்துவான் தொடங்கி அவை இத்துணைப் பகுதியவென்பதூஉம் அவற்றுப் பொதுவிலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஈரசையானும் மூன்றசையானும் ஓரோர் சொற்கள் சீரியைந்திறுவன சீரென்று சொல்லப்படும் என்றவாறு.

---

1. கடியாறு என்பதை நிரைநேர்பு என்று கொள்ளாது றுகரத்தை நேராகக் கொண்டால் வெண்சீராக்கலாம். ஒருமாத்திரை யகர ஆகாரத்தை நீட்டுவதாற்றான் அங்ஙனங் கொள்ளின்றனர்போலும்.

2. வருமாகலின் என்பது—ஏடு.

ஆறுட வசனுணர்த்துந் தசனுணர்ந்தனர்.”

(மூத்தொள். கoச)

ளனவும்,

“வசையில்புகழ் வயங்கு வெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்.”

(பட்டின. க-உ) எனவும் இவை மூவகைச்சீர் வந்தன; பிறவுமன்ன.

மற்றுச் சீரென்றிதன்னைவெனின், — [3] பாணிபோன்று இசையம்பட நிற்றலான் அது [5] சீரெனத் தொழிற்பெயராம்; என்னை?

“சொற்சீர்த் திறுதல்.”

(சகூ௫) என்புழிச் [6] தொழிற்படுத்தோதினமையின்.

---

1. யாப்பினும்—யாத்தானும்.

2. பகுத்துப்பதமாகிய அற்றுச் சேறல்—பகுக்கப்பட்டுப் பதமாகும்படி அற்று அற்றுச் சேறல். பதமாகிய—பதமாகும்படி. இறுதல்—இறுதலென்றிருப்பினுமமையும். அது பின் இடையிடையிற்று வரல்வேண்டுமென்பதனானு மறியப்படும். அற்றுச் சேறலுக்கு எழுவாய்ச் சொற்கள். ‘பதமாக்கியவற்றுச் சேறல்’ என்று மிருந்திருக்கலாம்.

3. பாணி—தாளம்.

4. இலயம்—தாளவறுதி.
5. சீர்—சேர்த்தல்.
6.
தொழிற்படுத்தல்—சேர்த்து என்று தொழிற்படுத்தியது.



இனி, இயைதல் என்பது அசைவகை ஒன்றொன்றினொடு தொடர்ந்தவழியல்லாற் சீர்க்கு [1] அலகு பெறலாகாதென்றவாறு; எனவே, அவ்வாறு இலயம்பட நின்றவாயினும் புணர்ச்சி யெய்துமென்பதாம். மற்று, இற்றது என்றறிதன்மை? சீரென்பது தொழிற்பெயராகலின் [2] அது சீரியைந்து எனவே பெறுது மெனின்,—அன்னம் கொள்ளிற் சீரியைந்த தொடரெல்லாம் கூடி ஒரு சீராமென் செல்லுமாகலின் இடையிடை இற்றுவரல் வேண்டுமென்றற்கு அன்னங் கூறினானென்பது; [3] இதனானே ஓரோவழிப் புணர்ச்சி விகாரம் எய்தாமையுங் கூறினாம்.

3. இதனானே—இறுதவென்றதனானே. ஓரோவழிப் புணர்ச்சி விகாரமெய்தாமை என்றது, பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து என்ற உதாரணத்தில் பேர்ந்து என்பதன்கணுள்ள உகரம், எல்லாவிறுதியு முகர நிறையும் என்ற புணர்ச்சி விதியைப் பெறுமையல்ல. பெறுமாயின் முற்றுகரமாகக் கொள்ளப்பட்டு, வருஞ் சீராகிய சென்று என்ற சீரோடு சேர்ந்து பேர்ந்து சென்று என நின்று நேர் நிரைநேர் என மூச்சீராகவுங் கொள்ளப்படும். இற்று (பிரிந்து) நிற்றலினாலே அவ்விதி பெறுமல் குற்றுகரமாகவே கொள்ளப்பட்டு நாலெழுத்தடியாயிற்று என்றபடி. சார்ந்து என்பதற்கும் இவ்விதி ஒக்கும்.

4. எல்லாவிறுதியு முகர நிறையும் எழுத்ததிகாரம் ௪௦௮-ம் சூத்திரம். (நிறையும் என்றதனால் குற்றுகரம் முற்றுகரமாக வைக்கப்படும் என்பது கருத்து. இது ஒரு வழுவமைதி என்பர் பேராசிரியர். (செய். 315-ம் சூத்.)

5. எழுத்தடி—நாலெழுத்தடி என்றிருப்பது நலம். ஓரெழுத் துச்சீர் நான்காய அடி.

வேறுண்மையின், ஈரசைகொண்டும் எனவும், மூவசைபுணர்ந்
தும் எனவும் கூறினமையான் ஒருசீர் பலசொல் தொடர்ந்
ரினும் அவை ஒன்றுபட நிற்றல்வேண்டு மென்றவாறும்.
எனவே, உலகத்துச் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசை
யானுமன்றி வாராவென்பது பெற்றாம். இதனானே ஒரு சொல்
லைப் பகுத்துச் சீர்க்கு வேண்டுமாற்றான் வேறு சீராக்கியவழி
யும், அச்சீர்வகையானே வேறு சொல்லிலக்கணம் பெறுமென்
பதுங் கொள்க; அது,

“மம்மர் நெஞ்சினேன் ’ தொழுதுநின் றதுவே.” (அகம். ருக)

என்புழி, நின்றது என்னுஞ் சீர் குற்றுகரவீற்றுச் சொல்
லன்றே, அதனைப் பிரித்து அதுவே என வேறு சீராக்கவே-
அது முற்றுகரமாகி வேறுபடுதல் கண்கூடாக் கண்டுகொள்க;
மற்றார்க்கு ‘எனப்படும்’ என்றதென்னையெனின்,—[3] ஓரசையே
சீர்நிலை பெறுமென்றுமாயினும், அவை சீரென முன்னேதப்
படாவென்றற்கென்பது. மற்று [4] நாலசையானும் ஐந்தசையானும்
வருகின்றன அலங்கரியா கின்றனெனச் சொல் வருவன

1. உண்மையின் வலியுடைத்து என இயைக்க. வல்லொற்றுக் குற்றுகரத்தால் நாலெழுத்தடி. வேறுண்மையினென்றது 'போட்டுப் போட்டுப் போட்டுப் போட்டு' என வன்றொடர்க் குற்றுகரத்தான் வரின் டகரவுகரம் அடுத்த சீரோடு முற்றுகரமாக நின்று சேரமுடியாது வல்லொற்றுப் பிளவுபட்டுக் குற்றுகரமாகவே நிற்றல்பற்றி. எனவே 'பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து' என்பது அவ்வாறு பிளவுபட்டிசைத்துக் குற்றுகர வோசையை வன்றொடர்போலத் தாராதாயினும் வன்றொடர்க் குற்றுகரம் எப்படி நாலெழுத்தடியாகக் கொள்ளப்படுகின்றதோ அதுபோல இதுவும் இற்றுவருதலாற் கொள்ளப்படும் என்பது கருத்து.

2. தொழுதுநின்றதுவே என்பது தொழுதுநின் றதுவே எனப் பிளவுபட்டு வேறு சீராயவழி முற்றுகரமாகிப் புணர்ச்சியும் பெற்றது என்றபடி. நின்றதே என்பது குற்றுகரப் புணர்ச்சி. அதுவே எனப் பிரிந்து உடம்படு மெய் பெற்றது முற்றுகரப் புணர்ச்சி. இவ்விதி சிறுபான்மை.

3. ஓரசை—நேர்பு நிரைபு. இவை சீராயினும் சீரென் றெண்ணப்படா. ஓதில் அசைச்சீர் என விதந்தோதுப. முன்—னோர், இது வேண்டியதில்லை.

4. நாலசையானும் ஐந்தசையானும் வருஞ்சீர் என்றது பின்வரும் 'உண்ணாநின்றான்', 'அலங்கரியாநின்றான்' என்பவை அவை. உண்ணாநின்றான் இது நாலசை. அலங்கரியாநின்றான் இது ஐந்தசை. இரண்டுசொல் விழுக்காடுபட நிற்றல் என்பது



உளவாமெனின்,—அன்னவும் வருஞ் சொற்கள் சிலவாகலானும், அவைதாமும் இரண்டுசொல்விழுக்காடாய்ப் பிளவுபட்டு நிற்றலின் ஒரு சீரெனப்படாமையானும், அவை சீராக வருஞ் செய்யுளின்மையானும் என மறுக்க.

இனி [1] வஞ்சிப்பாவினுள் வந்த ஆசிரியவடியினை நாலசைச் சீர் காட்டல்வேண்டுவார் இருசீரடியாக, உரைப்பினும் அவை தூங்கலோசையிலவாகலானும் அவை சீரியைந்திறுதலின்மையானுங் கொள்ளானென்பது. ஈண்டு எனப்படும் என்பதேபற்றி [2] நாலசைச்சீர் கொண்டாரும் உளர். ஐயசைச்சீர் கொண்டாரைக் கண்டிலமென்க. (கஉ)

[ஈரசைச்சீர் இவையெனல்]

கூஉ௬. இயலசை மயக்க மியற்சீ ரேனை
யுரியசை மயக்க மாசிரி யுரிச்சீர்.

இது, நிறுத்தமுறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீருணர்த்துகின்றது.

---

‘உன்று.’ என்பது ஒரு சொல்லும், ‘நின்றன்’ என்பது ஒரு சொல்லும், ‘அலங்கரியா’ என்பது ஒரு சொல்லும், ‘நின்றன்’ என்பது ஒரு சொல்லுமாகப் பிரிந்து இரண்டுசொல் விழுக்காடு பட நிற்றலே. விழுக்காடு—விழுதல்.

1. இரு சீரடியான் வரும் வஞ்சிப்பாவினுள் நாற்சீரானும் ஆசிரியவடி மயங்கி வருதலுமுண்டு. அவ்வாசிரியவடியினை நாலசைச் சீராக்கி இருசீர் வஞ்சியடியாகவுங் காட்டலாம். அங்ஙனங் காட்டின் நாலசையாகப் பிரிக்கப்பட்ட அவ்விருசீரடி யானே வஞ்சிக்குரிய தூங்கலோசை பிறவாமையானும், அந் நாலசைச் சீராகக் காட்டிய இருசீரடி, ஆசிரியவடியைப் பிரித் துச் சேர்த்தமையினாலே இருசீரியைந்து ஒருசீராக நில்லாமை யானும் அந்நாற்சீரடியை ஆசிரியன் கொள்ளான் என்றபடி. நாற்சீர் கொண்ட ஆசிரியவடியினை இருசீரடியாகப் பிரிக்கலாம் என்பதற்கு உதாரணம் :—

"அகநகர் வியன் முற்றத்துச்
சுடர்நுதல் மடநோக்கின்
நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை."

என்னும் பட்டினப்பாலை யடிகளும் பின்வந்த அகவலடியிரண்டும் நாலசை வஞ்சிச்சீராகப் பிரிந்தற்கேற்றவாறு காண்க.

2. நாலசைச்சீர் கொண்டார் சிறு காக்கைபாடினியார்; அமுதசாகரர் இதனைப் பொதுச்சீர் என்பர்.



இ—ள்: நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரை என்பன நான்கும் இயற்சீர்; நேர்புநேர்பு நிரைபுநேர்பு நிரைபுநிரைபு நேர்புநிரைபு என்பன நான்கும் ஆசிரியவுரிச்சீர் என்றவாறு.

இவற்றுள் இயற்சீரைத் தேமா புளிமா கணவிரி பாதிரி எனவும், வாய்க்கால் வாய்த்தலை தலைவாய் ஆலமுகம் எனவும் (யா. வி. ப. ௯௯) பிறவும் இன்னோரன்ன வேறுவேறு காட்டுப. இனி வருவனவற்றிற்கும் இஃதொக்கும். ஆசிரியவுரிச் சீரை வீடுபேறு வரகுசோறு நடாமருது பாகுருகு எனவும் காட்டுப; அவற்றுக்குச் செய்யுள்:

"அவரே, 'கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே." (குறுந். ௨௧௬)

என்புழி,

"கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை."

என நான்கு இயற்சீரும் வந்தன.

"வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற் றுக் கிடப்ப."
(புறம். ௩௫)

எனவும்,

"வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்."
(முருகு. ௧0௬)

எனவும்,

"பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்."

எனவும்,

"தறுவுண் மன்னை ஆடகள் இறவுக்கலித்து." (அகம். ௬௬)

எனவும் வரும். இவற்றுள் [2] வீற்றுவீற்று எனவும், வசிந்து வாங்கு எனவும், பூண்டுகிடந்து எனவும், இறவுக்கலித்து எனவும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தவாறு கண்டுகொள்க. பிறவு மன்ன.

---

1. கேடில்—நேர்நேர்,—தேமா.
விழுப்பொருள்—நிரைநிரை,—கணவிரி.
தருமார்—நிரைநேர்,—புளிமா.
பாசிலை—நேர்நிரை,—கூவிளம்.
} இவை இயற்சீர் நான்கு.

2. வீற்றுவீற்று—நேர்புநேர்பு,—வீடுபேறு.
வசிந்துவாங்கு—நிரைபுநேர்பு,—வரகுசோறு.
பூண்டுகிடந்து—நேர்புநிரைபு,—பாறுகுருகு.
இறவுக்கலித்து—நிரைபுநிரைபு,—தடவுமருது.
} இவை ஆசிரியவுரிச்சீர் நான்கு.

வை இயற்சீர்போல [1] நேரேர் சொல்லாய் யாண்டும் நிற்ற லில பிறவெனின்,—அற்றன்று; 'தோன்றவாக்கு', 'இரங்கு க்கு' என்றாற்போல்வன உளவென்பது. [2] இனி, இவ்வியற் சீரும் இரண்டுசொற் கூடியும் ஒன்றாகியவழியே சீரெனப் படும்; அதுபோல [3] இவையும்,

“எல்லாத் தொகையு மொருசொல் நடைய.”

(தொல். சொ. ௪௨௦)

என்பதனான், ஒரு சொல்லாயினவெனினும் அமையும். மற்று ஒழிந்த இயற்சீருங் கூறாது ஆசிரியவுரிச்சீர் கண்டு வைத்த தென்னையெனின், — இவ்விருபகுதியவற்றை இயற்சீரென்றும் ஆசிரியவுரிச்சீரென்றும் [5] ஆளுமாகலின் என்றவாறு. (௯).

[உரியசைப்பின் நிரையசை வரும் சீரும் உரிச்சீரெனல்]

௨௪. முன்னிரை யுறினு மன்ன வாகும்.

இஃது, இயலசையும் உரியசையும் மயங்கியவாவற்றுள் ஈரசைச்சீர் கூறுகின்றது.

இ—ன் : "உரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்" என
மொழின்ற அதிகாரத்தான் அவ்வுரியசைப்பின்னர் நிரையசையுநி
ற்பின் அவ்வுரியசை மயக்கமாகி ஆசிரியவுரிச்சீராம் என்றவாறு.'

அவை நேர்புநிரை நிரைபுநிரை என வரும். இவற்றை
க்கொடி காஅத்தலை, குளிறுபுலி விரவுக்கொடி எனவும் பிற
வற்றுமாங் காட்டுப; அவையெல்லாம் அறிந்துகொள்க.

---

## 1. ஓரோர் சொல்—தனித்தனிச் சொல்.

2. இனி இவ்வியற்சீர்தாமும் இரண்டுசொற் கூடிய மொன்
றியவழியே சீரெனப்படும் என்றது புளி என்ற சொல்
லும் மா என்ற சொல்லுமாகிய இரண்டு சொல்லுங் கூடிப்
புளிமா' என ஒரு சொன்னீர்மைப்பட்டு நின்றவழியே ஒரு
சீரெனப்படுவது என்றபடி. அவ்வியற்சீர்போலவே உரிச்சீரும்
மூசொற் கூடி ஒரு சொல்லாய் நின்றவிடத்துச் சீராம் என்க.

3. இவையும்—உரிச்சீரும்; தொகைச் சொல்லெல்லாம் ஒரு
சொன்னீர்மையாகக் கொள்ளப்படும் என்றபடி.

4. ஒழிந்த இயற்சீர் என்றது நேர்புநேர், நிரைபுநேர்,
நேர்புநிரை, நிரைபுநிரை என்பவற்றையும் இவை மாறி வரு
வனவற்றையும். அடுத்த சூத்திரங்கள் பார்க்க.

5. ஆசிரியன் ஆளுமாகலின் ஏன்க.

37



மற்று, இயலசையும் உரியசையும் விரவி இயற்சீரான

2. அசைதிரிந்து நிரையாகாதென்றது—போதுபூ என்றவழி குற்றுகரமாகிய துவ்வும் நெடிலாகிய பூவும் இயைந்து நிரையாகாது நேர்பு என நின்றபடியே நேரைமாத்திரம் நிரையீறாக வைக்கப்படும் என்பது கருத்து. நச்சினார்க்கினியம் நோக்குக.

3. எழுதளை யென்றது—ஆசிரியத்தளை இரண்டு, வெண்டளை இரண்டு, கலித்தளை ஒன்று, வஞ்சித்தளை இரண்டு.

4. வேறுவேறுபட்ட அசை என்றது இயலசையும் உரியசையும் சேர்ந்து வருதல்பற்றி. அசைச்சீர் என்றது ஈண்டு இயலசைச்சீரை. இயலசைச்சீர் நான்கனுள்ளும் நிரையீற்றுச் சீருள் நேர்பு நிரைபு முதலாகவரும் நிரையீற்றையும் நேரீற்றையும் அடக்கற்க என்றபடி. அசைச்சீர் என்பது இயலசைச்சீர் என்றாயினும் இயற்சீரென்றாயினும் இருத்தல்வேண்டும். முன்னும் பின்னும் இயலசை என்றே உரையுள் ஆளுதல் நோக்குக. இதற்கு—இயலசைச் சீர்க்கு. இஃது உரியசைபெற்று வருஞ்சீர்.

5. நீத்துநீர்—போதுபூ. நிவந்துசென்—விறகுதீ.

6. ஆசிரிய உரிச்சீரென்றது—நீடுகொடி, குளிறுபுலி என்னும் நிரையீற்றுச் சீரிரண்டையும். ஒருங்கியைதல் என்றது அவ்வாசிரிய உரிச்சீர் இரண்டும் உரிச்சீரென ஒருங்கியைதல்போல இவ்வியற்சீரிரண்டும் இயற்சீரென ஒருங்கியைதல்.



இது, மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் இயலசை உரியசை மயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கு இயற்சீரு முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: [1] இயலசை இரண்டன்பின்னும்
உரியசை இரண்

கடாஅ எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து கூவிளமாம்; என்னை? [4]கடாஅ என்புழி அளபெடையாகாரம் பிரிந்தாக் குறிலிணையாயினாற்போல [5]ஆகாரத்துப் பின்னின்ற அகரமுங் குற்றகரமுங் குறிலிணையெனப்பட்டமையின் என்பது. ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும். ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரியாம். [6]படாஅ என மூவெழுத்துப் புளிமாவாம். படாஅகை என நாலெழுத்துக் கணவிரியாம். ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறும். ஆஅவது என மூவெழுத்துப் பூமருது. புகாஅர்த்து என்பது கடியாறு. விராஅயது என்பது மழகளிறு. இவை ஓரோர் சொல்லாகி நின்று எட்டியற்சீரையும் அளபெடை வந்தவாறு.

1. சீர்நிலை என்றது ஆ அ என்புழி நேர்நேர் எனச் சீர் கோடலை.

2. எழுத்துநிலை என்றது ஆ அ என்புழி அகரம் அளபெடை எழுத்தாகவே கொள்ளப்பட்டு அலகுபெறாது நிற்றலை. எனவே ஆ அ என்புழி அகரம் ஆகாரத்துள் மெய்போல் ஒடுங்கிநிற்ப ஆ என்பதே அசையாகக் கொள்ளப்பட்டு நிற்கும் என்பது கருத்தாயிற்று. அசைநிலையாகல்—ஆஅ என்புழி அகரம் ஆகாரத்தோடு சேர்த்து ஒற்றுப்போல வைக்கப்பட்டு நேரசையாகவே (கொள்ளப்பட்டு) நிற்றல்.

3. ஈரசைச்சீர் பதினாறுவன:—இயற்சீர் நான்கு, உரிச்சீர் நான்கு, உரியசைமுன் இயலசை மயங்கின சீர் நான்கு. இயலசைமுன் உரியசை மயங்கின சீர் நான்கு.

4. கடாஅ—நிரைநேர்: அகரம் தனியே வந்து நேரசையாகும். யாஅது—நேர்நிரை. யா—நேர். அது—நிரையாகக் கொள்ளப்படும். ஞாயிறுபோல.

5. ஆகாரத்துப்பின்னின்ற—யா என்பதிலுள்ள ஆகாரத்துப் பின்னின்ற என்க.

என நேர்நிரைப்பின் முற்றுகரம் வந்து நேர்பும் நிரைபுமாம் ஆகலின் அவற்றையும் ஆசிரியவுரிச்சீரென்றானெனின்,— அன்றாகவாறு; அன்னவும் அளபெடையான் நேர்பசை நிரைபசை கொள்வாரும் அளபெழுந்த குற்றெழுந்து வருமெழுத் தொடு கூட்டி,

"[3] முதலிலை யளபெடை நேர்நேர் நிரைத்து
* இடையிலை யளபெடை நிரைநேர் நிரைத்து."

---

1. தேஎம்—நேர்நேர். போஓரி—நேர்நிரை. குராஅம்—நிரைநேர். குடாஅரி—நிரைநிரை.

2. அவை—மேற்கூறிய அளபெடை. தனிநிலை—ஆஅ என்பனபோல வரு மளபெடை.

3. முதலிலையளபெடை—தேஎம்—நேர்நேர். தனிநிலை என்றும் பாடம்.

*. இடையிலை என்பது இருநிலை என்று இருத்தல்வேண்டும். அங்ஙனம் பாடங்கொள்வர் யாப்பருங்கல விருத்திகாரர். கடையிலையென்றுமிருக்கலாம். இங்ஙனம் கோடலின் தூஉ—நேர்பு என்றும், கெழூஉ—நிரைபு என்றும் கொள்ளல் பொருந்தாது யனதுபடி.



என்பவாகலின் அளபெழுந்தமொழி நேர்பும் நிரைபுமாகாவென்

வந்தன." (௩௧௬)

என்படாமையானும், நேர்பசை நிரைபசையாகாவென்பது ; அற்றன்றியும், அவை நேர்பசை நிரைபசையாதல் ஒருவகையான் நேர்ந்தானெனினும் அவை நாலுத்தலை விரவுக்கொடியென்னுஞ் [5] சீர்தற்கு இழுக்கென்னையெனவும்,

"திரைபிறு கலையு மசிரிய வுரிச்சீர்."

எனவோதி ஆசிரியவுரிச்சீர் எட்டென்பான்போல விதந்தோதிப் பயந்ததென்னையெனவும் கூறி மறுக்க.

இனி ஒருவர் :

[4] "தாஉமணி கெழூஉமணி."

---

1. ஓரோர்கால்—ஓரோரிடத்து. வேண்டியபோது.

2. அவை—காசு, பிறப்பு என்பன.

3. நாலுத்தலை என்பதில், உகரம் புணர்ச்சிபற்றி வந்தது. அளபெடை எழுத்து இயல்பாக வந்தது என்பது கருத்து.

4. இருவகை யுகரமு மியைந்துவரின் அவை நேர்புநிரைபு ஆகும். இயைந்து வருதல்—ஒரு சொன்னீர்மைப்பட்டு வரல். அளபெடை ஒரு சொன்னீர்மைப்பட வாராது பிரிந்துவரும். ஆதலால் ஆகா என்க.

5. சீராதற்கு இழுக்கென்னை என்றது அவற்றுளடங்கி உரிச்சீராகுமன்றி இவையும் (அளபெடைச் சீரும்) வேறுகி எட்டென்று விதந்து கூறலாற் பயனில்லை என்றபடி.

6. தூஉமணி—நேர் நிரை நேர்.
கெழூஉமணி—நிரை நிரை நேர். இவை வெண்சீராம்.



ன்பன அளபெடை அசைநிலையாகியும் ஆகாதும் வருதலின் வண்சீர்க்கும் இருநிலைமை கோடற்கென்ப. அது, நீடுகொடி னிறுபுலி என்பனவற்றிற்கும் [1] ஒக்குமாதலானும், அசைபுஞ் ரும் இசையொடு சேர்த்துங்கால் அங்ஙனம் அசையாகாமை ரானும் அது பொருந்தாதென்பது. இங்ஙனஞ் சீர்நிலை யெய்தி ன்ற அளபெடைகளெல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது ரயினவும், செய்யுட்கே உரியவாகிச் செய்யுள் செய்யும் புலவ ரற் செய்துகொள்ளப்படுவனவுமென இருவகைய; அவ்விரு திறத்தவும்,

"நீட்டம் வேண்டி னவ்வள புடைய." (தொ. எழு. சு)

என்னும் இலக்கணத்துட்பட்டு அடங்கின.

இனி, அவற்றுள் வழக்குக்குஞ் செய்யுட்கும் பொது

கியபுகளை இயற்கையளபெடையென்றும், செய்யுட்குப் புலவர் செய்துகொண்டதனைச் செயற்கை யளபெடையென்றும், பெயரிட்டு வழங்கப்படும். [2] அவ்விரண்டனுள்ளும் என்று [1] அளபெடை அசைநிலை யாகலு முரித்து [1] எனப்பட்டது இயற்கை யளபெடையொன்று பெயரிட்டு [3] வழங்கப்படும். செயற்கை யளபெடை சீர்நிலையாதல் செய்யுட்கே யுரியவாறுபோல இயற்கை யளபெடை அசைநிலையாகலுஞ் செய்யுட்கே யுரியதென்பது.

ஆகலுமுரித்து என்ற உம்மையான் [4] அவையிரண்டானும் அவ்வாற்றானும் அசைநிலையாகப் படாது புணர்ச்சிவகையான் வந்த அளபெடைக்கண்ணும் பொருள் புலப்பாட்டிற்கு உரியவாகச் செய்யுள் செய்யுமிடத்தும் அவ்வாறு அசைநிலையாகப் பெறுமென்றவாறு.

---

1. ஒக்குமென்றது நெடிலொடியையும் குறிலிணையையும். அவ்வளவே முறையே நேர் நிரை நேர். நிரை நிரை நேர் என்று கொள்ளலாம் என்றபடி. இசைபோடு சேர்த்துங்கால் [illegible] என்பதன் மகரம் பிரிந்து உகரத்தொடு சேராது என்றபடி.

2. அவ்விரண்டு — இயற்கையளபெடை, செயற்கையளபெடை.

3. வழங்கப்படும் என்பது வழங்கப்படுவது என்றுதல், வழங்கப்படுமளபெடை என்றுதல் இருத்தல்வேண்டும்.

4. அவையிரண்டு—இயற்கை, செயற்கை. அவ்வாற்றான் என்றது, வழக்கிற்குஞ் செய்யுட்குமுரியவாற்றான் என்றபடி. அவ்வாற்றானும் எனவும் பாடம். ஆகலும் உரித்து என்பது தொட்டுள்ள வாக்கியத்தில் யாதோ பிழையுளது.

இ—ள்: ஒற்றளபெடுக்காலும் உயிரளபெடைபோலச் சீர்நிலையெய்தலும் ஓரசையாய் நிற்றலும் உரித்து என்றவாறு.

ஒற்றளபெடுப்பினும் எனவே ஒற்றுக்கள் அளபெடுத்து நிற்றற்கு உரியன; உரியவழி எல்லாம் [1] வரையாது கொள்ளப்படும். அவை வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் [2] இருவாற்றான் ஒருசொற்கு உறுப்பாய் நின்ற ஒற்றே [3] அளபெழிலும், பின் [4] தோன்றிக்கொள்ளப்பட்ட ஒற்றளபெழிலுமென இருவகைப்படும்.

"அக்தில ஜுவலை தெழுந்துயுறந் திசைக்கும்."

(தொ. எழு. ௧௦௨)

என்பது சொற் [5] குறுப்பாய் நின்றது.

"ஆறு தேரொடு கான லக்தே." (குறுந். ௯௭)

என்பது, பின்றோன்றிக் கொண்ட புள்ளியெனப்படும். அத்தனை மொழிப என்றதனான், ஒற்றளபெடையும் உயிரளபெடை போலக் காலும் தன்னையொற்றிய எழுத்தும் கூடி. அளபெடை மொழியாகச் சீர்நிலையெய்தல் பெரும்பான்மை [6] யாகலானும், அவை இயற்கையளபெடையாகியவழி அசைநிலையாதல் சிறுபான்மையென்பதூஉம், உயிரளபெடை முதற்கணின்ற நெட்டெழுத்துப்போல ஒற்றளபெடை முதற்கணின்ற [7] குற்றெழுத்தும்,

"தனிக்குறில் முதலசை மொழிசிதைத் தாகாது." (௫௧௧)

1. வரையாது—நீக்காது.

துன்ன்னென்றது, இன்ன்னென்றது என வரும். பிறவுமன்ன. இவை, செய்யுளகத்தல்லது [1] பரவை வழக்கினுள் வாராவென் பாருமுளர்; அவரறியார்; செய்யுட்குப் புலவர் செய்துகொண்ட அளபெடை பின்னர் அசைநிலையாதற்கு என்னை காரணமென் மறுக்க. மற்று,

“அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.” (௩. ௨௧)

என வரையாது கூறவே இச்சூத்திரமும் அடங்குமாகலின் இது மிகையாம் பிறவெனின்,—அற்றன்று; [2] எழுத்தோத்தி னுள் ஒற்றளபெடுக்குமென்பது கூறுமையாயின் வேறு கூறினான்; அல்லதூஉம், உயிரளபெடையின் வேறுபட்டதோர் இலக்கண முடைமையின் இதனை வேறு கூறினானென்பது; என்னை? பனுஅட்டு என்றவழி உயிரளபெடை, கடிபாஅ என்னுஞ் சீரயலாதுபோலாகாது கொங்ங்கு குரங்ங்கு எஃஃகு பின்ன்னு என அளபெழுந்த [3] இருவகை யுகரவீற்றுச் சொற்கள், போரேறு கடிபாஅ என்னுஞ் சீரானும், ஞாயிறு வலியது என்னுஞ் சீரானுமாகாது இருவகை யுகரமொடு இயைபின்றி வருதலானும் அல்லவ வண்டு வாரு என்னும் உரியசைச்சீர்ப் பாற்பட்டு அசை நிலையாகுமாதலானும், இருவகையுகரமோ டியையாதவழிக்,

“ கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்.”

(மலைபடு. ௩௫௨)

எனவும்,

“ கஃஃ றென்னுங் கல்லதர்.”

எனவும் சீர்நிலை பெறுதலவாறுமென்பது. எனவே, இயற்கை யுயிரளபெடைபோலச் செயற்கையொற்றளபெடையும் ஓரோவழி [4] ஓசையுட் சிதைக்கப்படாதாயிற்று. இதனுனே உயிரளபெடைபோல ஒற்றளபெடை [5] வருகின்ற எழுத்தோடு கூடி

---

1. பரவை—உலகம்.

2. எழுத்தோத்து—எழுத்ததிகாரம்.

3. இருவகையுகரம்—குற்றியலுகரம், முற்றியலுகரம்.

4. ஓசை சிதைக்கப்படாதாயிற்று எனவே எழுத்து அலகு பெறுமென்பதாம். ஓசையுள் எனவும் பாடம்.

5. உயிரளபெடைபோல வருகின்ற எழுத்தோடு கூடி நிரையசையாய் வாராது என்றது—கொங்கு என்புழி பின் வருங் குற்றுகரத்தோடு கூடி நிரையசையாய் வாராமையை. படாஅகை என்பதில், வருமெழுத்தோடு சேர்ந்து உயிரளபெடை அகரம் நிரையாய் நிற்பதுபோல, இது இல்லாதுஎன்றபடி.



யாகாதென்பதாம், ஈர்க்கு பீர்க்கு என [1] ஈரொற்று நின்ற வேறோரசையாகாதவாறுபோல ஒற்றளபெடையும் ஓரோ அசைநிலை பெறுமென்பதூஉம் கூறினானும்.

இனி, இயற்கையொற் றளபெடை சிறுபான்மை வருமாத இஃது அசைநிலையாதலே பெரும்பான்மையாதலேநோக்கி டறிக்கான் எனவும் அமைபுமெனக் கொள்க. (கஅ)

சர்க்கு பீர்க்கு என்பவற்றில் ஒற்றிரண்டுங் கூடி வேறு
ராதவாறுபோல கொங்ங்கு குரங்ங்கு என்னும் ஒற்
டையும் ஒரோவழி வேறோர் அசையாகாது என்பதாம்,
லபெறாது என்பது வேறோரசையாகாது என்றிருத்
ண்டும். பெறும் என்றுமிருக்கலாம்.

இஃது அசைநிலையாதல் என்றது இஃது சீர்நிலையாதல்
ருக்கவேண்டும். 'தானும் தன்னையொற்றிய எழுத்துஞ்
சீர்நிலையாதலே பெரும்பான்மை' என்று இச் சூத்திர
யுள் முன்னும் வரல் நோக்குக. இஃது—ஒற்றளபெடை.



அளபெடைக்குச் செய்யுள் :—

[1] "காமன்கண் ணென்று [2] கருவூரார் பாராட்டத்
தாமந்தாழ் கோதை வருவாளே—யாமும்
[3] மிருகுடங்கை [4] யானெறிரே கூப்பித் தொழுக்கண்
டொருகுடங்கை யாயின கண்.'
(சிலப்—மேற்.)

இதனுட் 'காமன்கண்' எனவும் 'கருவூரார்' எனவும்

...றுபடியான் இழியவைத்து, முதற்கணின்ற நான்கசையை இடைநின்ற நான்கனோடு ஓரோவொன்று நான்காகக் கூட்டி, ...றுதி நின்ற நான்கசையோடும் ஓரோவொன்றற்குப் பதினா...

1. நேர்பு முதலிய நான்கையும் மூன்றுபடியான் இழிய வைத்தலாவது:-

| முதல் (க) | இடை (உ) | கடை (ங) | |
|---|---|---|---|
| 1. நேர் | நேர் | நேர் | என வைத்தல். |
| 2. நிரை | நிரை | நிரை | |
| 3. நேர்பு | நேர்பு | நேர்பு | |
| 4. நிரைபு | நிரைபு | நிரைபு | |

| முதல் | இடை |
|---|---|
| (1) நேர் | 1. நேர் |
| (1) நேர் | 2. நிரை |
| (1) நேர் | 3. நேர்பு |
| (1) நேர் | 4. நிரைபு |

முதல் நேரொடு இடை நான்குங் கூடின.

| | முதல் | இடை |
|---|---|---|
| 2. | (2) நிரை | 1. நேர் |
| | (2) நிரை | 2. நிரை |
| | (2) நிரை | 3. நேர்பு |
| | (2) நிரை | 4. நிரைபு |

முதல் நிரையொடு இடை நான்குங் கூடின.

| முதல் | இடை |
|---|---|
| (3) நேர்பு | 1. நேர் |
| (3) நேர்பு | 2. நிரை |
| (3) நேர்பு | 3. நேர்பு |
| (3) நேர்பு | 4. நிரைபு |

முதல் நேர்பொடு இடை நான்குங் கூடின.

| | முதல் | இடை |
|---|---|---|
| 4. | (4) நிரைபு | 1. நேர் |
| | (4) நிரைபு | 2. நிரை |
| | (4) நிரைபு | 3. நேர்பு |
| | (4) நிரைபு | 4. நிரைபு |

முதல் நிரைபொடு இடை நான்குங் கூடின.

இவை பதினாறாயினவாறு காண்க.

நிரை நேர், நிரை நேர்பு நேர், நிரை நிரைபு நேர் எனவும்;
நேர்பு நேர் நேர், நேர்பு நிரை நேர், நேர்பு நேர்பு நேர், நேர்பு நிரைபு நேர் எனவும்; நிரைபு நேர் நேர், நிரைபு நிரை நேர்,
நிரைபு நேர்பு நேர், நிரைபு நிரைபு நேர் எனவும்; இவை
நேரீற்று மூவசைச்சீர் பதினாறு. இவற்றுள் வெண்சீரென
மேற்காட்டியவை நான்குமொழிக்க ஒழிந்த பன்னிரண்டும் வஞ்சி
யுரிச்சீர். இனி நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வருமாறு:—
நேர் நேர் நிரை, நேர் நிரை நிரை, நேர் நேர்பு நிரை, நேர்
நிரைபு நிரை எனவும்; நிரை நேர் நிரை, நிரை நிரை நிரை,
நிரை நேர்பு நிரை, நிரை நிரைபு நிரை எனவும்; நேர்பு
நேர் நிரை, நேர்பு நிரை நிரை, நேர்பு நேர்பு

நிரை, நேர்பு
நிரைபு நிரை எனவும்; நிரைபு நேர் நிரை, நிரைபு நிரை
நிரை, நிரைபு நேர்பு நிரை, நிரைபு நிரைபு நிரை எனவும்;
நிரைபீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேர் நேர் நேர்பு, நேர்
நிரை நேர்பு, நேர் நேர்பு நேர்பு, நேர் நிரைபு நேர்பு எனவும்;
நிரை நேர் நேர்பு, நிரை நிரை நேர்பு, நிரை நேர்பு நேர்பு, நிரை நிரைபு நேர்பு எனவும்; நேர்பு நேர் நேர்பு, நேர்பு

சீரோடும் பின்னின்ற நேர் நிரை நேர்பு நிரைபு முதலிய நான்கையும் தனித்தனி கூட்ட 4×16=64 ஆகும் என்றபடி. அது பத்துநான்கும் பின் கூறப்படுமாறு காண்க. இறுதியின்ற நால் கசையோடும் உறழ என்க.

1. நேரீறு நான்காவன :—

நேர் நேர் நேர்
நேர் நிரை நேர் | இவை நான்கும் வெண்சீர்.
நிரை நேர் நேர் | இவை வஞ்சிக்கு வரா.
நிரை நிரை நேர்

விழுக்கோட்டுமெய் வியல்விசும்புதோய்த்
தோங்குமுன்னர்க் காம்புகழீயப்
பாய்ந்துசென்றுசென் றூங்குநவிபுநின்
றெதிர்த்துமீண்டாங் கதிர்த்துக்கரைகொன்
றலங்குகோட்டுமுத் திலங்குநிலவுச்செய்
தார்இரைக்காவிரி பரக்குந்தண்டலை
ஞாறுசேரினை பேரிசைவளவன்
சுரம்படர்ந்து வருந்துவதெவனோ
நிரம்பாவாழ்க்கைப் பாணர்க்குறீஇ."

---

நேரீறு பன்னிரண்டாவன :—

| | |
|---|---|
| மேற்கோட்டுநீர்—நேர் நேர்பு நேர் 1<br>கீழ்ப்பரந்துதன்—நேர் நிரைபு நேர் 2 | நேர் முதல் நேரீறு 2 |
| விழுக்கோட்டுமெய்—நிரை நேர்பு நேர் 1<br>வியல்விசும்புதோய் —நிரை நிரைபு நேர் 2 | நிரைமுதல் நேரீறு 2—4 |
| ஓங்குமுன்னர்—நேர்பு நேர் நேர்<br>காம்புகழீய—நேர்பு நிரை நேர்<br>பாய்ந்துசென்றுசென்—நேர்பு நேர்பு நேர்<br>றூங்குநவிபுநின்—நேர்பு நிரைபு நேர் | நேர்பு முதல் நேரீறு 4 |
| றெதிர்த்துமீண்டாங்—நிரைபு நேர் நேர்<br>கதிர்த்துக்கரைகொன்—நிரைபு நிரை நேர்<br>றலங்குகோட்டுமுத்—நிரைபு நேர்பு நேர்<br>திலங்குநிலவுச்செய்—நிரைபு நிரைபு நேர் | நிரைபு முதல் நேரீறு 4 |

இவை 12-ம் நேரீற்று வஞ்சியுரிச்சீர்.

“ சிற்றமிகுப்பு செல்வினஞ்சிறந்து
கூற்றெருத்துவிரைபு கோன்குறித்துருமின்று
புலிப்போத்துலவு பொலங்கொடியெடுத்துப்
புகலேற்றுமலைத்து பகையரசுதொலைத்து
வேந்துமீதணிபு போந்துபடத்தொடுத்து
வீற்றுவீற்றுப்புணர்ந்து வேற்றுச்சுரும்பிளைந்து

| | |
|---|---|
| கரைபொய்யாது—நிரை நேர் நேர்பு<br>நிறைவளஞ்சான்று—நிரை நிரை நேர்பு<br>வரையாதுதந்து—நிரை நேர்பு நேர்பு<br>பலாப்பழுத்துதிர்ந்து—நிரை நிரைபு நேர்பு | நிரை முதல் நேர்பீறு 4 |
| பரம்புகொள்ளாது—நேர்பு நேர் நேர்பு<br>வீங்குசுடர்நீண்டு—நேர்பு நிரை நேர்பு<br>வித்துநாறுவாய்த்து—நேர்பு நேர்பு நேர்பு<br>மூத்துக்கரும்புபூத்து—நேர்பு நிரைபு நேர்பு | நேர்பு முதல் நேர்பீறு 4 |
| வரம்புகொள்ளாது—நிரைபு நேர் நேர்பு<br>நிரம்புபெருங்கூட்டு—நிரைபு நிரை நேர்பு<br>விசும்புநீள்குராஞ்சு—நிரைபு நேர்பு நேர்பு<br>துயின்றுபெயர்ந்துபோந்து—நிரைபு நிரைபு நேர்பு | நிரைபு முதல் நேர்பீறு 4 |

நிரைபீறு பதினாறும் வருமாறு:—

| | |
|---|---|
| எ. சிற்றமிகுப்பு—நேர் நேர் நிரைபு<br>செல்வினஞ்சிறந்து—நேர் நிரை நிரைபு<br>கூற்றெருத்துவிரைபு—நேர் நேர்பு நிரைபு<br>கோன்குறித்துருமின்று—நேர் நிரைபு நிரைபு | நேர் முதல் நிரைபீறு 4. |
| புலிப்போத்துலவு—நிரை நேர் நிரைபு<br>பொலங்கொடியெடுத்து—நிரை நிரை நிரைபு<br>புகலேற்றுமலைத்து—நிரை நேர்பு நிரைபு<br>பகையரசுதொலைத்து—நிரை நிரைபு நிரைபு | நிரை முதல் நிரைபீறு 4 |
| வேந்துமீதணிபு—நேர்பு நேர் நிரைபு<br>போந்துபடத்தொடுத்து—நேர்பு நிரை நிரைபு<br>வீற்றுவீற்றுப்புணர்ந்து—நேர்பு நேர்பு நிரைபு<br>வேற்றுச்சுரும்பிளைந்து—நேர்பு நிரை நிரைபு | நேர்பு முதல் நிரைபீறு 4 |

கன்றுகால்கொய்த்து நன்றுகுரல்படைத்துச்
செறிந்துதாள்நுகடாத்து விரைந்துமகிழ்ந்துதொகைந்து
பனைக்கமழாரமேறி நயக்கச்சூடிய
வெல்வேற்சென்னி வென்னியந்துறைநுழன்
பாடுபெறு பரணியுள்பாவலே
பாடசீர்தாடிய நாடுகெழுவேந்தே."

இதனுள், நிரையீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் முறை புணர்ந்து வந்தன. (௨௦)

[வஞ்சிச்சீர் ஏனைப்பாவுள் பெரும்பாலும் வாராவெனல்]

௩௩௪. தன்பா வல்வழித் தானடை வின்றே.

இஃது, அவற்றைப் பாவிற்குரிமை கூறுகின்றது.

இ—ள்: இவ்வாறுபட்ட வஞ்சியுரிச்சீரும், தன்பாவினு ளல்லது ஆசிரியம் வெண்பாக் கலியினுள் வாரா என்றவாறு.

சிறுபான்மையான் அவ்வி மூன்றற்குஞ் செல்லுதலும். [1] இவை ஆசிரியவுரிச்சீர் ஈரசைச்சீராக்குமாறுபோல, ஆசிரிய வோசையும் ஆக்குங்கொல்லெனின்,—ஆக்காவென்பது இதனாற் பயன். (௨௧)

[ஆசிரிய உரிச்சீரும் வெண்பா உரிச்சீரும் வஞ்சிப்பாவையாக்குமெனல்]

௩௩௫. [2] வஞ்சி மருங்கி [3] னெஞ்சிய வுரிய.

இது, மற்றைச்சீர் பாவிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: வஞ்சியுரிச்சீர் பிற பாக்களை ஆக்காதவாறு போலாது ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் இவ்

வஞ்சிப்பாவினையாக்கும் என்றவாறு.

உரிச்சீர் மேலதிகாரமாகலான் வஞ்சிய என இவ்விரண்டனையுமே கொண்டாமென்பது. வஞ்சியது பாவினை வஞ்சி என்

களிறுகால்கொளர்ந்து—நிரைபு நேர் நிரைபு
குளிறுகுரல்படைத்து—நிரைபு நிரை நிரைபு
சொரிந்துதூங்குகடாத்து—நிரைபு நேர்பு நிரைபு
விரைந்துமலர்ந்துதொலைந்து—நிரைபு நிரைபு நிரைபு
} நிரைபு முதல் நிரை பிற 4

இவை அறுபதும் வஞ்சியுரிச்சீர்.

1. இவை ஆக்குங்கால் எனின்? ஆக்கா என இயைக்க. இவ்வஞ்சிக்குரிய அறுபது சீரும் ஆசிரிய முதலிய ஏனைப் பாக்களில் வாரா என்றபடி.

2. வஞ்சி—வஞ்சிப்பா.

3. எஞ்சிய—வஞ்சி ஒழிந்த வெண்பாவும் ஆசிரியமும்.



றான் ஆகுபெயரான். மற்றுச் சீர் கூறும்வழிப் பாக் கூறுவ தென்னையெனின்,—அப்பாவினை யாக்குவன சீராகலின் [1] சீரிலக்கணம் எய்துமென்பது. அவ்வாறாமாறு:

“வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவின்.” (பட்டின. க-ங)

எனக் [2] தன்சீர் வரத் தூங்கலோசை பிறந்தது.

“[illegible]” (பொருந. கஅக)

என்பதாம்.

“புட்டேம்பப் புயன்மாறி.” (பட்டின. ச)

என்பதும் வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசை பிறந்தது.

4. புள்ளுந் துயின்று—, நேர்பு நிரைபு,—
(ஒற்றொடுந் தோன்றி நின்றது)
புலம்பு கூர்ந்து—நிரைபு நேர்பு. } ஆசிரிய உரிச்சீர்.



இ—ள்: வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஆசிரியப்பாவிற்கு ஒப்பவரும் நிலை இல என்றவாறு.

'இன்பா நேரடி' என்பது ஆசிரியவடியென்றவாறு. ஒருங்கு என்றதனான் இயற்சீராகிய தன்சீரேபோல வெண்சீரும் வாரா தென்பதாம். இயலசை மயக்கினவே இயற்சீர் எனப்படுவன எனவும் உரியசை மயக்கினவே ஆசிரியவுரிச்சீர் எனப்படுவன எனவும் [1] முன்னர்ச் சொல்லிப்போந்தாராதலின் ஈண்டு உரியசை மயக்கத்தினவே ஆசிரியவுரிச்சீரென்றான். [2] எனவே நீடுகொடி குளிறுபுலி என்னுமிரண் டாசிரியவுரிச்சீரும் ஆசிரியத்து வந்து அடிப்புறழுமென்பது ஈண்டுக் கொள்ளப்படும்.

'முன்னிரை யுறினு மன்ன வாகும்' என்ற மாட்டேற்றான் [3] இயற்சீர்த்தன்மை சிறுபான்மைவகையான் எய்துவித்ததூஉம் இப்பயன் நோக்கியாயிற்று. இக்கருத்து நோக்கிப்போலும்,

'கலித்தளை மருங்கிற் கடியவும் படா' என்றமையின் [4] இறந்தது தழீஇயிற்றுமாமென்பது. இனி ஒரு சாரார் வெண்சீரும் ஆசிரியப்பாவினுள் வருங்கால் இயற்சீரினையிடையிட்டன்றி உடன் வியைந்து வாராவென்ப. அங்ஙனங் கொள்ளிற் கட்டளையடிக் கண்ணும் ஆசிரியவடியுள் வெண்சீரும் வந்து நடைபெறு மென்றாகும். அல்லாதவடிக்காயின் அது [5] போக்கி,

"இயற்சீர் இலையா வருவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய வடிக்கே."

என்புழிக் கூறப்படுமென்பது. ஈண்டு [6] நேரடிக்கென்பது கட்டளையடிக்கென்றவாறு. (உக)

1. முன்னர் என்றது—கஉ-ம் சூத்திரத்தை.

2. நேர்புநேர்பு; நேர்புநிரைபு; நிரைபுநேர்பு; நிரைபுநிரைபு; என்னும் உரியசை யாக்கலாகிய ஆசிரியவுரிச்சீர் நான்கையும் விலக்கவே, நிரையீற்றாசிரிய உரிச்சீரிரண்டும் வருமென்பது பெற்றாம். அவையிரண்டுமாவன நீடுகொடி. குளிறுபுலி.

3. இயற்சீர்த் தன்மைய பெறுபான்மை எய்துவித்தது என்றது. இயற்சீரோடு மாட்டினமையை. மாட்டினமையால் ஆசிரியத்து வந்து அடியுறழுமென்பது பயனுயிற்று.

4. இறந்ததுதழீஇயிற்று என்றது நிரையீற்றாசிரியச் சீரிரண்டும் ஆசிரியத்திலன்றிக் கலித்தளையிலும் நீக்கப்படா எனத் தழீஇ நின்றமையை. வருஞ் சூத்திர உரை நோக்குக.

5. போக்கி—கழித்து.—பின்னே என்றபடி.

6. நேரடி—அளவடி. என்றது கட்டளை அளவடியை.



[1] [நிரையீற்றுரியவுரிச்சீர் கலியுள்ளும் மயங்குமெனல்]

இ—ள் : கலித்தளையடிவயின் — கலிப்பாவினது கட்டளை யடிக்கண், நேரீற்றியற்சீர்க்கு உரித்தன்று—தேமா புளிமா என்னுமிரண்டியற்சீரும் வரப்பெறா, தெரியுமோர்க்கே—துள்ள லோசையைத் தெரிக்குமவர்க்கு என்றவாறு.

ஆகாவென்றமைத்ததனைக் காட்டாவாதலில்லை, ஆகாவென்பதல் லது. கட்டளையடிக்கண் வரைந்தோதினோ அல்லனவற்றாக்கண் வருமென்பதாம். அவை :—

'பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை'

எனவும்,

'உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை'

எனவும்,

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்'

எனவும் கலியடியுள் வந்தன. [1] இயற்சீர் பத்தனுள்ளும் இவை யிரண்டொழியும் கலிக்கண் வாராவெனவே, ஒழிந்த ஆசிரியத் தளையும் வெண்பாவுள்ளும் பயின்றியற்சீரும் [2] வேறுவேறு வந்த அடியுறழுமென்பதூஉம், இதற்காயின் [3] எட்டியற்சீர் அடியுறழு மென்பதூஉம் கூறினும். எனவே ஆசிரியம் இயற்சீர் பத் தும் ஆசிரியவுரிச்சீர் இரண்டுமெனப் பன்னிரண்டுசீர் பெறுவ தாயிற்று. வெண்பாவும் இயற்சீர் பத்தும் வெண்சீர் நான்கு மெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று. கலிப்பா [4] வடியின் இயற் சீரெட்டும், வெண்சீர் நான்கும், ஆசிரியவுரிச்சீ ரிரண்டுமெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று.

---

1. இயற்சீர் பத்தாவன :— தேமா, புளிமா, கணவிரி, பாதிரி, (325) சேற்றுக்கால், களிற்றுத்தாள், (327) போரேறு, பூமருது, கடியாறு, மழகளிறு. (328) ஆசிரியவுரிச்சீரிரண்டு — நீடுகொடி, குளிறுபுலி. இவைகள் வெண்பாவுக்குரியன.

றந் தூங்கப்படும். அவ்வாறு தூங்கலோசைப்பட நில்லா தேமா புளிமாவென்னும் இரண்டு சீருமென்றவாறாம். உம்மை இறந்தது தழீஇயிற்று. இறுதி நில்லாவென்பது இறுதியாகி நில்லா என்றவாறு. எனவே, தூங்கலோசைப்பட முதற்கண் வாரா வென்றவாறாம். என்னை? இருசீரினான் வருஞ் சீரோடு தொடருங்கால் இறுதற்றொழில் பெறுவது நின்ற சீராகலினென்பது. இதனானே ஒழிந்த இயற்சீர் தூங்கலோசைப்பட நிற்குமென்றவாறாம்.

“கொற்றக் கொடியுயரிய”

எனவும்,

---

1. ஈரசைச்சீர் பதினாறாவன :— இயற்சீர் 4. உரிச்சீர் 4. நேர்நிரையை முதலாகக் கொண்டு நேர்பு நிரைபு ஈறு 4. நேர்பு நிரைபை முதலாகக் கொண்ட நேர் நிரையீறு 4. ஆக 16.

2. ஈற்றில் என்பது பின் இறுதியோடு நில்லா என்று விளக்கலின் ஈண்டும் இறுதியில் நில்லா என்றாலும் இற்று நில்லா என்றாலும் இருத்தல்வேண்டும். ஆசிரியர் காலத்து இறுதியில் இவ்விரு சீரும் வந்தில என்பது சூத்திரத்தான் அறியக் கிடக்கின்றது.



“குளிறுங் கதவெறிந்தன”

எனவும் நேரீற்றியற்சீர் முதற்கண் தூங்காவாயின.

“அகல்வயல் மலிவேலி நிலவுமணல் வியன்கானல்.”

என ஒழிந்த இயற்சீர் தூங்கினவென்பது. இவையுங் கட்டளையல்லவென்பது “அசையுஞ் சீரும்” என்பதனான் அறிக. இது

...ற்போலக் கூறினான் என்பது. இவை இன்ன பாவினுள் ...மென்பது முன்னர்ச் சொல்லுதும். இங்ஙனங் கூறுக்கால் ...ண்பாவின் ஈற்றடியை முச்சீரடி என்னுமாறு இல்லை என். (உஎ)

[உரியசைச்சீரிரண்டும் இயற்சீருள் அடக்கித் தளை கொள்ளப்படுமெனல்]

இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான.

இஃது எய்தியதொரு மருங்கு மறுத்தல் நுதலிற்று; இயலசையிரண்டுஞ் சீர்நிலை பெறினும் தளை கொள்ளப்படாவென்றமையின். இனி, எய்தாததெய்துவித்ததூஉமாம். என்னை? உரியசை தளைகொள்ளுமா றுணர்த்தினமையின்.

இ—ள்: இயற்சீர்க்கண்ணே கூடப்படுத்து இயற்றப்படும், தளைவகை சிதையாத் தன்மைக்கண் என்றவாறு.

பாற்படுத்தெனவே [2] அதிகாரத்தான் இயற்சீரின்ற உரியசையிரண்டும் பகுத்துக்கொள்ளப்படும்.

நான்கியற்சீருள் இன்ன இயற்சீர்ப்பாற் படுமென்றிலனே

துணைத்திற்று.

"கலித்தளை மருங்கிற் கடியவும் படா." (334)

என்புழி, "அவ்வாசிரியவுரிச்சீரால் கலித்தளையாமென்றான். அவ்விகாரம் இடையறாது நின்றமையின் இதுவுங் கலித்தளைக்கே இலக்கணமாயிற்று. என்றார்க்கு,





"வஞ்சி மருங்கினும்"

(338) எனவும்,

"இசைநிலை நிறைய"

(339) எனவும்,

"இயற்சீர்ப் பாற்படுத்து"

(340)

எனவும் இம்மூன்று சூத்திரம் இடையிட்டனவாலெனின், அற்றன்று. கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட வேற்றியற்சீர் அதிகாரம் பற்றி இடை புகுந்தனவல்லது [1] கலித்தளை யதிகாரம் விலக்கின வல்லவென்பது.

இ—ள்: வெண்சீர் பல தொடர்ந்து ஒரு

1. கலித்தளை மருங்கிற் கடியவும்படா என்று தொடங்கிய அதிகாரம் விலக்கப்பட்டது அன்று. ஏனெனின்? அடுத்துக் கலித்தளையில் நேரீற்றியற்சீர் வாரா என இயற்சீர்பற்றிய அதிகாரம் வந்தமையின் அவ்வதிகாரம்பற்றிய முடிபுகளை இடையின் மூன்று சூத்திரத்தாற் கூறி, மீளவுங் கலித்தளையதிகாரமே தொடங்கி இச் சூத்திரத்தால் அத்தளைக்கே விதி கூறுகின்றாராதலின்.

2. நேர்வந்து ஒன்றினும் என்றிருந்திருத்தல்வேண்டும். பின் 'இறுதிச்சீ ரொன்றினும்' என வருதல் காண்க.

3. இறுதிச்சீரின் முதலசை என்பது 'மொழிந்த......மொழியாததனை முட்டின்றி முடித்தல்' என்னு முத்திவகை.

4. வெண்சீர் இறுதி—வெண்சீருள் இறுதிச்சீர் எவ ஏழாவதன் தொகையாக விரிக்க என்றபடி.



...ன் நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்குங்கால் [1] இயற்சீர் அடிமுதற்கண் வருமென்பதூஉம் கூறப்பட்டதாம். மற்று ...னெறன்றது சாற்றுச் சீரினையாயின் [2] அச்சீரி னிடையும் இறுதியும் நின்ற அசையினை நிரையசை யியற்சீரென்று கொள்வ...லனின், நின்றசீரின் ஈற்றசை வருஞ்சீரின் முதலசையோடு ...ட்டித்தளையாவதன்றி [3] தூன்றிடையிட்ட அசையுஞ் சீரும்பற்றித் தளை கொள்ளாமையின் அது கடாவன்றென்பது. இனி ...வெண்சீரென்பது அசைநிலை யியற்பெயராகலானும் [5] பன்மையினைக்கொண்டு பால் அறிய வந்ததன்றாயினும் அதனை [6] யானைக்கோடென்றாற்போல, இறுதி யென்றமையானும் பன்மைப்பாற்பட உணர்க. என்னை? [7] பின்னேன் முன்னேன் என்றவழி அவற்கு முன்னும் பின்னும் வேறு சிலருளரென்பது உணர்த்து

1. இயற்சீர் என்றது ஞாயிறு, வலியது, பாதிரி, கணவிரி போல்வனவற்றை. நிரைமுதல் வெண்சீரே வருதலின் முதற்கண் இயற்சீர் வரினும் ஓசை பிறழாதென்பது கருத்து.

2. அச்சீர் என்றது ஈற்றிலின்ற வெண்சீரை. 'மாசெல்வாய்' என்பதுபோல ஈற்றில் வருவனவற்றை. இவற்றி னிடையும் இறுதியு நின்ற அசை என்றது 'செல்வாய்' என்னுமிரண்டையும், இவ்விரண்டையும் சேர்த்து நிரையசையாகக் கொள்வல்லனின் என்பது கருத்து.

3.. ஒன்று—முதலசை.

4. வெண்சீர்—அஃறிணை இயற்பெயராதலின், வெண்சீர்கள் எனப் பொருள்படும்.

5. பன்மை

வினைகொள்ளின்—பன்மை வினையைக் கொண்டு

முடியின். எனவே கொண்டுவந்தால் வெண்சீர்கள் என்று பொருள் கொள்ளலாம். கொண்டுவராமையிற் பொருள் கொள்ளக்கூடாதென்றபடி.

6. யானைக்கோடு என்பதில் கோடு

என்பது, "கன்னுங்

...தாளும்'' என்னும் (சொல். ௬௪-ம்) சூத்திர விதிப்படி கோடு ...ன் எனப் பன்மையுணர்த்தும்; அதுபோல வெண்சீரும் வெண் ...ர்கள் என்றும் என்றபடி. இறுதியொன்றமையாதும் ...து பன்மைப் பொருள் உணர்த்தும். ஏனெனில், முதல் இறுதி ...ன்று கூறுவது பல சேர்ந்து நின்றவுறுப்பாகலின். போலக் கொள்க என இயைக்க.

7. முன்னோன் என்ற சொல்லே முன்னோர் பலருளர் என்பதையும் முன்னோன் என்ற சொல்லே பின்னோர் பலருளர் என்பதையும் காட்டும். அவைபோல இறுதியென்பதும் முன் பல சீர் உள என்பதைக் காட்டும். அதனாலும் வெண்சீர் என்பது பன்மை யுணர நின்றது என்றபடி.



பாகலின். என்றார்க்கு வெண்சீ ரிறுதி [1] நீடுகொடி குளிறுபுலி வந்தவழி அவற்று முன்னின்ற நேர்பசை நிரைபசைகளைக் கலிப்பாவினுட் கலித்தளைபாக்குதற்கு நிரையசை யேற்றொன்று மென்னுமோவெனின், அற்றன்று, [2] வெண்சீர்களின் இறுதி யெனவே மூன்றாஞ் சீரும் நான்காஞ் சீரும் வெண்சீராதல் கூறி, நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல் (372) எனவே இரண்டாஞ் சீரும் வெண்சீர் வரல்வேண்டுமென்று கூறி, நிரை தட்டுமெனவே இயற்சீரானும் [4] ஆசிரியவுரிச்சீரானும் நிரையீறாயினவெல்லாம் முதற்கண் நிற்குமெனவும் கூறினான். கூறவே, ஆசிரியவுரிச்சீர் இடை நில்லாவெனவும் அன்னம் நிற்பிற் கலியோசை பிறழுமென்பதூஉமாம் இவர் கருத்தென்பது. அல்

லதுவுடம் [3] வெண்சீர்க்கு உரியவசை யின்மையானும் அற்றன் றென்பது. எனவே, ஈற்றுச்சீர் நிரைமுத லியற்சீர் வரினும் ஆங்குத் தள்ளவேண்டாமை [4] ஒழிக்குமென்பதாம்.

[1] "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்." (கலி. 11)

என்பது வெண்சீரிறுதி நிரைமொழி கட்ட கலித்தளை.

---

1. நீடுகொடி குளிறுபுலி என்னும் சீர்களில் முன்னின்ற அசைகள் நேர்பும் நிரைபுமாதலின், இவை வெண்சீரின் பின் வரின் நிரையசையாகக் கொள்ளப்படும். அஃதாவது 'புலிவருவாய் நீடுகொடி.' எனவும், 'புலிவருவாய் குளிறுபுலி' எனவும் வரின் நீடு, குளிறு என்பன நிரையாகக் கொள்ளப் படும் என்று பொருள் கொள்வேமோ எனின் என்பது கருத்து.

2. வெண்சீர்களிறுதி என்றதனான் மூன்றுஞ் சீரும் நான்காஞ் சீரும் வெண்சீரென்பது பெறப்படும் என்றபடி.

3. நிரைதட்டல் என்பதனால் நிரையசை முன்வரும் என்பது பெறப்படும் என்றபடி.

4. ஆசிரியவுரிச்சீர் நீடுகொடி குளிறுபுலி.

5. வெண்சீர்க்கு உரியசை இன்மை என்றது நீடுகொடி, குளிறுபுலி என்பவற்றின் முன்னின்ற நீடு, குளிறு என்பவை தன் உரியசையாதலின் அவை வெண்பாவில் வரா என்றபடி. இவை வெண்சீரின்பின் வரா என்பது இவர் கருத்து. பேரெயில் வெண்பாவிற் கட்டளையடிக்கு உரியசை முதற்சீர் விலக்கப்பட்டமையின். ௩௨௬-ம் சூத்திர உரை நோக்குக. உரியசை—உரியசைச்சீர்.

6. துள்ளலோசை பொருந்துதற்கு உதாரணம் "அரிதாய" எனப் பின் வருவது.

7. களித்தலும் என்பது நிரை முதலியற்சீர். இறுதியில் அது வரினும் கலியோசை பிறப்பும் என்றபடி. அருளியோர் என்பதை வெண்சீர் என்றது அருளி என ஓசை பிளந்து நிற்றலிற்போலும்.



1 "அடிதாங்கு மளவின்றி யழலன்ன
வெம்மையாள்."

என்பது வெண்சீர்கள் பலவைத்துவந்து ஈற்றுச் சீரின் முதற்க ணின்ற நேரசை நிரையசைபோலக் கலியோசை கொண்டமை யின் அது கலித்தளை யெனப்பட்டது. இனி, வெண்சீர் நான் கும் ஒன்றி வரினுங் கலித்தளையாகுமேனும், அது வெண்பா வடியெனவும் பட்டுத் திரிபுடைதலின் அதனைக் கட்டளையடி யென்றது, இறுதிக்கண் ஓரிரவழி ஒருசீர் ஒன்றிவரினும் அதன் முதற்கட் பல வெண்சீர் வந்து பயைத்தலிற் கலி யோசையே காட்டுமென்றுமென்பது. அஃதேல் "பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்" என்றவழி [2] இடை நின்ற சீரின் நேரசை நிரையசை யியற்றென்னுமோவெனின், அது கட்டளை [3] யடியென்பது "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்பதனான் அறியப்படும். [4] அல்லதூஉம் இவை செவி கருவியாக உணர்தற்கருமை நோக்கி அடியறியுந் தன்மை யரிதென்று சொல்லுப.

இனி, இயற்சீரான்வந்த தளை [5] கொள்ளாமோவென்பார்

[6] "தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா."

(ந. கூஎ)

என்பதனான் வெண்சீர்க்குத் தளை விலக்கல்வேண்டி, அவ்வெண் சீரினையும் இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படுமென்றற்கு ஒரு வெண்சீரின் ஈற்றசை நிரையசை யியற்றென்றுவெனக் கூறி, ஞாயிறென்னும் இயற்சீரின மாசெல்வாபோலப் பின்னுமொரு

---

1. அடிதாங்குமென்னு மடியே இச் சூத்திரத்திற்குக் காட் டிய உதாரணம்.

2. இடைநின்ற சீர் 'ஆடுங்கால்' என்பது.

3. அடி என்பது அடியன்றென்பது என்றிருக்கவேண்டும். நச்சினார்க்கினியருரை நோக்குக.

என்றவழித், [2] தன்சீரானுந் தளை கோடுமாகலானும் அது பொருந்தாதென மறுக்க. [3] இனி வெண்சீரின் ஈற்றசையொன்றே

யொருகால் திரித்தது என்றது : பின் தளைகோடற்கு மாசெல்வா யென வெண்சீராகத் திரித்தது என்றபடி. என் திரித்ததெனின் வெண்சீர்க்குமுன் நிரை வருவதே கலித்தளை எனக் கோடற்கு என்றபடி. ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய் என்றவழி ஞாயிற்றை மாசெல்வாய் எனத் திரித்துவைத்து வெண்சீரின் முன் புலி என நிரைவந்த கலித்தளையாகக் கொள்ளப்படும் என்பது கருத்து. திரித்ததனையே என்னும் பாடமே பொருத்தம்.

1. இப்படி ஞாயிறு என்பதை வெண்சீராக்கி நிரைவந்து முடியுங் கலித்தளை என்று காட்டுங்கால், அங்ஙனம் வெண்சீர்முன் நிரைவந்து பகைத்து முடியவேண்டுமென்று விதிக்குஞ் சூத்திரம் வேறுண்டாயினன்றோ நேருநிரையுந் தளைத்ததனை; வெண்சீரீற்றிலுள்ள நேர்முன் வருமொழி முதல் நிரை பகைத்து முடிந்ததென்றும் நேருநிரையும் பகைத்தே வரல்வேண்டுவ தென்றுங் கொள்ளலாம். அங்ஙனம் விதித்த சூத்திரம் வேறில்லை, இவ்வுரையானும் அவ்விதி பெறப்படாது; ஆதலானும், தன் சீரானுந் தளை கோடுமாகலானும் பொருந்தாதென மறுக்க. தன் சீர்—ஆசிரியவுரிச்சீர். ஞாயிறு என்னும் இயற்சீரும் நிரையீறாதலின் அவ்வாசிரிய வுரிச்சீரின் முடிபுபெறும். தொ. செய். ௧௭௨-ம் சூத்திரவிதி நோக்குக.

2. தன்சீர்—நீடுகொடி, குளிறுபுலி என்னும் ஆசிரிய வுரிச் சீர். இதனாற் றளைகோடல் ௧௭௨-ம் சூத்திர நோக்குக.

3. இனி வெண்சீரி னீற்றசை ஒன்றேயாகலான் இயற்று என்று ஒருமை கூறிற்றென்பது 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' என்ற சூத்திரத்திற்கு அவர் கூறும் பொருளை மறுக்க வந்த வாக்கியம். எங்ஙனமெனின்? இயற்று — இயல்பினது என்று ஒருமை கூறிய அதனால் இறுதிநின்ற அசை ஒன்றே கொள்ளப்படுமன்றி அடுத்த அசை கோடற்கு விதி இன்று.

ராகலான் இயற்றென் று ஒருமை கூறினான். இடைநின்ற நேரும் நிரையுங் கோடுமென்னுமையின் இங்ஙனந் திரிந்த நிலைமை வஞ்சியுரிச்சீ ரெனப்படும். இனி: வெண்சீரென்பது [1] எழுவாயாயின் ஈற்றசை நிரையென்பது இயற்சீரின் பெயராகல்வேண்டும். அங்ஙனங் கூறினும் அசையென்பதனை ஒருகாற் சொல்லி ஈற்றசை நிரையசை யெனலகாதென்பது. அங்ஙனமன்றி "வெண்சீரினை இயற்சீராக்கி அவ்வியற்சீரினை வெண்சீராக்குதல் விதிவயினுழப்பாகி வரம்பின்றிமென் மறுக்க." என்பார்க்குந், 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டா' வெனவல், "ஆசிரிய வுரிமைப்படுநிலையோர்க் களிக்குநும்" என்பதூஉங் கலித்தளையன்றுஞ்சிய

---

கருத்தாவது :— மாசெல்வாய் என்பதன் இறுதி நின்ற வாய் என்னும் ஈற்றசையொன்றே கோடற் கிடமுண்டன்றி இடைநின்ற 'செல்' என்னும் அசை கோடற்கிடமின்று. அவ்வாறே மாவருவாய் என்பதிலும் இடைநின்ற 'வரு' என்னு நிரையசை கோடற்கிடமின்று என்பது கருத்து. எனவே மாசெல்வாய் என்பதில் வாய் என்பதனோடு செல் என்பதையும் மாவருவாய் என்பதில் வாய் என்பதனோடு வரு என்பதையுங் கூட்டி நிரையசையாக்கற்கு விதியில்லை. இங்ஙனந் திரிந்தநிலைமை என்றது, ஒருமை கூறியவதனால் இடைநின்ற நேரும் நிரையும் விலக்குண்மையின் ஈற்றசையே திரியவேண்டும்; இப்படி ஈற்றசை திரியின் அது வஞ்சியுரிச்சீராம் என்றபடி.

1. இனி இச்சூத்திரத்துள் வரும் 'வெண்சீர்' என்பதை எழுவாயாகக் கொண்டு பொருள் கூறினும் வெண்சீரானது ஈற்றசையை நிரையாகக் கொண்ட இயற்சீர் இயல்பிற்று என்ப் பொருள் கொள்ளல்வேண்டும். அங்ஙனங் கொள்ளின் பின் வரும் அசையென்பது மிகையாம் ஆதலின் அக்கருத்துப் பொருந்தாதென்றபடி. 'ஈற்றசை நிரையிற்று' என்று இருப்பின் அவர் கருதியபடி ஒருவாறு பொருள்கொள்ளலாம். அங்ஙனம் சூத்திரமில்லை என்றபடி.

2. மாசெல்வாய் என்னும் வெண்சீரினைத், தளைகோடற்கு ஞாயிறுளனா இயற்சீராக்கியும், ஞாயிற்றை கலிபோசை கோடற்கு

[illegible]
முப்பு—தொழிலற்ற முயற்றி (பயனற்ற முயற்சி) என்றபடி.

3. என்றார்க்கு எனல் என இயைக்க. கன்சீருள்வழித் தளைவகை வேண்டா என்பது கொண்டு வெண்பாவிற்கு ஒன்றாது வரல்வேண்டுமெனின், கலியும் வெண்பாவாம். என்னை? கலியும் ஒன்றாது வரலின். ஆதலால், கலி என ஒரு தளையின்றும். ஆதலின் வெண்சீர் ஒன்றி வருதல் வெண்பாவிற்குரியதென்றபடி. எனல் என்பது எலில் என்றிருந்திருக்கவேண்டும். அன்றேல் என்றார்க்கு எனல் என முடித்தல்வேண்டும். அது பொருந்தாின்று. என்றார்க்கு என்பது இல்லாமலுமிருக்கலாம். அல்லது தைவிருத்தல்வேண்டும்.



செல்லுமென்பது. கலிப்பாவிற்கு ஒன்றாது வருதலுரிமையுடைய; வெண்சீரெனவே, வெண்பாவிற்கு ஒன்றாது வருதல் யாண்டுமில்லை, ஒன்றிவரினல்லதென்பது உடம்படப்பட்டது. (உ௬)

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" என்னும் இச் சூத்திரத்திற்குப் பேராசிரியர் கொள்ளும் உரை

யையும் பிறர் உரைகளை அவர்
கட்டளைகளான் மறுக்குமாற்றை
யும் விளக்கற்பொருட்டு இங்கே
சுருக்கிக் காட்டுகின்றோம்.

இச் சூத்திரத்திற்குப் பேராசிரியர்
கொள்ளுமுறை.

ஒரு கலியடியுள் வந்த பல
வெண்சீர்களின் ஈற்றிலுள்ள சீரின்
முதலிலுள்ள நேரசை நிரையசை
யியல்பாகுமென்பது.

எனவே முன்வந்த வெண்சீர்களின்
முதலசைகளெல்லாம் நிரை
யசையாய் ஒன்றுஅ வந்தவிடத்திலேயே
ஈற்றுச் சீரின் முத
லசையாகிய நேர் நிரையாம் என்பது
இதனுற் கொள்ளப்படு
மென்பதும் பெறப்பட்டது, என்னை?
ஈற்றுச்சீரின் முதலிலுள்ள
நேரசையை நிரையசையாய்க்
கொள்ளவேண்டுமெனவே முன்
வந்த சீர்களின் முதலசைகளும்
நிரையசையாயே வரல்வேண்டு

மென்பது பெறப்படுமின் என்பது அவர் கருத்து. அங்ஙனம்

மாதலே,

" அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையான் " என்னும் உதாரணத்தின் வைத்து அறிந்துகொள்க.

இனி, இதற்குப் பிற ருரையுமோருரை, வெண்சீரினீற்றில் நீடுகொடி, குளிறுபுலி வந்துழி அவற்றின் நேர்பசை நிரைபசைகளை நிரையாகக் கொள்ளுதல் என்பது. அதன் மறுப்பு

அங்ஙனங் கொள்ளித் கலிபோசை யழியும் என்பது ஒரு நியாயம். மற்றொன்று நீடுகொடி, குளிறுபுலி ஆசிரியவுரிச்சீராதலின் வெண்பாவிற் கட்டளையடிக்கு அவை வாரா. ஆதலின்

அவை வெண்பாவினியற்றுவிய கலிக்கும் வெண்சீர்க்குப்பின்னே வாரா என்பது. மேற்காட்டிய ஆசிரியவுரிச்சீரண்டும் கலிக்கு வருமெனின், அவை முதலில் வருமன்றி இடையில் வாரா வென்பதும் வரிற் கலியோசை யழியுமென்பதும் இவர் கருத்தாம். வெண்பாவில் ஆசிரியவுரிச்சீர் வாராவென்பதனை, " வெண் பாவினுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒழித்து

ஒழிந்தசீர் 

[வெண்சீர் கட்டளையடியல்லாதவழி ஆசிரியவடியினுள் வருமெனல்]

இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையா ராசிரிய வடிக்கே.

இது கட்டளையடியல்லாதவழிச் சீர் மயங்குமா றுணர்த்

பெற்றும். வருகுவ தாயினென்று ஒருமை கூறினமையானும் இவ்வயன்ற தளைகளும் ஓரடிக்கண் ஒன்றே யாண்டும் வருவ தெனக் கொள்க. (௧௦)

[வஞ்சிச்சீரும் கட்டளையடி யல்லாவழி ஆசிரியத்துள் வருமென்னல்]

௧௪௧. அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீ
ரொன்றுத லுடைய வோரோர் வழியே.

இது வஞ்சியுரிச்சீர் ஆசிரிய அடியுள் மயங்குமாறுணர்த் திற்று.

இ—ள்: கட்டளையடியல்லாதவழி இன்சீரியைய வருகுவ தாயின் வஞ்சியுரிச்சீர்களும் ஓரோர்வழி ஆசிரியத்துள் வரப் பெறும் என்றவாறு.

ஒருவழியென்றது ஓரோர்வழி
யொன்றலென்னையெனின்?

அஃதாவது வஞ்சியுரிச்சீருள்ளும் பத்துச்சீரே
வருமென்பதூஉம்

அவை வருங்காலும் பயின்று
வாராவென்பதூஉம் அறிவித்தற்

கென்பது. அவை மாசேர்சுரம் புலிசேர்சுரம்,
மாசெல்காடு புலி

செல்காடு, மாசெல்கடறு புலிசெல்கடறு,
பாம்புசேர்வாய் பாம்பு

---

மாசெல்வாயின் ஈற்றசைகளை ஞாயிறு என
வென்பாவிற் கொள்

வதுபோல அதனியற்றிய கலிக்கு ஞாயிறு
முதலியபோன்ற

இயற்சீர் முதல்வரின் ( அஃதாவது "
ஞாயிறு புலிசெல்வாய்

மாசெல்வாய் " என வரின் ) ஞாயிறு
முதலியவற்றையும் கலித்

தளையாக்குதற்கு மாசெல்வாய் என
வைத்துக்கொள்ளப்படு

மெனவுங் கொண்டு, ஞாயிறு

என்பதன்முன் புலிவருவாய்
வரின் அது மாசெல்வாய்முன்
நிரைவந்த கலித்தளையேயாமென்று
கொள்வர். இவ்வுரையாலே வெண்சீரின்முன் நிரைமுதல்
வெண்சீர்
வரின் கலித்தளையாமென்பதே அவர்
கருத்தென்பது பெறப்
படலின், அவர் கருத்தின்படி கோடற்கு
வெண்சீரின்முன்
நிரைவந்தாற் கலித்தளையாமென்பதற்குச்
சூத்திரவிதி வேறு
வேண்டும்; அவ்விதி இச்சூத்திரத்தாற்
பெறப்படாது. ஆக
லானும், இயற்சீர்முன் நிரைமுதல்
வெண்சீர் வரின் கலித்தளையா மென்பதற்கு
விதியிருத்தலின் (கூஎஉ-ம் சூத்திரம்) இயற்
சீரை வெண்சீராக்கல் வேண்டுவதின்மையானும்
அது பொருந்தா
தென்பது.

எனப் பாம்புவருவாய் வந்தது.

---

இன்னும் வெண்சீரீற்றசை நிரையசையியற்றே என்பதில் இயற்று என்று ஒருமை வாய்பாட்டாற் கூறினமையால் 'மா செல்வாய்', 'புலி வருவாய்' என்பவற்றிலுள்ள ஈற்றசையென்று கொள்ளப்படுமேயன்றி, ஈற்றசையோடு சேர்த்து இடைநின்ற ('செல்' என்னும்) நேரும், ('வரு' என்னும்) நிரையுங் கொண்டு இயற்சீராக்க முடியாமையானும் அது பொருந்தாதென்க. மா செல்வாய் புலிவருவாய் என்பவற்றின் ஈற்றசையை (வாய் என்பதை) நிரையசையாகக் கொள்ளின் அவை வஞ்சியுரிச்சீரா மென்பது. ஆதலானும் அவ்வாறு பொருள்கோடல் பொருந்தா தென்பது. இனி வெண்சீரின் ஈற்றசையெனக் கொள்ளாது, வெண்சீரென்பதை எழுவாயாகக் கொண்டு ஈற்றசை நிரை என்பதை, ஈற்றசை நிரையாகவுள்ள இயற்சீர் எனக் கொண்டு, வெண்சீரானது இயற்சீர் இயற்று எனப் பொருள் கொள்ளினும், "ஈற்றசை நிரை"யியற்று என்று சூத்திரமிருக்கவேண்டும். அவ்வாறிராது "நிரையசை" என்று இன்னுமோர் அசை மிகையாயிருத்தலின் அவ்வாறும் பொருள்கொள்ள முடியாது. அதனானும் வெண்சீரை இயற்சீராக்கல் முடியாது. அன்றியும்



"மருந்து நாடாத் திருந்து வெம்பிணி கைக்கும்,"
எனக் களிறுசெல்வாய் வந்தது.

"கடறுகவர விழிந்து கண்யசறு வரிப்ப."
எனக் களிறுவருவாய் வந்தது. பிறவுமன்ன.

1 நேர் நிரையாகியும் நேர்பு நிரைபாகியும் ஈறு முதல்

[அடியாவது இதுவெனல்]

௩௪௪. நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.

இது முதற் சூத்திரத்துள் "யாத்தசீரே யடியாப்பெனாஅ" என நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்தவெழுந்தான் அவற்றுள் இது நாற்சீரடி யுணர்த்திற்று.

இ—ள்: அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீரடி என்றவாறு.

எனவே, இருசீரானும் முச்சீரானும் ஐஞ்சீரானும் அறுசீர் முதலியவற்றானும் வருமாயினும் அவை சிறப்பிலவென்ற வாறும். இருசீரான் வருவதனை என்ன அடியென்னுமோவெனின்

1. நேர்நிரை—உம்மைத்தொகை. நேர்பு நிரைபு என்பதும் உம்மைத்தொகை.

2. ஈறும் முதலும் ஆகிப் பெறச் சீர் வந்தது என இயை யும். ஆகி என்பன ஆக எனவுமிருக்கலாம்.

---

வெண்பாவிற்குக் கனிகொள்ள வெண்சீரை இயற்சீராக்கி பின்னக் கலிப்பாவிற்கு இயற்சீரை வெண்சீராக்குதல் விகாரி லாறப்பாவி முடிபுமாதலின் அது பொருந்தாதென்பது. அன்றியும் வெண்பா விற்கு ஒன்றுதான் வரவேண்டுமென்னும் விதி வேண்டியதில்லை. அங்ஙனங் கொள்ளின், வெண்சீரின்முன் நிரைமுதல் வெண்சீர் வருதலும் ஒன்றாது வாரின் அதனையும் (கலித்தளையென்னாது)

ஒன்றாது வந்த வெண்டளையெனலா மாதலின் வெண்பாவிற்கு வெண்சீர் ஒன்றி வருதலே இலக்கணமாம். அது சீர்வகை யடி யெனக் கொள்ளப்படுமாதலின் என்பது கருத்து.

வினையிலுழப்பு — தொழிலற்ற முயற்சி = பயனில்லாத முயற்சி.



...கெல்லாம் [1] எழுத்துவகையானே மேற்பெயர் கூறும். அவ் ...று சீர்வகையானுங் கொள்ளப்படுமென்பது. சுருங்கிய எழுத் ...ன் வருவன குறளடியென்றும் அவற்றின் ஏறிய எழுத்தான் ...வன சிந்தடியென்றும் இடைநின்றன அளவடியென்றும் அவற் ... நெடியன நெடிலடியென்றும் அவற்றினும் நெடியன கழி ...டிலடியென்றுங் கூறுமாகலான் அவ்வாறே இருசீரடி குறளடி ...யென்றும் முச்சீரடி சிந்தடியென்றும் நாற்சீரடி அளவடியென் ...ம் ஐஞ்சீரடி நெடிலடியென்றும் அறுசீர் முதலியன கழிநெடி ...யென்றுங் கோடுமென்பது. இவற்றினெல்லாம் நாற்சீரடி சிறந்த ...ன்றதென்னையெனின், அளவிற்பட் டமைந்தமையானும் அது ...மின்று வருதலானுமென்பது. உதாரணம் :—

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்." (மலைபடு. க)

...னையும்,

"அறுசுவை யுண்டி அமர்ந்தில்லா ளூட்ட."

(நால. க) ...னையும்,

"அகிதாய வறவினைப்பெறு மருளியோர்க் களிக்குநம்."

கலி என்பன.

8. இவற்றது விகற்பம்—இவ்வளவடிகளின் வேறுபாடு.



நாற் றளைப்பகுதியாற் கட்டளையடியென [1] உறழ்ந்தாரூஉம், அறு நூற்றிருபத்தைந்தடியென வரையறை கூறுவதூஉம், அவ்வள வடியே என்றற்கு [2] 'காற்சீர்க்கண்ணது தளை' என்றுசொன்னான் பது. மூன்றாஞ் சீர்வகையான் வருங்கால் அடியான்றிக் கட்டளை யடியெல்லாந் தளைவகை யுடையவென விதந்தோதி வெண்டளையினை நாற் றளைகொள்வது காற்சீரடிக்கணென்பான் 'அடியுள்ளது தளை' என்றுசொன்னபது. [3] மற்றையடிக்கட் டளைகொள்ளின் அது வரையறையின் [4] றென்னுமாகலின் ஈண்டு வரைந்தோதினு னென்பது. அது தக்கது; மற்றைப் பொழிப்பும் ஒரூஉவும் போலாத மோனை முதலிய தொடையெல்லாம் [5] அடியிரண் டினையத் தொடுக்கவேண்டுமன்றே? அவற்றை 'அடியுள் ளனவே தொடையும்' என்றதென்னையெனின்,—அற்றன்று; நாம் [6] தொடையுறழ்ச் சீர் கொள்வதூஉம் இவ்வளவடிக்க ணென்பது கூறினான், ஆண்டுத் தொடை கூறும்வழி [7] வரை யாது கூறுமாகலி னென்பது. எனவே, கட்டளைப்படுப்பதூஉந் தொடையுறழ்ச்சிக்கு இடனாவதூஉம் நேரடியேயெனச் சிறப்

[நாற்சீர் கொண்ட அடியைக் கடந்து தளையுந் தொடையும் வாரா எனல்]

கசச. அடியிறந்து வருத லில்லென மொழிப.

இதுவும், கட்டளைப்பாட்டிற்குந் தொடைக்கும் ஆவதோர் கருவியுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அறுநாற்றிருபத்தைந்து அடியுள்ளும் ஓரடியின் இறந்துவாரா மேற்கூறிய தளையுந் தொடையும் என்றவாறு.

---

1. உறழ்தல்—பெருக்கல்.

2. நாற்சீர்க்கண்ணது—நாற்சீரடிக்கண்ணது என்றிருப்பது நலம்.

3. மற்றையடிக்கண் தளைகொள்ளின் எனக் கண்ணழிக்க. மற்றையடி—இருசீரடி, முச்சீரடி, ஐஞ்சீரடி, அறுசீரடி முதலியன. சீர்வகையடியுங் கொள்ளப்படும்.

4. என்னும்—என்பான்.

5. அடியிரண்டை இயைத்தே மோனை முதலிய தொடை பார்க்கப்படும் என்றபடி.

6. தொடையுறழச் சீர் கொள்வது அளவடிக்கணென்பதே யன்றி ஓரடிக்கண் என்றல்லவென்பது கருத்து.

7. வரையாது—அளவடி என்று வரையாது.



என்றது, மேற்கூறிய தளைவகையேயன்றி, அடியோடு

அடிக்கூட்டத்துத் தளைகொள்ளுங்காலும் ஓரடிக்கண்ணே வழுவாமற் கோடல்வேண்டுமெனவும், அங்ஙனமே தொடை கொள்ளுங்காலும் வந்தவந்த அடியே வரப்பெறுமெனவுங் கூறியவாறு.

எனவே, தேமா தேமா தேமா தேமாவென்னும் அடிக்கண் தொடை கொள்ளுங்கால்,

"வாமா [illegible]த்தோன் மன்ற."

என முன்வந்த அடிமேல் வரல்வேண்டுமென்பதூஉம், அன்றி,

"தேமாஞ் சோலைத் தீந்தே னுண்ட
காமர் தும்பி யாதல் கண்டது."

என வரின் தளை வழுவாகிப் பதின்மூவாயிரத் தெழுநூற்றெட் டெனப்பட்ட தொடைப்பகுதிப் படாவென்பதூஉம் பெற்றாம்.

இனி, வெண்பாவினுள் அவை வருமாறு;

"சென்றே யெறிப வொருகாற் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்" (நாலடி. ௨௪)

எனப் பன்னிரண்டெழுத்தடி ஒன்றினையும் இருகாற் சொல்லின் கூட்டி எதுகைத்தொடை கொள்ளுங்கால் அடியோடு அடிக்கூட்டத்துத் தளைவகை சிதையாது வந்தமையின் அத்தொடை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டென வரையறைப்பட்ட தொடையுட்பட்டது.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
தானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்—தேனூறு"

(முத்தொள்ளாயிரம் ௧0௪)

என்றவழி, பதினன்கெழுத்தடியே தொடுத்தமையின் அடியிறந்து வந்ததன்றாயினுந் [2] தளைவகை ஒன்றுதலின் இது

பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு. ஒட்டப்படாதாயிற்று.

"வண்டு வரகு வரகு வரகு."

என்கின்ற அடியினை மீட்டுக்கத்து தொடை கொள்ளுங்கால்,

---

1. கண்டது என்பதை ஞாயிறு என்று கோடலின், மீனவும் அந்த அடியே வருங்கால் தளைவழுவாம். ஆதலின் அடங்கா தென்க.

2. தளைவகை ஒன்றல் தன்சீர் வந்ததனையான் என்க. "தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா" என்பது சூத்திரம். தன்சீர்—வெண்சீர்.



வண்டு வரகு வரகு வரகு

என்றது, [1] நேரொன்றாசிரியத்தளை தட்டுமாதலால் இது வழு வெனப்படுமென்பது. கலிப்பாவிற்கு [2] அன்னதோர் வரையறை யில்லை; [3] இருவாற்றானும் வருமென்பது. என்னை?

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே." (ந.சக)

என்றாராகலின், மேலைச் சூத்திரத்தானே தளைவகை சிதையாமல் அறுநூற்றிருபத்தைந்து வகைப்படுவது நாற்சீரடியே என்பதூஉங் கூறி, அந் நாற்சீரடியே நாம் முன்னர் வேண்டுந் தொடை விகற்பத்திற் குரியவென்பதூஉங் கூறினான். இச் சூத்திரத்தானே அத்தொடை கொள்வது தம்மின் வேறுகாத இரண்டடிக்கண்ணென்பதூஉம் அறுநூற்றிருபத்தைந் தடியுள் ஒன்றனை இருகாற் சொல்லித் தொடை கொள்ளப் படுமென்பதூஉம், அங்ஙனந் தொடுக்குங்காலும் அடியோடு அடிக்கூட்டத்தின்கண்ணுந் தளைவகை சிதையாமல் வேண்டு மென்பதூஉங் கூறியவாறாயிற்று. இவற்றானெல்லாம் நாற்சீரடியே சிறப்புடைத்தென்பது பெற்றாம். [4] இன்னும் [5] அதன் சிறப்புடைமையே [6] கூறுகின்றான். (௯௬)

[நாற்சீர் அடிகள் இரண்டும் பலவும் அடுத்துவந்த தொடையே பாட்டெனல்]

௯௭. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

இது நாற்சீரடியே விசேடித்துக் கூறி, அதனது இடத்தானே பாட்டென்பதோர் முதற்பொருள் தோன்றுமென்பதுணர்த்தியவாறு. 'எனப்படும்' என்றதனான் இவ்வடிகளான் வந்த செய்யுளே சிறப்புடையனவென்பதூஉஞ் சொல்லியவாறு. மாத்திரை முதலிய [7] வற்றை உறுப்புக்களான் இத்துணை

1. இதுவும் வெண்பாவடி. ஆதலிற் றளைவழு.

2. அன்னதோர் வரையறை என்றது, வெண்பாவிற்குப் போன்ற வரையறையை.

3. இருவாற்றானும் வரும் என்றது, ஒன்றியும் வரும் ஒன்றாதும் வரும் என்றபடி.

4. இன்னும்—மேலும்.

5. அதன்—அக்காற்சீரடியின்.

6. கூறுகின்றான் என்றது ஆசிரியனை.

7. வற்றை என்பது சேர்த்து எழுதப்பட்டது. அது வேண்டியதில்லை.



## உரை

மாத்திரை கொண்டது செய்யுளென்றலும் இத்துணை அசையுஞ் சீருந் தொடையுங் கொண்டது செய்யுளென்றலும் அளவியல் [1] கூறியவாற்றுக்கான் வரையறுக்கப்பட்டன. அடியளவே கூறச் செய்யுட் புலப்பாடாமென்பது. 'எனப்படும்' என்றதனான், [2] ஒழிந்த அடிகளானும் அவ்வாறு வருமாயினும் அவை சிறப்பிலவென்பது.

கசஅ. நாலெழுத் தாதி யாக வாறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப.

(௨௬) கசகூ.

ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
யீரெழுத் தேற்ற ²மல்வழி யான.

---

(௨௭) 1. கூறியவுறுப்புக்களான் என்பது களான் என்றிருப்பது நலம்.

கூறி அவ்வுறுப்புக்

2. ஒழிந்த அடி—அளவடி அல்லாத அடி.

3. அவ்வழியான எனவும் பாடம்.

38



கருo. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
யொத்த நாலெழுத் தேற்றலங் கடையே. (௬.அ)

௩௫௧. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத் துமிகுதலு மியல்பென மொழிப (௩௯)

௩௫௨. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத்து மிகுதலு மிவட்பெறு மென்ப. (௪௦)

இவை ஐந்து சூத்திரமும் உரையியைபு நோக்கி உடனெழுதப்பட்டன. நாற்சீரடி இத்துணைப் பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையும் தொகையு முணர்த்துகின்றன.

இ—ள்: நாலெழுத்து முதலாக ஆறெழுத்தளவும் வந்த நிலம் மூன்றுங் குறளடியெனவும், ஏழெழுத்து முதன் மூன்று நிலனுஞ் சிந்தடியெனவும், பத்தெழுத்து முதல் ஐந்து நிலனும் அளவடியெனவும், பதினைந்தெழுத்து முதன் மூன்று நிலனும் நெடிலடியெனவும், பதினெட்டெழுத்து முதல் இருபதெழுத்தவரை மூன்று நிலனுங் கழிநெடிலடியெனவுஞ் சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

குறளடி நிலங்களை [1] வகுத்தொழியாது, [2] ஒழிந்தனவும் வகுத்துரைத்தான், அவை முதல் இடை கடையென மூன்று கூற்றான் ஒன்றொன்றனிற் [3] சிறப்பு இழிபுடையனவென்று கொள்ளினுங் [4] கொள்ளலாமென்பது. அவற்றுக்குச் செய்யுள்:—

குறளடி { பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து சூடி தேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கி

சிந்தடி { தீர்வாய் கொண்டு நீண்ட நீல
சூர்வா ஆதை வீச ஆர்வாய்
மணியேர் துன்னிட டொல்கி மாலை

ளை இதனுட் பதினேழு நிலத்து ஐவகையடியும் முறையானே க்கவாறு கண்டுகொள்க. குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென நாற்சீரடி தானே ஐவகைப்படுமென்று அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறினான். தொகை பதினேழ் நிலத்து ஐவகையடியென்பது எண்ணிப்பார்க்க. இப்பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுள் மிகக் குறியானைக் குறளனென்றும், அவனின் நெடியானைச் சிந்தனென்றும், ஒப்புமைந்தானை அளவிற்பட்டானென்றும், அவனின் நெடியானை நெடியானென்றும், அவனின் நெடியானைக் கழிநெடியானென்றுஞ் சொல்லுப. அவைபோற் கொள்க இப்பெயரென்பது. (௪௦)

[சீர்கள் ஐந்தெழுத்தின் மிக்கு வாராவெனல்]

௪௧. சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது.

இது, மேலெழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட ஐவகையடிக்குஞ் சீரும் எழுத்தெண்ணியே வகுக்கின்றது.

இ—ள்: சீரது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்துவாராது என்றவாறு.

பெருமைக்கு எல்லை கூறி வரையறுக்கவே, சிறுமைக்கு எல்லை வரையறைப்படாது ஒன்று முதலாக வருமென்பதாம். சீர்நிலைதானே யென்பது பிரிநிலை யேகாரம். அதனை அசைநிலைப் பிரித்துக் கூறியவாறு. அதனை அவ்வாறு பிரித்துக் கூறவே

1. முழங்க எனவும் பாடம்.

2. கலனளவு கலனளவு எனவும் பாடம்.



[1] அசை சீராயவழி ஐந்தெழுத்திறவாமை அவற்றுக்கில்லையென்பது கொள்ளப்படும். அற்றேல், [2] அவற்றுக்கெல்லை கூறுகேனெனின்,—அசை மூன்றெழுத்தி னிறவாதென்பது [3] உரையிற் கொள்க. நாலென்பதனை [4] இலேசாற்படுத்துக்கொள்ளினும் அமையும். மற்றிவற்றையுஞ் சீர்நிலை பெறுமென்பவாதலாற் சீரென அடக்காதோவெனின்,—அடக்கானன்றே; [5] அசை சீர்நிலைமைபெற்றியவழியும் அசை யிரண்டாகாமையினென்பது.

"இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான." (தொ. பொ. ௩௪௦)

என்று ஆண்டு [6] வரைந்தமையின், அதனைச் சீர்நிலையென வாளாது பொதுவகையாற் கூறுநான். [7] அதுவே கருத்தாயின், அவற்றை நேர்பசை நிரைபசையெனக் கூறியதனாலும், அவற்றை

"ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே." (தொ. பொ. ௩௨௧)

என்றதனானும் பயந்தின்றெனவென மறுக்க; அல்லதூஉம், 'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றுக' எனவே, இவைதா மியற்சீ

ரல்ல, [8] அவற்றது செய்கை இவற்றுக்குங் கொள்கவென்ற துணையே ஆண்டுக் கூறியதென்பது; அல்லதூஉம், தேவரும் நரகரும் மக்கட்பாற்படுத்துக் (௩௮௪) கிளை கொள்ளப்படு மென்ற துணையானே பிறப்பானும் [9] பெற்றியானும் மக்களென வழங்கார்; அதுபோல, அசைநிலைத் தளையும் சீர்நிலைத் தளையும் ஒக்குமென்ற துணையானே அவை அசைச்சீரெனவே அடை—

1. அசை—தனியசை. அவை நேர் நிரை நேர்பு நிரைபு. இவையும் சீராக நிற்கும். அசைச்சீரியலாறு எனவும் பாடம். அது சிறப்பின்று.

2. அவற்றுக்கு—அசைச்சீர்களுக்கு.

3. உரையிற் கொள்க—உரையிற் கோடல் என்னுமுத்தி யாற் கொள்க.

4. இலேசு—மிகை.

5. அவை—அவ்வசைச்சீர்கள்.

6. வரைந்து என்றது தனி நிலையாமல் இயற்றிக்கொள்க என்று வரைந்தமையை. எனவே அது சீராக இயற்றிக்கொள்ளப்படுமன்றி இயற்கைச் சீராகாது என நியமித்தவாறாயிற்று.

7. அதுவே—சீர் என்பதுவே.

8. அவற்றது—இயற்சீர்களது. செய்கை—தளைத்தற்செய்கை.

9. பெற்றி—இயல்பு, தன்மை.



யடுத்தே சொல்லவேண்டுவனவற்றையும், வாளாதே சீரெனப் படுவனவற்றையும் ஒருவகையானே சீர்நிலையன மயங்கக்

காட்டுவாருமுளர். அஃது உரியசை மயக்கமாகிய ஆசிரியவுரிச்சீ [3] ராகலின்,

1. சாதி—குலம்.
2. கொண்டாம் என்னும் பாடம் பொருந்தியின்று. இலேசு—சூத்திரத்துள் வரும் தான் என்பது.
3. ஆகலின் விலக்கப்பட்டது எனக் கூட்டுக.



"இன்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே." (௩௩௫)

என்பதனான் விலக்கப்பட்டதென்பது. இனி, [1] தூங்கையென் பதனை யெழுத்துச் சீரென்பாருமுளர்; அங்ஙனங் கூறின்,

"இரண்டு தலையிட்ட முதலா கிருபஃது." (தொ. எழு. ௪௦௩)

என்னும் எழுத்தோத்தினொடு மாறுகொள்ளுமென்பது. அது வழக்கிற்குக் கூறியது; செய்யுட்காயின் அவ்வாறு கொள்ளாமோ வெனின்,—கொள்ளாம். செய்யுட்கண்ணுமதனை [2] யெழுத் தென்று வேண்டுமாகலின்; என்னை?

"முற்றிய லுகர மொழிசிதைத்துக் கொளாஅல்." (௩௨௧)

எனக் குற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துக் கொள் ளப்படாவென்பது கூறினமையினென்பது. (௪௧)

[சமநிலை வஞ்சிக்கு ஆறெழுத்தானுஞ் சீர் வருமெனல்]

௩௫௪. நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்.

இஃது, ஒழிந்த வஞ்சிப்பாவினுள் வருஞ்சீர் இத்துணை யெழுத்து இறவாதென்கின்றது. நேர்நிலை வஞ்சியென்பது, சமநிலை வஞ்சி; அஃது இருசீரான் வருதலிற் சமநிலை வஞ்சி யெனப்பட்டது. முச்சீரான் வருவதனை வியனிலை வஞ்சி (கூகூஅ) யென்பவாகலின்.

இ—ள்: இருசீரடி வஞ்சியுள் ஒருசீர் ஆறெழுத்தாகவும் பெறும் என்றவாறு.

இதற்கு, மேனின்ற அதிகாரத்தாற் பெருக்கத்திற்கு எல்லை கூறினன், சுருக்கத்திற்கும் வரையறையுடைமையின். அது முன்னர்ச் (359) [3] சொல்லுதும். எனவே, அறுபது வஞ்சியுரிச்சீ

---

1. நுந்தை என்பதை ஈரெழுத்தாகக் கொள்ளின் முதலில் நிற்குமெழுத்து இருபத்திரண்டு என எழுத்ததிகாரத்து விதித்ததனோடு மாறுபடும். எங்ஙனமெனின்? அறுவும் எண்ணப்பட்டு இருபத்துமூன்று ஆதல் வேண்டிவரும் ஆதலின். இதனாலேயே முதலில் வரும் எழுத்து இருபத்திரண்டு எனக் கூறப்பட்டது. ஆதலின் ஓரெழுத்துச் சீரெனப்படுமன்றி ஈரெழுத்துச் சீரெனப் படாது என்றபடி.

2 வேறு எழுத்து—முற்றுகரத்தின் வேறாய எழுத்து. என்றது குற்றுகரத்தை. முதலெழுத்தின் வேறாய எழுத்து எனினு மாம்.

3. சொல்லுதும்—சொல்லும் என்றிருத்தல்வேண்டும்.

போதுபூ, மேவுசீர் ; போரேறு, நன்னாளு ; பூமருது, காருருமு ; கடியாறு, பெருநாளு ; விறகுதீ, உருமுத்தீ ; மழகளிறு, நனைபுற்று என ஒன்பதியற்சீரும் இருநிலைமையாற் பதினெட்டாயின. புளிமாவென்னும் இயற்சீர் ஒருநிலைமைத்தேயாம். [5] அல்லாதார் [6] வரகு என்பதனுட் குற்றுகரங் களைந்து புளிமாவிற்கு இருநிலைமை காட்டுப ; அங்ஙனங் காட்டின் வரகென்பதுபோலப்

---

1. ஒரு தன்மைத்தேயாம் என்றிருப்பது நலம்.

2. அசைச்சீர்—நேர்பு நிரைபு.

3. பதினெட்டினுள்ளும் என்றது,—இயற்சீர் நான்கு, நிரையீற்று ஆசிரிய உரிச்சீரிரண்டு, நேரீற்று ஆசிரியவுரிச்சீரிரண்டு, நேர்நிரை முதலாயும், நேர்புநிரைபு ஈறாயும் வந்த ஆசிரியவுரிச்சீர் நான்கு, அசைச்சீரிரண்டு, வெண்சீர் நான்கு ஆகப் பதினெட்டு.

4. இயற்சீர் பத்தாவன—இயற்சீர் நான்கும், நேர்புநிரைபு முதலாக வரும் நேரீற்று ஆசிரிய இயற்சீரிரண்டும், நேர்பும் நிரைபு மீறுகி நேரும் நிரையும் முதலாக வரும் ஆசிரிய இயற்சீர் நான்குமாகப் பத்தாம்.

5. அல்லாதார்—பிறர்.

6. வரகு என்பதன்கண் குற்றுகரங் கலந்தால் ஒருநிரையசையாம். புளிமா இரண்டசையாம். ஆதலால் புளிமாவிற்கு வரகு என்பதைக் காட்டி இருநிலைமை கோடல் பொருந்தாதென்பது. அதுபற்றியே வரகுக்கு அரவு இருநிலைமைக்கு உதாரணமாயிற்று. குற்றுகரத்திற்கு முற்றுகரம் ஒத்த ஓசையாதலின் இருநிலைமை கோடற்கு ஏற்குமென்பது கருத்து.

புளிமாவும் நூரசையாகவானும், புளிமாவென்பதுபோல வரகு என்பது இரண்டசையாகவானும் கோடல்வேண்டும். கொள்ளவே இச்சூத்திரத்தினொடு மாறுகோளாமென்பது ; என்னை?

“எழுத்தன வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.” (௩௫௫)

என்றாராகலின் என்பது.

நீடுகொடி நாணுத்தளை எனவும், உரறுபுலி விரவுகொடி எனவும் நிரையீற்றாசிரியவுரிச்சீரிரண்டும் இவ்விரண்டாகி இருநிலைமை யெய்தியவாறு.

இனி, வெண்சீர் நான்கும் ஒரு நிலைமையவேயாம்.

வண்டு, மின்னு, வரகு, அரவு என அசைச்சீரிரண்டும் நான்காய் இருநிலைமையவேயாம்.

இவ்வாற்றான் இவையெல்லாந் தொகுப்ப, இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும், வெண்சீர் நான்குமென முப்பத்தொன்றாயின. என்றார்க்கு,

‘மாவருவாய், புலிவருவாய்’

என்பவற்றையும்,

[1] ‘ஞாயிதுகொள், வலியதுகொள்’

எனக் குற்றுகரம்பெய்து இருநிலைமை கொள்ளாமோவெனின்,— கொள்ளாம் ; அவை,

“எல்லா வீறுதியு முகர நிறையும்” (தொ. எழு. ௪௦௪)

என்பதனான் முற்றுகரமாமென்பது. இனி, [2] முதற்கணின்ற குற்றுகரமுங் கொண்டு இருநிலைமை கொள்ளாம் ; என்னை?

1. ஞாயிறுகொல், வலியதுகொல் என்பனவற்றில் குற்றுகரத்தை முற்றுகரமாகவே கோடலின், அவை மாவருவாய் புளிவருவாய் என்றே கொள்ளப்படும். ஆகலின் இருநிலைமை கோடல் வேண்டியதில்லை என்றபடி.

2. முதற்கணின்ற குற்றுகரம்—நுந்தை. இதுவும் நீநுந்தை என்றவிடத்து வெண்சீர்க்கு(த் தேமாங்காய்க்கு)ப் பதிலாக வைத்து இருநிலைமை கொள்ளாம். என்னை? வந்துநின்றது என்பது இரு சொல்லாயினும் சீர்வகையான் ஒரு சொல்லாயினது போல—குற்றுகரம் முற்றுகரமாக வைக்கப்பட்டு அதுவுந் தேமாங்காய் ஆகவே கொள்ளப்படுதலின் தேமாங்காய்க்குப் பதிலாக வைத்து இருநிலைமை கொள்ளவேண்டியதில்லை என்றபடி. ஒருசொல்லாமாகவே என்றிருப்பது நலம். வேறு என்பது வேண்டியதில்லை.





நுந்தையென்பது ஈரசையாகலானும் அதனை நீநுந்தையென வேறோர் சொற் பெய்து வெண்சீரெனக் காட்டின், அது 'வந்து நின்றது' என்றதுபோலச் சீர்வகையான் வேறோர் சொல்லா மாகவே அது முற்றுகரமாகலானுமென விடுக்க. என்றார்க்குப் [1] போதுபூ என்பதூஉம் இருநிலைமைத்தாகாதாம் பிறவெனின்,— அற்றன்று;

'சேற்றுக்கால், யாட்டுத்தாள், வட்டுப்போர்.'

எனப் பலவும் வருமாகலின் அஃது இருநிலைமைக்கேயாமென்பது. இனி வஞ்சியுரிச்சீர்க்கும் [2] இடைநின்ற குற்றுகரங்களை வன்றொடராக வருவித்துக்கொள்க. இனிச், [3] இறுதிக் குற்றுகரங்கள் விரையாது நிற்றலும் உடையவென்பது.

"சீர்வகைந் நிற்றது சீரெனப் படுமே." (ந. உ. ச)

என்றவழிக் கூறியவாற்றானறிக.

இனிச் சூத்திரம் வரையாது கூறினமையின் [4] அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் இருநிலைமையாகவும், இருபத்தெட்டுச்சீர் நான்கு நிலைமையாகவும், எட்டுச்சீர் எட்டு நிலைமையாகவும் கொள்ளப்படும். அவற்றுள்,

இருநிலைமைப்படுவன நேரீற்றுச்சீ ரெட்டு, நிரையீற்றுச்சீ ரெட்டு, நேர்பீற்றுச்சீர் நான்கு, நிரைபீற்றுச்சீர் நான்கு என இருபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். அவை:—[5] மாபோகுவாய் மாவழங்குவாய் பாம்புசேர்வாய் பாம்புவருவாய், புலிபோகுவாய்

---

1. போதுபூவையும் நேர்நிரையாக வைக்கின் இருநிலைமை யுடையாதாமெனின் சேற்றுக்கால் முதலியன போதுப்போல வாராது குற்றுகரம் பிரிந்து வருதலின் நேர்பு நேராகவே கொள்ளப்படுதலின் அவைபோலப் போதுபூவும் இருநிலைமை யடையும் என்றபடி.

2. இடைநின்ற குற்றுகரம் என்றது வஞ்சியுரிச்சீரில் மாபோகுவாய் என்பதுபோல வருவனவற்றிலுள்ள போகு என்பது போல்வன. அவற்றையும் யாட்டுத்தாள் என்பதுபோல வன்றொடராக வருவிப்பின் ஓசை பிளந்து காட்டும் என்றபடி.

3. சீரிறுதிக் குற்றுகரமென்றது சார்ந்து, வரகு என்பன போலும் அசைச்சீராய் வருவனவற்றி னிறுதிக் குற்றுகரத்தை. இவை முற்றுகரமாக நில்லாது என்றபடி.

4. அறுபது வஞ்சியுரிச்சீர் என்றது வெண்சீர் நான்கையும் நீக்கி.

5. இவை நேரீற்றுச்சீர் எட்டுக்கும் உதாரணம்.

புலிவருவாய் களிறுசேர்வாய் களிறுவருவாய் எனவும், [1] மாசேர்சுரம் மாவருசுரம் மாபோகுசுரம் மாவழங்குசுரம், புலிசேர்சுரம் புலிவருசுரம் புலிபோகுசுரம் புலிவழங்குசுரம் எனவும், [2] மாசேர்காடு மாவருகாடு புலிசேர்காடு புலிவருகாடு எனவும், [3] மாசேர்கடறு மாவருகடறு புலிசேர்கடறு புலிவருகடறு எனவும் வரும்.

இவ்விருபத்துநான்கும் [4] இருநிலைமையால் நாற்பத்தெட்டா மென்பது.

இனி, நான்கு நிலைமைப்படுதற்கேற்ற இருபத்தெட்டும் வருமாறு:

பாம்புபோகுவாய் பாம்புவழங்குவாய் களிறுபோகுவாய் களிறுவழங்குவாய் எனவும், பாம்புசேர்சுரம் பாம்புவருசுரம் பாம்புபோகுசுரம் பாம்புவழங்குசுரம் எனவும், களிறுசேர்சுரம் களிறுவருசுரம் களிறுபோகுசுரம் களிறுவழங்குசுரம் எனவும், மாபோகுகாடு மாவழங்குகாடு புலிபோகுகாடு புலிவழங்குகாடு எனவும், பாம்புசேர்காடு பாம்புவருகாடு களிறுசேர்காடு களிறுவருகாடு எனவும், மாபோகுகடறு மாவழங்குகடறு புலிபோகுகடறு புலிவழங்குகடறு எனவும், பாம்புசேர்கடறு பாம்புவருகடறு களிறுசேர்கடறு களிறுவருகடறு எனவும் வரும். இவற்றை,

'பாம்புபோகுவாய், பாம்புமன்னுவாய்,
மின்னுப்போகுவாய், மின்னுக்கோளுவாய்.'

எனை, ஒன்று நான்காக வாய்பாடு கொடுத்து ஒட்டியுணர்க.

இவற்றுள், உரியசை முதற்கணின்ற நிரையீற்று களையும் ஒன்று நான்கு செய்யுங்கால்,
நான்

'பாம்புசேர்காம், பாம்புசேர்வது.
மின்னுச்சேர்காம், மின்னுச்சேர்வது.'

என்றாற்போல வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க. இவை யிருபத்தெட்டும் விரிப்ப நாற்பத்திரண்டு வஞ்சியுரிச் சீராம்.

---

1. இவை நிரையீற்றுச்சீர் எட்டுக்கும் உதாரணம்.

2. நேரீற்றுச்சீர் நான்கற்கும் உதாரணம்.

3. நிரையீற்றுச்சீர் நான்கற்கும் உதாரணம்.

4. இருவிகலமை யுடைதற்குக் குற்றுகர அசைகளுக்கு முற்றுகர அசைகளைப் பெய்து காண்க; மாபோகுவாய் = மாமன்னுவாய் என்பதுபோல.

இனி, எட்டுநிலைமைப்படுஞ்சீர் எட்டுமாவன :—

பாம்புபோகுகாடு பாம்புவழங்குகாடு களிறுபோகுகாடு களிறுவழங்குகாடு எனவும், பாம்புபோகுகடறு பாம்புவழங்குகடறு களிறுபோகுகடறு களிறுவழங்குகடறு எனவும் வரும்.

இவை மும்மூன்று உரியசையுடைமையின் முதற்கணின்ற உரியசையிரண்டும் நான்கு நிலைமை எய்தும். பின்னர் நின்ற உரியசையொன்றனை இருநிலைமையாக்கி அதற்கேற்ப முன்னர் நின்ற நான்கினையும் வேறுவேறு கூட்ட எட்டாமென்பது. உதாரணம் :

பாம்புபோகுகாடு மின்னுப்போகுகாடு பாம்புமன்னுகாடு மின்னுமன்னுகாடு, பாம்புபோகுகாவு மின்னுப்போகுகாவு பாம்புமன்னுகாவு மின்னுமன்னுகாவு என வரும். இவ்வாறே ஒழிந்த சீர் ஏழனையும் வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க. அறுபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம்.

இவ்வாற்றான் இருநிலைமையும் நான்குநிலைமையும் எட்டு நிலைமையும்பட்ட சீரெல்லாந் தொகுப்ப வஞ்சியுரிச்சீர் இருநூற் றிருபத்துநான்கெனப்படும். இவற்றுள் ஏழெழுத்தும் எட்டெழுத் தும் ஒன்பதெழுத்தும் பெற்றசீர் இருபத்துமூன்றுள. அவை நேர்நிலை வஞ்சிக்காகாவென்பது.

"உறழ்நிலை யிலவே வஞ்சிக்கு." (௫. ௯௧)

என்புழிச் சொல்லுதும்.

இனி, [1] ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒன்று நான்கு நிலைமைப் படுமென்பதூஉம் [2] ஈண்டடங்கும். நீடுகொடி குளிறுபுலி என்பன இருநிலைமைப்படும் என்பது கூறினும் என்றார்க்கு அவற்றை இருநிலைமை யென்பதென்னை? நீடுகொடி நீடுவது எனவும், நாணுத்தளை நாணுவது எனவும் ஒன்று நான்காம் பிறவெனின்,—அற்றன்று; நீடுவது (௨௩) என்பதனை அலகு வைக்குங்கால்,

1. ஆசிரியவுரிச்சீர் நான்கு நிலைமைப்படல்: பாம்புபோகு, மின்னுப்போகு, பாம்புமன்னு, மின்னுமன்னு எனவும்; பாம்பு வழங்கு, மின்னுவழங்கு, பாம்புவிரவு, மின்னுவிரவு எனவும்; களிறுபோகு, அரவுபோகு, களிறுவிரவு, அரவுவிரவு எனவும்; களிறுவழங்கு, அரவுவழங்கு, களிறுவிரவு, அரவுவிரவு எனவும் வரும்.

2. ஈண்டு—வஞ்சியுரிச்சீருள்.



“அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி.” (௩௨௩)

ன்பதனான், அவ்வச் சீராய் இசையாவாகளிற் பூமருது (௨௩௭) ன்னுஞ் சீராக வைக்கப்படுமாகலானென்பது. (௪௨)

[எழுத்தெண்ணிச் சீர் வகுக்குங்கால் ஒற்றுங் குற்றுகரமும் ஆய்தமும் எண்ணப்படா எனல்]

௪௩. உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ
வுயிர்த்திற மியக்க மின்மை யான.

இது, மேல் எழுத்தெண்ணிச் சேர் வருத்தமுறையானே
...த்தும் ஆய்தமும் குற்றுகரமும் ஒருங்கெண்ணப்படுத லெய்
...னவற்றை விலக்கினவாறு.

இ—ள்: உயிரில் எழுத்தும் எண்ணப்படாது — தத்தம்
...சை இனிது [1]விளங்கத் தத்தந் தன்மையான் ஒலித்தற்
...ருழிவில்லாத எழுத்துக்கள் ஈண்டு எண்ணப்படா; உயிர்த்
...தம் இயக்கம் இன்மையான் — அங்ஙனம் எண்ணப்படாதவும்
...ழுத்தெனப்படுதலிற் சிறிது காப்புடை பொருந்தினையான்
...லிக்கலும் மொழிசார்ந்து ஒலிக்கலும் உடையவன்றே? அவ்
...ைம் ஒருவாற்றான் உயிர்க்குத் திறமுண்டாயவாயினும் அவ்
...யிர்க்குத் திறம் ஈண்டுச் செய்யுட்பாற்படுங்கால் உபகாரப்பட
...டுக்குமாதலைவரகவின் எண்ணப்படா என்றவாறு.

மேற் சிறந்த இருநிலைப்படுத்த அதிகாரத்தான் ஒற்
...றும் குற்றுகரமுமே ஈண்டு விலக்கினனென்பது இச்சூத்திரம்
...த்தகாயிற்று.

"ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்." (௩. ௨௦)

...என மேற்கூறினனாதலினென்பது.

"பேர்த்து சென்று சார்த்து ஆர்த்து."

...ன ஒற்றும் குற்றுகரமும் ஒழிந்தா [2] எண்ணப்பட்டமையின்
...ழுத்தடியாயிற்று. பிறவும் அன்ன. (௩௩)

1. விளங்கத் தத்தந் தன்மையான் என்பது விளங்கத்தக்க தன்மையின் என்றிருந்திருக்கவேண்டும். தன்மையான்—தன்மையோடு.

2. பட்டமையிவ் வெழுத்தடியாயிற்று என்பதைப் பட்டமையின் நாலெழுத்தடியாயிற்று என்று கண்ணழிக்க.



[சமநிலை வஞ்சியடி இருசீரான் வருமெனல்]

௪௫. வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்.

இது,

"நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்."

(௩.௫௭)

எனவும்,

"தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே,"

(௩.௫௮)

எனவும் எழுத்தெண்ணி வரையறுக்கப்பட்டசீர் இரண்டு

கொண்டது வஞ்சியடியென்பதுணர்த்துதல்

றாகலிற்று.

இ—ள்: குறளடியே வரையறையுடைய வஞ்சியடி யெனப் படுவது என்றவாறு.

ஏகாரம் பிரிநிலை; என்னை? சிறப்புடை வஞ்சியடியைப் பிரித்து வாங்கிக்கொண்டமையின்; எனவே, மூச்சீரான் வரும் வஞ்சியடியும் உள; அவை கட்டளையடியல்லவென்றவாறாயிற்று.

இங்ஙனங் கூறவே, வஞ்சியடியும் ஒருவாற்றான் உறழ்ந்துகொள்ள வழி காட்டியவாறாயிற்று. இவ்வாறு கூறுங்கால் மூன்று பாவிற்குங் கூறினான் இதற்குக் கூறியதிலனென்னக் குன்றக்கூற (கூகூ) லென்னுங் குற்றமாமென்பது; இதனை மேல்,

"குறளடி முதலா வளவடி காறு
முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப."

(நூ. கூக)

என [1] உறழ்நிலை ஒருவாற்றானே [2] கூறுமென்பது. அச்சூத்திரத்தான் முச்சீரும் உறழ்பவென்று கொள்பவெனின்,—அஃதே கருத்தாயின் [3] இருசீரும் [4] முச்சீரும் வஞ்சிக்கென்பவென்று

உடனிறுத்தான்மன் ஆசிரியனை மறுக்க.
(௪௬)

[நேர்நிலை வஞ்சிப்பாவிற்கு வருஞ்சீர் மூன்றெழுத்திற் சுருங்கி வாராதெனல்]

௧௫௭. நன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே.

இது மேற்கூறிய வஞ்சியடிக்கண் இருசீர்க்கும் பெருமைக் கெல்லை,

---

1. உறழ்தல்—அடியுறழ்தல்.
2. கூறும் என்றது ஆசிரியனை.
3. இருசீர்—சமனிலை வஞ்சிக்குரியது.
4. முச்சீர்—வியனிலை வஞ்சிக்குரியது.



"நேர்நிலை வஞ்சிக் காகு மாகும்," (௧௫௪)

என்று கூறினன்; ஈண்டு அவை மூன்றெழுத்திற் சுருங்கா வெனச் சுருக்கத்திற்கு எல்லையுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: வஞ்சியடிச்சீர் மூன்றெழுத்திற் சிறுமைபெறும் என்றவாறு.

பான்மையெனக் கொள்க.

(சஎ)

[வஞ்சியடியுள் அசை கூனாகி வருமெனல்]

௩௯௦. அசைகூ னாகு மவ்வயி னான.

இதுவும், அதற்கெய்தியதோர் விதி.

இ—ள் : மேற்கூறிய வஞ்சியடி

இரண்டன்கண்ணும் நான்

கசையுங் கூனாகி வரப்பெறும் என்றவாறு.

எனவே, அடியெனப்பட்ட இருசீர்க்கும்

முச்சீர்க்கும் அசை

கூட்டிக்கொண்டு சொல்லப்படாவென்றவாறு.

அவை :

“வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப் போன்றன.”

(புறம். ௪)

எனவும்,

“அடி, அதர்சேர்தலின் அகஞ்சிவந்தன.”

எனவும்,

“வண்டு, மலர்சேர்ந்து வாய்பரிந்தன.”

னவும் இவை மூன்று பாவினும் அளவடிக்கட் சீர் கூறுவின
வாதா ; என்றார்க்கு, நேர்பசை நிரைபசைகளையுஞ் சீர்நிலை பெறு
மென்றுகூறின் அவற்றையும்,

"சீர்கூ றுத னோரடிக் குரித்தே."

ரன்றதனுளே கொள்வலெனின்,
ரென்றுமென்பது,
அசைச்சீரினை வாளாது

"சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது."

(௧௫௧)

ன்றவழிக் கூறியவதனுள் அறிக. அசைச்சீரினை வாளாது
ரென்னுமைக்கு மேலைச் சூத்திரமும் இச்சூத்திரமுந் தாமே
கரியாமினவென்பது; என்றார்க்கு, இவற்றையும் முதற்கண்ணே
ரட்டியதென்னை? சூத்திரத்துள் அவ்வாறு வைத்துரைத்த

---

1. பயனிலை கின்றுவற்றும் என்றது வாள் என்பது வலந்
ர என்பதனொ டியையின் வாளானது வலந்தர என்றும்
றுப்பட்டன என்பதற்கு எழுவாய் இன்றும். இன்றாகவே
ந்து நின்றும் பயனில்லையாம். ஆதலால் வாள்பிரிந்து கூறும்
ன்றால் மறுப்பட்டன என்பதனோடு முடியும் வலந்தர என்பது
டைப்பிறவரலாகிப் பொருந்தும் என்றபடி. அவாய்நிலையான்
வரும் எழுவாய் வேறுஇன்மையின் நின்ற வற்று மென்றார்.
"வாள் வலந்தர என்பதை ஒருசீராகக் கொண்டால் பின்வரும்
டியிலுள்ள அடியென்பது இடையிற் கூறும்" என்பது பிறர்
ருத்து. அது பொருந்ாதென்பது பேராசிரியர் கருத்து.

2. கரி—சான்று.

இல்லையாலெனின்,—[1] எதிர்புதிக்
கோடலென்பதனன் 'முதற்க ... னின்று'
என்றது கொள்ளப்படும். இக்கருத்தானே
வஞ்சிப்
பாவிற்கும் அவ்வாறே கொள்க.
(சகூ)

[ஐவகையடியும் விரிக்குங்கால்
அறுநூற்றிருபத்தைந்தடியாகுமெனல்]

கஉ௲. ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த
வெழுபது வகைமையின் வழுவில வாகி
யறுநூற் றிருபத் தைந்தா கும்மே.

இது, முன்னர்ச் சிறப்புடைத்தென வேண்டிய நாற்சீரடியினைக் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென வகுத்தமைபாமாறு கூறினன்; (கசஅ, கசகூ, கடுo, கடுக, கடுஉ) இனி, அறுநூற்றிருபத்தைந்தென [2] அவைபட்டவிகற்ப முங் கூறியவாறு.

இ—ள் : மேற்கூறிய ஐவகையடிபினையும் விரிக்குங்காலைப் பொருள்வகையமைந்த பதினேழ் நிலத்து எழுபதுவகைக் குற்ற நீங்கி அறுநூற்றிருபத்தைந்தாம் என்றவாறு.

எனவே, பதினேழ் நிலத்து ஏறினும், எழுபதுவகைக் குற்றம் விரவச்செயினும் அறுநூற்றிருபத்தைந் தெனப்படா வென்பதாம். பதினேழ் நிலனும் ஆசிரியம் பெறுமென்பதூஉம், வெண்பாவுங் கலிப்பாவும் ஓரோவொன்று எட்டுநிலம் பெறு மென்பதூஉம் முன்னர்ச் சொல்லுதும். அவை மூன்றுந் தொகுப்ப முப்பத்துமூன்று நிலனாயின.

[3] வெள்ளைநிலம் பத்தென்பார்க்கு முப்பத்தைந்து நிலனும். எழுபது கூற்று வழுவெனப்பட்டன தளைவழூஉ. தளைவழூவா வன:—ஆசிரிய நிலம் பதினேழனுள் வெண்டளையுங் கலித் தளையுமாகி வேற்றுத்தளை தட்ப [4] முப்பத்துநான்கு தளைவழூஉ

---

1. ஏற்புழிக் கோடல்—சொன்ன விதியை ஏற்ற இடத் திற் கோடல். என்றது செய்யுட்கண் முதலிலேயே சீர் கூறுதலின் அவ்விடமே கொள்ளவேண்டும் என்பது கருத்து.

2. வகைப்பட்ட எனவும் பாடம்.

3. யாப்பருங்கல விருத்தியுள்ளும் வெள்ளை நிலம் பத்தெனக் கூறப்படுகின்றது.

4. வெண்டளை தட்பப் பதினேழும் கலித்தளை தட்பப் பதினேழும் ஆக முப்பத்துநான்கு தளைவழூஉவாம்.

³ "ஞாயிறு வரகுவண்டு வண்டு வண்டு"

என்பது கலித்தளை தட்ப ஆசிரியவடி அன்றாவான் செல்லு மெனவுங் கூறி மறுக்க.

இனி, ஆசிரியத்துட் கலித்தளை தட்குங்கால் அவர்தாந் தளை வேண்டுமாற்றான் வெண்சீர் நிற்ப இறுதி நிரை வரவேண்டு மாகலானும், ⁴ கட்டளையடிக்கண் வெண்சீர் வருமென்றிலனாக லானும்,

---

1. இரண்டுதளை—வெண்டளை, கலித்தளை.

2. குறிப்பசை என்று இவர் கூறியது நன்கு புலப்பட வில்லை. ஆயினும் குறிப்பிசை என்று இருக்கலாம் என்பது எமது கருத்து. என்னை? அது கூறப்பட்ட உறுப்பினுள் இன் றென்றவாறு என்று கூறலின், முன்னும் (இரண்டாம் சூத்திரத் தும்) குறிப்பிசை இன்றியமையாத உறுப்போடு எண்ணப்படா தென்று கூறுதல் காண்க. இதிற் கூறிய ஏனைக்கும் நன்கு புலப்படவில்லை.

3. ஞாயிறு என்பதன்முன் வருகுவண்டு என்பது வரின் கலித்தளை என்க. நிரையீற்று இயற்சீர்முன் நிரை வெண்சீர் வரின் கலித்தளை என்பது இவர் கருத்து. அது "நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல் — வரைநிலையின்றே அவ்வடிக் கென்ப" என்னுஞ் சூத்திரஉரையால் அறிக. (கஎஉ-ம் சூத்திரம்)

4. கட்டளை அடி. என்றது ஆசிரியத்துட் கட்டளையடியை.



"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே."

(௩௪௧)

என்பதனான் [1] இயற்சீரை வெண்சீராக்கிக்கொள்ளினும் அச் சூத்திரத்துக்கு அவ்வாறு பொருளுரைப்பிற் [2] படுங் குற்றம் ஆண்டுக் கூறினுமாகலானும் அது நிரம்பாதென்பது. அற்றன்றி யும், ஓரெழுத்து முதலிய நிலங்கள் ஒரோநிலத்து இரண்டும் மூன்றும் தளைவழுக் காட்டலாமாகலின் எழுபதுவகையின் வழு வெனலுமாகாது என்பது. இனி,

“அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய.” (௩௭௦)

என்னும் [3] எடுத்தோத்துக் கிடப்ப, இலேசினான் இரண்டுநிலை யேற்றி வெள்ளைநிலம் பத்தெனலுமாகாது; என்னை?

[4] “அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
இருநெடி லடியுங் கலியிற் குரிய.”

(௩௭௧)

என வோதினன்; இதனானுஞ் சிறந்த வெண்பாவிற்கும் அங்ஙனம் ஓதுவான்மன் ஆசிரியன் அதுவே கருத்தாயினென்பது. அல்ல தூஉங் கலிப்பாவினுள் வெண்சீரொன்றினுங் கலியோசை சிறக்கு மென்று பதினேழெழுத்தடியான் வந்த வெண்பாவடியினைத் [5] தாழுந் தளைபவாகலானும் அது கூறி நிரம்பாதென்பது.

மற்றென்னை தளைகொள்ளுமாறெனின், — ஆசிரியத்துள் இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுரிச்சீர் நான்கும் அசைச் சீர் நான்குமென இருபத்தேழாகி,

“எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலும்” (௩௫௫)

இன்றி வரும்.

---

1. இயற்சீரை வெண்சீராக்கல் என்றது, ஞாயிறு என்பதை மாசெல்வாய் ஆக்கல். அங்ஙனமாக்கிய மாசெல்வாய்முன் வரகுவண்டு என வருவித்துக் கலித்தளையாக்கல் என்பர் பிறர்.

2. படுங்குற்றம் என்றது இயற்சீர்முன் நிரைமுதல் வெண்சீர் வரினும் கலித்தளையாமாதலின் இயற்சீரை வெண்சீராக்கல் குற்றம் என்றும் 'சுற்றமை நிரையியற்று' என்றது 'நிரையசை' என்றது மிகையாதலின் குற்றமாமென்றுங் காட்டியவற்றை.

3. எடுத்தோத்து—சூத்திரம். இலேசு—மிகை.

4. அளவடியாவன—பத்தெழுத்தடி முதல் பதினன்கெழுத்தடி வரையுமுள்ளவடி; அவற்றுள் மிகுதி என்றது பதின்மூன்றெழுத்தடியையும் பதினன்கெழுத்தடியையும்.

5. தாழும் என்றது வெள்ளைக்கிலம் பத்தென்பாரை.

ளியல் ]

# பொருளதிகாரம்

ங.ஊ

நான்காம். இது [3] பயனில் வெளி.

[4] "நாலசை யுரியசைச்சீர் நாலிரு [4] பொதுவசைச்சீர்
பால்வேறு பாட்டியற்சீர் பத்தொன்ப தாக

விருபஃதேழ் சீரகவற் கீரெண் டாதி

யிருப தெழுத்தளவு மேற்று."

[5] "ஆசிரியப் பாவினுள் அகந்தரேற மொற்றொன்ப
தாதி நிலமாறு ஐவகைச்சீர் வீறும்
நிரையசைச்சீர் நேரசைச் சீர்க்கொள்ளென் றேற்ற
வரையாதெழுத் தெண்ணிற்றே வந்து."

[6] ஓரெழுத்துச் சீரும் ஓரெழுத்தசைச்சீருஞ் சுருக்கத்திற் கெல்லையாகிய சீரகவலின் அடியை சுருக்கத்திற்கு எல்லையாகிய [6] நாலெழுத்தடி முதற் பதினேழெழுத்தடியளவும் [7] உயரும்.

1. பயன்—பொருள்.

2. நான்கு பகுதி யுரியசைச் சீரும் நான்கு பகுதியான அசைச்சீரும், பகுதி வேறுபாட்டையுடைய இயற்சீர் பத்தொன்பதுமாக இருபத்தேழு சீரையும் அகவலடிக்கு (ஈரிரண்டு) நாலெழுத்துத் தொடங்கி இருபது எழுத்துவரையும் ஏற்று. ஏற்றும்வகை அடுத்த பாட்டாலறிக.

3. அகவற்சீர் என்பது அசைவருஞ்சீர் என்றிருத்தல் வேண்டும். இயற்சீர் பத்தொன்பதெனப் பின் வரலின்.

4. அகவற்கண் நாலெழுத்தடி முதலாக ஒன்பதெழுத்தடி வரையும் ஐவகைச் சீராலும் நிலம் ஆறும். நேரசைச்சீரினும் நிரையசைச்சீர்க்கு ஒவ்வோரெழுத்து முதனிலத்தில் ஏறலால் ஈற்று நிலத்திலும் ஒவ்வோரெழுத்து ஏறிவரும். நான்கு முதல் ஒன்பதுவரையு மெண்ணி ஆறு நிலமாதல் காண்க.

5. ஓரெழுத்துச்சீர்—நுந்தை.

6. நான்கெழுத்து அடிமுதல் பதினைந்து எழுத்தடிவரையும் கஉ அடியாதல் எண்ணிக் காண்க. இவ்வாறே ஏனைய ஐந்தெழுத்து முதலாய அடிகளையும் எண்ணிக் காண்க. அவற்றை இங்கே விளக்கிக் காட்டுதும்:—

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | நிலம் | 4 | எழுத்தடி முதல் | 15 | எழுத்து அடிவரை | 12 | அடி |
| 2 | ,, | 5 | ,, | 16 | ,, | 12 | ,, |
| 3 | ,, | 6 | ,, | 17 | ,, | 12 | ,, |
| 4 | ,, | 7 | ,, | 18 | ,, | 12 | ,, |
| 5 | ,, | 8 | ,, | 19 | ,, | 12 | ,, |
| 6 | ,, | 9 | ,, | 20 | ,, | 12 | ,, |

7. உறழும் எனவும் பாடம்.

ஒழிந்தசீர் எட்டும் நிரையீறுகளின் ஏழெழுத்தாதி பதி
னெட்டெழுத்தடியளவும் உறழும்; அவை: புளிமா வண்டு

1. நுந்தை பன்னிரண்டடி யுறழுமாறு காட்டுதும்.

| | | | |
|---|---|---|---|
| ந்தை வண்டு | வண்டு | வண்டு | நாலெழுத்தடி |
| ந்தை தேமா | வண்டு | வண்டு | ஐந்தெழுத்தடி |
| ந்தை தேமா | தேமா | வண்டு | ஆறெழுத்தடி |
| ந்தை தேமா | தேமா | தேமா | ஏழெழுத்தடி |
| ந்தை மேவுசீர் | புளிமா | வண்டு | எட்டெழுத்தடி |
| ந்தை மேவுசீர் | புளிமா | தேமா | ஒன்பதெழுத்தடி |
| ந்தை பாதிரி | கணவிரி | வரகு | பத்தெழுத்தடி |
| ந்தை பாதிரி | கணவிரி | புளிமா | பதினோரெழுத்தடி |
| ந்தை பாதிரி | நளிமுழவு | புளிமா | பன்னிரண்டெழுத்தடி |
| ந்தை காருருமு | நளிமுழவு | புளிமா | பதின்மூன்றெழுத்தடி |
| ந்தை காருருமு | நளிமுழவு | உருமுத்தீ | பதினான்கெழுத்தடி |
| ந்தை காருருமு | நளிமுழவு | நளிமுழவு | பதினைந்தெழுத்தடி |

இதுபோல ஏனைய சீர்களு முறழப்படும்.



வண்டு வண்டு எனவும், புளிமா
காருருமு நளிமுழவு நளி முழவு எனவும்,
பாதிரி வரகு வண்டு வண்டு எனவும் பாதிரி
நளிமுழவு நளிமுழவு நளிமுழவு எனவும் உறழ்ந்தவழிப் புளிமா
ஆறெழுத்துமுதற் பதினேழன்காறும் உயர்ந்தவாறும், பாதிரி
ஏழெழுத்துமுதற் பதினெட்டன்காறும்

உயர்ந்தவாறுங் கண்டு கொள்க. ஒழிந்தனவும் அன்ன.

இனி, நாலெழுத்தாச்சீர் எழுவகைய; அவை: கணவிரி
காருருமு பெருநாணு உருமுத்தீ மழகளிறு
நாணுத்தளை உரறு புலி என்பன.

இவையெல்லாம் எட்டெழுத்தடிமுதற் பதினைந்தெழுத்தளவும் உயர்ந்தே ஓரோவொன்று பன்னிரண்டடிபெறும்; அவை: கணவிரி வாரு வண்டு வண்டு எனவும், கணவிரி நரைபுருமு நரையுருமு எனவும் வரும்; ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. ஐந்தெழுத்தாச்சீர், நரையுருமு விரவுகொடி என இரண்டு. அவை ஒன்பதெழுத்தடி முதல் இருபதின்காறும் உயரும்; அவை: நரையுருமு வாரு வண்டு வண்டு எனவும், [1] கலனாவு கலனாவு கலனாவு நலனாவு எனவும் வரும்; விரவுகொடிக்கும் இஃதொக்கும். இவ்வாற்றான் ஓரெழுத்தாச்சீரிரண்டும், ஈரெழுத்தாச்சீர் ஆறும், மூவெழுத்தாச்சீர் பத்தும், நாலெழுத்தாச்சீர் எழும், ஐயெழுத்தாச்சீர் இரண்டுமாகச் சீர் இருபத்தேழினையும் பன்னிரண்டிற் பெருக்கிப்பெற்ற ஆசிரிய வடி முந்நூற்றிருபத்துநான்கும் [2] பாட்டினுந் [3] தொகையினும் வருமாறு கண்டுகொள்க.

இனி, வெண்பாவடி

1 "இயற்சீ ரசைச்சீ ரிருபத்து மூன்றே
குரிச்சீர் நான்கே ழொன்பதிற்று மூன்று
மயக்கறு வெள்ளைக் கேழு தொடர்ந்தி
யுயர்சீ பன்னான்கெண் ணெட்டு."

2 "நாலெழுத்துச் சீரெல்லை மேலெழுத்தா றாகியத்
தாதிபெறு தொன்றேறிற் றுங்கழுயோ பதினெழுத்தாள்
வந்தசீர் வெண்பாவிற் பத்தெழுத்தாள் வாரமா
யைஞ்சீர்க்கு நான்கா முதல்."

துன்றை வண்டு ஞாயிறு போதுபூ போரேறு என ஐங்…ம் ஏழெழுத்தடி முதற் பதினெழுத்தடியளவும் உயர்ந்து …ஓரோவொன்று எட்டடி யுறழப்பெற்ற அடி நாற்பதாம்.

"ஞாயிறு போதுபூ போரேறு அந்தைவண்
டேழாதி யெட்டா மடி."

தேமா மின்னு வரகு பாதிரி வலிபத மேவுசீர் கன்னலை …பூமருது கடியாறு விறகுதீ மாசெல்வாய் எனப் பதினொன்றும் …எட்டெழுத்தடி முதற் பதினெழுத்தடியளவும் ஒவ்வொன்று …ஏழடியுறழப்பெற்ற அடி எழுபத்தேழாம்.

"மின்னு வரகு வலிபது மேவுசீர்
தன்னுணு பாதிரி பூமருதே *யாறுதீ
மன்னுத மாசெல்வாய் தேமா வெனப்பதினொ
ரெண்ணறு + மெட்டாதி யேழு."

---

1. இயற்சீர் பத்தொன்பதும் அசைச்சீர் நான்குமாக 23 …சீர் என்க. உரிச்சீர்—உரியசைச்சீர். ஒன்பதிற்று மூன்று 27. …இவை வெண்பாவுக்குரிய சீர். ஓரடி எழுத்துமுதல் பதினொன்று …வரையும் உயர்தல் மேலே காட்டப்பட்டது.

4. ஈரைந்து ஈரேழுற்று ஈரைந்து என இசைப்பருக்க. இருசீரும் பத்தெழுத்து முதல் பதினான்கு எழுத்துவரை ஐந்தடி உறழ இரண்டற்கும் பத்தடியாம். இவை முறையே தொகுப்ப வெண்பா அடி நாற்பது, எழுபத்தேழு, அம்பத்து நான்கு, பத்து ஆக நூற்றெண்பத்தொன்றாகும்.

5. வெண்பா அடி உறழுமாறு :—

நந்தை வரகு வரகு வரகு
நந்தை வரகு வரகு காடியாறு
நந்தை வரகு வரகு கணவிரி

— 7 எழுத்தடி.
— 8 ,,
— 9 ,,

நந்தை வரகு புளிமா கணவிரி — 10
,,
நந்தை புளிமா புளிமா கணவிரி — 11
,,
நந்தை புளிமா கணவிரி காருருமு — 12
நந்தை கணவிரி காருருமு நனிமுழவு — 13
நந்தை நனிமுழவு காருருமு காருருமு — 14
,,
,,
,,

இவற்றுள் எழெழுத்தடி தன்னொடு தன்னைத் தொடுக்குங்கால் தளைவழுவும், ஆதலின் அது நீக்கிக்கொள்ளப்படும். ஏனைய சீர்களையு மிவ்வாறே தளைவழுவாது தொடுத்துக்கொள்க. தளைவழுக் களையுமாற்றை மோனைத்தொடை முதலிய சிறப்புச் சூத்திர உரைகளாலறிக.

தூங்கை வரகு வரகு வரகு எனவும், தூங்கை கனிமுழவு
ருருமு காருருமு எனவும், இவை ஏழெழுத்தடிமுதற் பதி
ன்கெழுத்தடியளவும் தூங்கை வந்தவாறு. வண்டினென்பதற்கும்
தொக்கும். ஞாயிறு வண்டு வரகு வரகு எனவும், ஞாயிறு
ருருமு மாவருவாய் காருருமு எனவும் இவை ஏழெழுத்தடி
பதினென்கெழுத்தடியுமாயினவாறு. போதுபூ போரேறு
பனவற்றிற்கும் இஃதொக்கும். தேமா வரகு வரகு வரகு
வும், தேமா கனிமுழவு காருருமு பாதிரி எனவும் எட்
ழுத்தடி முதலாகப் பதினென்கெழுத்தடியளவும் உயர்ந்து
மா ஏழடிபெற்றது. ஒழிந்த பத்துச்சீர்க்கும் இஃதொக்கும்.
ரிமா வரகு வரகு வரகு எனவும், புளிமா புலிவருவாய்
ருருமு தேமா எனவும் இவை ஒன்பதெழுத்தடி முதலாகப்
னென்கெழுத்தடியளவும் உயர்ந்து ஆறடிபெற்றது; ஒழிந்த
டுச்சீர்க்கும் இஃதொக்கும். கனிமுழவு வண்டு வரகு வரகு
வும், கனிமுழவு காருருமு பாதிரி தேமா எனவும் இவை பத்
ழுத்தடி முதற் பதினென்கெழுத்தடியளவும் ஏறி ஐயெழுத்து
முழவு ஐந்தடிபெற்றது; புலிவருவாய்க்கும் இஃதொக்கும்.
த்துக்கெல்லாம் பதினென்கெழுத்தின் ஏறியக்காற் செப்ப
ஓசை திரிபுடைத்தென்பது வல்லார்வாய்க் கேட்டு உணர்க;
னை ?

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே." (௩௨௩)

றலையின்.

"அடியி னுட்ப [1]மதிவருங் குணத்தே."

ப் [2]பிறருஞ் சொல்லுப.

றார்க்கு அவை புறனாமெனவும் உறழாமைக்குக் காரணமுங் கூறுகின்றது.

இ—ள்: அந்நாற்சீரடிபோல் மற்றையடிகளையும் விரிப்பின், அஃது இலக்கணக் கட்டளையின் இறந்துபட்டதாம், அப்பகுதி யெல்லாம் அறிந்தோர் விரிக்குங்காலத்து என்றவாறு.

அளவிறந்தன—எண்ணிறந்தன. அஃது இலக்கணங் கூறுவாரது அன்றென்றவாறு; அஃது எற்றாற் பெறுதுமெனின்,— இதன் முதனூல் செய்த [1] ஆசிரியன் சொல்லுமாற்றாற் பெறுது மென்றவாறு.

கலியடி உறழுமாறு:—

ஞாயிறு புலிசெல்வாய் புலிசெல்வாய் மாசெல்வாய் 13 எழுத்து
ஞாயிறு புலிசெல்வாய் புலிசெல்வாய் புலிசெல்வாய் 14 ,,
ஞாயிறு புலிசெல்வாய் புலிசெல்வாய் புலிவருவாய் 15 ,,
ஞாயிறு புலிசெல்வாய் புலிவருவாய் புலிவருவாய் 16 ,,
ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் புலிவருவாய் 17 ,,

பிறசீர்களையு மிவ்வாறே உறழ்ந்துகொள்க.

1. ஆசிரியனகத்தியன் எனவும் பாடம்.



எனவே, என் சொல்லப்பட்டதாம்; அங்ஙனம் [1] வரையாது சிறப்புடையனவற்றுக்குஞ் சிறப்பில்லனவற்றுக்கும் ஒருங்கு இலக்கணங் கூறின் அவையெல்லாம் எடுத்தோதப்பெறாத இலக்

கணக்காவாம்; அதனால் வரையறையுடையனவற்றுக்கு அன்றி, வாளாதே [2] பரந்துபட்டவற்றையான் இலக்கணங் கூறிற் பயனில் கூற்றாமெனவும், அது கருதி இதன் முதனூல் செய்த ஆசிரியருங் கூறிற்றிலரெனவுங் கூறியவாறு.

வடநூலாசிரியர் [3] ஆறுவகைப் பிரத்தியங்களான் எழுத்துக்களைக் குருவும் இலகுவுமென இருகூறுசெய்து உறழ்ந்து பெருக்கிக் காட்டுவதோராறுமுண்டு. அவரும் இருபத்தாறெழுத்தளவும் உறழ்ந்துகாட்டி, ஒழிந்தன ஒழிந்துபோவர். அவ்வாறே சீர்களையும், குருவும் இலகுவும்போல இருசீரடி இத்துணையெனப் பெருக்கவும் ஒழிந்தனவும் இவ்வாறே பெருக்கவுஞ் [4] சிதைந்ததில்லை. அங்ஙனம் பெருக்குங்காலும் ஓரடிக்

1. வரையாது கூறின் என இயைக்க. வரையாது—வரையறை செய்யாது.

2. பரந்துபட்டனவற்றிற்கும் எனவும் பாடம். இது சிறப்பு. நச்சினார்க்கினியருரை நோக்குக.

3. பிரத்தாரம், நட்டம், உத்திட்டம், குருலகுச்செய்கை, சங்கத்தொகை(எண்),நிலவளவு என்பன ஆறுவகைப் பிரத்தியங்களாம். பிரத்தாரம்—உறழ்ச்சி. நட்டம்—கேடு. உத்திட்டம்—சித்திட்டம். (சுட்டு) (வீரசோழியம் - யாப்பு - ௩௦-ம் செய்யுள் உரை நோக்குக.) குருவாவது நெட்டெழுத்தும் நெடிலொற்றும் குறிலொற்றும் வருவதாம். இலகுவாவது—குற்றெழுத்து வருவதாம். இதனை :—

"உறழ்ச்சிகே டுத்திட்ட மொன்றிரண்டென் றேத்தித்
திறப்படுத்த நின்னிலகுச் செய்கை—சிறப்பித்தாங்
கெண்ணி நிலவளவோ டேய்ந்த விருமூன்றே
திண்ணியோர் கண்ட தெளிவு."

(யாப்பருங்கல விரு. 495-ம் பக்கம்)

என்னும் வெண்பாவானும்,

"ஏறிய நெட்டெழுத் தேநெடி லொற்றே யெழில்வடநாற்
கூறிய சீர்க்குறி லொற்றே குருளாங் குறிலதுவே
வேறியல் செய்கை லகுவென் றுகுரும் வியன்குறிலு
மீறிய விற்பிறி தாமொரு காலென் றியம்புவரே."

என்னும் (வீரசோ. யாப்பு 26) கட்டளைக்கலித்துறைச் செய்யுளானும் அறிக. பிரத்தியம்—தெளிவு என்பர் வீரசோழிய காரர். "செப்பார் தெளிவுக ளாறையும்" என்பதனானறிக. (யாப்பு—27).

4. சிதைவு—அழிவு, குற்றம்.



குறிய சீர் பத்தும் நாலும் ஆயிரமுமாக வைத்து உறழ்ந்தக்
காலும் வருவதொன்றில்லை; அங்ஙனம் உறழினும் இத்துணைச்
சீரான் வந்த அடிக்கே உறழ்ச்சி
கூறுவதொன்று இல்லை
கூறிக்கொள்ளல்வேண்டும்; கொள்ளவே
எத்துணையிடஞ் சென்றக்காலும், இத்துணையென
வரையறைப்பாடு உடையனவல்ல;
அவ்வரையறை இன்மையின் அதனை அளவிலவென்பதற்கோர்
காரணங் கூறல்வேண்டுமாதலான் அதுநோக்கி காற்சீரடி சிறப்
புடைத்தென [1] வேறு பல காரணங் கூறி,
அவற்றுக்கே வரை யறை கூறி, அல்லனவற்றுக்கட்
சொல்லப்படாதென்றான் இச்

சூத்திரத்தானென்பது. அஃதேல், அவை சிறப்புடையவற்றாற் சூத் காரணங் கூறியவாற்றாற் சான்றோர் செய்யுளைப் பயின்று வரல்வேண்டும் பிறவெனின்,—இந்நூல் செய்தகாலத்துத் தலைச் சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியாற் பயின்றுவரச் செய்யுள் செய்தாரென்பது இச்சூத்திரங்களாற் பெறுதுமென்பது. இதன் முதனூல் செய்த ஆசிரியனாற் செய் யப்பட்ட [2] யாழ்நூலுள்ளும் சாதியும் உடைத்துருவும் திருவிரி பிணையுமெனக் கூறப்பட்டவற்றுட் [3] கட்டளைப்பாட்டுச் சிறப் புடையன சாதிப்பாட்டுக்களே; அவை இக்காலத்துப் பயின் றிலவென்று மற்றையவற்றோடு ஒக்குமெனப்படாவென்பது; அல்லதூஉம், உலகத்து மக்கட் பிறவி பலவாயினும் நால்வகை வருணமென்ப, அவர் வரையுறு பிலக்கணத்தாராகவிலென்பது; இனி, அவருள்ளும் அந்தணரும் வேளாளரும்போல இடை பிறவகையோரும் பயின்றிலரென்று சிறப்பிலராகாரென்பது.

இனி, கடைச்சங்கத்தார்

லெவாமோவென்பது. வஞ்சியடிக்கும் இவ்வனம் வரையறை யின்மையறிதாக்கும். அது முன்னர்ச் சொல்லுதும். (ருக)

[குறளடி முதலிய ஐந்தும் ஆசிரியத்துக்குரியவெனல்]

கூச. ஐவகை யடியு மாசிரியக் குரிய.

இஃது, எய்தாதது எய்துவிக்கின்றது; மேல் வகுக்கப்பட்ட அடியினை இன்ன பாவிற்குரிய அடி இவையென்று கூறுதான் அது கூறினமையின்.

இ—ள்: நாலெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ் நிலனும் ஆசிரியத்திற்குரிய என்றவாறு.

“மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்து
..................அறுநாற் றிருபத் தைந்தாகும்.” (கூஉ)

என்றான், அதனை ஈண்டுப் ‘போந்தது ஆசிரியத்திற்கு எய்துவித்தவாறு. அவற்றுக்குச் செய்யுள் ஐந்தடியுங் கூறியவழிக் காட்டப்பட்டது. மற்று,

“மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்.” (கூஉ)

எனவே இதுவும் அடங்காதோவெனின்,—அடங்காது; பாத் தோன்றும் அந்நிலங்கள் பகுத்துக்கொள்ளப் பொதுவகையான் ஆண்டோதினானென்பது; மற்று ஐவகையடியும் ஆசிரியத்துக்கண் வரல்வேண்டுமோவெனின்,—அன்னதோர் வரையறை யுண்டே? வரையாது கூறினமையின் அவையெல்லாவாற்றானும் வருக; வருங்கால் ஐந்தும் ஆசிரியத்துக்கு உரியவென்பதே கருத்து. ஒழிந்த பாவிற்கு நிலங் கூறாரோவெனின்,—ஆசிரியம் பதினேழ் நிலனுமுடைமையின் அக்கூறிய பதினேழ் நிலனுந் தளை விரவுதலின் தளை அதற்குப்பின் கூறித் தளையதிகாரம்

1. அளவடி — கட்டளையடியல்லாத நாற்சீரடி. கட்டளையடி யாற் செய்திலராயினும் கட்டளையல்லாத அளவடியாற் செய் தனர் என்பது கருத்து.

2. கடைச்சங்கத்துக்குப் பிற்காலத்தார்.

3. செய்த அடி — கட்டளையல்லாத அளவடி.

4. போதந்து—போகந் தந்து—கொண்டுவந்து.



பட்டமையின் அவற்றுப்பின் ஒழிந்த பாவிற்கு நிலனுங் கூறு மென்பது.

மற்று, ஆசிரியமென்பது மகரவீற்றின்,

"மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை."

(தொ. எழு. கஅரு)

என்பதனான், அத்துச்சாரியை பெறல்வேண்டுமெனின்,—அது

செய்யுள் விகாரமென்பாருமுளர்; அற்றன்று; ஆண்டு நின்றது நான்காமுருபாயின்றே அது கூறவேண்டா; அதனை ஏழாவ தன் பொருண்மைக்கண் [1] அக்குச்சாரியை ஈறு திரியாது வந்த தென்று கொள்ளப்படும். (௫௨)

[ஆசிரியத்துள்
கட்டளையடியல்லாதவடிக்கண்
தளை விரவிவரினும் நீக்கப்படா
எனல்] | ருகூ. விராஅய் வரினு மொருசார் நிலை
யிலவே.

இஃது, எய்தியது இகந்துபடாமைக்
காக்கின்றது; 'மெய்

வகை யமைந்த பதினேழ் நிலம்' எனவும், 'எழுபது வகையின் வழு' எனவும் மேனின்ற (ருகூஉ) முறையானே ஆசிரியத்திற்குப் பதினேழ் நிலமாமாறு கூறினான். இனி, எழுபதுவகையின் வழுவாயினை, அப்பதினேழ் நிலத்து மாண்டுமாகாதென்பது பட்டதனை இகந்துபடாமைக் கூறினமையின்.

இ—ள்: தளை விரவிவரினும் ஒருவப்படா என்றவாறு.

மற்றிதனைத் தளை விரவிவரினுங்
கட்டளையடியாமெனப்

புறனடுத்தாமென்று கோடுமோ, தளை விரவிற் கட்டளையடியர்காதென்று கோடுமோவெனின்,—தளை மயங்காதனவே தளை துலக்க யடியெனவும் அல்லன கட்டளையடியாகாவெனவுங் கோடுமென்பது. அஃதேல், தளை மயங்கின அடிக்கும் பதினேழ் நிலனுங் கோடுமோவெனின்,—கோடுமன்றே? 'விராய் வரினும்' என்ற உம்மை இறந்தது தழீஇயிற்றாகலி னென்பது. (ருகூ)

---

1. ஆசிரியக்கு என்பதில் அக்கு, சாரியை என்பது இவ்வுரையாசிரியர் கருத்து.

உ.—கோடும்—கொள்ளுதும்.

8. விராய் வரினும் என்ற உம்மை விரவாது வரினும் என்பதைத் தழுவலின் இறந்தது தழீஇயிற்று. ஆதலின் விரவாது வருவது பதினேழ் நிலக்கண்ணுதலின் விரவுதலும் அதன் கண்ணே என்பது பெறப்படும்" என்பது கருத்து.

42



[ஆசிரியத்துள் உரிச்சீரானும் இயற்சீரோடு கூடி கட்டளையடியல்லாத ஐந்தடிக்குமுரியவெனவும் அவற்றுள் நிரையிற்று உரிச்சீரிரண்டுந் தனித்து வருமெனவும்]

௩௬௫. தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினு
மின்சீர் வகையி னைந்தடிக்கு முரிய.

இஃது, எய்தாதது எய்துவித்தது; என்னை? இயற்சீராற் கட்டளையடியாமாறெல்லாம்,

"ஐவகை யடியு மாசிரியக் குரிய." (௩௯௪)

என்னுஞ் சூத்திரங் கூறிப் பின்னும்,

"விராய் வரினு மொரூஉநிலை யிலவே." (௩௯௫)

எனக் கட்டளையடியன்றியும் அளவடி வருமெனவும் அவை பதினேழ் நிலத்தவெனவுங் கூறி, இனி, உரிச்சீரானும் சீர்வகையடி உளவென்பதூஉம், அவையும் பதினேழ் நிலத்தின் இகந்து வாராவென்பதூஉங் கூறுகின்றமையின்.

இ—ள்: தன்சீர்வகையினும்—ஆசிரியவுரிச்சீரானும்; அதனை [1] அதிகாரத்தாற் கொள்ளப்படும்; தளைநிலை வகையினும்—அவ் வாசிரியவுரிச்சீரானாகிய தளைநிலைமைப் பகுதியானும், இன்சீர் வகையினும்—இன்சீர்ப்பகுதியானும், ஐந்தடிக்குமுரிய—அவை யும் மேற்கூறிய ஐவகையடிக்கும் உரியவாம் என்றவாறு.

'ஐந்தடிக்கு முரிய' எனவே பதினேழ் நிலத்தின் இகந்து வாராவென்பதாம். தன்சீரென்றது 'வகை' என்றது அவற்றை இருபகுதியானே,

"முன்னிரை யுறினு மன்ன வாகும்." (௯௨௯)

என்றதூம்,

"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்." (௯௯௫)

என்புழி, [2] உடன் கூறுதற் கூறிய வேறுபாடும் நோக்கியென் பது அதனது பயம்; வருகின்ற தளைவகைக்காயின் ஆசிரிய

---

1. ஆசிரியம் அதிகாரப்பட்டமையின் அதிகாரத்தாற் கொள்க என்றார்.

2. உடன் கூறுதல் என்றது சீரையீற்று ஆசிரியவுரிச்சீ ரிரண்டையும் உடன் கூறுமை.

உரிச்சீரானுந் தளைகொள்ளப்படா, முன்னிரையீற்ற இரண்டு மல்லதென்றவாறு. தளைநிலைவகை சிறப்புடைமையின் அது முற் கூறுகவெனின்,—அங்ஙனமாயினும் அறுவகைச் சீரானுஞ் சீர் வகை யடிவருதல் பெரும்பான்மையாகலானும் அவற்றுள்ளும் நெடுங்கொடி குளிறுபுலி என்னும் இரண்டுமேபற்றித் தளைகோடல் சிறுபான்மை நோக்கியுந் 'தன்சீர்வகை' முற் கூறப்பட்டது. அல்லதூஉந் 'தளைநிலைவகை' முற்கூறின் மேற்கூறிய வியற் சீர்த் தளைமேற் செல்லும், அவ்வாறன்றித் 'தன்சீர்த் தளையே கோடற்கும் அது பிற்கூறினு னென்பது. மற்றுத் தன்சீரானுவதனை இன்சீர் வகையொடு ஐந்தடிக்கு முரித்தென்றதென்னை யெனின்,—ஆசிரிய வுரிச்சீர் நான்கும் நிரைமே னின்றுழி அகவலோசை பிறவாதென்பது அறிவித்தற்கென்பது. எனவே, ஒன்றியவிடத்தும் இரண்டிடத்தும் இன்சீர் வரல் வேண்டு வதாம்.

'இன்சீர் வகையின்' என இயற்சீர்களான் உரிச்சீர்களை வகுத்து நிறீஇக் கொள்ளப்படும்.

உதாரணம்:

"குன்றுகோட்டுத் தொடுத்த பாம்புபுரை பருதி"

எனவும்,

"நிவந்துதோன்று கனிந்திறி னிலங்குகோடு புரைய"

எனவும் இவை இயற்சீரொன்று இடையிட்ட

ஆசிரியவுரிச் சீரான் வந்த நேரடி.

"பாம்புமணி யுமிழும் பாறு ளிங்குவரம்"

என்பது, இயற்சீரிரண்டு இடையிட்டு வந்தது. இதுவும்,

"அசையுஞ் சிறு மிசையொடு சேர்ந்து"

(௩௨௩) என்பதனுள் அகவலோசை வழுவினவாறு அறிந்துகொள்க.

இனி, தன்சீரால் தளைநிலையடி வருமாறு:

[2] "ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ."

(புற. ௫௫)

1. தன்சீர் — ஆசிரியவுரிச்சீர்.

2. ஓங்குமலை — நீடுமதி என்றும் வரப்பாடு.



[1] "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை."

(புற. ௩) எனவரும்.

தளைவகை யென்றது 'நிலை' என்றதனுன், அவற்று இரண்டு ஆசிரியவுரிச்சீரும் அடிமுதற்கணின்று சீராவதன்றி இடைவாராவென்பது கொள்க. தளைநிலையென்றது 'வகை' என்ற தென்னையெனின்,—உரிச்சீரால் தளைவழங்கின் ஓரடிக் கண் இரண்டுவரின் ஓசையுண்ணுதென்பது உணர்வித்தற்கென் பது. இவையும் இன்சீர்வகையொடு வருமெனவே [2] தன்சீர் இயற்சீரொடு தட்குமென்பதாம்; அஃதேல்,

"தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா."

(௩௬௭)

என வருகின்ற சூத்திரத்தானே தன்சீர் பெறுதுமாகலின்,

ஈண்டுத் தளைநிலைவகையே கூறுகவெனின்,—இஃது ஆசிரியத் திற்குக் கூறினுன், அது வெண்பாவிற்குக் கூறினுன்; அல் லாக்கால், அது மிகையாமென்பது.

எனவே, தன்சீர்வகை [3] நாலெழுத்திற்கு உரித்தன்றென்பதூஉம், [4] தளைவகையடி, குறளடி முதன்மூன்று நிலத்திற்கும் உரித்தென்பதூஉம் உரை யிற் கொள்க.

"ஓங்கு கோட்டுமீது பாய்ந்து பாய்ந்து

முசுக்கலை யாடு நாடற்
குரைப்பதை யெவன்கொனந் தோளே
தோழீஇ.''

என்பது, ஐங்தெழுத்தால் தன்சீரடி வந்தது.

"ஆடுகொடி நுடங்கு காடு போந்து
விளங்கிழை நகர்வயிற் சேர்ந்தன
முழங்குக வானந் தழங்குரல் சிறந்தே.''

என்பது, ஏழெழுத்தால் [5] தளைநிலையடி
வந்தது. பிறவும் அன்ன.

இன்சீரென்றது 'வகை' என்றதனால்
இயற்சீர்ப்பாற்
படுத்து இயற்றிக்கொள்ளப்பட்ட [6]
அசைச்சீரும் (௬௨௦) இன்

---

1. உவவுமதி — குளிறுபுலி என்னும்
வாய்பாடு.

2. தன்சீர் — ஆசிரியவுரிச்சீர்.

3. நாலெழுத்திற்கு — நாலெழுத்தடிக்கு. எனவே
தெழுத்தடி முதலாகவரும்.

ஐங்

4. தலைவகையடி — நிரையீற்
ருசிரியவுரிச்சீரடி.

5. தளைநிலையடி — நிரையீற்

ருசிரியவுரிச்சீரடி.

6. அசைச்சீர்—நேரும் நிரையும்,



சீரேயாம்; தன்சீர்வகையினுந் தளைநிலைவகையினும் இடை யிட்டு வந்ததென்பது. இவை மேற்காட்டியவற்றுட் காணப் படும். (ருச)

[வெண்சீர்முன் வெண்சீர்வந்து ஒன்றிய வெண்டளை வெண்பாவில் கட்டளையடிக்கண் வாராவெனல்]

௩௬௭. [1] தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா.

இது, மேல் ஆசிரியத்திற்குத் தன்சீர்வகையுந் தன்றளை வகையுங் கூறியவழியானே வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளை

வகையுங் கூறுகின்றது.

இ—ள்: தன்சீர்—வெண்சீர், உள்வழி—வெண்சீரே வருஞ் சீராகியும் வந்தவழி; என்னை? தளைவகைக்கு இரண்டுசீர் வேண்டு தலானுந் தளைவகை வேண்டா தநிலம் இதுவென்கின்றுனகலானு மென்பது. தளைவகை வேண்டா—தளைவகை நிலைமை கொள் ளப்படா மற்றவ்வடிக்கண் என்றவாறு.

எனவே, வெண்சீர் நிற்ப
இயற்சீர்வந்தொன்றின் வெண்

டளையாமென்பதே கருத்தாயிற்று. இஃது, உய்த்துக்கொண் டுணர்தலென்னும் உத்திவகை. இதனானே வெண்சீர்க்கு வெண் சீரே வந்தொன்றுவது கட்டளையடி யெனப்படாது சீர்வகை யடியாமென்பது பெற்றும்.

"வெண்சீ ரொன்றின் வெண்டளை
கொளாஅல்."

"வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகு
மின்சீர் விரவிய காலை யான."

என்றார் காக்கைபாடினியாரும்.

வெண்சீ ரொன்றியது வெண்டளையாகாதென்றற்குக்
காரண
மென்னையெனின்,—

" அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான."

(கூஎ0)

1. வெண்சீர்நிற்ப வெண்சீர்வரின் வெண்பாவிற்குத் தளை கொள்ளப்படா என்பது கருத்து. இயற்சீர்வெண்டளையே கட்டளைக்குரியது. வெண்சீர்முன் வெண்சீர்வந்து தட்பின் அது கட்டளையடியாகாதென்பது கருத்து.



என்புழி, அளவுஞ் சிந்தும் அல்லாத [1] வேறிய நிலமெல்லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மில் தளைவகை யொக்குமென்றானாகலினென்பது. எனவே, வெண்சீர் நான்கும் ஒன்றிவரின் அது கலிப்பாவிற்குஞ் சீர்வகையடியாவதாயிற்று.

மற்று, வஞ்சியுரிச்சீருந் தன்சீராகலின் இன்னவாறு தளைகொள்ளுமென்றானோவெனின்,— அவை தன்சீருள்வழி ஒன்றினும் ஒன்றாவாயினும், பிறசீர்வந்துழி ஒன்றினும் ஒன்றாவாயினும் வஞ்சித்தளையாகி வரையறையின்மையானும் வஞ்சியடி அறுநாற்றிருபத்தைந்தடிப்புட்படாமையானும் அவை கூறானாயினன் ஆசிரியனென்பது. (நூ)

[இயற்சீர் ஆசிரியத்துக் கட்டளையடிக்கண்
தட்குமாறு இவ்வாறெனல்]

௩௬அ. சீரியை மருங்கி னோரசை யொப்பி
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்.

இது, கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: [2] இயற்சீர் பத்தும் பிறிதொன்றனோடு இயையுங்கால் அவை தத்தம் ஈற்றசை ஒன்றி வருஞ்சீரின் முதலசையோ டொப்ப நிற்பின் ஆசிரியவடிக்குந் தட்கும் முறைமையென்றறியப்படும் என்றவாறு.

'ஒப்பி னாசிரியத்தளை' எனவே ஒவ்வாதொழியின் வெண்டளையென்று எதிர்மறுத்துக் கொள்ளப்படும்; என்னை?

"எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே."

(தொ. சொ. ௬௧) என்றமையின்,

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி"

(பெரும்பாண். ௧)

என்றவழி, நேரும் நிரையும் 'சீரியை யொன்றி' ஆசிரியத்தளையாயின.

மருங்கின் ஓரசை

1. ஏறியநிலம்—12 எழுத்தடிக்கு மேற்பட்டநிலம் என்பது இவர் கருத்து.

2. இயற்சீர்பத்து :— தேமா, புளிமா, கணவிரி, பாதிரி. (325)சேற்றுக்கால், களிற்றுத்தாள்(327) போரேறு, பூமருது, கடியாறு, மழகளிறு (328) என்பன.

ளியல்] பொருளதிகாரம் கக௫

"மல்லர்க் கடந்தா னிறம்போ லிருண்டெழுந்து" (ஐந். ஐம். க) என்புழி முதலடி இயற்சீர் ஒன்றாது வெண்டளையாயிற்று.

மற்றுச் சீரியைமருங்கின் ஓரசையே வரினென்னுது 'ஒப் பின்' என்றதென்னையெனின்,—[1]உரியசை முதலும் ஈறுமாகிய வழி அவை [2]இயலசையோடு ஒப்புமைநோக்கித் தளை கொள்ளினல்லது தம்மொடுதாம் ஒன்றுதல் கொள்ளாரென்றற் கென்பது இதனுனும் பெற்றும். போதுபூ என்பது வருஞ் சீராயவழிப் போரேறு என்பது ஓரசையொன்றிற்றென்று ஆசிரி யத்தளை யென்னுமையென்பது. இனி, [3]அவை நின்ற சீராயவழி நிரையீறாகல் 'அறியல்வேண்டும்' என்ற மிகையானுங் கொள் ளப்படும்; இனி,

'ஈரசையொப்பின்' என்பது, பாடமாக உரைப்பின் நேரும் நிரையும் 4 ஒன்றினென்றவாறுமாமெனக் கொள்க. (ருக)

*[ வஞ்சியடி உறழுமாறு இவையெனல் ]*

ந.கூகூ.

**குறளடி முதலா வளவடி காறு
முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.**

இது, வஞ்சியடி யுறழுமாறும் அதுபெறும் நிலனும் உணர்த்
துதல் நுதலிற்று.

இ—ள்: நாலெழுத்து முதலாகப் பதினொன்கெழுத்தளவும் உறழும் நிலையில வஞ்சியடிக்கு என்றவாறு.

இனி, முதலும் ஈறும்
யாதெனப்படுமோவெனின்,—

5 "தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே."
(௩௫௮) என்றதனுன் ஆறெழுத்தடி முதலாகவும்,

---

1. உரியசை முதலுமீறுமாகியவழி
என்றது, போரேறு
போதுபூ என்றவழி, ரேறு என்பதும் போது
என்பதும் உரி யசையாதலின் அவை
நிரையசையாகவைத்துத் தளைகொண்டு
ஆசிரியத்தளை கொள்ளப்படாதென்பது கருத்து.

2. இயலசை—நேர், நிரை.

3. அவை—உரியசை.

4. ஒன்றல்—ஈரசையுந் தம்முளியைதல்.
என்றது நேரும் நேரும் நிரையும் நிரையுமாக
இயைதல்.

5. ஒருசீர்க்கு மூன்று எனவே இருசீர்க்கும்
ஆறுகும். ௩௩௯


1 "நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்."
(௩௫௯)

என்றதனாற் பன்னிரண்டெழுத்தடியீறாகவும்
உறழுமென்றா

வாறு. எனவே வஞ்சியடிக்கு நிலன் எழென்பது சொல்லிய வாறு. [2][அதுவே கருத்தெனின், இச்சூத்திரம் மிகையாம் பிறவெனின், — அற்றன்று ; வஞ்சியுரிச்சீர் மூன்றெழுத்திற் சுருங்கா, ஆறெழுத்தின் ஏறாவெனவே சீர்நிலை வஞ்சிக்கு மூவெழுத்துச்சீர் இரண்டுவந்த இருசீரடிக்கு ஆறெழுத்து முதலாமென்பதூஉம், ஆறெழுத்துச்சீர் இரண்டுவரிற் பன்னிரண்டெழுத்தடி ஈறுமென்பதூஉம் பெறுதுமால் அவ்வச் சூத்திரங்களானேயெனின்,— ] ஆண்டு வஞ்சியுரிச்சீர்க்கு எழுத்து

வரையறை கூறினன் ; அவ்வடி இத்துணைநிலன்

பெறுமென்

றற்கு இது கூறல்வேண்டுமென்பது. அல்லதூஉம், அங்ஙனங் கொள்ளின் உய்த்துணர்ச்சியாம், இஃது [3] எடுத்தோத்தாகலின் எடுத்தோத்துக் கிளந்து உய்த்துணராரென்பது. இனி, இது கூறுக்காற் கட்டளையடிக்கண் இயற்சீர் வாராதென்பதூஉம் பெறலாகாதாமாகவே, தூயிது புலிசெல்சுரம் என்பது கட்டளையடியாகிய செல்லும். வஞ்சித்தூக்கின் அது கொள்ளாமையின் அது விலக்கல்வேண்டி இது கூறினன், என்னை? [4] இயற்சீர் கொள்ளின் ஈரெழுத்தானாகிய இயற்சீரும் ஆண்டே கோடல் வேண்டும், அதுகொள்ளின் இச்சூத்திரத்திற்கு ஏலாமையினென்பது.

இனி, வஞ்சியுரிச்சீர் அறுபதும் இருநிலைமைப்படுவன இருபத்துநான்கும், நான்கு நிலைமைப்படுவன இருபத்தெட்டும் எட்டு நிலைமைப்படுவன எட்டுச்சீருமாகி இருநூற்றிருபத்துநான் காய் விரியும்.

---

1. ஒருசீர்க்கு ஆறு எனவே இருசீர்க்கும் பனிரண்டாம். ஆறுதொடங்கிப் பன்னிரண்டுவரை உறழ நிலம் ஏழாதல்காண்க.

2. பகரக்கோட்டில் வாக்கியம் மாறி எழுதப்பட்டது. அது, "அதுவே கருத்தெனின், வஞ்சியுரிச்சீர்...........................அவ்வச் சூத்திரங்களானே இச் சூத்திர மிகையாம் பிறவெனின், — அற்றன்று," என்றிருத்தல் வேண்டும்.

3. எடுத்தோத்திலவழி உய்த்துணர்வதென்பர் காரத்தினுட் சேனாவரையரும்.

சொல்லதி

4. ஞாயிறுபோல்வன ஈரெழுத்து இயற்சீர். இவை விலக்குண்ணுவது, தன் சீரெழுத்தின் சின்மைமூன்றே என்றதனானும் 'உறழ்நிலையில்' என இச்சூத்திரத்துட் கூறினமையானும் என்க.

## பொருளதிகாரம் கூ.கூ.சீ

1 "இரண்டுநான் கெட்டு நிலைமைய வாகித்
திரண்ட நிலைவஞ்சிச் சீர்க — வொருங்கே
யிருபத்து நாலிருபத் தெட்டுட னெட்டா
யிருநூற் றிருபத்து நான்கு."

மலைக்கு வரைவரை யின்மை யான."

2 "வஞ்சி யுரிச்சீர் நிரையுரி யுறழ்ந்து
மெல்லசைக் குறைந்து சிறுக்குக் கொளலும்."

எனவே, இவ்வாற்றான் வஞ்சியுரிச்சீர் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்துமாகி வரும். அவையறிந்து மாற்றுக. அவையாவன :

(க) 1. களிறுபோகுவாய்
2. களிறுவழங்குவாய்
3. புலிவழங்குசுரம்
4. மாவழங்குசுரம்
5. களிறுவருசுரம்
6. களிறுபோகுசுரம்
7. புலிவழங்குகாடு
8. பாம்புவழங்குகாடு
9. களிறுவருகாடு
10. களிறுபோகுகாடு
11. மாவழங்குகடறு
12. புலிபோகுகடறு
13. பாம்புவருகடறு
14. பாம்புபோகுகடறு
15. களிறுசெல்கடறு

---

*1.* இப்பாட்டு :—

நாலெட்டே யேழெட் டறுபத்தி ரண்டிவற்று
ளேழெழுத் தாறாக வெட்டெழுத்து மூன்றேயா
மேழெழுத்து மும்மூன்று மெட்டெழுத்தா றொன்று
மாறெட் டறுபஃது மூன்று.

என்றிருத்தல்வேண்டும்.

இதன்பொருள் :— நாலெட்டு—32-ம் சீர். ஏழெட்டு—56-ம் சீர். அறுபத்திரண்டு—62-ம் சீர். இவை மூன்றும் நான்கு நிலைமை பெறலால் ஏழெழுத்துச்சீராறும் எட்டெழுத்துச்சீர் மூன்று மாகும். இனி, ஆறெட்டு—48-ம் சீர். அறுபஃது, அறுபதாம் சீர். (அறுபஃது) மூன்று—63-ம் சீர். இவை மூன்றும், இவை ஏழெழுத்துச்சீர் ஒன்பதும், எட்டெழுத்துச்சீர் மூன்றுமாக மாறும். எட்டுநிலைமைப்படுஞ் சீர்ப்பாட்டுத் தவிர்ந்துப்போகும்.

2. வஞ்சியுரிச்சீர் என்ற பாட்டில் வஞ்சியுரிச்சீர்களை முறையே அவ்வவ்வுரிச்சீர்களையுறழ்ந்தும் அவற்றுள், குறைப்பன குறைத்தும் சேடமாக்குவனவற்றை சேடமாக்கியுங்கொள்க. மிகுத்தல்—(குறைத்து) மிகுத்தல்—சேடமாக்கல். எனவே உறழாத சீர்களை நீக்கி உறழுஞ் சீர்களை மிகுத்துக்கொள்க என்றபடி.

,க. 1. களிறுவழங்குவாய். 2. புலிவழங்குகரம். 3. பாம்புவழங்குகரம். 4. களிறுவருகரம். 5. களிறுபோகுகரம். 6. புலி



என இவை பதினைந்தும் எழெழுத்தாங்கால் உறழ்நிலை இலவெனப்படும். 'களிறு வழங்குவாய்' என்பதனை அரவு விரவுவாயென எழெழுத்துச்சீராம். ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இவை பதினைந்தும் எழுத்தின் இகவாதன. இனி, எழெழுத்துச் சீரின் இரண்டும் எட்டெழுத்துச்சீர் ஒரோவொன்று

மாகி வருவன மூன்றுசீர் உள; அவை:

(உ) 1. களிறுவழங்குகரம், 2. புலிவழங்குகடறு, 3. களிறு வருகடறு என்பன. இவற்றைக் களிறுவிரவுகரம், அரவுவழங்குகரம், அரவுவிரவுகரம் என்றாற்போல வாய்பாடுபடுக்க ஒட்டுக்காணவே எழெழுத்துச்சீராயும் எட்டெழுத்துச்சீர் மூன்று

மென ஒன்பதாம்.

(௯) 1. களிறுவழங்குகாடு, 2. பாம்புவழங்குகடறு, 3. களிறு போகுகடறு என இவை மூன்றுமீரும் ஒரோவொன்று எழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச்சீ ரொன்றுமாக மும்நான்கு பன்னிரண்டும் உறழ்நிலையில எனப்படும்; அவை:

களிறுவிரவுகாவு, அரவுவழங்குகாவு, அரவுவிரவுகாடு, அரவு விரவுகாவு என எழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச்சீ ரொன்றுமாயினவாறு கண்டுகொள்க. ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க.

இனி, களிறுவழங்குகடறு என்பது ஆறெழுத்துச்சீர் ஒன்றும், எழெழுத்துச்சீர் மூன்றும், எட்டெழுத்துச்சீர் மூன்றும், ஒன்பதெழுத்துச்சீ ரொன்றுமென அதுவும் எட்டு நிலைமைத்

---

வழங்குகாடு. 7. பாம்புவழங்குகாடு. 8. களிறுவருகாடு. 9. களிறு போகுகாடு. 10. மாவழங்குகடறு. 11. புலிவருகடறு. 12. புலி போகுகடறு. 13. பாம்புவருகடறு. 14. பாம்புபோகுகடறு. 15. களிறுசெல்கடறு என்றிருத்தல்வேண்டும்.

உ. 1. களிறுவழங்குசுரம்
களிறுவிரவுசுரம்
அரவுவழங்குசுரம்
அரவுவிரவுசுரம்

2. புலிவழங்குகடறு
புலிவிரவுகடறு
புலிவழங்குகுரவு
புலிவிரவுகுரவு

3. களிறுவருகடறு
களிறுவருகுரவு
அரவுவருகடறு
அரவுவருகுரவு

௯. 1. களிறுவழங்குகாடு
*— களிறுவிரவுகாவு
அரவுவழங்குகாவு
அரவுவிரவுகாடு
அரவுவிரவுகாவு

2. பாம்புவழங்குகடறு
பாம்புவிரவுகுரவு
காவுவிரவுகடறு
காவுவழங்குகுரவு
காவுவிரவுகுரவு

3. களிறுபோகுகடறு
களிறுமன்னுகுரவு
அரவுமன்னுகடறு
அரவுபோகுகுரவு
அரவுமன்னுகுரவு

தாம். அவற்றுள், ஆறெழுத்துச் சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீரேழும் உறழ்நிலையில வஞ்சிக்கெனப்பட்டன; அவை:

களிறுவழங்குநாவு, களிறுவிரவுகடவு, அரவுவழங்குகடவு என மூன்றும் ஏழெழுத்துச்சீர்.

களிறுவிரவுநாவு, அரவுவழங்குநாவு, அரவுவிரவுகடவு என மூன்றும் எட்டெழுத்துச்சீர்.

அரவுவிரவுநாவு என்பது ஒன்பதெழுத்துச்சீர்; இவை யெல்லாந் தொகுப்ப [1] ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் [2] எட் டெழுத்துச்சீர் சொன்பதும் [3] ஒன்பதெழுத்துச்சீர் சொன்றும் ஒழிந்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ் நிலையுடையவெனக் கொள்க.

ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச் சீரும் அடிபுறழ்வனவாக்கி மேன் மூன்றுசீராலும் மூன்று நில னேற்றிப் பதினான்கெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என் பாருமுளர். அங்ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டுவந்த குற ளடி பதினெட்டெனப்படுதலின், [1] வஞ்சியிலும் பதின்மூன்றுதல் வேண்டும், அதை நோக்காது சீர்நோக்கி உறழ்ச்சி கொள்ளி னென மறுக்க.

அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும், அவற்றுக்குத் தளைவகையின்மையானும் எடுத்தோதித் தொகை கூறிற்றிலனாயினும், நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுவ

1. எழுமுத்துச்சீர் முப்பத்துமூன்றுவன :—

| | | | | |
|---|---|---|---|---|
| 15 சீருமுறழ்ந்ததனால் | வந்த | எழுத்துச்சீர் | | 15 |
| 3 | ,, | ,, | ,, | 6 |
| 3 | ,, | ,, | ,, | 9 |
| 1 | ,, | ,, | ,, | 3 |
| ஆக | | | | 33 |

| | |
|---|---|
| 2. எட்டெழுத்துச்சீர் | 9 |
| 3. ஒன்பதெழுத்துச்சீர் | 1 |
| ஆக | 43 |

இவை அடி உறழாதன.

வஞ்சியுரிச்சீர் 224-ல் 43 கழிக்க 181-ம் உறழ்வனவாம்.

4. 12-க்குமேல் 18 எழுத்தடி கொள்ளின் 6 நிலம் கூடும். கூடவே 7 நிலமும் 6 நிலமுமாகப் 13 நிலம் வரும் என்றபடி.



கால் [1] ஒருசீர்க்கு அடி நான்காக வஞ்சியடி எழுநூற்றிருபத்து நான்காமெனக் கொள்க. அவையுறழுங்கால் மூன்றெழுத்துச்சீர்

ஆறாகி ஒன்பது உயர்வும், நாலெழுத்துச்சீர் ஏழாகி பத்தெழுத் துயர்வும், ஐயெழுத்துச்சீர் எட்டாகி பதினொன் றுயர்வும், ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும்பெற்று நின்ற சீரோடு மூன்றெழுத்துச்சீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துச் சீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்கவென்பது. அவை :

"கல்காய்ந்தது காம்புநீடி."

என்பது ஆறெழுத்தடி.

"நல்கூர்ந்தது வில்லோர்க்கரம்."

என்பது ஏழெழுத்தடி.

"வான்பெய்தது மண்குளிர்ப்புற."

என்பது எட்டெழுத்தடி.

"தேன்பெய்தது செழுநகர்த்தெருவம்."

என்பது ஒன்பதெழுத்தடி.

இவை மூவெழுத்து மாச்செல்காடு நின்றுறழ்ந்த நாலடி யும் வந்தவாறு. ஒழிந்தனவும் அன்ன.

"மண்மாய்ந்தென வள்வீழ்ந்தது."

என்பது ஏழெழுத்தடி.

"விண்பாய்ந்தென மேற்செழுந்தது."

என்பது எட்டெழுத்தடி.

"வாடோங்கிய கல்கெழுசாரல்."

என்பது ஒன்பதெழுத்தடி.

"கோடோங்கிய குறும்பொறைமருங்கு."

என்பது பத்தெழுத்தடி.

[3] இதனும்பர் நெடிலடியானும் வெண்பாவடி வருவன உள. அவை கட்டளையடியெனப்படா; [4] செப்பிக் கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்குமாகலினென்பது; பிறிது காரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளைவகை ஒன்றுமையென்பது வெண்பாவும் வெண்பா நடைக்காகிய கலிப்பாவும் மயங்காமை காரணத்தானென்றவாறு. கலியோசை மயங்கி வருவனவும் வெண்பாவடியுளவே. அவை [5] நெடிலடி மூன்றானும் வருமெனக் கொள்க. ஒரோவடியே வெண்பாவடியுமாய்த் தள்ளிக் கலியடியு மாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்பலக்குத் தீராதென,

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய."

என்றுமென்பது.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய்." என்றக்கால் இருசீர்,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி."
(௧.௨.௧) என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டுகொள்க.

---

1. மேல் விருத்தமுறை என்றது ௩௪௧-ம், ௧௫௦-ம் சூத்திரங்களில் விருத்தமுறையை.

2. ஈண்டுச் சொல்லுமுறை என்றது அளவடிக்கே நிலங் கூறுமுறை.

3. இதனும்பர்—௧௪ எழுத்தடியின்மேல்,

4.—செப்பிக் கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்கும் என்பது வெண்பாவாகாது வெண்பாவின் செய்கை தோன்றிய மாத்திரையே நிற்கும் என்றபடி.

5. நெடிலடி மூன்றுவன—15 எழுத்தடியும் 16 எழுத்தடியும் 17 எழுத்தடியும் என்பன.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் நேமா வரகு."

என்றிதனையே துறைகூட்ட வெண்பாவாயிற்று. இது,

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றினரே." எனக் கலியோசையானுமாறறிக. (ஙஅ)

[கலிப்பாவிற்குரிய நிலம் இவை எனல்]

கூஎக. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய.

அளவடி பிறிதெனப்படும் எனவும், அவை கலிக்குரிய எனவுங் கொள்வாருமுளர் ; அங்ஙனங் கொள்வார்க்கு,

"ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு."

என்றதனைப் பதினேழெழுத்தடியென்று காட்டல்வேண்டும் ; அஃது ஆசிரியவடியாம் ; ஆகலான், அற்றன்றென்பது. இனி,

"ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்."

என்பதோவெனின்,—அது கலிப்பாவோடு தளைவகையொன்றிய வெண்பாவடியாகலானும், நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்டினன்றி ஞாயிறு என நின்ற நிரையீற்று இயற்சீர்ப்பின்னர் நேர்வந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலானும்

கட்டளையடிக்கு அவ்வாறு கோடல் குற்றமென்பது. அல்லதூஉம்,
கலிப்பாவிற்குப் பத்தாவிலன் கொள்ளிற் கட்டளையடி அறுநூற் றிருபத்தைந்தன்றிப் பல்குமென்பது. (இகூ)

1. ஞாயிறு கடியாறு என்னுமடி இயற்சீரான் வந்த ஆசிரியவடி.

[...ரியல்] பொருளதிகாரம் கூசரு

[நிரையீற்றுஇயற்சீர்முன்னும் நிரையீற்றுரிச்சீர் முன்னும் நிரைமுதல் வெண்சீர் வந்து தட்பினும் கலித்தளையாமெனல்]

கூ௬உ.

நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும் வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப.

இதுவும், கலித்தளை விகற்பங் கூறுகின்றது.

"தளைவகை யொன்றாத் தன்மை யான."
(கஎ0)

என வெண்பாவிற்குங் கூறினமையின்.

இ—ள்: வெண்சீர் ஒன்றி வருதலுங் கடியப்படா கலிக்கு என்றவாறு.

'சீர்வகையடிக்கண்'[1] என்பது, என்னை பெறுமாறெனின்,— 'விராஅயதளை' என்றமையாற் பெறுதுமென்பது; உதாரணம்:

"தளைவகை யொன்றாத் தன்மை யான."
(கஎ0)
என்புழிக் காட்டப்பட்டது.

(கக)

---

1. இடை நிற்பன நிரைமுதல் வெண்சீர் என்பது பெறுது மாகலானும் என்றிருத்தல்வேண்டும்.

2. இதற்கு ஆசிரியத்தளையோடும் வெண்டளையோடும் விராய் என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கொள்வர்.

[கட்டளையடியல்லாதவழி ஆசிரியப்பாவினுள் இயற்சீர் வெள்ளடியாம் வருமெனல்]

௬௭. இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

இது, வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித்தென்ற முறையானே, இயற்சீர் வெள்ளடியான் வரும் அடி ஆசிரியத்திற்கு மயங்கியல்வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறுமென்கின்றது.

இ—ள்: அம் மயங்கியல்வகைதான் அப்பாவிற்கு உரிமை பூண்டுநிற்கும்; ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண் ணென்றவாறு.

வெண்பாவினுள்ளாயின் ஆசிரியவடி முழுவதூஉந் தன்றளையொடு வாராது; என்னை?

"தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்
மாஅ மிசையான்கோ னன்ன நறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு." (மலைபடுகடாம்)

தழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மை
யென்பது.

௧ " பாஅல் புளிப்பினும் பகலிருளினும்."
(புறம். உ)

என்றாற்போல்வன.

" மானமூங்கு பெருங்காட்டு மழகளிறு
காணாது." (யா. வி. ௩௦)

என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா
மயக்கிற்றென்பாரும் உளர்.

அது துள்ளச்செல்லுங்கால் ௪
அளபெடுக்கவேண்டுமெனக் கூறி
மறுக்க.

(௬உ)

[கலிப்பாவினுள் ஐஞ்சீரடியும்
வருமெனல்]

௬௨. வெண்டளை விரவியு மாசிரியம்
விரவியு
மைஞ்சீ ரடியு முளவென
மொழிப.

இஃது, ஐஞ்சீரடியும் வருமாறு
கூறுகின்றது.

எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபுபட்ட வெண்பாவடியும், அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங் கூறி, அம்மூன்றனை யும் உடன் கூறினாரேனும், ஆண்டுச் சிறந்தவாறே ஈண்டும் அவ்வதிகாரத்ததாக காட்டி, ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக் [1] கூறிய அவ்வடி, வெண்டளை விரவியும் ஆசிரி யம் விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினனென்பது.

---

1 பா—இசை.

2. பிற செய்யுள்—வெண்பாவும் ஆசிரியப்பாவும்.

3. அவற்றுக்கு—அவ்வெண்பாக்களுக்கு.

4. விராயதளை (௩௭௩) என்பதற்கு வெண்பாவோடு விராய தளையென்று பொருள்கூறி, வெண்சீர் ஒன்றிவருமடியும் கலிப்பா விற்கு வருமென்று தான் கூறியபடியே ஈண்டுங் கலிப்பாவோடு இயைபுபட்ட வெண்பாவடியும் என்றும், ௩௭௬-ம் சூத்திரத்து வெண்பாவடி ஆசிரியவடியுள் மயங்கி வருமென்று கூறியபடியே ஈண்டும் அதனோடு (வெண்பாவோடு) இயைபுபட்ட ஆசிரியவடி யுங் கூறி என்றுங் கூறினார். அம்மூன்றனையும் உடன் கூறுதல் என்றது, அவ்விரண்டு சூத்திரத்தையும் உடன்வைத்து கலியை யும் வெண்பாவையும் ஆசிரியத்தையும் ஒருங்கு கூறுதலை. ஆண் டுச் சிறந்தவாறு என்றது, அச்சூத்திரத்து எப்படிக் கலி சிறந் ததோ அவ்வாறே ஈண்டும் சிறந்ததாகக்கொண்டு என்றபடி. அவ்வதிகாரமென்றது கலியதிகாரப்பட்டு நின்றமையை.

5. கூறிய—கூறி என்றிருக்கவேண்டும்; இச்சூத்திரத்தானே கலிக்கும் விதித்தலின்.

மன்னே."

(புற. உ௩௫)

என்பன ஐஞ்சீரான் வந்த ஆசிரியவடி. ஆசிரியத்துள் இவ்வாறு இரண்டடி ஒருங்கு நிற்குமென்பது அறிவித்தற்கு ஐஞ்சீரடிக்குச் சிறந்த கலிப்பாவோடு வைத்தான் அதனை முறை பிறழவென்பது. எனவே வெண்பாவிற்கு ஐஞ்சீரடி ஒன்றல்லது வாராதாயிற்று; இக்கருத்தேபற்றி,

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல."

என்றார் பிறருமெனக் கொள்க. உம்மையான்,

இருசீரடியுங் கலியடியாம்.

"மன்று பார்த்து, நின்று தாயைக்,
..
கன்று பார்க்கும் மின்றூர் வாரா."

எனக் கொச்சகக் கலியுள் இருசீர் வந்தது.

மூன்று பாவிற்கும் முச்சீரடி உரித்தென்பது முன்னர்ச் [2]சொல்லுதும். வரையாது கூறினமையின் கலிப்பாவிற்காயின்

---

1. அளவடியை மூன்று பாவிற்கும் அவ்வப்பா வோசையோடு வேறுவேறு கொண்டாற்போல இவ்வடியையும் அவ்வவ்வோசையாற் கொள்க என்றபடி. எனவே, அவ்வத் தளையடியான் வருமென்றவாறு. பின் ஐஞ்சீரடியும் என வருதலின் முன்னுள்ள 'ஐஞ்சீரடி என்பதனை' என்பது வேண்டியதில்லை. ஐஞ்சீரடியும் என்பது ஐஞ்சீரடியையும் என்றிருப்பது நலம்.

2. சொல்லுதும்—சொல்லும் என்றிருத்தல்வேண்டும்.

நாற்சீரடி வருங்கால் தளைவிராவியும் விரவாதும் வேண்டியவாறு வரப்பெறுமென்பது. (௬௬)

[கலிப்பாவினுள் அறுசீரடியும் வருமெனல்]

௬௭. அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே.

இது, முறையானே அறுசீரடியுங் கலிப்பாவிற்கு உரித் தென்கின்றது.

இ—ள்: நாற்சீரடி முன்னும் பின்னும் அறுசீரடியும் வருதலுமுண்டு; அன்னது வருங்கால் [1] தனக்குரிய வெண்டளையே யன்றி ஆசிரியத்தளையொடும் மயக்குற்றொருந்து நடக்குங் கலிப் பாவினுள் என்றவாறு.

'நெறிபெற்று வரூஉம்' என்றதனுற் சிறுபான்மை நேரடி இடையிட்டன்றி ஒரு செய்யுள் முழுவதூஉந் தானே வருதலுங் கொள்க.

'ஆசிரியத் தளையொடும்' என்ற உம்மையாற் கலி தனக் குரிய வெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் உரியவாம்.

"முன்னைத்தன் சிறந்தின் முழங்கு கடலோத மூழ்கிப்போ
வன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றலைப்பேருந்
தன்மை மடவார் தனித்தருந்த வெண்முத்தம்
புன்னை யரும்பென்னப் போலவரைப் போதுறக்கும் புகாரே யெம்மூர்"

மற்றுந் தளையொன்றேறுவது கட்டளையடிக்கென்றீரால், [1] ஈண்டுத் தளையொன்றேறினமையெனின்,—அவ்வரையறை ஒருவன் சொல்லுமாறு: அறுசீரடி வருங்கால் முதற்கண் [2] நேரடி தூங்கிப் பின் இருசீரொடு தொடுத்தல்வேண்டும் என்னும். அஃது [3] இச்சூத்திரத்திற்கு ஏலாது; நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின்சீரடியாமாகலின்; அல்லதூஉம், குறளடி தூங்கியுஞ் சிந்தடி தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃது அமையாதென்பது, என்னை?

[4] "வாராது நீத்தவர்
வருமாறு பார்த்திருந்தச்
வடிக்கண் போல."

என்றவழி, இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப் படாது.

---

1. ஈண்டு—இவ்வாக்கியத்தில் வரும் வினாவிற்கு விடை காணுமாயின் செவ்வி தப்பியதோவென்று ஐயம் உண்டாகின்றது. அல்லது ஆசிரியத்தளையாலும் தனியே வருமென்று இவர் உதாரணங் காட்டியிருத்தலின் அதுவே விடையாக உய்த்துணர வைத்து இதனால் பிறர் கருத்தைக் கூறியிருத்தல்வேண்டும்.

2. நேரடி நாற்சீரடி.

3. இச்சூத்திரத்திற்கேலாது என்றது. நேரடிமுன் இருசீரடி என்று சூத்திரஞ் செய்யாது 'அறுசீரடியே' என்று சூத்திரஞ் செய்தமையின் ஏலாது. அன்றியும் நேரடிமுன் அறுசீரடி வரின் என்று கொள்ளவேண்டும். கொள்ளின் அது பதின்சீரடியாமாகலின், அதனாலும் பொருந்தாது என்றபடி.

4. இது குறளடி தூங்கியதற்குதாரணம்.

மற்றிவற்றை அராகமொன்றுமோவெனின்,—அதனைப் பரி பாடற்கு உறுப்பென்றமையாற் [1] பிறவடியொடு தொடராவுற்று வரவேண்டும், இஃது அன்னது அன்று என்பது. எழுசீரடி பிற் சிறுவரவினவாகலான் ஐஞ்சீரடியினையும் அறுசீரடியினையும் வரையாரென்றான். அவற்றினுஞ் சிறுவரவிற்றாகலின் [2] இதனை உம்மையாற் கொண்டான். முற்றும்மையாகாதோவெனின்,— [3] அதுவும் எச்சப்படுதலின் அமையுமென்பது. அல்லதூஉம் முதலடி [4] யிரண்டே அன்மையின் முற்றாதென்பது. (௬௬)

---

1. பிறவடியோடு தொடராவுற்று—பிறவடியோடுதொடரா தற்று என்றிருத்தல்வேண்டும். அராகம் பிறவடியோடு தொட ராது தனித்து வருதலின். ௬௨௪-ம் சூத்திரவுரையையும் முடுகு வண்ணச் சூத்திரத்தையும் நோக்குக. நச்சினார்க்கினிய ருரை யையு நோக்குக.

2. இதனை—நாற்சீரடியினை.

3. அதுவும்—முற்றும்மையும். முற்றும்மை ஒரோவழி யெச்

சமமாகும் என்பது சூத்திரம்.

4. இரண்டன்மையின் என்றது ஐஞ்சீரடி கூறுமுன்னர் நாற்சீரடியுங் கூறப்பட்டமையின் மூன்றுவ என்றபடி.



[முற்கூறிய நாற்சீரடி முதலிய மூவடியும் முடுகியல்பெற்று ஆசிரியத்தும் வெண்பாவினும் வாரா எனல்]

௭௬. ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினு
மூவகை யடியு முன்னுத லிலவே.

இது, முடுகியல் இன்ன பாவிற்கு உரித்தென்கின்றது; ய்தியது இகந்துபடாமற் காக்கின்றதூஉமாம்; என்னை? நாற்சீரடி முதலன்மூன்றும் அகவலோசைக்குஞ் செப்பலோசைக்கும் ரியவெனவே, அவை முடுகி ஆண்டுஞ் சேறலெய்தியதனைக் லிப்பாவிற்கு அல்லது ஆகாதென்றமையின்.

இ—ள்: ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டுபாவினும் முடுகியலடி மூன்றும் புகா என்றவாறு.

உம்மை, முற்றும்மை. மற்றை முச்சீரடியோடு நான்கென்

ஞுனெவெனின்,—அஃது இவற்றுக்கு ஈண்டு ஒவ்வாது. முடுகி யருதல் பெரும்பான்மைத்தாகலின் 'மூவகையடி' என வகை யென்னும் அடையடுத்துக் கூறினானென்பது. [1] அல்லதூஉம் ஐஞ்சீரடி விலக்கானன்றே, [2] அதனை ஆசிரியமருங்கினும் வெண்பா மருங்கினும் மயங்குமென்பதின்னாமையினென்பது.

இனி, அறுசீரடி ஆசிரியத்தளையொடும் வருமென்றது (௬௭௬) அகவலோசைக்கு உரித்தென்றமையானும்,

"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும்
ஐஞ்சீரடியும் வரும்." (௬௭௫)

என்றமையானும் அவற்றை அளவடியுடன் எடுத்தோதி விலக்கினான். மூவகை அடியுமென்றது [3] ஐஞ்சீரடி முதன்மூன்று மெனப்படுமென்பார், அளவடி முடுகுதல் ஆசிரியத்திற்கும் உரிமையின் அது வரையறையின்றென்றலும் ஒன்று; அது,

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்." (மலைபடு. க.)

---

1. அல்லதூஉம் என்றமையின் முன் வேறு ஒன்றிருத்தல்வேண்டும்.

2. அதனை—எழுசீரடியை.

3. ஐஞ்சீரடி முதன்மூன்று—ஐஞ்சீரடி அறுசீரடி எழுசீரடி என்பன. என்பார் என்பதற்கு முடிபில்லாதலின், இத்தொடரில் யாதோ பிழையுண்டு.

[ஆசிரியப்பாவினுள் ஈற்றயலடியும் இடையடியும்
முச்சீரானும் வருமெனல்.]

௬௮. ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப. (௬௮)

௬௯. இடையும் வரையார்
தொடையுணர் வோரே. (௬௯)

இவை இரண்டு சூத்திரமும் உரையினைப்பு நோக்கி உட னெழுதப்பட்டன. இவை, ஆசிரியத்துட் சிலவடி இன்னுழி வருமென்றமையின் எய்தாதது எய்துவித்தனவாம்.

இ—ள்: ஆசிரியத்துள் [3] ஈற்றயலடியொன்றும் இடையிரண்டுமாகி முச்சீரடி வரும் என்றவாறு.

'முச்சீர்த்து' என்று ஒருமை கூறினமையின் அஃது ஒன்றாகவும், 'தொடையுணர்வோர்' என்றமையின் இடைவருவன இரண்டாகவும் கூறினானென்பது.

[3] இடையும்

வரையார் [1] என்றமையான் ஈற்றயல் முச்சீர்த் தாதல் பெரும்பான்மை. உதாரணம்:

1. முன் வரையறையின்று என்று கூறுதலானே என்றும் இன்றென்பது வரையறையின்று என்றிருத்தல்வேண்டும். வரையறையின்மை—வருதல்கூடாது என்னும் நியதியின்மை. எனவே வருதலுங்கூடும் என்றபடி.

2. வருமென்பதூஉம் என்றிருப்பது நலம்.

3. எருத்தடி—ஈற்றயலடி.



"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
..............................................
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே." (புறம். ௧)

என அப்பாட்டினை முழுவதூஉங் கொள்ள ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று.

"தண்ணீர் தண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே." (யா. வி. ௨௱௭)

என்பதனுள்,

"சார னாடன் கேண்மை."

எனவும்,

"சாரச் சாரச் சார்ந்து."

எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம் பிரிநிலை. மற்று,

1. கூட்டம்—வஞ்சியடிக் கூட்டம். என்றது வஞ்சியடியோடு கூடல் என்றபடி. வஞ்சியடிபோன்றது என்றதனால் அன்ன தன்று. அதுபோன்று ஓசைதந்து நின்றது என்றபடி.

2. முரற்கை—கலிப்பா.

3. தாம் என்றது முச்சீரை.

4. சின்னம்—எண்ணுறுப்பின் பகுதி.

5. எண்ணுறுப்பு என்றது அம்போதரங்கத்தை. இவர் எண்ணுறுப்புள் (457-ம் சூ.) முச்சீரை இருசீர் என்றும் இரு சீரை ஒருசீர் என்றுங் கோடலின் அவற்றோடு ஈண்டுக் கூறி யன மாறுபடுகின்றன. ஆகலின் இது இடைச்செருகல்போலும். அன்றேல் மறந்து கூறினார் எனலுமாம். அன்றேல் அதுவும் உடன்பாடுபோலும். ஆராயத்தக்கது.



"நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்றே
பீர்வரக் கண்டனந் தோளே."

இது முச்சீரடி ஒரு செய்யுள் நிறையவும் வந்தவாறு. (௭௦)

[வஞ்சிப்பாவிறுதி ஆசிரியவடியான் முடியுமெனல்]

௭௧. வஞ்சித் [1] தூக்கே [2] செந்தூக் கியற்றே.

இது, முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப் பாவிற்குக் கூறியதிலன்; எற்றுக்கு? அது,

"வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்." (௩௫௭)

எனவும்,

"முச்சீ ரானும் வருமிட னுடைத்து." (௩௫௯)

வும் மேற் கூறப்பட்டமையின், அதுநோக்கி அடிபுரிமை றப்படாத வஞ்சிப்பாவிற்கு வஞ்சியினது சுற்றடியும் அல் சீரடியும் முச்சீரடியுமாமாயன் சென்றதனை விலக்கி இன்ன டியான் முடியுமென்கின்றது.

இ—ள்: வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதி யன்று இறுக என்றவாறு.

எனவே, ஆசிரியத்திற்கு ஒத்த சீரானும் தளையானும் றுமென்றவாறு. உதாரணம்:

“மாக்கட னிவந்தெழுதரு
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
அனைவை யாகன்மாறே
தாயி றூவாக் குழவிபோல
ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே” (புற. ச)

[3] மண்டிலவாசிரியத்தானிற்றது.

‘செந்தூக்கியற்றே’ என்ற மாட்டேற்றானே,

“ஈற்றயல் அடியே யாசிரிய மருங்கின்
தோற்ற முச்சீர்த் தாகு மென்ப.” (தொல். செய். கூஅ)

னவும்,

1. தூக்கு—தூக்கப்பட்ட (இறுதி) அடி.
2. செந்தூக்கு—ஆசிரியவடி.
3. மண்டிலம்—எல்லா வடியும் நாற்சீரடியான் வருவது.

"இடையும் வரையார் தொடையுணர் வோரே."

(தொல். செய். கூசு)

எனவும் எய்தியதி [†] ஈண்டும் எய்துவிக்க,

"அனையை யாகன் மாறே."

(புறம். ௩) என முச்சீரடி இடைவந்தது.

"இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனுமே,
எனவாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே."

(புறம். ௧௧)

இஃது, ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த செந்தூக்கியற் றாயிற்று வஞ்சிப்பா. பிறவும் அன்ன. ஈண்டுத் தனிச்சொல் வேண்டுமென்றது பிற்காலத்து [2] நூல்செய்தாரும் கூறினார். அது சான்றோர் செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும், பிற்காலத்திற் செய்த நூல்பற்றி முற்காலத்துச் செய்யுட்கெல்லாம் இலக்கணஞ் சேர்த்துதல் பயமின்றாகலானும் அஃதமையா தென்பது. வஞ்சிப்பாவின் ஈற்றடி வரைந்தோதாமையின் இடையாயின எல்லா அடியும்

வரப்பெறுமென்பதாம்.

"நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை."
(பட்டின. உஉ-உ௩)

என ஆசிரியவடியும் [3] வெண்பாவடியும் இடை வந்தன. (எக)

[வெண்பாவினீற்றடி முச்சீரான் வருமெனல்]

கூஅச. வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்.

இது, வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது. ஆசிரியத் துக்கோவெனின்,—தனக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு கூறவேண்டா; [4] எருத்தடியும் இடையடியும் முச்சீரான் வருமென வேறுபட்டவழிக் கூறி, அல்லாதன அளவடியாதல் கொள்ளவைத்தானென்பது.

1. ஈண்டு—வஞ்சிப்பாவினீற்றில் ஆசிரியவடி வருமிடத்து.

2. நூல்செய்தார்—சிறு காக்கைபாடினியார் முதலியோர் போலும்.

கூஅகு. அசைச்சீர்த் தாகு மவ்வயி னான.

இது மேலதற்கு எய்தியதோர் விதி.

இ—ள் : வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடிஈற்றுச் சீர் வரப்பெறாது அசைச்சீரல்லாது என்றவாறு.

மேல்,

“ அசைநிலை வரையார் சீர்நிலை பெறல்.”
(தொல். செய். உ௭)

என்றான், அவற்றுள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதி யும் வருமென்பான்,

“இயற்சீர்ப் பாற்படுத்து.” (தொல். செய். உ௮)

இயற்றுக என்றான். அவ்வாறே [3] இயலசைச்சீரும் இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு.

முச்சீரடி.

னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : [1] நேரிறுதி வஞ்சி நிரையும் நிரைபுமே இறுதிச் சீராய் நிற்பன என்றவாறு.

எனவே, [2] நடுவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற் சீர் போலத் தளைகொள்ளப்படுமென்பதாம். 'எற்றிடாஉம்' என்ற

இலேசினான் [3] இடைவந்த நிரைபசையும் அவ்வாறு கொள்க; அஃது,

"இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே."
(தொல். செய். உஅ)

என்பதனுள் அடங்காதோவெனின், — அடங்காது; என்னை?

[4] அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினன், அது பிறிதுசீர் அசைச்சீரோடு தட்குமாற்றுக்குங் கூறல்வேண்டுமென்பது; அல்லதூஉம், ஆண்டு அளவடிக்குக் கூறினன் இது சிந்தடிக்கென்பது. வரலாறு :—

"வாரிய பெண்ணை வருகுரும்பை

பி.—ஈண்டு செருஅய் இலாஅர் என்பவற்றை இவர் மூன்று மாத்திரையாக்கித் தளைவகையின்றி வந்தன என்றது பொருத்த மின்று. செருஅஅய் எனவும் இலாஅஅர் எனவும் நான்குமாத் திரை அளபெடையாக்கின் தளைவழுவாது. அங்ஙனங் கொள் வர் நச்சினார்க்கினியர். அவருரை நோக்குக.



இ—ள்: நேரீற்றியற்சீர் நின்றவழி நிரையீற்றியற்சீர் நிற்பி னென்பான் ‘நிரையவண் நிற்பின்’ என்றான். ஆண்டு நிரை யும் நிரையும் வரின் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேற்று முடிதல் வரைவின்று என்றவாறு.

“கொழுநனை மைந்தன் கொணர்ந்ததற் காக
முழுமுகம் பார்த்தனள் பால்.”

எனவும்,

“வண்டொன்று வந்தது வாரற் பனிவடாய்
பண்டன்று பட்டினங் காப்பு.” (முத்தொள். கஎ)

எனவும் இவற்றுட் பார்த்தனளெனவும் பட்டினமெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர்,

“நேரீற் றியற்சீர் நிரையு நிரையும்.” (தொல். செய். எச)

எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக் கூறிய வதனானே அதுவும் நிரையீற்றியற்சீரென்பதூஉம் அஃதிரண்

டாஞ் சீரென்பதூஉங் கொள்க; [1] அல்லாதார், அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி,

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே."

(தொல். செய். உ௩)

என்றதனான் வெண்சீரிறுதி நிரையாக இயற்றி அதன் அடிப்பின் நேர்பசை கொடுப்ப,

"எம்போற் கிடந்தானென் னேறு." (பு. வெ. வாகை. உஉ)

என்புழி,

"கிடந்தானென்."

என நின்ற புளிசெல்வாயினைக் கூவிளியாக இயற்றி,

"நிரையவ ணிற்பின் நேரும் நேர்பும்."

என்றதனான் ஏறு என்னும் நேர்பசை கொடுப்பர். அஃது, ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது; என்னை? [2] இது கட்டளையடி யன்மையின். (எரு)

[கலிப்பாவினிறுதி ஆசிரியப்பாவானும் வெண்பாவானும் முடியுமெனல்]

கூஅஅ. எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே. (எசு)

கூஅகூ. வெண்பா வியலினும் பண்புற முடியும். (எஎ)

---

1. அல்லாதார்—தொல்காப்பியரல்லாதார்.
2. இதுவென்றது 'எம்போற்கிடந்தானென்னேறு' என்றஅடியை.

[யாப்பினிலக்கணம் இதுவெனல்]

௨௯௦. எழுத்து முதலா வீண்டிய வடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்.

இஃது,

“ யாத்த சீரே யடியாப் பெனாஅ.”

(தொல். செய். க) என நிறுத்தமுறையானே அடியுணர்த்தி யாப்புணர்த்துகின்றது.

இ—ள்: எழுத்து முதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருள்களை முடிய யாத்தல் யாப்பாமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

அடிக்கண்ணே முடியுமென்னவே, இருசீரு மூச்சீரு மொட்டப் முடிய நாட்டியும் நாற்சீர்கொண்டு முடிய நாட்டியும் அமையு மென்பது. மாத்திரை முதலாகவொன்று

“மூயத்தோடு சினி முதுவிசும்பு போழ்ந்தவர்.”

என்றவழி, எழுத்தும் அசையுஞ் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது, யாப்பெனப்படாது; சொல்லிலக்கணத்தாற் சொற்றொடரும் பொருளுடையனவாயினு மென்பது.

உ “மணிவென்ன வைகவன முகிழ்மதி முகமலர்
விழியிலேச் செவ்வாய் மென்னடைப் பேதை.”

என்றவழியும், முதலடிக்கட் பொருட்டொடர்பின்றி அறுத்துக் குறைத்துச் செய்தமையின் அதுவும் யாப்பறி புலவரான் யாப்பெனப்படா தென்றவாறு. (எஅ)

---

1. இது—அடி.

2. இது இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானும் முடிய காட்டியது.

3. இவ்வடி பொருட்டொடர்பின்றி அறுத்துக் குறைத்துச் செய்தது. முதலடிக்கண் பொருள் முடியாமையின். இனி. மணிவென, வலமுலை, முகிழ்முகம், மலர்விழியிலே என்று பொருள் தொடராது பிரிந்துநிற்றலின் பொருட்டொடர்பினைச் சீர்க்கண்ணும் அறுத்துக் குறைத்துச் செய்தவாயிற்று.

[யாப்பின் பகுதி இவையெனல்]

௩௯௧. பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கத முதுசொலோ டவ்வேழ்
நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில்
வரைப்பி
னாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்.

இச்சூத்திரம் அரிமாநோக்கு, மேற்கூறிய யாப்பிற்கும் வருகின்ற மரபிற்கும் அப்பாற்படுவதனைக் கூறினமையின்.

இ — ள் : பாட்டும், உரையும், நூலும், வாய்மொழியும், பிசியும், அங்கதமும், முதுசொல்லுமென்று சொல்லப்பட்ட அவ்வேழு நிலத்தும்,

“ வடவேங்கடந் தென்குமரி யாயிடை..”
(பாயிரம்)

நாட்டார் நடாத்துகின்ற செய்யுளின் பெயரே தனக்குப் பெயராகவுமுடைத்து மேற்கூறிய யாப்பு என்றவாறு.

எனவே, மேற்குறித்த பொருளை அடிக்கண் முடியுமாற்றால் யாப்பென்றான், அதனையன்றி இப்பகுதிப்படச் செய்தலும் யாப்புத்தாமே யென்றவாறும். இவ்வெழுவகையானுஞ் செய்தன்மையென எதிரது நோக்கிற்று. பாட்டு உரை நூல் என்ப வற்றிலக்கணம் முன்னர்ச் சொல்லுதும். யாப்பின் வழியது என்பது இவ்வெழுவகைப்பட்ட யாப்பின் பெயரது மரபாகும் மரபாகிய உறுப்பென்றவாறு. இதனை 'நூல்[1] யாப்புப்' போற் கொள்க. இப்பகுதிதான் தமிழ்நாட்டு மரபுகளின் மரபென்னும் உறுப்பு மரபென எதிரது நோக்கிற்று. 'வண் புகழ் மூவர்' என்பது, வளனுடைமையாற் புகழ்பெற்றுச் சென்றவாறு; அஃதாவது, கொடுத்துப் பெறுபுகழென்னக் கொள்க. மூவரெனப்படுவார் தமிழ்நாட்டு[2] மூவேந்துமாயினார். 'தண் பொழில் வரைப்பு' என்பது, நிலத்துக்கு

கிழல்செய்யும்

---

1. யாப்புப்போற் கொள்க என்றது தொகுத்தல் முதலிய நான்கும் நூல் யாப்பென்று பெயர்பெற்றாற்போல இந்த யாப் புறுப்பும் இவ்வெழுவகைப் பகுதியையுமடக்கி பெயர்பெறுமென்றபடி.

யாப்பு என்று

2. மூவேந்தர்—சேர சோழ பாண்டியர்.



ல்வலம் பொழிலுள் வரைந்து கொள்ளப்படும் வரைப்பினை டைய வென்றவாறு. தண்பொழிலுடைமையின் காவலந் தண் ழிலெனப்பட்டது. நாற்பெயரெல்லை யகமென்பது, தமிழ் டென்றவாறு. வடவேங்கடந் தென்குமரியன்றிக் கிழக்கும் ற்கும் கடலெல்லை கூறினேனெனின்,—அறியாது கடாயி ய்; வரையறை யிலவென்று கூறுதலனெல்லாங் கொள்ளப்படுவனவல்ல; வகைகூறுமையும் [2] தமிழ் சொன்னப் ன் கண்டாய்; அவர் வழங்கும் யாப்பின்வழியதென்பது ழ்நாட்டார் வழங்கும் [3] யாப்புப்பகுதி அவை என்றவாறு. மிழ்நாட்டார் வழங்கும் [4] மரபுப்பகுதி அவையெனவே யாப் ம் மரபுங் கருதியதாயிற்று இச்சூத்திரமென்பது இதனாற் றும்.

1 "வடவேங்கடந் தென்குமரி யாயிடை."

[மரபாவது இதுவெனல்]

௬௨. மரபே தானு
நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன.

இது, நிறுத்தமுறையானே மரபினை விளக்கக்கூறுகின்றது.

இ—ள்: மரபேதானும்— ¹அன்னவன் கூறப்பட்ட மரபு தானும். ஏகாரம் பிரிநிலை; உம்மை இறந்தது தழீஇயிற்று; மேல் எழுவகையான் யாக்கப்படுதன் மரபென்றமையின், மரபேதானு மென்றானென்பது. நாற்சொல்—பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல்; இயற்சொல் திரி

---

1. நாவல்—ஒரு மரம். இதுபற்றி நாவலந் தண்பொழில் (சம்புத்தீவு) என்று பெயர்பெற்றது.

2. தமிழ் என்பது தழீஇ"என்றிருந்திருக்கவேண்டும்.

3. யாப்பின் மரபுப்பகுதி என்றிருத்தல் வேண்டும். யாப் பின்வழியது என்பதற்கு முன்னுரைத்த விரிவுரை நோக்குக.

4. யாப்பின் மரபுப்பகுதி என்றிருத்தல் வேண்டும்.

5. "வடவேங்கடம் என்பது தொடங்கியுள்ள வாக்கியம் முன் வரும் வடவேங்கடம் எனத் தொடங்கியுள்ள வாக்கியத்துக்கு முன் வரல்வேண்டும்.

6. அன்னவன் கூறப்பட்ட - எழுவகையாக முற்கூறப்பட்ட

47

என்னுஞ் செய்யுள் வழக்கிற்றாகவும் சொல்லப்படும். வடிவிற்றினவே சொன்மரபும் பொருண்மரபும்

வழங்கு

[illegible]

கூறினான் ; என்னை ? பொருளன்றி நாற்சொல்லையும் வழங்கா ராகலின் ; என்னை, சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தார் வழங்குமாற்றானே செய்யுள்செய்க என்பதாயிற்று. இதனது பயன் : ஒருகாலத்து வழங்கப்பட்ட சொல் ஒருகாலத்தில்லாமையும் பொருள் வேறுபடுதலும் உண்டு. அவை : [4] அதோளி இதோளி உதோளி (கலி—ககசு) எனவுங் குயின் எனவும் இவை ஒருகாலத்துளவாகி இக்காலத்தில்லாயின. அவை முற் காலத்துளவென்பதே கொண்டு வீழ்ந்தகாலத்துஞ் செய்யுள்

---

1. மரபாவது நாற்சொற்களும் வழக்கின்கண் வழங்கு கின்றபடியே செய்யுளின்கண்ணும் யாக்கப்படுவது. யாத்தல் - இயைத்தல்; வழக்குமரபே செய்யுளாதலின் செய் யுண் மரபு மதுவாகும்.

2. இடை - இடம் ; வேறுபாடுமாம்.

3. பரப்பப்பட்ட - படுக்கப்பட்ட என்றிருப்பது நலம்.

4. தொல் - எழுத்ததிகாரத்து, "கட்டுமுதலாகிய இகர விறுதியும்" என்பதனால் முடிக்கப்பட்ட அதோளி முதலியனவும் "குயின்என் கிளவி இயற்கை யாகும்" என்பதனால் முடிக்கப் பட்ட 'குயின்' என்கிளவியும் தொல்காப்பியர் காலத்து வழங்கின என்பது பெறப்படும். இவை தொல் - சொல்லதிகாரத்து "கடிசொல் இல்லை காலத்துப் படினே" என்னுஞ் சூத்திரத்து ளொன்றென முடித்தலாற் கடியப்பட்டன.



ப்படா. அவை ஆசிரியர் நூல்செய்தகாலத் தனவாயினும் டைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தனவாயிற் [1] பாட்டினுந் தொகையினும் அவற்றை காட்டிக்கொண்டு செய்யுள் செய் வர் ; அவற்றுக்கு இது மரபிலக்கணமாகா தென்பது.

இனி, பாட்டினுந் தொகையினும் உள்ள சொல்லே மீட் ருகாலத்துக்கு உரித்தன்றிப் [2] போயினவும் உள ; அவை ற்காலத்தனவென்பதே கொண்டு பிற்காலத்துக் காட்டிச் செய் ர் செய்யப்பெறா என்பது.

இனிப் பொருளும் இவ்வாறே காலத்தானும் இடத்தானும் வேறுபடுதலுடைய. ஒருகாலத்து அணியுங் கோலமும் ஒரு காலத்து வழங்காதனவுள. ஓரிடத்து நிகழும் பொருள் பிறிதோரிடத்து நிகழாதனவுமுள. அவ்வக் காலமும் இடனும் நோக்கி அவற்றாற்றாற் செய்யுள் செய்யவேண்டுமென்பது. ஒரு காலத்துக் [3] குழைபெய்தாரென்றும், ஒருகாலத்துக் [4] குழல் கட்டி முடித்தாரென்றும் ஆண்மக்களை ஒழிந்த காலத்தும் அது கூறார். பதினெண்பாடைத் [5] தேசிகமாக்கள் அணியினையுங் கோலத்தினையும் விரவிக் கூறாது அவ்வக்காட்டாரே பூணுமாற்றானும் புனையுமாற்றானும் ஏற்பச் சொல்லுதல் மரபு.

இனி நான்கு நிலத்தினும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்த தாகச் சொல்லுதலும், உலகொடு மலைதலும், சமயங்களொடு மலைதலும், கலையொடு மலைதலும் பிறவும் இன்னோரன்னவும் பொருண்மரபின்பாற்பட்டடங்கும். [6] இவை நாடகவழக்கின் மென்பது முன்னர் அகத்திணையியலுட் கூறினும்.

"புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்குல்."

என்பது, [7] பருவத்துக்கேற்ற அணிகூறியது.

(அகம். ௭)

---

1. பாட்டினுந் தொகையினும் என்றது பத்துப் பாட்டினும் எட்டுத்தொகையினும் என்றபடி.
2. போயின - வினைப்பெயர்.
3. குழை - தோடு.
4. குழல் - பெண்கள் மயிர்முடிக்கும் ஐம்பாலுள் ஒன்று.
5. தேசிகம் - தேச சம்பந்தம்.

(புறம். ௬௬)

எனவும் மேலையார் திரித்தவையாயினே இக்காலத்துந் திரித்துக்கொள்ளப்படுவன உள. அவை [1] 'கானந்தை' என்றற் றொடக்கத்தன. பிறவும் இவ்வாறு வருவனவுங் அறிந்துகொள்க.

[2] "கடையாயார் நட்பிற் கமுகனையர்."

(நாலடி. ௨௧௬)

என இதனுள் திரித்தனவாகிய புல்லே கூறி ஒழிந்த மரங்க ளொப்பன உளவாயினும் உடன்கூறாராயினர். இன்னோரன்ன வுஞ் செய்யுட்கு மரபெனப்படுமென்பது.

மற்று, 'பாட்டுரை நூலே' என ஏழுவகை வகுத்த பகுதியையுஞ் செய்யுட்கு மரபென மேற்கூறினான்; அத னானே இவ்வேழுவகையானன்றி [3] ஆரியர் வேண்டுமாற்றானும் பிறபாடை மாக்கள் வேண்டும் கட்டளையானுந் தமிழ்ச் செய் யுள் செய்தல் மரபன்றென்றவாறு.

(௮௦)

---

1. கானந்தை—கனத்தார்.
2. "கடையாயார் நட்பிற் கமுகனைய

கழஞ்சுந் தொடியுந் துலாமுமெனத் துலைக்கோலால் தூக்கி அளக்குமாறில்லை; அதுபோலப் [3] பாவின்றித் தூக்கியளக்கப் படும் பொருள் இன்மையானும், பாவினை எழுநிலத்தெழுந்த [4] செய்யுள் அடி வரையறையுடைய பாட்டிற்கு இன்னவாறு வந்த தென்றறிவிப்பது தூக்காகலானும், எல்லாப் பாவிற்குந் தூக்குப் பொதுவாகலானும் பாவொடு புணர்த்தி தூக்குணர்த்தப் பட்டது.

இ—ள்: அகவல் என்பது ஆசிரியமே — வழக்கினுள் அகவலென்று வழங்கப்படும் பாவினை ஆசிரியத்திற்குரிய பாவென்ப என்றவாறு.

[5] அகவிக் கூறுதலான் ‘அகவல்’ எனக் கூறப்பட்டது.

அஃதாவது, [6] கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல்லாம் வரையாது சொல்லுவதோராறும் உண்டு. அதனை வழக்கினுள்ளார் [7] அழைத்தலென்றுஞ் சொல்லுப; அங்ஙனஞ் சொல்லுவார்

1. எழுந்தாள் — வினையாலணையும் பெயர்.

அஃதாவது—
தூக்காவது.

2. ஆனும் என்பன விகற்பப்பொருளில் வந்தன.

3. பா—ஓசை; செய்யுளை அறிவிப்பது.

4. செய்யுள் என்பது செய்யுளுள் என்றிருத்தல் வேண்டும்.

5. அகவல்—அழைத்தல், "அகவன் மகளே அகவன் மகளே" (குறு—உங.) என்னும் பாட்டையும் அதன் உரையையும் நோக்குக.

6. கூற்று—ஒருவர் ஒன்று கூறுவது. ஒருவர் வினவிக் கூறுவதுமாம். மாற்றம்—அதற்கு மறுமாற்றம் பின் ஒருவர் கூறுவது. விடையாகக் கூறுவதுமாம். ஆகிச் சொல்லுற என இயையும்.

இதனை இக்காலத்தும் கலைக்கூத்தர்பாற் காணலாம். கேட்பச் செப்பிக்கூறுது என இயைக்க. ஆகி என்பதனைக் கூறுது என்பதனோடு முடிப்பது சிறப்பன்று.

7. அழைத்தல்—அழைத்துக் கூறல்.

லியல்]
கஎ௫

பொருளதிகாரம்

சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்திசைக்க ஓசை அகவலெனப் படும்; அவை: தச்சுவினை மாக்கள் கண்ணும், [1] களம்பாடும் வினைஞர்கண்ணும், கட்டுங் கழங்கும் இட்டு உரைப்பார்கண்ணும் தம்மில் [2] உறழ்ந்துரைப்பார்கண்ணும், [3] பூசலிசைப்பார்கண்ணும் கேட்கப்படும். கழங்கிட்டுரைப்பார் அவ்வனமே வழக்கினுள்ள ராய்க் கூறும் ஓசை ஆசிரியப்பாவெனப்படு மென்றவாறு. (அக)

[இன்னவோசை வெண்பாவெனல்]

உகஅ. அஃதான் றென்ப வெண்பா யாப்பே.

இது, வெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற்கூறிய அகவலோசையன்றிச் செப்பிக் கூறும் ஓசை எல்லாம் வெண்பாவெனப்படும் என்றவாறு.

யாப்பென்றதனான் அப்பாக்கள் செய்யுண் முழுதும் ஒருங்கு தழீஇக் கிடக்குமென்பது கொள்க. அகவிக் கூறுத

ஒருதாற்சொருவன் இயல்புவகையானே ஒரு பொருண்மை கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை யெனப்படும்.
இவ்விரண்டுமல்லது வழக்கினுள் இன்னாமையான் அகற்றான் றனவே [4] அகனிலக்கணம்[5]
போல்வதாயிற்று. (அஉ)

[இன்னவோசை கலிப்பாவெனல்]

௩௮௬. துள்ள லோசை கலியென மொழிப.

இனி, துள்ளலுந் தூங்கலும் செய்யுட்கணன்றி வழக்கினுஞ் செய்யுளினும் ஒப்பவருவனவல்ல; அவற்றுள், துள்ளலோசை உணர்த்துகின்றது.

இ—ள்: துள்ளலோசையென்பது, வழக்கியலாற் சொல்லாது [8] முறுக்கப்படுமாற்றால் துள்ளச் சொல்லும் அது கலிப்பாவெனப்படும் என்றவாறு.
ஓசை;
(அங)

1. களம்—போர்க்களம்.
2. உறழ்ந்து—மாறுபட்டு.
3. பூசல்—போர்.

4. அதன்—வெண்பாவின்.

5. போல்வது—பெறுவது என்றிருப்பது நலம். நச்சுரை நோக்குக.

6. முரலல்—துள்ளி ஒலித்தல்.



[இன்னவோசை வஞ்சிப்பாவெனல்]

௯௧௧. தூங்க லோசை வஞ்சி யாகும்.

இது தூங்கலோசை புணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்; அடியிற்றங்காது சீர்தொறுந் தூங்குமோசை தூங்கலோசை எனப்படும். அது [1] போலும் வஞ்சிப்பாவாவது என்றவாறு. (அசு)

[மருட்பா இவ்வாறு வருமெனல்]

௯௯௪. மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே.

இது, மருட்பாவிற்கு வேறுபாடு இல்லை என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ—ள்: மருட்பாவிற்கு உறுப்பாவது ஒழிந்த இருகூறு மல்லது தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டுந் தனிநிலை யின்று என்றவாறு.

எனவே, இரண்டன் கூட்டத்துக்கண்ணது மருட்பாவாவ தென்றவாறு. பரிபாடற்கு [2] இருசார் அன்மையின் ஈண்டுக் கூறிற்றிலர். அது மேற்கூறுப. 'ஏனை இருசார்' என்றதென்னை யெனின்,—இச்சூத்திரத்து முன்னர் அதிகாரப்பட்டு நின்ற துள்ளலோசையுந் தூங்கலோசையு [3] மல்லது, அங்ஙனஞ் செய்யுட்கு உரியவன்றி வழக்கிற்கு வருவனவாகி ஒழிந்து நின்ற செப்பலும் அகவலுமே என்றற்கு [4] அவ்வாறு கூறினனென்பது. அவை இரண்டுங் கொள்ளுங்கால் நிரந்தமுறையாற் கொள்ளாது, எதிர்சென்று கொள்ளப்படும். கொள்ளவே செப்பல் முன்னாகவும் அகவல் பின்னாகவும் வருவதாயிற்று மருட்பா. இனி நிரந்தமுறையானே கொள்வார் வெண்பா முதலாகத்து அகவல் பின்னாக வருவது மருட்பாவன்றெனவும்,

1. போதும் என்பது பெறுவது என்றிருப்பது நலம்.

2. இருசார் இன்மையின் என்றிருப்பது சபாபதிப்பிள்ளை பதிப்புப் பொருத்தமின்று. நலம். 3. கனக

3. அல்லது என்பது ஒழிந்துநின்ற என்பதோடு முடியும். அல்ல எனினுமாம்.

4. அவ்வாறு கூறினன் என்றது, ஏனை இருசார் என்று கூறினார் என்றதை.



...பா வொழிந்து ஒழிந்த பாத்தம்முள் மயங்குவனவே ...பாவெனவுங் கூறுப. கலிப்பாவும் வஞ்சிப்பாவும் [1] ஆசிரி...தோடும் வெண்பாவோடும் மயங்கியிரினும் மருட்பாவெனப் ...ன்மையின் அது பிழைக்குமென்பது. (அஉ)

[அப் பாக்களாலேயே பாட்டு வருமெனல்]

அ. அவ்விய லல்லது பாட்டாங்குக் கிளவார்.

இது, மேலவற்றிற்கு ஓர் வரையறை

கூறுகின்றது.

இ—ள்: மேற்கூறிய நான்குபா விலக்கணத்தானல்லது பிற்கண் வேறுபாக் கூறப்படாது என்றவாறு.

இது கூறிப்பயந்த தென்னையெனின்,—மேற்கூறிய பாக்கத் பெயர் கூறாத செய்யுட்களும், [2] அவை பாவாகவரினல் வேறு தமக்குப் பாவிலவென்பதூஉம்,

"மருட்பா வேனை விருசா ர்க்கது

தானிது வென்னுந் தனிநிலை யின்று."

(௲௬௭)

வே அவ்விரண்டன் கூட்டத்தின்கண்ணும் வேறோர் பாப் ருமென்று கொள்ளினுங் கொள்ளற்க வெனவும், பிற்கா து நூல் செய்யும் ஆசிரியர் பிறவகையாற் பாவுறுப்பினை, க்கம்பட வேண்டுவாருளராயின் அவரை விலக்கியுங் கூறிய து. அல்லதூஉம் மாணாக்கன் இதன் [3] முதனூல் செய்த ரியன் பண்ணுந் திறனும் பருந்தானைக் கண்டு இலற்றை பாவும் இனமுமெனப் பகுத்தான்கொலென்று ஐயுறாமை க்கி [4] இயனூலுள் அவ்வாறு கூறிற்றிலனெனச் சொல்லினு ன்பது. நான்கு பாவினையும் நோக்கி 'ஆங்கு' என்றான்; க்கு செய்புளை நோக்கி 'அவ்வியல்' என்றானென்பது. (௮௧)

---

1. ஆசிரியவிற்றுனும் வெண்பாவிற்றுனும் முடியும் கலி வஞ்சியும் அவ்விரண்டோடும் மயங்கியும் மருட்பாவென்று ல்லப்படாமையின் அது பிழைக்குமென்றபடி.

2. அவை மேற்கூறிய அகவல் முதலிய நான்கும். பா—
ண்டு ஓசை.

3. முதனூலாசிரியன்—அகத்தியன்.

4. இயனூல்—இயற்றமிழ் நூல்.

இயல்—இலக்கணம்.

5. ஐந்து செய்யுளாவன—ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்பன.

௪௮

. கஎஅ. தொல்காப்பியம்

[செய்யு

[தூக்காவது இதுவெனவும் அது நடக்குமிடம்

இவையெனவும்]

கஅகக. தூக்கியல் வகையே

யாங்கென மொழிப.

இது, தூக்காமா றுணர்த்துகின்றது.

இ—ள்: தூக்கெனப்பட்ட உறுப்பு

நடக்கும் இடவகை

அச்சொல்லப்பட்ட நான்கிடமுமாம்

என்றவாறு.

தூங்கென்றது அப்பெற்றித்து என்றவாறாகக் கொள்ளற்க.

அவ்விடம் தூக்கு இயலும் இடப்பகுதி என்றவாறு; என்

னூர்க்குத் தூக்கினது இலக்கணம் ஈண்டுக்கூறியிலனாலெனின்,—

தூக்கென்பது சொல்லின் முடிபிலக்கணத்[1] திற்று. தூக்கென்பது, நிறுத்தலும் அறுத்தலும் [2] பாடலுமென்றின்னோரன்னவற்றுமேல் நிற்கும்; ஈண்டும் அவ்வாறே பாவினை இத்

துணையடியென நிறுத்தாங் [3] கூறுபாடறிதலும், அவ்வத் தூக்குள்வழிச் சொல்லுவாரது உறுப்பு[4] விகாரப்பட்டு [4] ஓடுவது போன்று, அசைபுமாறுங் கண்டுகொள்க. இனி, அதுதான் இன்னபொருளை அறுத்துநிற்கு மென்பான் பாக்கூறி அப்

பாவின்கண்ணது [5] இவ்விதுவென்றான்; எனவே, இனிக் கூறுகின்றதில்லை தூக்கிற்குவேண்டுஞ் இலக்கணமென்பது.

இக்கருத்தினனே தூக்கினைப் பாவெனினும் அமையும்.

“ பாவென மொழியினுந் தூக்கினது பெயரே.”

எனப் பிறருஞ் சொல்லுப.

அகவலோசைக்கண் நூக்குவருங்கால் இருசீர்முதலா என்

சீர்காறும் பரந்துபட்ட அகவலோசையை நாற்சீர்க்கண்ணே

துணித்துக்கொள்ள, அஃது ஆசிரியத்தூக்கமென்றவாறு. இரு

சீரால் துணிப்ப ஆசிரியவோசையாகாது; முச்சீரால் துணிப்

பினும் ஆசிரியவோசையாம்; என்னை? ஈற்றயலடி முச்சீர்த்தா

மெனவும், இடையும் வரையாரெனவுங் கூறினமையின்.

1. இற்றது—முடிந்தது.

2. பாடல்—அவ்வரையறை அளவைச் சொல்லல்.

3. கூறுபாடறிதல்—வரையறுத்தல்.

4. ஓடுவது—ஓதுவது என்றும் பாடம். அதுவே பொருத்தம்போலும். ஓதுதல்—சொல்லுதல், அவ்வத் தூக்கை ஓதுதல்.

5. இவ்விறுதி-என்பது இவ்வாறுதி என்று காணப்படுகின்றது. அதுவே பொருந்தும். S.

நாற்சீரடிக்கணன்றி இரு

...ர்க்கண்ணும் சிறுபான்மை மூச்சீர்க்கண்ணும் தூக்குக் கொள் ...ப்படும். அங்ஙனங் கொள்ளாக்கால் இருசீரடியெனவும் மூச் ...ரடியெனவுந் தூக்கின்றி [3]இடைதெரியப்படாவென்பது. (அஎ)

[தொடைவகை இவை எனல்]

௯௦. மோனை யெதுகை முரணே யியைபென
நானெறி மரபின தொடைவகை யென்ப.

இது,
"மரபே தூக்கே தொடைவகை, எனாஅ." (ந.கந.)
...ன திறத்தமுறையானே, தூக்குணர்த்தித் தொடைவகை ...ணர்த்துவா னெழுந்தான். அவைதாம் இனைவயெனப் பெய ...ம் முறையுந் தொகையு முணர்த்துதல் நுதலிற்று.

1. தூக்கு அறுப்பு—தூக்கினது அறுப்பு.
2. புலவு என்பதை முன்னடியோடு சேர்ப்பின் நாற்சீரடியாம்.
3. இடை—வேறுபாடு; அளவுமாம்.

இ—ள்: மோனைத்தொடையும் எதுகைத் தொடையும் முரண்டொடையும் இயைபு தொடையுமெனா நான்குவகைப் படும் தொடை என்றவாறு.

'நெறி மரபு' என்பது, நெறிப்பட்ட தொடையிலக்கணம் இதுவென்றவாறு. எனவே,

"அளபெடை தலைப்பெய வைந்து மாகும்." (௪௦௧)
என்றவழி, இதுபோலச் சிறந்ததன்று அளபெடைத்தொடை என்பதாம்; என்னை? அதுவும் வழுவின்மைத்தாக்கொண்ட எழுத்தாகலானென்பது. 'தொடைவகை' என்பது தொடைப்பகுதி பலவுமென்றவாறு. அவ்வ மேற்கூறுமாற்றான் மோனைநான்கும், எதுகை பதினைந்தும், முரண் ஐந்தும், இயைபு இரண்டுமென்று இவ்வகைப்படுதலும், இனி கண்டு எண்ணப்பட்ட தொடைப்பகுதிகளும் அதுதாற்றிருபத்தைந்தடியினையும் ஓரோவொன்றாகத் [1] தம்மொடு தம்மைத் தொடுப்பனவும், அவைதம்மொடு பிறவந்து தொடுப்பனவும், [2] ஓரடிக்கண்ணே தொடுப்பனவும் அவற்றைக் கட்டளையடி பல்லனவற்றும் [3] சுருப் விராய்த் தொடுப்பனவும், கட்டளையடிபல்லனவற்றைத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவும், தம்மொடு [4] பிறவந்து தொடுப்பனவுமென இன்னோரன்ன பலவுமுள. அப்பகுதியெல்லாம் அறிவித்தற்குத் 'தொடைவகை' என்றானென்பது. (௮௮)

[அளபெடையோடு தொடை ஐந்துவகை எனல்]

௪௦௧. அளபெடை தலைப்பெய வைந்து மாகும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இ—ள் : அங்கான்கேயன்றிக் தொடைவகை ஐந்தென வும்படும் அளபெடைத் தொடையோடு தலைப்பெய்ய என்றவாறு.

1. தம்மொடு தம்மை—எடுத்த அடியோடு அந்த அடியை.
2. ஓரடிக்கண்ணே தொடுப்பன—முரண், பொழிப்பு, ஒரூஉ முதலிய.

3. சுருய்—சுற்றில் வைத்து.
4. பிற வந்தது—என்பது பிறவற்றை என்றிருப்பது நலம்.

பொருளதிகாரம்

னியல்]

கூஅக

அளபெடை எழுத்தோத்தினுள் [1] வேறு எழுத்தெனப் படாமைச் சிறப்பின்மை நோக்கி, ஈண்டுமதனை வேறுபோதந்து கூறினானென்பது; என்றார்க்கு, மேலைச்சூத்திரத்து நானெறி மரபினவெனத் தொகை கூறினமையின், ஈண்டு அளபெடை யுந் தொடையாமென அமையும். நான்கின்மேல் ஒன்றேறி யக்கால் ஐந்தாமென்பது ஈண்டுச் சொல்லவேண்டுவதன்று பிற வெனின்,—அற்றன்று; நான்கினோடு ஒன்றினையே சொல்லு கின்றானாயின் அது கடாவாவது; ஐந்தெனவும் ஆறெனவும் படுமென்றற்கு இது கூறினான்; எனவே, உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென அளபெடை இரண்டாகலினென்பது. அஃதே கருத்தாயின், ஆறுமாகு [2]மென்பினெனின், அங்ஙனங் கூறின் உயிரளபெடையோடு ஒத்த சிறப்பிற்றாகச் செல்லும் ஒற்றளபெடையென மறுக்க. உயிரின் பின்னது ஒற்றாகலான் எடுத்தோத்துப் பெறுவது உயிரளபெடையெனவும், உம்மை யாற் பெறுவது ஒற்றளபெடையெனவுங் கொள்க. [3] உம்மை எச்சவும்மை. ஒற்றளபெடை மூன்றுபாவினுஞ் செல்லாது; கலிப்பாவினுள் துள்ளலோசையான் [4] நில்லாமையினென்பது.

[வேறுந் தொடையுள எனல்]

௪0௨.

**பொழிப்பு மொரூஉவுஞ் செந்தொடை மரபு**
**மமைந்தனர் தெரியி னவையுமா ருளவே.**

இதுவும் அது.

இ—ள் : மேற்கூறிய ஐந்துமேயன்றிப் பொழிப்புத் தொடையும், ஒரூஉத்தொடையும், செந்தொடையுமென இவையு

மூன் என்றவாறு.

செந்தொடை மரபென்பது செந்தொடை

யிலக்கணம் என்றவாறு.

---

1. வேறுஎழுத்து—முப்பத்துமூன்றைவிட வேறான எழுத்து. முப்பத்தொன்கென வேறேரெழுத்தாக வேண்டிற்றிலர் என்றபடி. வேறெழுத்தெனப்படாமையாகிய சிறப்பின்மை என்க.

2. —என்மனெனின் —என்றுமெனின்

என்றிருப்பது நலம்.

3. ஐந்துமென்றதிலுள்ள உம்மை
எதிரதுதழீஇ நின்றவின் எச்சவும்மை,

ஆறுமாகுமென்பதை

4. இல்லாமையிற் செல்லாது என

இயைக்க,



'அமைத்தனர் தெரியின்' என்றதனன், அமையுமாற் றான் அமைத்துக்கொள்ளப்படும் ; யாங்ஙனம் ? பொழிப்பும்

ஒரூஉவும் ஓரடியுள்ளே வருமெனவும், செந்தொடை ஓரடியுள் வரினும் இரண்டடியானன்றி வாராதெனவுங் கொள்க. இக் கருத்துநோக்கி, இவை ஈண்டுப்போதந்து கூறினானென்பது.

'அவையுமா ருளவே' என்ற உம்மையான் [1] இவை போல ஓரடிக்கண்ணேவரும் முற்றெதுகையும், கீழ்முற்றெதுகையும், [2] இரண்டடிக்கோதியும், இருவகை விட்டிசைத்தொடையுங் கொள்ளப்படும். (௧0)

[இவையுந் தொடையுள எனினும் இவை முற்கூறிய தொடைகளுள் அடங்கு மெனவும்]

௪0௩. நிரனிறுத் தமைத்தலு மிரட்டை யாப்பு
மொழிந்தவற் றியலான் முற்று மென்ப.

இது, நிரனிறைத் தொடையும் இரட்டைத் தொடையு மென இரண்டுதொடைகூறி, அவை முற்கூறிய தொடைப்பாற் படுமென்று அடக்கக் கூறுகின்றது.

இ—ள்: நிரனிறைப் பொருள்வகையால் தொடுக்குந் தொடையும், வந்தசீரே நாற்கால் தொடுக்குந் தொடையும் முன்னைத் தொடைப்பாற்பட்டு அடங்கும் என்றவாறு.

யாத்த வெனினும் தொடுத்தவெனினும் ஒன்று.

"அடல்வே லமர்நோக்கி நின்முகங் கண்டே
யுடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலுங் கனையிருளு மம்புலும் பாம்புந்
தடமதிய மாமென்று தாம்"

என்றவழி, உடலுங் கடலுமென நிரனிறைத் தொடைமேற் கூறுமாற்றான் எதுகைத் தொடையாய் அடங்கும்.

"பரவை மாக்கடற் றொகுதிரை [4]பரவும்
பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்."

---

1. இவைபோல—பொழிப்பு முதலியபோல.

2. இரண்டந்தாதி—அசையந்தாதி, சீரந்தாதி.

3. கடல் உடலும், இருள் இரிந்தோடும், ஆம்பல் மலரும், பாம்பு பார்க்கும் என நிரனிறையாம்.

4. பரவும் வரவும் என நிரனிறுத்தல் இயைபு தொடைப்பாற்படும். பரவுர் என்பது வரவும் என்று கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் காணப்படுகின்றது.



னை இவ்வாறு நிரனிறுத்தலும் ஒன்று; அஃது இயைபின் பாற்படுமென்ப. ஒழிந்தனவும் அன்ன.

இரட்டைத் தொடை என்பது, ஒரு சொல்லே நான்கு ருமாகி வருமென்பது; அது,

"ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்."
(யா. வி. ப. கஅ0)

ன்னவரும். இது குறைவிற்றிரட்டை; இயைபுத்தொடையாய் டக்கும்.

"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவிற் றிருந்த புலவர்கள் பாடுகோ."
(யா. வி. ப. கஅக)

என்பது, நிறையீற்றிரட்டை: இதுவும் இயைபாய் அடங்கிற்று.

[1] செந்தொடையாய் அடங்குவன உளவேற் கண்டுகொள்க.

மற்று இவை இவ்வாறு அடங்குவனவற்றை வியக்தோ வது என்னையெனின்,—இவையுந் [2] தொடைப்பாடு கண்டு புற்றுவினை ஐயமறுத்தற்கென்பது; எனவே, [3] ஒழிந்த பொருள்கோள் தாமென்று தொடைப்பாடுகாட்டி ஐயஞ்செய் யாமையின் அவை கூறாராயினாரென்பது. நிரனிறையாயின் [4] இனைத்தென்றெண்ணி நிறுத்தபொருட்கேற்ப, எதிர்பொரு ளும் எண்ணி நிறுத்துச் செய்யப்படுதலின் அது வேறு தொடையாங்கொலென்று ஐயஞ்செல்லுமென்பது.

'மொழிந்தவற் றியலான்' எனவே, தனக்கு [5] வேறியல் பில்லாத செந்தொடை நீக்கப்பட்டது. பொழிப்பும் ஒரூஉவும் போல ஓரடியுள்ளின்றுந் தொடையாகச் செய்யினும் அவை முற் றாய் அடங்கும்; ஈரடிக் கூட்டத்துள் [6] தத்தம் வகையால் தொடைமை செய்யுமென்பது. (கூசு)

---

1. நிரனிறையும் இரட்டையுஞ் செந்தொடையாய் என்க.

2. தொடைப்பாடு—தொடைப்படுதல்.

3. ஒழிந்த பொருள்கோள்—நிரனிறையொழிந்த பொருள் கோள்.

4. இனைத்து—இவ்வளவு.

5. வேறியல்பு—வேறு தொடையா மியல்பு.

6. தத்தம் வகையால் தொடைமை செய்யுமென்றது நிர னிறைத்தொடை, இரட்டைத்தொடை எனத் தொடைமை

[மோனைத்தொடை இதுவெனல்]

௪௦௪. அடிதோறுந் தலையெழுத் தொப்பது மோனை.

இது, நிறுத்தமுறையானே மோனைத்தொடையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அடிதொறும் முதற்கண் ணெழுத்தே வரத் தொடுப்பது மோனைத்தொடையா மென்றவாறு.

"கண்டற் கானற் குருகின மொலிப்பத்
..........................................................
கரையா டலவ னளைவயிற் செறிய."

(அகம். ௨௬௦) என்பது, அடிதொறும் முதலெழுத்தொன்றி மோனைத்தொடை வந்தவாறு.

"கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்."

(புற. ௪௮)

என்பதும் அது.

இனிவருந் தொடையும் இதுவுமெல்லாம் அறுநூற்றிருபத்தைந்தடிக்கு உரியவாகியும், [1] பிறவடிக்கு உரியவாகியும், வஞ்சியடிக்குரியவாகியும், குறளடி சிந்தடி நெடிலடி கழிநெடிலடியெனும் நால்வகையடிக்கு உரியவாகியும் வருமெனக் கொள்க. [2]

அற்றன்று, அறுநூற்றிருபத்தைந்தடிக்கும் மோனைத்தொடை ஒன்றொன்றாகச் சென்று பெருகி அறுநூற்றிருபத்தைந்து தொடையாமென்பது. மற்று அடியிரண் டிணைக்கவழியன்றே தொடையாவது? இல்லை அறுநூற்றிருபத்தைந்து தொடையாங்கால் [3] இஃது ஓரடிக்கண்ணே வரல் வேண்டும்;

---

செய்யா என்றபடி. எனவே, எதுகையும் இயைபுமெனத் தொடைமை செய்யும் என்றபடி. தொடைமை — தொடை இயல்பு.

1. பிறவடி - கட்டளையடி யல்லாதன.

2. அற்றன்று என்பது ஏனையடிகளுக்குத் தொகைக்கணக்குக் கோடலை மறுத்து அறுநாற்றிருபத்தைந்தடிக்கே தொடைக் கணக்குக் கொள்ளுதலைக் குறிப்பித்து நிற்கின்றது. ஆயின் தொடைகள் ஏனையவடிகளுக்கும் கட்டளையடிக்குப்போல வருமென்று கோடலின் (அற்றன்று) என்பதன்முன் உள்ள வாக்கியம் சிதைந்திருத்தல்வேண்டும். தொடைகள் ஏனையடிகளுக்கும் வருமென்று பேராசிரியர் கூறலை, பொருள். சகச-ம் சூத்திரநோக்கிக் காண்க.

3. இஃது - மோனைத்தொடை.



வண்டே, [1] 'அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை' ன்றதனோடு மாறுகொள்ளும் பிறவெனின்,—இதுநோக்கி ன்றே,

“அடியுள் எனவே தளையொடு தொடையே.”
(தொ. செ. ௧௧)

னைக் கூறி,

“அடிவிறந்து வருதலில்.” (தொ. செ. ௧௨)

ன்பாலுமீற்று; எனவே, அறுநாற்றிருபத்தைந்தடியுள், ஒன் னையே இரட்டித்தால் தொடைகொள்ளலென்பது பெற்று ன்றே; அன்றி அடிதொறுமெனப் பன்மை கூறவே அவற் றுமே இரட்டித்தலும் பிற அடிவந்து தொடுத்தலும் எல் ரம் அடங்கக்கூறினான் என்பது.

“மெய்பெறு மரபிற் றொடைவகை.” (தொ. செ. ௧௦௧)

னை மேல்வரையறுக்கப்படுந் தொகை பதின்மூன்றாயிரத் தெழு நூற்றெட்டனுள்ளும், மோனைத்தொடை வருங்கால் [2] மூன்று பாவிற்கும் ஓதிய எழுபத்தெட்டுச் சீரினும் வைப்பெறும்; அவ்வாறு வருங்கால்,

“அடியுள் ளனவே தளையொடு தொடையே.” (தொ. செ. ௯௯)

என்ற தளைவிலக்கணமும்,

“அடியிறந் து வருதலில்.” (தொ. செ. ௯௪)

ளப்படுமாகலான், அவ்வடி இரண்டன் கூட்டத்துத் தளைவழுக் களையல்வேண்டும்; களையுங்கால் ஆசிரியத்து நாற்பத்தொன்றும், வெள்ளைப்பாட்டுப் பதினெட்டும் ஆக ஐம்பத்தொன்பது லன் களையப்படும். கலிப்பாவிற்கு அவ்வாறு களையவேண்டுவ தில்லையென்பது.

ஆசிரியத்து நாற்பத்தொரு நிலைமையன :—தனக்கு ஓதிய இருபத்தேழு சீரும் பதினைந்து நேரசையும், பதின்மூன்று

1. அடிதொறும் என்றதனுல் இரண்டடியில் வருதல் பெறப்படுதலின், ஓரடிக்கண் வரல் என்பது மாறுபடும் எனின்? அடியுள்ளன தொடை என்றதனுல் முன்வந்த அடியையே பின்னும் தொடுத்தலின் மாறுபடாது என்க.

2. மூன்று பாவிற்கு முரிய ௭௮ச் சீராவன :—ஆசிரியத்திற் குரிய சீர் ௨௭-ம் வெண்பாவிற்குரிய சீர் ௨௭-ம் கலிக்கோதிய சீர் ௨௪-ம் ஆகவொருங்கு எழுபத்தெட்டாம். இவை இன்ன என்பதை ௩௯௨-ம் சூத்திரவுரை நோக்கியறிக.

49

நிரையீறாகியுமாகளான், அவற்றுள் [1] நேரீறு பதினான்கும் ஓரோவொன்று பன்னிரண்டடி உறழுங்காற் பெருகியநிலத்தின் இவ்விரண்டடியாக இருபத்தெட்டடியும், இனி நிரையீறு பதின்மூன்றற்குஞ் சுருங்கிய நிலத்தின் ஓரோவொன்றாகப் பதின்மூன்றடியுமென நாற்பத்தோரடியுந் தம்மொடு தாமிரட்டிக்குங்கால் தளைவழுப்படுதலின், அவை தொடுக்கப்படா வென்பது.

இனி, வெண்பாவடி உறழுஞ்சீர் இருபத்தேழினுள் [2] நேரீற்றுச்சீர் பதினான்குஞ் சுருங்கியநிலத்தான் ஓரொன்றாகப் பதினான்கடியும், நிரையீற்றுச்சீர் பதின்மூன்றனுள் ஒன்பதொழித்து ஒழிந்த நான்குசீரும் நின்றுறழ்ந்த அடியாட் பதினான்கெழுத்தடி. [3] பெருகியநிலத்தான் நான்காகப் பதினெட்டடியுந் தம்மொடு தம்மை இரட்டித்துத் தொடுப்பத் தளைவழுவாகலிற் களையப்படுமென்பது.

நிரையீற்றுச்சீர் நான்குமாவன :—

வரகு வலியது கடியாறு விறகுதீ என்பன.

ஒழிந்த நிரையீறு ஒன்பதுசீரும் நின்று உறழ்ந்த அடி எஞ்ஞான்றுங் களையப்படாது தொடைப்படுமென்பது; அவை ஒன்பதுமாவன :—அரவு புளிமா கணவிரி பெருநாவு உருமுத்தீ மழகளிறு கணையுருமு [4] புலிசெல்வாய் குளிறுபுலி எனவிவை.

1. நேரடி பதினொன்றும் பெருகிய நிலத்தில் இவ்விரண்டு அடி தளை வழுப்படக் கலியுநிலம் ௨௮ ஆகும். நிரையடி பதின்மூன்றும் சுருங்கிய நிலத்தில் ஒவ்வோர் அடி தளைவழுப்பட ௧௩ ஆகும். பெருகியநிலம் என்றது எழுத்துக்கள் எண்ணின் மிகுந்த நிலத்தை. சுருங்கிய நிலம் என்றது எழுத்துக்கள் எண்ணிற் குறைந்த நிலத்தை. மோனைத்தொடை ஆசிரியத்தில் நேரடிச்சீரில் ௨௮-ம் நிரையடியில் ௧௩-ம் ஆக ௪௧ நிலம் வழுப்படும்.

2. வெண்பாவில் நேரடிச்சீர் ௧௨-ம் நிரையடிச்சீர் ௬-ம் ஆக பதினெட்டுநிலம் வழுப்படும் ஆகவே வழுப்படு நிலம் இரண்டுபாவினும் ௪௧+௧௮=௫௯ ஆகும்.

3. பெருகியநிலத்துள் என்பது முற்பதிப்புக்களில் தவறிற்று.

4. புலிவருவாய் என வருதல்வேண்டும். பின் உறழ்ந்து காட்டுமிடத்துப் புலிவருவாய் என வருதலின்.



[1] வரகு நிரையுருமு காருருமு பாதிரி
எனவும்,
வலியது கடியாறு காருருமு பாதிரி
எனவும்,
கடியாறு தேமா நரையுருமு காருருமு
எனவும்,
விறகுதீ தேமா புலிவருவாய் காருருமு
எனவும், இப்பதினொன்றெழுத்தடி நான்குந் தொடுக்குமாறில்லை. ஒழிந்த நேரடியும் இவ்வாறே சுருங்கிய நிலத்து உறழ்ந்தவழித் தொடுக்குமாறில்லை யென்பதூஉங் கண்டுகொள்க.

இனி, களையப்படாத விரை முதற்சீர் ஒன்பானுள்ளுங் குறுகிய எழுத்துச்சீர் [3] ஒன்பது. பெருகிய எழுத்துச்சீர்:— நரையுருமு புலிவருவாய் என்பன. அரவு வரகு வரகு வரகு எனவும், அரவு புலிவருவாய் காருருமு தேமா எனவும் இவை முதலும் முடிவுங் காட்டிய அடிக்கண் அவைதம்மொடு தம்மைத் தொடுக்கப்படுதலிற் களையுநிலை யிலவாயின.

நரையுருமு வண்டு வரகு வரகு எனவும் நரையுருமு காருருமு பாதிரி தேமா எனவும் ஈரெழுத்துச்சீர் முதலும் முடிவுங் காட்டிய அடி களையப்படாது தொடைப்படுமென்பது; புலிவருவாய்க்கும் இஃதொக்கும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

இவ்வாற்றான் [3] அறுநூற் றிருபத்தைந் தடியுள் ஐம்பத் தொன்பது நீக்கக்களைந்து ஒழிந்தவடி ஐந்நூற் றறுபத்தா

---

1. வரகு நரையுருமு காருருமு பாதிரி இது பதின்மூன் றெழுத்து வெண்பாவடி. இதனை மீளவும் வரகு நரையுருமு காருருமு பாதிரி எனத் தந்து தொடுக்குங்கால் நிரையும் நிரையும் ஒன்றி ஆசிரியத்தளையாகி வழுப்படும். ஆகலால் தொடுக்கு மாறில்லை என்றபடி. வலியது முதலியவற்றுவாய அடியும் இப்படி ஒன்றோடொன்று தொடுக்கப்படா என்றபடி. வலியது கடியாறு என்பது வலியது காருருமு எனத் திருத்தப்படவேண்டும்.

2. ஒன்பது ஏழு என்றிருத்தல்வேண்டும்; பின் ஒன்பதுள் இரண்டுசீர் சொல்லப்படுதலின்.

3. ௬௨௫ அடியுள் தள்ளவழு ௫௯-ம் கழிய மோனைத் தொடை ௫௬௬ ஆகும்.

௧-வது மோனைத்தொடை ௫௬௬

| | | |
|---|---|---|
| ௨-வது | தலையாகெதுகை | ௫௬௬ |
| ௩-வது | அடியெதுகை | ௫௬௬ |
| ௪-வது | எழுத்தடியிளைபு | ௫௬௬ |
| ௫-வது | சொல்லடியிளைபு | ௫௬௬ |
| | ஆக ஐந்தும் | ௨௮௩௦ ஆம். |



றும் பெற்ற மோனைத்தொடை ஐஞ்ஞூற்றறுபத்தாறெனப் படும்.

இவ்வாறே தலையாகெதுகை, அடியெதுகை, எழுத்தடியிளைபு, சொல்லடியிளைபு என்னும் நான்கு தொடைக்கும் கவ்வனை கணிந்து தொகைகூட்டிக்கொள்க.

இவற்றுள், ஆசிரியப்பாவிற்குள் வரும் அடி மோனைத் தொடை இருநூற்றெண்பத்துமூன்றாம், வெண்டொடை நூற்றறு பத்துமூன்றும், கலிப்பாவிற்குரிய தொடை நூற்றிருபதாமென மூன்று பாவிற்குந் தொகுப்பத் தொடை ஐஞ்ஞூற்றறுபத் தாறும். ஒழிந்த நான்கற்கும் இவ்வாறே கொள்க; கொள் ளவே இத்தொடை ஐந்தனுள்ளும் பெற்ற தொடை இரண்டா யிரத்தெண்ணூற்றுமுப்பதென்பார். இவற்றுள் அகவற்றொடை ஆயிரத்துநானூற்றொருபஃதைந்து. வெண்டொடை எண்ணூற் றொருபஃதைந்து. கலித்தொடை அறுநூறெனக் கொள்க.

ரும் அனையும் ;
பிறவும் அன்ன.

ஒழிந்தன கடையாகெதுகை யெனப்படும்.

அஃதேல், தலையாகெதுகை
யென்றதுபோலத் தலையாகு மோனையுங்
கொள்ளாமோ வெனின்,—அற்றன்று ; ஆசிரியன்,

“ அடிதோறுந் தலையெழுத் தொப்பது மோனை.”

(௩௦௪)

என்றோதலின், அடிமோனையே கொண்டாமென்பது. என்றார்க்கு,

“ வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.”

(நாலடி ௩௯)

என்றவழி, அடிதோறும் ஒருசொல்லே வந்து
தொடையாயிற்
றன்றோவெனின்,—அஃது இரண்டடிக்கண்ணே
வந்ததன்று ;

செய்யுண்முழுமையும் பயின்றுவந்து சுவையமைப்பட்டதாகயின் வழிமோனைப்பாற்பட்டடங்குமென்க. இச்சூத்திரத்துக் காட்டப் பட்ட [4] தொடையிரண்டும், மூன்றுபாவிற்கும் உரிய அடி நாற்றிருபத்தைந்து அடிமோனைத் கூட்டுத்தொகை சொல்லு மாறு மேலைச்சூத்திரத் துரைக்கப்பட்டது. (கூஅ)

---

1. அஃதொழித்து—முதலெழுத்தொழித்து.

2. முதலெழுத்தினைச் சுட்டிக் கூறலாவது—அஃதொழித்து என்னச் சுட்டிக் கூறியது.

3. ஒருமாத்திரை எழுத்துமுதற்கண் வரின் இரண்டாமடிக் கண்ணும் அதுவே வருதலும் இரண்டுமாத்திரை எழுத்துவரின் அதுவே வருதலும் வேண்டும் என்றபடி.

4. தொடையிரண்டு—தலையாகெதுகை, அடியெதுகை.

[மோனை எதுகைத் தொடைகளுக்குக் கிளை யெழுத்துக்களும் உரியவாமெனல்]

## ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய.

இது, மேற்கூறிய தொடைப்பாற்பட்டு வருவன வேறு தொடைகண்டு அவை கூறுகின்றது.

இ - ள் : ஆயிரு தொடை யென்பன மோனையும் எதுகையும்; இவை இரண்டற்குங் கிளையெழுத்துக்களும் ஒன்றிவரப் பெறும் என்றவாறு.

இதன் கருத்து : அங்ஙனங் கிளையாகிவந்த வேறுபாட்டான் எல்லாத்தொடையும் வேறுபலவாமென்றவாறு. கிளையெழுத்தென்பன:—வருக்கவெழுத்தும் நெடிலும் [1] அனுவும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் உயிருமெனவிவை. இவையெல்லாம் ஒரோவினமாயுடைமையிற் கிளையெனப்பட்டன.

யெனவுங் கொள்ளாமோவெனின்,—அவை,

"மெய்பெறு மரபிற் றொடைவகை." (தொ. செ. ௬௦௧)

அன்மையிற் றொள்ளாவென்பது ; அல்லதூஉம், அவை யெல்லாங் கொள்ளிற் செந்தொடை [3]இறவுபடுமென மறுக்க. எதுகைக்கும் இஃதொக்குமாறு கண்டுகொள்க.

இங்ஙனம் ஈண்டுக் கிளையெனக் கூறியவற்றுள், ஏற்புழிக் கோடலென்பதனான் வருக்கமென்பது மோனைக்கும் எதுகைக் கும் உரிமையான், வருக்கமோனை வருக்கவெதுகை யென்று இருவகைப்படும். நெடிலும் அளவும் மோனைக்குரிய ; உயிரும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் ஆசிடையிடுதலும் மூன்றுமெழுத்தொன்றுதலுமென்ற ஆறும் எதுகைக்கே உரிய வாம். இவை பத்துத்தொடையுள்ளும் மோனை மூன்றும் வருமாறு:

[4] "வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி." (அகம். ௨௪)

---

1. அளவிற்கோதிய உயிர்—அ ஆ ஐ ஔ முதலிய உயிர் கள். க கா கை கௌ என வேறுபடவரும் என்றபடி.

2. பிறவெய் வருங்கால் வந்தவுயிரே வருதல்—ச த; ந ஞ எனவருதல். உம்மையால் ச தா; ந ஞா எனவும் வரும்.

3. இறவுபடுதல்—இல்லையாதல்.

4. வ—வி வகரவருக்கம்





என்பது வகரவருக்கம் முதற்கண் வந்தமையின் வருக்கமோனை

பாயிற்று.

"கலக்கொண்டன கள்ளென்கோ
காழ்கொத்தன சூட்டென்கோ." (யா. வி. ப. ௩௭௬)

என்பதும் அது. இவை ஒருமொழியின் வருக்கமாகலான் வருக்க மெனப்பட்டன. அஃதேல், [1] உயிர்வருக்கமும் வருக்கமெனப் படாதோவெனின், அங்ஙனங்கொள்ளின் நெடிலும் அனுவும் விரவும் வருக்கமும் வருக்கமெனப்படுமென மறுக்க; அல்ல தூஉம், [2] நெடிலும் குறிலும் ஊர்ந்த மெய்யிரண்டு இயைந்த வழித்தொடையாகல் வேண்டுமன்றோவென்பது; என்றார்க்கு, முதற்கண் உயிர்வந்ததனையே [3] இன்னதொடை என்றுமோ வெனின், அவை அனுவாகி வருவன வழிமோனையெனவும் அல்லாக்காற் செந்தொடையெனவுங் கூறுபவென்பது. இஃது, ஈரடிக்கண் வரினும் ஒக்குமென்ப தாய்த்துணர்க.

[4] "மடவரல் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து."
(நெடுநல். ௩௯—௪௦)

என்றவழிச் செந்தொடையாவதன்றி மோனைத் தொடைப்பாடின் றென்பது. இவ்வாறே குறிலும் நெடிலும் எதுகையாகாமையின் அவையும் வேண்டியதில்லென்பது.

[5] "வெள்ளி வள்ளி விளங்கிறைப் பணைத்தோள்
மெத்தென் சாயல் முத்துறழ் முறுவல்."

என்பது வழிமோனை.

(நெடுநல். ௩௬—௩௭)

1. உயிர்வருக்கத்தை ஒன்றாகக்கொள்ளின் அநுமோனை என்பதொன்றின்றாம். ஆ என்னும் நெடில் முதலடியில் வந்து அ இரண்டாமடியில் வரின் அது அநுவாகுமன்றி வருக்கம் எனப்படாது. ஆதலின் அது பொருந்தாது. அநுவாய் வந்தன நெடிலுங் குறிலுமாமாதலின் வருக்கமோனைக்குப் பொருந்தா என்றபடி.

2. கானம்—சனம். என நெடிலுங் குறிலுமோர்ந்த மெய் வரினும் உயிர்பற்றி வருக்கமோனையாகக் கொள்ளவேண்டி வரும். ஆதலானும் அது பொருந்தாதென்க.

3. என்ன தொடை என்றுமிருக்கலாம்.

4. ம+செ—இவற்றில் உயிர்கள் அநுவல்ல. ஆதலின் செந்தொடையாயிற்று.

5. வெ+மெ—வழிமோனை. இவ்வெழுத்துப்பின்றும் வருவது வழிமோனை.



"ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாக." (மதுரைக். க—உ)

என்பதும் அது. இவற்றை அநுமோனையெனினும் அமையும். [1] அவை விகற்பங் கொள்ளாமோவெனிற் கொள்ளாம்.

"முன்னைத்தஞ் செந்தின் முழங்கு கடலோத மூழ்கிப்போ
யன்னைக் குரைப்ப லறிவாய் கடலேயென் றலறிப்பெயரும்."

என்றாற் அறுசீரடியினும் எழுசீரடியினும் எண்சீரடியினும் காற்சீரடியினும் ஒப்ப வருதலானும், [2] எண்சீரடியுள் ஒரு

நான்குசீர் அற்றவழி ஒழிந்த நான்கனுள் முதற்கண்ணும் இடைக்கண்ணும் [3] இனம் வந்தால் அவை வந்தவழியெல்லாந் தொடையாகாமையானுமென்பது, பிறவும் அன்ன. எதுகைக் குப்போல இனமோனை கொள்ளா தனிமெய்; மொழிக்கு முதலாகாமையினென்பது.

"கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே." (குறுந். உகசு)

என்பது, வருக்கவெதுகை.

"அத்தக் கள்வ ராதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி." (அகம். எ)

என்பது, வல்லினவெதுகை.

"தும்பின் புலம்பிறு முள்ளுதொறு நலியுந்
தண்வர லைசூழிய பண்ணியின் வரவுடை." (அகம். ருஅ)

என்பது, மெல்லினவெதுகை.

"மன்னர் மன்ன மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந." (பெரும்பாண். சருரு)

என்பது, இடையினவெதுகை.

---

1. வழியும் அறுவும் விகற்பங்கொள்ளாமோ எனின் கொள்ளாம் என்க. ஒன்று என்றபடி.

2. எண்சீரடியுள் என்றது 'திருவேயென் செல்வமே தேனே வானோர்—செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க' என எண்சீர் வருங்கால் முதல் நான்கு சீரினுமிற்றுநின்று பின்னுஞ் செழுஞ்சுடரே என வந்தால் ஆண்டும் வேறாகத் தொடை கொள்ளப்படாமையான் அறுவும் வழியும் ஒன்றென்றபடி. அன்றியும் சீர்தோறும் வருதலானும் வந்தவழி எல்லாம் அது வழிமோனைத் தொடையென்று கொள்ளப்படாமையானும் இரண்டுமொன்றென்றபடி.

3. இனம் வந்தால் என்புழி, இனம் இல்லா உயிரும் இல்லா மெய்யும் எனக் கொள்க.



"புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியுஞ்
சொல்லிய வல்ல வேனைய வெல்லாம்." (தொ. எழு. ௨௦௨)

என்பதும் அது.

1 "இமிழ்கண் முழவி னின்சீர் மனைனப்
பயிரவன் பேசலைத் திசைப்பவுந் தவிரான்."

என்பது, உயிரெதுகை; இஃது ஒற்றூர்ந்த உயிரொன்றினமையின் உயிரெதுகையாயிற்று.

"நெய்த்தோர் மீமிசை நிணத்தின் பரிக்கு
மத்த நன்னிய வங்குடிச் சீறூர்." (அகம். ௬)

என்பது, யகரவொற்றிடையிட்டு வந்த ஆசிடையெதுகை. பிறவும் ஒற்றிடையிடினும்,

"மெய்பெறு மரபிற் றொடை." (தொ. செய். ௧௦௪)

யாவனை கொள்க.

2 "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற." (புறம். ௩)

என்பது, மூன்றாமெழுத்தொன்றெதுகை.

இவையும் மேற்கூறப்பட்டனவும் இனிக் கூறுவனவுமெல்லாம் நான்கு பாவினும் வருமாறு கண்டுகொள்க.

இனி, மூன்று பாவினும் அறுநூற்றிருபத்தைந்தடியோடும் இவற்றைப் பெருக்கி உணருங்கால், 3 இவை பத்துத் தொடையானும் பெற்ற தொடை மூவாயிரத்தெண்ணூற்றறுபத்தேழு;

1. இகரத்துக்கு இகரம் உயிரெதுகை.

2. வகர உகரம் மூன்றுமெழுத்து.

3. இவை பத்துத்தொடை என்றது :—

| | |
|---|---|
| க. வருக்கமோனை | ௬. வல்லினவெதுகை |
| உ. வருக்கவெதுகை | ௭. மெல்லினவெதுகை |
| ௩. நெடின்மோனை | ௮. இடையினவெதுகை |
| ௪. வழிமோனை | ௯. ஆசிடையெதுகை |
| ௫. உயிரெதுகை | ௰. மூன்றுமெழுத்தொன்றெதுகை |

இவற்றுள் வருக்கமோனை முதலிய மூன்றையும் வேறாக எடுத்து அவற்றிற்குத் தொடைக் கணக்குக் கூறுகின்றார். வருக்கமோனை முதலிய மூன்றையும் பாவிரண்டினு முறழுங்கால் நந்நை என்னுஞ் சீர் அதற்கேலாமையின், நந்நைக்கு ஆசிரியத்துப் பன்னிரண்டடியும் வெண்பாவில் எட்டடியுமாக இருபது அடி. அறுநூற்றிருபத்தைந்து அடியுட் கழிப்ப அறுநூற்றைந்தடி யாகும். இச்சீர்க்குரிய தளைவழு மூன்றையும், ஐம்பத்தொன்பது வழுவிற் கழிக்க இருபத்தாறு சீர்க்கும் ஐம்பத்தாறாகும். முற்கூறிய அறுநூற்றைந்தடியின் தளைவழு ஐம்பத்தாறுங் களைய வருக்கமோனை முதலிய மூன்றற்கும் தனித்தனி தொடை ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதாம்.



இவற்றுள், வருக்கமோனையும், வழிமோனையும், உயிரெதுகையு மென இவை மூன்றும், நந்நையென்னுஞ் சீர்க்கு ஏலாமையின் அச்சீர் முதற்பா இரண்டினும் உறழ்ந்த அடி இருபதும் ஒழிக்க, ஒழிந்தசீர் எல்லாவற்றோடு முறழ்ந்த அடி அறுநூற் றைந்தனுள் ஐம்பத்தாறு நீங் களைய ஒவ்வொன்றற்குப் பெற்ற தொடை ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதாம்.

இனி ஒருக்கவெதுகை ஆசிரியத்துள் எழுசீர்க்கும், வெண்பாவினுள் ஐந்துசீர்க்கும், கலிப்பாவினுள் நான்குசீர்க்கும் வேறாது. அவை வண்டு, மின்னு, போதுபூ, மேவுசீர், நீடுகொடி, நாலூர்த்தளை, நுந்தை என இவையெழுஞ் ஆசிரியத்துள் ஆசாதன. இவற்றுள் நீடுகொடி, நாலூர்த்தளை இரண்டும் ஒழித்து ஒழிந்த சீர் ஐந்தும் வெண்பாவிற்கேலா. அவற்றுள்ளும் வண்டு, மின்னு, நுந்தை ஒழித்து ஒழிந்த நான்குங் கலிப்பாவிற்காகாவென வுணர்க. இனி, ஆசிரியத்துள் நேர்முதற்சீர் எழும், பதின்மூன்று நிரைமுதற்சீரும் உறழ்ந்த அடி இருநூற்றுநாற்பதாம். இவற்றுட் களையும் நிலம் [3]இருபத்தேழாம். ஆகவே அகவற்றொடை இருநூற்றொருபத்துமூன்று ஆயின. [4]வெண்பாவினுள்

---

1. நேர் முதற்சீர் ஒன்பதற்கும் 13-ம் நிரை முதற்சீர் பதின்மூன்றற்குப் பதின்மூன்றுமாக ஆசிரியத்திற்குத் தளைவழு ௩௧-ம். நேர் முதற்சீர்க்குப் பத்தும் நிரைமுதற்சீர்க்கு நான்குமாக ௧௪ தொடை வெண்பாவிற்கு வழுவாம். அவ் விரு பாவிற்கும் தளைவழு ௪௫ ஆகும்.

2. அகவற்கு —௨௧௩ ⎫ ௭௯-ம் 14-வது மூன்று
வெண்பாவிற்கு —௧௩௯ ⎬ மெழுத்தொன் றெதுகை
கலிக்கு —௧௧௦ ⎭ பெறுந் தொடை.

3. 15-வது வருக்க எதுகை. ஆசிரியத்துக் களையுநிலம் நேர் முதலேழற்கும் ௧௪-ம் நிரைப் பதின்மூன்றற்கும் ௧௩-ம் ஆக ௨௭ நிலம் களையப்படும். ௨௦ சீரும் ௧௨ அடி. உறழ ௨௪௦ ஆகும். தளைவழு ௨௭ களைய ௨௧௩ ஆம்.

4. வெண்பாவில் நுந்தை, வண்டு, போதுபூ மூன்றும் ௮ அடி உறழும். மின்னு, மேவுசீர் இரண்டும் ௭ அடி உறழும். ௩-ம் ௮ அடி உறழ ௨௪ அடி ஆம். ௨ம் ௭ அடி உறழ ௧௪ அடி ஆம். தொகுப்ப ௩௮ நிலம். வராதன களைவனவாம். அவற்றோடு வெண்டொடை வழு ௧௩-ம் களையவேண்டும். வெண்டொடை ௧௪-ல் வராத நிலம் ௩௮-ம் வழு ௧௩-ம் ஆக ௫௧ நிலங் களைய ௧௩௦ தொடையாம்.

இனி, [3] நெடின்மோனையும், மெல்லினவெதுகையும், இடையினவெதுகையும், ஆசிடையெதுகையுமென நான்கற்கும் நிரைமுதற் சீரும் நான்கையுமெனப் பதினாற்சீர் ஏலாமையின், ஒழிந்த நேராதிச்சீர் பதின்மூன்றன் ஆசிரியத்து ஓரோசீர்க்கு இரண்டு நிலங்களாக்குப் பெற்றதொடை நாற்றுமுப்பதாம்.

வெண்பாவினுள் நேர்முதற்சீர் பதின்மூன்றும் உறழ்ந்த அடி தொண்ணூற்றுமூன்றனுள் ஒரு சீர்க்கு ஒரு நிலமாகப் பதின்மூன்று நிலங்களாக்குப் பெற்ற வெண்டொடை எண்பத்தாம்.

---

1. நேர்பு உ..—வண்டு, நின்று. நேர்புமுதல் ச—போதுபூ, போவுசீர், நீடுகொடி., நாணுத்தளை. மூன்றற்கும் ஆகாச் சீர்கள் முறையே ஏழும், நான்கும், நான்குமாம். இரண்டற்கும் களைநிலம் சூ ஆகும். இரண்டுபகுதி நிலமுங் கழிக்க 15-வது வருக்க வெதுகை சசங. ஆகும்.

2. மூன்றற்கும் முறையே வருநிலம் ;—உகஅ-ம், கஅ௦-ம், ச௦௦-ம் ஆகும்.

3. 16-வது நெடின்மோனை, 17-வது மெல்லின எதுகை, 18-வது இடையின எதுகை, 19-வது ஆசிடை எதுகை என்னும் நான்கற்கும் நான்கையும், நிரை பதின்மூன்றும் ஒழித்து நேராதி பதின்மூன்று சீர் வரும். இவற்றில் நேராதி பதின்மூன்று சீர்க்கும் மேவிலத்து இரண்டிரண்டாக இருபத்தாறு நிலம் வழுக் களையப்படும். வெண்பாவினும் பதின்மூன்று சீர்க்கும் பதின்மூன்று நிலம் வழுக் களையப்படும்.

நாலுந்தன்னை ஒழிந்து ஒழிந்த பத்தலுறும் கலித்தொடை யைப்பதாகவும் மூன்று பாவினாலும் வல்லினவெதுகை இரு நூற்றெருபத்தெட்டு ஆயினவென்பது.

[1] "முற்றுகர நேர்புநேர் முன்னுறுஞ் சீரிரண்டும்
குற்றுகரத் தோமவுங் கொள்ளாது—மற்றை
நிரைமுதலாய் கூட்டகது நேர்முதலான் வல்லொற்
றெதுகையிரு நூற்றெருபத் தெட்டு."

எனவும்,

[2] "இருபா தகலம்பதி னொன்றுவெள்ளைக் காகா
திலமூப்பத் தொன்றுக நீக்கி—வலிவெதுகைக்
கீரைம்ப தாமதனுள் வெள்ளைக் குறுத்தொட்
டோரைம் பதுநூல்லாத் தொட்டு."

எனவும் இவற்றை விரித்துரைக்க.

இவையெல்லாங் கிளைபற்றி வந்தமையின்

'ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் தாகிய'

என்றுளென்பது. இப் பத்துத் தொடையாலும் மூசனைந்தா லும்பெற்ற தொடை ஆறாயிரத்தறுநூற்றெருபத்திரண்டு எனப் படும். ஆறாயிரத்தறுநூற்றெருபத்திரண்டும் பெறும், கிளையும் மூரண் ஐந்தும். மேற்கூறிய மோனை எதுகையிரண்டனோடும் இனிக் கூறும் முரணைந்தும் இயைபு இரண்டும் உடன் கூட் டித் [2] தொடை கூறினும். இவற்றோடு இயைபுத்தமையி னென் பது. இத் தொடையெல்லாந் தொகுப்ப ஒன்பதினாயிரத்து நானூற்று நாற்பத்திரண்டு ஆமினவாறு கண்டுகொள்க.

---

1. 20-வது மெல்லினவெதுகைத்தொடை.

[1] "நீரோ ரன்ன சாயற்
தீயோ ரன்னவென் னுரனவித் தன்றே." (குறுந். ௯௫)
என்பது பொருளும் பொருளும் முரணியது.

[2] "தண்ணிய லற்ற தயங்கறற் கானத்து
வெந்நீர்ப் பொருணசை இ முன்னிச் சென்றோர்."
என்பது, சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது.

[3] "நீநீர் நஞ்சத் திருமிடத் தொடுக்கிய
வுவரி யன்ன வுடைப்பெருஞ் செல்வர்."
என்பது, சொல்லும் பொருளும் பொருளொடு முரணியது. இதனைச் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது போலப் பொய்ப் பொருளோடு முரணுதல் வேண்டுமென்று கொள்ளற்க.

[4] "செவ்வேற் சேஎய் திருமார் பகுத்த
கருவிற் கானவன் வரிவில் லேறே, யதுபோல"
என்புழி, சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணியது. பிறவும் அன்ன.

இவை ஒருத்தொடையுந் தளைவகையடிக்கண் வருங்கால் இன்னவாறு வருமென்பது மேற் கூறியவாற்றானே கொள்ளப்படும். இவை விரித்து நோக்கப் பலவாமாறும் விரித்துணர்ந்து கண்டுகொள்க. (௯௫)

[ இயைபுத்தொடை இதுவெனல் ]

௯௬. **இறுவா யொன்ற லியைபின் யாப்பே.**

இது, முறையானே இயைபிரண்டும் உணர்த்துகின்றது.

இ—ள் : இரண்டடியும் ஈறொத்தல் இயைபுத்தொடைக்கிலக்கணம் என்றவாறு.

---

1. நீருந் தீயும் சொல் முரணாது பொருண் முரணியன.

2. இங்கே தண்வளியல் அற்ற கரணம் என்பதில், தண்—குளிர்ச்சி என்று பண்புப் பொருள் தரவின் சொல்லும் பொருளும் ஆயிற்று. வெம் என்பது வெப்பத்தையுணர்த்தாது விருப்பமென்று பொருடந்து அதற்கு எதிர்ப்பொருளாகாமையின் சொல்லாயிற்று.

3. தீ—தீமை. இது சொல்லும் பொருளும். உவரி—பொருள் அதற்கு எதிராகாமையின்.

4. செவ்வேல், கருவில் என்பனவற்றில் செவ் கரு என்பன பொருளை விசேடித்து பிறப்பொருளில் வருதலின் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணியது.



வாளாதே 'இருவரையொன்றன்' என்றுரையினும் ஆண்டு ஒன்றுவது பொருளினையன்றி, எழுத்துஞ் சொல்லும் ஒன்றி யமையின் இயைபாமென்பது. எனவே, எழுத்தடியிணையும் சொல்லடியிணையும் எனத் தொடை இரண்டாயின.

"அவிரர வாரசர் கசர்வத் தன்றே
கொடிதரு முன்னையுங் கடிதரும் பின்றே."

(குறுந். ௨௨௮)

என்பது, எழுத்தடியியைபு.

> "பரவை மாக்கடற் றொகுதிரை வரவும்
> புன்னைச் செய்தி பின்றுறைவன் வரவும்."

(யா. வி. ப. ௧௫௬)

என்பது, சொல்லடியியைபு.

இவையும் அடி மோனை போல [2] எல்லா அடியோடுந் தொடுக்கப்படுமென்பதூஉம் அவற்றது விகற்பம் எல்லாம்,

> "அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை."
>
> (தொ. செ. ௯௨)

என்புழிச் சொல்லியவாற்றானே கொள்ளப்படும். (௯௯)

[அளபெடைத்தொடை இதுவெனல்] ௧௦௦. அளபெழி னவையே யளபெடைத் தொடையே.

இது முறையே, அளபெடைத்தொடை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அடிமுதற்கண் எழுத்துக்கள் அளபெழுந்தனவாயின், அவை அளபெடைத்தொடை எனப்படும் என்றவாறு.

அவை என்றது, உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென இரண்டென்பது கோடற்கு.

"பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கி."

(கலி. ௩)

என்பது, உயிரளபெடை.

"கஃஃ றென்னுங் கல்லதர்க் கானிடைக்
கஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை."

என்பது ஒற்றளபெடை.

---

1. [1] அடையின்—வரின்.

2. எல்லா அடியோடும் என்றது, குறளடி முதலிய எல்லா அடியோடும் வஞ்சியடியோடும் கட்டளையடியல்லாத அடியோடும் என்றபடி. ௯௦௪-ம் சூத்திர உரையை நோக்குக.

இவை கட்டளையடியொடு தொடுக்குங்கால் உயிரளபெடை முந்நூற்றுமுப்பத்துமூன்றும். அவை மூன்று பாவினும் வருங் கால் [1] உரியசைச்சீர் நான்கும், உரிமுதற்சீர் எட்டும், [2] நிரை யசையுமெனப் பதின்மூன்றும் ஒழித்து, ஒழிந்தவற்றுள் வரும்.

அவை ஆசிரியத்துள் நேர்முதற்சீ ரேழும், நிரைமுதற்சீ ரேழும்; [3]வெண்பாவினுள் நேர்முதற்சீரொன்பதும், நிரைமுதற்சீ ரொன்பதும்; கலிப்பாவினுள்ளும் உரிமுதற்சீ ரெட்டொழித்து, நேர்முதற்சீ ரெட்டும், நிரைமுதற்சீ ரெட்டும் எனப் பதினாறு மாக, நாற்பத்தெட்டுச் சீர்க்கண்ணும் வருமென்பது. அங்ஙனம் வருங்கால், ஆசிரியத்து நூற்றுநாற்பத்தேழும், வெண்பாவினுள்

---

1. உயிரளபெடைக்கு வாராத சீர்கள் :—

உரியசைச்சீர் நான்கு :— வண்டு, மின்னு, வரகு, அரவு.

உரிமுதற் சீரெட்டு :— போதுபூ, மேவுசீர், விறகுதீ, உருமுத்தீ, நீடுகொடி, நாணுத்தளை, குளிறுபுலி, விரவுகொடி.

2. நிரையசையுமென்பது ஓரெழுத்துச் சீரும் என்றிருத்தல்வேண்டும், அன்றி நுந்தை என்றும் இருக்கலாம். ஏனைய பாடங்கள் பிழை. நுந்தை என்றிருத்தல்வேண்டுமென்பதைப் பின்வரு முரைச் சூத்திர வெண்பாவை நோக்குக.

3. வெண்பாவினுள் நேர்முதற்சீரொன்பதும் நிரைமுதற்சீரொன்பதும் வருமாறு:—

**நேர்முதற்சீர் ஒன்பது**

- ஞாயிறு, போரேறு } இரண்டு சீர்க்கும் ௮ அடியாக ௧௬ அடி.
- தேமா, பாதிரி, நன்ஞானு, பூமருது, மாசெல்வாய் } ஐந்து சீர்க்கும் ௭ அடியாக ௩௫ அடி.
- மாவருவாய், காருருமு } இரண்டு சீர்க்கும் ௬ அடியாக ௧௨ அடி.

**நிரைமுதற்சீர் ஒன்பது**

- வலியது, கடியாறு } ௨ சீர்க்கும் ௭ அடியாக ௧௪ அடி.
- புளிமா, மழகளிறு, கணவிரி, புலிசெல்வாய் } ௫ சீர்க்கும் ௬ அடியாக ௩0 அடி.
- புலிவருவாய், நனிமுழவு } ௨ சீர்க்கும், ௫ அடியாக ௧0 அடி.

நாற்றும், கலிப்பாவினுள் எண்பதுமாகி முந்நூற்று முப்பத்து மூன்றும். அவை ஆசிரியத்துள் இருபத்தொன்றும், வெண்பாவி னுட் பதினொன்றுமாக முப்பத்திரண்டு நிலங்களைந்து பெறப் பட்டன.

1 "உரியசைச்சீர் நான்கு முரிமுதற்சீ ரெட்டு
மளபெடைக்கு நுந்தையோ
டாகா—வொருநாற்பத்
தெண்சீரான் முந்நூற்று முப்பத்து மூன்றென்ப
ரொண்சீர் பெருமுறையா னுய்த்து."

எனவும்,

2 "நேரேம் நிரையேம் முதற்சீர் முதற்பாவிற்
கோரேழான் மூவேழ் நிலமிலவா—னோராதி
யொன்ப திரண்டு நிரையாதி வெண்பாவிற்
கென்றிவை முப்பத் திரண்டு."

எனவும்,

3 "நூறொடு நாற்பத்தே ழாமகவ னாற்றின்மே
லாறு தொடைவெள்ளைக் காகுமா—லேறுதுள்ளற்
கெண்பதா மீரேழ் ரொன்பஃ தெண்ணிரண்
டென்றுமாம் பாமூன் றிடத்து."

எனவும் இவற்றை விரித்துக்கொள்க.

⁴ ஈரொற்றளபெடை கலிப்பாவினுள் வாராது; என்னை? அது துள்ளலோசை தள்ளி நிற்றலின். அங்ஙனமாதல்,

---

1. உரியசைச்சீர் நான்கு முதலியன முன் விளக்கப்பட்டன. அளபெடைக்கு வருஞ்சீர் சஅ ஆவன :— ஆசிரியத்திற்கு நேர்முதல் ஏழும் நிரைமுதல் ஏழும் வெண்பாவிற்கு நேர்முதல் ஒன்பதும் நிரைமுதல் ஒன்பதும் கலிக்கு நேர்முதல் எட்டும் நிரைமுதல் எட்டும் இந் நாற்பத்தெட்டுச் சீராலும் மூன்றுபாவிற்கும் வரும் உயிரளபெடை முந்நூற்றுமுப்பத்துமூன்று. 21-வது உயிரளபெடை ௩௩௩.

2. நேர்முதற்சீரேழற்கும் பெருகிய நிலத்துப் பதினன்கு நிலம் களையப்படும். நிரைமுதற்சீரேழற்கும் சுருங்கியநிலத்து ஏழு நிலம் களையப்படும். ஒருசேர இருபத்தொருநிலம் களையப்படும். வெண்பாவிற்கு நேராதி ஒன்பது சீர்க்கும் ஒன்பதும் நிரையாதி இரண்டுசீர்க்கும் இரண்டும் ஆகப் பதினொரு நிலம் களையப்படும். இரண்டு பாவிற்கும் ஒருசேர முப்பத்திரண்டு நிலம் களையப்படும்.

3. அகவலுக்கு நூற்றுநாற்பத்தேழு. வெண்பாவிற்கு நூற்றுமூறு. கலிக்கு எண்பதுமாக முந்நூற்றுமுப்பத்துமூன்றாகும். பா மூன்றற்கும் வருஞ்சீர்கள் முறையே ஈரேழ் (14) உம், ஈரொன்பதும் (18), எண்ணிரண்டு (16) உம் ஆம்.

4. ஈரொற்றளபெடை :— இரண்டொற்றுச் சேர்த்துவரும் ஒற்றளபெடை. இது துள்ளலோசையைப் பிறப்பியாதாகலின்

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி."
(தொ. செ. கக) அறிக.

இனி, ஆசிரியத்துள் தேமா புளிமாவென்னும் இரண்டும், வெண்பாவினுள் தேமா புளிமா மாசெல்வாய் புலிசெல்வாய் என்னும் நான்குமாகச் சீராறன்கண்ணும் பெற்ற தொடை நாற்பத்தைந்து. இவை ஆசிரியத்திருபத்தொன்றும், வெண்பாவினுளிருபத்துநான்குமெனப்படும். இவை ஆசிரியத்துண் மூன்றும், வெண்பாவினுள் இரண்டுமாக ஐந்து நிலங்களைந்து பெறப்பட்டன. களையுநிலம் அதனிற் சுருங்குவதில்லை.

1 "தேமா புளிமாவே மாபுலிசெல் வாயென்று
நானாற்பத் தைந்தொற் றளபாம்—வேறு
தனித்தொவி யொன்று களையுநில மூன்று
முதற்பாவின் வெள்ளைக் கிரண்டு."

எனவும்,

"எழுமூன்று மாசிரியந் தெண்மூன்றும் வெள்ளைக்

கழியாத விரோத் றளவு.''

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க. ஆக அளபெடைத் தொடை இரண்டுங் கூட்டிப் பெற்ற தொடை மூந்நூற்றெழு பத்தெட்டு. ஆக முதற்றொடை இருபத்திரண்டனுனும் பெற்ற தொடை ஒன்பதினுயிரத்தெண்ணூற்றிருபஃது.

" ஒன்பதி னுயிரத் தெண்ணூற் றிருபஃதா
மந்தமில் காட்சி [2] யளபெடைத்தே
[3] வந்த விருபத்தி ரண்டு.'' .(கூஎ)

---

துள்ளலோசையான் வருங் கலிக்கு வாராது. ஆசிரியத்துத் தேமா புளிமா என்னும் இரண்டுசீரினும் வரும். அவை கஉ அடி உறழ உச அடி ஆம். இவற்றுள் தேமாவுக்கு மேனிலத்தொன்றும், புளிமாவுக்கு கீழ்நில (சுருங்கிய நில)த்திரண்டுமாக • ௩ நிலங் களைய உக நிலமாம். வெண்பாவுள் தேமா முதலிய நான்கு சீரும் உறழ உசு தொடையாம். இரண்டு நிலங்களைய ௨ச ஆகும். இரண்டு பாவுக்கு மொத்தம் சரு தொடையாம். உஉ-வது ஒற்றளபெடைக்கு சரு தொடையாம். முற்கூறிய ௨0 தொடையும் இவை இரண்டும் சேர்ந்து உஉ தொடைக் கும் கூஅஉ0 ஆகும்.

1. மாபுலிசெல்வாய் என்பதை மாசெல்வாய், புலிசெல் வாய் எனச் செல்வாய் மாவுக்குங் கூட்டிக்கொள்க. நான்கு + நாற்பத்தைந்து எனப் பிரிக்க. நான்கு—மேற்கூறிய நான்குசீர். முதற்பா—ஆசிரியப்பா.

2. அளபெடை தன்றெடு என்றிருப்பது நலம்.

3. இருபத்திரண்டுஎன்றது அளபெடையோடு உஉதொடை என்றபடி.

[பொழிப்பெதுகைத்தொடை

இதுவெனல்]

௪௧௦. ஒருசீ ரிடையிட் டெதுகை யாயிற்
பொழிப்பென மொழிதல் புலவ ராறே.

இது, பொழிப்பெதுகையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : ஒருசீரிடையிட்டு எதுகையாயிற் பொழிப்பாம்

என்றவாறு.

இடையிடினெனவே முதற்சீர் நிற்பதாயிற்று. எதுகை யாயின் எனவே, மூன்றாஞ் சீரோடு தொடுப்பதாயிற்று.[1] இவற்றுள் ஆசிரியங் களைவன களையப்பெற்ற தொடை நூற்றுநாற்பது எனவும், வெண்பா களைவன களையப்பெற்ற தொடை நூற்றுமூன்று எனவுங் கொள்க.

1 "நிரைமுதற்சீர் பன்னிரண்டுங் கீழ்நிலத்து ளொன்ற
வருகளி முந்நூற்றெட் டாம்."

எனவும்,

3 "மேவுசீர் வெள்ளைக்கோன் றேற்கிளை முற்றே
லோரிரு நூற்றுமுப்பத் தெட்டாகு மாக
விருநூறு நானூறொ டேழ்பத்தைந் தாக
வருமுற்று மொன்றும் வகை."

எனவும் இவை முற்றெதுகைக்கு உரைச்சூத்திரம்.

இன்னும் 'புலவராறே' என்று மிகுத்துச் சொல்லிய வதனானே அமைவன வேறுளவெனத் தழீஇப் புகுந்த வற்றுள் ஈண்டுக் கூறாத அந்தாதித் தொடையும், மற்றை

---

1. இவற்றுள் என்பதன்முன் பொழிப்பின் கணக்கு வரலாறு சொன்ன வரிகள் சிதைந்தனபோலும். 23-வது பொழிப்பு எதுகைத்தொடை. ஆசிரியம் ௧௪௦. வெண்பா ௧௦௫. கலிக்கு ௨௦௮ என்ற கணக்குப் பிழைபோலத் தெரிகிறது. ஆசிரிய வெண்பாக்களின் கணக்கும் அதனோடு சேர்ந்துள்ளதோ அன்றோ என்பது ஆராயத்தக்கது. கிளைப் பொழிப்பின் கணக்கு வேறுபாடுமில்லை.

2. இப்பாவில் முன்வரிகள் இரண்டுமில்லை. முன்வரவேண்டிய ஆசிரிய முதலியவற்றின் கணக்குப் பாக்களு மில்லை.

3. முற்றுக்கும் கிளை முற்றுக்கும் முன் கூறவேண்டிய கணக்கு வரிகளில்லை. கணக்குக்குரிய உரைச் சூத்திரங்களுமில்லை. இதிற் சொல்லிய கணக்குப் பகுப்பும் விளங்கவில்லை. சரியோ என்பதும் ஆராயத்தக்கது.

23-வது பொழிப்பு
24-வது கிளைப் பொழிப்பு
25-வது முற்று
26-வது கிளைமுற்று

கொன்று யிரண்டா ஞெரூஉவிரண்டு மாயிரத்
தைம்பான்மே லெட்டா மவை.''
எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

மேலைப் பொழிப்பிரண்டும் முற்றிரண்டும் இவையிரண்டு மென விகற்பத்தொடை ஆறனுலும் பெற்றதொடை இரண்டாயிரத்தைஞ்ஞூற் [3] றிருபத்தொன்று. இவை ஆறு தொடையும் ஓரடிக்கண்ணே வருதலின் தளைவழுப்பட்டனவென்று களையும் நிலமிலவென்பது.

இன்னும் புலவராறென்றதனுல், தொடையந்தாதியும் விட்டிசையும் ஒரோவொன்று இரண்டாகி அசையந்தாதியுஞ் சீரந்தாதியும் விட்டிசைத்தொடையுங் குறிப்பு விட்டிசையுமென நான்காம.

ஓரடியுள் இறுதிச் சீருள் ஈற்றசையும் மற்றையடியின் முதற்சீரின் முதலசையும் ஒன்றத் தொடுப்பது அசையந்தாதி. அவை தொடுக்குங்காற் கட்டளையடிக்கண் [4] உரியசைச் சீரினை

1. வெண்பா உஎ சீர்க்கு வருந் தொடை கஅகல் இரண்டு சீர்க்கும் முதனிலத்து இரண்டுநிலம் வாராமையின் அவ்விரண்டுங் களைய களகூ ஆம்.

2. முன்னின்ற நேராதிச் சீர்க்கு கஉ × ரு = கூ0. பின்னின்ற நிரையாதிச் சீர்க்கு கஉ × ரு = கூ0 ஆம். ஆக கஉ0 அடியுள் ஒவ்வொரு நிலமாக உச நிலம் கழித்து கூகூ ஆகும். இகளையொரூஉவுக்கு வெண்பாவுள் இருசீர்க்கு இருநிலங் களையாது கொள்ள இரண்டு ஒரூஉவுக்குந் தொடை க0ருஅ ஆகும்.

'முன்பி னிரையாதி நேராதி' என்ற பாடத்திற்கு எதிர் நிர னிறையாகப் பொருள் கொள்ளவேண்டும்.

3. உடுஉக என்பது உடுகஅ என்று இருத்தல்வேண்டும். ஏனெனில்? பின் மொத்தம் கஉஎ௦அ-க்கு மூன்று கூடுகிறபடியால். பொழிப்புச் சூத்திரத்தில் இப்பிழை வந்திருத்தல்வேண்டும்.

4. உரியசைச்சீர்—நேர்பு நிரைபு என்னும் உகூ-வது அசையந்தாதி.

உரியசைச்சீர்.

ளியல்]

பொருளதிகாரம் ௯கக.

அசையெனக் கொள்ளற்க; இவை பிறசீர்ப்பாற்படுத்துத் தளைகோடலின். அடியிறுதிக்கட் கடியாறு மழகளிறென வந்தவழி யாறு களிறு என்னும் இரண்டு உரியசையும் நிரையசையாக இயற்றப்பட்டன. ஆயினும் இயற்கை நிரையசையோடு தொடுக்கப்படா; இரண்டசையும் ஒருசொல்லாயினன்றி அந்தாதியாகாமையினென்பது.

இனி, இறுதிச்சீர் முதற்சீரோடு சேரிற் சீரந்தாதியாம். உதாரணம்:—

"குன்றகச் சாரற் குதித்தன கோண்மா
மாவென மதர்த்தன கொடிச்சி வான்கண்."

என்பது அசையந்தாதி.

"தழைபூஞ் சாரற் பூத்த முல்லை
முல்லை சான்ற கற்பி னல்லோள்."
என்பது சீரந்தாதி.

இது கட்டளையடிக்கண் வருங்கால் அசையந்தாதி முந்நூற் றிருபத்தைந்தாம்.

அவை ஆசிரியத்துள் [1] இரண்டு நேர்பசைச் சீர்க்கும் ஓரெழுத்துத் தேமாவிற்கும் ஏலாமையின் ஒழிந்த நேர்முதற் சீர் பதினொன்றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் ஒருசீர்க்கு முதனிலையிரண்டும் இறுதிநிலை யொன்றுமென மூன்றாக முப்பத்துமூன்றகற்றி ஒரோ சீர்க்கு ஒன்பதொன்ப தாகப் பெற்ற தொடை தொண்ணூற்றொன்பது. இனி, நிரை முதற்சீருள் நிரைபசைச் சீரிரண்டும் ஒழித்து ஒழிந்த பதி னொன்றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் முதனிலைத் தொன்றுவன இவ்விரண்டாக இருபத்திரண்டு

நிலங் களைய ஒவ்வொன்று பத்தாகப் பெற்ற தொடை நாற்றிருபதாக ஆசிரியத்துள் அசையந்தாதி இருநூற்றெண்பதாயின.

1. நேர்பசை உ. வண்டு, மின்னு. ஓரெழுத்துத் தேமா— நுந்தை. இவை மூன்றும் வாரா. நேர்முதற்சீர் கக. கக சீரையும் கஉ அடி உறழ கஙஉ தொடை. இச்சீருள் வாராத நிலம் ஙங களைய கூகூ தொடையாம். நிரையசையுள் கடியாறு மழ களிறு என்னும் நேர்பசை நிரைபசை மீறு இரண்டும் வாரா. அவை நீக்கி ஒழிந்த கக சீர்க்கும் கஉ அடி உறழ்ந்த கஙஉ தொடையில் வாராத நிலம் உஉ களைய ககO ஆகும். இரண்டுஞ் சேர்ந்து ஆசிரியம் உOகூ ஆகும்.

[1] வெண்பாவினுள் அசையந்தாதி வருங்கால் நேர்பசைச்சீரிரண்டும் ஒரோவழித் தொடையாய், நிரைமுதற்சீர் யாதின் மூன்றுமெனப் பதினாறொழித்து, ஒழிந்த நேர்முதற்சீர் பதினொன்றும் உறழ்ந்த அடி எழுபத்தொட்டனுள் ஒரோவோர் சீர்க்கு இரண்டாக முதனிலைந்தோறுங் களைந்தவழி இருபத்திரண்டொழித்துப் பெற்ற வெண்டொடை ஐம்பத்தாறும்.

கலிப்பாவினுள் நிரைமுதற்சீர் ஒழித்து ஒழிந்த நேர்முதற்சீர் பன்னிரண்டனுனுந் தொடை அறுபதாம். ஆக மூன்று பாவிற்கும் அசையந்தாதி முந்நூற்றிருபத்தைந்தாயினவாறு கண்டுகொள்க.

[2] "நேர்பசைச்சீர் நுந்தையொழித் தேனைப் பதினொரு
நேராதி முன்பினிரண் டொன்றகற்றிச்—சீராக
நீங்கியவா றாக நிரைமுதல் பத்தாக
வீங்கிரு நூற்றென்ப தென்."

எனவும்,

[3] "நேர்முத லொன்பா னியற்சீ ருரிவெண்சீ
ராகியபி னியிவ்விரண்
டாங்கொழிப்ப—நேர்பொடு
வெண்பாநேர் நுந்தை நிரைமுதல்
வீழ்த்தசை
யந்தாதி யைம்பத்தா றும்."

எனவும்,

"நேரசை யந்தாதி யன்றிக் கலிக்கியையா
வாகலி னுங்கறுப தாம்."

எனவும்,

4 "அவ்வகை யந்தாதி மூந்நூற் றிருபத்தைந்
திவ்வகை மூப்பாக் கியற்று."

---

1. வெண்பா அசையந்தாதி நேர்முதற்சீர் கக உறழ்ந்த அடி எஅ ஆம். வாராத மேனிலம் உஉ கழிய வருவன ருகூ தொடையாம். கலிப்பா நேர்முதல் கஉ-க்கும் ரு அடி உறழ கூ0 ஆம். அசையந்தாதி மூன்று பாவிற்கும் உ0கூம் ருகூம் கூ0ம் ஆக ஙஉரு ஆம்.

2. ஆசிரியம் நேர்பசைச்சீர் உ—வண்டு, மின்னு. இரண்டு—இரண்டுநிலம். ஒன்று—ஒருநிலம். அகற்றி—களைந்து. மூன்—மேனிலம். பின்—கீழ்நிலம். நிரைமுதல் பத்தாக—நிரைமுதற் சீரில் பப்பத்து நிலம் ஒவ்வொரு சீர்க்குங் கொள்ளப்படும். நீங் கியவாறாக—நீங்கியதன்மைத்தாக.

3. நேர்முதற்சீரில் இயற்சீர் ஒன்பது. வெண்சீர் இரண் டாகப் பதினொரு சீர் வரும். இவ்விரண்டுநிலங் களையப்படும். நேர்பசையிரண்டும் நுந்தையும் நிரைமுதலும் வாரா. அவை நீக்கப்படும். நீ—நேர் என்றிருத்தல்வேண்டும்.

4. அசையந்தாதி பா மூன்றற்கும் ஙஉரு-ம்.



எனவும் இவ்வுரைச் சூத்திரங்களான்
அசையந்தாதி மூந்நூற் றிருபத்தைந்தும்
ஆயினவாறு அறிந்துகொள்க.

இனி, சீரந்தாதி நூற்றறுபத்துநான்கு :—
அவை ஆசிரியத்து வருங்கால் 1
நேர்பசைச்சீரிரண்டுந் தேமாவிரண்டுமென
நான்கனுனுந் தத்தம் முதனிலங் கொடங்கி
ஓரோவொன்று அவ்வாருக
நாலாறிருபத்துநான்காம். இனி,
நிரைமுதற்சீருள் நிரைபசைச்சீரிரண்டும்
புளிமாவுமென மூன்றொழித்து ஒழிந்த பத்துச்
சீரானும் வருங்கால் அவை உறழ்ந்த அடி
பன்னிரண்டனுண் முதனிலம் மூன்றும்
பெருகிய நிலத்திரண்டுமாக வைந் தொழித்து
ஓரோவொன்று எவ்வேழாக எழுபதாம். ஆக
அக வற்றொடை தொண்ணூற்றுநான்காம்.

இனி, வெண்பாவினுள் வருங்கால்
நேர்பசைச்சீரிரண்டுந் தேமாவிரண்டும்
நிரைமுதல் வெண்சீரிரண்டும் நிரைமுதல் நிரை
யீருகலிற் [2] கணவிரி எட்டுமாகச் சீர்
பதினன்கும் ஒழித்து ஒழிந்த சீர்
பதின்மூன்றனுனும் பெற்ற அடி தொண்ணூ
றும்; அவற்றுள், வரகும் அரவும் புளிமாவுங்
என்னும் மூன்றும் பெற்ற அடி [3]

பதினொன்பதாகலின், அவற்றுள் வரகிற் குப் பெருகியநிலத்து மூன்றும், அரவும் புளிமாவுஞ் சுருங்கிய நிலத்தும் பெருகியநிலத்தும் ஒரோவொன்றாக நான்குமாக ஏழு மொழித்து ஒரோவொன்று நான்காகப் பெற்ற அடி. பன்னிரண் டாம். காருருமு, மாவருவாய் என்னும் இரண்டனும் பெற்ற அடி பன்னிரண்டனுள் முதனிலத்து மும்மூன்றாக ஆறொழித்

---

1. 30-வது சூத்திரம்

நேர்பசைச்சீரிரண்டு—வண்டு, மின்னு.

தேமா இரண்டு—

ஓரெழுத்துத் தேமாவாகிய நுந்தையும் ஈரெழுத்துத் தேமாவும். இவை நான்கு சீரும் வரும்: வருங்கால் நான்கும் கஉ அடி உறழ சஅ நிலமாம். கீழ்நிலத்து (பெருகியநிலம்) அவ்வாறாக உச கழிக்க உச நிலம் வரும். நிரைபிரண்டு—வரகு, அரவு என்பன. முதனிலம்—சுருங்கிய நிலம்.

2. கணவிரி எட்டாவன :— கடியாறு, பெருநாணு, மழகளிறு, நரையுருமு, குளிறுபுலி, விரவுகொடி, விறகுதீ, உருமுத்தீ என்பன.

3. கக-ல் எ கழிக்க கஉ ஆதல் காண்க. ஒரோவொன்று நான்காக மூன்றற்கும் முந்நான்கு பன்னிரண்டாம்.

தாப் பெற்ற தொடை இருமூன்றாம். [1] பாதிரியேழும் மாசெல்வாயுமென எட்டனுாம் பெற்ற அடி ஐம்பத்தொன்பதாகலின் அவற்றுள் ஈரெழுத்துப் பாதிரி மூன்றுஞ் சுருங்கிய நிலத்து ஓரோவொன்றாம், பெருகியநிலத்து இவ்விரண்டுமாக மும்மூன்றொன்பதாம், ஒழிந்த மூவெழுத்துப் பாதிரி நான்கும், மாசெல்வாயுமென ஐந்துஞ் சுருங்கிய நிலத்து இவ்விரண்டாகப் பத்துமெனப் பத்தொன்பதும் களைந்து பெற்ற தொடை நாற்பதாமெனக் கொள்க. ஆகக் களையும்விடம் முப்பத்திரண்டு ஒழிந்து ஒழிந்ததொடை வெண்பாவிற்கு ஐம்பத்திரட்டாயின.

இனி, கலிப்பாவினுள் வெண்சீர் நான்கனையும் பெற்ற அடி இருபஃதாகலின், அவற்றுள் மாசெல்வாய் உறழ்ந்த அடி ஐந்தினும் ஏறிய நிலத்திரண்டும், புலிவருவாய் உறழ்ந்த அடி ஐந்தினுஞ் சுருங்கிய நிலத்திரண்டும் ஒழிந்த மாவருவாய் புலிசெல்வாய்கள் இரண்டும் முன்னும் பின்னும் ஓரோவொன்றாக நான்காகும்; ஆக எட்டுங் களைய ஓரோவொன்று மும்மூன்றாகப் பெற்ற தொடை பன்னிரண்டாம். ஆக மூன்று பாவிற்குஞ் [2] சேர்ந்தன ஆற்றுப்பத்தானவாம்.

> [3] "வண்டொன்று தேமா விரண்டு வலியதுபன்
> னொன்றொடுச்சீர் ஏந்தாதிக் கீரேழாம் தோரதி
> பத்தும் புளிமா வசைஇரண்டும் வெண்சீரைக்கா
> மொத்த கலிக்குச்சீர்ச் சான்று."

எனவும்,

> [4] "நிரைநிரையத் தெல்லாமுச மூன்று மிரண்டு
> முதனிலை, நீக்கினான் றுக—வகாஎலி

இனி, விட்டிசைத்தொடை

கூறுங்கால் எழுத்தினானும்

[3] எழுத்தல் ஓசையானும் விட்டிசைத்தல்

இருவகைப்படும்.

"அ உ வறியா வறிவி லிடைமகனே

நொஅலைய லின்னாட்டை நீ."

(இடைக்காடனார்)

என்பது, எழுத்தினானாகியது.

[4] விட்டிசையின் இயல்பிது.

வல்லொற்றடுப்பின் விட்டிசை

வல்லொற்றொடுதொடையென்பாரும் உளர்.

ஆண்டு வல்லொற்றொடை

யாமாகாமையின் அது வேண்டுவதன்று ;

வேண்டினும் விட்டிசை

யெனவே அடங்குமென்பது.

[5] "தவன்று தாமிசைப்ப தகிரிய

நன்றுமைகேட் ' டௌவல் தொழுந்தச

பலர்."

என்பது குறிப்பு விட்டிசை.

இவை கட்டளையடிக்கண் வருங்கால்

ஓரோவொன்று ஆற்

நருபத்துநான்காம்
மூன்றாந்திருபத்தெட்டாம்.

அவை வருங்கால் [6] நேர்பசைச்சீரிரண்டும் ஓரெழுத்துத் தேமாவும் போதுபூவிரண்டும் ஒழித்தொழிந்த தேமாவும் பாதிரி யிரண்டும் போரேறு இரண்டும் [7] [ஒன்றிக் கலிப்பாவிற்குத்

தொடை நாற்பத்தாகவும், இரண்டு விட்டிசையும் தொகுப்பப்]

1. மூன்று பாவிற்கும் கச தொடையாம்.

2. அந்தாதித் தொடை அசையந்தாதியும் என்னுமிரண்டுஞ் சேர்ந்து ச அ கூ-ஆம்.

சீரந்தாதியும்

3. எழுத்தல் ஓசையான் வருவது குறிப்பு விட்டிசையாம்.
4. 31-வது எழுத்து விட்டிசை.
32-வது குறிப்பு விட்டிசை.

5. க. எ என்பன ஓசைக் குறிப்புக் காட்டி நின்றன.

6. நேர்பு அசை இரண்டு—வண்டு, மின்னு. போதுபூ இரண்டு—போதுபூ, மேவுசீர் என்பன. இவை ஒழித்து ஒழிந்த தேமா—ஓரெழுத்துத் தேமா. பாதிரி இரண்டு—நீடுகொடி, நாணுத்தளை. போரேறிரண்டு—போரேறு, கண்ணுணு. இதில் போரேறு விடப்பட்டது. போரேறு வெண்பாவில் கூறப்படுகின்றது.

7. பகரக்கோட்டிலடைத்தன பின்வருதலின் முன் மாறி எழுதப்பட்டது. அது வேண்டியதில்லை.

1 "இருவிட் டிசைமுந்நூற் றீரொருபத் தெட்டா
வருவித்துக் கோடல் வழக்கு."

எனவும் இவற்றைப் பதநெகிழ்த்துரைக்க.

2 "விகற்பமா றந்தாதி விட்டிசைநான் கேற்றி
யிசைத்தவி ரைந்து தொடையாற்
றொடைத்தொகை
மூவா யிரத்தொடு முந்நூற்று முப்பத்தா
றுமா றறிந்து கொளல்."

3 "இருபத் திரண்டு மிவைபந்து மாக
வருவிக்க முப்பத் திரண்டா—னொருபத்தின்
மூவா யிரத்தொரு நூற்றைம்பத்
தாறைந்நூற்
றேடோரைம் பத்திரண் டேற்று."

எனவிவை உரைச்சூத்திரம். ஆகத்

தொடை முப்பத்திரண்ட
ூற் பெற்றதொடை
பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு. (கூகூ)

[செந்தொடை இதுவெனல்]

சசஉ. சொல்லிய தொடையொடு வேறுபட்
டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை
யென்ப.

இது, மேற் செந்தொடையாமெனக்
கூறிய துணர்த்து கின்றது;
எய்தாததெய்துவித்ததூஉமாம்.

இ—ள்: மேற் கூறப்பட்ட தொடை
எல்லாவற்றோடும் ஒவ்வாதுவரின் அதனை
இயற்கைச் சொல்லாற் செய்யுள் செய்

1. இரண்டு விட்டிசைக்கும் ௩௨அ ஆம்.

2. விகற்பத்தொடை ஆறுவன—பொழிப்பு ௨-ம் முற்று ௨-ம் ஒரூஉ ௨-ம் ஆம். அந்தாதி ௨-ம் விட்டிசைத்தொடை ௨-ம்
ஆகப் பத்துத் தொடையாலும் வந்த
தொடைத்தொகை ௩௩௩௬. இத்தொகை ௩௩௩௯
என முன்தொகைகளைக் கூட்ட வருகின்
றது. ஆகையால் ௩ கூடற்கு முன் கூறிய தனித் தொகைகளுட்
பிழையிருத்தல்வேண்டும்.

3. முன்வந்த இருபத்திரண்டும் இவை
பத்துமாக தொடை
௩௨ ஆம.

௩௨ தொடைக்கும் ௧௩௧௫௬
செந்தொடை ௫சசு

| பிற | ௩ |
|---|---|
| மொத்தம் | க௩எ0அ |

சக0-ம் சூத்திர உரையிற் சொன்ன கணக்கிற் பிழையிருக்கிறபடியால் இத்தொகையினும் மூன்று கூடி வருகிறது. அதனைக் கழிக்க க௩எ0அ ஆம். சக0-ம் சூத்திர உரை முற்ற இல்லாமையால் அப்பிழை காணமுடியவில்லை.



யும் புலவரது செந்தொடையென்று சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

எனவே, விகாரப்படச் செய்யுள் செய்யுஞ் செந்தொடை இன்றென்றாம்; அது,

"இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்
தினமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்தன தோளே."

(அகம். உஎ0)

எனவும்,

"சேயிரு முகந்த நுரைபிதிர்ப் படுதிரை
பராரைப் புன்னை வாங்குசினை தோயும்."

(அகம். உஎ0)

. . .

எனவும வரும.

" பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலின மகவு நாட
னன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே."

(யா. வி. ப. களகூ)

என்பதும் அது.

'இயலின்' என்றதனால், இரண்டடியால் தொடைபெற்று
நின்று இரண்டடி யெதுகையாகியவை தம்முள் தொடுக்குங்
கால் செவ்வன் தொடுப்பினும் அதனைச் செந்தொடையென்னாது
இரண்டடி யெதுகையென்றும், இனி ஓரடி இடையிட்டுத்
தொடுத்தவழியுந் தொடர்ந்த அடி இரண்டிஞ் செந்தொடையா
மாயினும் மூன்றமடி எதுகைபடத் தொடுத்தன் [1] மாத்திரை
யானே அதனை இடையிட்டெதுகையென்றுங் கொள்ளப்படும்;
என்னை? அவ்வெதுகை ஆண்டுச்

சிறந்தமைபினென்பது ; அவை
முன்னர்க் காட்டுதும்.

" முன்பொழுது முன்செல்லுந் [2] தூரியமா மந்நிலையே
பின்பொழுது பின்செல்லு நெய்தலா—னன்பிலவே
கொல்யானை வேகப்பேரீர்க் கோக்கோதை மாறேற்ற
பல்யானை மன்னர் பறை."

என வரும். இஃது இவ்விரண்டடிகளது
கூட்டத்துக்கண்ணன்றி வாராவாயினுங்
கட்டளையடிக்கு அகப்பட்ட தொடையொடுங்
கூறினார். கட்டளையடிக்கண் வருந் தொடையே
சிறந்தனவென்று ———————

1. மாத்திரை—அளவு.

2. தூரியம்—வாச்சியம், பேரூர்ப்பறை. நெய்தல்—இரங்கற் பறை ; சாவுக்கடிக்கும் பறை.

கொள்ளினுங் கொள்ளற்கவென்பான்,
[1] ஒழிந்த தொடையுள்ளு
மென்று கூட்டித் தொடை
கூறினானென்பது.
இனி, செந்தொடை
கட்டளையடிக்கண் தொடையாங்கால்
ஓரெழுத்துத் தேமா ஒழித்து ஒழிந்த
சீரெல்லாவற்றினும்
வருமென்பது. [2] இம்மூவகை அடியினானும்
பெற்ற தொடையெல்
லாந் தொகுப்பத் தொடை
ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதாம்;
அவற்றோடும் இரண்டடியெதுகை
இரண்டும் இடையீடுங் கூட்
டத் தொடை
ஐஞ்ஞூற்றைம்பத்திரண்டாம்.
[3] "முந்தையில் செந்தொடை யைஞ்ஞூற்று
நாற்பான்மே
லொன்பானை யோரிடையிட் டோரிரட்டி
வந்த வெதுகை யிரண்டென
வைத்தைஞ்ஞூற்
றைம்பத் திரண்டென் றறி."

என்பது உரைச்சூத்திரம். ஆக
முப்பத்துமூன்று தொடையும்
அறுநூற்றிருபத்தைந்து அடியுட்
களவன களைந்து பெற்ற
தொடைவிரி யெல்லாந் தொகுப்பப்
பெற்ற தொடை பதின்மூவா
யிரத் தெழுநூற்றைந்துடன் இரண்டடி
யெதுகையிரண்டும், இடையீடொன்றுங்
கூட்டத் தொடை பதின்மூவாயிரத்தெழு
நூற்றெட்டாயினவாறு கண்டுகொள்க.

"தொடையின் பகுதி முழுவதூஉஞ் சொன்மற்
றடியி னறுநூற் றிருபத்தைந் தாயி
னடிய திலக்கண மரமதுவென் றஞ்சிப்
பிறதொடைமுன் றேற்றினர் பின்."

இவ்வாறு தொடை கூறப்பட்ட
தொடைப்பகுதியெல்லாம் அவ்வச்
சூத்திரங்கடோறும் எடுத்தோதாது
கட்டளையடிக்கும் அல்லாவடிக்கும் பொதுவகையாற்
கூறி வந்தாசிரியனுயினும்,

"மெய்பெறு மரபிற் றொடைவகை." (தொ.
செய். கoக)

1. ஒழிந்ததொடை என்றது கூறப்படாதெஞ்சி நின்ற வற்றை. கூட்டிக் கூறினான் என்றது இரண்டடி எதுகையையும் இடையீட் டெதுகையையும். தொடை—தொகை என்றிருப்பது நலம்.

2. கணக்கு வரிகள் இல்லை.

3. ருந்தை என்பது செந்தொடைக்கு வாராது. செந் தொடை ருசகூ ஆம். ஐ—சாரியை. இடையீட்டெதுகை ஒன்றும் இரண்டடி எதுகை இரண்டும் சேர்க்க ருருஉ ஆம் என்க.

4. தொடையின் பகுதி முழுவதும் சொல்லப்பட்ட அறுநூற்றிருபத்தைந்தடிக்காம். ஆயின் அடியினிலக்கணம் அவ்வளவாமென்றஞ்சி பிற தொடை ௩ கூட்டினார் என்றபடி.

ளியல்] பொருளதிகாரம்

சஉ௩

என்னுந் தொடைச்[1] சூத்திரத்திற்கு ஏற்பதாம். அவற்றை அவ் வச் சூத்திரங்களுட்போலக் கூறி வந்ததாமென்பது. முற் கூறிய முப்பத்துமூன்று தொடையினையும் அறுநூற்றிருபத் தைந்தடியோடு மாறியக்கால் இருபதினாயிரத்தறுநூற்றிருபத் தைந்து தொடையாகற்பாலனவாம்; அன்னவை [2] தொடைக் குந் தளைக்குமாகாதன களைந்து கொள்ளப் பதின்மூவாயிரத் தெழுநூற்றைந்தாயினவென்பது. ஆறாயிரத்துத் தொள்ளாயிரத் திருபது நிலங் களையப்பட்டன. இங்ஙனம் இவை களைந்து பெற்ற தொடையோடும் இரண்டடியெதுகை இரண்டும் இடையிட் டொன்றுங் கூட்டத் தொடை பதின்மூவாயிரத் தெழுநாற் றெட்டாயின. (௪௦௦)

[தொடைகளின் தொகை இதுவெனல்]

௪௧௩. மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
யையீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை
யெழுநூற்
றொன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே.

இது, மேற்கூறிய தொடையுள் [3]
ஒருசீரான் வரையறை யுடைமையின் அவற்றை அடிக்கட்போலத் தொகுத்தோதுகின்றது;

விரித்ததூஉந் தொகுத்ததூஉமாம்; என்னை?
கட்டளை யடி யொடுபட்ட தொடை விகற்பம் முற்கூறிய சூத்திரங்களுட் பெற் றமையானும் அவற்றையும் ஈண்டுத் தொகுத்துக் கூறினமை யானுமென்பது.

இ—ள்: மெய்பெறு மரபில் தொடைவகை — கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படும் இலக்கணத்தவாகிய தொடைக் கூறுபாடு; 'தாமே' என்பது பிரித்துக் கூறியவாறு; [4] ஐயீ ராயிரத்து [5] ஆறு ஐஞ்ஞூற்றொடு — பதின்மூவாயிரத்தோடு;

1. ஏற்ப ...... அவ்வச் சூத்திரங்களுட் கூறிவந்தாம் என் றிருப்பது நலம்.
2. தொடுக்கப்படாத அடிகளும் தலைவழுவும்.
3. ஒருசீரான்—ஒவ்வொரு சீரான்
4. ஐயீராயிரம்—பதினாயிரம்.
5. ஆறைஞ்ஞூறு—மூவாயிரம்.

[1] தொண்டு தலையிட்ட [2] பத்துக்குறை
எழுநூற்றொன்பஃது— எழுநூற்றெட்டு
என்றவாறு.

தொடைப்பகுதி
பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு என்று
சொல்லுப ஆசிரியரென்பது இதன்
பொழிப்பு. 'மெய்பெறு
மரபின' இவையெனவே, விளங்கத்
தோன்றுதனவுந் தொடை
யுளவென்பதாம் ; அவை, இணை, கூழை,
மேற்கதுவாய், கீழ்க்
கதுவாய், கடையிணை, கடைக்கூழை,
இடைப்புணர்ப்பின எனச்
சொல்லுப. பிறவும் வேறுபடுத்துக் கூறுவார்
கூறுவனவெல்
லாம் இதனுளே 'தழீஇக்
கொள்ளப்படுமென்பது.

'தொடைவகை ' என்பது
கட்டளையடியொடு வருமெனப்
பட்ட முப்பத்துமூன்று தொடையும்

பிறவாற்ருன் வருமெனப்
பட்ட இடையீட்டெதுகை
இரண்டடியெதுகையென இரு கூற்
றனவு மென்றவாறு.
'ஐயீ ராயிரத் தாறைந் நூற்ருடு'
என்பது, உம்மைத்
தொகை. 'தொண்டு தலையிட்ட' என்பது,
ஒன்பானையகப்படும்
மொழியாகவுடையவென்றவாறு. அது
செய்தவென்னும் பெய
ரெச்சமாகலின் எழுநூற்ருென்பதென்னும்
பெயர்கொண்டு முடி.
யும்; எனவே,
எழுநூற்ருருபத்தெட்டாமென்றஞ்சிப் [8] பத்
துக்குறை எழுநூற்ருென்பது
என்ருனென்பது; எனவே,
ஆண்டு நின்ற ஒன்பானெடுங் தொண்டு
தலையிட்ட எனப்பட்ட
ஒன்பானையுங் கூட்ட
எழுநூற்றெட்டாயினவென்றவாறு; அஃதே
கருத்தெனின்,

"பதின்மூ வாயிரத் தெழுநூற் றெட்டென
மொழியப் பட்டன தொடைதெரி வகையே."

என அமையும்; இவ்வாறு அரிதும் பெரிதுமாகச் சூத்திரஞ்

செய்ததென்னையெனின்,—அங்ஙனமே அதனை [4] ஞாபகப்படச்

செய்தான் ஆசிரியன் ஒரு காரணம் நோக்கி. என்னை? இத்

---

1. தொண்டு—ஒன்பது.

2. எ0கூ-ல் க0 குறைக்க சுசுகூ-ஆம். கூட்ட எ0அ ஆம். பதின்மூவாயிரத்தொடு சுசுசு-ஒடு கூ-ஐக் எ0அ-ஐக் கூட்ட கஙஎ0அ ஆகும். தொடை என்றபடி.

3. பத்துக்குறை எழுநாற்றொன்பது—(எ0கூ—க0) சுசுகூ அதனோடு ஒன்பது கூட்ட—(சுசுகூ + கூ) எ0அ-ஆம்.

4. ஞாபகம்—முப்பத்திரண்டு உத்தியுள் இந்நூல் சுசுசு-ம் சூத்திரத்திற் காண்க.

ஒன்று. அதனை

ளியல்]

தொடைகளை அடியொடு மாறுங்காற் குறைக்கப்படுவன உள வென்பதூஉம், அவை [1] தொண்டு தலையிட்ட ஐந்துபத்தளவும் ஆறுமுதலாகக் களையப்படுமென்பதூஉங் கோடற்கென்பது. 'ஒன்பது' என்று இருகாற் சொல்லியவதனான் அங்ஙனங் குறைக் கப்படு நிலங்கள் ஒன்பது பகுதியவாமெனக் கொள்க. அவை யாவன :— ஐம்பத்தொன்பது ஐம்பத்தாறு - நாற்பத்தைந்து நாற்பது முப்பத்தொன்பது முப்பத்திரண்டு முப்பத்தொன்று இருபத்துமூன்று ஆறு என ஒன்பது பகுதியாற் குறைவன வாயின. இங்ஙனம் ஐம்பத்தொன்பது நிலத்தின வாகலால் தொண்டு தலையிட்ட பத்து என்றுரெனவும், ஒன்பதுந் தொண்டு மென இருகாற் கூறியவதனான் அங்ஙனங் களையுநிலம் ஒன்பஃ . தெனவுங் கொள்ளப்பட்டது.

[2] "பாய பதினு யிரமென் றிலனே யீ
ராயிர மென்ற னதனுனுந்—தூயதன்றிப்
பத்துங் குறைத்த பயத்தானு மொன்பதென்
றுய்த்துக் கொளற்பாற் றெருங்கு."

எனவும்,

[3] "ஒரொன்ப நேற்றியு மோரொன்ப திட்டுரைத்து
மீரொன் பதுமிகுந்தா னிங்கெவற்று—ளோரொன்ப
தைம்பான்மே லேறவு மைந்தந்த மாய்க்குறைந்
லொன்பான் வகைத்தென்று மோர்ந்து." எனவும்,

" ஆறென்றுன் மூவா யிரமென்று நாங்கநறு
லாறந்த மாங்குறையு மாறு."

எனவும்,

---

1. தொண்டு தலையிட்ட ஐந்துபத்து—ருக. ஆறு முதல் ருக வரையும் ஒன்பதுபகுதி களையப்படும் என்றபடி.

2. சூத்திரத்துள் பதினாயிரமென்று சூத்திரியாது 'ஐயிராயிரம்' என்று சூத்திரித்தமையானும் 'பத்துக் குறை' என்று பத்தைக் குறைத்தமையானும் குறைப்பன. ஒன்பது பகுதி என்று உய்த்துணர்ந்துகொள்ளப்படும் என்பது கருத்து.

3. ஏற்றி—மிகைப்படுத்தி. இட்டுரைத்தல்—சேர்த்துரைத்தல். ஈதொன்பது — இரண்டுதரம் ஒன்பது. இரண்டுதரம் ஒன்பது கூறியது ஐம்பதற்குமேல் ஒன்பது ஏறி வருமென்பது காட்டவும் ஒன்பதுவகை என்பதைக் காட்டவும் என்பது கருத்து. ஐந்தந்தமாய் ஆறந்தமாய் என்றிருப்பது நலம். ஒன்பது ஐம்பான்மேலேறல் ருக ஆதல்.





1 " ஐம்பத்தொன் பானேழெட் டையொன்
பதுநாற்பஃ
தொன்பா னுடைமுப்பத் தெண்ணான்கு
முப்பத்தொன்

றென்பா விருபத்து மூன்று றெனக்குறைப்ப
வொன்பான் பகுதி யுள."

எனவும், இவ்வுரைச் சூத்திரங்களான் அவை குறைக்கப்படுமா றறிந்து குறைக்க. இவற்றுள் ஒன்பது நிலங் களையப்படும். [2] மோனை முதலாயின தொடை ஐந்தற்கும் [3] ஓரெழுத்துத் தேமா உரித்தென்றிராயின், அதனை நுந்தை நுந்தையென்று இருகால் தொடுக்கவேண்டும்; தொடுத்தவழி, அடிமோனையுந் தலையாகெதுகையும் அடியெதுகையும் மூன்றாமெழுத்தொன்றெதுகையுமென நான்கு தொடை பெறப்படுமாகலின், அவற்றுள் அதனை என்ன தொடையென்றுமோவெனின்,—செய்யுள்செய்த ஆசிரியன் பல தொடைபடச்செய்து வைத்தவழி, அவற்றுட் சில களைந்து ஒன்றுகோடற்குக் காரணமின்மையினான் அவை யனைத்துங் கோடுமென்பது; [4] அல்லாதார் முதனின்ற தொடையே கொண்டொழிகவென்ப; அது குற்றம்; என்னை?

[5] "செங்காற் பைந்தினை யிதண மேறிப்

பைங்காற் சிறுகிளி கடிவோ டந்தை.''

என்றவழி, எதுகையும் முரணும் வந்தவழி இவற்றுண் முதற்கண் இன்ன தொடையென்று துணிபலாகாமையின் அது நிரம்பாதாகலான் அது வந்ததொடையெல்லாவற்றானும் விரித்துத் தொடை கூறுதல் அமைபுமென்பது; என்போலவோவெனின்,—எழுத்தும் அசையுஞ் சீரும் அடியும் அங்ஙனம் முதல் வந்ததனுன் எண்ணுந் தொகையும் பெயருங் கொடுத்து வழங்காதவாறுபோலவென்பது; அல்லதூஉம், தொடைகளெல்லாந் தம்மைபுணரும் மாத்திரையானே தனித்தனி வருதல்

---

1. ஒன்பான் பகுதியாவன—௫௬, ௫௬, ௪௫, ௪௦, ௩௬, ௩௨, ௩௧, ௨௩, ௬ என்பன.

2. ஐந்து தொடையாவன — மோனை, முரண், அளபெடை. எதுகை, இயைபு,

3. ஓரெழுத்துத் தேமா—நுந்தை.

4. அல்லாதார்—தொல்காப்பியரல்லாதார்.

அவர், அவிநயி

னார், காக்கைபாடினியார் முதலியோர்.
ருஅ-ம் சூத்திர உரை நோக்குக.

யாப்பருங்கல விருத்தி

5. செங்கால்—பைங்கால்

தலையாகெதுகையும், செம்மை—
பசுமை, முரணுமாம.

ளியல்] பொருளதிகாரம்

சூஉஎ

இலக்கணமென்பதூஉம் இல்லையென உணர்க;

என்னை? பல

உறுப்புக் கொண்டது ஓர்

செய்யுளென்றமையின்.

இனி. [1] ஓரெழுத்துத் தேமா முதற்கணிற்ப அடியிறுதிக் கண்ணும் இயைபு வருதலின் அச்சீர் நின்றுறழ்ந்த அடிக்கண்

இயைபு வருதற்கு ஆராய்ச்சியின்றென்பது. ஒழிந்த தொடைக்குரியவல்லவெனப்பட்ட சீருள் [2] அவை வாராமையும், உரியவெனப்பட்டவற்றுள் அவை வருமாறும் முறையிற்கொண்டு உதாரணங் கண்டுகொள்க.

இனி, இக்காலத்துள்ள ஆசிரியருள் ஒரு சாரார்,

"தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற் [3] றொன்றும்."

எனப் பாடந் திரிப்பாரும்

இன்னொருசாரார் 'எழுநூற்றொன்றும்' [4] எனப் பாடந் திரிப்பாரும் உளர். [5] ஒரு பகுதியார்; ஒன்றும் என்பது முற்று வினையென்ப.

"மெய்பெறு மரபிற் றொடைவகை......

பத்துக்குறை யெழுநூறு."

என்னும் எண்ணினோடு ஒன்றும் எனக் கூட்டுப. பதின்மூவாயிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது என்பது அவர் கருத்து. ஒன்றுமென்பதனை எண்ணுப்பெயர் முற்றும்மைபடுத்ததென்பாரும் அதுவே கூறுப; அவாறியார். அவ்வாறு சூத்திரஞ்செய்வது ஆசிரியர் கருத்தன்று. அல்லதூஉம்,

"ஒன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே."

1. 'நுந்தை நுந்தை நுந்தை நுந்தை நுந்தை நுந்தை நுந்தை நுந்தை' { இதன்கண் இறுதியில் இயைபுவருதல் காண்க. நுந்தையை முதல்வைத்துப் பிற சீர் ஒன்றுதொடுப் பினும்இயைபுவரும்

2. அவை—தொடை.

3. ஒன்றும் என்பவென்று இருப்பது நலம்.

4. என்பன என்றிருப்பது நலம். நோக்குக.

நச்சினர்க்கினியம்

5. ஒரு பகுதியாரென்றத் இளம்பூரணரை. ஒன்றும் — பொருந்தும் எனப் பொருள்படின் முற்று வினையாம். ஆயின், வையாபுரிப்பிள்ளை அவர்கள் பதித்து வெளியிட்ட இளம்பூரண ருரைப் பதிப்பில் 'ஒன்றும்' எனப் பாடங் காணப்படவில்லை.



என்பது பழம் பாடமாகலானும் அஃதமையாதென்பது; அவ் வாறு கொள்வார்க்குத் தொடை பதின்மூவாயிரத்தறுநூற்றுத்

தொண்ணூற்றொன்பதாகலும் பிழைக்குமென்று மறுக்க; என்னை? அறுநாற்றிருபத்தைந்தடியினையுந் தமக்குப் பொருந்துமாற்றான் இருபத்திரண்டு தொடையோடும் பெருக்குங்கால் அவர்க்கும் ஓரடிக்கண்ணே தொடை கோடல்வேண்டுமாகலானும், அங்ஙனங் கொள்ள இரட்டைத்தொடை முதலாயின அறுநாற்றிருபத்தைந்து ஆகாமையானுமென்பது.

(கoக)

[வரையறையில்லாத தொடைகளுக்கு வரையறை கூறல் முடியாதெனல்]

சகச. **தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும்.**

இது மேற்கூறிய தொடைக்காவதோர் புறனடை.

இ—ள்: அறுநாற்றிருபத்தைந்து அடியோடு மாறிப்பெற்ற தொடை பதின்மூவாயிரத்தெழுநாற்றெட்டெனப்பட்டனமேல்;

இனி, அவ்வடி ஒன்றன்கண்ணேயன்றி [1]
ஒன்றிநிற்ப நின்ற வடி
அறுநூற்றிருபத்துநான்கனையும் தந்துதந்து
தடுமாற வந்து
தோன்றுந் தொடை விகற்பமும் [2] இருசீரடி
முதலாக எண்சீரடியீறாகக் கிடந்த அடி
வேறுபாட்டின்கணெல்லாம் [3] இத்
தொடைகளைக் கூட்டவும், [4] பிற விகற்பத்
தொடைகளைக் கூட் டவும் வருந்
தொடைப்பகுதி வரையறையின்றிப் பலவாம்
என்றவாறு.

வரையறை உடையனவற்றுக்கன்றி
வரையறை கூறுதல் பயமின்றாகலின் ஒழிந்த
விகற்பமெல்லாங் கூறியநிலங் கூறிற்
றிலேனென்பதூஉம்,

“மெய்பெறு மரபிற் றொடைவகை.” (தொ. செய். கoக) எனப்பட்டன
வரையறையுடைமையின் அது கூறினேனென்
பதூஉஞ் சொல்லினான்
இச்சூத்திரத்தானென்பது.

---

1. ஒன்றி நிற்ப — ஒன்று நிற்ப என்பதே பொருத்தம். ஓரடி நிற்ப என்பது பொருளாதலின். நின்ற—எஞ்சி நின்ற.

2. இருசீரடி—குறளடி.

3. இத்தொடைகள்—மோனை முதலிய ஐந்து தொடைகள்.

4. பிற விகற்பம்—பொழிப்பு முதலிய விகற்பத்தொடை.



இனி, [1] ஐந்துதொடை, விகற்பத்தொடை பலவற்றோடுங் கூட்டவும் பிறவாற்றான் விரிப்பவும் வரம்பிலவாமென்றாருமுளர்; அவை எவ்வாறு விரிப்பினும் வரம்பிலவல்லனவென மறுக்க. வரம்பிலவென்பது வரையறை கூறப்படாவென மேலுரைத்ததே உரை. (க0உ)

[தொடைப்பகுதி இரண்டெனல்]

சகரு. **தொடைவகை நிலையே யாங்கென மொழிப.**

இதுவுமது. மேல் ஒரு சாரன வரையறையுடைமையிற் கூறப்பட்டனவென்புழி, ஒழிந்தன வரையறையின்மையிற் கூறப் படாவெனவுங் கூறினானைக் கண்ட மாணாக்கன், வரம்பில்லன தொடுக்கப்படா கொல்லென ஐயுற்றானை அவையுந் தொடுக்கப் படுங் கண்டாயெனக் கூறினமையின் ஐயம் அறுத்ததெனவும்

அமையும்.

இ—ள்: தொடையது பகுதி வழக்கே அவ்விரண்டுமென்ப என்றவாறு.

எனவே, அப்பகுதியுளொன்று தெரிக்கிலமென்பது இதன் கருத்து. ஆங்கு என்றதனான் மேற்பகுத்த [2] இரண்டிடமுங் கொள்க. (கoரு)

[நோக்காவது இதுவெனல்]

சகசு. மாத்திரை முதலா வடிநிலை காறு
நோக்குதற் காரண நோக்கெனப் படுமே.

இது, நிறுத்தமுறையானே நோக்குணர்த்துகின்றது. நாற்சொல் வழக்கினைப் பாவிற்படுப்பது மரபென்றான். எனவே, ஆண்டு நோக்கி யுணரப்படுவதொன்றின்றிச் செய்யுளும் வழக்கியல்பினவாகி [3] வெள்ளைமையுமாய்க் காட்டுவனவாயின. அவ்வாறன்றி நோக்கென்பதோர் உறுப்புப் பெறினே அது செய்யுளாவதாகலான் அது கூறுகின்றானென்பது.

1. ஐந்து தொடை—மோனை முதலிய வைந்து தொடை. இவர் இளம்பூரணர்.
2. இரண்டிடம்—வரையறை யுடையனவும், இல்லனவும்.
3. வெள்ளைமை—நுண்ணிதான பொருளில்லாமை.

இ—ள் : மாத்திரையும் எழுத்தும் அசைநிலையும் சீரும் முதலாக [1] அடி நிரம்புந்துணையும், நோக்குடையவாகச் செய்தல்வன்மையாற் பெறப்படுவது நோக்கென்னும் உறுப்பாவது என்றவாறு.

[2] கேட்டார் மறித்து நோக்கிப் பயன்கொள்ளுங் கருவியை நோக்குதற் காரணமென்றுனென்பது. ‘அடிநிலைகாறும்’ என்பது, ஓரடிக்கண்ணேயன்றியுஞ் செய்யுள் வந்த அடி எத்துணை யாயினும் அவை முடிகாறுமென்றவாறு; வரலாறு:

“முல்லை வைந்நுனை தோன்ற [3] வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பர[4] லவ லடைய விரலை [5] தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானம்
[6] குரங்குளைப் பொலிந்த கொய் [7] சுவற்
புரவி

நரம்பார்ப் பன்ன வாங்கு [8] வள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை [9] பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை

நாடன்

கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவிழ் அலரி னுறு
மாய்தொடி யரிவைநின் மாணலம்

படர்ந்தே." (அகம். ச)

1. அடி நிரம்புந் தொடையும் என்பது. சி. வை. தாமோதரம்பிள்ளை பாடம். அது பொருத்தமில்லை.

2. மறித்து நோக்கல்—மீட்டுந் தன்னை நோக்கல்.
3. இல்லம்—தேற்று.
4. அவல்—பள்ளம்.
5. தெறித்தல்—துள்ளல்.
6. குரங்குளை—வளைந்த நெற்றி மயிர்.
7. சுவல்—பிடர்மயிர்.
8. வள்—வார்; வாய்க்கயிறு.
9. பேதுறல்—வருந்தல்.

என வரும். இப் பாட்டின் ஓசை
முதலியனவெல்லாங் [1]கேட்
டோரை மீட்டுந் தன்னைநோக்கி நோக்கப்
கும் நிலைமை தெரிந்துகொள்க.
பயன்கொள நிற்

இனி, 'அடிநிலைகாறும்' என்றதனாற் செய்யுள் முழுவதும் எவ்வகைபுறுப்புங் கூட்டி நோக்கியுணருமாறுங் கூறுதும். முல்லையென்பது முதலாகக் கீனம் என்பதீறாக நாற்சொல்லியலான் யாப்புவழிப்பட்டதாயினும் பருவங்காட்டி வற்புறுக்குந் தோழி [3]பருவந் தொடங்கிய துணையேகாணென்று வற்புறுத்தினளென்பது நோக்கி புணரவைத்தானென்பது. 'உதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்' என்னுந்துணையுந் தலைமகனது காதன்மிகுதி கூறி வற்புறுத்தினளென்பது நோக்கி

யுணரவைத்தான். ஒழிந்த அடிநிலைகாறும் பிரிந்தகாலம் அணித்தெனக் கூறி வற்புறுத்தினானென்பது நோக்கி யுணரவைத்தானெனப்படும்; என்னை? முல்லையென்னாது 'வைந்நுனை' என்றதனான், அவை அரும்பியது அணித்தென்பது பெறப்பட்டது; சின்னாள் கழியின் [3] வைந்நுனையாகாது [4] மெல்லெனுமாகலின். இல்லமும் கொன்றையும் மெல்லென்ற பிணியவிழ்ந்தனவென்றான், முல்லைக்கொடி [5] கரிந்ததுணை [6] அவைமுதல் கெடாது முல்லையரும்பியகாலத்து மலர்ந்தமையின். இரலை மருப்பினை, 'இரும்பு திரித்தன்ன மருப்பு' என்றதூஉம் நீர் தோய்ந்தும் வெயிலுழந்த வெப்பந் தணிந்தில, இரும்பு முறுக்கிவிட்டவழி வெப்பம் மாறாவிட்டவாறுபோலவெம்பாநின்றன வின்னுமென்றவாறு. 'பரலவ லடைய விரலை தெறிப்ப' எனவே, பால்படு

1. கேட்டார் மீட்டுந் தன்னை நோக்கிப் பயன் கொள்ள என்றிருப்பது நலம். இது முன்னும் கேட்டார் மறித்து நோக்கிப் பயன் கொள்ளுங் கருவியை என்று கூறப்பட்டமை காண்க. நோக்கி நோக்கி என்றுமிருக்கலாம். எல்லாம் நிற்கும் நிலைமை என இயையும்.

2. பருவந் தொடங்கிய துணை—பருவந் தொடங்கிய (ஆரம்பித்த) அளவு.

3. வைந்நுனை—கூரிய நுனை—மொட்டு.

4. மெல்லெனல்—இளகுதல்.

5. கரிந்ததுணை—இலை முதலியன கருகிய அளவு.

6. அவை—இல்லமுங் கொன்றையும். முதல்—மரம். அவை மலர்ந்தமையின் என இயைக்க.

[1] குழிதோறுந் தெளிந்துநின்ற நீர்க்கு [2] விருந்தினமாகலாற் பலகாலும் நீர் பருகியும் அப்பால் அவ்வினது [3] அடைகரை விடாது தங்குநின்றனவென அதுவும் பருவந்தொடங்கினமை கூறியவாறாயிற்று. 'கருவி வானம் கதழுறை சிதறி' என்பதூஉம் பலவுமப்புங் குறைபடாது தொக்குநின்ற மேகந் தனது வீக்கத்திடைக் காற்றெறியப்படுதலின் விரைந்து துளி சிதறினவென் றவற்றையும் புதுமை கூறினான்; எனவே, இவையெல்லாம் பருவந்தொடங்கி யணித்தென்றமையின் வற்புறுத்துதற்கு இயைபாயிற்று. 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி' என்பது, [4] கொய்யாத உளை பல்கியும் கொய்த உளை பலகாலுங் கொய்யவேண்டுதலுமுடைய குதிரையென்றவாறு; எனவே, தனது [5] மனப்புகழ்ச்சி கூறியவாறு. அத்துணை [6] மிகுதியுடைய குதிரை பூட்டின வாரொலி விலக்காது [7] மணியொலி விலக்கி வாராநின்றான், அங்ஙனம் மாட்சிமைப்பட்ட மாண்டேராகுதலானென்றவாறு. அதற்கென்னைகாரணமெனின்,— 'துணையொடு வதியுந் தாதுண் பறவை' எனவே, பிரிவஞ்சியென்றவாறு. மணிநாவொலி கேட்பின் வண்டு வெருவுமாகலின் அது கேளாமை மணிநாவினை யிறுக்காமை யாப்பித்து மாண்வினைத் தேரூஉ வாராநின்றனென ' இவையெல்லாந் தலைமகள் வன்புறைக்கேதுவாயின. 'கறங்கிசை விழவி னுறந்தைக் குணது, நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தள்' [எனவே] [8] தெய்வமலை ஆகலான் அதனுள்ளான்ற காந்தளைத் தெய்வப் பூவெனக் கூறி

1. குழி—பள்ளம்.

2. விருந்தினமாகலின் என்பது பழைய பாடம். நீர் விருந்தினதாகலான் என்றிருப்பது நலம். விருந்தினது—புதிது.

3. மான் அடைகரையை விடாதது நீர் வேட்கைபற்றி; அது பின்னும் பின்னும் உண்ணற்பொருட்டுக் கரையை விடாது நின்றது என்க.

4. கொய்யாத உளை—வெற்றி மயிர். கொய்த உளை—பிடர் மயிர்.

5. மனப்புகழ்ச்சி—மனச்செருக்கு. மனப்புகற்சி என்றிருப்பது நலம். தனது—அதனது என்றிருந்திருக்கவேண்டும்.

6. மிகுதி—செருக்கு.

7. மணி—தேர்மணி.

8. இதன் பின்னுள்ள 'எனவே' என்ற சொற் சிதைந்திருத்தல்வேண்டும். முன்னுள்ள மற்றை வாக்கியங்களை நோக்குக.



றவை போதலிற்றாற்போல அவர் புணர்ந்தகாலத்துப் புது ணைக் கமழ்ந்த நின் கைத்தொடிகள் [1] [அவை அரியவாகிப் பிரிந்த காலத்துப்போன்று வடிவொத்த மணங் குறைபட்ட ணைபோயால் அவர் பிரிந்துசெய்த தன்மையினென இதுவும் ன்புறைக்கே உறுப்பாயிற்று.]

1. பகரக்கோட்டில் அமைந்த இவ்வாக்கியம், [ அலவலராகி விரிந்த காலத்துப்போன்று வடிவொத்து மணங்குறைபட்ட துணையேகாண் அவர் பிரிந்து சேய்த்தன்மையின் என இதுவும் வன்புறைக்கே ஏதுவாயிற்று.] என்றிருப்பதே பொருத்தம். ஏனெனின்? நீ புணர்ந்தகாலத்துக் காந்தளின் போது போலப் புதுமணம் கமழ்ந்த தொடிகள் அப்போது நன்றாக அலர்ந்தகாலத்துச் சிறிது மணங் குறைந்திருத்தல்போல மணஞ் சிறிது குறைந்தனவாகவே காணப்படுகின்றன, அவர் பிரிந்து நெடுங்காலமன்மையின் என்று பொருடரலின். போது—சிறிதலர்ந்த பேரரும்பு. நன்றாக விரிந்த காந்தட்பூ—தொடியின் வடிவுக்குவமையாகும். அதுபற்றி 'வடிவொத்து மணங்குறைந்த துணை' என்றுள்.

2. முழுவதும் வந்தன என்றிருப்பது நலம்.





[1] ஓரோவுறுப்புப்பற்றி வருங்கால் அவ்வுறுப்புக்கள் இத்துணை யடியவாகுமெனவும் எல்லாங் கூறுவான் தொடங்கினமையின். அவற்றுள் இது, பெயர் வேறுபாடும் அஃது [2] இனைத்தெனை விரியும் உணர்த்துகின்றது. இவ்வுறுப்பு வேறுபாட்டானே [3] உறுப்பியலாகிய செய்யுளும் இவ்வாறு பெயர்கொள்ள வைத்தானென்பது.

இ—ள் :

ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் வெண்பாவுங் கலிப் பாவுமென நாற்கூற்றது பாக்களவற்று விரி என்றவாறு.

'வகை' என்றதனுன் [4] உறுப்பாகிய செய்யுளின் வேறு பட நோக்கி உணரப்படும் இவ்வுறுப்பெனவும், இவற்றுள் [5] வழக்கிற்குரியன செய்யுட்கு வந்தனவும் [6] வழக்கிற்கேயுரியவாகிக் கூறுபடுவனவும், [7] ஒன்றொன்றனோடு விராய்ப் பிறக்கும் பகுதியுமெல்லாங் கொள்ளப்படும். பாக்கூற்று விரி நான்கெனவே பாவினை உறுப்பாகவுடைய செய்யுட்கு வரையறை கூறிற்றில னென்பது பெற்றாம்; என்னை? [8] அவற்றுப் போதுங்கால் அவற்றது பெயர் வேறுபாடும் அச்சூத்திரங்களான் அறிதுமென் பது; என்றார்க்கு இவை நான்கேயன்றிப் பாவாமாறு கூறானோ வெனின்,—இவையின்றித் தூக்குப் பிறவாமையின் இப்பாவிலக் கணமும் [9] நோக்கோத்தினுட் கூறினுகலான் ஆண்டோதிய வாறே அமையுமென்பது. இக்கருத்தேபற்றி,

---

1. ஓரோவுறுப்பு — ஆசிரியப்பா முதலிய பாவுறுப்புள் ஒன்று.

2. இனைத்து—இத்துணையது.

3. உறுப்பியாகியவென்றிருந்திருக்கலாம்.

4. உறுப்பாகிய—இப்பாவை உறுப்பாகக்கொண்ட; 'உறுப் பியாகிய' என்றிருந்திருக்கவேண்டும்.

5. வழக்கிற்குரியன—அகவல், செப்பல்.

6. வழக்கிற்கே உரியவாகி என்பது செய்யுட்கேயுரியவாகி என்றிருத்தல்வேண்டும். அவை—வஞ்சியும், கலியும். இவ்வியல் அ௲-ம் சூத்திர உரை நோக்குக.

7. ஒன்றொன்றனோடு விரிரய்ப் பிறக்கும் பகுதி—மருட்பா.

8. அவற்றுப் போதுங்கால்—அச் செய்யுட்கண் செல்லுங் கால்.

9. நோக்கோத்தினுள் என்பது தூக்கோத்தினுள் என் றிருத்தல்வேண்டும். பின்வரும் எடுத்துக்காட்டுச் சூத்திரத்தானு மறிக.

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே."
என்றார் இந்நூலின் [1] வழிநூல் செய்த ஆசிரியருமென்பது.

உதாரணம் :—

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்குலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கு
மகில்படு கள்ளியங் காடிறந் தோரே." (ஐங்குறு)

என்பது ஆசிரியப்பா உறுப்பாகி வந்த செய்யுள்.

"வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினும்." (பட்டின. க-உ)

என்பது, வஞ்சிப்பா உறுப்பாகிவந்த செய்யுள்.

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ
லேரிய வாயினு மென்செய்வ—கூரிய
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை." (முத்தொள். எக)

என்பது, வெண்பாவுறுப்பு வந்த செய்யுள்.

"அரிதாய வறனெய்தி" (கலி. கக)

என்பது கலிப்பாவுறுப்பு வந்தது. பிறவும் அன்ன.

இவை இன்ன அடியான் வந்தனவென்பது என்னையறியுமா றெனின்,—அதுவன்றே தூக்குப் பயம்படுகின்ற இடமென்பது. மூன்றுபாவினை நாற்சீரானும், வஞ்சிப்பாவினை இருசீரானும் முச்சீரானுந் தூக்குக்கொண்டு இத் தூக்காமாறு

உணர்ந்துகொள்க.

ஆசிரியம் வெண்பாக்கலி வஞ்சியெனச் சிறப்புமுறையாற் கூறுதசெதன்னையெனின்,—அது,

"முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே." (௯௯௫)

என்பாருமுளர். வஞ்சிப்பா முதற் கூறாமையின் அற்றன்றென் பது. மற்றென் கருதியதெனின்,—ஆசிரியம் வெண்பாவென்று ஓதினவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் உரிமையின் அவையே போலுஞ் சிறப்புடையவென்று கொள்வானுயினும், அற்றன்று; இவை செய்யுளிலக்கணமாகலான் அவை நான்கும் ஒத்த இலக் கணத்த செய்யுளென்றற்கு இம்முறையான் ஓதினுனென்பது.

---

1. வழிநூல் செய்த ஆசிரியர் என்றது நத்தத்தனுரை.



இனி [1] ஒரு சாரார் இந்நான்கனையும் ஒன்று மூன்றாக விகற் பித்துக் கூறுப; என்னை? ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என் றாற்போல; அற்றன்று; ஓரெழுத்து முதல் ஐயெழுத்துச் சீரளவும் உயர்ந்த [2] சீரான் வருஞ் செய்யுட்கு ஒன்று ஒன் றனின் வேறுபட்டொலிக்கும்; அவ்வேறுபாடுதோறும் பா வேறு படா; என்னை?

"எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப." (டுடு)

என்றமையினென மறுக்க; அல்லதூஉம் அங்ஙனம் வேறுபாடு கொள்ளின் ஓரோவொன்று ஐந்தாகலுந் தூங்கலோசை ஆறும் ஏழுமாகலு முடையவென்பது. (சுoடு)

[பாக்கள் அறமுதலிய பொருட்கு முரியவெனல்]

## சுக அ. அந்நிலை மருங்கி னறமுத லாகிய மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

இது, பாவினைப் பொருட்குரியவாற்றான் வரையறை கூறுவான் தொடங்கிப் பொருட்குரிமை பொதுவகையான் உணர்த்துகின்றது; இது பொருளதிகாரமாகலின் இங்ஙனங் கூறுகின்றான்.

இ—ள்: அந்நிலை மருங்கின் — அம் மேலைச்சூத்திரத்துத் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளிடத்து, அற முதலாகிய மும்முதல் — அறம்பொருளின்பமென்பன: அறமுதற் பொருளெனவே, அவையும் அவற்றது நிலையின்மையும் அடங்கும், பொருட்கும் உரியவென்ப—அப்பொருட்கெல்லாம் உரிய நான்கு பாவும் என்றவாறு.

'அந்நிலை மருங்கின்' எனவே, அவை மும்முதற் பொருட்கு உரியவாங்காற் செய்யுளிடத்தன்றித் தாமாக உரிமை பூணுவென்பது. வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின்,—[2] அறமுத லென்பது புறப்பாட்டெல்லையாகக் கூறினனென்பார் நான்கு பொருளுங் கழீஇயுரைப்ப; இனியொருசாரார், மும்முதற்

1. ஒரு சாரார் என்றது சிறுகாக்கைபாடினியார் சங்க யாப்புடையார் யாப்பருங்கலநூலுடையார் முதலியோரைப் போலும்.

2. அறத்தைப் புறப்பாட்டெல்லையாகக் கொள்ள ஓதும் பொருள் பொருளும் இன்பமும் வீடுமென்றும்.

மும்



பொருட்கும் உரியவென்பதனை [1] எச்சப்படுத்திக்கொள்ப; அற்றன்று, உலகிற் பொருண் மூன்றனையும் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான், அவையின்றி வீடு பெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது. அல்லாதார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறானென்ப. அங்ஙனங் கருதின் அறமுதற் பொருளுஞ் செய்யுட்கண் வாராவென மறுக்க. (௧௦௬)

[முதற் பாக்களும் அவற்றுளடங்கும் பாக்களும்]

௪௧௯. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பி
னாசிரி யப்பா வெண்பா வென்றாங்
காயிரு பாவினு ளடங்கு மென்ப. (௧௦௭)

[இன்ன பாவுள் இன்ன பா அடங்குமெனல்]

௪௨௦. ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப.

இவை இரண்டு சூத்திரமும் உரையியைபு நோக்கி உடனெழுதப்பட்டன. மேற் பாவினது விரி நான்கென்றமையின் தொகையுமுண்டென்பது பெற்றும். அவை தொகுங்கால் இரண்டாகித் தொகுமென்பதூஉம், அங்ஙனம் இரண்டாமிடத்தும், யாதானும் [2] ஒன்றடக்கி இரண்டாகா; முதற்பாவென நாட்டப்படுவன இவையெனவும், [3] அவை முதலாகத் தோன்றி ஆண்டடங்குவன இவையெனவும் உணர்த்துகின்றன.

**இ—ள்:** மேற் பாக்கண் விரிந்த பகுதியை உண்மைத் தன்மை நோக்கித் தொகுப்பின் ஆசிரியமும் வெண்பாவுமே யாம். அவற்றுள், ஆசிரியத்து விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும்; வெண்பாவின் விகற்பமாகிக் கலிப்பா விரிந்தடங்கும்; அங்ஙனம் அடங்கி இரண்டாகும் பாவின்றொகை என்றவாறு.

---

1. எச்சப்படுத்துவது உம்மையை.

2. யாதானும் ஒன்றடக்கி இரண்டாகா என்பது ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி என்னும் நான்கனுள் (முறையின்றி) யாதானுமொன்றை ஒன்றுளடக்கி இரண்டாகா என்றபடி.

3. அவை முதலாக—அம் முதற்பாவே முதலாக. முதல்—அடி.



"வீடுபேறு மிகவிழைந்து, நீடுநினைந்து நெடிதிருந்து."

என அகவற் சீரான் வஞ்சித் தூக்குப் பிறந்தது. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என வெண்பாவினுட்

கலிப்பா பிறந்தது. பிறவும் அன்ன.

இனி, ஒருசாரார் வஞ்சிப்பாவினுங் கலிப்பா பிறக்குமாத லின் அது கூறி நிரம்பாதென்ப; (யா. வி. ப. ௨௦௬) என்னை?

" விளங்குமணிப் பசும்பொன்னின்
விசித்தலைத்துக் கதிர்கான்று." (யா. வி. ப. ௨௬௮)

என்னும் இரண்டு வஞ்சியடியும் ஒரு கலியடியாகச் சொல்லப் படுமென்பது அவர் கருத்து; அற்றன்று. அவை [1] யிரண்டு மாதற்கோர் கட்டளையிலவாம். [2] கட்டளையழிந்த கலிப்பாவே யெனினும், வஞ்சியடியாதற்கு ஒரு காரணம் இல்லை; தலை குலுக்கி [3] வலியச்சொல்லினுந் தன்சீரின்மையினென மறுக்க. அல்லதூஉம், ஒன்று ஒன்றனோடு ஒக்குங்காற் பிறப்பித்ததனோடு பிறந்ததொப்ப வேண்டுமென மறுக்க.

" வயலாமைப் புழுக்குண்டும்
வறளடும்பின் மலர்மலைந்தும்." (பட்டின. ௬௪-௫)

என்றக்காற் கலிப்பாவாகச் சொல்லியவழியும் அத்தூங்கலோசை யொடு ஒத்தல்வேண்டும், அதனின் அது பிறந்ததாயினெனமறுக்க. அல்லதூஉம் [4] அவ்விரண்டடியுங் கூட்டிச் சொல்லியவழி அகவ லோசையாதலே வலிது; என்னை? [5] தன்றளை விராய் வந் தமையின்.

---

1. இரண்டும்—இரண்டு பாவும்.
2. கட்டளை—வரையறை.
3. வலியச் சொல்லினும் — வலிய சொல்லினும் என்றும் பாடமுள்ளது. அதுவே பொருத்தம். வலியச் சொல்லினும் என் பதற்கு வலிந்து கோடலாகச் சொல்லினும் என்று பொருள் கொள்ளவேண்டும். அது தலை குலுக்கி என்பதனோடு இயைந்து தகுதியாகப் பொருடராது. அழியச் சொல்லினும் என்றும் பாட முள்ளது. தன்சீர்—வஞ்சிச்சீர்.

4. அவ்விரண்டடி என்றது "விளங்குமணிப் பசும்பொன்னின், விசித்தமைத்துக் கதிர்கான்று" என்பதை. இது ஆசிரியவுரிச்சீர் வந்தமையின் அகவலோசையாதல் வலிது என்க.

5. தன்றளை—ஆசிரியத்தளை.



'பண்புற' என்றதனுன் ஆசிரியப்பாவும் வெண்பாவும் இயல்பெனவும், ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க; [1] எனவே? வெண்பாவென்றதனுன் மூன்று பாவினுந் துள்ளிய கலியோசையும் ஒருவகையான் [2] வெண்பா நெறித்தேயாம், இலக்கணக் கலியோசையன்றாயினுமென்பது கொள்க. (கoஅ)

[வாழ்த்துப் பொருள் நான்கு பாவிற்கும் உரித்தெனல்] சஉக. வாழ்த்தியல் வகையே [3] நாற்பாற்கு முரித்தே.

இது முற்கூறிய 'மும்முதற் பொருட்கண்' (சகஅ) ஒரு சாரானவற்றை வாழ்த்துதல் என்பதோராறும் உண்மையின் அப்பகுதி நான்கு பாவிற்கும் உரித்தென்கின்றது.

நால்வகைப்பட்டது பாவாகலின்

அப்பாவினை நான்கென்

றான். வாழ்த்தியலென்றது 'வகை' என்றதனான் மேற்கூறிய [4] மும்முதற் [5] பொருளின் அறுவகையும் பெரும்பான்மையென: படுமென்பதூஉம், அங்ஙனம் வாழ்த்துங்கால் தனக்குப் பயன் படுதலும் படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலுமென இரு வகையான் வாழ்த்துமென்பதூஉம்,

இனி முன்னிலையாக வாழ்த்து தலும் படர்க்கையாக வாழ்த்துதலும் என இருவகைப்படுமென் பதூஉம் எல்லாங் கொள்க. அங்ஙனம் வாழ்த்தப்படும் பொரு ளாவன:— கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அர

சரும் மழையும் நாடு மென்பன. அவற்றுட் கடவுளை வாழ்த்துஞ் செய்யுள் கடவுள் வாழ்த்தெனப்படும். ஒழிந்த பொருள்களை வாழ்த்திய செய்யுள் அறுவகை

வாழ்த்தெனப்படுமென்பது.

" மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பெளவ முடுக்கை யாக

விசும்புமெய் யாகத் திசைகை யாகப்

1. எனவே என்பது ஏனை என்றிருத்தல்வேண்டும். "ஏனை வெண்பா நெறித்தே" என்று சூத்திரத்துள் வருதலின். நச்சினார்க்கினியருரையும் அவ்வாறே கூறுகின்றது.

2. வெண்பா நெறித்தே என்றது வெண்பா நெறித்தான கலியோசையாம் என்றபடி.

3. நாற்பாக்கும் என்றும் பாடமுள்ளது.

4. மும்முதற் பொருள்—அறம் பொருள் இன்பம்.

5. பொருளின் அறுவகை—பொருளின்கண் வரும் அறுவகை. பொருளின்கண் என்றிருப்பது நலம். அறுவகை என்றது அறுவகை வாழ்த்தினை.



பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே." (நற்றி—கடவுள்)

என்பது, தெய்வவாழ்த்து.

" கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மையி லொண்ணா
ணுதல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்டத் தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா

விலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்
றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
றாவி றாணிழற் றவிர்ந்தன்றா லுலகே." (அகம்—கடவுள்)

என்பதும் அது. முன்னையது தனக்குப் பயன்பட வாழ்த்தியது; பின்னையது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது. பிற பாவினும் மருட்பாவினும் பிற பொருட்கண் வந்த வாழ்த்து வந்துழிக் கண்டுகொள்க.

வாழ்த்தென்பது அறமாகலின் அற முதலாகிய மும்முதற் பொருள்கள் (சகஅ) என்புழி அடங்கும்பிற, இச் சூத்திரம் மிகையாலெனின்,—அற்றன்று; [1] புறநிலை வாழ்த்து முதலியன உள, அவை நீக்குதற்கு இது விதந்தோதினனென்பது. 'வாழ்த்தியல்' என்றதனான், இயற்கை வாழ்த்தெனப்படுவன இவை யெனவும், இனி வரும் புறநிலை வாழ்த்து முதலியன இயற்கை வாழ்த்தெனப்படா; ஒருவகையான் [2] வாழ்த்தின்பாற் சார்த்தி யுணரப்படுவதல்லதெனவுங் கொள்க. (க0கூ)

---

1. புறநிலை வாழ்த்து — தெய்வத்தைப் புற நிறுத்தி ஒரு மகனை வாழ்த்துவது,

2. வாழ்த்தின்பாற் சார்த்தி யுணரப்படுவதல்லதெனவும் என்பது S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பு. அது பொருத்தம்.

[புறநிலை வாழ்த்து இன்ன பாவிற்குரியவென்ல்] சஉஉ. வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.

இது, நாற்பாக்கும் உரித்தன்றி வரையறைப்படும் வாழ்த்து வேறுபாடு உணர்த்துகின்றது.

இ—ள்: நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் புறங்காப்ப, இல்லறம் முதலிய செல்வத்தாற் பழியின்றிப் பூத்த செல்வமொடு புதல்வர்ப் பயந்து, புதல்வரும் இப்பெற்றியராக எல்லீரும் நீடு வாழ்வீராமினென்று தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துவது புறநிலை வாழ்த்து. அங்ஙனம் வாழ்த்திய அச்செய்யுள் கலிப்பாவுறுப்பாகவும், வஞ்சிப்பாவினும் வருதலில்லை என்றவாறு.

தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துதலிற் புறநிலை வாழ்த்தாயிற்று.

“ வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப ”

என்றோதினமையின் வழிபடு தெய்வம் உள்வழியே புறநிலை வாழ்த்தெனப்படுவதென்பது. எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏதுவாகிய கடவு[ள் நிற்ப, அக்கடவு]ளாற் பயன்பெற நின்றோர் சாத்தனை முன்னிலையாக்கி அவற்குக் காரியங் கூறுதலின் இது புறநிலையாயிற்று. ‘கலிநிலை வகை’ என்றதனாற் கலி வகைத்தாகிய பரிபாடற்கும் இஃதொக்கும். [1] இனி கடவுளாற் காக்கப்பட்ட சாத்தனை வாழ்த்தப்படானெனவுஞ் சொல்லுப; அற்றன்று, கடவுள் வாழ்த்தென்றால் அவ்வாறு பொருள் படாமையினென்பது. இவற்றுக்குச் செய்யுள் :

“ இமையா முக்க ணிலங்குசுடர் வாய்ந்த
வுமையொரு பாகத் தொருவன் காப்பநின்
பல்கிளைச் சுற்றமொடு நல்லிநி னந்தி
நீபல வாழிய வாய்வாட் சென்னிநின்
னொருகுடை வரைப்பி னிழல் பெற்றுக்
கிடந்த வெழுகட லுப்ப
ணுகளிரு விசும்பின் மீனினும் பலவே.”

எனவும்,

1. இனிக் கடவுளாற் காக்கப்பட்ட சாத்தனை என்பது கடவுளாற் காக்கப்படச் சாத்தன் என்றிருப்பது நலம்.

56

"திங்க ளிளங்கதிர்போற் றென்றிங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து—திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ."

எனவும் வரும்.

இனி, கலிப்பாவினுள் வருங்காற் கடவுண் முன்னிலையாக வரும்; என்னை?

"தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே."

(சஅ0) என்றமையின் அது 'வாழ்த்தியல் வகை' என மேலேயடங் கிற்று; வஞ்சிப்பாவிற்கும் [1] அவ்வாறு கொள்ளப்படும்.

இச்சூத்திரம் பாவென்னும் உறுப்பிற்குப் பொருள் வரை யறுத்தது. மற்று 'நிற்புறங் காப்ப' என ஒருமை கூறிப் 'பொலிமின்' எனப் பன்மை கூறினதென்னையெனின்,—

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப."

என்றமையிற், புதல்வரொடுங் கூட்டிப் பாட அமையுமென்றற்கு அவ்வாறு கூறினனென்பது. (கக0)

[வாயுறை வாழ்த்து முதலியவும் இன்ன பாவிற்குரியவெனல்]

சஉ௬. வாயுறை வாழ்த்தே யவையடக் கியலே
செவியறி வுறூஉவென வவையு மன்ன.

இதுவும் பாக்களை மூன்றாக வரையறுக்கின்றது.

வாயுறை வாழ்த்தும், அவையடக்கியலும், செவியறிவுறூஉ வும் என மூன்றும் மேலைப் புறநிலை வாழ்த்துப்போல் வாழ்த் துப் பகுதியவாகலும் கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாமையு முடையவென மாட்டெறிந்தவாறு; அவையாமாறு முன்னர்ச் சொல்லும்.

இ—ள் : வாய்—வாய்மொழி; உறை—மருந்து; [2] வாயுறை யென்பது,

சொன்மருந்தெனப் பண்புத்தொகையாம்.
இனி, வாய்க்

கட்டோன்றிய மருந்தென
வேற்றுமைத்தொகையுமாம்: மருந்து

போறலின் மருந்தாயிற்று. 3 அவன்
சிறப்புக் கூறி வழுத்தி

1. அவ்வாறு—மேலேயடங்கியதாக

2. வாயுறை—மெய்ம்மையை (மெய்ப்பொருளை) உறுத்துவது. மெய்யறிவித்தல் என்று உரையாசிரியருங் கூறுவர்.

3. அவன் என்றது பின்வருஞ் சாத்தனை.



ஒருசாத்தற்குப்

பயன்படச் சொல்லினமையின் வாயுறை வாழ்த்தெனப்படுமென்பது. மற்று, 'நிற்புறங் காப்ப'

எனப் புறநிலை வாழ்த்திற்கு இடம் நியமித்தாங்கு இதற்கும் இடநியமங் கூறுரோ வெனின், அது மாட்டேற்றானே அடங்குமென்பது.

அவையடக்கியல்—அவையை வாழ்த்துதல், அவையடக்குத லென்பது, இரண்டாம் வேற்றுமைத்தொகை; அடக்கியலென் பது வினைத்தொகை; தானடங்குதலாயின் அடங்கியலெனல் வேண்டும்; அஃதாவது, அவையத்தாரடங்குமாற்றால் இனியவாகச் சொல்லி அவரைப் புகழ்தல்.

செவியறிவுறூஉ — ஒரு சாத்தற்குச் செவியறிவுபடுத்து அவனை வாழ்த்துதல்; என அவ்வையும் அன்ன—என்ற இம் மூன்றும் அத்தன்மையவேயாம் என்றவாறு.

தெய்வத்தொடு பட்டமையிற் புறநிலை வாழ்த்து முற்கூறி இவை பிற் கூறினான். இவற்றுள், வாயுறை வாழ்த்து முன்னிலைக்குரிமையின் அதன்பின் வைத்தான்; முன்னிலைக்கே உரித் தாயினுஞ் செவியறிவுறூஉவினை ஈற்றுக்கண் வைத்தான், பயம் பெறுவானையே நீ [1] இன்ன குணத்தையாவாயென்று புகழ்பட

வாழ்த்திச் சொல்லப்படுதல் வேறுபாடுடைமையினென்பது. இங்ஙனம் வரையறுக்கின்றது நால்வகைப் பாவாகிய உறுப்பினை நோக்கியாகலின், அவற்றுள் இவ்வுறுப்புடைய நால்வகைச் செய்யுட்கும் [2] இவ்வுறுப்பினதிலக்கணம் எய்துவித்துக்கொள்ளப் படும்; கொள்ளவே, ஆசிரியப் பாட்டும் வெண்பாட்டும் மருட்பா வும் எல்லா வாழ்த்திற்கும் உரியவென்பதூஉம், கலிப் பாட்டும் வஞ்சிப் பாட்டும் புறநிலை முதலிய நால்வகைப் பொருட்கும் உரியவல்லவென்பதூஉம் பெற்றாம்; என்னை?

> "மருட்பா வேனை யிருசா ரல்லது
> தானிது வென்னுந் தனிநிலை யின்றே." (தொ. செய். அடு) என்றமையின்.

(கககு)

---

1. இன்ன வருணத்தையாவாய் என்பது முற் பாடம்; அது இன்ன குணத்தையாவாய் என்று திருத்தப்பட்டது. அங்ஙனம் பாடமுண்மையின். ருவுக்கும் குவ்வுக்கும் வேறுபாடின்மை யின் ருவ்வைக் குவ்வாகக் கொண்டு -வகர அகரஞ் சேர்க்கப்பட் டது. இதுவே உண்மையாதலே நச்சினார்க்கினியருரை நோக்கித்

தெளிக; செவியறிவுறூஉச் செய்யுட்களையு நோக்கி யுணர்ந்து கொள்க. S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்புப் பொருத்தம்.

2. இவ்வுறுப்பினதிலக்கணமென்றது — நால்வகைப் பாவி னிலக்கணத்தை.



[வாயுறை வாழ்த்தாவது இதுவெனல்]

௪௨௪. வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
[1] றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.

இது, முறையானே வாயுறை வாழ்த்துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: முற் பருவத்துக் கைத்தும் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும்போல [2] வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற் பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்கும் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்தெனப்படும் என்றவாறு.

'வாயுறை' என்பது மருந்தாகலான் [3] 'வேம்புங் கடுவும் போல' என்றானென்பது; அதற்குச் செய்யுள் :

" இருங்கட லுடுத்த பெருங்கண் மாநில
முடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவல
ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடு பதியாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
யதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க
ணுப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விளங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முன்னே

---

1. தாங்குதலின்றி—தடையின்றி.

தாங்குதல்—தடுத்தல்.

2. வெய்யவாய் இன்சொல்லினை என்பது வெய்யவாயின சொல்லினை என்று பாடம். அதுவே பொருத்தமாகும். இது எழுதுவோரால் இன்சொல் எனப் பிரித்தெழுதப்பட்டது போலும். வெய்யவாய சொல் என்பது S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் கொண்ட பாடம். அதுவும் பொருத்தமே.

3. வேம்புங் கடுவும்போல என்றதனால் வேம்புங் கடுவும் முதற் கைத்தும் பின் உறுதி பயக்கும் மருந்தாயினாற்போல இச்சொல்லும் முன் வெறுப்பைக் கொடுத்துப் பின் உறுதிபயக்கும் மருந்தாகுமென்பதாம்.

செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே."

(புற. ௩௬௩)

பிறவும் அன்ன.
(௧௧௨)

[அவையடக்காவது இதுவெனல்]

௪௨௫. அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.

இது, முறையானே அவையடக்கிய லுணர்த்துகின்றது.

இ—ள்: [1] வல்லாதன சொல்லினும் அவற்றை ஆராய்ந்து கொண்மினென அவையகத்தாரெல்லார்க்கும் வழிபடு கிளவி சொல்லுதல் அவையடக்கு என்றவாறு.

'வல்லுதல்' என்பது, ஒன்று வல்லனுதல்; ஒருவன் வல்லனவற்றை 'வல்ல' என்பவாகலான் வல்லாதனவற்றை [2] 'வல்லா' என்றுனென்பது. அதற்குச் செய்யுள்,

" இரைத்த விரிக்கிற் றிரைப்பினு வரய்போ
லுரைத்த வுரைபோகக் கேட்டு—முரைத்த
பயன்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சந்
தியன்றவா செய்வார் பலர்."

இது, பூதத்தார் அவையடக்கு. 'அரிறபத் தெரியின்' என்றதனானே, யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடைய கொச்சகவொருபோகினும் அவையடக்கியல் சிறுபான்மை [3] தொடர்நிலைக்கண் வருமெனக் கொள்க. (கக௩)

[செவியுறையாவது இதுவெனல்]

சஉ௬. செவியுறை தானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்ப
ணவிதல் கடனெனச் [4]செவியுறுத் தன்றே,

இஃது, இறுதி நின்ற செவியுறை புணர்த்துகின்றது.

இ—ள்: செவியுறை—செவிமருந்து, அதுவும் ஒப்பினாகிய பெயர்; தானேயென நின்ற ஏகாரம் பிரிநிலை; பொங்குதலின்றி—

1. வல்லாதன—வல்லன அல்லாதன.

2. வல்லா—வல்லாதன (=மாட்டாதன).

3. சிந்தாமணி முதலிய தொடர்நிலை நோக்கி இவ்வாறு கூறினர்போலும்.

4. செவியுறுத்தற்றே எனவும் பாடம்.

பெருக்கமின்றி, புரையோர் நாப்பண் அவிதல் கடன் எனச் செவி
யுறுத்தன்று — பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் கடப்
பாடெனச் சொல்லிச் செவிக்க
ணறிவுறுத்துவது செவியறிவுறூஉ
என்றவாறு.

அஃது அடங்கி வாழ்வார்க்குப் புகழாதலான் வாழ்த்தின்
பாற்பட்டது; அதற்குச் செய்யுள் :

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்."
(புறம். சூ) என்பதனுள்,

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே."
எனவும்,
" என்று,

மின்சொல் [1] லெண்பதத்தை யாருமதி பெரும''
(புறம். ௪௦) எனவும்,

"பணிவுடைய னின்சொல்ல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.''
(குறள். ௯௫)
எனவும் வரும்.

இத்துணையும் பாவினது பெயரும் முறையும் எண்ணும்
பொருட்கு [2]
உரியவற்றுக்கண் வரையறையுங் கூறியவாறு.
(௧௧௪) f.

[குட்டம் இன்னபாவுள் இவ்வாறு வருமெனல்]

௪௨௭. [3] ஒத்தா ழிசையு மண்டில யாப்புங்
குட்டமு நேரடிக் கொட்டின வென்ப.

இதுவும், மேனின்ற அதிகாரத்தாற் பாவிலக்கணமே கூறு கின்றது.

இ—ள்: ஒத்தாழிசைக் கலியின்கண்ணும் மண்டில யாப் பின்கண்ணும் குட்டம் வருங்கால் அளவடிக்குப் பொருந்திவருந் தத்தம் பாக்கள் என்றவாறு.

1. எண்பதம்—காண்டற்கெளிய செவ்வி.

2. உரிய—உரியவாய பாக்கள்.
வரையறை — இன்ன பா இன்ன பொருட்குரிய என்னும் வரையறை.

3. மூன்றையும் எழுவாயாகக் கொண்டனர் நச்சினார்க்கினியர். அதுவே சூத்திரப் போக்கிற்குப் பொருத்தம்.



பாவென்பது, [1] அதிகாரத்தாற் கொள்ளப்படும். ஒத்தாழிசைக்கலி அளவடியுஞ் சிந்தடி குறளடியும் விராய் நிற்குமாயினும் [2] அளவல்லாவடியேனும் அளவடிக்குப் பொருந்துமாற்றாற் பாக் கொளுத்தப்படுமென்பது.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்." (கலி. ௧௧)

என அளவடிக்கண் துள்ளலோசை வந்தது.

"போரவுணர்க் கடந்தோய்நீ
புணர்மருதம் பிளந்தோய்நீ."

(விளக்கத்தனார் பாடல்) எனக் குறளடிக்கண்ணும் அவ்வாறே துள்ளலோசை வந்தவாறு கண்டுகொள்க.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே."

என இஃது இடையடி குறைந்தமையிற் குட்டமெனப்பட்டது. நாற்சீரடி யாத்து வருவன மண்டில யாப்பெனப்படும். அவை போலக் குட்டமும் நேரடிக்குப் [3] பாப் பொருந்தின என்றவாறு.

ஈற்றின்
மண்டிலமோதியதென்னையெனின், — அது சொல்லாக்காற் குட்டமே நேரடிக்கு ஒட்டுவதாவான் செல்லுமாகலி னென்பது. மண்டிலமென்பன :—

"மாருக் காதலர் மலைமறந் தனரே
யாருக் கட்பனி வரலா னாவே
வேரு மென்றோள் வளைநெகி ழும்மே
கூருய் தோழியான் வாழு மாறே."

என்றற்றொடக்கத்தன.
(யா. வி. ப. ௩௯௯)

ஒத்தாழிசையை முன்
வைத்ததென்னையெனின், — மண்டிலம்போல்வனவும் குட்டம்போல்வனவும் கலிப்பாவினுட் சிறு பான்மையென்றற்கென்பது.
[4] அவை அளவடிக்குரிமை யாண்

---

1. அதிகாரம்—பாவதிகாரம்.

2. அளவல்லாவடி—குறளடி, சிந்தடி. இவையே குட்டம். சிந்தடி கலியில் வாராதென்பது இவர் கருத்தாகலின் அது இடையிற்சேர்க்கப்பட்டது. எண்ணுறுப்புப்பற்றி வரும் இருசீரடியைப் பிறர் முச்சீரடியெனினும், இவர் அதனை மறுத்து (457) இருசீரடியென்று கூறலின் அது ஆராயத்தக்கது.

3. பாப்பொருந்தின—பாவாகப்பொருந்தின. பா—ஓசை.

4. அவை—ஒத்தாழிசையும், மண்டிலமும்.



டுப் பெறுதுமெனின்,—அவை
நிலவகையானும்,
தம்மை உறழுங்கால் [1] ஓதிய

“இன்சீர் வகையி னைந்தடிக்கு முரிய.” (தொ. செய். ௫௪)
என்னுஞ் [2] சீர்வகையானும் பெறுதுமென்பது. இதனது பயம்: [3] குறளடி வஞ்சிப்பாப்போலப் பா வேறுபடாவென்பது. ஒட்டி என்றதனன் இத்துணைபோகாது சிறுவரவிற்றாய் வரும் வெண்பாக்கண்ணு மென்பது கொள்க. (௧௧௫)

[குட்டம் ஆசிரியத்துள் ஈற்றடிக்கண்ணும் வருமெனல்]

சஉஅ. குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்.

இது, குட்டத்திற்கோர் சிறப்பு விதி.

இ—ள்: குட்டம் [4] எருத்தடியின்கண்ணும் வரும் என்றவாறு.

மேல் ஆராய்ச்சிப்பட்ட குட்டம் இடை வருதலன்றி ஒரு பாட்டின் ஈற்றயலடிக்கண்ணே வந்தொழிதலும் உண்டன்றே? அதுவும் பாவிற்கேற்பக் குறைக்கப்படுமென்பான்,

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்."

என்றான், குறைத்தற்குக் கூறினனல்லனென்பது. இதனை இவ்வாறு கூறவே மேற்கூறிய குட்டம் ஒத்தாழிசைக்கட்போல இடையிடை வருமென்பது பெற்றாம்.

"உடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே." (அகம். உ)

என, ஈற்றயலடி முச்சீரான் வந்தது. பிறவும் அன்ன. (ககக)

[மண்டிலமும் குட்டமும் வருமிடமிதுவெனல்]

சஉகூ. மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டுஞ்
[5] செந்தூக் கியல வென்மனார் புலவர்.

---

1. ஓதிய நிலம்—குறளடி முதலிய நிலம்.

2. சீர்வகை—சீர்வகையடி. சீர்வகையடியும் அளவடிக்குரிய என்று கூறலின் அதனானும் அளவடிக்குரிமை கொள்ளப்பட்டது என்பது கருத்து.

3. குறளடி வஞ்சிப்பாப்போல வேறுபடா என்றது குட்டம் குறளடியான் வரினும் ஓசை வேறுபடா, அவ்வப் பாவோசையே பெற்று வரும் என்றபடி.

4. எருத்தடி—ஈற்றயலடி.

5. செந்தூக்கு—ஆசிரியம்.

ளியல்] பொருளதிகாரம்

ச்சக்

இது, மண்டிலமுங் குட்டமும் வருமிட
றுதலிற்று.

ணுணர்த்துதல்

இ—ள்: மேற்கூறிய மூன்றனையும் இன்ன பாவென்பது உணர்த்தினன்; அவற்றுள், இறுதி நின்ற மண்டிலமுங் குட்டமும் ஆசிரியப்பாவினை உறுப்பாகவுடைய என்றவாறு.

எனவே, ஒத்தாழிசையாகிற் கலிப்பாவினை
வுடைத்தென்பது பெறுதும்; என்னை?
உறுப்பாக

"ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே

கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே." (தொ, செ. கரு௦)
என்பவாதலான்.

மேற்கூறிய மண்டிலவாசிரியத்தினை, நிலைமண்டிலமெனவும் அடிமறிமண்டிலமெனவும் பெயரிட்டு வழங்குவாரும் உளர் (யா. வி. சூ. எரு—௪); நின்றவாறு நிற்றலும், அடிமறித்துக் கொள்ளினும் பொருள் திரியாது நிற்றலுமுடையவென்பது போலும் அவர் கருத்து. அடிமறித்தல் பொருள்கோட் பகுதியாகலான் அஃதமையும்; அங்ஙனங் கொள்ளின் நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியானுஞ் செய்யுள் வேறுபடுமென மறுக்க. இனி, குட்டமும் இருவகைத்தென்ப; இணைக்குறளாசிரியப்பா நேரிசையாசிரியப்பாவென: அவை அவ்வாறு கொள்ளின் (யா. வி. சூ. எக—௨) [1] இழுக்கென்னை?

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்." (தொ. செ. ககசு)
என்று [2] இருவகையாற் கூறினமையின் என்றலுமொன்று. இனி ஒன்றாக வழங்குதலே வலியுடைத்து.

"குட்ட மெருத்தடி யுடைத்து மாகும்."
என ஒருமை கூறியவதனான் [3] ஒழிந்தவழி இரட்டித்துக் குறைய வேண்டுமென்பது கொள்க. *மற்று,

வாச் செய்புண்மேலுஞ் செல்லுமெனவும் உரைப்ப; பாவும் இனமுமெனப் பகுத்துரைப்பார்க்காம், அது பொருளாகவிதனை மறுக்க; அல்லதூஉம், ² தூசாவெவ்வேறே வருவது ஒத்தாழிசை யெனப்படாவென்பது. செந்துறைக்கண்ணது ஆசிரியப்பாவென்ற வாறு; பாவினோடுந் தூக்கெனவுஞ் சொல்லுப. 'இயல' என்பது அப்பாவானே நடக்குமென்றவாறு. இதனுள் இன்ன செய்யுட்கு உரித்தெனப் பாவினை வரையறுத்திலராம். (ககச)

[வெண்பா யாப்பான் வருஞ் செய்யுள் இதுவெனல்] ௪௨௦. நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின.

இது, வெண்பாவென்னும் உறுப்பினை இன்னுழிப்பா வெலாம் பொருளுஞ் செய்யுளுட்பற்றி வரையறுக்கின்றது.

இ—ள்: நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் கைக்கிளையும் பரிபாடலும் அங்கதச் செய்யுளுமென ஐந்தும் தம்மின் ஒத்து வெண்பாவென்னும் உறுப்பினுள் வகுக்கப்படும் என்றவாறு.

2. அவை என்பது வளை என்றிருத்தல்வேண்டும். நச்சினார்க்கினியருரை நோக்குக.

3. கலிவெண்பாட்டு கைக்கிளைப் பொருளில் வருமென 472-ம் சூத்திரவுரையுட் கூறலின் கலிப்பாவின்பாற்படுமெனக் கூறினர்போலும். ஒப்புமை—கலிவெண்பாட்டுரை.

4. அல்லாதார்—தொல்காப்பியரல்லாதார். அவர் யாவர் என்பது புலப்படவில்லை.

5. அவ்வாறு—தனிச்சொற் பெற்று. பரிமாறல்—கொடுத்து மாறல்.

6. எல்லாம் வெண்பாயாப்பில என்பதனைச் செயற்படுத்து அவற்றுள் எனப் பிரிக்க. செயல்—செய்கை. யாப்பு என்பதைப் பாட்டு என்று கொள்ளாது யாத்தல் என்று பொருள்கொள்க என்பது கருத்து. செய்கை—தொழில்.



பின' என்பதனை செயற்படுத்தவற்றுள்

அங்கதமும் கைக்கிளையும், மற்றப் பாக்களும்

உறுப்பாக வருமென்பதுபடும். (ககஅ)

[கைக்கிளைச் செய்யுள் இவ்வாறு

வருமெனல்]

சாநக. கைக்கிளை தானே வெண்பா வாகி
யாசிரிய வியலான் முடியவும்

பெறுமே.

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதி

யுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: வெண்பா உறுப்பாகி

வருமென்றான், அற்றன்றி

வெண்பாவினோடு ஆசிரியப்பாவும்

உறுப்பாகக் கைக்கிளை வரும்

என்றவாறு.

அங்ஙனம் வருவது மருட்பாவாகலாற் கைக்கிளைப்பொருளே

மருட்பாவிற்குரித்தென்பது பெற்றாம்;

பெறவே,

" கலிநிலை வகையும் வஞ்சியும் பெறா." (தொ.

செ. ககo)

என்புழி, விலக்கப்படாத ஆசிரியப்பாவும்

வெண்பாவும் உறுப் பாக வருதலின்,

[1] வாழ்க்கியல்வகையும் புறநிலை வாழ்த்து முதலாயினவும் [2] கைக்கிளைப் பொருளாக வரும் மருட்பாவென்பது பெற்றாம்.
கைக்கிளையதிகாரப்பட்டது கண்டு அதனை ஈண்டுக் கூறினான். ஒழிந்த புறநிலை வாயுறை செவியறிவுறூஉக்களும் பொருளாக மருட்பா வருமென்பது முன்னர் அளவியலுள் (சஎஉ) சொல்லும். இவற்றுக்கெல்லாஞ் செய்யுளும் ஆண்டுக் காட்டுதும்.
(கககூ)

[பரிபாடல் இவ்வாறு வருமெனல்]

சகூஉ. பரிபா டல்லே தொகைநிலை விரியி
னிதுபா வென்னு மியனெறி யின்றிப்
பொதுவாய் நிற்றற்கு முரித்தென
மொழிப.

இது, பரிபாடற்காவதோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

1. வாழ்த்தியல்வகையும் என்பது வாழ்த்தியல் வகையுள் என்றிருத்தல் நலம்.

2. கைக்கிளைப் பொருளாக — கைக்கிளையும் பொருளாக என்றிருத்தல்வேண்டும். பின்வரும் வாக்கியத்தாலறியப்படும்.



இ—ள்: பரிபாடல் [1] வெண்பாவுறுப்பாக இன்னபாவென்ப துணராமைப் பொதுப்பட நிற்றற்கும் உரித்து என்றவாறு.

"மண்ணார்ந் திசைத்த முழவொடு கொண்டதோள்
[2] கண்ணா துடன்விழூஉங் காரிகை கண்டார்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு." (கடவுள் வாழ்த்து) எனப் பரிபாடல் வெண்பா உறுப்பாக வந்தது.

"ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலைத்
தீயுமிழ் திறலொடு முடிமிசை யணவர."

(பரி. க)

என்பது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராய்வந்து துள்ள லோசைபடச் சொல்லவும்படுதலின்,

'இதுபா வென்னு மியனெறி யின்றிப் பொதுவாய் நின் றது' எனப்படும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று. மற்றிது கலிப் பாட்டிற்கும் ஒக்கும் பிறவெனின்,— 3

ஒவ்வாதாகாதே? ஆசிரி யன் இவ்வாறு கூறினமையினென்பது ; அல்லதூஉங் கலிக்கு ஓதிய இலக்கணமின்மையானும் பரிபாடலெனவேபடும் பெரும் பான்மையுமென்பது. தொகுத்து விரித்தபா நான்கனுள்ளும் வேறுங்கால் அது வெண்பாவினான் யாக்கப்படாது பொதுவகை யான் யாக்கப்படுமென்றவாறு.

[பரிபாடற்குரிய உறுப்பும் பொருளுமுணர்த்தல்]

சஙங. கொச்சக மராகஞ் சுரிதக மெருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.

இது, மேற் கூறியவகையாற்

பரிபாடற்கேற்ற பாவுறுப் பிணையெடுத்து விரிகூறி இத்துணை உள்ளுறுப்புடைத்தென்கின் றது. உள்ளுறுப்பென்பன முப்பத்துநான் [4]குறுப்பான் எண்ணப் படாவோவெனின்,—அவை ஏல்லாச்செய்யுட்கும் பொதுவாகலான்

1. வெண்பா உறுப்பாக என்பது—வெண்பா உறுப்பாக வருதலேயன்றி என்றிருத்தல்வேண்டும். நச்சினார்க்கினியர் உரை நோக்குக.

2. கண்ணொடுடன் விழூஉம் எனவும் பாடம்.

3. ஒவ்வாதாகாதே என்றது ஒவ்வாதல்லவா என்றபடி. ஆகாதே என்ற இடைச்சொல் அல்லவா என்னும் பொருளில் வந்து வழங்குவதை இறையனாரகப்பொருளுரையிற் பரக்கக் காணலாம.

4. உறுப்பான்—உறுப்போடு.



அவற்றோடெண்ணாது இவற்றை இப்பாவிற்குறுப்பாகக் கூறினு னென்பது. மேல் வருகின்ற கலியுறுப்பிற்கும் இஃதொக்கும்.

இ—ள் : செப்பிய நான்குறுப்புங் கலிக்குறுப்பாகச் சொல் லப்பட்டவகையானே வரும் அவை ஈண்டும் என்றவாறு.

தனக்கு என்றதனுன் அவையல்லா உறுப்புளவென்பது முன்னர்ச் சொல்லும்.

" சொற்சீரடியும்," (தொ. செ. கஉஉ)

என்புழிக் காண்க,

கொச்சகமென்பது, ஒப்பினுகிய பெயர் ; ஓராடையுள் ஒரு வழியடுக்கியது கொச்சகமெனப்படும்; அதுபோல ஒரு செய்யுளுட் பல குறள் அடுக்கப்படுவது கொச்சகமெனப்பட்டது. குறிலிணை பயின்ற அடி அராகமெனப்படும். சுரிதகமென்பது, அடக்கியலெனப்படும். எருத்தென்பது, தரவு. இவை நான்குறுப்பாக வருவது பரிபாடலென்றவாறு. பெரும்பான்மையுங் கொச்சகவுறுப்புப் பயின்று வருதலின் அதனை முன் வைத்தான். 1 அராகம் எழுவாயாகாமையின் அதனை இடை வைத்தான். சுரிதகமென்பது, எஞ்ஞான்றும் ஈற்றதாகலான் அதனை அதன் பின் வைத்தான். எருத்தினை ஈற்றுக்கண் வைத்தான், அதனை யின்றியும் வரும் பரிபாடலென்றற்கும் 2 இஃது இடைவருமென் றற்குமென்பது.

உதாரணம் :—

" வானு றெழிலி மழைவள நந்தத்
தேனுர் சிமைய மலையி னிழிதந்து
நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானா
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
விருந்தையூ ரமர்ந்த செல்வநின்
றிருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுதே."

(இது தரவு.)

" ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழம்
பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர் போங்கி
மணிநிறங் கொண்ட மலை.

ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
வண்ண மரையிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருக்குங் கயல்.

---

1. எழுவாய்—முதல் வருவது.

2. அஃது என்றும், இடையும் வரும் என்றும் இருத்தல் வேண்டும்.



ஒருசார், சாறுகொ ளோதத் திசையொடு மாறுற்
றுழவி னோதை பயின்றறி விழந்து
திரிநரு மார்த்து நடுநரு மீண்டித்
திருநயத் தக்க வயல்.

ஒருசார், அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா வந்தண ரீண்டி
யறத்திற் றிரியா பதி.'' (இவை நான்கும் கொச்சகம்.)

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்.
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களமரு ழுபவர் கடிமறு கொருசார்
ஆங்க, அனையவை நல்ல நனிகூடு மின்ப
மியல்கொள நண்ணி யவை.'' (இது கொண்டுநிலை.)

'' வண்டு பொரேரென வெழ
வண்டு பொரேரென வெழுங்
கடிப்புகு வேரிக் கதவமிற் றோட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மிளிர்மின் வாய்த்த விளங்கொளி நுதலார்
ஞர்களிற் றன்ன செம்ம லோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யோங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோ டளைஇப் புகழணிந் தோரு
நலத்தோ டளவிய நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரு
நடைமட மேவிய நாணணிந் தோருங்
கடனிரை திரையிற் கருநரை யோருஞ்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரு
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
வினைந்தார் வினைவின் விழுப்பயன் றுய்க்குந்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு
மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்
நனைகெழு செல்வ னகர்.

வண்டொடு தும்பியும் வண்டொடையா மூர்ப்ப
விண்ட கடகரி மேகமொ டதிரத்
தண்டா வருவியோ டிருமுழ வார்ப்ப
வரியுண்ட கண்ணுரோ டாடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ டாடலுந் தோன்றக்
கூடு நறவொடு காமமகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவு மிவைபோல் வனவு
மனையவை யெல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர்.'' (இவையும் கொச்சகம்.)



"மணிமரு டகைவகை நெறிசெறி
யொலிபொலி யவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் துணையிணை தெளியொளி திகழ்ஞெகிழ்
தெரியரி மதுமகிழ் பரிமலர் மகிழுண்கண் வாணுதலோர்
மணிமயிற் றெழிலெழி லிகன்மலி திகழ்பிறி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச வல்லலிகப்பப் பிணிநீங்க
நல்லவை யெல்லா மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்.''

(இது முடுகியல்.)

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு
மமிழ்ந்து கடைய விருவயி னுணைஇ
மிகாஅ விருவட மாழியான் வாங்க
வுகாஅ வலியி னொருதோழங் கால
மறாஅ தளிந்தாருந் தாம்.
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅ வெதிர் பூண்டாருந் தாம்.
மணிபுரை மாமலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாம்.
பணிவில்சீர்ச் செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி யிமயவி லுணைஇத்
தொல்புகழ் தந்தாருந் தாம்." (இவையும் கொச்சகம்.)

"அணங்குடை யருந்தலை யாயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுது
மெல்லேம் பிரியற்கெஞ் சுற்றமொ
டொருங்கே."

(என்பது ஆசிரியச் சுரிதகம்.)

"அறவோ ருள்ளா ரருமறை காப்ப."
என்னும் பரிபாடலுள்,

"செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு."

இது, வெள்ளைச் சுரிதகத்தான் இற்றது.

"காமங் கண்ணிய நிலைமைத் தாகும்."

என்பது, காமப்பொருள் குறித்து

வருமென்றவாறு. கண்ணிய
என்றதனானே, [1] முப்பொருளுமன்றிக் கடவுள் வாழ்த்தினும் மலை விளையாட்டினும் புனல் விளையாட்டினும் பிறவுமெல்லாங் காமங்கண்ணியே வருமென்பது. என்னை?

1. முப்பொருள்—அறம் பொருள் இன்பம்.



"எல்லேம் [1]பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே."
எனத் துணைபிரியாமை காரணமாகத்
தொழுதேமென்றலின்.

"காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் றாணிழ லெழுதே."
(பரி-க: சுஉ - ரு)

என்பதும் அது,

இனிச் செப்பிய நான்கு என்றது,[2] எண்ணப்பட்ட நான் கனையுமன்று; அன்னவற்றோடு மேற்கூறிய நான்கு பாவும் இடை வந்து விரவுமென்பது. அதுவும் நோக்கிப்போலும் பரி பாடல் என்றது,

" எரிமலர் சினை இய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமிர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி விளங்கும் பூணினை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை

.........................................................

நாவ லந்தண ரருமறைப் பொருளே." (பரி-க: கூ-கந) என ஆசிரியம் வந்தது.

" நின்னெக்கும் புகழ்நிழலவை."
(பரி-க: ருரு) என்பது வஞ்சித்தூக்கு. பிறவும் அன்ன காட்டுப. அது பொது வாய் நிற்றலும் உரித்தென்றதனன் அடங்கும்.

இனி, செப்பிய நான்கு என்றதனன்

அராகமின்றி வருதலும் கொச்சகம் ஈற்றடி குறைந்து வருதலும், அவ்வழி அசை சீராகி இறுதலும், மேற் கலிப்பாவிற்குச் செப்பிய சுரிதகமாதலுங் கொள்க.
(கஉக)

[சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்குறுப்பாமெனல்] சஙச. சொற்சீ ரடியு முடுகிய லடியு

மப்பா நிலைமைக் குரிய வாகும்.

இதுவும் பரிபாடலுறுப்பு உணர்த்துகின்றது.

---

1. பிரியற்க என்றது காமங்கண்ணிற்று.

2. எண்ணப்பட்ட நான்கனையுமன்று—கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்து என்று எண்ணப்பட்ட நான்கனையு மாத்திர மன்று.





இ—ள்: எண்ணப்பட்ட இரண்டும்

பரிபாடற்குள்ள உறுப் பாய் வரும் என்றவாறு.

சொற்சீரும் முடுகியலுமென்னுது அடியென்றதனுன்[1] மேற் கூறிய அடியொடு தொடர்ந்தல்லது வாராவென்பதாம். சொற் சீரடியாமாறு முன்னர்ச் சொல்லும். முடுகியலடியென்பது. முடு கியலோடு விராய்த்[2] தொடர்ந்தொன்றுகிய வெண்பாவடி. அராக மென்பது, தாமே வேறுசில அடியாகி வருவன. இவையன்றிக் குறிலிணை பயில்வன முடுகியலெனவும், குறிலிணை விரவி வரு வன அராகமெனவுஞ் சொல்லுவாரும்[3] உளர்.

"முடுகுவண்ண,
மடியிறந் தோடி யதனோ ரற்றே." (தொ. செ. உகூ) என்பவாகலின் மேலதேயுரை.

உரிய என்றதனுன், இத்துணை பயின்றுவாரா இவ்விரண்டுங் கலிப்பாவினுளென்பது கொள்க. எனவே, அராகவுறுப்புத்[4] தேவ பாணிக்கல்லது அக் கலிக்கண் யாண்டும் வாராதாயிற்று. (கஉஉ)

[சொற்சீரடியாமாறும் அதன் வகையும்]

சகரு. கட்டுரை வகையா னெண்ணொடு
புணர்ந்து

முட்டடி யின்றிக் குறைவுசீர்த்
தாகிய

மொழியசை யாகியும் வழியசை
புணர்ந்துஞ் சொற்சீர்த் திறுதல்
சொற்சீர்க் கியல்பே.

*மேலெண்ணப்பட்ட சொற்சீரடியாமா
றுணர்த்துதல் நுத
லிற்று.*

*இ—ள்: சொற்சீரடி இக்கூறிய
நான்குவகையாலும் வந்து
பயிலும் என்றவாறு.*

*[5] கட்டுரைவகையான் எண்ணொடு
புணர்ந்தது :*

---

1. மேற்கூறிய அடி—வெண்பாவடி.

2. தொடர்ந்தொன்றுகிய என்பது முற்பதிப்புப் பாடம். அது, தொடர்ந்தொன்றுகிய என்று S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் காணப்படுகின்றது. அது, பொருத்தமே. முடுகு வண்ணச்-சூத்திரம் நோக்குக. (தொல். செய். உகக)

3. உளர் என்றது—இளம்பூரணரை.

4. தேவபாணி—கடவுள் வாழ்த்துச்

செய்யுள்.

5. கட்டுரை—பாட்டன்றி அதுபோலத் தொடுத்துச் சொல்லும் வாக்கியம். இது பேச்சு எனப்படும். எண்ணொடு புணர்



சருக

" வடவேங்கடந் தென்குமரி
யாயிடை."

(பாயிரம்) எனவும்,

" அஇஉ,
எஒ என்னு மப்பா லேழும்."

(தொ. எழு. ந.) எனவும் இவை கட்டுரைக்கட் சொல்லுமாறுபோல எண்ணின மையிற் கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தன; இனி, 1 'முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகும்' இயல்பாய் வருமாறு:—

" நின்னொக்கும் புகழ்நிழலவை."

(பரி—க: ருரு) எனவும்,

" கறையணி மிடற்றினவை
கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை."

எனவும் வரும்.

'முட்டடியின்றி' என்ற இவை 2 தூக்குப்பட்டு முடியு மடியல்ல என்றவாறு.

மேற்காட்டிய பரிபாடற் செய்யுளுள் 'ஒருசார்' என்பது
3 ஒழியசை; என்னை? அது சீரகவின் அகவொடு சில அசை கூடியன்றி அசையெனப்படாமையின். 'ஆங்கு' என வருந் தனிச்சொல் 4 வழியசையெனப்பட்டது, என்னை? அஃது,

தல்—எண்ணுதலோடு பொருந்தல். வடவேங்கடந் தென்குமரி என்பது, வடவேங்கடமும் தென்குமரியும் என எண்ணுதற்கண் வந்தது. அ இ உ எ ஒ என்பனவும் அகரமும் இகரமும் உகரமும் எகரமும் ஒகரமும் என எண்ணுதல் குறித்து வந்தன.

1. முட்டுதல்—நிறைதல். முட்டடி—நிறைந்த அடி. இது முற்றடி எனவும் பாடம். எனினும், குறைவு என்பதற்கு முட்டு என்பது முரணாய் நிற்றலின் அப்பாடமே சிறப்புடையது. காட்டிய உதாரணங்களில் சீர் குறைந்து அடி நிறைவுபெறுமை காண்க.

2. தூக்குப்படுதல்—அவ்வப் பாவுக்குரிய

ஓசையைக் காட்

டற்கு அடி முட்டத் துணிக்கப்பட்டு நிற்றல்.

3. ஒழியசை—தன்னை யசையென்று பகுத்துச் சொலற்

கேற்ற சீர்கள் வாராமையால் அசைத்தன்மை ஒழிந்து நிற்பது. ஒருசார் என்பதனோடு வேறுஞ் சீர்கள் வந்து அடி நிரம்பிற் ருன் அது அசையெனப் பிரிக்கப்படும். அவ்வாறின்மையின் ஒழியசையென்ருயிற்று.

4. வழியசை—தன்னொடு பின்னும் அசை வந்து சேர்தற் குரியதாய் நிற்பது. ஒழியசைபோலத் தனியசையாய் நில்லாது பின்னும் சில அசையொடு புணர்ந்து வருவது வழியசை என்பர் நச்சினார்க்கினியர்.



அசையாய் நின்று சொற்சீரடியாகலின். மற்றுச் [1] சொற்சீரடியினை அசையென்றதென்னையெனின், இயலசை தானேயும் ஒழியசையாய் நிற்குமென்றற்கென்பது.

"ஒருஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்

கூடியரோ வாற்று தவர்.''

என்புழி 'ஒரூஉ' என நின்ற இயலசைகானே (கலி. அஅ) ஒழியசையாய் நின்றது.

"உருவது போலுமென் னெஞ்சு; [2] எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்."

(கலி. நந.)

என்பது, வழியசைபுணர்ந்த சொற்சீரடி; என்னை? 'எள்ளி' என நின்ற சீரின்வழித் 'தொகுபு' என வந்தவசை, 'உரு வதுபோலும்' என்னுந் தொடையொடு பொருந்தி,

"உருவது போலுமென் னெஞ்செள்ளித்
தொகுபுடன்."

எனப் புணர்ந்து நின்றாற்போல்வதோர் சுவைமை செய்து நின்றமையின். கொச்சகம் [3] இடைநிலைப் பாட்டெனப்படுமையின்.

"தொகுபுட னாடுவ போலு மயில்."

என நாற்சீரடியானும் வருவதாயிற்று, வரையறையின்மையின்.

இங்ஙனம் வந்தமையின் சொற்சீரடி மேல் [4] எண்ணவும்படும்.

இவை [5] கலிக்கண் வருங்கால் ஒத்தாழிசைக்கண் முடுகியலடி வாரா

தென்பதூஉம், சொற்சீரடி வருமொன்றுத் தனிச்சொல்லாகியன்றி

வாராதென்பதூஉம், உறழ்கலிக்கண்ணும் முடுகியலடி உரித்தன்

றென்பதூஉங் கொள்க.

---

1. சொற்சீரடியினை அசையென்ற தென்னையெனின் என்னும் வினா ஒழியசை வழியசை என்னும் இரண்டனையும் சேர்த்து வினாவி நின்றது; சீரன்றித் தனியசையும் ஒழியசையாய் நிற்கும் என்றற்கு என்பது அதற்கு விடை. ஒரூஉ என்னும் இயலசை

யாகிய தனியசை ஒழியசையாக வந்தமை காண்க.

2. எள்ளி என்னும் சீரை சொற்சீரடியாக்காது மேனின்ற

முச்சீர் அடியோடு கூட்டி நாற்சீரடியாக்க, உருவது என்பதற்

குத் தொகுபு என்பது எதுகையாயமைந்து சுவைசெய்து நிற்கு

மென்றபடி. வழி—பின்.

3. இடைநிலைப் பாட்டு—தாழம்பட்ட ஓசையின்றி வரும் தாழிசைப் பாட்டு.

4. எண்ணவும்படும் என்றது அளவியலிற்படுத்து எண்ண வும்படும் என்றபடி.

5. இவை—சொற்சீரடி. ...ரியல் ]

## பொருளதிகாரம்

சசுக

சொற்சீர்த்திறுதலென்பது :— ஓரெழுத்தொருமொழி முதலிய சொற்களெல்லாம் தாமே சீராய் அடியிறுதிக்கண் அடிப்பட முடிந்து அடியாதலிலக்கணத்த அவையென்றவாறு.

இனி, ஒழியசையினையும் வழியசையினையுங் [1]கூ(றி)னென் ஞமோவெனின்,—

"சீர்கூ ஞத ணேரடிக் குரித்து."

(தொ. செ. சகூ)

என்றமையின் ஈண்டு அசை கூஞகாது; அல்லதூஉம், ஆண்டுக் கூனெனப்பட்டதும் ஈண்டுச் சொற்சீரடியெனப்பட்டு அடங்கு [2]மென்பதனு முடைத்தென்பது. இவையெல்லாம் பரிபாடற் கண்ணதே கூறிஞரினும் ஒழிந்த பாவினுட் சொற்சீரடி

வருமென விதந்தவழி, [3] அதுவே இலக்கணமாக வரும் ஆண்டு மென்பது. 'இயல்பு' என்றதனானே யாண்டு வரினும் அஃதிலக் கணமென்பது பெற்றாம்; அல்லதூஉம்,

" தொகைநிலை விரி." (தொ. செ. கஉ0)

என்ற மிகையாற் பரிபாடற்கு உரியவாகக் கண்டுகொள்க. அவை யாவையோவெனின்,— [4] முடுகியலடி மேற்காட்டிய பரிபாடலுள்,

" மணிமருடகை."

(ப—1140)

என்பது முதலாகக்

" குளவா யமர்ந்தா னகர்."

என்பதீறாகக் கண்டுகொள்க.

(கஉரு)

[ அங்கதச் செய்யுளின் வகை ]

சரு௬. அங்கதந் தானே யரிறபத் தெரியிற்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே.

இது, முறையானே அங்கதச்செய்யு ளுணர்த்துதல் நுதலிற்று.

1. கூறிஞனென்ஞமோ" எனின் என்பது கூனென்ஞமோ எனின் என்றிருத்தல்வேண்டும். மூன்று பதிப்பிலும் பிழையாய் உளளது.

2. என்பதனுமுடைத்து என்பது—என்பது என்றவரையி விருந்தாலமைவும் மேலுள்ளன வேண்டியதின்று. இதில் யாதோ பிழையுளது.

3. அதுவே என்பது இதுவே என்றிருப்பது நலம் இங்கே சொல்லிய சொற்சீர்க்குரிய இலக்கணம்.

இது—

4. அடிக்கு என்பது முற்பதிப்பிலுள்ள பாடம். அடிக்கு உதாரணம் என்றிருக்கிற் பொருந்தும்,

இஃது



இ—ள்: அது செம்பொருள் கரந்தது என்று இருவகைத்தாம் என்றவாறு.

அங்கதமென்பது வசை ; அதனை இருவாற்றாற் கூறுக

வென்பான் இது கூறினான். அவையாமாறு முன்னர்ச் சொல்லும். 'அரிறப' என்றலெதன்னையெனின்,—அவை புகழ்போன்று வசையாதலும் பட்டுத் தோன்றும் மயக்கமுடையவாகலின் மயக்கமறத் தெரியினென்றவாறு.

" நூற்றுவர் தலைவனைக் குறங்கறுத் திடுவான் " (கலி. ருஉ) என்பது, புகழ்போன்று வசையாயிற்று; என்னை? கொன்றானாயினுங் குறங்கினைகத்துத் தண்டுகொண்டு எற்றுதல் குற்றமாகலின் என்பதறிக. கொடைமடங் கூறுதல், வசைபோன்று புகழெனப்படும். அஃது அங்கதமாகாதென்பான் 'அரிறப' என்றானென்பது; பிறவும் அன்ன. (கஉச)

[செம்பொருளங்கதம் இதுவெனல்]

சஙஎ. செம்பொரு ளாயின வசையெனப் படுமே.

இது, முறையானே செம்பொரு ளங்கருமுனைர்க்குதல் நுதலிற்று.

இ—ள்: வாய் காவாது சொல்லப்பட்ட வசையே செம் பொரு ளங்கதமெனப்படும் என்றவாறு; அஃது,

"இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற—மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள."

என்பது [2] ஏழிற்கோவை அவ்வை முனிந்து பாடியது.

"எம்மிகழ் வோரவர் தம்மிகழ் வோரே
யெம்மிக ழாதவர் தம்மிக ழாரே
தம்புக ழிகழ்வோ ரெம்புக ழிகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினி
யாஅய் வேகன் பெருந்தோன் மலையனென்
றெழுவரு ளொருவனு மல்லே யதனு

1. குறங்கினைக் கதத்தண்டு கொண்டு எற்றல் எனவும் பாடம்.

2. ஏழிற்கோவைஷ் என்று S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிலுமுள்ளது. அதுவே பொருத்தம். நச்சினார்க்கினியருரை நோக்குக.

னின்னை நோவ தெவனோ
யட்டார்க் குதவாக் [1] கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே தீம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் [2] தேளத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுக் கேனே."

எனவும் வரும்.

கலிப்பாட்டினுள் வருவன [3] வசைக்கூத்தினுட் கண்டு கொள்க.

" அறச்சுவையிலன் வைவெயிற்றினன்
மயிர்மெய்யினன் மாசுடையினன்
பொய்வாயாற் புகழ்மேவலன்
மைகூர்ந்த மயலறிவினன்
மேவருஞ் சிறப்பி னஞ்சி
யாவரும் வெரூஉ மாவிக் கோவே.

என்பது, வஞ்சிப்பாட்டு. இது வெண்டாவினுள் வருதலே பெரும்பான்மை. (சுஉ௫)

[பழிகரப்பங்கதம் இதுவெனல்]

சுஉ௬. மொழிகரந்து சொல்லினது பழிகரப்

பாகும்.

இது, பழிகரப்பங்கதம் உணர்த்துகின்றது.

இ—ள்: வசைப்பொருளினைச் செம்பொருள் படாமல்[1] இசைப் பது பழிகரப்பங்கதம் என்றவாறு.

மாற்றரசனையும் அவனிளங்கோவினையும் வசை கூறுமாறு போலாது தங்கோனையும் அவனிளங்கோனையும் வசைகூறுங் கால்[5] தாங்கியுரைப்பர்; [6] அவைபோலப் பழிப்பனவென்ற வாறு; அது,

" நன்றாய்ந்த செங்கோலாய் நாடிய நின்னிளங்கோக்
குன்றெறிந்த சேந்த னெனமதியா—வன்றிறத்து
நின்றொலிக்குந் தானையோ டெல்லா நிகர்த்தார்மேல்
வென்றெறியும் வேலே விடும்."

1. கட்டி—ஒரு சேனைத்தலைவன்.
2. தேளம்—இடம்.
3. வசைக்கூத்து—ஒரு நாடக நூல்போலும்.
4. இசைத்தல்—சொல்லுதல்.
5. தாங்கி—பாதுகாத்து.
6. அவை—தாங்கியுரைப்பன.

என வந்த [1] வெண்டொடைச் செய்யுளுட் கண்டுகொள்க. இதனுள்,

" வென்றெறியும் வேலே விடும்."

என்பது, [2]'முனையகத்துப் படையோடும்' என வசை கூறுவான் [3]'குன்றெறிந்த சேந்தனை' ப்போல எறிந்தானெனப் புகழ்ந் தான்போலக் கூறினனென்பது.

" இன்றுள னாயி னன்றும னென்றநின்
னாடுகொள் வரிசைக் கேற்பப்
பாடுவன் 'மன்னல் பகைவரைக் கடப்பே."

(புற. ருந) என்பதும் அது.
(கஉகூ)

[அங்கதச் செய்யுள் இவ்வகையானும் வகுக்கப்படுமெனல்]

சஙகூ. செய்யுட் டாமே யிரண்டென மொழிப.

மேற்கூறிய இரண்டனையும் இவ்வகையானும் வகுக்கப்படு மென்கின்றது.

இ—ள் : செம்பொருட் செவியுறை, செம்பொருளங்கதம், பழிகரப்புச் செவியுறை, பழிகரப்பங்கதமென நான்கு கூறு படும் மேற்கூறிய அங்கதமிரண்டும் என்றவாறு.

" பாய்த்துள், விக்குள் " என்றாற்போலச் 'செய்யுள்' என்பதூஉந் தொழிற்பெயர். அவையாமாறும் அவற்றது வேறு பாடும் முன்னர்ச் சொல்லும்.

இனி, ஒருவனுரை : இவற்றுள் தொகைச்சூத்திரத்துட்,

" கைக்கிளை பரிபாட் டங்கதஞ் செய்யுள்."

(தொ. செ. கக அ)

என்று ஓதிச் செம்பொருளங்கதமுஞ் செய்யுளுமென இரண்டாக

நிறுத்தான் ; நிறுத்தமுறையானே அங்கதமுணர்த்திச் செய்யு

ளுணர்த்தியவிதந்தானென்பது ; அற்றன்று, எல்லாப் பாட்டுஞ்

செய்யுளெனப்படுதலின் ஒன்றனையே செய்யுளெனலாகாது ; அல்

லதூஉம்,

1. வெண்டொடைச் செய்யுள்—வெண்பா.

2. முனையகத்துப் படையோடும் விடும் என முடித்தல் வேண்டும். தான் தனித்து நின்றுவிடாது படையொடும் விட்டதே வசைபோலும்.

3. குன்றெறிந்த சேந்தன்—குமரன்.



"அங்கதச் செய்யு ளென்மனூர் புலவர்." (தொ. செ கஉக)

என வருகின்ற சூத்திரத்து ஓதுமாதலான் இவையும் அங்கதச் செய்யுளே. 1 மேலைச் சூத்திரத்துள்ளும் அங்கதச் செய்யு ளென்பதே பாடமென்பதூஉம் அதனாற் பெறுதுமென்பது. 2 அல்லாத பாடம் ஓதினும் அங்கதச் செய்யுள் செய்கைமே லென அதனைத் 3 'தாய்க்கொலை' என்றதுபோல இரண்டாவதன் பொருண்மைப்படுத்துக்கொள்க.

(கஉஎ)

[செவியுறையங்கதம் இதுவெனல்]

௪௪௦. துகளொடும் பொருளொடும் புணர்ந்தன் ருயிற்
செவியுறைச் செய்யு ளதுவென மொழிப.

இது, மேற்கூறிய அங்கதச் செய்யுட்பகுதி இரண்டனுள் ஒன்று கூறுகின்றது.

இ—ள் : மேற் செம்பொருளும் பழிகரப்புமெனப்பட்ட இரண்டும் அங்கதச் செய்யுளெனப்படுதலேயன்றி, அதனானே அரசர்க்குப் பொருள்வருவாயாகச் செய்தானேயெனினும் அது செவியுறையங்கதமெனவும்படும் என்றவாறு.

துகளாவது : படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என் னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல். 4 'அரசியல்' என்பன வற்றானே, தங்கோன் அறியாமல் வருத்தவை வருமாயின் அவற்றை உள்ளவாறுரைத்தலுமொன்று. மாற்றரசன் நமரது ஊரடுகின்ற நாட்டவர் யாதினை நுதலியனவே துவாகப் போய்ச் சார்ந்தவற்கு

நாட்டழிவு கூறுதலுமொன்று. அன்ன பிறவும் அவற்கு உறுவகையாகலான் அவற்றை உள்ளவாறு உணர்த் திப் பொருள்செய அவற்குப் பொருள் செயல்வகை கூறினமையின் அது செவியுறைப்பாற்படுமென்பது; அது:—

1. மேலைச் சூத்திரம் என்றது "நெடுவெண் பாட்டே அங்கதச் செய்யுள்'' என்ற சூத்திரம்.

2. அல்லாத பாடம் அங்கதஞ் செய்யுள் என்பது. அதனை அங்கதச் செய்யுளைச் செய்தல் எனப் பொருள்கொள்க என்றபடி. செய்யுள்—செய்தல்.

3. தாய்க்கொலை—தாயைக் கொல்லல்.

4. இவ்வாக்யங்கள் சரியான பிரதி கிடையாமையால் திருத்தமுடியவில்லை.





"அறவை யாயி னினதெனத் திறத்தன்
மறவை யாயிற் போரொடு திறத்த

லறவையு மறவையு மல்லே யாகத்
திறவரி தடைத்த திண்ணிலைக் கதவி
னீண்மதி லொருசிறை யொடுங்குத
ுணுத்தக வுடைத்திது காணுங் காலே.''

(புற—சச) என இது செம்பொருட் செவியுறை; பிறவும் அன்ன. இவை

[1] முகவிலக்கினுட் பயின்று வருமென்பது. இனி, மொழிகரந்து சொல்லினும் இஃதொக்கும்; இனி,

[2] '' புகழொடும் பொருளொடும்.''

என்பதூஉம் பாடமாக உரைப்ப. புகழும் பொருளும் புணர்ப்

பது அங்கதமாயின் அஃதமையும்; அற்

[3] றன்றாயின் ஈண்

டாராய்ச்சியின்றென்பது; என்னை?

'' வசையொடு நசையொடும் *புணர்ந்தன் றாயி
னங்கதச் செய்யுள்.''

(தொ. செ. கஉகூ)

என மேலோதுமாதலின் இவனென்பது.

(கஉஅ)

[ஏனை அங்கதம் இதுவெனல்]

சசக. வசையொடு நசையொடும்
புணர்ந்தன் றாயி.

னங்கதச் செய்யு ளென்மனூர்

புலவர். • •

இஃது, ஒழிந்த அங்கதச்

செய்யுளுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற்கூறிய அங்கதச் செய்யுள் வகையேயன்றி அவ்வகையானே [4] நகை தோன்றச்செய்வது செவியறிவுறை

யெனப்படாது அங்கதச் செய்யுளெனவே படும் என்றவாறு.

எனவே, இல்லாதன சொல்லி நகைப்பொருட்டாகச் செய்

யினும் அங்கதச் செய்யுளெனப்படும் என்றவாறு. அவை, விலக்

---

1. முகவிலக்கு—ஒரு நாடகநூல் போலும்.

2. இங்ஙன முரைப்பவர் இளம்பூரணர்.

3. அன்றுயின்—பயவாதாயின். அங்கதம் பயவாதாயின் அதனைக் குறிதது நமக்காராய்ச்சியில்லை என்பது கருத்து. அங்கதம் புகழும் பொருளும் பயவாதென்பதே கருத்து.

4. நசையென்றது விருப்பத்தாற்ருங்கியுரைத்தலிற்போலும். பின், 'இல்லாதன சொல்லி நகைப்பொருட்டாக' என்றும், 'வெகுளியும் பொருளும் நகையும்' என்றும் வருதலின் இது நகையென்றிருக்குமோ என்பது ஆராயத்தக்கது. ஏனையுரைகளிலும் நசையென்றே காணப்படலின் திருத்தாதொழிந்தனம். நசை என்பதே பாடமாயின் நகை என வருவன நசை என் றிருத்தல்வேண்டும்.



கியற் செய்யுளுட் கண்டுகொள்க. இதுவுஞ் செம்பொருளாகியும் பழிகரப்பாகியும் வருமெனவுணர்க; எனவே, கூறப்பட்டனவெல்லாம் வெகுளியும் பொருளும் நகையும் பயப்பனவாயின. (கஉ-கூ)

### [கலிப்பாவின் வகை]

சசஉ. ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சக முறழொடு கலிநால்
வகைத்தே.

இது, கலிப்பாவெனப்பட்ட உறுப்பினை இத்துணைப் பகுதியான் வருமெனஅது வருஞ் செய்யுள்பற்றி விரி கூறுகின்றது.

இ—ள்: ஒத்தாழிசை — ஒத்தாழிசை யென்னும் உறுப்புடைச் செய்யுள்: [1] ஒத்து ஆழ் இசையை ஒத்தாழிசையென்றான்; அது, வினைத்தொகையாகலின் [2] மருவியவகையான் முடியுமென்பது. [3] தாழிசையென்பது, தானுடைய துள்ளலோசைத் தாம்; இது [4] முறைமையிற் பெற்ற பெயர்; எனவே, தரவு வேறுபடினும் வேறுபடாதென்பதூஉம், கொச்சகக் கலிபோல் வனவற்றுள் வரும் இடைநிலைப் பாட்டுக்கள் அவ்வாறு தாழமுடையவன்றியும் வருமென்பதூஉங் கொள்க. இது பன்மைபற்றிப் பெற்ற பெயர்; தாழிசையின்றியும் ஒத்தாழிசை சிறுபான்மை வருதலின். இனி, ஒழிந்த உறுப்பு நோக்கத் தாழிசை சிறந்தமையின் தலைமையாற் பெற்ற பெயரெனவும் அமையும்.

" வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப்
புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய
ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வவ்வலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை.

வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி
னுள்ளினி ரென்பு தறிந்தன ளென்றேழி.''

(கலி. ௯)

1. ஒத்து ஆழிசை—ஆழிசை=வினைத்தொகை. ஆழ்தல்—தாழ்தல். அதுபற்றித் தாழிசை என்றுங் கூறுப. ''தந்துமுன் னிற்றலிற் றரவே தாழிசை — ஒத்தாழ்ந் திறுதலின் ஒத்தாழிசையே'' என்பது யாப்பருங்கல விருத்திப் பிரமாணச் சூத்திரம்.

2. மருவியவகை—தொன்றுதொட்டு வந்தமுறை.

3. தாழிசை—துள்ளலோசை—தாழம்பட வருவது.

4. முறைமை—இயல்பு. துள்ளிச்செல்லும் இயல்புபற்றி வருதலின் தாழிசை என்று கருத்தாம். தாழ்தல் — துள்ளல்; தாழம்பட்ட வோசை என்பதும் இக்கருத்தாம்.



என்பது தாழ்ந்த ஓசைத்தன்றி ஒத்தாழிசைக் கலியுள் தரவு வந்தது; எனவே, இவ்வேறுபாடு, கட்டளைக்கலி அல்லாதவழி யென்பது பெற்றாம்.

1 அதுவன்றே, இதன்றாழிசையுள்ளும் நேரீற்றியற்சீரும் வந்ததென்பது; என்னை?

'' காழ்விரி கவையார மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமன் முயங்கியு
மமையாரென்

சூழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்.''

(கலி. ச) என்புழி " அறியே னென்னும்" என ஆண்டைத் தாழிசை தோறும் இரண்டு நேரீற்றியற்சீரும் வந்தன. பிறவும் அன்ன.

" நீயே,
வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே ;
இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்க ணீர்நில் லாவே.''

(கலி. எ) எனக் கொச்சகக் கலியுள் இடைநிலைப் பாட்டுத் தாழிசையின்றி வந்தது ; பிறவும் அன்ன.

இனிக், கலிவெண்பாட்டு — கலிப்பாவாகிய வெண்பாட்டு ; இது பண்புத்தொகையானே [2] முன்மொழிப் பொருட்டாயிற்று. [3] கொச்சகமென்பதும் உறுப்பினாற் பெற்றபெயர். [4] உறழ்கலி யென்பது, பொருள்பற்றி வந்த பெயர். ஒத்தாழிசையென்பது தம்மினொத்து வருதற் [5] கட்டளையுடைமையானுங் கலிப்பாவிற் குச் சிறந்து வருமாகலானும் முன்வைத்தான் ; என்னை இது

கலிப்பாவிற்குச்
சிறந்தவாறெனின்,—நூற்றைம்பது கலியுள்ளும்
ஒத்தாழிசை அறுபத்தெட்டு வந்தனவாகலின்
அது பெருவரவின எனப்பட்டுச்
சிறப்புடைத்தாயிற்று. அது நோக்கி முன்

1. அதுவன்றே — கட்டளைக்கலியல்லாமையினன்றே. வருமுதாரணச் செய்யுளுள் 'அறியேன்', 'என்னும்' என்பன நேரீற்றியற்சீர்.

2. முன்மொழிப் பொருட்டு என்பது முன்மொழியாகிய கலி என்ற மொழிக்கண் பொருள் சிறந்து வந்தது என்பது கருத்து.

3. உறுப்பு—கொச்சகம் என்னும் உடைஉறுப்புப்போறலி. றுற் கொச்சகம் எனப்பட்டதாகலின் உறுப்பினாற் பெற்ற பெயர் என்றார். (சங.)

4. ஒன்றோடொன்று மாறுபட்ட பொருளையுடைமையான் உறழ்கலி என்று பெயராயிற்று என்றபடி.

5. கட்டளை—நியமம். ளியல்]



வைத்தான். [1] இது,
பாவென்னும் உறுப்பிலக்கணங் கூறுகின்ற

இடமாகலின் கலிவெண்பாட்டினை ஒத்தாழிசைக்குங் கொச்சகத்திற்கும் இடை வைத்தான்; [2] அதுபோல உறுப்புடைத்தாகியும் வருமென்றற்கு. அதன்பின் கொச்சகப்பா வைத்தான்; அது தரவும் போக்குஞ் சிறுபான்மையின்றியும் வருதலின். எல்லாவற்றுப் பின்னும் உறழ்கலி வைத்தான்; அவைபோலாது சுரிதகமின்றி வருதலே பெரும்பான்மையாகலானென்பது. அஃதேல்,

உறழ்கலியுங் கொச்சகக் கலியுள் அடங்காதே? அதுவும் அடக்கியலின்றியும் யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடைத்தாய் வருமாலெனின், — அற்றன்று; அடக்கியலின்றி வரின் அடி நிமிர்தலும் ஒழுகிசைத்தாதலும்வேண்டும்; உறழ்கலியாயின் அடி நிமிராதும் ஒழுகிசையின்றியும் வருமென்பது. அத்துணையான் இதனை வேறென்பதென்னை? ஒன்றாகவோதுகவெனின்,—அற்றன்று. மேற் கூறிவருகின்ற செய்யுளெல்லாஞ் சீரும் அடியும் பாவும் பொருளுமெனச் சிலவுறுப்புவகையான் வேறுபடுகின்றதன்றிப் பிறிதின்மையின் அவற்றின் வேறுபாடுஞ் சிலவாக நோக்கி [3] ஒன்றென்னுமாகலின் அது கடாவன்றென்பது; அல்லதூஉம், நூல் செய்புங்கான் மாபென்பது வேண்டும்; என்னை?

"மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூற்றா மிருவகை யியல." (தொ. மர. கூந.)

என்பதனுன், முதனூற்காயினும் மரபு வேண்டுதலின். [4] அது வன்றே நிலம் நீர் தீ வளி விசும்பென்னும் ஐம்பெரும் பூதங்களும், அவற்றதியைபாகிய பொருள்களும், அஃறிணையான் வழங்கினும் பொருளின் இயைபாகிய மக்களுந் தேவரும் முதலாயினரை உயர்திணை வாய்பாட்டான் வேறுபடுத்து வழங்குகின்றதென்பது. மற்று உறழ்கலியென்னும் வழக்குண்டாயினன்றே மரபொடு மாறுபடுவதெனின்,—மரபென [5] ஆசிரியர் வழக்கும் அடங்குமாகலின் அது கூறினுன்; அல்லாக்கால், ஒழிந்த செய்யுளும் வேறுபாடிலவாமன்றேயென்பது.

---

1. பா—செய்யுட்குரியமுப்பத்துநான்குஉறுப்பினுள் ஒன்று.
2. அது—ஒத்தாழிசை.

3. ஒன்றென்னுமாகலின்—ஒன்றென்னுகலின்
தல்வேண்டும். பதிப்புக்கள் மூன்றும் பிழை.
என்றிருத்

4.
5.
அதுவன்றே—மரபு வேண்டுதலினன்றே.
ஆசிரியர் வழக்கு—செய்யுள் வழக்கு.



இனி, பரிபாடலுங் கலிப்பாவினுள்

அடங்குமென்பாரும் உளர். கலியும் பரிபாடலுமென வெட்டுத்தொகையுள் இரண்டு தொகை தம்மின் வேறாகலின் அவ்வாறு கூறுவார் செய்யுள் அறியாதாரென்பது; அல்லதூஉம், 1 அராகவுறுப்பில்லாத முடுகியலடியும், கொச்சகக்கலியல்லாத கலிப்பாவினுள் 2 உண்டாவதர்கலும், கொச்சகக் கலியுறழ்ந்து வருதலும் உடையுவாம், அவ்வாறு கூறினால் என மறுக்க.

(ககூ0)

[ஒத்தாழிசைக்கலியின் வகை]

சசகூ. **அவற்றுள்,**
**ஒத்தா ழிசைக்கலி யிருவகைத் தாகும்.**

இது, முறையானே ஒத்தாழிசைக்கலி யுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒத்தாழிசைக்கலி இரண்டு கூற்றதாம் என்றவாறு.

இதனது பயம்:— அவை இரண்டுந் தம்முட் பகுதியுடைய வென்பது; அவையாமாறு முன்னர்ச் சொல்லும். (கூகக)

[அகநிலை ஒத்தாழிசைக் கலியினுறுப்புக்கள் இவை எனல்.]

சசச. இடைநிலைப் பாட்டொடு தரவுபோக் கடையென
³ நடைநவின் றொழுகு மொன்றென மொழிப.

இ—ள்: மேற்கூறிய ஒத்தாழிசை இரண்டனுள் ஒன்று தாழிசையுந் தரவுஞ் சுரிதகமுந் தனிச்சொலுமென நான்கு உறுப்பாகப் பயின்றுவரும் என்றவாறு.

'பயின்றுவரும்' எனவே
இவ்வாறன்றிப் பயிலாது வரு
வனவும் இதன் பகுதியா [4]யடங்குவனவும்
உளவென்பது. அவை
தாழிசைப்பின்னர் [5] எண்ணுறுப்பு
வருங்கால் ஐந்துறுப்புப்

---

1. அராகவுறுப்பில்லாத முடுகியலடி — பரிபாடற்குரியது. "சொற்சீரடியு முடுகியலடியும்" என்னும் சஙசு-ம் சூத்திரம் நோக்குக.

2. உண்டாவதாகல்—வருதல்.

3. நடை பயின்றெனவும் பாடம்.

4. அடங்குவனவும் என்பதி லும்மை இல்லாதிருப்பது நலம்.

5. எண்ணுறுப்பு—அம்போதரங்கம்.

பெறுதலும், அவற்றிடை அராகம் பெறின் ஆறுறுப்பு வருதலுமென இவை [1] யென்ப; அற்றன்று, நூற்றைம்பது கலி யுள்ளும் ஒத்தாழிசைக் கலியின் அராகவுறுப்பும் அம்போதரங்க வுறுப்பும் பெற்று வருவன இன்மையின் அவை பொருளன் றென்பது.

மற்று, 'நடைநவின் றொழுகும்' என்றதென்னையெனின்,— இத்துணை பயின்றுவாராது [2] ஏனையொன்றும் என்றற்கென் பது. தாழிசையினை இடைநிலைப் பாட்டென்பவோவெனின்,— அவ்வாறுஞ் சொல்லுப; அச்செய்யுள் இடை நிற்றலா னென் பது. இனி இடைநிலைப் பாட்டென்பது தாழிசையினை நோக்காது; என்னை? தாழம்பட்டவோசையல்லாதனவும் இடைநிலைப் பாட்டாய் வருமாதலினென்பது. அது:—

"காணுமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணுநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே.''

(கலி. கஉ௩)

என்பது, தாழிசையெனவும் இடைநிலைப் பாட்டெனவும் படும்.

" இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற்

பின்னொடு கெழீஇய தடவர லல்கு
லுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ."

(கலி. கஉரு) என்றாற்போல்வன தாழிசையல்லாத இடைநிலைப் பாட்டு. இவ் விரு பகுதியுங் கூட்டித் தாழிசையென்றது இடைநிலைப் பாட் டென்பது,[3] இங்ஙனந் தம்முட் பகுதியுடைமையானுமாயிற்று. ஒத்தாழிசைக்கலி இருவகைத்[4] தென்றற்குப்[5] பயனுந் தோற்றுவாய் செய்து[6] போந்ததென்பது.

1. என்ப என்றார்; பிறர் கூற்றென்பது அறிவித்தற்கு.
2. ஏனையொன்று—இச்சூத்திரத்தாற் கூறிய ஒத்தாழிசை யல்லாத ஒத்தாழிசை; அது சடுo-ம் சூத்திரத்தாற் கூறப்படும்.
3. இங்ஙனந் தம்முட் பகுதியுடைமையானும் இடைநிலை என்று பெயராயிற்று என்றது தாழிசையும் ஏனைப் பாட்டு மாகாது இரண்டற்கும் இடைநிலையாய் நிற்பதானும் ஆயிற்று என்றபடி.
4. என்றற்கு என்றதற்கு என்றிருப்பது நலம்.
5. பயனுந் தோற்றுவாய்—பயனாகிய தொடக்கம்.
6. போந்தது—இது என்க. இவ்வெழுவாய் சிதைந்திருத் தல்வேண்டும். இன்றேல் இது என்பது வெளிப்படாது நின்ற தாகக் கொள்ளல்வேண்டும்.

தரவு என்ற பொருண்மை
என்னையெனின்,—முகத்துத்
தரப்படுவதென்ப; அதனை எருத்தெனவுஞ்
சொல்லுப; என்னை?
உடம்புந் தலையுமென வேறுபடுத்து
வழங்கும் வழக்குவகையான்
உடம்பிற்கு முதல் எருத்தென்பதாகலின்.
இனி, இசைநூலா
ரும் இத்தரவு முதலாயினவற்றை முகம்
நிலை கொச்சகம் முரி
யென வேண்டுப. கூத்தநூலார்
கொச்சகமுள்வழி அதனை நிலை
யென அடக்கி முகம் நிலை முரியென
மூன்றாக வேண்டுப. அவ
ரும் இக்கருத்திற்கேற்ப முகத்திற்படுந்
தரவினை முகமெனவும்,
இடை நிற்பனவற்றை இடைநிலையெனவும்,
இறுதிக்கண் முரிந்து

மாறுஞ் சுரிதகத்தினை முரிியெனவுங் கூறினரென்பது. செந்

துறைச் செய்யுள் [1] அடைநிலை பயப்பதின்மையின் அது சிறந்த

தின்றென்று அடக்கி மொழிப. உள்ளுறுப்பின் பொருளெல்

லாம் ஒருவகையான் அடக்குமியல்பிற்றாகலின் [2] அடக்கியலென

வும், குறித்த பொருளை முடித்துப் போக்குதலிற் போக்கென

வும், அவையெல்லாம் போதந்து வைத்தலின் வைப்பெனவும்,

கூறிய பகுதியைப் பின்னும் பற்றிக் கூறுதலின் [3] வாரமென

வும் எல்லாம் ஒன்றொன்றனை ஒத்தே பெயராயின. அடைநிலை

யென்பது, முன்னும் பின்னும் பிறவுறுப்புக்களை அடைந்தன்றி

வாராது; அது, தனிநின்று சீராதலின் தனிச் சொல்லெனவும்

படும். [4] இடைநிலை யுறுப்பென்றது 'பாட்டு' என்றதென்னை

யெனின்,—அவை தாமே [5] பாட்டாயும் வருமிடனுடைய; வருங்
கால் அவை ஒன்றும் இரண்டும் [6] பலவுமாய் வருமென்பது.
இடைநிலைப் பாட்டினைத் தரவிற்கு முற்கூறினுன், [7] அது பெயர்

1. அடைநிலை—தனிச்சொல். பயத்தல்—பயன்படல்.
2. அடக்கியல் என்றது சுரிதகத்தை. அடக்கியல் போக்கு வைப்பு வாரம் என்பன சுரிதகத்தையே குறித்து வந்தன. பொருளால் சிறிது சிறிது பேதமுள்ளன.
3. வாரம்—ஒரு பகுதியைச் சார்ந்து வருவது. 'வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்' என்பது சீவகசிந்தாமணி.
4. இவை நிலை எனவும் பாடம். அது பொருத்தமின்று.
5. பாட்டு—தாழம்பட்ட ஓசையின்றி வருவது.
6. பலவாய் எனவும் பாடம்.
7. அது பெயர்பெறுதலின் என்றது

இடைநிலைப் பாட்டு
என்று அவ்வுறுப்புப் பெயர்பெறுதலின்
என்றபடி. இடைநிலைப்
பாட்டு என்ற பெயரானேயே
இடைவருதல் பெறலின் முன்
வைப்பினுமமையுமென்றபடி.



பெறுதலின்; எனவே, தரவு முன்வைத்தலே மரபாயிற்று.

ஒத்தாழிசை கூறியமுறையானே தரவு தாழிசை போக்கென்னும் மூன்றுறுப்பானுஞ் சிறுபான்மை வந்து தனிச்சொலின்றி வருதலின் தனிச்சொல்லினை இறுதிக்கண் வைத்தானென்பது. இவையெல்லாம் போக்கிச் சொல்லும். (கஙௐ)

[தரவின் அடியளவு கூறல்]

சசரு. தரவே தானு நாலடி யிழிபா
யாறிரண் டுயர்பென் [1]றேறவும் பெறுமே.

இது, தரவின் அடியளவுணர்த்துதல்

றுதலிற்று.

இ—ள் : மேற் கூறப்பட்ட தரவுதானும் நான்கடி முத லாய்ப் பன்னிரண்டடிகாறும் வரப்பெறும் என்றவாறு.

எனவே, ஒன்பது நிலம்பெறுந் தரவென்றவாறாயிற்று.

"உயர்பென் றேறவும்பெறும்."

என்றதனாற் பன்னிரண்டடியின் இகந்துவரவும்பெறும் சிறு பான்மையெனக் கொள்க. இதனை எடுத்தோதாது இலேசினாற் கொண்டான், பன்னிரண்டடியின் இகந்தன துள்ளலோசையான் வாராமையின் ; அது,—

"நீரார் செறுவி னெய்தலொடு நீடிய
நேரிதழ் ஆம்ப னிரையிதழ் கொண்மார்."

(கலி. எரு) என்னும் மருதத்திணைக் கலிப்பாட்டினுட் கண்டுகொள்க. (கரு௫)

[தாழிசையின் அடியளவு கூறல்]

சசரு. இடைநிலைப் பாட்டே
தரவகப் பட்ட மரபின தென்ப.

இது, தரவிற்குச் சுருங்கியன்றித் தாழிசை வாராதென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தரவின் அகப்பட்டது தாழிசை என்றவாறு.

[2]'அகப்படுதல்' என்பது, அகம்புறமென் றிருகூறு செய்த வழி முற்கூற்றினுட் படுதல். முன்னென இடவகையுங் கால ———————

1. அறையவும் பெறுமே எனவும் பாடம்.

2. அகப்படுதல் — முற்கூறுகிய அகத்துட்படுதல். அகம்— உள்.







வகையும்பற்றிய இரு கூற்றின் 1 யாதானுமொன்று கொள்க. எனவே, பதினோரடிமுதல் இரண்டடிகாறும் பெறும் என்றவாறாயிற்று; அத், இழிந்து வரப்

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி யியைபூத
வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ
டரும்பொருண் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்போற்
பெருங்கட றுயில்கொள்ளும் வண்டியிர் நறுங்கானல்;

காணுமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணுநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே;
கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருண்மாலை
யல்லனோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே;
பொறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினாற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
யறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே;
எனவாங்கு;
எல்லையு மிரவுந் துயிறுறந்து பல்லூர்
மூரும்பட ரவலநோய் செய்தான்கட் பெறனசை இ
யிருங்கழி யோதம்போற் றடுமாறி
வருந்தினை யளியவென் மடங்கெழு நெஞ்சே."
(கலி. ௧௨௩)

என இது தரவகப்பட்ட மரபிற்றாகித்

தாழிசை வந்தது.

தாவிற் சுருங்குமென்றது 'அகப்படும்' என்றான். தா வோடு ஒத்துவருந் தாழிசையென்பதாங் கோடற்கு; என்னை? 'மக்களகத்துப் பிறந்தான்' என்றவழி, அச்சாதியோடொக் கப் பிறந்தானென்பது படுமாகலினென்பது.

"ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப

1. யாதானும் என்றதனால் இடமுன்னுங் கொள்ளலாம், காலமுன்னும் கொள்ளலாம் என்றபடி. நான்கையும் பன்னிரண்டையும் இடமுன்னாக வைக்குங்கால் இரண்டுமுதல் நான்கு வரையும் ஐந்துமுதல் பன்னிரண்டுவரையும் கொள்ளப்படும். இங்கே இரண்டற்கு நான்கு இடமுன்னாதலும் ஐந்தற்குப் பன்னிரண்டடி இடமுன்னாதலுங் காண்க. இனிக் காலமுன்னாகக் கொள்ளுங்கால், நான்கற்குமுன் எண்ணப்படும் இரண்டும், பன்னிரண்டற்குமுன் எண்ணப்படும் ஐந்தும் காலமுன்னாதல் காண்க. இருமுன்னாக வைத்துப் பார்ப்பினும் பொருள் ஒன்றுமென்றபடி..

2. மக்கள் என்றது மானுட சாதியை.

*ஊரல ரெடுத்தாற்ற வுள்ளாய்நீ துறத்தலிற்*
*கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்*
*காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே*
*பீரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால் ;*
*இணைபில்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலிற்*
*புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்*
*றுணையாருட் டகைபெற்ற தொன்னல மிழந்தினி*
*யணிவனப் பிழந்ததன் னணைமென்றோ ளல்லாக்கால் ;*
*இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலி*
*னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன்*
*வென்றவே லுநியோய்க்கும் விறனல மிழந்தினி*
*நின்றுநீ ருகக்கலுழு நெடும்பெருங்க ணல்லாக்கால் ;*
*அதனால்,*
*பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தக்கா*
*லரிதென்று துணிந்தவ ளாய்நலம் பெயர்தரப்*
*புரியுளைக் கலிமான்றேர் கடவுபு*
*விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே.''*

(கலி. ௧௦௪)

என வரும்.

பன்னிரண்டடியின் இகந்த தரவிற்கும் இவ்வாறே தாழிசை கொள்ளப்படும். மற்று [1] மேற்கூறிய வரையறையில் தாழிசை கூறிற்றிலனெனின்,—[2] ஆண்டு முறைபிறழ வைத்ததற்குக் காரணங் கூறிப்போந்தாமென விடுக்க. இனிவருஞ் சூத்திரத்திற்கும் இதுவே விடை. 'மரபின' என்றதனான் மேலைக்கொண்டும் [3] அடிபட வந்த மரபினாற் சுருங்குமென்பது ; எனவே, நான்கடியின் உயா வாராவென்பது கொள்க ; இன்னும், 'மரபின' என்றதனான் சிறுபான்மை ஐந்தடியானும் வருவனவும் உள.

*'' அரிதே தோழி நாணிறுப்பா மென்றுணர்தல் ''* (கலி. ௧௩௭)

என்னும் நெய்தற்றிணைக் கலிப்பாட்டினுள்,

“ நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையி னிவ தல்லதவர் நம்மை
வகைமையி னெழுந்த தோன்முத லாகப்
பகைமையி னிதலோ விலனு மாயிழை
பகைமையிற் கடிதவர் தகைமி னியுநோய்.”

என ஐந்தடியால் தாழிசை வந்தது:

---

1. மேற்கூறிய வரையறை என்றது இடைநிலைப் பாட்டுத் தரவு போக்கு அடை என வைத்தமுறை வரையறையை.

2. சசச-ம் சூத்திர உரை இறுதி நோக்குக,

3. ஆன்றோர்களால் பரம்பரையாகக் கொள்ளப்பட்டுவந்த மரபு.



[1] ஆறடியான் வருவன வந்தவழிக் கண்டுகொள்க. மற்று நான் கடியின் [2] இழிந்தகோரடியானுந் தாழிசை வருமாலெனின்,— வாராதன்றே, ‘ இடைநிலைப் பாட்டே’ என்றாராகலின் ; என்னை ? பாட்டெனப்படுவன ஓரடியான் வாராமையின். (கருச)

[தனிச்சொல்லாவது இதுவெனல்]

சசஎ. அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி.

இஃது, ஆங்கென்னுஞ் சொல் தனிச்
சொல்லெனப்படு

மென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தாழிசைப்பின்னர் ஆங்கு,
தனிச்சொல்லாய் நின்று

பயிலும் என்றவாறு.

ஆங்கென்னுஞ் சொல்லினை
எடுத்தோதினான், அது [3] நடை

நவின்றொழுகும் ஆகலின். ஆங்கென்னுஞ் சொல் பயின்று வரு மெனவே அல்லாதனவும் உள, இத்துணைப் [4] பயிலாதனவென் பது கொள்க. ஆங்கு என்பது எழாம் வேற்றுமை இடப்பொரு ளுணர நின்ற சொல்லாகலின் அஃது எல்லாச் செய்யுட்கண் ணும் [5] தன் பொருண்மைக்கேற்பச் [6] செய்யல்வேண்டும் பிற

வெனின்,—அற்றன்று: அதனை
அசைநிலையாகக் கொள்க; அல்ல

தூஉம், எல்லாச் செய்யுளும் இதன்
பொருண்மைக்கேற்பச் செய்

யல்வேண்டு [7] மென்றான் மிகை கூறிப்
பாற்கதின்மையானென்

பது. அசைநிலை பெய்து செய்யுள் செய்தன்
மரபாகலின் அஃ

தமையுமென்பது. நடைநவிலாதன
பொருள்பெற வருமென்
பது; அவை முன்னர்க் காட்டுதும்.
(கஎ௫)

1. ஆறடியான் வருவன வந்தவழிக் கண்டுகொள்க. என்ற தனால் முன் ஐந்தடியானும் ஆறடியானும் என்று கூறியிருத்தல் வேண்டும். அது தப்பிற்றுப்போலும்.

2. இழிந்தது ஓரடியானும் எனக் கண்ணழிக்க.

3. நடை நவின்றொழுகல் — செய்யுள் வழக்கினுட்
பயன்
றொழுகல்.

4. பயிலாதன — 'எனவிவள்' (பாலைக்கலி-க) எனவும், 'எனநின்' (பாலை-எ) எனவும் வருவன போல்வன.

5, தன் என்றது ஆங்கென் கிளவியை.

6. நிற்றல்வேண்டும் எனவும் பாடம்.

7. என்றானை எனவும் பாடம்.
இவ்வாக்கியத்தில் யாதோ
பிழையுளது.



[சூரிதகமாவது இதுவெனல்]

சசஅ. போக்கியல் வகையே வைப்பெனப் படுமே.

இஃது, ஒழிந்த சுரிதகம் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : போக்கினதிலக்கணப் பகுதி வைப்பென்று சொல் லப்படும் என்றவாறு.

[1] இங்ஙனங் கூறப்பட்ட உறுப்பினை அடக்கியலெனவும் வாரமெனவுஞ் சொல்லுப. அடக்கியல் வாரந் தரவோடு ஒக் கச் சொல்லப்படுமென்றவாறு.
என்றதென்னேக்கியெனின்,— போக்குதலும் வைத்தலுமென்னும் இரண்டிலக்கணமுடைத்து ; வாரமெனச் சொல்லின் முடியுமிலக்கணமே கூறுவான்போலப் போக்கி னிலக்கணப்பகுதி வைப்பென்றதனைச் சுட்டிக் கூறப் படுமாகலின்.
[ என்றதென்னேக்கியெனின்,
போக்குதலும் வைத்தலு மென்னும் இரண்டிலக்கணமுடைத்து எனச் சொல்லின்

முடியு மிலக்கணமே கூறுவான்போலப்,
போக்கினிலக்கணப்பகுதி வைப் பென்று அதனைச்
சுட்டிக் கூறியவாறு. இங்ஙனங் கூறப்பட்ட
உறுப்பினை அடக்கியலெனவும்
வாரமெனவுஞ் சொல்லுப. "அடக் கியல் வாரந்
தரவோ டொக்கும்" என்பவாகலின்.] (௪௩௯)

[சுரிதகத்தின் அடியளவும் அதன் பொருள்வைப்பு

முணர்த்தல்]

௪௪௰. தரவிய லொத்து மதனகப் படுமே
புரைதீ ரிறுதி நிலையுரைத் தன்றே.

இதுவுஞ் சுரிதக முணர்த்துகின்றது.

---

1. இங்ஙனங் கூறப்பட்ட என்பதை முதலாகக் கொண்ட வாக்கியம் என்றவாறு என்ற உரைப்பின்னே காணப்படுவது பொருத்தமில்லை. ஒரு பிரதியில், பின் பகரக்கோட்டுள் வருமாறு காணப்படுகிறது. அதுவே பொருத்தமாகும். இரண்டிலக்கணமுடைத்தென்று கூறுவான்போலச் சுட்டிக் கூறியவாறு என்று அவ்வாக்கியம் முடிக்கப்படும். போக்கு வைப்பு என்னுஞ் சொற்களின்கண்ணேயே அவற்றின் இலக்கணமு மமைந்து கிடக்கின்றனவென்பார் சொல்லின் முடியு மிலக்கண மென்றார் என்க. அதனை என்றது வைப்பினை. சுட்டுதல்—குறித்தல்.

இ—ள் : [1] தாவியலொத்தும் அதனகப்படும்—சிறுபான்மை தாவுகளோடொத்தும் உம்மையான் எதிர் வருமாயினும் பெரும் பான்மை தாவின்பாகம் பெறுதலே இலக்கணமாகவுடைத்து மேற் கூறிய சுரிதகம். புரை தீர் இறுதிநிலை உரைத்தன்றே—இடை நிலைப் பாட்டுப் பொருளினை முடிபு காட்டிநிற்கும் அதுதான் என்றவாறு.

[2] அகப்படும் என்று அதற்கும் உம்மை கொடுத்தமையின் அஃது இலக்கணமாயிற்று ; ஆகவே, அவ்விலக்கணத்திற்கேற்ற தாவின்கண்ணே ஒத்தலும் உயர்தலும் கொள்க. [3] சுருங்கிய வெல்லே, ஆசிரியத்திற்கு இழிந்தவெல்லையாகிய மூன்றடிச் சிறுமையிற் கூறுமையிற் (அதிற்) சுருங்காது வருவதாயிற்று. ஈண்டும் அகப்படும் எனவே பன்னீரடித்தாவின் பாகமாகிய

ஆறடியே சுரிதகத்திற்கு உயர்விற் கெல்லையென்பதூஉம், இழிந்த வெல்லை கூறுமையிற் பன்னிரண்டடிக் [4] தரவிற்காய் ஈற்று மூன் றடிச் சுரிதகம் வருதலும் [5] ஒழிந்த கலி நாலிற்கும் அவ்வாறே வருதலுங் கூறினானென்பது. இனி, வெள்ளைச் சுரிதகத்திற்கும் இஃதெல்லாமொக்கும்.

[6] புரைதீர் இறுதிநிலை உரைத்தன்றே என்பது, இடைநிலைப் பாட்டுப் பொருளினை முடிபுகாட்டியே நிற்கும் அது தான் என்றவாறு.

---

1. தரவியலொத்தும் என்பதன் உரை S. கனகசபாபதிப் பிள்ளை பதிப்பிற் காணப்படுகிறபடி ஒரு ஏட்டுப் பிரதியிலுங் காணப்படுகிறது. அதுவே பொருத்தம். நச்சினார்க்கினியர் உரையினும் அவ்வாறே காணப்படுகின்றது.

2. அகப்படுமென்று அதற்கும் உம்மை கொடுத்தமையின் என்றது செய்யும் என்னு முற்றுச்சொல் வாய்பாட்டாற் கூறினமையைக் கருதிப்போலும். அகப்பட்டும் என்று அதற்கும் உம்மை கொடுத்தமையின் என்றும் பாடங்காணப்படுகிறது. தரவின்கண்ணே ஒத்தலுமுயர்தலுமென்றது நாலடித் தரவிற்கு நாலடிச் சுரிதகம் வரலும் அதின் ஏறி ஐந்தடி வருதலுமாம்.

3. சுருங்கிய எல்லை கூறுமையின் என்பதில், கூறுமையின் என்பது சிறுமையின் என்பதனோடு மாறி எழுதப்பட்டது.

4. தரவிற்காய்—தரவிற்காயின் என்றிருத்தல்வேண்டும்.

5. ஒழிந்த கலி நான்கு—இவ்வகநிலை ஒத்தாழிசையல்லாத ஏனை ஒன்றெனப்பட்ட ஒத்தாழிசையும் கலிவெண்பாட்டும் கொச்சகமும் உறழ்கலியும்.

6. இவ்வாக்கியம் முன்னும் வருதலின்

வேண்டியதில்லை.

ளியல்] பொருளதிகாரம்

சஎகூ

இனித் [1] தாவியலொத்தல் ஈற்றயலடி முச்சீராகாது மண்டிலமாகி வருதலுஞ் சிறுபான்மையெனக் கொள்க. [2] இறுதிநிலை என்பதனை நுனிவிரல் என்றாற்போலக் கொள்க. நிலையெனப்பட்டது, இடைநிலைப் பாட்டு அதனிறுதியைக் கூறுமெனவே அவற்றுப் பொருளினை முடித்து விடுக்குமென்பதாம்.

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்." (ச்சஅ)

என்றவழி, உள்ளுறுப்பின் பொருளினைத் தன்கண் வைக்கப்

படுவது சுரிதகமென்றதன்றி இன்ன உறுப்பின் பொருள் வைக்கப்படுமென்றிலாதான் [3] முற்கூறியது பொதுவிதி மாத்திரையேயன்றி இடைநிலைப் பாட்டின் பொருளே பெரும்பான்மையும் வைக்கப்படுமென்பதூஉம், பொதுவிதியாற் சிறுபான்மை தரவின் பொருண்மை வைத்தலுமுடைத்தென்பதூஉங் கூறினன். 'தரவியல்' என்றதனால் தரவோடொத்த பொருட்கேற்றனவுங் கொள்க.

"தச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல்."

(கலி. அ)

என்பது, தாழிசைப் பொருண்முடிவு தன்பால் வைக்கப்படுதலின் இறுதி யுரைத்தது. புரைதீ ரிறுதி என்றதனான் அத்தாழிசைப் பொருளேயன்றி [4] அவற்றொடு போக்கியற் பொருள் வந்தக்கால் அவ்விரண்டினையும் புரைபடாமற் பொருந்தச் செய்கவென்பது; அது,

"தன்னகர் விழையக் கூடின்." (கலி. அ)

எனப் போக்கியற் பொருளோடு புரைதீர்ந்திற்றது; பிறவும் அன்ன.

---

1. தரவியலொத்தல் என்பது தரவியல் ஒத்தல் என்றதனால் என்று இருக்கவேண்டும். மண்டிலம்—ஈற்றயலடியும் நாற்சீராய் வரல்.

2. இறுதிநிலை—நிலை இறுதி. என்றது ...ின் முடிபு என்றபடி.

இடைநிலைப் பாட் 3. முற் கூறியதென்றது
ரும் என்பதை.

அடக்கியல்வாரம் தரவோடொக்

4. அவற்றோடு என்றது—தாழிசைப் பொருளோடு என்ற படி. தாழிசைப் பொருளும் போக்கியற் பொருளும் வந்தால் இவ்விரண்டினையும் மாறுபடாது பொருந்தச்செய்க என்பதாம். புரை — மாறுபாடு. போக்கியற் பொருள் — தான் முடித்துப் போக்குதற்குரிய பொருள். போக்குதல்—விடுத்தல்.



[செய்யு

" இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை

யந்தணன்." (கலி. ௩அ)

என்னுங் குறிஞ்சித்திணைப் பாட்டினுள்,

" கோடுயர்க் கல்லா துழக்கு நாடன்."

என்று உள்ளுறையுவமத்தால் தலைவியது விழுமங் கூறினமை யின் அதனையு முட்கொண்டு போந்து, சுரிதகத்து

" நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்."

என வைத்தமையின் அது

தரவியலொத்ததாயிற்று ; இனி,

"ஞாலமூன் றடித்தாய."

(கலி. கஉச)

என்னும் நெய்தற்றிணைக் கலிப்பாட்டு [1] அளவியலாற் சுரிதக

மொத்தது.

"கருங்கோட்டு நறும்புன்னை."

(கலி. கஉரு)

என்பது, தாவிற்கு அடி ஐந்தாகச் சுரிதகம் நான்கடியாய்ச் சுருங்கி வந்தது ; அஃதேல் [2] தரவகப்பட்டதெனச் சுருங்குத லன்றி ஒத்தற்பொருளும் படுமாயின் தரவகப்படும் போக்கென்னுது தரவியலொத்தும் என்றதென்னையெனின்,—[3] தரவுமென்ற உம்மையாற் சிறுபான்மை மிக்கு வரவும்பெறும் போக்கென்பது கொள்க.

"பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கா வினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்."

(கலி. கசு)

என்னும் பாலைப்பாட்டுத் தரவுந் தாழிசையும் நான்கடியாகி

யொத்தவழிச்,

"செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறநோக்கித் தெருமர றேமொழி
வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினு
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டெனா
வறனோடி விலங்கின்றவ ரான்வினைத் திறத்தே." (கலி. கசு)

எனச் சுரிதகம் ஐந்தடியாயிற்று. (கரு௭)

---

1. அளவியல்—அளவின் இயல்பு.

இங்கே தரவினளவை

ஒத்தது அளவியல் என்க.

2. இவ்வாக்கியத்தில் யாதோ

பிழையுளது,

3. தரவியலொத்தும்

என்றிருத்தல்வேண்டும்.



சு அக

[ஏனை ஒத்தாழிசைக்கலி இப்பொருட்கண் வருமெனல்]

சுருo.

ஏனையொன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே.

இஃது, ஒழிந்த ஒத்தாழிசையுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : அது முன்னிலையிடமாகத் தேவரைப் பராவும் பொருண்மைத்து என்றவாறு.

எனவே, இஃது அகநிலைச் செய்யுளாகாதென்றான்: இத னானே முன்னையது

அகநிலை யொத்தாழிசையெனப்படும். மற்றிது,

"வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்து."

(தொ. செ. ௧0௯)

என்றவழிச் சொல்லப்பட்டதாமெனின், அஃது உறழ்கலிக்கும் வெண்கலிக்கும் கொச்சகக் கலிக்கும் பொதுவாகலின் அவற்றுக்குத் தேவபாணி விலக்கிற்றென்பது.

மற்று முன்னிலைக்கணென்றதென்னையெனின், —

தெய்வத் திணை முன்னிலையாகச் சொல்லப்பட்டனவன்றி அல்லன தேவ பாணியெனத்தகாவென்பது; என்னை? யான் இன்ன பெருஞ் சிறப்பின் இன்ன தெய்வமென்று தன்னைத்தான் புகழ்ந்து கூறி நின்னைக் காப்பேன்; நீ வாழிய எனத் தெய்வஞ் சொல்லிற்றாகச் செய்யுள் செய்தலும் ஆகாது. [1] வாழ்த்தினுள் அவ்வா றுண்டாயினென்பது. இதனானே படர்க்கையும் விலக்கினானாம்; ஆகவே, தெய்வம் படர்க்கையாயவழிப் புறநிலை வாழ்த்தாவதன்றித் தேவர்ப்பராயிற்றாகாது பாட்டுடைத் தலைவனோடு கூட்டிச். சொல்லினுமென்றானாம். இங்ஙனங் கூறவே, பாட்டுடைத் தலைவனைக் கூட்டினுங் கூட்டாக்காலுந் தேவர்ப்பராயிற்றேயாம், முன்னிலையாயினென்பது பெற்றாம். [2] மற்றிவை பாடல் சான்ற [3] புலனெறி வழக்கிற்கன்றித் தேவர்ப்பராயதற்கும் உரியவோ————

1. வழக்கினுள் என்றும் பாடம். அதுவே பொருத்தம்.

2. •இவை—ஒத்தாழிசை. இவை எனப் பன்மை கூறியது ஒத்தாழிசையின் பன்மை நோக்கிப்போலும். 454-ஞ் சூத்திரம் நோக்குக.

(தொ. மர. க 0௫.)

என்பதனான் இதனுள்ளுறுப்பிற்கு அடி-

வரையறை உய்த் துணர்ந்தா [4] காட்டினுமென்பது.

(கருக)

[அம்போதரங்க வொருபோகின் உறுப்புக்கள்
இவை எனல்]

சகஉச.

எருத்தே கொச்சக மராகஞ் சிற்றெ
ணடக்கியல் வாரமொ டந்நிலைக் குரித்தே.

இது, முன்னர்க் கூறிய அம்போதரங்கவுறுப்பு இவை ஐந்துமெனக் கூறியவாறு.

இ—ள்: தரவும், கொச்சகமும், அராகமும், சிற்றெண்ணும் அடக்கியல் வாரமுமென ஐந்துறுப்புடையது அம்போ தரங்கவொருபோகு என்றவாறு.

தரவெனினும் எருத்தெனினு மொக்கும்.

இனி, கொச்சகமென்பது, ஒப்பினாகிய பெயர்; என்னை? பல [5]கோடுபட வடுக்கியுடுக்கும் உடையினைக் கொச்சகமென்ப;

1. பதினைந்து சிற்றெல்லையளவு. இதுமுதலாகச் சிற்றெல் லைக்குஅளவு கூறுகின்றாரென்க. இனிச் சிற்றெல்லை என்றிருத் தல்வேண்டும்.

2. இடையளவிற்குந் தலையளவிற்கும் இவ்வாறே வரும் என்பது அவற்றின் சிற்றெல்லையைக் குறித்தது. அவை முப் பதும் அறுபதும். அவற்றிற்கும் இவ்வளவைப்படி ஏற்றிக் கொடுக்கப்படும் என்றபடி.

## 3. அளவியல்—அளவிலக்கணம்.

4. காட்டினுமென்பது, முற்பாடம். அது பிழை; ஆசிரி யன்மேற்றாகுமாதலின். காட்டினும் நாம் எனவும் பாடம்.

5. கோடு—வளைவு. இவ்வுடை ஆடவர்க்குரியது. முன் ஆட வர் முற்பக்கத்திற் கோடுபடக் கொய்து உடுப்பது வழக்கு. இக்காலத்தும் அஃது அருகி வழங்குகின்றது.



அதுபோலச் சிறியவும் பெரியவும் விராயடுக்கியும் தம்முளொப்ப வடுக்கியும் செய்யப்படும் பாட்டுக்களைக் கொச்சகமென்றானுகலி னென்பது. இக்காலத்தார் அதனைப் பெண்டிர்க்குரிய உடை யுறுப்பாக்கியுங் கொய்சகமென்று சிதைத்தும் வழங்குப. இவை வெண்பாவாகல் பெரும்பான்மை; வழிமுறை [1] சுருங்கியும் வரை யறையெண்ணுப்பெறும் [2] எண்போலாது பாவினுந் தளையினும் வேறுபட்டுப் பலவாகியும் வருங் கொச்சகமென்பது.

அராகமென்பது அறாது கடுகிச் சேறல்; [3] பிறிதொன்று பெய்து ஆற்றவேண்டுந் துணைச் [4] செய்வதாகிய பொன்னினை [5] அராகித்ததென்பவாகலின், அதுவும் ஒப்பினாகிய பெயராயிற்று; என்னை? மாத்திரை நீண்டும் துணிந்தும் வாராது குற்றெழுத்துப் பயின்றுவந்து நடைபெறுதலின்.

சிற்றெண் என்பது,
நால்வகையெண்ணினும் இறுதியெண் ணானமையின் அப்பெயர்த்தாயிற்று.

அவ்வுறுப்புக்களிற் கூறிய பொருளை அடக்குமியல்பிற்று வாரமாகலின் அதனை அடக்கியல் வாரமென்றான்; அதற்குச் செய்யுள்:

"செஞ்சுடர் வடமேரு விருமருங்குந் திரிகின்ற
வெஞ்சுடரு மதியமும்போல் வேலொடுகே டகஞ்சுழல
மாயிரு மணிப்பீலி மயிலெருத்திற் றோன்றுங்காற்
சேயொளி கடற்பிறந்த செந்தீயிற் சிறந்தெறிப்ப
மறுவருந்தம் மனத்துவகைக் கழும்ச்சியான் வளர்த்தெடுத்த
வறுவருந்தம் முலைசுரந் தகடிருந்தா றமுதூட்ட
வாருருவத் தெயின்மூன்று மொருங்கவித்தோன் வியப்பெய்த
வீருருவத் தொருபெருஞ்சூர் மருங்கறுத்த விகல்வெய்யோய்
(தரவு)

ஆங்க, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத்
தனைவருந் தத்த மறம்புரிந் தாங்கு
முனையடு கொற்றத்து முந்நான் குருவிற்
கனைகடல் சுட்டன கண்;

1. உம்மை வேண்டியதில்லை.

2. எண்—அம்போதரங்கம்.

3. பிறிதொன்று—பொடி.

4. செய்வது—உருக்குவது.

5. அராகித்தது என்றது பொடியிட்டு ஆற்றத்தக்கதா

யுருகியது என்றபடி.

ளியல் ]
றுகள

## பொருளதிகாரம்

தேவரு மக்களுஞ் சேற்றந்தா னஞ்சாமைக்
காவல் புரியுங் கதிர்மதி போலுமே
மூவிரு தோன்றன் முகம் ;
மடமகள் வள்ளி மணிக்கம் பலம்போல
விடையிடை சுற்றுந லின்றுந் தவிரா
தொடையமை தார்க்கடம்பன் றோள் ;
அவ்வழி, அடியிணை சேரா தவுணர் நுங்கிப்
பொடிபொடி யாகிய போர்ப்பொடு மாய
விடியுமிழ் வானத் திடைநின்றுங் கூஉங்

கொடியணி கோழிக் குரல் ;
விழுச்சீ ரமரர் விசும்பிடைத் தோன்றிப்
பழிச்சினின் றார்த்தார் பலர் ;
(தாழிசை)
உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில் ;
பெருகள வருமறை பெறுநெடு மொழியொடு
பொருகள வழியிசை புகல்வன சிலகுறள் ;
(அராகம்)
சிவந்தனதிசை
சிலம்பினமலை
நிவந்தனதலை
நிரம்பின குறை
ஆர்த்தனமறை
ஆடினர்பலர்
போர்த்தனதுகள்
பொழிந்தனமலர் ; (சிற்றெண்)
ஆங்கனந் தோற்றிய வடுபோர் வென்றியின்
வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே
யாமறி யளவையிற் றமிழ்புனைந் தேத்துக
நின்னீ தக்க தாயினு நின்னெதிர்
நாணில மாகல் வேண்டும் யாணர்க்
கடம்புங் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை
நீரொடு நின்வயி னமர்ந்த
வாராப் புலமை வருகமா ரெமக்கே.''
(அடக்கியல்) என்பது இடையளவம்போதரங்க வொருபோகு.

இவ்வுறுப்புக்களின் அளவு வேறுவேறு கூறுனுபினும் அவற்றுக்கு ஏற்றவாறு அறிந்து செய்யப்படும். இது, நாற்பத்து நான்கடியான் வந்தது. ஒழிந்தனவும் இவ்வாறே வரும். இவை யெல்லாம் இக்காலத்து வீழ்ந்தனபோலும்.

மற்றுக் கொச்சகவொருபோகினை முற்கூறி அதற்கு அளவை

பிற் கூறினுன், இதற்காயின் அளவை யெனின், — அங்ஙனம் அளவைபெற்ற

முற் கூறியதென்னை அம்போதரங்கவொரு

போகின் அளவை, இனிக் [1] கூறுதுநின்ற கலிப்பா [2] மூன்றற்கும்

---

1. கூறுது நின்ற — கூறுநின்ற என்றிருத்தல்வேண்டும்.

2. மூன்று என்றது கலிவெண்பாட்டு, உறழ்கலி என்னு மூன்றையும்.

கொச்சகக்கலி,

அளவென்பதறிவித்தற்கென்பது ; அஃதேதல் [1] இதனையும் அம்போதரங்கத்திற்களவென வரைந்தோதியதென்னையெனின்,— அது தலை இடை கடையென மூன்றளவுபெறுமென்றற் கென்பது. இவ்விகாரத்தானே வருகின்றவற்றோடு இதற்கு வேற்றுமையிலக்கணம் ஒப்பன அறிந்துகொள்க. [2] வருகின்ற கலி வெண்பாட்டிற்கு,

"வெள்ளடி யியலாற் றிரிபின்றி வரும்."

என்றமையின் அதற்கு இவ்வளவை ஒவ்வாதென்பது. (கருஉ)

[கலிவெண் பாட்டாவது இதுவெனல்]

சகரு.

ஒருபொரு ளுதலிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி வருவது கலிவெண் பாட்டே.

இது, நிறுத்தமுறையானே கலிவெண்பாவாமா றுணர்த்து

தல் நுதலிற்று.

இ—ள்: ஒரு பொருளைக் கருதி மற்றொரு பொருள்படவுஞ் சொற்றொடர்ந்து கிடப்பத் தொடுக்கப்பட்ட வெள்ளையடி

யால் திரிபின்றி வருவது

கலிவெண்பாட்டாம் என்றவாறு.

'இயல்' என்றதனன்,

வெண்பாவிலக்கணஞ் சிதையாத

வற்றுக்கே ஒரு பொருள் நுதலவேண்டுவதெனவும்,

றன்றித் திரிந்து வருவனவெல்லாம் [3] ஒரு பொருள்

அவ்வா

நுதலா

வென்னுங் கலிவெண்பாவாமெனவுங்

கூறியவாறு. வெண்பா விலக்கணமென்பது,

கட்டளையாகி வருதலும் தளைவகையொன்றி

வருதலும், பன்னிரண்டடியின் இகந்துவாராமையுமென இவை

யென்பது மேற்கூறினும். அவ்வாறன்றித் திரிந்து வருங்கால்

வாளாதே 'அசைபுஞ் சீரு மிசையொடு சேரா'

தன பாவகை
சிதைந்து கலித்தளையோசை எனப்படும்; அற்றன்றியுந் தனக்
கோதிய சீருந் தளையுஞ் சிதைந்தவழியும், பன்னிரண்டடியின்

---

1. இதனை—இவ்வளவினை.

2. வருகின்ற கலிவெண்பாட்டென்றது—ஒரு பொருணுதலிய கலிவெண்பாட்டினை. எனவே ஏனை ஒருபொருணுதலாது வரும் உறுப்புடைக் கலிவெண்பாட்டே கொச்சகக்கலி, உறழ் கலியோடு ஒருங்களவை பெறுமென்றது.

3. ஒரு பொருள்—வேறும் ஒரு பொருள். இது பேராசிரியர் கருத்து.



இகந்தவழியும், கலிவெண்பாவாதற்கு வரைந்து கூறல்வேண்டுவ தன்றென்பதூஉம், அவை ஒரு பொருள் நுதலாது வரினுங் கலிவெண் பாட்டாமெனவுங் கூறினும்; என்னை? ஒரு பொருள் நுதலியதனைத் திரிபின்றி முடிந்த கலிவெண் பாட்டெனவே [1] ஒரு பொருணுதலியும் நுதலாதும் [2] ஈண்டுக் கூறிய வேறு பாட்டான்

வருவனவெல்லாம் [3] திரிபின்றி முடியாதாகலின் வெண் பாட்டென்பது கொள்ளவைத்தமையினென்பது.

இன்னும் 'திரிபின்றி முடியும்' என்றதனானே ஒரு பொரு ளன்றிப் பலவுறுப்புடைத்தாகித் திரிபுடையதூஉங் கலிவெண் பாட்டுளதென்று கொள்ளவைத்தானும்; அது [4] முன்னர்ச் சொல் லும். உதாரணம் :—

"அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா
தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா
ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ வுளநா
ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு
மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு.''

(கலி. கஅ) என்பது, பன்னிரண்டடியான் வந்து [5] பல பொருணுதலிவந் தமைதலிற் கலிவெண்பாட்டாயிற்று. 'ஒரு பொருள் நுதலிய'

எனவே, சொல்லப்படும் பொருளின் வேறாகிக் கருதியுணரப் படும் பொருளுடைத்தென்பதும் பெற்றாம்; என்னை? இப்பாட்டி னுட் பெண்டன்மைக்கேலாது நுண்பொருளினைத் தலைமக னெதிர்

1. ஒரு பொருணுதலாது வருவது என்று நச்சினார்க்கினியருங் கூறலின் நுதலியும் என்பது வேண்டியதில்லை.

2. ஈண்டுக் கூறிய வேறுபாடென்றது, இசையொடு சேராமையும், சீருந் தளையுஞ் சிதைதலும், பன்னீரடியி னிகத்தலும்.

3. திரிபின்றி முடியாதாகலின் வெண்பாட்டென்பது திரிபின்றி முடியாத கலிவெண்பாட்டென்பது என்றிருத்தல் வேண்டும்.

4. முன்னர் என்றது வருஞ் சூத்திரத்தை.

5. பல என்பது ஒரு என்றிருத்தல்வேண்டும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுவர். ஒன்றல்லாததுபற்றிப் பல என்றாரெனினுமாம். வந்தமையின் என்றுமிருக்கலாம்.



நின்று உணர்த்துவாள் [1] செவ்வனஞ் சொல்லாது தலைமகன் பண்டு கூறியன சிலவற்றை வாங்கிக்கொண்டு சொல்லி, அவன்

[2] மறந்தானென்பது உணர்ந்துகின்ற பொருண்மை கருதி உணர வைத்தமையின் அவ்வாறாயிற்று. [3] ஒழிந்த பாக்களும் அவ்வாறு ஒரு பொருணுதலுமாயினும் அங்ஙனம் [4] நுதலிய பொருள்பற்றிச் செய்யுள் வேறுபடாமையின் ஆண்டாராய்ச்சியின்றென்பது. வெண்பாவிற் குறித்த பொருளினை மறைத்துச் சொல்லாது [5] செப்பிக் கூறல்வேண்டுமாகலானும்; இஃது, அன்னதன்றி ஒரு பொருணுதலித் துள்ளினமையானுங் கலிவெண்பாட்டெனப் பட்டதென்பது.

"மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா
லென்னீ ரறியாதீர் போல விவைகூறி
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு."

(கலி. சு) என்பது, பதினோரடியான் ஒருபொருணுதலிவந்த கலிவெண்பாட்டு. நூற்றைம்பது கலியுள்ளுங் கலிவெண்பாட்டு

எட்டாக லின் அவற்றுள் ஒருபொருணுதலி வருவன பிறவும் உள. அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இனி, பன்னிரண்டடியின் இகந்து ஒருபொருணுதலாது

வருமாறு :

" தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிரீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டாங்காற் றோழிநம்
புல்லினத் தாயர் மகளிரொ டெல்லா

---

1. செவ்வனம்—நேர்மை. சொல்லி உணரவைத்தமையின் என முடிக்க.

2. மறந்தது என்றது தலைவன் தான் பண்டு கூறியதை.

3. ஒழிந்த பா—கலிவெண்பாட்டல்லாத வெண்பா.

4. நுதலிய—கருதிய.

5. செப்பி—வெளிப்படச் சொல்லி. செப்பு உத்தரமாத லின் வெளிப்படக் கூறல்வேண்டுமென்க.

மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்று னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்றதிலை மற்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினைக்கென்று னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றா னியாம்பிறர்
செய்யுற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.''

(கலி. ககக) என வரும். பிறவும் அன்ன.

இனி, பாவகை சிதைந்தனவும் தளைவகை சிதைந்தனவும் வந்தவழிக் கண்டுகொள்க. இவையெல்லாங் காமப்பொருண்மேல வாம். எனவே, கட்டளைவகையானும், தளைவகையொன்றியும் வரும் வெண்பாவாயிற் காமத்திற்கே உரியவெனப்படாவாயின; பிறவும் அன்ன.

இனி, அம்போதரங்கவொருபோகிற்கு இடையின்றிக் கலி வெண்பாட்டு வைத்தமையான்,

"வானூர் மதியம்."

போலும் ஒருசார்த் தேவபாணியுங் கலிவெண்பாட்டேயாம். ஒருபொருணுதலி [1] வரினென்பது. [2] இதனுள்,

"ஆட்சிய ருக வென்கோ."

என்பது வியங்கோளாயினும், அரசன் வாழ்க்கையும் அரங்கிற் கும் ஆடற்கும் இடையூறின்மையுஞ் சொல்லுவாயாகென்று தெய்வத்தினை விஒஅய் [3] வாய்ப்புள் வேண்டி நின்றமையின் அது குறித்துணரப்பட்டு ஒருபொருணுதலியதாயிற்று. [4] கந்திருவ

1. வரினென்பது வருதலின் என்பது என்றிருத்தல்வேண்டும்.

2. இதனுள்—வானூர்மதியம் என்னுமிச்

செய்யுளுள்,

3. வாய்ப்புள்—சொல் நிமித்தம்.
4. கந்திருவம்—இசை நூல்.
66



மார்க்கத்து [1] வரியுஞ் சிற்றிசையும் பேரிசையும் முதலாயினபோலச் [2] செந்துறைப் பகுதிக்கே உரியவாகி வருவனவும், கூத்தநூலுள் வெண்டுறையும் அராகத்திற்கே யுரியவாகி வருவனவும், ஈண்டுக் கூறிய செய்யுள்போல [3] வேறு பாடப் பெறும் வழக்கியலவென்பது கருத்து. இக்கருத்தானே அவற்றை இப்பொழுதும் இசைப்பாவென வேறு பெயர்கொடுத்து வழங்குப.

இனி, யாப்பிலக்கணத்திற்கு ஒப்பவே இசைநூலுட் சொல

லப்பட்ட செய்யுளும் உள; என்னை?

"வெண்பா வியலின் விரவுறுப் பின்றித்
தன்பா வகையொடு பொருந்திய பொருளே
யொன்றுவிளைந் திற்ற விறுதித் தாகும்."

என்றவழி, விரவுறுப்பின்றியென வேண்டா கூறி விரவுறுப் புடையது பொருளொன்று விளையாதென(வும்), விரவுறுப்பில் லது 'பொருளொன்று விளைந்து இற்ற இறுதித்தாகுமெ'ன வுங் கூறினமையின். எனவே, ஈண்டு ஒருபொருணுதலி வரு மெனப்பட்ட கலிவெண்பாட்டுப் பொருள் வெளிப்படாதெனவும், விரவுறுப்புடையது 'வெண்பா வியலான் வெளிப்படத் தோன் றும்' பொருட்டெனவும் நேர்ந்தானும். அது நோக்கியன்றே வருகின்ற சூத்திரத்து 'வெண்பா வியலான் வெளிப்படத் தோன் றும்' எனக் கலிவெண்பாட்டினையே கருதி ஓதுவானுமிற்று மென்பது. (கடுரு)

[விரவுறுப்புடைய கலிவெண்பாட்டு இவ்வாறு வருமெனல்]

௪௬௬. தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து
மைஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்.

1. வரி முதலியன இசைப் பாட்டின் வகைகள். உரியனவாகி வருவனவுமென இயைக்க.

போல

2. செந்துறை இசைநூற்குரிய பாட்டு.
"செந்துறை என்பது ஒலி குறித்தன்றே
வெண்டுறை என்பது கூத்தின் மேற்றே."
என்பது ஒருசாரார் கூற்று. நாற்பெரும்பண்ணும் இருபத்தொரு திறனும் ஆகிய இவையெல்லாஞ் செந்துறை. மேற்புறம் பதினொரு ஆடலும் என்றிவையெல்லாம் வெண்டுறை என்பது வாய்ப்பியம் என்பர் யாப்பருங்கல விருத்தி நூலார்.

3. வேறுபடப் பெறாஉம் என்றிருக்கலாம்போலும். விரவுறுப்புடையது, இல்லது என இசைநூலுள் வருவதாகப் பிற்கூறப்படுதல் நோக்குக. ஈண்டுக் கூறிய செய்யுள் கலிவெண்பாட்டு.



இது, மேல் 'வெளிப்படு பொருட்டு' எனப்பட்ட வெண்கலி விரவுறுப்புடைமையின் அதனை வேறு கூறுகின்றது.

இ—ள்: தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும் என்பது, தரவிற்கும் போக்கிற்கும் [1] இடையின்றிப் பாட்டாகிப் பயின்றுவருதலும் என்றவாறு; எனவே, தரவும் போக்கும் முன்னர் ஓதியவகையானே முன்னும் பின்னும் நிற்குமென்பதூஉம், சுரிதகமாயின் வெள்ளையும் அகவலுமாய்ப் பாவோடு வந்துழிப்போலத் தனிச்சொற் பெற்றும் பெறுதும் வருமென்பதூஉங் கொள்க, 'தரவும் போக்கும்" எனப் பாட்டிறுதி நின்ற போக்கினை முன்வைத்தான் அவை ஓரினத்தவாகலின்; என்னை? தரவிறுதி, சீரான் இறுமாறுபோல வெள்ளைச் சுரிதகவிறுதியும் ஓரோவழிச் சீரானே இறுதலின். அது,

"தாதுதேர் வண்டின் கிளைபாடத் தைஇய
கோதை பரிபாடக் காண்கும்." (கலி. அ௦)

என நான்கசையானுமின்றித் தேமாவானிற்றது.

இனி, பாட்டினைப் போக்கின்பின் வைத்தகனாற் போக்குப்போல நாற்சீரான் இறுவனவும் அப்பாட்டுள் சிறுபான்மையென்பது; அது,

"காந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு." (கலி. கசக)

என்றாற்போல வரும். இங்ஙனம் வைப்பவே, வருகின்ற ஐஞ்சீரடுக்கலும் ஆறுமெய் பெறுதலும்' அவற்றுக்கன்றி ஏலாவாயின; அல்லதூஉம், இதனை இறுதிவைத்தான் இதனோடொக்குமென முற்கூறப்படுங் கொச்சகம், தாவும் போக்குமின்றிப் பாட்டு மிடைந்தேவருமென்பது இவ்வதிகாரத்தாற் கோடற்கென்பது. அது முன்னர்க் காட்டுதும்.

ஐஞ்சீரடுக்கியுமென்பது, வேறு நின்றதொரு சீரினை அளவடியுடன் அடுக்கிச் சொல்ல ஐஞ்சீராகியும் என்றவாறு; ஆறுமெய்பெறற்றும் என்பது, அவ்வாறே இருசீரடுக்க ஆறுசீர் பெற்றும் என்றவாறு; 'மெய்' என்றதனான் அடுக்குஞ்சீர் முதலும் இறுதியும் வருமென்பது கொள்க.

---

1. இடையின்றி என்பது இடையன என்று ஏட்டுப்பிரதியிற் காணப்படுகின்றது. அதுவே பொருத்தமாகும். நச்சினார்க்கினியரும் இடையன என்றே கூறுதல் காண்க.

வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றுமென்பது

வெண்பாவென்னும் உறுப்பினியற்கை சிதையாமற் பொருள்

புலப்படத் தோன்றும் என்றவாறு.

இயற்கை சிதையாமல் தோன்றுமெனவே கட்டளையும் கட்

டளையல்லதும் எனப்பட்ட வெண்பாவிலக்கணம் இரண்டுஞ்

சிதையாமை வருமென்றுணும்; தரவும் போக்குமென நின்ற

உம்மை, எண்ணும்மை. 'பாட்டிடை மிடைந்து' என்பது முதலாக வந்த உம்மை மூன்றும் இறந்தது தழீஇய எச்சவும்மை. என்னை? மேற்கூறிய தனிநிலை வெண்பாட்டேயன்றித் [1] தரவுமாய்ப் பாகவும் என்றமையின். இவ்வாறன்றி, [2] அவ்வனைத்தும் எண்ணும்மை கொள்ளின் உறுப்பினையே எண்ணல்வேண்டும்; அல்லாக்கால், வினையொடு பெயரெண்ணின் அதன் உறுப்பினையே [3] எண்ணினுைகலானென்பது; அல்லதூஉம், தரவும் போக்கும் [4] முதல் வந்தும் இறுதிவந்துமென அவையும் தம் வினையான் எண்ணவும் படுமன்றேவென மறுக்க. அவற்றுக்குச் செய்யுள் கூறுங்கால், தரவும் போக்கும் பாட்டிடை [5] மிடைந்து தோன்றும்; அதுவே ஐஞ்சீரடுக்குப் பெற்றதொன்றும், அறுசீரடுக்குப் பெற்றதொன் றும், அவையிரண்டும் உடன் பெற்ற [6] தொன்றுமென்றும் இங்

1. தரவுறுப்பாகப் பாட்டிடைமிடைந்தும் என்றிருப்பது நலம். தரவுறுப்பாகவென்றுமிருக்கலாம். அல்லது இறந்தது தழீஇய எச்ச உம்மைக்கு விளக்கமின்றாம்.

2. அவ்வனைத்தும் என்றது தரவும் போக்கும் என்பவற்றி லுள்ள உம்மைகளையுஞ் சேர்த்து எண்ணும்மை கொள்ளின் என்றபடி.

3. எண்ணினுனாகலான் என்பது எண்ணினல்லனாகலான் என்று இருத்தல்வேண்டும். என்னை? மறுத்துக் கூறலின். பெய ரும் பெயரு மெண்ணினன்றிப் பெயரும் வினையு மெண்ணின் அப் பாவின் உறுப்பினை எண்ணினல்லனாய் முடியுமென்றபடி.

4. தரவு முதல் வந்தும் போக்கு இறுதி வந்தும் பாட்டு இடைமிடைந்தும் என்று வினைகொடுத்து ஆசிரியர் சூத்திரிக்க லாம் என்றபடி.

5. மிடைந்து தோன்றும் என்பது மிடைந்ததென்றும் என் றிருப்பதுவே பொருத்தம். மேல் உதாரணம் நோக்கித் தெளிக.

6. 'தோன்றுமென்றும்' என்பது 'தொன்றும் என்று' என் றிருத்தல்வேண்டும். முன்னுள்ள ஒன்றும் என்பன என்றும் என்று மிருக்கலாம். பவானந்தம்பிள்ளை பதிப்பில் ஒன்றும் என்பன என் றும் என்றும், தோன்றும் என்பது தோன்றுவதென்றுங் காணப் படுகின்றது. அப்படியுமிருக்கலாம்.



னனம் விகற்பித்துக் கூறப்படுமென்பது. [1] அவை கட்டளை

வெண்பாவான் வருதலும் ஒழிந்த வெண்பாவான் வருதலுமென விகற்பிக்கப்படாவோவெனின், — அவ்விகற்பம் அடிக்கல்லது பாவிற்கின்மையானும் ஈண்டுப் பா வேறுபாடின்மையானும் அங்ஙனம் பகுத்ததனாற் பயந்ததின்மையான மறுக்க; வரலாறு;—

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனா லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;
யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;
உய்யா வருநோய்க் குயலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா;
காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தென்
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை;
காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;
அகையெரி யானாதென் னாருயி ரெஞ்சும்
வகையினா னுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;
அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற

நேரிழை யீத்தவிம் மா ;
ஆய்கதை ;
அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த நுந்தலைக் கடனே.'' (கலி: கஙக)

என்பது, தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்த கலிவெண்பாட்டு ஆசிரியச் சுரிதகத்தான் வந்தது.

---

1. அவை என்றது மேற்கூறிய கூறுப்பான் வருவன நான்கையும்.



இனி, வெள்ளைச் சுரிதகத்தான் வந்தனவும் கண்டுகொள்க.

"கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குவிர் கொண்டது
மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
நெடியோன் மகனயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய விடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்
கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே னொருவனேன் யான் ;
என்னனும் பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுவேன்—பாடுகோ
வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா ;

திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ—ரின்சாய
லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர் ;
தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி னுய்யுமாம்—பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர் ;
வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்
றஞ்சலென் றாறு முயிர்ப்புண்டா—மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம
மறிந்து மறியாதிவ் வூர் ;
ஆங்க,
என்க ணிடும்பை யறீஇயினெ னுங்கட்
டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல
விருளுறு கூந்தலா ளென்னை
யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே.'' (கலி. கசo)

என்பது, தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்த கலிவெண் பாட்டு ஆசிரியச் சுரிதகத்தாலிற்றதாகலின், இதனுள்,

"என்னுனும் பரடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே:"

என்னும் அடி ஐஞ்சீரடுக்கியும் வந்தது; என்னை?

"பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ.''

என்னும் அளவடியிரண்டும் எதுகையாய் அமைந்தவழி 'என்னுனும்' என வேறுநின்ற சீரொடுங் கூடி ஐஞ்சீரடுக்கினமையின். இதனுள் 'ஆங்க' எனத் தனிச்சொல் வந்தது.

"காராரப் பெய்த"

(கலி. ௧௦௯) என்னும் முல்லைப்பாட்டு ஐஞ்சீரடுக்கி

வெள்ளைச் சுரிதகத்தா னிற்றது.

" அரிதினிற் றோன்றிய யாக்கை புரிபுதாம்
வேட்டவை செய்தாங்குக் காட்டிமற் றாங்கே
யறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன்
றிறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன்
றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி
யணிநலம் பாடி வரற்கு ;
ஓரொருகா லுள்வழிய ளாகி நிறைமதி
நீரு ணிழற்போற் கொளற்கரியள் — போரு
ளாடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன்
மன்றம் படர்வித் தவள் ;
வாழி சான்றீர், பொய்தீ ருலக
மெடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம் வேட்டனள் — வையம்
புரவூக்கு முள்ளத்தே னென்னை யிரவூக்கு
மின்னா விடும்பைசெய் தாள் ;
அம்ம சான்றீர், கரந்தாங்கே யின்னாநோய் செய்யுமற் றிஃதோ
பரந்த சுணங்கிற் பணைத்தோளாள் பண்பு ;
இடியுமிழ் வானத் திரவிருள் போழுங்
கொடிமின்னுக் கொள்வேனென் றன்னள் — வடிநாவின்
வல்லார்முற் சொல்வல்லே னென்னைப்
பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள் ; வாழி சான்றீர் ;

என்றாங்கே ;
வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர்.'' (கலி. கசக)

என்பதனுள், 'வாழி சான்றீர்', 'அம்ம சான்றீர்', என ஐஞ்சீ ரடுக்கியாங்கு அடுக்கிச்சொல்ல அறுசீராயின. இதற்கும் 'ஐஞ்சீர் அடுக்கியும்' என்றதுபோல, அறுசீரடுக்கியுமென்று [1] அடுக்குதற்றொழில் கொள்ளப்படும், ஈண்டு இரண்டளவடி தொடைப்படச் செய்தமையினென்க. இதனுள்ளும் 'என்றாங்கே' என்பது தனிச்சொல்.

"புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கட்
செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது.''
(கலி. கசஉ)

என்பதனுள்,

"இனைந்துநொந் தழுதன ளினைந்துநீ
டுயிர்த்தனள்.''

---

1. அடுக்கல்—நாற்சீரோடு அடுக்குதல். அடுக்குதல் றதனால் அது வேறாய் நிற்கும் என்பது பெறப்படும்.
என்

என்வும், இயற்சீர் நிரையொன்றியும் பா வேறுபடாமையின்
இதுவும் கலிவெண்பாட்டாயிற்றென்பது கொள்க.
இங்ஙனம் பா வேறுபடாமையினன்றே,

"உருஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
[1] செருஅய் வாழிய நெஞ்சு."

(குறள். கஉ00) என்பதனை வெண்பா
என்பாமாயிற்றென்பது; இனி,

"எல்வீரா நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல."
(கலி. கசஉ) என வெள்ளைச் சுரிதகத்துள்
ஐஞ்சீரடியும் வந்தது. வெண்பா விற்கு முன்னர்,

"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முள."
(நஎரு)
என்றுணகலின், மேற்கூறெனவும்
சொற்சீரெனவுங் கூறப்பட் டனவே ஈண்டு

ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய் பெற்றுங் கூறப்பட் டன என வுணர்க. இதற்கு ஐஞ்சீரும் அறுசீரும் விதந்தோதவே, மேற் சிறுபான்மை பொதுவகையாற் கலிக்கு நேரப்பட்ட சொற் சீரடி ஒத்தாழிசைக்கும் முற்கூறிய கலிவெண்பாட்டிற்குமாயின் எஞ்ஞான்றும் வாராதென்பதூஉம், அதுதானும் இதற்கு வருங் கால் இருசீரின் இகந்து வாராதென்பதூஉங் கூறினும். இங் ஙனஞ் சொற்சீரடி விலக்கவே அதற்கினமாகிய முடுகியலடியும் ஒத்தாழிசைக்கு வாராதென்பதாம். அது வெண்கலிக்கோ வெனின்,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்."
(சகூகூ)

எனவே விலக்குண்டதன்றேயென்க.

இனி, தரவிற்கும் போக்கிற்கும் பாட்டிற்கும் இவ்வள வைத்தென்பது அம்போதரங்கத்திற்கு ஓதியவகையாற் கோடு மென்றமையின் அதற்கேற்றவகையான் வருவதன்றி வேறுவேறு வரையறையிலவென்க. 'பாட்டிடை மிடையின்' என்றமையின், ஈண்டுப்

பாட்டென்றது, கொச்சகத்திற்கேயுரித்தென்பது; மற்று,

"வெண்டளை [2] தன்றளை யியற்றளை விரவியும்
வெண்பா வுடையது வெண்கலி யாகும்."

---

1. செருஅஅய் என இருமாத்திரை நீண்ட வளபெடையாகக் கொள்வர் நச்சினார்க்கினியர். அங்ஙனங் கொள்ளின் வழுப்படாது. ஆதலின் பேராசிரியர் கூற்று ஆராயத்தக்கது. வாழியென் னெஞ்சு எனவும் பாடம்.

2. தன்றளை —கலித்தளை.



எனத் தளை விரவியும் வெண்பாச்
சிதையாதவழிக் கலிவெண் பாட்டாமென்று
1 ஒரு சூத்திரஞ் செய்யாரோ பலவுறுப்பு
வந்தவழியும் இது
புறனடையாகவெனின்,—அற்றன்று,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்."

(௪௬௬)

எனவே இவையெல்லாம் அடங்குதலின் அது வேறு கூறு னென்பது. இனி, பலவுறுப்பின்றி [2] அவ்வாறு ஒரு பாட்டே வரின் அதனை வெண்கலியென்பாரும் உளர். நூற்றைம்பது கலியுள்ளும் அன்னதோர் கலிவெண்பாட்டின்மையின் அது சான்றோர் செய்யுளொடு மாறுகோளாமென மறுக்க.

மற்று, 'பாட்டிடை மிடைந்து' என்றவழி, பாட்டெனப் பட்டது, இடைநிலைப் பாட்டென்றுமோ கொச்சகமென்றுமோ வெனின்,—எஞ்ஞான்றுந் தாழம்பட வாராமையின் இடைநிலைப் பாட்டென்னும் : துள்ளலுஞ் செப்பலுமென்னும் இருவகைக் கொக்சகமும் ஒருங்கு வாராமையிற் கொச்சகமென்னும். கொச் சகமென்னும் பொதுப்பெயரான் அது கூறாயினும்,

" வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்."

என்றதனுன் வெள்ளைக் கொச்சகமெனப்படும் அவையென்பது ; அஃதேல், கொச்சகமென்று ஓதுகவெனின்,—அங்ஙனம் ஒதின் [3] இது கொச்சகக் கலியாமென்று கருதினுங்

கருதற்கவென் பான் வாளாதே 'பாட்டு' என்றான். இதனாலும் பெற்றாம் இது கொச்சகக்கலியல்லாமை.
(கருச)

[கொச்சகக் கலிப்பாவி னிலக்கணம் இதுவெனல்]

சகஎ. பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே.

இது, நிறுத்த முறையானே அகநிலைக் கொச்சகக்கலி யுணர்த்துகின்றது. 'பாநிலைவகை' என்பது, உம்மைத்தொகை;

1. ஒரு உத்தரம் என்பது, பாடம். அது பொருத்தமில்லை. வேண்டும்.
சி. வை. தாமோதரம்பிள்ளை ஒரு சூத்திரமென்று இருக்க

2. அவ்வாறு—தளைவிரவி.
3. வருஞ் சூத்திரத்தை வேறு பிரித்தற்காக இங்ஙனங் கூறினர் பேராசிரியர். இளம்பூரணர் வருஞ் சூத்திரத்தையும் இதனையும் ஒன்றாக்குவர். அதுவே பொருத்தமாம்.

பாநிலேயும் வகையுமென விரியும்.
பாநிலேயென்பது, ஆரும்
வேற்றுமைத்தொகை.

இ—ள் :
மேற் [1] பாவினின்ற வகையானே கொச்சகக்கலியா
மென்று நூலாசிரியர் கூறித் துணித்தனர்
என்றவாறு.

அறைதலெனினும்
துணித்தலெனினும் ஒக்கும்; என்னே ?
துணித்த கரும்பினே,
" அறைக் கரும்பு."
(பொருந. கககூ)
என்பவாகலின். 'பாநிலே' என்றது,
யாதனே நோக்கியெனின்,—

இது கொச்சகமாதலான் அதுவும் மேலே ஒருபோகெனக் கூறப்பட்ட கொச்சகப் பாநிலேயெனக் கொள்க. அதனேத் துணித்
தனரென்றதனுல்,

" தரவின் றாகித் தாழிசை பெற்று."
(சஙுக)

வருமென்ற கொச்சகத்தினை இதற்கு இயைபின்றாக முன்வைத்துச் சேட்படுத்தமையின் அஃதொன்றனையுந் துணித்துமாற்றி அல்லாத [2] கொச்சகப்பாவினின்ற வகையான் [3] இவ்வகைநிலைக் [கொச்சகம் வரும். பரணிப்] [4] பாட்டுப்போல அகநிலைக் கொச்சகம் வாராவென்றானும். 'வகை' என்றதனான், அதிகாரத்தானின்ற வெண்கலிப்பாவினது பாநிலையுங் கொள்ளப்படும். அஃதேல், அதனைப் பாநிலையென்னாது 'வகை' என்பது எற்றுக்கெனின்,—வெண்கலிப்பா,

." தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து
..........................................................
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்."

---

1. பாவிநின்ற என்ற பாடம் பொருத்தமில்லை. பாவினின்ற என்ற பாடமே பொருத்தம். பாநிலை — ஆறாம் வேற்றுமைத் தொகை என்றலின். மேற்பா என்றது கொச்சக ஒருபோகை. சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்புப் பொருத்தம். பாநிலை வகை—உம்மைத் தொகையென்று கூறியதற்கேற்பப் பதஉரை கூறப்படவில்லை. பாவினின்ற நிலைவகை என்றிருப்பது நலம். நச்சினார்க்கினியம் நோக்குக.

2. கொச்சகப்பாவினின்ற என்ற பாடமே பொருத்தம். பவானந்தம்பிள்ளை பதிப்பு நோக்குக.

3. இவ்வகைநிலை என்பது இவ்வகைநிலைக் கொச்சகம் வரும்

என்றிருத்தல்வேண்டும்.

4. பாட்டுப்போல என்பது, பரணிப்பாட்டுபோல என்றிருத்தல் வேண்டும். நச்சினார்க்கினியருரை நோக்குக. பரணி—தரவின்றாகித் தாழிசையான் வருவது. அது துணிக்கப்பட்டது.



என்றதனான் [1] வெண்பாவிற் சிதையாது வருமென்று [2] உறுத்துக் கூறினானென்பது; எனவே, [3] பாவொழிந்த உறுப்பெல்லாம் பொருணுதலாது [4] வெளிப்படத் தோன்றுங் கலிவெண்பாட்டின் உறுப்புவகையான் வருதலும் [5] உடைத்தென்றவாறு. அங்ஙனம் வருங்கால் இடைநின்ற கொச்சகங்களை,

" ஐஞ்சீ ரடுக்கலும்."

என்ற கலிவெண்பாவிற்கு ஓதியவாறே கொள்க.

மற்று, ' நாலறி புலவர் '
எனவேண்டியதென்னையெனின்,—

தரவு இணைந்து வாராது யாப்பின் வேறுபட்டு ஒரு தரவே கொச்சகமாதலும், தரவிணைந்தவழிச் சுரிதகம் பெறுதலும், அவை தனிச் சொல்லுஞ் சுரிதகமும் உடன் பெறுதலுமெல்லாம், 'யாப்பின் வேறுபட்டன' என்றலும், ஒத்தாழிசை மூன்றடுக்கினும் அவற்றினை வேறுபாடறிந்து கொச்சகமெனக் கோடலும், தேவபாணியாகாதவழிக் [6] காமப்பொருளைபற்றி வாராது, அறம்பொருளின்பம்வீடென்னும் நான்கும்பற்றிப் பொருள் வேறுபட வருதலும், பா வேறுபட வருதலும் [7] [ பற்றிக் ] கொச்சகக்கலியென்று உணர்வோர் நூலறிபுலவரெனவும் [8] அல்லாதது புலனாகாதெனவுமெல்லா மறிவித்தற்கு,—

"நூலறி புலவர் நுவன்றறைந் தனர்."

என்றானென்பது. எனவே, கொச்சகக்கலியுள் ஒருசாரனவற்றை [9] இனமென்று வேண்டுவாருளராயின் [10] அவை அவ்வப் பாவின்

---

1. வெண்பாவியலின் என்றிருப்பது நலம்.
2. உறுத்தல்—வலியுறுத்தல்.
3. பா—கொச்சகப்பா.
4. வெளிப்பட—பொருள் வெளிப்பட.
5. உடைத்து என்பதற் கெழுவாய்

கொச்சகக்கலி.

6. காமம்—இச்சை.
7. பற்றி என்பது வேண்டியதில்லை.

டுஞ் சேர்க்கப்பட்டது.

மூன்வந்த பற்றி மீட்

8. 'அல்லாதது' — 'அல்லாதார்க்கு அது' வேண்டும்.
என்றிருத்தல்

9. பாவினம்.
10. அவை—அவர் இனமாகவேண்டுவன. அவ்வப்பா என்பது இனஞ்சார்த்தும் வெண்பா முதலிய அவ்வப் பாக்களை.



இனங்கட்கு இவ்வகையே [1] கொச்சகமென வேறுபடுமென்றவா
றாயிற்று.

உதாரணம்:—

"செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
..................................................
மகனல்லை மன்ற வினி."

(கலி. கக)

எனவும்,

"செல்வினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
..................................................
அவலம் படுதலு முண்டு."

(கலி. கக)

எனவும், தாவிரண்டு அடுக்குதலின் தாவிணைக் கொச்சகமெனப்

படும். இது நூற்றைம்பது கலியுளொன்றாகலின் வெண்பாவாகி

யுந் தனித்து வரும். வருங்காற் கலிவெண்பாட்டென்றாயிற்று.

ஒருபொருணுதலி இவ்வாறு வரினும் இஃதொக்கும். இது

தாழிசையோடு [2] கோடாத் தரவாகலின்

வெண்பாவாகியும்

வந்தது.

**" மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்**

.......................................................................................................................

**சென்றனை களைமோ பூண்கநின் றேரே."**

(கலி. கஙஙு)

என்பது, தனிச்சொல்லின்றி ஆசிரியச் சுரிதகம் பெற்ற தா

விணைக் கொச்சகம்.

**" மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோல்**

.......................................................................................................

யேழைத் தன்மையோ வில்லை தோழி.''
(கலி. ருரு)

இது, தனிசொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்ற தர விணைக் கொச்சகம். இனி, பல [3] அடுக்கிய பொருட்டொடராய் வருந் தரவு கொச்சகங்களும், [4] பொருட்டொடர் நிலையுள் அறம் பொரு ளின்பம் விராய்வருந் தரவுகொச்சகங்களும் வந்தவழிக் கண்டுகொள்க.

'' வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தான்.''

(கலி. ககஅ)

---

1. நச்சிஞர்க்கினியரும் கொச்சகம் எனல்வேண்டும். ஆதலின் அது பொருந்தாது என்பர்.

2. கோடா—கொள்ளாத.

3. அடுக்கி என்றிருத்தல்வேண்டும்.

4. பொருட்டொடர் நிலையுள்—அப் பொருட்டொடர் நிலையுள் என்றிருத்தல்வேண்டும். அவை

சிந்தாமணிபோல்வன. நச்சி
ஞர்க்கினியம் நோக்குக.

ளியல்] பொருளதிகாரம்.
ருகக

இது, தரவுந் தாழிசையும் போக்கும் முறையானே வந்த தாயினும்,

" அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி."

என்னும் இலக்கணஞ் சிதையத் தாழிசைகடோறுஞ் சொற்சீர் பல வருதலான் ஒத்தாழிசையெனப்படாது அதன்வகைத்தாய் 1
எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகமென்பதூஉ மாயிற்று.

" அருமர்ந்த காட்சியா னறநோக்கா னயஞ்செய்யான்."

(கலி. கஉ0)

" நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்."

(கலி. கரு0) என அடக்கியலின்றி அடிநிமிர்ந்தொழுகியதுபோலுங் கொச்சகம் வருங்கால் ஒத்தாழிசையும் வண்ணகமும்போலத் தனிச் சொற் பெற்றும் பெறாதும் வரும். [2]

நெய்தற்றிணைப் பாட்டுக்கும் இஃதொக்கும். அது வருமாறு:—

"கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம்
பொலங்கோதை." (ருச) என்னுங் கலியுள், 'அதனை' எனத் தனிச்சொற் பெற்று அடக்கியலில்லாச் சுரிதகத்தோடு அடிநிமிர்ந்தொழுகிற்று.

"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
.................................................................
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே."

(கலி. உக) என்னுங் கலிப்பாட்டுத் தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம்பெற்று அடிநிமிர்ந்தொழுகிற்று.

"எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற
ஐம்பால்போல்." என்னும் பாலைப்பாட்டும், (கலி. ருஉ)

" அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாக." (கலி. ககூ) என்னும் நெய்தற்றிணைப்பாட்டும் அங்ஙனமாமாறு கண்டுகொள்க.

இனி, [3] யாப்பின் வேறுபட்ட கொச்சகவொருபோகோ டொப்பனவற்றுட் சில வருமாறு :

---

1. எண் — அம்போதரங்கம். அம்போதரங்க உறுப்பு.

சின்னம் — ஒருசீராய் வரும்

2. நெய்தற்றிணைப்பாட்டு என்றது நெய்தற்கலியை.

3. யாப்பு—செய்யுள்.



" மன்றுபார்த்து, நின்றுதாயைக்
கன்றுபார்க்கு, மீன்றும்வாரார்."

என்பது [1] இருசீர் நான்கடித் தரவு கொச்சகம்.

"தஞ்சொல் வாய்மை தேற்றி
யஞ்ச லோம்பென் றகன்ற
வஞ்சர் வாரா ராயி
னெஞ்ச நில்லா தேதான்."

என்பது [2] முச்சீர் நான்கடித் தரவு கொச்சகம்.

[3] "நீரலர் தூற்றத் துயிலா நெடுங்கங்குல்
வாரல ராகி யவரோ வலித்தமைந்தா
ராரலார் நாரைகா ளன்றில்கா ளன்னங்கா
ளூரலர் தூற்றயா னுள்ள முருகுவனே."

என்பது, நாற்சீர் நான்கடித் தரவு கொச்சகம்.

[4] "கன்னி ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட
பொன்னங் கொடியை யின்றே நில்லே
போலுமான்
மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி
யின்ன தொன்று படைத்த தாயி
னெவன்செய்கோ." இஃது, ஐஞ்சீர் நான்கடித் தரவு கொச்சகம்.

இனி, கோவையாக்கி [5] எழுத்தெண்ணி அளவியற்படுத்துச் செப்பினும் அவையேயாம்.

[6] "காண்பா னவாவினுற் காதலன் காதலிபின்

ணடவா நிற்ப
நாண்பால ளாதலா னன்னுதல் கேள்வன்பின்
ணடவா நிற்ப
வாண்பான்மை குன்றா வயிவே லவன்றனக்கு
மஞ்சொ லாட்கும்
பாண்பால வண்டிளமும் பாட வருஞ்சுரமும்
பதிபோன் றன்றே." என்பது, அறுசீர் நாலடித்
தரவு கொச்சகம். பிறவும் அன்ன.

7 "இலங்கொளி வெண்மருப்பி னிட்டகை தூங்கவோ
ரேந்தல் யானை
கலங்கழு ரெய்திக் கதுஉங் கவளங் கடைவாய்
சோரச்
சிலம்பொழி குன்றென நின்றது செய்வ
தெவன்கொ லன்னாய்." இஃது, அறுசீர் மூன்றடித்
தரவு கொச்சகம்.

---

1. இருசீர் நான்கடி முதலியவற்றை
இனமென்பர் யாப் பருங்கல நூலார். அவர்
இதனை வஞ்சித்துறை என்பர்.
2. வஞ்சி விருத்தம் என்பர் யாப்பருங்கல
நூலார்.
3. கலிவிருத்தம்.
4. கலித்துறை.
5. இது கட்டளைக் கலித்துறை.
6. ஆசிரியவிருத்தம்.
7. ஆசிரியத் தாழிசை.

[1] "தண்ணந் துறைவன் றூர்மேற் போன
வண்ணா வண்டு வாரா தற்றே
வண்ணா வண்டு வாரா தாயிற்
கண்ணீர் நில்லா தேகாண்."

என்பது, நான்காசிரியவடியுள் இறுதியடி முச்சீரான் வந்து யாப்பு வேறுபட்டது.

[2] "திணங்கொள் புலாலுணங்க னின்றுபுள் ளோப்புத
றலைக்கீ டாகக்
கணங்கொள் வண்டார்த் துலாங்கன்னி நறுஞாழல்
கையி லேந்தி
மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றுண்டோ
ரணங்குறையு மென்ப தறியே னறிவேனே
லடையேன் மன்னோ."

(சிலப். கானல். கூ)

என்பது, இடையடி குறைந்து வந்தது. இஃது,

"அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே."

(நஎச) என்றோதப்பட்டதாயினும் [3] பா மயங்கிவரும் பகுதிபற்றி வேறு கூறப்பட்டது.

[4] "புன்னை நீழ லின்றூர் யார்கொ
லன்னை காணின் வாழாள் தோழி."

எனவும்,

[5] "மல்ல லூர விவ்வி லன்றூற்
பல்பூங் கோதை யில்."

எனவும் இவை இரண்டடியான் ஈற்றடி குறையாதுங் குறைந்தும் வந்தன. இன்னும் மேற்கூறிய கொச்சகவொருபோகின் பகுதியுள் ஒழிந்தனவும் இவ்வாற்றான் வருவனவெல்லாம் வந்த வழிக் கண்டுகொள்க.

இனி, 'வகை' என்றதனான் வெண்கலியுறுப்பு நிலையொத்துப் பா வேறுபடுங் கொச்சகம் வருமாறு:

"ஒன்று, இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு மூலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
..........................................................................................
மற்றவன் மேஎவழி மேவாய் நெஞ்சே."

(கலி. சஎ) என்பது, தரவும் கொச்சகமும் சுரிதகமும் முறையானே வந்து ஆசிரியச் சுரிதகத்தான் இற்றது. இதனுள் 'ஒன்று'

எனவும்,

1. ஆசிரிய இணைக்குறட்டுறை.
2. ஆசிரியத்துறை.
3. பா—ஓசை.
4. வெண்செந்துறை.
5. குறட்டாழிசை.



'அவனை' எனவும் சொற்சீருந் தனிச்சொல்லும் வந்தன. இப் பாட்டு மூன்றனுள் ஒன்று ஓரடிமிக்கு மற்றைய நான்கடியாயே வருதலின் மூன்றும் ஒருபொருண்மேல் வரினும் நாலறிபுலவ ரான் ஒத்தாழிசையெனப்படாக் கொச்சகமாயிற்று. பிறவும் இன்னோரன்னவற்றுற் கலியொடு இதனிடை வேறுபாடு தெரிந்து உணரப்படும், அஃதறியாதார்க்கு ஒன்றுபோலக் காட்டினு மென்பது.

"வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு

........................................................................

முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே."

(கலி. எ)

என்னும் பாட்டு, தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து ஐஞ்சீரடுக்கி வந்தது. இதனுள் தரவடி நான்கும் வெண்பாவாயினும் அச்செய்யுண் முழுதும் வெண்பாவன்மையிற் கொச்சகமாயிற்று. இனி, அறுசீரான் வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவர்ள்." (கலி. ௩௯)

என்னுங் கொச்சகக்கலியுள்,

"ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறுலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்."

என இடைநின்ற கொச்சகம் ஈற்றடி குறைந்தது.

"புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றே."

எனக் கொச்சகம் ஈற்றடி குறையாது வந்தது. இவை இரண்டும் வெண்பூ. இதனுள் ஒழிந்த [1] பா மயங்கியவாறு கண்டு கொள்க.

"கொடுமிட னுஞ்சிலான் றூர்போன் மராத்து."
(கலி. ௩௯) என்னும் பாட்டினுள்,

"பாஅய்ப் பாஅய் பசந்தன்று நுதல்

"சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்."
என முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடி வந்தது.

"மவிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்."
(முல். கoச) என்னும் முல்லைப்பாட்டினுள்,

1. ஒழிந்தபா—ஆசிரியம் முதலியன.



"இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடா வெகுளி யெழிலேறு கண்டை."
எனவும்,

"தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றித்
தலைசென்று." எனவும் முடுகியலடி வந்தது.

இவற்றுளெல்லாஞ் சொற்சீரடி வந்தன. ஒழிந்த கொச்சகப் பகுதியும் இவ்வாறே வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, தரவும் போக்குமின்றிக் கொச்சகம் திற்றது வருமாறு :

பலதொடர்ந்

" காலவை, சுடுபொன் வளைஇய வீரமை

சுற்றொடு."

(கலி. அரு)

என்னும் மருதக்கலி [1] உறழ்பொருட்டன்மையிற் கொச்சகக் கலியாயிற்று. இவையெல்லாம் பாநிலையெனப்பட்ட கொச்சகமா மெனின்,—அற்றன்று ;

" அம்போ தரங்க மறுபநிற் றடித்து."

(சகூரு) என்றவழி, அளவை முற்கூறிய மயக்கினான் இனியெல்லாந்

தன்னளவெனப்படுமென்று புகுந்தமையின். இதற்குக் கொச்சக வொருபோகின் அளவை கொள்ளப்படாது, பாநிலைவகைத்தென் ஞனமயின்.; பிறவும் அன்ன.

இனி, கலிவெண்பாட்டெனக் கூறிய உறுப்புடைக் கலி வெண்பாட்டும், ஈண்டுப் பாநிலையெனப்பட்ட கொச்சகப் பகுதியு மென இரண்டுங் கொச்சகவுறுப்புடைமையிற் கொச்சகக்கலி யென ஒன்றேயாமென மேலைச் சூத்திரத்தோடு இதனை [2] ஒன்றாக வகுப்ப; அற்றன்று; மேல் ஒருபொருள் கரவாது வெளிப் படத் தோன்றின் ஒரு பொருணுதலியதுபோலக் [3] கலிவெண் பாட்டாகாமைக்கும் வாளாது சலிப்பாவாதற்கும் காரணமென்னை—

1. உறழ்பொருட்டு அன்மையின் எனப் பிரிக்க.

2. ஒன்றாகவகுப்பவர்—இளம்பூரணர். அதுவே பொருத்தம்.

3. கலிவெண்பாட்டாதற்கும் வாளாது கலிப்பாவாகாமைக் கும் என்றிருத்தல்வேண்டும். என்னை? பின்வரும் விடைக்கியை யாமையின். அல்லது சிலவரி என்னையெனின் என்பதன்பின் விடுபட்டிருத்தல்வேண்டும்.





யெனின்,—பிறிது பொருபொருள் கூறலவுறு கலிவெண்பாட் டென்றதற்கு இடையின்றியே,

" வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்." 1

2. இது—வெளிப்படத் தோன்றும் என்ற இது.

3. வேறொருபா—வெண்பா.

4. மற்றொருபா—கலிப்பா.

5. ஆயின் ஒதான் என இயைக்க.

6. மற்றைய என்றது அச் சூத்திரத்தோதிய ஏனைய கலிகளை.

7. இது என்றது கலிவெண்பாட்டை. உறுப்புடைக் கலி வெண்பாட்டாயின் ஒத்தாழிசைக்கலி முதலிய மற்றையவற்றோடு ஒத்த பரப்புடைத்தாம் என்பது கருத்தாகும்.

8. யாப்பு என்ற முற்பாடம் பொருத்தமின்று.

9. கொச்சகமென்றது—கொச்சகவொருபோகை. அமைய வாராதென்றது 'தரவின்றாகித் தாழிசை பெறுதலும் தாழிசை யின்றித் தரவுடைத் தாதலும்' முதலியன பெற்று அமையவாரா மையை. இவை வண்ணகத்துக்குரிய உறுப்பிறத்தலின் கொச்சக வொருபோகாயின.

10. அது—என்னுஞ் சின்னமு மிறந்தது.

பொருளதிகாரம் - ரு௧.௬

னென்பது; அஃதேல், [3] அகநிலைக் கொச்சகத்திற்கும் அவையே அளவாம் பிறவெனின்,—அற்றன்று;

"அம்போ தரங்க மறுபாதிற் றடித்து."

என்றவழி, அளவை முற்கூறிய மயக்கினான் இனிக் கூறும் உறுப்புடைக் கலிப்பாவிற்கெல்லாம் [4] அதனளவெனப்படுமென்று புகுந்தமையின் இதற்குக் கொச்சகவொருபோகின் அளவை கொள்ளப்படாது; [5] பாநிலைவகைத்தென்றமையின் இவற்றைத் [6] தொகைநிலையளவின் அடியுடையவென்பது,

"தொகுநிலை யளவி னடியில."

(சஎஉ)

என்புழிச் சொல்லுதும். அஃதேல், 'பாநிலைவகையே கொச்சகக்கலி' என்றவழி, கொச்சகவொருபோகொடு ஒப்பது அளவொழித்தேயென்பதும் வரைந்தோதுகவெனின், — ஒருவழியொப்பனவும் உளவாகலின் அங்ஙனங் கூறினனென்பது. அவை இரண்டடி முதலாகப் பத்தடியளவும் வருவன தரவுகொச்சக

மென மேற்காட்டிய செய்யுளுட்
காணப்படும். (கருநு)

[ உறழ்கலியினிலக்கணம் இதுவெனல் ]
சகூஅ.

**கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும்**
**போக்கின் ருக லுறழ்கலிக் கியல்பே.**

இது, முறையானே
உறழ்கலியுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒருவர் ஒன்று கூறுதற்கு
மறுமாற்றம் மற்றொரு
வர் கூறிச்சென்று பின்னர் நின்றது
உறழ்கலி என்றவாறு.

---

1. ஒரு செய்யுள் ஆக்கி—ஒவ்வொரு செய்யுளாக வைத்தே. ஏனெனின் தரவு என்னும் உறுப்புப்பற்றி. தரவுக்குரிய அளவு பற்றி ஒவ்வொரு செய்யுளாகவே கூறுவர் என்றபடி. ஒரு என்பது ஒவ்வொரு என்றிருந்திருத்தல்வேண்டும்.

2. பெறுதலாயின் என்பது S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் பாடம். அது பொருத்தமில்லை.

3. அகநிலைக் கொச்சகம் என்றது, இச்சூத்திரத்தாற் சொல்லிய கொச்சகத்தை.

4. அதனளவு—அம்போதரங்கத்தினளவு.

5. பாநிலைவகைத்து என்று கூறின், ஒருபோகின் அளவை கொள்ளப்படும். அன்றிப் 'பாநிலைவகையே" என்றமையின்

கொள்ளப்படாது என்றபடி.

6. தொகுநிலை என்றிருத்தல் நலம்.



'போக்கின்று' எனவே, தரவுபெறுதலும் பாட்டிடை மிடைதலும், ஐஞ்சீரடுக்கலும், ஆறுமெய்பெறுதலும் ஒழிந்த சொற்சீரடி பெறுதலும், பா மயங்கிவருதலும், அம்போதரங்கத்திற் கோதிய அளவை பெறுதலுமெல்லாம் வெண்கலிப் பாட்டிற்குப்போல மேனின்ற அதிகாரத்தாற் பெறப்படுவ தாயிற்று. 'போக்கின்ருக லியல்பு' எனவே, இயல்பின்றி விகாரவகையாற் சில போக்குடையவுமாமென்றூனும்; அதுவும்,

"பல்பொருட் கேற்பி னல்லது கோடல்."

(கூகூரு) என்பதனான், வெள்ளைச் சுரிதகம் ஒழித்து ஆசிரியச் சுரிதகமே கொள்ளப்படும்; என்னை? வெள்ளைக் கொச்சகம் பல வந்தவழி

ஒன்றனைச் சுரிதகமெனலாகாமையானும், அச்சுரிதகம் இரண்டும்,

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்."

(சசஅ) எனக் கூறப்பட்ட [1] இலக்கணத்தவல்லவாயினும்,

"எழுசீ ரிறுதி யாசிரியங் கலியென."

(ந அஅ) நின்றவழி அப்பாட்டு முடிந்துகாட்டி நிற்றலானும், அதுவே கொண்டாஞ் சிறுபான்மையென்பது.

மற்றுத் தரவின்றி வருவனவும் உளவாலெனின்,—இதற்குத் தரவு முதலாயின உறுப்பு விதந்தோதியதிலனுகலின் அஃது ஆராய்ச்சியின்றென்பது ; அற்றன்று ; தரவும் போக்கும் உடன் கூறியதனல், 'போக்கும் பாட்டிடை மிடைந்தும்' என்னும் அதிகாரம்பற்றி ஈண்டுப் போக்கு விலக்கினமையின் அது பொருந்தாது ; மற்றென்னை

கருதியதெனின்,—இதற்கு அதிகாரம்பட நிறீஇய கலிவெண்பாட்டு ஓதிய சூத்திரத்திற் பாட்டினை [2] இடை கூறாது தரவும் போக்கும் உடன் கூறியதனாற் [3] போக்கின் இலக்கணத்தனவும் பெறுமென்றானும்; அதனானே ஈண்டு விலக்குண்ட போக்குப்போலச் சிறுபான்மை தரவின்றியும் வருமென்பது; இக்கருத்தினானன்றே, இதனைப்

1. இலக்கணத்த அல்ல என்றது இவ்வுறழ்கலிக்கு வரும் போக்கின் வேறுபாடு நோக்கி.

2. இடை—தரவிற்கும் போக்கிற்குமிடை.

3. போக்கின் இலக்கணம் பெறுதல் என்றது தரவும் போக்கினிலக்கணத்தைப் பெறலே. எனவே போக்கை விலக்கவே உடனெண்ணிய தரவும் விலக்குண்ணும் என்றபடி.



[1] பாநிலையோடு கூறாது தரவுவகைப்படுங் பின்னர் வைப்பானுபிற்றென்பது.

[2] கொச்சகத்தின்

இனி, போக்குடையன தரவின்றி வாரா, அவை ஓரின மென்று ஓதப்பட்டமையினென்பது. மற்றிதற்குப் போக்கின்மை யும் இலக்கணமாகலின் அதுபற்றியும் பெயர் கொள்ளாமோ வெனின்,—போக்கின்மை சிறுபான்மை கொச்சகத்திற்கும் உரி மையின் [3] அவ்வகையுரியதோர் இலக்கணம்பற்றிப் பெயர் கூறு னென்பது. மற்றிதனையுங் கொச்சகமென்றக்கால் இழுக்கென்னை யெனின்,—நாடகச் செய்யுட்போல வேறுவேறு துணிபொருள வாகியும் பல தொடர்ந்தமையிற் பெரிதும் வேறுபாடுடைமை நோக்கியும் இது பொருளதிகாரமாதலாற் பொருள் வேறுபாடு பற்றியும் வரலாற்று முறைமைபற்றியும் வேறு செய்புளென்று னென்பது; என்னை?

"மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான."

என, (கூசரு) மரபியலுள் ஓதுகின்றமையினென்பது. [4] அல் லாக்காற் கைக்கிளையுஞ் செவியறிவுறூஉவும் வாயுறையும் புற நிலையுமென்னும் நான்கும் [5] மருட்பாவும் ஒன்றேயாகிய செல்லு மன்றேவென மறுக்க.

அவற்றுக்குச் செய்யுள் :—

"அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்."
(கலி. கூக)

என்னும் பாட்டினுள், தரவும் பாட்டும் உடைத்தாகிய பாட்டுத் தாம் ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்து போக்கின்றி நின்று முடிந்தது. என்றார்க்கு,

" காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்." (கலி. கூக)

என்பது, வெள்ளைச்

சுரிதகமாகாதோவெனின்,—ஆகாதன்றே?

---

1. பாநிலை—கொச்சக ஒருபோகு.

2. கொச்சகம்—கொச்சகக்கலி.

3. அவ்வகை உரியது—வேறொன்றற்கும் உரியது.

4. அல்லாக்கால் — பொருள் காக்கால்.

வேறுபாடும் மரபும் நோக்

5. மருட்பாவென என்றிருத்தல்வேண்டும்.



"போக்கியல் வகையே வைப்பெனப் படும்." (சசஅ)

என்ற இலக்கணத்தான் முற்கூறியவற்றையெல்லாந் தொகுத்து இதன்கண் வைத்திலாமையினென்பது; அல்லதூஉம், அவ்வாறு முடிதலேயன்றி இன்னும் ஓர் கொச்சகம் பெய்து சொல்லி உறழ்ந்தவழியும் அஃது ஏற்பதாகலான் அஃது [1] ஒருதலையாக [2] அமைந்ததெனப்படாது; என்னை?

" அன்னதே யாயினு மாகாற் ருயிழாய்
நின்னகை யுண்க முயங்குவாய்—நின்னெஞ்ச

மென்ளுெடு நின்ற தெனின்."

என்ருற்போலப் பின்னு [3] மொன்று தலைமகன் உரைத்தற்கு இடம்பட்டு நின்றமையின் அது 'போக்கியல்வகைத்தாகிய வைப் பெனப்படாது' என்க.

இனி, அவ்வாறன்றி ஆசிரியச்சுரிதகம் வந்தவழி அக் கலிப்பாட்டு [4] முடிந்து காட்டுதலின் அதுவும் அடக்கியலன் ருயினும் அதனைச் சிறுபான்மை நேர்ந்தான் இது வழிநூலாக லின் முதனூல்பற்றியென்பது.

" நலமிக நந்திய நயவரு தடமென்ருேள்."

(கலி. ககஙு)

என்னும் முல்லைக்கலி போக்கிலக்கணமில்லாத ஆசிரியச் சுரி தகம்பெற்று வந்த உறழ்கலியாயிற்று.

" வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த."

(கலி. ககச) என்னும் முல்லைப்பாட்டும்,

" சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட."

(கலி. சுo) என்னும் குறிஞ்சிப்பாட்டும் அது.

" ஒருஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை

வெருஉதுங் காணுங் கடை ;
தெரியிழாய்............பரியானுப்
பாடில்கண் பாயல் கொள.'' (கலி. அஎ)

என்பது, தரவும் போக்குமின்றி வந்த உறழ்கலி. இவற்றுள் ஐஞ்சீரும் அறுசீரும் வந்தன. ஒழிந்த சொற்சீரடி வந்தன பிறவுங் கண்டுகொள்க. (கருகூ)

---

1. ஒருதலை—நிச்சயம்.

2. அமைந்தது—முடிந்தது.
3.
4.
ஒன்று—ஒரு பாட்டு.
முடிந்து காட்டலின் நேர்ந்தான் என இயைக்க.



[செய்யு

[ஆசிரியப்பாவடியின் உயர்ந்த அளவும் இழிந்த அளவும்]

சகூக. ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை
யாயிர மாகு மிழிபுமூன் றடியே.

இத்துணையும் பாவுறுப்புக் கூறி, இனி அப்பாவி னுள்
ளுறுப்பாகிய அடியளவை

கூறுவானெழுந்தான், முறையானே
ஆசிரியப்பாவிற்கு அளவு
கூறுகின்றானென்பது.

இ—ள் : ஆசிரியப்பாவின்
பெருக்கத்திற்கு எல்லை ஆயிரம்
அடி ; சுருக்கத்திற்கு எல்லை மூன்று அடி
என்றவாறு.

"நீல மேனி வாலிழை பாகத்

தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே."

(ஐங்குறு. கடவுள்)
என்னும் ஆசிரியப்பா மூன்றடியால் வந்தது.

"மாயோன் மார்பி னாரம் போல."
என்பது, நான்கடியான் வந்தது.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
..........................................................................
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே."
(குறுந். ௧௮)
என்பது, ஐந்தடியான் வந்தது.

"தாமரை புரையும் காமர் சேவடி

ஏம வைக லெய்தின்று லுலகே.

(குறுந். கடவுள்)

என்பது, ஆறடியான் வந்தது.

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பவ்வ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே."

(நற்றிணை. கடவுள்)

என்பது, ஏழடியான் வந்தது; பிறவும் அன்ன. யான் வருவனவும் உளவேற் கண்டுகொள்க. ஆயிரம் அடி.

ஆசிரியப்பாட்டி னெல்லையென்றது 'அளவு' என்றதனான், அதனியற்றாகிய வஞ்சிப்பாவிற்கும் இவ்வாறே கொள்ளப்படும். இனி, வெண்பாநெறித்தாகிய கலியளவை [1] அதனின் வேறு படுதலின் அதற்கு வேறு விதந்து [2] கூறுமென்பது. (கஙஎ)

---

1. அதனுள் என்னும் முற்பாடஞ் சிறப்பின்று.
2. கூறுமென்றது—ஆசிரியனை.

[நெடுவெண்பாட்டின் அடிக்கும் குறுவெண்பாட்டின் அடிக்கும் உரிய அளவு]

சஎ௦. நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே
குறுவெண் பாட்டி னளவெழு சீரே.

இது, முறையானே வெண்பாவின் அடியளவு கூறுகின்றது.

இ—ள்: வெண்பாவிற்கு இரண்டும் பன்னிரண்டும் இழிபும் ஏற்றமுமாம் என்றவாறு.

மற்றிவற்றையும்,

"ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை."

என்றாற்போலக் கூறாது, குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டுமெனப் பெயர் கொடுத்ததனாற் பயந்ததென்னையெனின்,—குறுமையும் நெடுமையும் அளவியலோடு படுத்துக் கொள்ளப்படுதலின் [1] அளவியல் வெண்பாட்டும் உளவென்பதூஉம், அதுவே சிறப்புடையதென்றற்கும் அங்ஙனங் கூறினானென்பது.

இனி, அவற்றைத் தக்கம் வகையாற் சுருக்கப் பெருக்கம் உணருங்கால் 'உய்த்துக்கொண்டுணர்தல்' (கூகூ) என்பதனான் உணரப்படும்; என்னை? நெடுவெண்பாட்டிற்கு உயர்ந்த அளவை பன்னிரண்டடியெனவே, அதன் பாகமாய ஆறு அளவியல் வெண்பாவிற்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டிற்கு இழிந்தவெல்லை ஏழடியெனவும், அளவியல் வெண்பாவிற்கு இழிந்தவெல்லை நான்கடியெனவும் கொள்ளவைத்தமையினென்பது. இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தாதலேனக்கிப் [2] பதினெண்கீழ்க் கணக்கினுள்ளும் [3] முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியினேறாமற் செய்யுள்செய்தார் பிற சான்றோருமெனக் கொள்க; இக்கருத்தினானே,

"அம்மை தானே யடிநிமிர் பின்று." (தொ. செ. உ.௩.௫)

---

1. அளவியல் — நெடுவெண்பாட்டின் பாகம்—ஆறடி.
பாகம் பெறுவது.

2. பதினெண்கீழ்க்கணக்கு இவை என்பதை, "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணை முப்—பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்—இன்னிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே—கைந்நிலையு மாங்கீழ்க் கணக்கு." என்பதனாலறிக. இன்னிலைய — மெய்ந்நிலைய எனவும் பாடம்.

3. முத்தொள்ளாயிரம்—ஒரு நூல்.

1 எனக் 2 கூறிய நெடுவெண்பாட்டு நேர்ந்திலன் ஆசிரியன் 3 அதற்கென்பது; அஃதேல், அவ்வளவியல் வெண்பாவுள்ளும் ஆறடியானும் ஐந்தடியானும் வருதல் சிறு வரவினவாலெனின்,— அங்ஙனமே 4 செப்பிக் கூறிய மரபிற்றாகிய வெண்பாவினைப் பரந்துபடக் கூறல் இயல்பன்றாகலின் 5 அவற்றுள்ளுஞ் சுருங்கிய நான்கடியே சிறந்ததென்று அதனையே பற்றிப் பெரும்பான்மையுஞ் செய்யுள் செய்தாராவரென்பது. அஃதேல், குறள் வெண்பா அதனினுஞ் சிறந்ததாம் பிறவெனின்,—அற்றன்று; செப்பிக் கூறுங்கால் 6 தெரியக் கூறல்வேண்டுமாகலின் அளவியல் வெண்பாவே பயின்றதென்பது. நெடுவெண்பாட்டுப்போலச் சிறப்பின்றாங் குறுவெண்பாட்டுமெனின்,—

"சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்."

என்பதனான், அவ்விரண்டினுள்ளும் அதனைப் பிற் கூறியது அச்சிறப்பு நோக்கியன்றேவென்பது; உதாரணம்:

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று." (குறள். உ௫௯)

எனவும்,

"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச்—சிறந்தார்
செறிந்தமை யாராய்ந்து கொண்டு." (யா. வி. ப. உஉ௬)

என இவை குறுவெண்பாட்டு.

" துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்." (நாலடி. க—உ)

எனவும்,

" நாண்ஞாயி றுற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாண்மாய் குருதி களிறுழக்கத்—தாண்மாய்ந்து

1. என—என்று.
2. கூறிய நெடுவெண்பாட்டு எனப் பிரிக்க. கூறிய—இங்கே கூறிய. கூறியிந்நெடுவெண்பாட்டு என்றிருப்பது நலம்.

3. அதற்கு—அவ்வும்மைக்கு.

4. செப்பு—விடையாதலின் சுருங்கச் சொல்லல் என்பது கருத்துப்போலும்.

5. அவற்றுள்ளும்—அவ்வெண்பா அடியுள்ளும்.

6. தெரிய—புலப்பட=பொருள் விளங்க.



முற்பக லெல்லாங் குழம்பாகிப்—பிற்பகற்
றுப்புத் துகளிற் கெழூஉம் புனனாடன்
றப்பியா ரட்ட களத்து." (களவழி க)

எனவும்,

" நாணாற் றிசையும் பிணம்பிறங்க யானை
யடுக்குபு வேற்றிக் கொடுந்த விடித்துரறி

யங்கண் விசும்பி னுருமெறிந் தெஞ்ஞான்றும்
பெருமலைத் தூறெறிந் தற்றே யெரிமணிப்பூ
ணேந்தெழின் மார்பத் தியறிண்டேர்ச் செம்பியன்றெவ்
வேந்தரை யட்ட களத்து.'' (களவழி க)

எனவும், இவை அளவியல் வெண்பாட்டு.

'' பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவி
லென்னோடு நின்று [1] சிருவ ரவருள்ளும்
பொன்னோடை நன்றென்று ளல்லளே—பொன்னோடைக்
கியானைநன் றென்றாளு மந்நிலையள்—யானை
யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்
றிருத்தார்நன் றென்றேன் றியேன்.'' (யா. வி. ப. உ.ரு)

என்பதும் அது. நெடுவெண்பாட்டு வந்தவழிக் கண்டு கொள்க. (கநூஅ)

[அங்கதப்பாட்டடிக்குரிய அளவு]

சஎக. அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்.

அங்கதப் பாட்டிற்கும் வெண்பாவே உறுப்பாகலான் ஈண்டு வைத்தான். இதுவும் மேற்கூறிய [2] இரண்டெல்லையும் பெறு மென்றவாறு.

'' இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்ற—மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள.''

என்பது, நான்கடியான் வந்த அங்கதம்; பிறவும் அன்ன.

இது, [3] மந்திரத்தின் வேறுபாட்டு அடிவரைத் தாயினமை யின் இதுவும் வெண்பாட்டுப்போன்று அமைந்து [illegible]ல்வேண்டு

1. இருவர் என்றது—மகளிரிருவரை. அவர்கள் என்னைப் போலத் தாரை விரும்பாமையின் நல்லராயினார். யான் தாரை விரும்பி அது பெருமையின் தீயேனாயினேன் என்றாள் என்க. ஓடை—யானையின் முகத்திலணியும் படாம். தியேன்—குறுக்கல் விகாரம்.

2. இரண்டெல்லை—நெடுமை, குறுமை.

3. மந்திரம்—மந்திரச் செய்யுள்.



மென்றற்கும், இது [1] வேறு பாட்டெனப்படாமையின் அடி வரையின்றுகொலென்னும் ஐயந்தீர்த்தற்கும் இதற்கே ஈண்டு அளவை கூறி, அதனோடும்

"கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுள்." (சுடுo)

என்று ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொளாயிரத்துப் போலப் பலவாயினும் அவற்றுக்கு அளவையும் வெண்பாவின்

அளவேயென்று அடங்கினுனென்பது. நாற்பாவாக அடிவரைப் படுவன உள்வாயினவற்றுக்கும் இஃதொக்குமென்பது மேற் கூறுதும்.

(கருக)

[கலிவெண்பாட்டு முதலிய ஐந்து செய்யுளும் அடியின் பெருமைக்கு அளவு கூறப்படா எனல்]

சஎஉ. கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை யென்றிவை
தொகுநிலை யளவி னடியில வென்ப.

இஃது, எய்தாததெய்துவித்தது; அளவை கூறாதவற்றுக்கு அளவை கூறினமையின்.

இ—ள்: இவை ஐந்தும் பெருமைக்கு எல்லை இத்துணை

யெனத் தொகுத்துக் கூறுந் தன்மையுடைய அளவால் வரும் அடியையுடையவல்ல என்றவாறு.

[3] கலிவெண்பாட்டென்பது, [4] ஒருபொருணுதலுதலால் திரிபின்றி நடப்பதன்றிப் பன்னிரண்டடியின் இகந்துவந்து,

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து."

வாராது ஒன்றேயாகி வருவதெனக் கொள்க.

---

1. இது—அங்கதம். வேறுபாட்டெனப்படாமையின் என்பது வேறுபாட்டெனப்பட்டமையின் என்றிருத்தல்வேண்டும். வேறுபாட்[illegible]தல்—அங்கதப் பாட்டெனப்படுதல்.

2. நூற்பா — சூத்திரப்பா. ஈண்டுச் சூத்திர வெண்பா. நேமிநாதம் சூத்திர வெண்பாவாலாயது. நாற்பா எனவும் பாடம்.

3. இக் கலிவெண்பாட்டு பன்னிரண்டடியின் இகந்து ஒரு பொருணுதலாது உறுப்புமின்றி வருவது. இவ்வுரையாசிரியர் கருத்துப்படி இது இரண்டாவது பிரிவு. விரவுறுப்புடையது மூன்றாவது பிரிவு.

4. பன்னிரண்டடியின் இகவாது ஒருபொருணுதலித் பின்றி வருவதை கருச-ம் சூத்திரத்தாலறிக.

திரி



கைக்கிளைச் செய்யுளென்பது, கைக்கிளைப்பொருட்கு உரித் தாய் வரும் மருட்பாவென்றவாறு. அஃதேல், ஈண்டோதிய கலிவெண்பாட்டு மொழிந்த கைக்கிளைப் பொருண்மேல் வாராவோ வெனின்,—வருமென்பது,

"நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்." (ருக)

என்புழிக் கொண்டாமென்பது. எனவே, [1] வெண்பாட்டல்லா தன கலிப்பாட்டுக்கள் கைக்கிளைப் பொருண்மேல் வந்தவழி யும் அவற்றுக்கு அளவை மேற்கூறியவாற்றானே அடங்குமென்ப தாயிற்று. செவியறி வாயுறை [2] புறநிலையென்பனமேற்,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறுஅ." (சஉஉ)

எனவே, ஒழிந்த பாவான் வருமெனப்பட்ட பொருண்மேல் வருஞ் செய்யுள். ஆண்டோதியவற்றுக்கு ஈண்டு அளவை கூறுமோ வெனின்,—அஃது [3] ஆசிரியமும் வெண்பாவுமாகி வேறு வரு தலின் முற்கூறிய வகையானே அடங்குமென்பது. மற்றுக் [4] கொச்சகவொருபோகாகியுந் தொடர்நிலைச்செய்யுட்கண் வருமால் அவையடக்கெனின், அஃது,

" யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைய." (௪௬௧)

கொச்சகவொருபோகென்றொழிக.

" தொகுநிலை யளவி னடியில." (௪௭௨)

என்பது, விரவுறுப்புடை வெண்கலியும் கொச்சகக்கலியும் உறழ் கலியுமென்றிவற்றிற்கு மேல் அம்போதரங்கம் பெற்ற அளவினை முதலாக நாட்டிக்கொண்ட தொகுநிலையளவு எனப்பட்ட அடி மேல் அடிமிகந்தோடாவென்றவாறு. 'தொகுநிலையளவு' என்பது, தலையளவு இடையளவு கடையளவெனப்பட்ட அம்போதரங்கம் மூன்றற்கும் பெருகியவெல்லையாகி அளவின் விரியாது அவற்றுக்குச் சுருங்கியவெல்லையாகி அறுபதும் முப்பதும் பதினைந்துமெனத் தொக்குநிற்கும் அளவினவாகிய அடிமேலேறா வென்றவாறு. தொகுமளவென்னாது 'தொகுநிலை' என்றான்

1. வெண்பாட்டல்லாதனவாகிய கலிப்பாட்டுக்கள் என்க.
2. புறநிலை என்பன செய்யுள் என முடிக்க.
3. ௪௨௫-ம் சூத்திரம் நோக்குக.
4. கொச்சகவொருபோகால் அவையடக்கு வருதல் தொடர்நிலைச் செய்யுளாகிய சிந்தாமணி முதலியவற்றுலறியப்படும்.



மூன்று தொகையினும் முப்பஃதாகிய இடைநிலைத் தொகையே கோடற்கென்பது.

இன்னென்னும் ஐந்தாமுருபு நீக்கத்தின்கண் வந்தமையின் முப்பஃதடியின் இகந்துவரும் அடி இலவென்ற வாறு. இனி, அம்முப்பஃதாகிய தொகுநிலை இவ்வைந்தற்கும் நீண்டவடிக்கு எல்லையாதலின், தொகுநிலையென்றது 'அளவு' என்றானென்பது. [1] 'நீண்ட தனை அளவுடைத்து' என்பவாகலின். மற்றிங்ஙனம் இவை முப்பதடியின்மேல் வாராவென்று பெருக்கத்திற்கெல்லை கூறவே, சுருக்கத்திற்கெல்லை வரையறை யிலவென்றானும்; ஆகவே, இரண்டடியானும் வருமென்றானும் பிறவெனின்,—அற்றன்று; 'ஒருபொருணுதலி வருங் கலிவெண் பாட்டாயிற்' பன்னீரடி இகவாதென்பது,

"திரிபின்றி வருவது கலிவெண் பாட்டு."

(சகூரு)

என்றவழிப் பெறுதுமாகலின், ஈண்டு ஓதிய கலிவெண்பாட்டுப் பதின்மூன்றடியிற் சுருங்காதென்பது பெற்றாம். இது கைக்கிளைப் பொருண்மேல் வந்தாயினும் ஒக்கும்.

[2] ஒழிந்த நான்கும் மருட்பாவாதலான்,

" வெண்பா வாகி யாசிரிய வியலான்
முடியவும்பெறும் "

எனருகலானும,

" வெண்பா வியலினு மாசிரிய வியலினும்

பண்புற முடியும்."

(சஎந)

என வருகின்ற சூத்திரத்தானும்,
அவ்விரண்டு பாவின் கூட்
டம் இரண்டடியாகி வாராவாகலானும்
அவையும் [3] நான்கடியிற்
சுருங்காவென்பது
உய்த்துக்கொடுணரவைத்தான் என்பது;
என்னை? கைக்கிளைப்படலத்துள்,

" போற்றி வெண்பா வாகி மற்றத
னிறுதி [4] யைஞ்சீ ராசிரி யம்மே."

1. நீண்டதனையளவுடைத்து என்றது அதிகம் நெடிதல்லாதது என்ற கருத்தினாற்போலும். அளவு என்றது எல்லையை உணர்த்தக் கூறினார் என்றபடி.

2. "ஒழிந்த நான்கு—கைக்கிளை, செவியறிவுறாஉ, வாயுறை, புறநிலை.

3. ஐந்தடியிற் சுருங்கா என்று பின் வருதலின் நான்கடி என்றது நான்கடியானும் வருதலிற்போலும். இங்கு

.. 4. ஐஞ்சீர்—அஞ்சீர் என்று இருத்தல்வேண்டும்.

ளியல்]
௫௫௧

## பொருளதிகாரம்

என்றாராகலின். மற்று மூன்றடியிற் சுருங்காது ஆசிரியமாதலாலும் இரண்டடியிற் சுருங்காது வெண்பாவாதலாலும் இவ்வைந்தடியிற் சுருங்காவென்று கொள்க. இது,

"பண்புற முடியும் பாவின."

(சஎங) என மேற் சொல்லும். அவற்றுக்குச்

செய்யுள் :—

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்று
செய்பொருண் முற்றுமளவென்றா ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயிற்
றொய்யி லுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்." (கலி. உச)

என்பது, பதினேழடியான் வந்த கலிவெண்பாட்டு.

“சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா
ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிரே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
வன்னை யலறிப் படர்தரத் தன்னையா
னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்.” (கலி. ௫௧)

என்பது, ஒருபொருணுதலிப் பதினாறடியான் வந்தது.

“இருந்திழாய் கேளாய்நம் மூர்க்கெல்லாஞ் சாலும்
பெருநகை யல்கு னிகழ்ந்த தொருநிலையே
மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்



மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்

சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனுங்கே
பாரக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ னின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
பக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும்
யாதொன்றும்
வாய்வாளே னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசரு ளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறூஉமற் கொள்வே
னெனப் பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பா, னஞ்சின னாத லறிந்தியா
னெஞ்சா
தொருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடிதரற்றிப் பூச லொருடங்கின னாங்கே
யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
ணிரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோ
ரேதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலூஉ
மாகுல மாகி விளைந்ததை யென்றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து.''
(கலி. சுரு)

என்பது, இருபத்தொன்பதடியான் வந்த
கலிவெண்பாட்டு. ஒழிந்தனவும் அன்ன.

நூற்றைம்பது கலியுள்ளுங் கைக்கிளைபற்றி
இவ்வாறு வருங் கலிவெண்பாட்டுக்

காணுமாயினுமைமயிற் காட்டா மாயினும்.
இலக்கணமுண்மையின் இலக்கியம்
பெற்றவழிக் கண்டுகொள்க.

1 "கனவினிற் காண்கொடா கண்ணுங் கலந்த
நனவினுண் முன்விலக்கு நாணு—மினவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று." (முத்தொள்.
ருகூ)

இது, கைக்கிளைபற்றி வந்த கலிவெண்பாட்டென்னுமோ வெனின்,—என்னுமன்றே ; 2 அது பாடாண்டிணைப் புறப்பொருளாகலானும் ஒருபொருணுதலுதல் ஐந்திணைக்கண்ணதேயாகலானும் பன்னிரண்டடியின் இகந்ததன்றாகலானும் வெண்பாவே

1. கண்ணுங் காண்கொடா; நாணும் விலக்கும்; செங் கோல் சென்று வடுப்படுத்தலால் என்க.

2. அது — இது என்றிருத்தல்வேண்டும். இது என்றது வெண்பாவை.

யாமென்பது. [1] இப் பொருட்பகுதி புணராதாரும், இது மர பென்பதறியாதாரும், நூற்றைம்பது கலியுள்ளும் [2] இவை கோப் புண்டனவென்பது நினையாதாரும் இவற்றுள் ஒருபொருணுதலி யன ஒழிந்தனவெல்லாம் வெண்பாவென்று அடிவரை கூறு தொழிப. அங்ஙனம் மரபழியக் கூறின் ஒரு சாத்தனை நாட்டி. அவனைக் காமுற்று [3] இவன் இன்னவாறாயினனென ஆசிரியத் தானும் வஞ்சியானும் பொருள் வேற்றுமையுடைய ஒருசார்க் கொச்சகமல்லாத கலிப்பாவினானுஞ் செய்யுள் செய்தலும், இனி அதனிலையாகிய ஆண்பாற் கைக்கிளை ஆசிரியத்தானும் வஞ்சி யானும் வருதலும், பிறவும் [4] இன்னோரன்னவெல்லாம் புல னெறி வழக்கினுட் காட்டல்வேண்டுமென மறுக்க. என்றார்க்கு வரைவுகடாதற்கண்ணுந் தலைவனை அன்பிலனாகச் சொல்லுவன பாடாண்டிணைக் கைக்கிளையாகாவோவெனின், — 'அவைசுட்டி யொருவர் பெயர்' கொள்ளாமையின் ஆகாவென்பது. அஃதேல்,

"விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை." (கலி. ௪௫)

என்னுங் குறிஞ்சிப் பாட்டினுள்,

"கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாரப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை."

எனவும்,

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும்." (கலி. ௬௬)

என்னும் மருதப் பாட்டினுள்,

" அறனிழ லெனக்கொண்டா யாய்புடை யக்குடைப்
புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றூள."

எனவும் இவைசுட்டியொருவர் பெயர்கொள்ளாக் கைக்கிளை வந்தனவாலெனின், — அற்றன்று ; தலைமகனன்பின்மையே மெய்யாயினன்றே அன்னதாவது ; இவை அன்னவன்றி வரைவு கடா

1. இப் பொருட்பகுதி என்றது பாடாண்டிணைப் பொருள் இதற்குரியது ஐந்திணைப் பொருள் இதற்குரியது, என்னும் பகுதியை.

2. இவை—கலிவெண்பாட்டுக்கள்.

3. இவன் என்பது இவள் என்றும், ஆயினுன் என்பது ஆயினுள் என்றுமிருத்தல்வேண்டும்; இது பெண்பாற் கைக்கிளையாகலின்.

4. இன்னோரன்ன—இவைபோன்றன. என்றது அகத்திணைக் கைக்கிளையில் இவைபோலுஞ் செய்யுள்கள் வருதலை.

70



வலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்று இல்லது சொல் லினமையின் அவை [1] ஒருதலை யன்பாகாவென்பது. மற்று,

" என்னை,

புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
..........................................
உமணர் வெரூஉந் துறையன் னன்னனே.''

(புறம். அச) என்னும் புறநானூற்றுப் பாட்டும் பெண்பாற் கைக்கிளையாதலின். அதனை ஆசிரியத்தான் வாராதென்றதென்னையெனின்,—

" ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின."

(சரு௦)

என்புழி, சிறுபான்மை கலிவி கூற்றாகியே வருவன அமையு மென்று போதந்தாமாகலின் அதுவே பெருவிதியாகாதென்பது.

இனிக் கைக்கிளை வருமாறு:—

" திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு—மரிபரந்த
போகித ழுண்கணு மிமைக்கு
மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே.'' (பு. வெ. கக—ரு)

இது, நெஞ்சிற்கு உரைத்தது [2] [எனத்] தலைமகன் சொல்லினது. [3] நற்காமமன்றாமாகலின், [4] இக்கருத்தினானே இதனைப் புறத்திணையுட் கொண்டாருங் [5] கைக்கிளைப் படலத்து,

" நெஞ்சிற் குரைத்தலுங் கேட்போ ரின்றி
யந்தர மருங்கிற் கூறலு மல்லது
சொல்லுங் கேட்டலு மில்லை யாக

வகத்திணை மருங்கி னைவகை யானு
"மிகத்த லென்ப விவ்வயி னான."
என்றாரெனக் கொள்க.

7 பாடாண்கைக்கிளைக்கும் ஈண்டே அளவு கூறுகவெனின்,— கலிவெண்பாட்டினைக் கைக்கிளையென்னுமாயினென்றே அது கடா

1. மாகிய ஒருதலையன்பு—ஒருபக்கத்தன்பு. என்றது ஒருதலைக் காம கைக்கிளையை.

2. என என்பது சில பிரதிகளிலில்லை. அதுவே பொருத்தம்

3. நற்காமம்—அன்புடைக் காமம்.

4. இக்கருத்தினானே என்பது வேண்டியதில்லை.

5. இப்படலம் பன்னிரு படலத்திலுள்ளதோ வேறு நூலிலுள்ளதோ என்பது தெரியவில்லை.

6. இவ்வடி சரியோ பிழையோ என்பது ஆராயத்தக்கது.

7. பாடாண் கைக்கிளை கலிவெண்பாட்டில் வரின் அத னளவே அளவென்றபடி.

வாவது. மருட்பாவிற்குக் கைக்கிளைப்பகுதி [1]வரைந்தோதல்வேண்டுவதின்மையின் அதற்கும் [2]இதுவே அளவாமென்பது. [3]ஒழிந்த மருட்பா மூன்றற்கும் உதாரணம் மேற் காட்டுதும். இக்காலத்தார் 'ஏறிய [4]மடற்றிறம்' என்னும் பெருந்திணைப் பொருண் மேலும். 'காமஞ்சாலா விளமையோ' ளை ஒழிந்த மகளிரொடுங் கூட்டியுரைக்கும் [5] கைக்கிளைப் பொருண்மேலுங் கலிவெண்பாட்டெனப் பெயர்கொடுத்துச் செய்புள் செய்பவால், அவை அவ்வாறு செய்தற்கும் அவை முப்பதிற்றடியின் இகந்து [6] எத்துணையடியினும் எற்குமென்றற்கும் என்னை ஒக்கெனின்,—அவ்வாறு வருமென்பது இந்நூலுட் பெற்றிலமாயினும் இருபதின் சீர்க் கழிநெடிலடியானும் இது பொழுது செய்புள்செய்யுமாறு போலக் காட்டலான் அமையும். அவை புலனெறி வழக்கிற்குச் சிறந்திலவாகலிற் சிறுபான்மையென்றொழிக.

[புறநிலை வாழ்த்து முதலிய மூன்று செய்யுளும்
மருட்பாவால் வருமெனல்.]

௪௭௩. புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறனிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்
வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப.

இது, கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வெண்பா முதலாக ஆசிரியம் பின்வந்து முடியுமென்று ஈண்டு அவற்றுக்கு இடம்பட்டது கண்டு கூறியவாறு; என்னை?

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே."

(௩௯௭) என்றவழி, ஆசிரியம் முன்னர் நிறீஇப் பின்னர் வெண்பாவினைக் கூறி,

---

1. கைக்கிளை மருட்பாவுக்குரியதென்பது முன் கூறப்பட்டுள்ளது.

2. இது — ஒருதலைக்காமக்
கிளை.)

கைக்கிளை. (அகப்புறக் கைக்

3. — ஒழிந்த
புறநிலை.

மருட்பா மூன்று—செவியறிவுறூஉ, வாயுறை,

4. மடற்செய்யுள்.
5. உலாச்செய்யுள்.
6. எத்துணையடியாயினும்
ஒன்றிருந்திருத்தல்வேண்டும். ருருசு



"வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின."

(சஎரு)

என்றமையின். இங்ஙனம் எண்ணப்பட்ட மூன்று பொருட்கும் இலக்கணம் [1] முன்னர்ப் பாவிரியோத்தினுட் கூறியனவற்றுக்கு இன்னவாறு செய்யுள் செய்கவென்றற்கு இது கூறினானென்பது.

**இ—ள் :** இம்மூன்றும் வெண்பா முன்னும் ஆசிரியம் பின்னு மாய் வரும் என்றவாறு.

'திறநிலை மூன்று' என்றான், முற்கூறியனவெல்லாம் அகத் திணையாகலின், இவை புறத்திணையுளல்லது வாராவென்றற் கென்பது. 'திண்ணிதிற் றெரியின்' என்பது, இவை மூன் றுங் கைக்கிளை மருட்பாப்போல ஆண்பாற் கைக்கிளையும் பெண் பாற் கைக்கிளையுமாகி அகனும் புறனும்பற்றி வாராது ஒரு தலையாகவே புறத்திணையென்று தெரியப்படுவனவென்றவாறு.

இதன் பயம் : கைக்கிளை மருட்பாப் புறத்திணையானும் வரு மென்பது. 'இயல்' என இருகாற் சொல்லியவதனான், இயற் சீர் வெள்ளடியான் வெண்பா வருதல் சிறந்ததெனவும், அதற் கேற்றவகையான் ஆசிரியம் இயற்சீரான் வருதல் சிறந்ததென

வுங் கொள்க. 'பண்புற முடிதல்' என்பது, மேற் சிறுமைக் கெல்லை கூறுமையின் வெண்பாவிற்கிழிபாகிய எழுசீரன்றி எண் சீரான் வரினும் ஆசிரியத்திற்கிழிபாகிய மூன்றடி வரினும் எருத் தடி குட்டமாகி வரினும் அங்ஙனம் மூன்றடி வந்தவழி வெண்பா நான்குமுதற் பன்னிரண்டளவும் [2] உயர்தலும் என இவையே பண்பெனப்படுவனவெனவும், அல்லன சிறப்பிலவெனவுஞ் சொல் லினவாறு. இக்கருத்தினன் வெண்பாவடி [3] வரையிலவாயினும் ஆசிரியவடி மூன்றிகவாவென்பது [4] கைக்கிளைப்படலத்துள்ளுஞ் சொல்லப்பட்டது; என்னை?

"முச்சீ ரெருத்திற் குகிமுட் டின்றி
யெச்சீ ராலு மேகாரத் திறுமே."
(கடியநன்னியார்-யா. வி. ப, உ0௪)

---

1. முன்னர்க் கூறியதை ௪உஉ-ம் சூத்திரமுதல் ௪உ௬-ம் சூத்திரவரையு நோக்குக.

2. உயரினும் அவையெல்லாம் எனவும் பாடம். பவானந் தம்பிள்ளை பதிப்பு நோக்குக.

3. வரையறையிலவாயினும் என்பதே சிறப்பாம்.

4. புறப்பொருள் வெண்பாமாலையிற் காணப்படாமையால் வேறு நூல்போலும்.



என்றாராகலின். 'பாவின' என்றதனால், இவ்விருபகுதியுந்[1] தத் தம் பாக்கள் வேறுவேறு பெற நிகழுமென்பது. எனவே, இயற்சீர்வெள்ளடி யாசிரியந்தொடுக்குங்கால்,

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறி."

(குறுந். கஉ) எனப் பாவினை ஒன்றாகத் தொடுத்தாற்போலத் தொடுத்தல்[2] ஈண்டு அமையாதென்றானும். இவை மூன்றற்கும் உதாரணங் காட்டுங்கால் மேற் காட்டாது நின்ற பாடாண்டிணைக் கைக்கிளை மருட்பாவிற்கு

உதாரணங் காட்டியே காட்டப்படும். (கககக)

[பரிபாட்டின் அடிக்கு உயர்பும் இழிவும் இவையெனல்] சஎச. [3] பரிபாட் டெல்லை நாலீ ரைம்ப துயர்படி யாக வையைந் தாரு மிழிபடிக் கெல்லை.

இது, பரிபாட்டின்கண் வரும் வெண்பாவிற்கு அளவு கூறுகின்றது.

இ—ள்: பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பாவுக்கு நானூறடி பெருக்கத்திற்கெல்லையாகவும் பெறும் என்றவாறு.

அவை பரிபாடலுட் கண்டுகொள்க.

(கூஉக)

[அளவியலின்வகை மேற் கூறியனவே எனல்]

சஎரு. அளவியல் வகையே யனைவகைப் படுமே.

இது, மேற்கூறிய அளவினை வரையறுக்கின்றது.

இ—ள் : இத்துணையும் அளவியலான் 4 ஒரு

கூறே சொல்

லப்பட்டது என்றவாறு.

1. தத்தம் பாக்கள் வேறுபெற நிகழுமென்பது வெண்பா வேறுபெறவும் ஆசிரியம் வேறுபெறவுந் நிகழும் என்றபடி. என்றதுபின் "எறும்பி யளையிற் குறும்பல சுனைய" எனக் காட்டுமாறு, இரண்டடியுங் கலந்துநிற்கத் தொடுக்கப்படாதென்றபடி. "எறும்பி......சுனைய" என்பது இயற்சீர் வெள்ளடி. ஏனையது ஆசிரியவடி.

2. ஈண்டு—மருட்பாவிற்கு.

3. பரிபாடல்லே எனவும் பாடம்.

4. ஒருகூறு—அடிவரையறையுடையது. அது பாட்டு.



எழுநிலத்தெழுந்த செய்யுள் (சஎகூ) களுள் அடிவரை யறையுடையனவற்றுக்குக் கூறினன் ஆண்டில்லாதன அடி வரை யறையின்றிவரும் இலக்கணத்தவென்பதூஉம் இனிக் கூறுது மென்பதூஉம் இதனது பயம்.

[அடி வரையறையில்லாத செய்யுள் ஆறெனல்]

சஎசு. எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியி
னடிவரை யில்லன வாறென மொழிப.

மேலைச் சூத்திரத்தான் அளவியல்வகையை வரையறைப் படுத்தான்; அடி வரையறையின்மையும் அளவியலென்பதூங் [2] குறிப்புக்கருதாவிலக்கணமாகிய [3] செய்யுள் கூறினன் இச் சூத் திரத்தானென்பது.

இ—ள்: அகமும் புறமுமாகிய எழுநிலத்துந் தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையின்றி வரும் [4] இலக்கணத்தளவு ஆறும் என்றவாறு.

இதனை ஆறென்பதூஉம் ஓரளவியலாயிற்று. (கருச)

[அடி வரையறையில்லாத செய்யுட்கள் ஆறும்

இவையெனல்]

சஎஎ. அவைதாம்
நூலி னுன வுரையி னுன
நொடியொடு புணர்ந்த பிசியி னுன
வேது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னுன.

---

1. எழுநிலத்தெழுந்த செய்யுள்களுள் (சஎசு) அடிவரையறை உடையவற்றிற்குக் கூறினும், அல்லாதன அடிவரையறையின்றிவரும் இலக்கணத்தன என்பதூஉம் இனிக் கூறுதும் என்பதூஉம் இதனதுபயம் என்றும் பாடங் காணப்படுகின்றது. அது சிறப்புடையதாதல் காண்க.

2. குறிப்புக்கருதா—குறிப்புக்கருத என்றிருத்தல்வேண்டும். இவ்வாக்கியத்தில் சில சொல் விடப்பட்டிருத்தல் வேண்டும்.

3. செய்யுள் கூறினுன்—செய்யுளாறெனக் கூறினுன் எனவும் பாடம்.

4. இலக்கணத்தளவு—இலக்கணத்தன என்றிருத்தல் வேண்டும். அதுவே சூத்திரத்திற்கியைபாம். நச்சினுர்க்கினியருரை நோக்குக.



இது, மேற்கூறி நிறுத்த ஆறற்கும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : அவைதாமென்பது,

அடிவரையில்லன ஆறெனப் பட்டவைதாம் என்றவாறு. நூலின்கண்ணவும் உரையின்கண்ணவும், நொடிதன் மாத்திரையாகிய பிசியின்கண்ணவும், ஒருமொழிக்கேதுவாகிவரும் முதுமொழிக்கண்ணவும், மறைத்துச் சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின்கண்ணவும், சொல்லுகின்ற பொருளை இடைக்கரந்து சொல்லுங் குறிப்பின்கண்ணவுமென அறுவகைப்படும் என்றவாறு.

அவற்றுக்கிலக்கணம் போக்கிச் [1] சொல்லுதும். நூலின் கண்ணவு [2] மென்றது சூத்திரச் செய்யுளை நோக்கிக் கூறிய வாறு. [3] அதனுள்ளும் [4] அடிவரையுடைய ஆசிரியம்போல் அளவை பெற்று மேலே அடங்குமென்பது. இனி, அச்சூத்திரப் பொருளும் உரையின்கண்ணதாகி வருவதூஉம் ஒரு செய்புளாம். அதனது விகற்பம் முன்னர்க் கூறுதும்.

நொடியொடு புணர்ந்த பிசியும், ஏது நுதலிய முதுமொழியும், மறைமொழி கிளந்த மந்திரமும், கூற்றிடை வைத்த குறிப்புமென

நான்கும் வழக்குமொழியாகியுஞ் செய்யுளாகியும் வருதலின் அவற்றுட் செய்யுளையே கோடற்கு அவற்றுக்கு ' அளவில ' என்றானென்பது. இவை இத்துணையெனவே, இது வும் மேலைச் சூத்திரமும் அளவியலே கூறியவாறாயிற்று. இனி, அவைபடும் பகுதி யாவையுங் கூறுகின்றான், ' நொடியொடு புணர்ந்த ' என்ற மிகையானே

இதுவன்றி இதுபோல்வது பண் ணத்தியென்பதும் ஒன்று உண்டென்பது கொள்க. அது முன் னர்ச் சொல்லும்.

(கசடு)————

1. சொல்லும் என்றிருத்தல்வேண்டும். ஆசிரியனைக் குறித்த தாதலின்.

2. என்ற சூத்திரம் செய்யுளைநோக்கிக் கூறியவாறு எனவும் பாடம். அது பொருத்தமில்லை.

3. அதனுள்—சூத்திரச்செய்யுளுள்.

4. வரையறையின்றி ஓரடியானும்
யுடையன என்றார்போலும்.
வருதலின் அடிவரை

[நூலாவது இஃதெனல்]

சஎஅ. அவற்றுள்,
நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலு முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றகன்ற வுரையொடு
பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன்
பண்பே.

இது, நூலினது
பொதுவிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நூலென்று [1]
சொல்லப்பட்டவற்று முன்னும் பின்
னும் மாறுபடாது தொகுத்தும் வகுத்தும்
பொருள்காட்டி
அடங்கி நின்ற பொருள் விரித்துச்
சொல்லப்பட்டுப் பருப்பொருட்

டாகாது நுண்பொருட்டாகப் பொருள்விளக்கல். அதற்கிலக்கணம் அது என்றவாறு.

இதன் அகலம் [2] உரையிற் கொள்க. (கசுசு)

[நூல் நான்கு பகுதிப்படும் எனல்]

சஎசு. அதுவே தானு மீரிரு வகைத்தே.

அதன்வகை உணர்த்துகின்றது.

இ—ள்: அந்நூற்குப் பகுதி நான்குவகையாம் என்றவாறு.

அவை முன்னர்ச் சொல்லும். இதனது பயம்:— மேல் 'தொகையினும் வகையினும்' (சஎஅ) என்றதனானே, தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு (சுரு௨) என்னும் நால்வகை யாப்பிற்கும், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டுதல் ஒக்குமென [3] அவையிரண்டும் நான்காதலுமுடைய்

வென்பது. அவை எழுத்து முப்பத்துமூன்றெனத் தொகுத்த வழி, குறிலும் நெடிலும் மெய் இனமுஞ் சார்ந்துவரும் மூன்று மென வகுத்தலும்,

"இரண்டு தலையிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீறு."

(தொ. எழு. ௧0௩)

---

1. சொல்லப்பட்டவற்று—சொல்லப்படுவது என்றிருத்தல் வேண்டும். (சூத்திரம் நோக்குக) அன்றேல் முடிபு இயைபின்றாம்.

விளக்கல்—விளக்கலுடையது.

2. உரை—சொல். அவ்வச் சொல்லாற் கொள்க என்றபடி.

3. அவை என்றது தொகையையும் வகையையும்.

என வகுத்தலுமென்றாற்போல்வன. உயர்திணை அஃறிணையெனத் தொகுத்து, ஐம்பாலென வகுத்தலும் அது. [1] ஒழிந்த மூவகை நூலிற்கும் இவ்வாறே ஒருவழித் தொகுத்தலும் வகுத்தலுங் கொள்க. (கசூஎ)

[நூலின் பகுதி நான்கும் இவை எனல்]

சஅ௦. ஒருபொரு ணுதலிய சூத்திரத் தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு மென்ப.

இஃது, அந்நான்கினையும் பெயரும் முறையுமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நூலுள் ஒரு பொருளையே நுதலிவருவது சூத்திரமெனவும், இனமாகிய பொருளினையே தொகுப்பது ஓத்தெனவும், பலபொருட்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலமெனவும், மூன்றுறுப்பினையுடையது பிண்டமெனவுங் கூறிய மரபினான் இயலும் நூல் என்றவாறு. (கசூஅ)

[சூத்திரமாவது இஃதெனல்]

சஅக. அவற்றுட் சூத்திரந் தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப்

பதுவே.

இது, முறையான சூத்திரவிலக்கண
முணர்த்துதல் நுத
லிற்று.

இ—ள்: மேல் ஓதியவற்றுள்
ஒருபொருணுதலியவெனப்
பட்ட சூத்திரம் பொருள் நுதலுங்கால்
ஆடி சிறிதாயினும்
அகன்றுபட்ட பொருளை அறிவித்தாற்போலத்
2 தேர்தல்வேண்
டாமை அவ்வகன்ற பொருள்
அடங்குமாற்றான் அச்செய்யுளுள்
தோன்றச்செய்து முடிக்கப்படுவது
என்றவாறு. (கசுகூ)

---

1. ஒழிந்த மூவகை நூல்—தொகை ஒழிந்த வகை முதலி யன. நூல் நான்காவன: தொகுத்துச் செய்தது, வகுத்துச் செய் தது, தொகுத்தும் வகுத்துஞ் செய்தது, மொழிபெயர்த்துச் செய்

தது என்பன.

2. தேர்தல் வேண்டாமை—ஆராய்ந்து பொருள் காணாமல்.

7[1]



[ஓத்தாவது இஃதென்ல்]

௪அ௨. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

இஃது, ஓத்திலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : மேல் 'இனமொழி கிளந்தவோத்து' என்றான், அங்ஙனம் இனமொழி கிளக்குங்காற் [1] சிதர்ந்துகிடப்பப் பல வோத்தாகச் செய்யாது நேரினமணியை நிரலே வைத்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஓத்தாவது என்றவாறு.

[2] 'நேரின்மணி' எனவே, ஒரு

சாதியாயினும் தம்மின் ஒத்தனவே கூறல்வேண்டுமென்பதாம். வேற்றுமையோத்தும் வேற்றுமை மயங்கியலும் விளிமரபும் என மூன்றன்பொருளும் வேற்றுமையென ஓரினமென்று ஒரோத்தாக வையாது [3] வேறு வேறு வைக்கப்படுமென்பது. உயர்மொழிப் புலவரென்பது, அங்ஙனம் நூல்செய்தல் உயர்ந்தோர் கடனென்றவாறு. (கஎ0)

[படலம் இதுவெனல்]

சஅரு. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
[4] பொதுமொழி தொடரி னதுபட லமாகும்.

இது, மேல் 'பொதுமொழி கிளந்த படலம்' எனப்பட்டதற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒருநெறியவன்றிப் பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறுவேறு இலக்கணங் கூற நுதலின் அவற்றுக்குப் பொதுவாகி வருவது படலம் என்றவாறு.

---

1. சிதர்ந்துகிடப்ப—சிதறிக்கிடப்ப.

2. நேர்—ஒப்பு. தம்மின் ஒத்த என்றபடி.

3. வேறுவேறு வைத்தது தம்மின் ஒவ்வாமைபற்றி எனறபடி.

4. பொதுமொழி தொடரின்—பொதுவானமொழியாய்நின்று தொடர்ந்துவரின். தொடர்தல்—தொடர்புபடுதல். இவ்வாறு உரைப்பர் இளம்பூரணரும். பொருளதிகாரமென்புழிப் பொருள் என்பது அகத்திணை முதலிய ஒன்பதியற்கும் பொதுவாய் அவ் வவ் வியற்பொருள்களுக்கெல்லாந் தொடர்பாய்நிற்றல் காண்க. ஏனைய அதிகாரங்களுமனைய.



'பொதுமொழி கிளந்த படலம்' என்றவழி, ஒருநெறிப் பொருட்குப் பொதுவாகப்பட்டதனை விலக்கி ஈண்டு விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதே படலமென்றானென்பது; அவை அதிகாரங்களாமெனக் கொள்க. (கஎக)

[பிண்டம் இதுவெனல்]

௪அ௪. [1] மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற் றோன்றுமொழிப் புலவரது பிண்ட

மென்ப.

இது, பிண்டங் கூறுகின்றது; வாளாதே 'மூன்றுறுப் படக்கிய பிண்டம்' என்றான் மேல், ஈண்டுச் சூத்திரமும் ஒத் தும் படலமுங் கூறிய அதிகாரத்தானே அம் மூன்றனையும் அடக்கிநிற்பது பிண்டமென்கின்றானென்பது.

இ—ள்: அம்மூன்று உறுப்பினையும் அடக்கிவருவது பிண் டம் என்றவாறு.

அம்மூன்றனையும் உறுப்பெனவே, பிண்டமென்பனதாம் 2 உறுப்பினவென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது, பிண் டம்; அதனுள், எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் பொருளதி காரமென்பன படலமெனப்படும்; 3 அவற்றுள் ஒத்துஞ் சூத் திரமும் 4 ஒழிந்த இருகூறுமெனப்படும்.

'தோன்றுமொழிப் புலவரது பிண்டமென்ப ' என்றதனால், பிண்டத்தினையும் அடக்கிநிற்பது

வேறு பிண்டமுளதென்பது.

அஃது முதனூலாகிய அகத்தியமேபோலும்; என்னை? அஃது இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னு மூன்று பிண்டத்தினையும் அடக்கிநிற்றலின். (கஎஉ)

---

1. சூத்திரமென்னும் ஓருறுப்பு அடக்கிய பிண்டம் இறையனார் களவியல், சூத்திரமும் ஓத்தும் என்னும் இரண்டுறுப்பும் அடக்கிய பிண்டம் பன்னிருபடலம், மூன்று உறுப்பும் அடக்கிய பிண்டம் தொல்காப்பியம் என்பர் நச்சினார்க்கினியர்.

2. உறுப்பின—உறுப்பையுடையன.

3. அவற்றுள்—அவ்வதிகாரங்களுள்.

4. ஒழிந்த—படல மொழிந்த, ஓத்துஞ் சூத்திரமும் படும் என இயைக்க.



[உரைவகை நான்காம் எனல்]

௪அ௫. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருண்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப.

இஃது, உரையாமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: உரைப்பகுதி வழக்கு இந்நான்காகுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

'பாட்டிடை வைத்த குறிப்பி னானும்' என்பது, ஒரு பாட்டினை இடையிடைகொண்டு நிற்குங்
1 குறிப்பினான் வருவன உரையெனப்படும்; என்னை? பாட்டு வருவது சிறுபான்மையாகலின். அவை: தகடூர் யாத்திரை போல்வன.

மற்று, பிறபாடை விரவியும் வருவனவோவெனின்,—அவற்றுள்ளுந் தமிழுரையாயின எல்லாம் 'பாட்டிடை வைத்த குறிப்பு' என ஈண்டடங்கும்; பிறபாடைக்காயின் ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது.

2 '**பாவின் றெழுந்த கிளவி யானும்.**'

என்பது, பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவன போல்வன. சூத்திரம் பாட்டெனப்படாவோவெனின்,—படா; பாட்டும் உரையும் நூலுமென (௬௬௬) வேறோதினமையின்;

[3] அல்லாத சூத்திரத்தாற் சொல்லாத பொருளினை உரையாற்

சொல்லித் தொடர்புபடுப்பது பாட்டிடை வைத்த குறிப்பாவது ;

இஃது அன்னதன்று, வேறொருவன் சூத்திரத்தாற் கூறிய

---

1. குறிப்பு—நூல் செய்வோனது குறிப்பு. குறிப்பு—எண்ணம்; கருத்து.

2. பாவின்றெழுந்த கிளவியானும் என்பதற்கு பாக்களை யொழியத் தோற்றிய சொல்வகையானும் என்பது இளம்பூரண ருரை. இது பொருத்தம்; முன்னாளிலும் தமிழில் வசன நூல்க ளிருந்தன என்பது இவ்வுரையா லறியக்கிடத்தலின். பின் அவர் கூறும் விரிவுரைகளானே இதனை நன்கு அறியலாம். மற்றையோ ருரை பின்னால் எழுந்த நூல்கள் நோக்கிக் கூறப்பட்டனவாத லின் அவை பொருந்தா.

3. அல்லாத—அல்லதூஉம் என்றிருப்பது நலம். நச்சினார்க் கினியரும் அன்றியும் என்பர்.

பொருளேயே மற்ருெருவன் கூறுகின்றுனுகலானென்பது. ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே பொருளெழுதின் அஃதொக்கும். அவை

பாரதம் பருப்பதம் முதலியன.

**'பொருள்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்.'**

என்பது, [1] ஒருபொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்லுவன. அவை: [2] ஓர் யானையும் குரீஇயும் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக் கியையாப் பொருள்படத் தொடர்நிலையான் ஒருவனுழை ஒருவன் கற்று வாலாற்றுமுறையான் வருகின்றன.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்பது, பொய் யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகுதற்கேதுவாகுந் தொடர் நிலை ; அதுவும் உரையெனப்படும் ; அவையாவன, சிறுகுரீஇ யுரையும், தந்திரவாக்கியமும் போல்வனவெனக் கொள்க. இவற் றுட் சொல்லப்படும் பொருள் பொய்யெனப்படாது [3] உலகிய லாகிய நகை தோற்றுமென்பது. இவ்வகையான் உரை நான் கெனப்படுமென்றவாறு. 'உரைநடை' என்னுது

'வகை' என்றதனுன் இவ்வுரைப்பகுதி 4
பிறிதும் ஒன்றுண்டு ; அது மரபியலுட்
பகுத்துச் சொல்லும்.
(கஎ௩)

[அந்நான்கும் இரண்டாம் எனல்]

௪அ௬. அதுவே தானு மோரிரு வகைத்தே.

இஃது, அவற்றின் தொகை கூறுகின்றது.

இ—ள் : அந்நான்கனுள், முதலன இரண்டும் ஒன்றாகவும், ஏனைய இரண்டும் ஒன்றாகவும் தொகுக்கப்படும் அவ்வாற்றாற் பயன் கொள்ளுங்கால் என்றவாறு. அவையாவன கூறுகின்றான்.
(கஎ௪)

---

1. பொருள்—உண்மை.

2. யானையுங் குதிரையும் என்பர் நச்சினார்க்கினியர். அவற்றுக்கு இயையாப் பொருள் என்றது, அஃறிணைப் பொருளாகிய அவைகளுக்குப் பொருந்தாத பொருள். நட்பாடலும் செய்தலும் அவற்றுக்கியையாத பொருள்.

3. உலகியலாகிய—உலகியலாகி

என்றிருப்பது நலம்.

4. பிறிது என்றது அகலவுரையை;



[உரைப்பகுதி இரண்டனுள் ஒரு பகுதி இவர்க்குரித்து;

ஒருபகுதி இவர்க்குரித்து எனல்]

௪அஎ. ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே
யொன்றே யார்க்கும் வரைநிலை யின்றே.

இஃது, அவற்றது இயல்புணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இதுவும் [1] மேனின்ற அதிகாரத்தான் இறுதி நின்ற இரண்டன் தொகுதியாகிய ஒன்று செவிலிக்கே உரித்து எனவும், ஒழிந்த இரண்டனுள் ஒன்று வரைவின்றி எல்லார்க்கும் உரித்து எனவுங் கூறியவாறு.

தலைமகளை வற்புறுத்துஞ் செவிலியர் புனைந்துரைத்து நகு

வித்துப் பொழுது
போக்குதற்குரியரென்பது இதன் கருத்து.
இக்கருத்தேபற்றிப் பிற சான்றோரும்,
"செம்முது செவிலியர் பொய்ந்நொடி
பகர."
என்றாரென்பது; பிறவும் அன்ன.

'மற்றும்' என்றதனான், [2] அவையன்றி
வருகின்ற பிசி யுஞ் செவிலியர்க்கு
உரித்தென்பது கொள்க. இனி, 'பாட்டிடை வைத்த
குறிப்பும் பாவின்றெழுந்த கிளவியும்' (சஅரு)
யாருக்கும் வரைவின்றி வருமாறு அவ்வச்
செய்யுளுட் காணப்படும். (கஎரு)

[பிசி இரண்டு வகைப்படும்
எனல்] சஅஅ. ஒப்பொடு புணர்ந்த
வுவமத் தானுந்
தோன்றுவது கிளந்த துணிவி னானு
மென்றிரு வகைத்தே பிசிவகை
நிலையே.

இது, முறையானே பிசி

இரண்டெனப்படுமென்கின்றது.

**இ—ள் :** ஒப்பொடு புணர்ந்த வுவமமென்பது, தன்கட் கிடந்த ஒப்புமைக் குணத்தோடு பொருந்திவரும் உவமப் பொருளானும், மற்று இனி, ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்றாகச் சொல்லுஞ் சொல்லானுமென்று இவ்விரு கூற்றதாகும் பிசி கூறுபடும் நிலைமை என்றவாறு.

---

1. மேனின்ற அதிகாரத்தான் என்றது, மேல் நான்கனுள் இறுதி நின்ற இரண்டுமே இச்சூத்திரத்தோடு தொடர்புபட்டு அதிகரித்து நின்றமையான் என்றபடி.

2. அவையன்றி.—பொய்ம்மொழியும் நகைமொழியுமாகிய அவை இரண்டுமன்றி, ளியல்]



‘அவை பிறைகவ்வி மலைநடக்கும்’ என்பது, ஒப்பொடு புணர்ந்த உவமம்; இஃது யானையென்றாவது.

> [1]“முத்துப்போற் பூத்து முதிரிற் [2]களாவண்ணம்
> நெய்த்தோர் குருதி

நிறங்கொண்டு—வித்துதிர்த்து.” என்பதுமது; இது கமுகின்மேற்று.

"நீராடான் [3] பார்ப்பா [4] னிறஞ்செய்யா [5] னீராடி
ஞாராடு நீரிற்காக் கை."

என்பது, 'தோன்றுவது கிளந்த துணிவினான்' வந்தது, இது நெருப்பென்றுவது. 'வகைநிலை' என்ற மிகையான், இவையுஞ் செவிலிக்குரித்தென்பது கொள்க.

(கஎகூ)

[முதுமொழி இதுவெனல்]

௪அகூ. நுண்மையுஞ் சுருக்கமு [6] மொளியுடைமையு
மெண்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ
மேது நுதலிய முதுமொழி யென்ப.

இது, முதுமொழியுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: கூரிதாய்ச் சுருங்கி விழுமிதாயெளிதாகி இயற்றப் பட்டுக் குறித்த பொருளை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் [7] வந்ததனைப் பொருண்முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவது முதுமொழியென்ப

புலவர் என்றவாறு.

---

1· முத்துப்போலப் பூத்துக் காய்முதிரிற் களாவின்காய் நிறத்தையும் கனியாய் முதிரின் இரத்தநிறத்தையுங் கொண்டு. முகிழிற் கிளிவண்ணம் எனவும் பாடம். முகிழ்—மூழ் என வழங்கும். காய் முதிரும்பொழுது மூழ் நீலமும் ஏனைப்பகுதி சிவப்புமாய் இருக்கும் என்பது கருத்து.

2. களா—களாவின்காய்.

3. பார்ப்பான்—பிராமணன்.

4. நிறஞ்செய்யான்—நிறஞ்சிவந்தவன்.

5. நீராடின் காக்கை போல்வான் என்க. இது நெருப்பு.

6. ஒளியு முடைமையு மென்மையும் எனவும் பாடம். அது பொருளுக்கியைபுடைத்தன்று. ஆதலிற் பொருந்தாது.

7. வந்ததனை முதுமொழியென்ப என இயைக்க. கருது வது முதுமொழி கருதுவதாகிய முதுமொழியென்றியையும். கருதுவதாகிய என்றிருப்பது நலம். நச்சினார்க்கினியரும் இப் பொருள்படக் கூறுமாறறிக.



"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்—வழுதியைக்
1 கண்டன கண்க ளிருப்பப்
பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு."

(பழமொழி)

என்றவழி, மற்று வழுதியைக்கண்ட கண் இருப்பத் தோள்

பசந்தன என்றக்கால், [2] ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்த

தென்புழிக் குறித்த பொருள் இயைபின்மை கூறுதலாயிற்று.

அதனைச், சொற்றொடர் இனிது விளக்கிற்றன்றாயினும் முற்

கூறிய முதுமொழி முடித்ததென்பது ; என்னை? அதன்கண்ணே

அது முடித்தற்கேதுவாகிய இயைபின்மை கிடந்தமையினென்

பது. இது [3] பருப்பொருட்டன்றி நுண்ணிதாகிச் சொற்சுருக்க

முடைத்தாய் விழுமிதாகி எளிதிற் பொருடோன்றியவாறு கண்டு

கொள்க. எனவே, இதுவும் இந்நாற்பகுதித்தென்றவாறு. (௪௭௭)

[மந்திரம் இதுவெனல்]

௪௬௦. நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த

மறைமொழி தானே மந்திர மென்ப.

இது, மந்திரச்செய்யு ளுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : நிறைமொழி மாந்தரென்பது, சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் 4 பயக்கச்சொல் லும் ஆற்றலுடையராவார் ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத் தார்க்குப் புலனாகாமன் மறைத்துச்சொல்லுஞ் சொற்றொடரெல் லாம் மந்திரமெனப்படும் என்றவாறு.

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'தானே' என்று பிரித் தான், இவை தமிழ் மந்திரமென்றற்கும், பாட்டாகி அங்கத

1. கண்டநங் கருங்கண்ணீ ருகுப்ப எனவும் ஞர்க்கினியருரை நோக்குக.
பாடம். நச்சி

2. ஒன்று=கண். ஒன்று=தோள். கண் அனுபவிக்கவேண்

டிய பயனைத் தோள் நுகர்ந்தது பொருத்தமில்லாமையாகும். அப்பொருத்தமில்லாமையை, 'உழுத்தஞ் செய்யைக் கன்று மேய அதன் செவியையரியாமல் கழுதை செவியை யரிந்ததுபோலும்' என்னும் முதுமொழி விளக்கி முடித்துநிற்றலின் முதுமொழி முடித்தது என்றா.

3. பருப்பொருள் — தூலப்பொருள். நுண்ணிதல்லாதது.

4. பயக்க—பயன்பட.



மெனப்படுவனவும் உள, [1] அவை நீக்குதற்குமெனை உணர்க.

அவை :—

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
வந்தண் பொதியி லகத்தியனு ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவா."

எனவும்,

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—யரணிய
லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட

ஞானந்தஞ் சேர்க சுவா.''

எனவும், இவை தெற்கண் [2]வாயில் திறவாத பட்டிமண்டபத் தார்பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் [3][ ஒருவன் ] சாவவும் பாடிய [4] மந்திரம் அங்கதப்பாட்டாயின. மேல் 'பாட்டுரை நூல்' (கூகக) என்புழி அங்கதமென்றோதினன் இன்ன மந்திரத்தை. இஃது, ஒருவனை இன்னவாற்றாற் பெரும்பான்மையுஞ் சபித் தற்பொருட்டாகலின் அப்பெயர்த்தாயிற்று. இக்கருத்தேபற்றிப் பிறரும்,

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.''

(குறள். உஅ) என்றாரென்க.

அங்கதப்பாட்டாயவழி அவற்றுக்கு அளவை,

" அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்.''

(சஎக) என மேற்கூறினனென்பது.

(கஎஅ)

---

1, அவை—அவ்வங்கதம்.

2. வாயில் திறவாகப் பட்டிமண்டபம் என்றும் பாடம். அது பொருத்தமில்லை. வாயில் திறவாத என்பது நச்சினார்க் கினியருரையினும் உள்ளது. பட்டிமண்டபம்—கல்வி பயிலு மண்டபம்.

3. ஒருவன் என்பது மீளவும் எழுதப்பட்டது. ஒருவன் கெடவும் வாழவும் என்பது நச்சினார்க்கினியருரை. நாடத்துக் குயக்கொண்டானைச் சாகப் பாடிய அங்கதவெண்பா என்று முன்னதற்கும், குயக்கொண்டான் பிழைக்கப் பாடிய அங்கத வெண்பா என்று பின்னதற்கும் தலைக் குறிப்புக்களும், 'குயக் கோடன்' குயக்கொண்டான் என மூலபாடமும் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றன.

4. சுவாகாஎனவும் பாடம். இது வடமொழி மந்திரங்களிறுதி யினும் வருகின்றது. இது சத்தகோடி மந்திரங்களுளொன்று.

72



[செய்யு

[குறிப்புமொழி இதுவெனல்]

சகூக. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்

பொருட்புறத் ததுவே குறிப்புமொழி யென்ப.

இது, முறையானே 'கூற்றிடைவைத்த

குறிப்புணர்த்துதல்' றுதலிற்று.

இ—ள் : எழுத்து முடிந்தவாற்றானும், சொல் தொடர்ந்த வாற்றானும், சொற்படு பொருளானும், செவ்வன் பொருளறிய லாகாமையின், எழுத்தொடுஞ் சொல்லொடும் புணராது பொருட் குப் புறத்தே பொருளுடைத்தாய் நிற்பது குறிப்பாவது என்ற வாறு.

இதனைப் 'பாட்டுரை நூல்' (௩கூக) என்றவழி, [1] 'வாய் மொழி' என்றோதினான், கவியாற் பொருள் தோன்றாது பின்னர் இன்னது இதுவெனச் சொல்லி உணர்த்தப்படுதலின்.

இனி, அதனை இதன்தொகைச் சூத்திரத்துக் 'கூற்றிடை வைத்த குறிப்பு' (சஎஎ) என்று ஓதினான் பாட்டிடைப்படு பொருள் பிறிதாகி அதனிடையே குறித்துக்கொண்டுணரினல்லது [2] மெய்ப்படாதென்றற்கென்பது. பிறர் அவற்றைப் [3] பொருளிசையென்று சொல்லுப.

"குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி

னடக்கிய மூக்கின ராம்."

என வரும். இதனுட் குடமே தலையாகப் பிறந்தாரெனவும், கொம் பெழுந்த வாயினரெனவும், கையுட்கொண்ட மூக்கினரெனவும் கூறியக்கால் எழுத்துஞ் சொல்லும் பொருளும் [4] இயல்பிலவாத லுங் குறிப்பினான் அதனைக் குஞ்சரமென்று கொண்டவாறுங் கண்டுகொள்க. பிறவும் அன்ன.

---

1. வாய்மொழி—குறித்த பொருள் பாட்டாற்றோன்றாது வாயாற் சொல்லி உணர்த்தப்படுவது.

2. மெய்ப்படாமை—தோன்றாமை.

3. பொருளிசை—சொற்பொருளால் வேறொரு பொருள் தோன்றுவதுபோலும். பிறரென்றது யாரையென்பது புலப்படவில்லை.

4. இயல்பின்மை—பொருந்துதலின்மை. இயைபின்மை என்று மிருந்திருக்கலாம். இயல்பு—இயலல்.

மற்றிது
பிசியெனப்படாதோவெனின்,—இது பாட்டு வடி
விற்றாகலின் அற்றன்றென்பது ; அஃதேல்,
பாட்டெனப்படாதோ
வெனின்,—குறித்த பொருண் [1] முடிய
நாட்டாமையின் யாப்
பழிந்து, 'நாற்சொலியலான்
யாப்புவழிப்படாமை'(ரு௯௨)யின்
மரபும் அழிந்து, பிறவுறுப்புப் பலவுங் [2]
கொண்டமையிற் பாட்
டெனவும் படாதென்பது. இஃது, 'எழுத்து
முதலாக வீண்டிய
வடி' (ரு௯0) யெனப்படாமையின் இதனையும்
அடிவரையில்லன

வற்றோடு ஒதினானென்பது. அல்லாதார் குறிப்பிசை வந்த செய்யு
ளெல்லாங் குறிப்பெனப்படுமென்ப. அங்ஙனங் கூறிற் [3] குறிப்
பிசையுடைய [4] பாட்டினுள் வாராவாகிய

செல்லுமென                மறுக்க.
(கஎகூ)

[பண்ணத்திச்                செய்யுள்
இதுவெனல்]

சகூ௨. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டி னியல பண்ணத்தி யியல்பே.

இது, பண்ணத்தி கூறுகின்றது.

இ—ள்: பழம் பாட்டினூடு கலந்த பொருளே தனக்குப் பொருளாகப் பாட்டும் உரையும்போலச் செய்யப்படுவன பண்ணத்தி என்றவாறு.

5 மெய்வழக்கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தியென்ப. இஃது எழுதும் பயிற்சியில்லாத புறவுறுப்புப் பொருள்களைப்

---

1. முடிய நாட்டாமை என்றார்; பாட்டாற் பொருள் தோன்றுமைபற்றி.

2. அழிந்து கொண்டமையிற் பாட்டெனப்படாவாயிற்று என இயைக்க. பிறவுங் குறைதலின் என்று நச்சினார்க்கினியர் கூறலானே இவ்வாக்கியத்திற் பிழையுண்டோ என்பது ஆராயத்தக்கது.

3. குறிப்பிசையுடைய—குறிப்பிசையுடைய செய்யுட்கள்.

4. பாட்டு என்றது "பாட்டுரை நூலே" என்ற சூத்திரத்து முதலிற் கூறிய பாட்டை. பாட்டிற் குறிப்பிசையும் அருகிவருமென்பதை கககூ-ம் சூத்திர உரையுட் காண்க. பாட்டு அடிவரையறையுடையன; குறிப்புமொழி அடிவரையுட்படாதன. ஆதலிற் குறிப்பிசையுடையன பாட்டினுள் வாரா என்றுகும்படி கருத்துச்செல்லும் என்றபடி.

5. மெய்வழக்கல்லாதனவற்றைப் பண்ணத்தி என்று வழங்கல்போல இதனையும் பண்ணத்தி என்று வழங்குவர் என்பது கருத்து.



பண்ணத்தியென்பவென்பது. அவையாவன:—நாடகச் செய்யு ளாகிய பாட்டுமடையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப்பாட்டும் கட கண்டும் முதலாயின. அவற்றை மேலதேபோலப் பாட்டென்னு ராயினர் நோக்கு முதலாயின உறுப்பின்மையினென்பது. அவை (கூசரு) வல்லார்வாய்க் கேட்டுணர்க. (கஅ௦)

[பண்ணத்தி பிசியோடொக்குமெனல்]

சகூரு. அதுவே தானும் பிசியொடு மானும்.

இதுவும் அது.

இ—ள்: மேற் கூறப்பட்ட பண்ணத்தி பிசியோடொக்கும் என்றவாறு.

அதனை ஒத்தலென்பது, அதுவுஞ் செவிலிக்குரித்தென்ற வாறு. 'பிசியொடும்' என்ற உம்மையால்,

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யோடும்
பொருளொடு புணர்ந்த நகையோடும்."
(சஅரு)

ஒக்குமென்றுணர்க. 'தானும்' என்ற மிகையாற் பாட்டுமடை வசைக் கூத்திற்கே உரித்தென்பது கொள்க. (கஅக)

[பண்ணத்தியின் அடியின் உயர்ந்த எல்லை இதுவெனல்]

சகூச. அடிநிமிர் கிளவி யீரா றாகும்.

இதுவும் அது.

இ—ள் : அப்பண்ணத்தியின் அடிப் பெருக்கங் கிளக்குங் காற் பன்னிரண்டாம் என்றவாறு.

'ஆகும்' என்றதனாற் சிறுபான்மை அப்பன்னிரண்டடியின் ஏறியும் வரப்பெறுமென்பது. 'ஈராறாகும்' என்றதனான், இது நெடுவெண்பாட்டாகி வருமெனவும், அதுபோல ஆறடியின் இழிந்து வாராதெனவுங் கொள்க. (கஅஉ)

[அது கூறிய அளவின் மிகுந்தும் வருமெனல்] [1] ௪௬௫. **அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே.**

இதுவும் அது.

---

1. இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் பன்னிரண்டடியின் மிக்கு வரினும் என்பர். அது கொள்ளத்தக்கது இலக்கியங் காணமற் பேராசிரியர் இவ்வாறு பொருளுரைத்தது பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது.

இ—ள் : அது முழுதும் அடியாகி வாராது இடையிடை ஓரோவடி பெற்று அல்லுழியெல்லாம் பரந்துபட்டு வரவும் பெறும் என்றவாறு.

அவை, முற்காலத்துள்ளார் செய்யுளுட் காணாமையிற் காட்டாமாயினும், இக்காலத்துள்ளனவற் கண்டுகொள்க. இலக்கணம் உண்மையின் இலக்கியங் காணாமாயினும் அமையுமென்பது. (கஅரு)

[அளவியற் பகுதி இரண்டேயாமெனல்]                    சகசு.

கிளரியல் வகையிற் கிளந்தன தெரியி
னளவியல் வகையே யனைவகைப் படுமே.

இதுவும் மேலவற்றுக்கெல்லாம் புறனடை.

இ—ள் : எடுத்தோதிய வகையாற் சொல்லியன ஆராயின் அளவியற்பகுதி அக்கூற்றதாம் என்றவாறு.

எடுத்தோதியவகையா[1] னென்பது, நாலும் உரையும் நந் நான்கெனவும், பிசி இரண்டெனவும், முதுமொழியும் மந்திர · மும் கூற்றிடைவைத்த குறிப்பும் ஒரோவொன்றெனவுங் கூறி வந்தவகையான் அவற்றை இணைத்தென்றெண்ணி அளந்தபகுதி யும் அளவியலேயாமாகலின் அவ்வளவியல் அடி வரையறை கூறியவாற்றானும் அடி வரையறையிலவற்றுக்குக் கூறியவாற் றானும் இருவகைப்படும்[2] அளவியல் என்றவாறு. (கஅச)

[திணையாவது இதுவெனல்]

சகூஎ. கைக்கிளை முதலா வெழுபெருந் திணையு
முற்கிளந் தனவே முறைநெறி வகையின்.

இது, பதின்மூன்றும் முறைமைக்கணின்ற திணைபுறப் புணர்த்து (கூகூ) கின்றது.

இ—ள் : கைக்கிளைமுதல்
பெருந்திணையிறுவாய் எழும் முன் னர்க்
கிளக்கப்பட்டன என்றவாறு.

"முறைநெறி வகையின் " என்பது,
அவற்றுக்கு முறைமை யாற் புறமெனப்பட்ட
வெட்சிமுதல் பாடாண்பகுதியீறாகிய எழு

1. என்பது, என்றவாறு என முடியும்.
2. அளவியல் என்றது வேண்டி யதில்லை;
மிகையாதலின். ருஎச

தொல்காப்பியம் [செய்யு

பகுதியோடுமென்றவாறு. எனவே, [1] அவற்றுக்குப்
பொதுவாகிய முறையாற் கரந்தையுள்ளிட்டுப்
பதினைந்து திணையுள் ஒன்று செய்யுட்குறுப்பாகி
வரல்வேண்டுமெனவும், முன்னோதியவாறே
கொள்ளப்படுமெனவுஞ் சொல்லினும் ; இது
சொல்லாக்கால் அவை வரினும் வரும்,
வராதொழியவும்பெறுமென்பது படு மென்பது.
இது மேல்வருகின்ற கைகோண்
முதலியனவற்றுக் கும் ஒக்கும்.
(கஅரு)

[கைகோளுட் களவாவது
இதுவெனல்]

சகூஅ. காமப் புணர்ச்சியு மிடந்தலைப் பாடும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றுங்கநால் வகையினு மடைந்த சார்பொடு
மறையென மொழிதன் மறையோ ராறே.

[2] களவு கற்பென்பன காமத்திணையின் ஒழுகலான் ஆண்டுப் பரந்துபட்டனவெல்லாந் தொகுத்துக் கூறுகின்றான், அவை செய்யுட்குறப்பாயடங்கலின். அவற்றுள் இது களவென்னும் கைகோளுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: [3] காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்தபின்னர் இடந்

தலைப்பாடும், அதற்குப்பின்னர்ப் பாங்கற்குச் சொல்லி அவனுற் கூடுதலும், அதன்பின்னர்த் தோழியைப் பின்னின்று குறை முடித்துக் கோடலுமென அந்நாற்பகுதிக்கண்ணும் பொருந்திய சார்பினுற் களவொழுக்கம் இதுவென்று கருதுமாற்ருற் செய்யுள் செய்தல் கந்திருவவழக்கம் என்றவாறு.

கந்திருவவழக்கம் மறையோரொழுகிய

நெறியதுவாகலான்

' மறையோராறு ' என்றுனென்பது.

எனவென்பது, வினையெச்

சம். எனவே, பாங்கனுந் தோழியும் உணர்ந்தவழியும் அது மறையோர்வழித்தென்றவாறு. காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி

1. அவற்றுக்குப்பொது—அகத்திணைக்கும் புறத்திணைக்கும் கரந்தை பொதுவாகலிற் பொதுவியற்கரந்தை எனப்படும். நச்சரும் இவ்வாறு கூறல் காண்க. தொல்-புறத்திணையியல் ரு-ம் சூத்திரஉரை நோக்குக.

2. களவு கற்பென்பனவாகிய காம ஒழுக்கத்தின்கண் ஒழுகலான் என்க. களவு கற்பென்பன காமத்திணையின் ஒழுகலாருகலான் என்றிருத்தல்வேண்டும். இது சிதைத்து எழுதப்பட்டது.

3. காமப்புணர்ச்சி—இயற்கைப் புணர்ச்சி.

இடந்தலைப்பாடு நிகழாதெனவும், அவ்விடந்தலைப்பாடு ] பிற் பயத்தலரிதென்பது அவள் ஆயத்தொடுங் கூடிய கூட்டத்தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறை முடித் துக் கோடலும், தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யா னாகலின் அதன்பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக் கோடலு மென இந்நான்கும் முறையான் நிகழுங் களவொழுக்கமென்ற வாறு.

"வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை."

என்பனவுங் கைகோளாகாவோவெனின்,—ஆகா; கைகோளென்பது ஒழுகலாறாகலான். அவை அவற்றுட் பிறந்த உள்ள நிகழ்ச்சி ஒன்றொன்றனிற் சிறந்து பெருகியக்கால் அவ்வப் பகுதியா மெனக் கொள்க.

மற்றுக் களவியலுள்,

"ஆய்ந்தனம் புணர்ந்த கிழவோன் றன்வயிற்
பாங்கி னோரிற் குறிதலைப் பெயலும்

பாங்கிலன் றமியோ ளிடந்தலைப் படலும்.''
(இறையனார்—௩)

எனப் பாங்கற்கூட்டம் முற்கூறியதாலெனின்,—இது கைகோள் கூறிய இடமன்மையின் முற்கூறினும் அமையுமென்பது.

மற்று; இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகனைப் பாங்கன்கண்டு இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவுமன்றே? அதனாற் பாங்கற்கூட்டம் நிகழ்ந்தபின்னரன்றி இடந்தலைப்பாடு நிகழாதாம் பிறவெனின்,—அற்றன்று; யாழோர் கூட்டம் உலகியலாதலான் இல்லதன்றுமாகவே உலகத்தார் நிறையுடையாராகி மறைவெளிப்படாமல் ஒழுகுவாரும் மறைவெளிப்படுத்து விளம்பும் பாங்கனையுடையாரும், இல்லாதாருமெனப் பலவகையராதலின் வினாதல் ஒருதலையன்றென்பது; அல்லதூஉம், தன்

1. பிறர் பயத்தல் என்பது முற்பாடம். அது பிற்பயத்தல் என்று காணப்படுகின்றது. அதுவே பொருத்தம். ஏனெனின்? ஆயத்தோடு கூடி நிற்றலின், அவளை இடந்தலைப்பாட்டுக் கூடல் பின் அறிதென்றுணர்ந்தா ளாதலின். S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிலும் அவ்வாறு உள்ளது.

இடந்தலைப்பாடு [1] நிகழுமதானே துணை வேண்டுமென்பது;

என்னை? துணையின்றி நிகழுங் களவு சிறப்புடைத்தாகலானும்

பாங்கன் கழறுமென்று அஞ்சி அவனை முந்துற மறைத்தொழுகுமாகலானுமென்பது. களவொழுக்கமெல்லாம் இந் நான்குவகையானும் அடங்கும். அவற்றுக்குச் செய்யுள்,

" கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே."
(குறுந். உ)

என்னும் பாட்டு, இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்.

" சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்

காமம் கைம்மிகிற் றுங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்

றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா
லணங்கே.''

என்பது, இடந்தலைப்பாடு.
(நற்றிணை—நகூ)

'' இடிக்குங் கேளிர் நுங்குறை யாக

நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நொண்டுகொளற் கரிதே.''
(குறு. ருஅ)

என்பது, பாங்கற் கூட்டத்துக்கண் வந்தது.

'' தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை

செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே.'' (குறு. உஉஉ)

என்பது, தோழியிற் கூட்டம். பிறவும் அன்ன. (கஅக)

1. நிகழுமதானே—நிகழாதாயினே என்றிருத்தல்வேண்டும். என்னை துணைவேண்டற்குக் காரணமதுவாதலின். நச்சினார்க்கினியருரை நோக்குக.



[கற்பாவது இதுவெனல்]

௪௯௯. [1] மறைவெளிப் படுதலுந் [2] தமரிற் பெறுதலு
மிவைமுத லாகிய வியனெறி திரியாது
[3] மலிவும் புலவியு மூடலு [4] முணர்வும்
[5] பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.

இது, கற்பென்னுங் கைகோளுணர்த்துதனுதலிற்று.

இ—ள் : மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும் அதன்பின் தமர்கொடுப்பத் தான் அவ்வகையாற் பெறுதலு மென்னும் இவ்விரண்டும் முதலாகிய வழக்குநெறி திரியாது மகிழ்ச்சியும் புலத்தலும் ஊடலும்
6 உணர்த்தலுமென்னும் நான் குடன் பிரிவுளப்பட்ட ஐந்தும் புணர்ந்தது கற்பென்னுங் கைகோளாம் என்றவாறு.

'இவைமுதலாகிய' என்றதனால்,

"கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான."

(கசங)

என்றவழிக் [7] கூடிய வதுவைபோல்வன கொள்க. அவைதாங் கற்பெனப்படுவதல்லது ஒழுகலாறெனப்படா; என்னை? இவ ரொழுக்கமன்றி வேள்வியாசான் முதலாயினர் செய்விக்

கும் ஒழுக்கமாகலான்.
அங்ஙனமாயினும் அவற்றையுங் கைகோ
ளின்பாற் சார்த்தி யுணரப்படுமென்றற்கு
ஈண்டுக் கூறினு
னென்பது.

1. மறை வெளிப்படுதல்—களவு
வெளிப்படுதல்.

2. தமரிற் பெறுதல்—வரைவு.

3. மலிவு—மகிழ்ச்சி.

4. உணர்வு—உணர்தல். என்றது ஊடறணிதலே. உணர்த்தல் என்று பொருள் கூறல் பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது. இளம்பூரணம் நோக்குக.

5. பிரிவு—ஓதற்பிரிவு முதலியன.

6. உணர்த்தல்—உணர்தல் என்றிருத்தல்வேண்டும். வுரை நோக்குக. உதாரணமும் நோக்குக.
விரி

7. கூடிய—நிகழ்ந்த.

[1] இனிக் கூறும் ஐந்தும், தலைவனுந் தலைவியும் ஒழுகும்
ஒழுகலாறெனவேபடும். [2] முன்னைய இரண்டும்போலப் பிறர்
கொடுக்கப்பட்டனவல்லவென்பது.

மலிதலென்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாய
வற்றான் மகிழ்தல்.

புலவியென்பது, புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறை
படாமற் காலங்கருதிக் கொண்டுய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி.

ஊடலென்பது, உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்புமொழியா
னன்றிக் கூற்றுமொழியானுரைப்பது.

அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி அதற்கேதுவாகிய பொரு
ளின்மை [3] புணர்வித்தல் உணர்வெனப்படும். இல்லது கடுத்த
மயக்கந்தீர உணர்த்துதலால் உணர்த்துதலெனவும், அதனை

உணர்தலால் உணர்வெனவும்படும்; புலவிக்காயின் உணர்த்தல் வேண்டா. அது குளிர்ப்பக் கூறலுந் தளிர்ப்ப முயங்கலும்

முதலாயவற்றான் நீங்குதலின். அம்முறையானே கூறி அவற்றுப்பின் பிரிதல் கூறினான். அஃது இவை நான்கனொடும் வேறு

படுதலின்; அதனை ஊடலோடு வைக்கவே அவ்வூடலிற் பிறந்த

[4] துனியும் பிரிவின்பாற்படுமென்பது கொள்க. என்னை? [5] காட்

டக் காணாது [6] கரந்து மாறுதலின். இவற்றுக்குச் செய்யுள்:

"எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே."

(அகம். ௧௯௫)

என்பது, மறைவெளிப்பாடு.

"தமர்தர,
வோரிற் கூடி யுடன்புணர் கங்குல்."

(அகம். அ௬)

என்பது, தமரிற்பெறுதல்.

---

1. இனி—மேல்; என்றது மலிதன் முதலாகக் கூறுவன

வற்றை.

2. முன்னைய இரண்டென்றது — மறை வெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்.

3. உணர்வித்தல்—உணர்தல் என்றிருத்தல்வேண்டும். அல்லது உணர்வு—உணர்த்தல் என்றிருத்தல்வேண்டும்.

4. துனி—ஊடலின்மிக்கது. 'துனியும் புலவியு மில்லா யின்' என்னுந் தேவர் குறளுரை நோக்குக.

5. காட்டக்காணது—உணர்த்த உணராது.

6. கரந்துமாறல்—உள்ளங்கரந்து வேறுபடல். மாறுதல்— வேறுபடல், ஒழிதல்.



"கேள்கே ழென்ற."
என்னும் அகப்பாட்டினுள், (அகம். கூஙு)

"நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே."
என்பது மலிதல்.

"நாணுக்கடுங் குரைய ளாகிப்

புலவி வெய்யள்யா முயங்கும் காலே."

என்பது, புலவி.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினுய் வாராமற் பெறுகற்பின்." (கலி. எஎ)

என்பது, ஊடல்.

"விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாய்கவிந் தொழியுமென் புலவி."

என்பது, உணர்தல். (கலி. எரு)

"திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்."

(கலி. அசு)

என்பது, துனி. துனித்தலென்பது, வெறுத்தல். அறுவகைப் பிரிவும் பிரிவெனவே அடங்கும். அவை [1] மேற்காட்டப்பட்டன.

(கஅஎ)

[கைகோள்வகை இவை எனல்]

## ருOO. மெய்பெறு வகையே கைகோள் வகையே.

இது, புறத்திணைக் கைகோளுணர்த்துகின்றது.

இ—ள்: பொருள்கள் பெற்ற கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே என்றவாறு.

கைகோளென்பது, ஒழுக்கங்கோடல்; எனவே, அகத்திற்குப் புறனாயினும், [1]புறத்திணைக்குக் கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக் கூறப்படா; பொதுவகையானே [2] மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடுமென இரண்டாகி அடங்கும் அவையுமென்றவாறு. அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளுங் காட்டப்பட்டன. (கஅஅ)

---

1. மேற்காட்டப்பட்டன என்பதை, தொல்.—அகத்திணையியல் உ௫-ம் சூத்திர முதலியன நோக்கி அறிக.

2. மறைந்த ஒழுக்கம்—வெட்சிக்கண் நிரைகாவலர் அறியாமற் சென்று கவர்தல். வெளிப்பாடு—கவர்ந்தமை பின் வெளிப்படல். ஒழிந்த திணை—வஞ்சி முதலியன.



### [களவினிற் கூற்றுக்குரியர் இவர் எனல்]

௫௦க. **பார்ப்பான் பாங்கன் றோழி செவிலி**
**சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோ**
**டளவியன் மரபி னறுவகை யோருங்**
**களவினிற் கிளவிக் குரிய ரென்ப.**

இது, கூற்றென்னும் உறுப்புணர்த்துகின்றது.

இ—ள் : எண்ணப்பட்ட அறுவருங் களவொழுக்கினுள் (களஎ) நிகழ்ந்தன கூறினராகவல்லது ஒழிந்தோர், கூறினராகச் செய்யுள் செய்யப்பெறுரென்றவாறு.

பார்ப்பானென்பான், நன்றுந் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவானெனப்படும். பாங்கனென்பான், அவ்வாறன்றித் தலை மகன் வழிநின்றொழுகி வருமாகலின் அவனை அவன்பின் வைத் தான். தோழி, அவன்போன்றும் பெண்பாலாகலின் அவளைப் பின்வைத்தான். செவிலி மாற்றஞ் சிறுவரவிற்றுதலின் அவளை அவளின்பின் வைத்தான். அவரிற் சிறந்தமையிற் சீர்த்தகு சிறப் பிற் கிழவனையுங் கிழத்தியையும் அவர்பின் வைத்தான். அவ் விருவருள்ளுந் தலைமகளது கூற்றே பெருவரவினதாகலின் அவளை ஈற்றுக்கண் வைத்தானென்பது. உதாரணம் :

"சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
.................................................................
தேருங்கா னும்மக னுமக்குமாங் கனையளே."

(கலி. கூ) என்பது, பார்ப்பான் கூற்று.

" காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
1 முதைச்சுவற் கலித்த முற்று விளம்புன்
2 மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே."

(குறுந். உ0௪) என்பது, பாங்கன் கூற்று.

" ஏனல் காவ லிவளு மல்லள்

..............................................

சொல்லு மாடுப கண்ணி னானே."

என்பது, தோழி கூற்று.

---

1. முதைச்சுவல் கலித்த—பழங் கொல்லையாகிய மேட்டு நிலத்தே தழைத்த.
2. மூதா—முதிய பசு.



" பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தன னென்றனள்

.................................................................................

ஆம்பன் மலரினுந் தான்றண் ணியளே."

(குறு. அச) என்பது, செவிலி கூற்று.

"பாலு முண்ணுள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி."

(அகம். சஅ) என்பதும் அது.

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
..........................................................
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென்
யானே."

(குறு. உஅ0)

என்பது, கிழவன் கூற்று.

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே."

(அகம். ருஅ) என்பது, கிழத்தி கூற்று.

பிறவும் அன்ன. (கூஅ௯)

[கற்பினிற் கூற்றுக்குரியார் இவர் எனல்]

ரு0உ. பாணன் கூத்தன் விறலி பரத்தை
[1] யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.

இதுவுமது.

இ—ள்: இவ்வெண்ணப்பட்ட எல்லாருஞ்

சொல்லிய சொல் லாகச் செய்யுள் செய்யப்பெறுங் கற்பினுள் என்றவாறு.

'முன்னுறக் கிளந்த [2] கிளவி' என்பது, பொருளேக் கிற்று. இசையின் பின்னரது நாடகமாகலிற் பாணன்பின் கூத் தனே வைத்தும், பெண்பாலாகலான் விறல்பட ஆடும் விறலி யைக் கூத்தன்பின் வைத்தும், அவ்வினத்துப் பரத்தையரை அதன்பின் வைத்தும், [3] பொருட்குச் சிறந்தாராகலின் நற்

1. ஆணம்—அன்பு.

2. கிளவி—ஈண்டுப் பொருள் நோக்கிற்று என்றபடி.

3. பொருட்குச் சிறந்தார் என்றது, பொருள் பெறுதற்குச் சிறந்தவர் பரத்தைய ரென்றபடி. அறிவரும் பொருட்குச் சிறந்தாராகலின் அப்பொருட்குச் சிறந்த பரத்தையர்க்குப்பின் அவரை வைத்தாரென்பது கருத்து. அறிவரை நற்பொருளுண ரும் அறிவர் என்றமையின், பரத்தையர் தீப்பொருளுணர்வோ ரென்பது பெறப்படும். எனினும் இருவரும் பொருள் என்ற அளவில் இயைபுடையார் என்றபடி.

பொருள் உணரும் அறிவரை அவர்பின் வைத்தும், எதிலாகிய கண்டோரை அவர்க்குப்பின் வைத்துங் கூறினானென்பது. இவ்வாற்றான் இவரோடு முன்னர்க் களவொழுக்கத்திற் கூறிய அறுவருங் கூறப்பெறுவரென்றவாறு. 'தொன்னெறி மரபின்' என்றதனாற் பாகனுந் தூதனுங் கூறவும் அமையும்; அவை புறப்பொருட்குச் சிறந்துவரும்; அவற்றுக்குச் செய்யுள்:—

"செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்
தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே." (அகம். கச)

என்பது, பாணன் கூற்று.

"ஆடலிற் பயின்றனை யென்று தென்னுரை
யூடலிற் றெளிதல் வேண்டும்."

என்பது, கூத்தன் கூற்று.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
..........................................................
நறுங்கண் ணியன்கொ னோகோ யானே."

என்னும் நற்றிணைப் (நூகூச) பாட்டு,

கண்டோர் கூற்று.

"விதையர் கொன்ற முதையற் பூழி
..........................................................
மெல்விறைப் பணைத்தோட் டுயிலமர் போயே."

என்னும் நற்றிணைப் (கஉக) பாட்டுப் பாகன்

கூற்று.

ஒழிந்தனவுங் கற்பியலுட்

கூறியவாற்றான் அறிக. (கக௦)

[கூற்றுக்குரியரல்லாதார் இவர்

எனல்]

ருo௫. ஊரு மயலுஞ் சேரி யோரு
நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்னையுங்
கொண்டெடுத்து மொழியப் படுத லல்லது
கூற்றவ ணின்மை யாப்புறத் தோன்றும்.

இ—ள்: இவ்வெண்ணப்பட்ட அறுவகையோருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப்பெறார் என்றவாறு.

இவை, களவிற்கும் கற்பிற்கும் பொது. 'கொண்டெடுத்து மொழியப்படுதலல்லது' என்பது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லினல்லது இவர்தாங் கூறாரென்றவாறு; அவை,

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென

வானு தலைக்கு மறனி லன்னை."

எனவும்,
(குறுந். உகஉ)

1. பையுள்—துன்பம்.
ளியல்]

"தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி
.............................சாய்த்தார் தலை."

(கலி. நகூ)

எனவும் வருவனபோல்வன.

'யாப்புறத் தோன்றும்' என்றதனுன் அகத்திணைக்கண் இவ்வாறு நிலைபெற்றதென்பது; எனவே, புறத்திணைக்கண் அவர் கூறவும்பெறுமென்பது. [1] இது நோக்கிப்போலுங் [2] கூறு தாரையுங் கூறுவாராயிற்றென்பது. 'நோய்மருங்கறிநரை' இடை வைத்தான், முன்னைய மூன்றும் பெண்பாலெனவும், ஒழிந்தன ஆண்பாலெனவும் அறிவித்தற்கென்பது. எனவே, [3] நோய்மருங் கறிநர் பெண்பாலும் ஆண்பாலுமாயினுரென்பது. (கசுக)

[நற்ருய் தலைவனெடுந் தலைவியொடுங் கூருள் எனல்]

ருoச. கிழவன் றன்னெடுங் கிழத்தி தன்னெடு
நற்ருய் கூறன் முற்றத் தோன்ருது.

இஃது, எய்தாததெய்துவித்தது; விலக்கியல்வகையால் விதித்ததெனவும் அமையும்.

இ—ள்: கிழவனேடுங் கிழத்தியோடும் இடையிட்டு நற்ருய் கூறுதல் நிரம்பத் தோன்ருது என்றவாறு.

'நற்றாய்' என்று ஒருமை கூறியவதனால், தலைமகள் தாயையே கொள்ளப்படும். இதனானே தந்தை தன்னையரென் பன போல்வனவற்றுக்கும் இஃதொக்கும். 'முற்ற' என்றதனால் தானே தலைவனாதலால் தலைவன் தமர் யாவருங் கூறார்; [4]முற் கூறப்பட்டார் [5]அல்லரென்பது கொள்க. முற்றுதென்னாது 'தோன்றாது' என்றதனால், புறத்திணைக்கண் இவை வரைவின்றி வழக்கினொடு பொருந்துமாற்றாற் கொள்ளப்படுமென்பது. 'கிழ வன்றன்னொடுங் கிழத்திதன்னொடும் 'கூறாள்' எனவே, அல் லுழிச் சொல்லப்பெறும் நற்றாயென்பதாம்; அஃது,

1. இது—புறத்திணைக்கட் கூறல்.

2. கூறாதார்—கூற்று நிகழ்த்தப்பெறாதார். அவர் இச்சூத் திரத்தாற் கூறியவர். கூறுவாளாயிற்று என்றிருப்பது நலம். ஆசிரியனை ஆதலின்.

3. நோய்மருங்கறிநர் — தலைவியின் நோயின் பகுதியைக் குறிப்பாலறிபவர். இளம்பூரணம் நோக்குக.

4. தலைவிதாய் முதலியோர்.

5. அல்லரென்பது அல்லதென்பது என்று இருத்தல் வேண்டும்.



"எம்வெங் காம மியைவ தாயின்
.................................................
செறிந்த சேரிச் செம்மன் மூதூ

ரறிந்த மாக்கட் டாகுக தில்ல
.......................................................................
மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே.''
(அகம். கரு) என வரும்.
(கசுஉ)

[இடைச்சுரத்துத் தலைவன் தலைவியொடு கண்டார் கூறுவர் எனல்]

ருoரு. ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

இ—ள்: தலைமகனோடும் தலைமகளோடும் இடைச்சுரத்துக் கண்டோர் மொழிதல் அறியப்பட்டது என்றவாறு.

[1] 'ஒண்டொடி மாதர் கிழவன்' எனவே, அவ்விருவர் கூட்டத்துக்கண்ணுமன்றி அவ்விருவரோடுங் தனித்துழிக் கூற்றில்லை என்றவாறு. 'கண்டது'

என்றமிகையான், இடைச்சுரத்

துக் கண்டோர் செவிலிக்குரைப்பனவுங் கொள்க; அவை,

> " இளையன் மெல்லியன் மடந்தை
> யரிய சேய பெருங்கான் யாறே."

(சிற்றட்டகம்)

எனவும்,

> " அணித்தாத் தோன்றுவ தெம்மூர்
> மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே."

எனவும் வரும்.

இதனுள், ஒண்டொடி மாதர் கிழவன் எனச் செவ்வனந் தோன்றக் கூறியது [2] தலைமகனையாதலின்,

> " வில்லோன் காலன கழலே தொடியோள்
> மெல்லடி மேலன சிலம்பே."

(குறுங். எ) என்பது, செவிலிக்குக் கண்டோர் கூறியது. (கசுரு)

1. மாதர்க்குக் கிழவன் என்பது இவர் கருத்து. கிழவன்—உரியோன், மாதர் என்பது கிழவனை விசேடித்து நின்றதென்பது இவர் கருத்து. மாதர்—கிழத்தி. மாதர் என்பதற்குச் செவிலி என்று பொருள்கொள்வர் நச்சினார்க்கினியர். நற்றாய்—தோழி செவிலி என்பர் இளம்பூரணர்.

2. தலைமகளை யாதலின் என்பதன்பின் சில வாக்கியம் இருந்திருத்தல்வேண்டும். என்னை? தொடர்பின்றியிருத்தலின்.



[இடைச்சுரத்துத் தலைவன் நீதிநூல் விதிப்படி தலைவியொடு கூறற்குரியன் எனல்]

ருO௬.

**இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்.**

இதுவும், கூற்று விகற்பமே கூறுகின்றது.

இ—ள்: இடைச்சுரத்து உடன்போகிய கிழத்தியொடும் கிழவன் நீதிநூல்வகையாற் கிளத்தற்குமுரியன் என்றவாறு.

நீதிநூல்வகையாற் கிளத்தலென்பது, கிழத்தி தன்தமர் இடைச்சுரத்துக்கண்ணுறின் அவர் கேட்பத் தலைவிக்குச் சொல்லுவானாய் [1] வழக்கியல் கூறுதலுமுரியனென்பது. 'வழக்கியலாணை' என்றதனான் நீதிநூல் விதி [2] பிறழக் கூறின் அஃது இராக்கதம்போன்று காட்டுமென்பது. உம்மையாற் கிழத்தியொடு வழக்கியலாணையானன்றி மருட்டிக் கூறவும்பெறுமென்பது.

"அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்

கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி

நிழல்காண் டோறு நெடிய வைகி

மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்

குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே.''

(நற்றி. கூ)

என்பதனுள், 'வருந்தாதேகுமதி' எனவே, 'வழிபடு தெய்வங் கட்கண்டால்' விடுவார் இல்லாததுபோல நின்னை விடுதல் எனக்கு அறனன்றெனக் கூறி மெல்லெனச் செல்கவென மருட்டிக் கூறிய வாறு காணக.

---

(ககூச)

*1.* வழக்கியலாற் கூறல்—நின் தமர்வரின் அவரைக் கொல்லேன் என்றல். உதாரணம் ''வினையமையாவையினியலி''...... என்னுங் நற்றிணை நகூஉ-ஞ் செய்யுளில், ''நுமர்வரின் மறைகுவன் மாஅயோளே'' என்னுமடியானும், ''நுமர்வரி னோர்ப்பினல்ல தமர்வரின் — முந்நீர் மண்டில முழுவது மாற்று — தெரிகணை விடுதலோ விலனே — யரிதமர் மழைக்கண் கலுழ்வகை யெவனே.'' என்னுஞ் செய்யுளானுமறிக.

*2.* பிறழக் கூறின் என்றது அவரைக் கொல்வேன் எனக் கூறலை. கொன்றுகோடலும் இராக்கதமாதலின் கொல்வேனென்றலு மிராக்கதமாயிற்று.

[கண்டோரும் வழக்கியலாணையிற் கிளப்பரெனல்]

[1] ருoஎ. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தி னெடுத்தே.

இதுவுங் கண்டோர் கூற்று.

இ—ள்: மேலைச் சூத்திரத்துக் கூறிய தலைமகனையும் தலை மகளையும் ஒழித்து, ஒழிந்தோரெனப்படுவார் கண்டோரெனப் படுப. அவர் கூற்றுங் கிழவன் கிழத்தியொடு மொழிந்தாங்கு வழக்கியலாணையிற் கிளத்தற்கும் உரியரென்பான் முன்னத்தி னெடுத்துக் கூறுபவென்றானென்பது.

முன்னத்தினெடுத்தலென்பது, அதிகாரத்தான் அறநூற் கருத்தினானெடுத்துரைப்பவென்றவாறு; அவை,

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா லும்மக லுமக்குமாங் கனையளே."

(கலி. கூ) என்றாற்போல்வன.

இவ்வாறு வழக்கியலாணையாற் கிளவாது வாளாதே அவரைக் கண்டேமெனவும் அவர் இன்னுழிப் புகுவரெனவுஞ் சொல்லுவன:—

"கண்டோர் மொழிதல் கண்ட தென்ப."

(ருoரு) என்புழிக் கூறினும் என்பது. (கசூரு)

[கேட்போர் இவரெனல்]

ருoஅ. மனையோள் கிளவியுங் கிழவன் கிழவியு
நினையுங் காலைக் கேட்குந ரவரே.

இது, கேட்போரென்னும் உறுப்புணர்த்துகின்றது.

1. இளம்பூரணருரையே பொருத்தம்; வருஞ் சூத்திரத்து அவர் என்பது ஒழிந்தோரையே சுட்டலின். இளம்பூரணருரை வருமாறு :—தலைவனையும் தலைவியையும் ஒழிந்த பதின்மரும் அத்தலைவனோடும் தலைவியோடும் சொல்லிப்போந்த மரபாற் சொல்லப்பெறுவர், இடமுங் காலமுங் குறித்து என்றவாறு. சொல்லிப்போந்த மரபாவது : இவ்வாறு சொல்லுவரெனக் கற்பியலிற் சொல்லிப்போந்த மரபு. கண்டோர் கூற்று முன் வந்துள்ளது. அன்றியும் கண்டோர் எனச் சூத்திரியாமையானும் கண்டோர் கூற்றாகப் பொருள்கூறல் பொருந்ாதென்க.



இ—ள் : முன்னர்க் கூற்றிற்குரியரெனப்பட்ட பன்னிருவருட் கேட்டற்குரியார் தலைமகனும் தலைமகளும் ஒழிந்து ஒழிந்த பதின்மரும் என்றவாறு.

[1] அவர் கேட்பனவும் அவ்விருவர் கிளவியுமேயெனவும் [2] தத்தங் கிளவி கேளாரெனவுங் கூறியவாறு. 'மனையோள் கிளவியுங் கிழவன் கிழவியும்' என்பதனை,

மேற்போயின கூற்

றிற்குங் கூட்டியுரைக்க. உரைக்கவே கூறுவனவுங் கேட்பனவுமெல்லாம் அவ்விருவர் கிளவியுமேயெனவும், தத்தங் கிளவி கூறவுங் கேட்கவும்பெறாரெனவுங் கூறியவாறாயிற்று. இங்ஙனம் விலக்

கப்பட்டனவற்றுள் வேறுபட வருவனவும் [3] மேற் கூறுகின் றும்.

[4] மற்றுக் கூற்றுக்கு உரியரெனப்படுவார் அவ்வயின் தலைவி
யுந் தலைவனுங் கூறக் கேளாரோவெனின்,—அவை [5] தங்கிளவி யாகலின் தாங்கேட்டல் விதந்தோதவேண்டுவதன்றென்பது.

'நினையுங்காலை' என்றதனால், தலைமகள் சொல்லக் கேட்போரும், தலைமகன் சொல்லக் கேட்போரும், தலைவனுந் தலைவியுந் தம்முட் கேட்டனவற்றுக்குரியனவும், ஆராய்ந்து கொள்ளப்படும் [6] மேற் கூறியவகையானென்பது; எனவே, தலைமகன் கூறப் பரத்தை கேட்டலும், தலைமகள் கூறப் பரத்தை கேட்டலும் முதலாயின [7] புலனெறி வழக்கிற்கேலாதன விலக்கப்பட்டன. ஒழிந்தனவற்றுட் சில வருமாறு:—

---

1. அவர்—அப்பதின்மரும்.

2. தத்தங் கிளவி—தமதுதமது கிளவி.
குரிய கிளவியை.
என்றது அவ்வவர்க்

3. மேற் கூறுகின்றார்
கினியம் நோக்குக.

என்றிருத்தல்வேண்டும். நச்சினார்க்

4. மற்றுக் கூற்றுக்குரியரெனப்படுவார் அவ்வயின் தலைவனுந் தலைவியுங் கூறக் கேளாரோவெனின்? என்பது. மற்றுக் கூற்றுக்குரியார் கூறத் தலைவனுந் தலைவியுங் கேளாரோவெனின்? என்றிருத்தல்வேண்டும். என்னை? சூத்திரத்தால் தலைவனுந் தலைவியுங் கூறக் கேட்போரையே சொல்லப்பட்டதாதலானும், பின் வரும் விடை வினாவிற்குப் பொருத்தமின்றாதலானுமென்க. நச்சினார்க்கினியருரை நோக்குக.

5. தங்கிளவி—தமக்குரிய கிளவி. என்றது இருவர்க்கும் ஒவ்வொருவர்க்குமுரிய கிளவி என்றபடி.

6. மேற்கூறிய வகை—கற்பியலிற் கூறிய வகை.

7. புலனெறி வழக்கு—செய்யுள் வழக்கு. ஏலாதென்றமை யான் ஏற்பன கொள்ளப்படும்.



"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே."

(அகம். ருஅ) என்னுந் தலைமகள் கூற்று, தலைமகன் கேட்டது.

"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே."

(நற். கூ) என்பது, தலைமகன் கூற்று, தலைமகள் கேட்டது.

1 "நின்கேள்,
புதுவது பன்னாளும் பாராட்டி யானு

மிதுவொன் றுடைத்தென வெண்ணி."
(கலி. உச)
எனவும்,
2 "மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண."
(அகம். கச)
எனவும்,
3 "உயங்கின் றன்னையென் மெய்யென்
றசைஇ." (அகம். கஎ)
எனவும,
4 "ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே."
(குறுந். ௩௬உ)
எனவும்,
5 "எல்லிரு மென்செய்தீ ரென்னை
நகுதிரோ." (கலி. கசஉ)
எனவும் இன்னோரன்ன வெல்லாந்
தோழியும் பாணனும் செவிலி
யும் கண்டோரும் அறிவரும் கேட்பத்
தலைமகள் கூற்று வந்
தன. பிறவும் அன்ன.
6 "இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
பரந்தன் றிந்நோய் நொன்டுகொளற் கரிதே." (குறுந். ௫அ)
எனவும்,

7 "எனுவ சிரூஅ ரெம்மூறு நண்ப
.........................................
புதுக்கோள் யானையிற் பிணித்தற்று

லெம்மே" (குறுந். கஉகூ)

எனவும்,

8 "ஊர்க பாக வொருவினை கழிய."

(அகம். சச) எனவும்,

9 "பேரமர் மழைக்கணின் றோழி யுரீஇய
வாரஞ ரெவ்வங் களையா யோவென."

எனவும்,

---

1. தோழி கேட்டது. 5. அறிவர் கேட்டது.
2. பாணன் கேட்டது. 6. பார்ப்பான் கேட்டது.
3. செவிலி கேட்டது. 7. பாங்கன் கேட்டது.
4. கண்டோர் கேட்டது. 8. பாகன் கேட்டது.
9. தோழி கேட்டது.



1 "சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்." (கலி. கஙகூ)

எனவும் இவை பார்ப்பானும் பாங்கனும் பாகனும் தோழியும் கண்டோரும் கேட்போராகத் தலைமகன் கூற்று நிகழ்ந்தன. பிறவும் அன்ன.

"ஒன்றித் தோன்றுந் தோழி." (ஙகூ)

என்றமையின், தோழி கூற்றுந் தலைமகள் (உஉரு) கூற்றோடொ மென்பது. (கசுகூ)

௫௦௯. பார்ப்பா ரறிவ ரென்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே.

இதுவுமது.

**இ—ள்:** இது மேற்கூறிய பார்ப்பாரும் அறிவரும் கூறிய கூற்றுக் கேட்போரை இன்னாரென்று வரையப்படாது என்றவாறு.

என்றவழி, 'யார்க்கும்' என்றது, அகத்திணையோர்க்கும் புறத்திணையோர்க்கு மென்றவாறு. 'யார்க்கும் வரையார்' என்றதனை, எச்சப்படுத்துச் சிலர்க்கு வரையப்படுமென்பது கொள்க. என்னை? பார்ப்பார் கூற்று, தலைமகனும் செவிலியும் நற்றாயும் கேட்பினல்லது பிறர் கேட்டற் கேலா. அறிவர் கூற்று, தலைமகளுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயும் கேட்டற்குரியர்.

புறத்திணைக்கண்ணும் [2] பொதுவியற் கரந்தையோர்க்கும் (௯அநி) பார்ப்பார் கிளவி ஏலாவெனவும், அறிவர்கிளவி ஏற்கு மெனவும், பிறவு மின்னோரன்ன கொள்க.

'யாப்பொடு புணர்ந்து' என்பது, அகப்பொருளும் புறப் பொருளுமாக யாக்கப்படுஞ் செய்யுளெல்லாவற்றோடும் பொருந்து மென்றவாறு. • இவர் கிளவி வரையப்படாதெனவே அறிவர் வாயிலாகியவழித் தலைமகள் வாயின் மறுத்தலிலளென்பதூஉம், புறத்திணைத் தலைவர்க்கும் அவ்வாறே [3] வழிநிற்றல் வேண்டு

1. கண்டோர் கேட்டது.

2. பொதுவியற் கரந்தை — அகம் புறம் இரண்டற்கும் பொதுவான கரந்தைத் திணை.

3. வழி என்பது அவர்வழி என்றிருப்பது நலம்.

மென்பதூஉங் கூறியவாறாயிற்று; என்னை? அறிவரெனப்படுவார் மூன்று காலமுந் தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன்குணர்ந்த புலமையோரு மாகலானும், இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையராகலானும், அவர்வழிநிற்றல் அவர்க்குக் கடனாகலானு மென்பது. (ககூ௩)

[பரத்தையும் வாயில்களுந் தலைவி கேட்பச் சொல்லல்வேண்டுமெனல்]

ருக० பரத்தை வாயி லெனவிரு கூற்றுங்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பய மிலவே.

இது, பயனில்கூற் றுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: பரத்தையும் வாயில்களுமென்னும் இரண்டு வேறுபாட்டின்கண்ணும் எழுந்த கிளவி கிழத்தி கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்காற் பயமிலவென்றவாறு.

கிழத்தியைச் சுட்டாவெனவே, [1] பாங்காயினர் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று.

" செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி.''

(அகம். கூ0௬)

[2] என்றக்கால், தலைவிக்குப் பாங்காயினர் கேட்ப[ச் சொல்லி]க் கூறல்வேண்டுமென்பது. வாயில்களுந் தலைமகளை ஊடல்காப்ப வல்லது சொல்லாராகலான் தலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டுமென்பது, 'சுட்டாக் கிளப்புப் பயமில' என்றதனுன், வாயில்கள் கூறுவனவுங் கிழத்திக்குப் பாங்காயின தோழி கேட்பச் சொல்லினும் அமையும். அவற்றுக்குச் செய்யுள் :

" ஒருயிர் மாத ராகலி னிவளுந்

தேரா துடன்றனண் மன்னே.''

என்பது, கிழத்தி கேட்ப வாயில்கள் கூறியது. இது [3] தோழி கேட்பச் சொல்லியதூஉமாம். (கக௬)

1. பாங்காயினர்—கிழத்திக்குப் பாங்காயினர். 2. இது தலைவிக்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது என்றிருப்பது நலம்.

3. தோழி கேட்பினும் தலைவி கேட்டதேயாமென்க அவளின் வேறின்மையின் என்க. இனி இவள் அத்தலைவிக்கு அறிவிப்பாளுமாம்.



[தலைமகளைச் சுட்டி வாயில்கள் ஒருவர்க்கொருவர் கூறவும்பெறுவர் எனல்]

ருகக. வாயி லுசாவே தம்முளு முரிய.

இதுவுமது.

இ—ள்: மேனின்ற அதிகாரத்தால் தலைமகளைச் சுட்டி ஒருவரொருவர்க்குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும், அவையுந் தலைமகள் கேட்பன என்றவாறு.

அதற்குச் செய்யுள் :

"தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு ணாணிக் [1] காப்பா டும்மே."

(குறுந். கூ) என்பது, பாடினி பாணர்க்குரைத்தது. 'தம்முளும்' என்ற உம்மை எதிர்மறையாகலான், [2] கேட்குநள்

அவளெனப்பட்ட வாறன்றித் தம்முள்
தாங்கேட்டல் சிறுபான்மையெனக் கொள்க.
(கசு கூ)

[கூருதன கூறுவனவாகவும் கேளாதன
கேட்பனவாகவும்
கூறவும்படும் எனல்]

ருகஉ. ஞாயிறு திங்க ளறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
யவையல பிறவு நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந
போலவுஞ்
சொல்லியாங் கமையு மென்மனார்
புலவர்.

இது, கேளாதன சிலபொருள்
கேட்பனவாகப் பொருளிய
லுள் (ககூசு) வழுவமைக்கப்பட்டனவற்றை
இலக்கணவகையாற்
கூறுவனவுங் கேட்குநவும் ஆகற்கண்ணும்
ஆய்கின்றதென்பது.

இ—ள்: ஞாயிறும் திங்களும் அறிவும்

நாணும் கடலும்
கானலும் விலங்கும் மாணும் பொழுதும்
புள்ளும் நெஞ்சும்
இன்னோன்ன பிறவும் மேற் பொருளியலுள்,
"செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்."
(கசுசு)
என்று பொதுவகையாற் கூறியவாற்றான்
அவை தாம் சொல்லு
வனபோலவும் கேட்பனபோலவும் சொல்ல
அமையும் என்றவாறு.

1. காப்பாடும்—காத்தல்செய்வேம்.
கரப்பாடும்மே என
வும் பாடம். கரத்தல்—மறைத்தல்.
2. கேட்குநர் அவர் எனவும் பாடம்.
அது சிறப்பின்று.

. ஈண்டுக் கூற்றும் உடன் கூறினான் [1]

மேலிவற்றை வரை

யறுத்துக் கூற்றிற்கு உரியவென்றிலனாகலின், புலம்புறு பொழு தென்பது, மாலையும் யாமமும் எற்பாடுங் காருங் கூதிரும் பனி யும் இளவேனிலும் போல்வன. 'பிறவும்' என்றதனால் புல் புதல் முதலியன கொள்க. அவற்றுட் சில வருமாறு:

"கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ."

என்றாற்போல்வன கண்டுகொள்க.

(கலி. கசஉ)

(உ௦௦)

### [இடம் இதுவெனல்]

ருகரு.

ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
கரும நிகழ்ச்சி யிடமென மொழிப.

இது, களனெனப்பட்ட

உறப்புணர்த்துகின்றது.

இ—ள் : பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான் முடியுங் கரும நிகழ்ச்சியை இடமென்று கூறுப என்றவாறு.

இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒருசெய்யுட் கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கு ஏதுவாகியதோர் உறுப்பினை இடமென்றானென்பது. ஒருநெறிப்படுதலென்பது, ஒருவழிப் பலவுந் தொகுதல். ஓரியலென்பது, அவற்றுக்கெல்லாம் இலக்கணமொன்றுதல்; அஃதாவது, காட்சியும் ஐயமும் துணிதலும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையுமென் றின்னோரன்னவெல்லாம் ஒருநெறிப்பட்டு இயற்கைப் புணர்ச்சியென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது. கரும நிகழ்ச்சியென்பது, காமப்புணர்ச்சியென்னுஞ் செயப்படுபொருணிகழ்ச்சி ; அஃது, இடமெனப்பட்டது. இது [2] வினைசெய்யிடம். [3] நிலமாயின முன்னர்த் திணையெனப்பட்டன. காலம் முன்னர்ச் சொல்லும்.

---

1. இவற்றை என்றிலனுகலின் என இயைக்க. இவற்றை என்றது ஞாயிறு முதலியவற்றை.

2. வினை செய்யிடம் — தொழில் செய்யிடம்; என்றது, புணர்ச்சியாகிய தொழில் நிகழுமிடம் என்றபடி.

3. நிலம்— இடமன்று என்றபடி. நிலமென்பது திணை. களம் என்பது வினைசெய்யிடம். ஆதலால் இது வேறு என்றபடி.

"எலுவ சிறூஅ ரெம்முறு நண்ப."
(குறுந். கஉகூ) என்னும் பாட்டும்,

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
நெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சில் லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாக
மொருநாள் புணரப் புணரி
னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே."

(குறு. உஅ0) என்னும் பாட்டும் பாங்கற் கூட்டமே இடனாக ஒருவழிப் பட்டன; என்னை? நின் வேறுபாடு எற்றினானியிற்றென்று வின விய பாங்கற்கு இதனினாயிற்றென்று உரைத்ததூஉம், அதற்குப் பாங்கன் கழறினானை எதிர் மறுத்ததூஉமென இரண்டும் பாங்கற்கூட்டத்துப் பட்டு ஓரியலான் முடிந்தன. அவை மேற் கூறியவகையானே கண்டுகொள்க. (உ0க)

[காலம் இதுவெனல்]

௫௧௪. இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருள்ளப்
பொருணிகழ் வுரைப்பது கால மாகும்.

இது, காலமுணர்த்துகின்றது.

இ—ள்: மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி அச் செய்யுளுட்டோன்றச் செய்யிற் காலமென்னும் உறுப்பாம் என்றவாறு.

பொருணிகழ்ச்சியைக் காலமென்றதென்னை? காலமென வேறு பொருள் இல்லதுபோலவெனின்,—அஃது ஈண்டாராய்ச்சியின்று, நியாயநூலாராய்ச்சி யென்க.

"வில்லோன் காலன கழலே தொடியோள்
.........................................................
வேய்பயி லழுவ முன்னி யோரே."

(குறுந். எ) என்னும் பாட்டினுள், வில்லோனுந் தொடியோளும் பொருளெனப்படும்;

"வேய்பயி லழுவ முன்னி யோரே."

என்பது, அப்பொருணிகழ்ச்சியான் இறந்த காலமெனப்படும். அப்பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினு ரென்பது.

75



1 "மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
யரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோ ளுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே."
(குறுந். எக) என்பது, நிகழ்காலம்.

" பகலும் பெறுவையிவ டடமென் றோளே."
(கலி. சகூ)
என்பது, எதிர்காலம்.

புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையாதென்பது. பெரும்பொழுது சிறுபொழுதென்பன ஈண்டுத் திணையெனப்பட்டு அடங்கின; என்னை? முதலும் கருவும் உரிப்பொருளுங் கூட்டித் திணையாகலின். (உ०உ)

[பயன் இதுவெனல்]

ருகரு. இதுநனி பயக்கு மிதனா னென்னுந்
தொகைநிலைக் கிளவி பயனெனப்
படுமே.

இது, முறையானே பயனென்னும் உறுப்புணர்த்துகின்றது.

இ—ள்: இது மிகவும் பயக்கும் இதனானெனத் தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயனென்னும் உறுப்பாம் என்றவாறு.

"மாறுக் காதலர் மலைமறந் தனரே
யாறுக் கட்பனி வரலா னாவே
வேறு மென்றோள் வளைநெகி ழும்மே

கூறுய் தோழியான் வாழு மாறே.''

என்னும் பாட்டு, தோழியைத் [2] தூது விடுவாளாதற் பயன் பட வந்தது. இவ்வாறு எல்லாப் பாட்டும் பயனுறுப்பாகவன்றி வாராவென்க. இவை புறத்திற்கும் ஒக்கும். (உ0௯)

[மெய்ப்பாடாவது இதுவெனல்]

௫௧௧. உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்.

இது, மெய்ப்பாட்டுறுப் புணர்த்துகின்றது.

1. எனின்—என்று கருதின். இது நிகழ்வின் எதிர்வு. என்னை? கருதுதலாகிய தொழில் நிகழும்பொழுது இவ்வாறு கூறலின்.

2. இச் செய்யுள் தூதுவிடுதலைக் குறிப்பாலுணர்த்திற்று.

ளியல்]

இ—ள் : உய்த்துணர்ச்சியின்றி செய்யுளிடத்து வந்த சொல் லப்படும் [1] பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீ ரரும்பன் மெய்ம்மயிர்சிலிர்த்தன் முதலாகிய [2] சத்துவம் படு மாற்றான் வெளிப்படச்செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு.

கவிப்பொரு ளுணர்ந்தால், அதனானே சொல்லப்படும்

பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலே மெய்ப்பாடென் றான், அது தேவருலகங் கூறினும் அதனைக் கண்டாங்கறியச் செய்தல் செய்யுளுறுப்பாம் என்றவாறு ; அவை :—

"மையற விளங்கிய மணிமரு [3] ளவ்வாய்தன்
மெய்பெரு மழலையின் விளங்குபூ ணனைத்தர."

(கலி. அக)

என்றாற்போல வருவன. 'தலைவரு பொருளான்'

எனவே, நோக்
குறுப்பால் உணர்ந்த பொருட் [4] பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடென்பது இதன் கருத்து. இக்கருத்தினாற் 'கவி [5] கண் காட்டும்' எனவுஞ் சொல்லுப.

(உ0௪)

[இம் மெய்ப்பாடு முற்கூறப்பட்ட மெய்ப்பாடே வேறன்று எனல்]

௫௧எ. எண்வகை யியனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின ததுவே.

இஃது, எய்தியது இகந்துபடாமைக் காத்தது.

இ—ள்: மேற்கூறப்பட்ட மெய்ப்பாடே இது; இதுவும் பிறிதிலக்கணத்தனவென்று கொள்ளற்க என்றவாறு. எனவே,

" நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை."

(உ௫௧)

1. 'பொருளானே கண்ணீரரும்பல்.........சத்துவம்படுமாற்றுன்' என்று நச்சினார்க்கினியர் கூறலின் இவ்வாக்கியத்தில் பிழையுளதுபோலும்.

2. சத்துவம்—உண்மையை வெளிப்படுத்துவது; விறல்.

3. குழவியின் வாய் நீரொழுகுமாற்றை நேரேகுப் பொருள்தோன்ற இவ்வடிகள் செய்யப்பட்டன. கண்டாங்

4. பிழம்பு—வடிவு.

5. கண்காட்டல்—குறிப்பால் தானே தோற்றுவித்தல். ருகரு

தொல்காப்பியம்

[செய்யு

[1] என(வும்) அவை நந்நான்காமெனவும், மெய்ப்பாட்டியலுட்

கூறியவாறெல்லாம் பிறவாற்றான்

படுமென்றவாறு.

வேறுபடுவனவுங் கொள்ளப்

(உ௦ரு)

[எச்சம் இதுவெனல்]

ருகஅ. சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை

புல்லிய கிளவி யெச்ச மாகும்.

இஃது, எச்சங் கூறுகின்றது.

இ—ள் : கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தொடு பொருந்திய கிளவி எச்சமென்னும் உறுப்பாம் என்றவாறு.

'முடிவுகொளியற்கை' எனவே, செய்யுளின்கண்ணதன்றிப் பின்கொணர்ந்து முடிக்கப்படுமென்பது பெற்றாம். உதாரணம் :—

" செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே."

(குறுந். க)

எனச் செய்யுண் முடிந்தவழியும் 2 '

இவற்ருன் யாங் குறை
யுடையேம் அல்லேமென்று தலைவற்குச்
சொன்னுளேல் [3] அது
கூற்றெச்சமாம்; என்னை? அவ்வாறு கூறவுஞ்
[4] சிதைந்ததின்மை
யின். தலைமகட்குச் சொன்னுளேல்
அது குறிப்பெச்சம்;
என்னை? [5] அது காண்பாயாகிற் காணெனத்
தலைமகளை இடத்
துய்த்து நீக்கிய குறிப்பினளாகி [6] அது,
தான்கூருளாகலின்'
என்பது.
(உ०கூ)

---

1. எனவும் என்றிருப்பது நலம்.

2. இவற்ருன்—இக்
காந்தள்மலர்களான்.

3. இவற்ருன் யாங் குறையுடையேமல்லேம் என்றது கூற்றெச்சம்; இக்கூற்று எஞ்சிநின்றதாகலின். இவ்வாறு எஞ்சுவன இசையெச்சமென்று சொல்லப்படும்.

4. சிதைந்தது இன்மையின் என்றது பொருள் தின்மையின் என்றபடி. சிதைதல்—வழுப்படல்.

சிதைந்த

5. அது என்றது காந்தளை.

6. அது—அக்குறிப்பு. அங்கே சென்று தலைவனைக் கூடு என்னுங் குறிப்பு.

ளியல்] பொருளதிகாரம்
ருகூள்

[முன்னம் (குறிப்பு) இதுவெனல்].

ருககூ. இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம்.

இது, முன்னமென்று கூறப்பட்ட உறுப்புக் கூறுகின்றது.

இ—ள்: யாதோரிடத்தானும் யாதானுமொருமொழி தோன்றியக்கால் இம்மொழி சொல்லுதற்குரியாரும் கேட்டற்குரியாரும்

இன்னொன்று அறியுமாற்றான் அங்ஙனம் "அறிதற்கு ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்குங் கேட்பார்க்கு[1] மேற்றவுரை செய்யுட்கு[2] ஈடாகச் சொல்லுவது முன்னம் என்றவாறு.

'இவரிவர்க்குரியவென்று' அறிவான், செய்யுட் கேட்டா னெனவும், அவ்விடத்து 'அவரவர்க்கு உரைக்க' என்றான் ஆசிரிய னெனவுங் கொள்க. என்றென்பது,
எனவென்பதுபோலச் [3] சொல்லினெச்சமாதலும் வினையெச்சமாதலும் உடைமையின் இஃது,

"எனவெ னெச்சம் வினையொடு முடிமே."
(தொ. சொ. சஙஅ)
என்பதோர் வினை யெஞ்சிநிற்கும்.
அவ்வினைதான் எச்சமாக லான் உரைப்பதென்னும் வினைகொண்டு முடியுமென்பது.

"யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ
ஊராண்மைக் கொத்த படிறுடைத்து."
(கலி. அகூ)

என்றக்கால், இம் [4] மாற்றஞ் சொல்லுகின்றாள் தலைவியெனவும் சொல்லப்பட்டான் தலைமகனெனவும், முன்னத்தான் அறியப் படுத்தலின் இது முன்னவுறுப்பாயிற்று. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். இவையெல்லாம், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகின்றானென்பது. (உ௦எ)

---

1. ஏற்ற செய்யுட்களாகச் சொல்லுவது எனவும் பாடம்.

2. ஈடு—பொருத்தம்.

3. சொல்லினெச்சம்—சொல்லெச்சம்.

எனவென்பதுபோல
என்று என்பதும் சொல்லெச்சமாயு நிற்கும்; வினையெச்சமாயு நிற்கும். ஈண்டு வினையெச்சமாய் நின்று உரைப்பது என்னும் வினைகொண்டு முடிந்ததென்றபடி.

4. மாற்றம்—சொல்.



[பொருள்வகை இதுவெனல்]

௫உ0. இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவு
மொழுக்கமு மென்றிவை யிழுக்குநெறி யின்றி
யிதுவா கித்திணைக் குரிப்பொரு ளென்னது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.

இது, பொருள்வகை கூறுகின்றது.

இ—ள்: 'இன்பமும் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமுமெனப்பட்ட இவை இழுக்காதவாற்றான் இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியன் ஓதிய உரிப்பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலனெறிச் செய்யப்படுவது பொருட் கூறெனப்படும் என்றவாறு.

'வகை' என்றதனாற் புலவன் றான் [1]வகைந்ததே பொரு

ளென்று கொள்க. அஃதன்றிச் செய்யுள் செய்தலாகாதென்
பது இதன் கருத்து; அவை,

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாவொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே.''

(அகம் கூ) என்றாற்போலச் செய்யுள் செய்தவன்
[2] தானே வகுப்பன வெல்லாங் கோடல்; இது
பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் முல்லை
முதலாயவற்றுக்கும் பொதுவாமென்பது.
பொதுமை யென்பது எல்லா உரிப்பொருட்கும்
ஏற்கப் பல்வேறு வகை
யாற் செய்தல்.

---

(உ௦அ)

1. 'வகைதல்—வகுத்தல்.

2. தானே வகுப்பதென்றது. நெஞ்சிற்குத் தீண்டல், தைவரல், தோய்தல் முதலிய தொழிலைச் செய்தல் இல்லையாயினும் உள்ளதுபோல வகுத்துக் கூறுதல்போல்வன. இப்பொருள்போல்வன எல்லாத் திணைக்கும் பொதுவாதலின் ஏனைத் திணைகட்கும் இப்பொருள்போல்வன அமைத்துச் செய்யுள் செய்யலாம் என்றபடி.



[துறை இதுவெனல்]

ருஉக. அவ்வம் மக்களும் விலங்கு மன்றிப்
பிறவவண் வரினுந் திறவதி னுடித்
தத்த மியலின் மரபொடு முடியி
னத்திறந் தானே துறையெனப் படுமே.

இது, துறையென்னு
முறுப்புணர்த்துகின்றது.

இ—ள்: ஐவகை நிலத்திற்கும் உரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஒதி வந்தவாறன்றிப் படைத்துச் செயினும் அவ்வத் திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமைச் செய்யின் அது மார்க்க் மெனப்படும்

என்றவாறு.

மார்க்கமெனினும் துறையெனினும் ஒக்கும்.

"ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்கால்."
(கலி. ருகூ) என்னுங் கலியினுள்,

"கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை."

என நெய்தற்றலைமகள் போலக் கூறி, ஆவளை மருதநிலத்துக் கண்டான் போல

"ஊர்க்கா னிவந்த பொதும்பருள்."

எனவும் சொல்லிப், பின் குறிஞ்சிப் பொருளாகிய புணர்த லுரிப்பொருளான் முடித்தான்; இவ்வாறு மயங்கச் செய்யினுங் குறிஞ்சித்துறைப் பாற்படச் செய்தமையின் அத்துறை •யுறும் பான் வந்ததென்பது. இதுவும் மேலைப்பொருள் வகைபோலப் புலவராற் செய்து கொள்ளப்படுவதாகலான் அதற்குப்பின் வைத்தானென்பது. மற்று

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்." (தொ.

அகத். கக)

என்பதனுன், இது முடியாதோவெனின்,—அது கருப்பொருண் மயங்குதற்குக் கூறினன் ; இது, மக்களே யன்றித் தலைவனுந் தலைவியும் மயங்குமாறும் நான்கு திணையும் ஒன்றொன்றனொடு மயங்குமாறுங் கூறி அது புலவராற் செய்துகொள்ளுவதோர் உறுப்பெனவும் ஓதிவந்த இலக்கணத்ததன்றாயினும் அது பெறுமெனவுங் கூறினனென்பது.
(உ0கூ)



[மாட்டாவது இதுவெனல்]

ருஉஉ. அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய

நிலையினு

மியன்றுபொருண் முடியத் தந்தன

ருணர்த்தன்

மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்.

இது, [1] மாட்டென்னும் உறுப்புணர்த்துகின்றது.

இ—ள்: பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப் பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இருவகையா னுஞ் சென்று பொருள் முடியுமாற்றாற் கொணர்ந்துரைப்பச் செய்தலை மாட்டென்னும் உறுப்பென்று சொல்லுவர் செய்யுள் வழக்கினுள் என்றவாறு.

இதுவும் நால்வகைப் பொருள்கோளன்றிப் புலவரது வேறு செய்கை; அது,

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே." (பட்டின. உகஅ—உ0)

என நின்றது, பின்னர்,

" வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே."

(பட்டின. ௩௦௦) எனச் [2] சேய்த்தாகச் சென்று பொருள்கோடலின் அஃது அகன்று பொருள்கிடப்பினும் இயன்று பொருண்முடியத் தந்து உரைத்ததாம்.

[3] " திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
ரிறந்துபடிற் பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

(முத்தொ. ௪௨) என்பது, அணுகிய நிலையெனப்படும். பிறவுமன்ன; மாட்டுதலென்பது கொண்டுவந்து கொளுத்துதல். (உகo)

---

1. மாட்டுதல்—கொளுவுதல். என்றது சொற்களைக் கூட்டி முடிக்குமாறு பொருள் ஒன்றையொன்று அவாவிநிற்கச்செய்தலை.

2. வாரேன் என்றதற்கு, அவ்விரண்டடியானுங் கூறிய பொருள்கள் காரணமாதலின் சேய்த்தாக நின்ற அவ்விரண்டடியும் ஈண்டுக் கொண்டுவந்து மாட்டி ஏதுவாக்கிப் பொருள் கொள்ளப்படும் என்றபடி.

3. கதவு திறந்திடுமின் என அணுகிநின்ற எழுவாயைக் கொண்டுவந்து கூட்டி முடிக்கப்படலின் அணுகியமாட்டென்றார்.

[மாட்டும் எச்சமுமின்றியும் செய்யுள் செய்யப்படும் எனல்]

௫௨௩. மாட்டு மெச்சமு நாட்ட லின்றி
[1] யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே.

இது, மேற்கூறியவற்றுள் ஒருசாரனவற்றுக்குப் புறனடை.

இ—ள்: மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும் அச் செய்யுளுட் கிடந்தவாறே அமையச்செய்யவும் பெறும் செய்யுள் என்றவாறு.

எச்சமும் மாட்டுமாம் என்றது, மாட்டு முற்கூறியதென்னை யெனின்,—[2] எச்சம் முதலாகிய ஐந்து உறுப்பும் இவ்விதி பெறுமென்று கோடற்கு எதிர்சென்று தழீஇயினனென்பது.

உதாரணம்:

"வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா தெறிதரும் வாடையொ
டென்னா யினள்கொ லென்னு மோரே." (குறுந். ககo)

என்பது, எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி." (குறுந். கடவுள்)

என்பது, முன்னமின்றி வந்தது.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே." (குறு. எக)

என்பது, பொருளின்றி வந்தது.

" ஐயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த."

(அகம். அ)

என்பது, துறைவகையின்றி வந்தது.

" யானே யீண்டை யேனே."

(குறுந். ருச)

என்பது, மாட்டின்றி வந்தது.

இடைநின்ற மூன்றனை இலேசினாற் கொண்டு இரண்டினை எடுத்தோதினான் இவை இரண்டும் அவற்றது[3] துணை இன்றியமையாச் சிறப்பினவல்லவென்றற்கென்பது. (உகக)

---

1. உடனிலை—உடனிற்றல். சொற் கிடந்தவாறே கிடப்பப் பொருள்பெறச்செய்தல்.

2. எச்ச முதலிய ஐந்தாவன: எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு என்பன.

3. துணை—அளவு. இன்றியமையாச் சிறப்பினவல்ல எனப் பிரிக்க.





[வண்ணம் இத்துணைத்து எனல்]

௫௨௪. வண்ணந் தாமே நாலைந் தென்ப.

இது, முறையானே இறுதிநின்ற வண்ணம் இத்துணைப் பகுதித்தென்கின்றது.

இ—ள்: வண்ணம் இருபது வகைப்படும் என்றவாறு.

வண்ணமென்பது, சந்த வேறுபாடு. நூறும் பலவுமாகி வேறுபடினும் அவை ஈண்டடங்குமென்பதூஉம், அவ் வேறுபாடெல்லாஞ் சந்த வேற்றுமை செய்யாவென்பதூஉங் கூறிய வாறு. அது நுண்ணுணர்வுடையார்க்குப் புலனாமென்பது. (௨௬௨)

*[வண்ணங்களின் பெயர் இவை எனல்]*

௫௨௫. அவைதாம்
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ண
மியைபு வண்ண மளபெடை வண்ண

நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர்
வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு
வண்ண
மொழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றுங்கன மொழிப வறிந்திசி னோரே.

இது, மேற்கூறப்பட்ட வண்ணங்களது பெயர் வேறுபாடு கூறுகின்றது.

இ—ள் : மேற்சொல்லிய நாலைந்து வண்ணமும் இவ்விரு பது பெயர் வேறுபாட்டினவென்று சொல்லுப அவற்றை உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.

இது,

முறையாயினவாறென்னையெனின்,—இது

வாலாற்று முறைமையென்றற்கு 'ஆங்கன மொழிப வறிந்திசினோர்' என்றானென்பது. அவையாமாறு சொல்லுகின்றான். (உகூ)



[பாவண்ணம் இதுவெனல்]

ருஉகூ. அவற்றுள்; பாஅ வண்ணஞ்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்.

இது, நிறுத்தமுறையானே பாஅவண்ண முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: பாஅவண்ணமென்பது,

[1] நூற்பாவண்ணம் என்றவாறு.

எற்றுக்கு? 'நூற்பாற்பயிலும்' என்றமையின், இது சொற்சீரடித்தாகி வருமென்பது. இதனுட் 'பயிலும்' எனவே, அந்நூற்பாவினுளல்லது அகவலுள் இத்துணைப் பயிலாதென்பது;

இது,

" வடவேங்கடந் தென்குமரி."

(பாயிரம்) எனவும்,

" எழுத்தெனப் படுப அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப."

(தொ. எழு. க)

எனவும்,

" அவற்றுள், அஇஉ
எஒ வென்னு மப்பா லைந்தும்."

(தொ. எழு. ௩)

எனவும் பயின்றுவரும்.

" பெரியகட் பெறினே."

(புறம். உ௩௫)

என்பது, சொற்சீராகி அகவலுட் பயிலாது வந்தது. சொற்சீரடியென்னாது 'சொற்சீர்' என்றான், அடியொடு தொடராதுஞ் சொற்சீர் வருமாதலினென்பது. அவை,

[2] "நன்றுபெரி தாகும்." (தொ. சொல். ௩௪௩)
என்றாற்போல வேறாகி நிற்பன. கலியுள்ளும் பரிபாடலுள்ளுஞ் சொற்சீர் வருமெனமேற்கூறினானாகலின் [3] அவற்றுள்ளுஞ் சந்த வேற்றுமைப்பட்டன பாஅவண்ணமேயாமென்பது. (௨௧௪)

---

1. நூல்—இலக்கண நூல்.
2. இது அடியோடு தொடராது தனி வந்தது.
3. அவற்றுள்ளும்—கலி பரிபாடலுள்ளும்.



[தாவண்ணம் இதுவெனல்]

௫௨௭. தாஅ வண்ண
மிடையிட்டு வந்த வெதுகைத் தென்ப.

இ—ள்: இடையிட்டுத் தொடுப்பது தாஅவண்ணம் என்றவாறு.

அவை: மொழியும் ஒரூஉவுமாகலின் எதுகையென வரைந்து கூறினானென்பது; அடியிடையிட்டு வருவது தொடை வேற்

றுமையாவதல்லது வண்ண
வேற்றுமையாகாதென்பது. ஒரு செய்யுளுட் பல அடி வந்தால் அவை எல்லாம் இடையிட்டுத் தொடுத்தல்வேண்டுமோவெனின், வேண்டா; அவை வந்தவழித் தா அவ்வண்ணமெனப்படுமென்பது; எனவே, இவ்வண்ணவகைக ளெல்லாஞ் செய்யுண் முழுவதுமே பெறுவனவாகக் கொள்ளக் கிடந்தனவல்ல; இவற்றை உறுப்பென்ற தன்மையாற் கந்திருவ நூலார் வண்ணங் கூறியவாறுபோல ஒரு செய்யுளுட் பலவும் வரப்பெறுமென்பதாம்; அவை,

"உலகு முவப்ப வலனேர்பு திரிதரு."
(முருகு. க) எனவும்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை."
(ஐங்குறு. ப. கசங)

எனவும் வரும். பிறவுமன்ன.
(உகரு)

[வல்லிசைவண்ணம் இதுவெனல்]

௫உஅ வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்.

இ—ள் : வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயின்றுவரும் என்றவாறு.

வல்லெழுத்துப் பயின்றுவருதலான் அப்பெயர்த்தாயிற்று.

" முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்."
(பட். உகஅ) எனவும்,

" முட்டாட் டாமரைத் துஞ்சி."
(முருகு. எங) எனவும் வரும். பிறவும் அன்ன.
(உகக)

[மெல்லிசை வண்ணம் இதுவெனல்] ருஉ௲. மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே.

இ—ள்: மெல்லெழுத்து மிகுவது மெல்லெழுத்து வண்ணம் என்று கூறியவாறு.

ஒருசெய்யுண் முழுவதும் ஓரினத்தெழுத்தே பயிலச்செய்தால் இன்னாதாகலின், இவை [1] உ_றுப்பெனப்பட்டு இடையிட்டு வருமென்றானென்பது. [2] அவ்வாறு செய்யின் அவை [3] மிறைக்கவியெனப்படும். ஒழிந்த எழுத்திற்கும் இஃதொக்கும்.

"பொன்னி னன்ன புன்னை நுண் டாது." (யா. வி. ப. ௩௮)

என மெல்லெழுத்துப் பயின்றவாறு.

(உ௧எ)

[இயைபுவண்ணம் இதுவெனல்]

௫௩௦. இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே.

இ—ள்: இடையெழுத்து மிகுவது இயைபுவண்ணம் என்ற வாறு.

"அரவி னதிர வுரீஇய வரகுகதிரின்."

என இடையெழுத்து மிக்குவந்தமையின் இயைபுவண்ணமாயிற்று. மென்மை வன்மைக்கு இடைநிகர்வாகிய எழுத்தான் வருதலின் இயைபுவண்ணமென்றான். (உ௧அ)

[அளபெடை வண்ணம் இதுவெனல்]

௫௩௧. அளபெடை வண்ண மளபெடை பயிலும்.

இ—ள் : [4] இரண்டளபெடையும் பயிலச் செய்வன அளபெடை வண்ணமாம் என்றவாறு.

" மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்."

(அகம். கூகூ) என்பது, அளபெடை வண்ணம்.

" கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்."

(மலைபடு. நடுஉ) என்பதும் அது.

(உகசு)

[நெடுஞ்சீர்வண்ணம் இதுவெனல்]

ருநஉ. நெடுஞ்சீர் வண்ணநெட் டெழுத்துப் பயிலும்.

இ—ள் : நெட்டெழுத்துப் பயின்று வருவது நெடுஞ்சீர் வண்ணம் என்றவாறு. அது,

" மாவா ராதே மாவா ராதே."

(புறம். உஎந)

என்பது, நெடிதாய் வருவது நெடுஞ்சீரெனப்பட்டது.

---

(உஉ0)

1. உறுப்பு—அங்கம். அஃதாவது மெல்லெழுத்து மிகுதியும் வந்து சொற்கு உறுப்பாதல். எனவே வெற்றெழுத்தும் அவற்றோடு கூடிவரும் என்க.

2. அவ்வாறு பயிலச் செய்தல்—ஓரினமே

பயிலச் செய்தல்.

3. மிறைக்கவி—சித்திரகவி.

4. இரண்டு—உயிர், மெய். சூ௦சூ



[குறுஞ்சீர் வண்ணம் இதுவெனல்]

ருகக. குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்.

இ—ள்: குற்றெழுத்துப் பயில்வது குறுஞ்சீர் வண்ணம் என்றவாறு.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி."

(அகம். ச)

என வரும். (உஉக)

[சித்திரவண்ணம் இதுவெனல்]

ருகச. சித்திர வண்ண நெடியவுங் குறியவு நேர்ந்துடன் வருமே.

இ—ள்: சித்திரவண்ணம் நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒப்ப விராஅய்ச் செய்யப்படுவது என்றவாறு.

அது,

"...சார ருட நீவர லாறே."

என வரும்.

சித்திரவண்ணமென்பது பல வண்ணம்படச் செய்வதாக லின் அப்பெயர்த்தாயிற்று. (உஉஉ)

[நலிபுவண்ணம் இதுவெனல்]

ருஙரு. நலிபு வண்ண மாய்தம் பயிலும்.

இ—ள்: ஆய்தம் பயின்றுவருவது நலிபுவண்ணமாம் என்றவாறு. அஃது,

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை."

(குறள். களஅ)

எனவும்,

" னஃகான் றஃகா னுன்க னுருபிற்கு."

(தொ. எழு. கஉ௩)

எனவும் வரும். [1] நலிபென்பது, ஆய்தம். (உஉ௩)

[அகப்பாட்டு வண்ணம் இதுவெனல்] ௫௩௬. அகப்பாட்டு வண்ண முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.

இ—ள்: அகப்பாட்டு வண்ணமென்பது, இறுதியடி இடையடிபோன்று நிற்பது என்றவாறு.

---

1. நலிபு—நலிந்துச்சரிப்பது.

ளியல்] பொருளதிகாரம்
சா௦௭

அவையாவன:—முடித்துக்காட்டும் ஈற்றசை ஏகாரத்தானன்றி ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன; அவை:—

" தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன."

(ருசுo) எனவும்,

" உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்."

(ஐங்குறு. உக) எனவும்,

" கோடுயர் வெண்மண லேறி
யோடுகல னெண்ணுந் துறைவன் றோழி."

எனவும்,

" ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி."

(கலி. கடவுள்) எனவும்,

" சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ."

(அகம். சகூ) எனவும் வரும். இவை

ஆசிரியவீற்றன.

" குளிறு குரலருவிக் குன்றத் திதண்மேற்
களிறு வருவது கண்டு—வெளிலென்ன
லாயினான் பின்னை யணங்கிற் குயிரளித்துப்
போயினான் யாண்டையான் போன்ம்."

என இதனுள் இறுதியடி முடியாத்தன்மையின்

முடிந்ததாக லின் அகப்பாட்டு வண்ணமாயிற்று.

" கொடி யுவணத் தவணரோ."

எனக் கலிப்பாவுள் அரோவந்து பின்

முடியாத்தன்மையின் முடிந்தது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றான் ஆசிரியம் இறுமென வரையறுப்பாருண்மையின் அவ்வச் சொல்லானே அவை முடிந்தனவென்று கொள்வலெனின், — அங்ஙனம் [1] வரையறையில வென்பது [2]மேற்காட்டிய உதாரணங்களால் அறிந்தாமாகலின் அக்கடா வண்ணமென [3] வரையறுப்பார்மேற்றென விடுக்க. (உஉசு)

---

1. ஆசிரியவீறு அங்ஙனம் வரையறையில வென்பது என்க.

2. மேற்காட்டிய உதாரணமென்றது "தவழ்பவை தாமுமவற்றோ ரன்ன" என்பது முதலாக தாங்காட்டிய உதாரணங்களை. அவற்றில் வேறீறுகளும் வருகின்றன என்றபடி.

3. வரையறுப்பார் என்றது இறுதிநிற்கும் எழுத்துக்களை வரையறுப்பார் மேற்று என்க. வண்ணமென என்பது இடையிற் சேர்த்து எழுதப்பட்டதுபோலும். அன்றேல் ஆசிரியன் மேற்றாகும். அவ்வாறு கொள்ளின் ஆசிரியற்கிழுக்காம்.



[புறப்பாட்டு வண்ணம் இதுவெனல்]

௫௩௭. [1] புறப்பாட்டு வண்ண
முடிந்தது போன்று முடியா தாகும்.

இ—ள்: புறப்பாட்டு வண்ணமென்பது, இறுதி [2] யடிப் புறத்ததாகவும் தான் முடிந்ததுபோன்று நிற்றல் என்றவாறு.

" இன்று வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே

முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.''
(புறம். ௩௬௩) என்புழி, ஈற்றயலடி '
முன்னிய வினையே' என முடிந்தது போன்று
முடியாதாயிற்று.
(௨௨௫)

[ஒழுகுவண்ணம்
இதுவெனல்]

௫௩௮. ஒழுகு வண்ண மோசையி
னொழுகும்.

இ—ள்: முற்கூறிய வகையானன்றி
[3] ஒழுகியலோசையாற்
செல்வது ஒழுகுவண்ணம் என்றவாறு.
ஒழிந்தனவும் ஒழுகுமாயினும்
அவை வேறு வேறு இலக்
கண முடையனவென்பது.

"அம்ம வாழி தோழி காதலர்க்
கின்னே பனிக்கு மின்றை வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவள்.''

(யா. வி. ப. ௩அ௬)

என வரும்.

(உஉகூ)

[ஒரூஉவண்ணம்

இதுவெனல்]

ருங்கூ. ஒரூஉ வண்ண மொரீஇத்

தொடுக்கும்.

இ—ள்: யாற்றொழுக்குப் போலச்

சொல்லிய பொருள்

பிறிதொன்றனை அவாவாமை அறுத்துச்

செய்வது ஒரூஉவண்

ணம் என்றவாறு.

ஒரீஇத் தொடுத்தலென்பது, எல்லாத் தொடையும் ஒரீஇச் செந்தொடையால் தொடுத்தலென்பாரும் உளர். செந்தொ

டையுந் தொடையாகலான்

அற்றன்றென்பது; அது,

1. இதனுரை தெளிவில்லை. இளம்பூரணருரை சிறப்பாகும்.

2. இறுதியடிப்புறம்—இறுதி

அடியின் புறமாக, என்றது

ஈற்றயலடியை. ஏகாரம் வந்தமை குறித்து இவ்வாறு கூறினர். இறுதியடி புறத்ததாகவும் என்று மிருந்திருக்கலாம்.

3. ஒழுகியவோசையாற் செய்வது

என்பது ்நச்சினர்க்

"யானே யீண்டை யேனே யென்னலனே

யானோ நோயொடு கான லஃதே
துறைவன் றம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே."
(குறுந். 97) என வரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே."
(புறம். 235) என்பதும் அது.

[1] யாப்புப் பொருளேக்கிரவாறுபோல இது பொருளேக்

காது ஓசையே கோடலானும் அடிமிறந்து கோடலானும் யாப் பெனப்படாது. (227)

[எண்ணுவண்ணம் இதுவெனல்]

228. எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்.

இ—ள்: எண்ணுப் பயில்வது எண்ணு வண்ணம் என்றவாறு.

இஃது, அடி எண்ணுப் பயிற்லான் எண்ணு வண்ணமெனக் காரணப் பெயராயிற்று; அவை,

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி."

(அகம். சச)

என்றாற்போல்வன.

"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்."

(அகம். ககசு) என்பதும் அது.

(உஉஅ)

[அகைப்புவண்ணம் இதுவெனல்]

ருசக. அகைப்பு வண்ண 'மறுத்தறுத் தொழுகும்.

இ—ள்: அறுத்தறுத்துப் பயில்வது அகைப்புவண்ணம்

என்றவாறு.

இது விட்டுவிட்டுச் சேறலின் அகைப்புவண்ணமென்

னும் பெயர்பெற்றது,

" வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி."
(குறுந். ககo)

1. யாப்பு என்னும் உறுப்பிற்கும் இவ்வண்ணத்திற்கும் வேறுபாடு யாதெனின், அது பொருளுேக்கியது இது ஓசை நோக்கியது. அன்றியும், அது அடியிறந்து பொருள்கொள்ளாதது இது அடியிறந்து பொருள்கொள்வது என்றபடி.





என்புழி, ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அறுத்தொழுகிய அகைப்புவண்ணமாம். (உஉ௬)

[தூங்கல் வண்ணம் இதுவெனல்]

1 ருசஉ. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.

இ—ள்: தூங்கல் வண்ணந் தூங்கலோசைத்தாகி வருவது எனறவாறு.

வஞ்சியென்பது, வஞ்சித் தூக்குப்போல இதுவும் அற்றுச் சேறலுடைத்தென்பது. அது,

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணரான்."

(முத்தொ. கoச)

என நின்ற தொடர்நிலைக்கண்ணே அத்தூங்கல் கண்டு கொள்க. இக்கருத்தறியாதார் கலிப்பாவினுள் வஞ்சிப்பாப் பிறக்குமெனவும் வஞ்சியுட் கலிப்பாப் பிறக்குமெனவும் மயங்குப. (உரு௦)

[ஏந்தல் வண்ணம் இதுவெனல்]

டுசஉ. ஏந்தல் வண்ணஞ் சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.

இ—ள்: சொல்லிய சொல்லானே

சொல்லப்படும் பொருள் சிறப்பச்செய்வது ஏந்தல்வண்ண மென்றவாறு.

ஏந்தலென்பது, மிகுதல்; ஒரு சொல்லே மிக்கு வருதலின் ஏந்தல்வண்ண மென்றாயிற்று. அது,

" வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்." (நாலடி. ௩௯)
என வரும். (௨௩௧)

[உருட்டுவண்ணம் இதுவெனல்]

௫௪௪. உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்.

இ—ள்: உருட்டிச் சொல்லப்படுவது அராகமாகலின் அராகந் தொடுப்பது உருட்டுவண்ணமாம் என்றவாறு.

" உருமுரறு கருவிய பெருமழை தலைஇய." (அகம். ௧௫௮)

எனவும்,

---

1. இதற்கு இளம்பூரணருரை

பொருத்தமானது.



"எரியுரு வுறழ விலவ மலர."
(கலி. ௩௩)

எனவும் வரும். இது நெகிழாது உருண்டவோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப்படாது உருட்டுவண்ணமெனப்பட்டது. (உ௩உ)

[முடுகுவண்ணம் இதுவெனல்]

௫௪௫. முடுகு வண்ண
மடியிறந் தோடி யதனோ ரற்றே.

இ—ள்: முடுகுவண்ணமென்பது, [1]
நாற்சீரடியின் மிக்கு ஓரடி அராகத்தோடொக்கும் என்றவாறு. அது,

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலும்." (கலி. ௩௯)

என வரும்.

இவற்றைக் கொச்சகம் அராகமெனவுஞ்
சொற்சீரடியும்
முடுகியலடியுமெனவும் பரிபாடற்கு வேறுபடுத்தோதினன் [2]இவ்
வேறுபாடு நோக்கியென்பது. (உகூ)

[வண்ணங்கள் மேற்கூறிய இவையே
எனல்] ருசசு. **வண்ணந் தாமே இவையென
மொழிப.**

இது புறனடை.

இ—ள்: வண்ணமென்பன சந்தமாதலான்
அச் சந்தவேற் றுமை செய்வன இவையல்ல,தில்லை
என்றவாறு.

எனவே, என் சொல்லப்பட்டதாம்: நான்கு
பாவினொடும்
இவற்றை வைத்துறழவும், அவை மயங்கிய
[3] பொதுப்பா இரண்டி
னோடு உறழவும் நூற்றிருபதாகலாலும், [4] உயிர்மெய்வருக்க
மெல்லாவற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பல
வாகலும், இனிப் பிறவாற்றுற் [5] சிலபெயர்
நிறீஇ அவற்றுல் 1. அராகந் தொடுத்த
வடியோடு பிறவடி தொடர்ந் தோடுவது
எனவும் பாடம்.

காலேச்
சின்மென் மொழியாற் ருய
பனுவலோ
டம்மை தாளே யடிநிமிர் பின்றே.
இது தொகைச்சூத்திரத்துள்,
"ஆறுதலை யிட்ட வந்நா லைந்தும்."
(௫க௫)
எனக் கூறுசெய்து நிறீஇப், பின்னர்
எட்டுறுப்புக் கூறிஞ
னன்றே?
இவை அவற்றேருடொத்த இலக்கணத்தவன்மையான்;
என்னை? அவை ஓரோ செய்யுட்கே
ஒ.கிய உறுப்பாகலானும்
இவை பல செய்யுளுந் திரண்டவழி
இவ்வெண்வகையும் பற்
றித் தொடுக்கப்படுமெனக்
கூறப்பட்டதாகலானுமென்பது.
இவற்றை வனப்பென்று
கூறப்படுமாறென்னை? [1] அச்சூத்திரத்
துப்
பெற்றிலமாலெனின்,—வனப்பென்பது,

பெரும்பான்மை
யும் பல உறுப்புந் திரண்டவழிப்
பெறுவதோர் அழகாகலின் அவ்
வாறு கோடும். அதனாற் பல செய்புளும்
உறுப்பாய்த் திரண்டு
பெருகிய [2] தொடர்நிலையதே
வனப்பென்னும் பெயர்ப்பகுதி
வகையான் ஏற்பதென்பது. அஃதேல்,
இவ்வெட்டுந் தனிவருஞ்
செய்புட்கண் வந்தால்
அழகுசெய்யாவோவெனின்,—அவைபோல
இவை தனிவருஞ்
செய்புட்குமாகுமென்றற்கன்றே அவ்விரு
பத்தாறுறுப்போடும் இவற்றை
ஓரினப்படுத்து ஓதியதென்பது.
[3] அஃது, இயைபிற்கொப்ப
வாராதென்பது முன்னர்ச் (நூஉ)
சொல்லுதும். இதனானே [4]
முன்னையுறுப்புக்கள் தொடர்நிலைச்
செய்புட்கு வருமென்பதூஉங் கொள்க;
அல்லாக்கால், மாத் திரை முதலாகிய [5]
ஓரோவுறுப்பான் அழகு பிறவாதாகிய

1. அச் சூத்திரம்—கஅ-ம் சூத்திரம்.

2. தொடர்நிலையதே—தொடர்நிலைச் செய்யுளதே. தொடர்நிலைச் செய்யுளிலக்கணந் தொல்காப்பியர் கூறிற்றிலராதலின் இது பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது.

3. அஃது—தனிச் செய்யுளில் வருவது.

4. முன்னையுறுப்புக்கள்—மாத்திரை முதலியன.

5. ஓரோ எனப் பின்வருவது இங்குஞ் சேர்க்கப்பட்டது. அது வேண்டியதில்லை.



செல்லும் [1] இவற்றையே வனப்பென்று ஓரோ செய்யுட்கே கொள்ளினென்பது. இங்ஙனம் இருபத்தாறும் எட்டுமென வகுப்பவே அவை [2] அகமென்பன, தனிநிலைச் செய்யுட்கு முற் கூறப்படா, இத் தொடர்நிலைச் செய்யுட்கு முற் [3] கூறுமென்பது; இனி, இவற்றைச் சூத்திரத்தான் வனப்பென்னுங் குறி யெய்துவிக்க வேண்டுவானாகச் சூத்திரத்தை,

"வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலின்." (ருசஎ)

என்பது பாடமாக உரைத்தானென்க; அதுவும் [4] அறிந்தவாறே கொள்க.

இ—ள் : சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடையிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம்மையாம் என்றவாறு.

'அடிநிமிராது' எனவே, அம்மையென்பது முழுவதும் ஒரு செய்யுளாகல்வேண்டும் ; வேண்டவே, அஃது உறுப்பன்ருகிய செல்லும் : அதனை உறுப்பெனல்வேண்டுமாதலான் அடிநிமிராதெனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பல தொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுளாமென்பது. சிலவாகவென்பது, [5] எண்ணுச் சுருங்குதல். மெல்லியவாதல், சிலவாகிய சொற்கள் எழுத்தினன் அகன்றுகாட்டாது சிலவெழுத்தினன் வருவது. அடிநிமிராதென்றது, ஐந்தடியின் ஏருதென்றவாறு.

தாயபனுவலோடென்றது, அறம் பொருள் இன்பமென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் [6] சொல்லுப (போன்று) வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச் செல்வதென்றவாறு ; அஃதாவது, பதினெண்கீழ்க்கணக்கென வுணர்க. அதனுள், இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை

1. இவற்றை—அம்மை முதலியவற்றை.

2. அகம்—உள்ளுறுப்பு.

3. கூறும்—கூறப்படும் என்றிருத்தல் வேண்டும். அல்லாக்கால்—தொடர்நிலைக்கென்று கொள்ளாக்கால். இதனை நீங்கியும் விடலாம்.

4. கொள்க என்றது சிலர் அப்பாடம் கொள்ளாமையின்.

5. எண்ணுச் சுருங்கல் என்றது சில சொற்களால் செய்யுள் ஆக்கப்படுதலை.

6. சொல்லுவ என்றிருத்தல்வேண்டும்போலும்.

சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருள் இன்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும் [1] கார்நாற்பது களவழிநாற்பது முதலாயின வந்த வாறுங் கண்டுகொள்க.

"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்."

(குறள். சூஎரு)

என்பது இலக்கணங் கூறியதாகலிற் பனுவலோடென்றான்.

"மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று."

(குறள். கககஉ)

என இஃது இலக்கியமாகலாற் றூயபனுவலெனப்பட்டது.

[2] இவை தனித்துவரினும் அவ்வனப்பெனப்படும்; தாவுத லென்பது, இடையிடுதல். இவ்விருவகையுஞ் செய்யுளெனப்படும். அம்மையென்பது, குணப்பெயர்; அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று. அதன் உள்ளுறுப்பாகிய பாட்டுக்க டோறும் மாத்திரையுறுப்பு முதலாகிய உறுப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும், இவ்வனப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும் அறிந்துகொள்க. (உகூ)

*[அழகு இதுவெனல்]*

ருசஅ. **செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி**
**னவ்வகை தானே யழகெனப் படுமே.**

இஃது, இரண்டாமெண்ணு குணர்த்துதல் நுதலிற்று.

முறைமைக்கணின்ற அழ

இ—ள்: [3] திரிசொற் பயிலாது செய்யுளுட் பயின்றுவரும் மொழிகளாற் சீராக்குப் [4] பொலிவுபட்ட யாப்பின் பொருள

அழகு என்றவாறு.

'அவ்வகை' என்றதனால், அவை வேறுவேறு வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றவாறு.

அவையாவன: நெடுந்

1. *இவ் வாக்கியத்தில் யாதோ தவறியிருத்தல் வேண்டும்.
2. இலக்கண இலக்கியம்.
3. திரிசொல் என்பது தெரிசொல் என்றிருத்தல் வேண்டும். என்னை? செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பின் என்றமையின். நச்சினார்க்கினியர் வழக்குச் சொற்பயிலாதென்று கூறுதல் நோக்குக. அங்ஙனம் பாடமுள்ளது.
4. பொலிவுபட யாப்பின் என்றிருந்திருக்கலாம். பொருள என்பதிற் சிதைவிருக்கிறது.



சூகரு தொகை முதலாகிய தொகை யெட்டுமென்றவாறு. அழகு, செய் யுண்மொழி யென்றதென்னையெனின்,—அது பெரும்பான்மை யாற் கூறினான். அம்மொழியானே இடைச்சங்கத்தாரும் கடைச் சங்கத்தாரும் இவ்விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்; இக் காலத்துச் செய்யினும் விலக்கின்றென்பது. மற்று மூவடி முப் பது முதலாயின அம்மையெனப்படுமோ அழகெனப்படுமோ

வெனின், — தாயபனுவலின்மையின் அம்மையெனப்படாவென் பது. இவற்றுள்ளும் ஓரோர் செய்யுட்கண்ணே மாத்திரை முதலாகிய உறுப்பும் ஏற்றவகையான் வருவன அறிந்துகொள்க. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். (உருசு)

[தொன்மை இதுவெனல்]

ருசசு. தொன்மை தானே
யுரையொடு புணர்ந்த பழமை மேற்றே.

இது, தொன்மையுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தொன்மையென்பது, உரைவிராஅய்ப் பழமைய வாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு. அவை,

பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத் திரையும் போல்வன. (உருஎ)

[தோல் இதுவெனல்]

ருருo. இழுமென் மொழியான் விழுமியது

நுவலினும்

பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்மொழிப்

புலவர்.

இது, முறையானே தோலென்னும் வனப்புணர்த்துதல் நுதலிற்று.

அஃதிருவகைப்படும்: கொச்சகக்கலியானும் ஆசிரியத்தானுஞ் செய்யப்படுவன.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது." (சகூக) என்றவழி, தேவபாணியும் காமமும் பொருளாகவன்றியும் கொச் சகக்கலி வருமென்றுணகலான் [1] அவைமேல் வருதல் ஈண்டுக் கொள்ளப்பட்டது.

1. அவைமேல்—தேவபாணியுங் காமமும் அல்லாதவற்றின் மேல்.

இ—ள் : இழு மென்மொழியான் விழுமியது நுவலினும்—
மெல்லென்ற சொல்லான் அறம் பொருள் இன்பம் வீடென்
னும் விழுப்பொருள் பயப்பச்செய்வன ; அவை செய்தகாலத்
துள்ளன கண்டிலம் ; [1] பிற்காலத்து வந்தன கண்டுகொள்க.
பரந்தமொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும் — ஆசிரியப்
பாட்டான் ஒரு கதை மேல் [2] தொடுக்கப்பட்டன ; அவையும்
பொருட்டொடர்நிலை.
தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்—தோலென்று
சொல்லுப புலவர் என்றவாறு.
'தொன்மொழி' என்றார், பழைய கதையைச் செய்தல்
பற்றி ; இது, முன்வருஞ் சூத்திரத்தானும் பெறுதும். (உ௩அ)

[விருந்து இதுவெனல்]

௫௩௧. விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே.

இ—ள்: விருந்துதானும் புதிதாகப் பாடுந் தொடர்நிலை
மேற்று என்றவாறு.

'தானும்' என்ற உம்மையான் முன்னைத் தோலெனப்பட்
டதூஉம் பழைய கதையைப் புதிதாகச் சொல்லியதாயிற்று.

இது பழங்கதைமேற்றன்றிப் புதிதாகச் சொல்லப்படுதல் ஒப்
புமையின் உம்மையான் இறந்தது

தழீஇயிற்றென்பது. 'புது
வது கிளந்த யாப்பின் மேற்று'
என்றதென்னையெனின்,—புதி

தாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து
வரச் செய்வது. அது, முத்தொளாயிரமும், பொய்கையார் முத

லாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென
வுணர்க. கலம்ப
கம் முதலாயினவுஞ் சொல்லுப.
(உந௬)

[ இயைபு இதுவெனல் ]

௫௫௨. ஞகாரை முதலா ளகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி யியைபெனப் படுமே.

இஃது, இயைபுணர்த்துதல் நுதலிற்று.

1. பிற்காலத்து வந்தன சிந்தாமணி
முதலியன என்பர்
நச்சினார்க்கினியர்,
2. தேசிகப்பா என்பர் நச்சர்.
கூத்தராற்றுப்படை என்
பர் இளம்பூரணர். ளியல்]

பொருளதிகாரம் ௬௧௭

இ—ள்: ஞ ண ந ம ன, ய ர ல வ ழ ள்
வென்னும் பதினொரு புள்ளியீற்றினுள் ஒன்றனை
இறுதியாகச் செய்யுஞ் செய்யுள்
பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ்
செய் வது இயைபெனப்படும் என்றவாறு.

இயைபென்றதனுனே பொருளும்
இயைந்து சொல்லும் இயைந்து வருமென்பது
கருத்து; சீத்தலைச்சாத்தனாற் செய் யப்பட்ட
மணிமேகலையும் [1] கொங்குவேளிராற்
செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும் போல்வன.
அவை னகார ஈற்றான் இற்றன. மற்றையீற்றான்
வருவனவற்றுக்கும் ஈண்டு இலக் கணம்
உண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கொள்க.
இப் பொழுது அவை வீழ்ந்தன்போலும்.

[2] பரந்தமொழியான் அடிநிமிர்ந்தொழுகிய
தோலோடு இத னிடை
வேற்றுமையென்னையெனின்,—அவை
உயிரீற்றவாதல் பெரும்பான்மையாகலான் [3]
வேறுபாடுடைய சொற்றொடரான்
வருதலுமுடையவென்பது.
சொற்றொடரென்பது, அந்தாதி யெனப்படுவது;
என்றதனான், உயிரீற்றுச் சொற்றொடர் சிறு
பான்மையென்பது கொள்க.
(உ௪௦)

௫௫௩. [4] சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

*இது, புலனுமாறுணர்த்துதல் நுதலிற்று.*

---

*1. கொங்குவேளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுள் என்றது உதயணன்காதையை. இது பெருங்கதை எனவும் கொங்குவேண் மாக்கதை எனவும் படும். கொங்கவேளாராற் செய்யப்பட்ட எனவும் பாடம். இதுவும் பொருந்துமேலாராய்ந்து கொள்க.*

*2. இயைபாகிய இதுவும் பரந்தமொழியான் அடிநிமிர்ந்தொழுகலானே உரையாசிரியர் இரண்டற்கும் வேறுபாடு கூறிஞா எனக.*

*3. இதனிடைச் சில சொற்றவறியிருத்தல் வேண்டும்.*

*4. தெரிந்தமொழியான் என்பது இளம்பூரணர் கொண்ட பாடம.*

இ—ள்: சேரிமொழியென்பது, [1] பாடிமாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்துகாணுமைப் பொருட்டொடரானே தொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் என்றவாறு.

அவை [2] விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வனவென்பது கண்டுகொள்க. (உ௪க)

## [இழைபு இதுவெனல்]

௫௫௪. ஒற்றெடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா வைந்தடி யொப்பித்
தோங்கிய மொழியா னுங்கன மொழுகி
னிழைபி னிலக்கண மியைந்த தாகும்.

இஃது, இறுதிநின்ற இழையிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது—வல்லொற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாது; [3]குறளடி முதலா ஐந்து அடி ஒப்பித்து—இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்தனையும் ஒப்பித்து: ஒப்பித்தலென்பது, பெரும்பான்மையான் நாற்சீரடி படுக்கப்பட்டென்றவாறு; ஓங்கிய மொழியான்—நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப்போல் ஓசை எழும் மெல்லெழுத்தும் லகார ளகாரங்களும் உடைய சொல்

லான் ; ஆங்கனம் ஒழுகின் —இவையும்,

"சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது."

(௫௫௩)

பொருள் புலப்படச் சென்று நடப்பின்.

இழைபின் இலக்கணம் இயைந்ததாகும்

— இழைபென்று

சொல்லப்படும் இலக்கணத்தது என்றவாறு.

அவையாவன : கலியும் பரிபாடலும்போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தனவென்பது. இவற்றுக்குக் கார

1. பாடி எனினும் சேரி எனினும் மொக்கும். மாற்றம்-மொழி.
2. விளக்கத்தார் என்பவர் கூத்தநூலாசிரியருளொருவர் போலும். இவர் பெயர் யாப்பருங்கல விருத்தியுள்ளும் வருகின்றது.
3. குறளடி முதலா ஐவந்தடி என்பதற்கு தொல்காப்பியர் எழுத்தெண்ணி வகுத்த அடிகளையே கொள்வர் இளம்பூரணர்.

அது பொருத்தமாதல் காண்க.



சுகக ணங் 'தேர்தல்வேண்டாது

பொருள் இனிது விளங்கல்வேண் டும்' என்றது, [1] அவிநயத்திற்கு உரியவாதல் நோக்கியென் பது. மற்றிதனை வெண்டுறைச் செய்யுட்குமுன் வைப்பினென் னெனின்,—இஃது இசைப்பாட்டாகலின். இனி வருகின்றது இசைத்தமிழாகலின் அதற்குபகாரப்பட இதனை இறுதிக்கண் வைத்தானென்பது என்றபடி. (உசஉ)

[இவ்வோத்தின் புறனடை]

ருருரு. செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி
யிழைத்த விலக்கணம் பிழைத்தன போல
வருவ வுளவெனினும் வந்தவற் றியலாற்
றிரிவின்றி முடித்த றெள்ளியோர் கடனே.

இஃது, இவ்வோத்திற்கெல்லாம் புறனடை கூறுகின்றது.

இ—ள் : செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந் திரம் செய்யப்பட்ட இலக்கணத்தின் வழீஇயினபோன்று பின் தோன்றுவனவுளவேல் முற்கூறப்பட்ட

இலக்கணத்தோடு திரியாமல் முடித்துக் கோடல் அறிவுடையோரது கடன் என்றவாறு.

அவை எண்சீர் முதலாயின வரிற் கழிநெடிலடிப்பாற் சார்த்திக் கோடலும், ஏதுநுதலிய முதுமொழியோடு, பாட்டிற்கு இயைபின்றியுந் தொடர்புபடுப்பனவும் யாப்பென்னும் உறுப்பின் பாற் கோடலும், பிறவும் ஈண்டோதாதன உளவெனின் அவைபு மெல்லாஞ் செய்யுளிலக்கண முடிபாகுமென்றவாறு. (உசங)

செய்யுளியல் முற்றிற்று.

---

1. அவிநயம்—பாவகம்; கூத்து.

# ஒன்பதாவது : மரபியல்

[மரபுபற்றி வரும் இளமைப் பெயர் இவை எனல்]

௫௬௬. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்
கன்றும் பிள்ளையு மகவு மறியுமென்
றொன்பதுங் குழவியொ டிளமைப் பெயரே.

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின்,—மரபியலென்னும் பெயர்த்து. இதனானே ஓத்து நுதலியதூஉம் மரபு உணர்த்துதலென்பது பெற்றாம்.

மரபென்ற பொருண்மை என்னையெனின், 1 கிளவியாக்கத்து மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவுஞ் 2 செய்யுளியலுண் மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவுமன்றி, இருதிணைப் பொருட்குணாகிய இளமையும்

ஆண்மையும் பெண்மையும்பற்றிய வரலாற்றுமுறைமையும், உயர்திணை [3] நான்கு சாதியும்பற்றிய மரபும், அஃறிணைப் புல்லும் மரனும் பற்றிய மரபும், அவைபற்றிவரும் உலகியன்மரபும், நூன்மரபுமென இவையெல்லாம் மரபெனப்படுமென்பது.

மற்றுப் பொருள்களுள் இளமைபற்றி வரும் மரபு கூறினான் மூப்புப்பற்றி வரும் மரபு கூறானோவெனின்,—அது வரையறையின்மையிற் கூறானென்பது.

மற்று, மேலை ஓத்தினோடு இவ்வோத்திடை இயைபென்னை யெனின்,—முன்னர் வழக்கிலக்கணங் கூறியதன்பின் செய்யுளிலக்

---

1. கிளவியாக்கத்து மரபு என்று வரையறுத்தோதப்பட்டன—"வினையிற் றோன்றும் பாலறி கிளவியும், பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும், மயங்கல் கூடா தம்மர பினவே" என்னுஞ் சூத்திரத்தானும், பிறசூத்திரங்களானும் மரபு வழுவாமற் காப்பன.

2. செய்யுளியலின் மரபென்று வரையறுத்தோதப்பட்டன வற்றை "பாட்டுரை நூலே" என்பதை முதலாகவுடைய ௩௱௧-ம் சூத்திரத்தானும், "மரபேதானும் நாற்சொல்" என்னும் ௩௱௨-ம் சூத்திரத்தானும், அதனுரையானு மறிந்துகொள்க.

3. நான்கு சாதி—நான்கு வருணம்.

[மர கணஞ் செய்புளியலுட் கூறினான். அவ் [1] விரண்டற்கும் பொது வாகிய மரபு ஈண்டுக் கூறினமையின் இது செய்புளியலோடு இயைபு உடைத்தாயிற்று.

மற்று, [2] வழக்கிலக்கணஞ் செய்புட்கும் பொதுவாகலின் இங்ஙனம் இரண் [3] டற்கும் பொதுவாகிய மரபினையுஞ் செய்பு ளியலின்முன் வைக்கவெனின்,—அவ்வாறு வழக்குஞ் செய்புளு மென்று இரண்டுமல்லாத [4] நூலிற்கும் ஈண்டு மரபு கூறின மையின் இது செய்புளியலின்பின் வைக்கப்பட்டது.

இவ்வோத்தின் முதற்சூத்திரம் என்னுதலிற்றோவெனின்,— எல்லாப் பொருளின்கண்ணும் இளமைக்குணம்பற்றி நிகழுஞ் சொல் இவையென்று வரையறுத்துக் கூறுகின்றது.

இ—ள்: மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்—விலக்

கருஞ் சிறப்பிற்றாகிய மரபிலக்கணங் கூறின்; பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் [5] என்றென்பதுங் குழவியொடு இளமைப்பெயர்—குழவியோடு இவையொன்பதும் இளமைப்பெயர் என்றவாறு.

மேலன எட்டுங் குழவியுமென இளமைப்பெயர் ஒன்ப

தாயின. குழவியோடொன்பதென்னாது, 'ஒன்பதுங் குழவியோடு' என மயங்கக் கூறியவதனாற் போததென்பதும் இள மைப்பெயரெனவும் பிறவும் வருவன உளவாயினுங் கொள்ளப்

படும். இவற்றையெல்லாம் மேல் வரையறுத்து இன்ன பொருட்கு இன்ன பெயர் உரித்தென்பது [6] சொல்லும்.

---

1. இரண்டு—வழக்கும் செய்யுளும்.

2. வழக்கு—அகத்திணை வழக்குப் புறத்திணை வழக்கு முதலியன. அவை செய்யுளியற்கு முற்கூறப்பட்ட ஏழியலானும் கூறப்படுவன.

3. இரண்டற்கும்—வழக்குஞ் செய்யுளுமாகிய இரண்டற்கும்.

4. நூல் என்றது—இலக்கண நூலினை. அதன் மரபென்றது அதன் மரபாகவந்த பகுப்பும் அது செய்யுமுறையு முதலிய வற்றை.

5. என்று ஒன்பதும் என்பதில்

ஒன்பதும் என்பது வேண்

டியதில்லை.

6. சொல்லும்—செய்யுமென்னுமுற்று. ஆசிரியன் சொல்

லும் என்றபடி.

பியல்]

சூஉங.

பொருளதிகாரம்

'மாற்றருஞ் சிறப்பின்' என்றதனானே [1] இவை ஒருதலையாகத் தத்தம் மரபிற் பிறழாமற் செய்யுள் செய்யப்படுமென்பதூஉம், [2] ஈண்டுக் கூறுதனவாயின் வழக்கொடுபட்ட மரபு பிறழவும் செய்யுளின்பம்படின் அவ்வாறு செய்பவென்பதூஉங் கூறியவாறாயிற்று.

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி." (பெரும்பாண். க—உ)

எனவும்,

"நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது சிறப்பே."

(நற். களஉ)

எனவும் வரும். அவற்றுள் பரிதியஞ் செல்வனைப் [3] 'பருகும்', 'காலும்' என்றலும், புன்னைமரத்தினை 'நுவ்வை' யென்றலும் மரபன்மையின் வழக்கினுண் மாற்றுதற்கு உரியவாமென்பது கருத்து.

[4] "நிலவுக்குவித் தன்ன வெண்மணல்."
(குறுந். கஉந) எனவும்,

"இருடுணிந் தன்ன வேனங் காணின்."
(மலைபடு. உசஎ)

எனவும,

"இருணூற் றன்ன விரும்பல் கூந்தல்."
எனவும் வருவனவும் அவை.
(க)

[மரபுபற்றி வரும் ஆண்பாற் பெயர் இவை எனல்]

ருநிஎ. ஏறு மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மோத்தையுந் தகரு [5] முதளு மப்பரும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப.

---

1. ஒருதலையாக—துணிபாக,

2. இவற்றிற் குதாரணம்
பின்வருகின்றன. அவற்றால்
விளங்குக.

3. பருகும், காலும், நுவ்வை என்பன 'வழக்கொடுபட்ட மரபு பிறழவும்.........அவ்வாறு செய்ப' எனத் தாம் முன்கூறிய தற்குக் காட்டிய உதாரணங்களென்க. பிறவுமன்ன. நுவ்வை —நுமது தங்கை.

4. நிலவைக் குவித்தலும் இருளைத் துணித்தலும் நாற்றலும் கூடாமையின் அவையும் வழக்கொடுபட்ட மரபன்றாயின.

5. உதள் எனப் பிரிக்க.



இ—ள்:
ஆண்பாற்பெயர் இவ்வெண்ணப்பட்ட பதினைந்தும் எனறவாறு.

'பிறவும்' என்றதனான், ஆணென்றும் விடையென்றும் வருவனபோல்வனவுங் கொள்க.

இவற்றை வரையறை கூறும்வழி (௫அக—௬௦௫) உதாரணங் காட்டுதும். 'யாத்த வாண்பாற் பெயர்' என்றதனல், போத்தென்பது இளமைப் பெயராமாயினும் இங்ஙனம் ஆண்பாற்குச் சிறந்து வருமாறுபோலச் சிறவாது [1] அதற்கென்பது கொள்க. (௨)

[மரபுபற்றி வரும் பெண்பாற் பெயர் இவை எனல்]

௫௫அ. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணு
மூடு நாகுங் கடமையு மளகு
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவு
மந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.

இ—ள்: கூறப்பட்ட பதின்மூன்று பெயரும் பெண்மைப் பெயர் என்றவாறு.

[2] கடமையென்பதோர் சாதிப்பெயர் உண்டேனும் அதுவன்று, ஈண்டெண்ணப்பட்டது பெண்மைமேற்றென்று கொள்க.

'அந்தஞ் சான்ற' என்பது, முடிபமைந்தன இவையென்றவாறு; எனவே, ஆவென்பது பெண்பெயராதலும் பெண் ஆணென்பன ஒருசார் புல்லிற்கு நேர்தலுங் கொள்க; என்னை? [3] ஆனேறென்பது, ஆவினுள் ஏறெனப்படுதலின். [4] ஆனென்பது ஆண்பாற்கும் பொதுவாகலின் அது முடிபமையாதெனப்பட்டது; அது மேற்காட்டுதும். ஆண்மை பெண்மை புல்லிற்கு

1. அதற்கு—இளமைப் பெயருக்கு.

2. கடமை—காட்டாவுக்கும் சாதிப்பெயர் என்றார்.

பெயர். ஆதலின் அதனைச்

3. ஆன் என்றது—பசுப்பொதுவை. ஆனேறு என்புழி ஆ என்ற பெயர் ஆணுக்கும் வருதலால் இச்சூத்திரத்து முடிக்கப் படும் பெண்பாற் பெயர்களோடு சார்த்தி முடிக்கப்படாமை யின் முடியமையாதெனப்பட்டது என்றார்.

4. ஆனென்பது—ஆவென்பது என்றுபாடமுள்ளது: அதுவே பொருத்தம். என்னை? னகரமெய் சாரியையாதலின்.

பியல்]

பொருளதிகாரம்

கூஉரு

இன்மையின் அவையும் முடிபுடையன ஆகாவாயினுங் காயாப்

பனையை ஆண்பனையென்றும், காய்ப்பனவற்றைப் பெண்பனை யென்றும் வழங்குப. இவையெல்லாம் வழக்காகலிற் செய்யுளுள் வருமாறு அறிந்துகொள்ளப்படும். இவற்றுக்கு மேல் வரையறை கூறும் வழி (கூ0கூ—உஉ) உதாரணங் காட்டுதும். (௩)

[இளமைப் பெயர்களுள்; பார்ப்பும் பிள்ளையும்

இவற்றிற்குரியவெனல்]

ருருகூ. அவற்றுட்

பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்

றிளமை.

இது, நிறுத்தமுறையானே இளமைப்பெயருண் முற்கூறிய பார்ப்பினைக் கூறுவான் அதனோடொப்புமைகண்டு பிள்ளைப் பெயருங் கூறுகின்றது.

இ—ள் : இவ்விரண்டும் புள் இளமைக்குரிய என்றவாறு.

இவையெல்லாம் இக்காலத்து வழக்கினுள் அரியவாகலின் சான்றோர் செய்யுளுட் காணப்படும்; [1] அல்லன வழக்கின்மேற் காட்டுதும்.

"மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்கு."

(அகம். ருக) எனவும்,

"இல்லிறைப் பள்ளிதம் பிள்ளையொடு வதியும்."

(குறு. சகூ) எனவும்,

"பைதற் பிள்ளைக் கிளிபயிர்ந் தாஅங்கு."

(குறுந். கருகூ)

எனவும் இவை பருந்தும் ஊர்க்குருவியும் கிளியுமென்னும் பறவை மேல் வந்தன; பிறவும் அன்ன.

[2] புள்ளுக்குலம் பலவாகலான் இச்சூத்திரத்துள் அடங்கிய மரபு எத்துணையும் பலவாதனேக்கி முதற்சூத்திரத்துட் பார்ப்பினை முற்கூறினனென்பது.

(ச) ―――――――

1. அல்லன—வழக்கின் அரியவல்லாதன.

2. புள்ளினம் பலவாதலின், அவற்றிற்கு வரும் மரபாகிய பார்ப்பும் பலவாதனேக்கி அதனை முற்சூத்திரத்து முற்கூறினார் என்றபடி.

79



[பார்ப்பும் பிள்ளையும் தவழ்பவைக்கும் ஆம் எனல்]

ருசுo. தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன.

இ—ள்: பார்ப்பும் பிள்ளையும் தவழ்பவற்றிற்கும் உரிய என்றவாறு.

அவை, ஆமையும் உடும்பும் ஓந்தியும் முதலையும் முதலாயின. ஆமையும் முதலையும் நீருள் வாழினும் நிலத்தியங்குங்கால் தவழ்பவையெனப்படும்; உதாரணம்,

" யாமைப் பார்ப்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே."

(குறுந். கடுஉ)

எனவும்,

" தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலை."

(ஐங்குறு. சக)

எனவும்,

" தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூர்."

(ஐங்குறு. உச)

எனவும் வரும்.

'தாமும்' என்றதனான், ஊர்வனவு நடப்பனவுஞ் சிறு பான்மை பிள்ளைப் பெயர்க்கு உரியவெனக் கொள்க. அது 'பிள்ளைப்பாம்பு' என ஊர்வனமேல் வந்தது.

" பிள்ளை வெருகிற் கல்கிரை யாகி."

(குறுந். ௧௦௭) என நடப்பனமேல் வந்தது.
'மூங்காப்பிள்ளை' என்பதும் ஈண்டே
கொள்ளப்படும். பார்ப்பும் அவ்வாறே வருவன
உள
வேற் கொள்க. இதுவுந் தவழுஞ் சாதிக்கெல்லாம் பொதுவாகிய பரப்புடைமையின் இரண்டாவது வைத்தானென்பது. (ரு)

[குட்டி என்னும் பெயர்க்குரியன இவை
ருகூக.
எனல்]

[1] மூங்கா [2] வெருகெலி மூவரி யணிலொ
டாங்கவை நான்குங் குட்டிக் குரிய.

இது, மேல் எடுத்தோத்தானும் இலேசானும் அதிகாரப்பட்ட தவழ்வனவும் நடப்பனவும்பற்றிக் குட்டியென்னும் பெயரினையு முறையன்றிக் கூறுகின்றது.

1. மூங்கா—கீரியு ளொரு சாதி.

2. வெருகு—பூனையுளொருசாதி.
காட்டுப்பூனை என்பாரு
முளர்.

இ—ள்: குட்டியெனப்படுவன இவை நான்கும் என்றவாறு.

அவை, மூங்காக்குட்டி வெருக்குக்குட்டி எலிக்குட்டி அணிற் குட்டி என வரும்.

'மூவரியணில்' என்றதனால், ஒழிந்த மூன்றுந் தம்முள் ஒருபிறப்பினவாம்; [1] இவை ஒருங்கிரனவே என்பது கொள்க.

'ஆங்கவை நான்கும்' என்றதனால், தத்துவனவற்றுக்குங் குட்டிப்பெயர் கொடுக்கப்படும்; 'தவளைக்குட்டி' என வரும். மேல் ஊர்வனவற்றுக்கும் தவழ்வனவற்றிலக்கணம் எய்துவித் தமையாற் பாம்புக்குட்டியென்பதுங் கொள்க.

மற்றுக் கீரியும்நாவியும் போல்பவற்றையும்

குட்டியென் ஞரோவெனின்,—அவை
பிள்ளையென்றலே பெரும்பான்மையாக வின் 'உரிய
' என்றதனால், சிறுபான்மை குட்டியென்பதுங்
கொள்க. மூங்காவின் விகற்பமென்பாருமுளர்.
(௬)

[பறழும் மூங்கா முதலிய நான்கற்கும்
உரியவெனல்]

௫௬௨. பறழெனப் படினு முறழாண் டில்லை.

இ—ள்: மேற்கூறிய நான்கும் பறழெனவும்படும்
என்ற

வாறு.

இவை இக்காலத்து வீழ்ந்தன. மற்று
முற்கூறிய நான் கினையும் 2 இப்பெயரானே
முற்கூறுக, 3 முதற் சூத்திரத்துள் ஓதிய
முறைமைக்கேற்பவெனின்,—அற்றன்று;
அவற்றுக்கு இப்பெயர் சிறுபான்மையென்பான்
பிற் கூறினனென்பது. 'உறழாண்டில்லை' என்ற
மிகையானே,

"கைம்மை யுய்யாக் காமர் மந்தி

கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி.''
(குறுந். சுசு) என்பதுங் கொள்க.
(ஏ) ______________

1. இவை இது என்றிருத்தல்வேண்டும்; அணிலைச் சுட்டுதலின். ஆணும் பெண்ணுமாகிய பன்மைபற்றி ஆசிரியர் இவை என்றார் என்று வேறிடத்துப் பேராசிரியர் கூறுவர். ஆதலின் தாமும் இங்கு அவ்வாறு கூறினரெனினுமாம்.

2. இப்பெயர்—பறழ் என்ற பெயர்.

3. ருருசு-ம் சூத்திரம், (மரபியல்—க.)



[குருளை என்னும் பெயர் இவைக்குரிய எனல்]

ருசுரு. நாயே பன்றி புலிமுய னென்கு
மாயுங் காலைக் குருளை யென்ப.

இது, முறையானே நான்காம் எண்ணு முறைமைக்கணின்ற குருளையாமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நாயும் பன்றியும் புலியும் முயலும் என நான் குங் குருளையென்று சொல்லப்படும்

என்றவாறு.

"திறவாக் கண்ண சாய்செவிக் குருளை."
(சிறுபாண். ௧௩௦) எனவும்,
"விழியாக் குருளை மென்முலை சுவைப்பக்
குழிவயிற் றுஞ்சுங் குறுந்தாட் பன்றி."
எனவும்,
"இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை."
(குறு. ௪௭) எனவும்,
"குருளை கோட்பட லஞ்சிக் குறுமுயல்
வலையிற் றப்பாது மன்னுயி ரளைப்ப."
எனவும் வரும்.
'ஆயுங்காலை' என்றதனால்,
"சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை."
(குறுந். ௧௧௯) என்பதுங் கொள்க.
(அ)

[நரியும் குருளை என்னும் பெயர்க்குரியது எனல்] ௫௬௪. நரியு மற்றே நாடினர் கொளினே.

இ—ள்: நரியுங் குருளையெனப்படும் என்றவாறு.

"பிணந்தின் பெண்டிர்க்குக் குருளை காட்டிப்
புறங்காட் [1]டோரி புலவுத்தசை பெறூஉம்."
என வரும்.

'நாடினர் கொளினே' என்றதனானே,

"வெயிலாடு முசுவின் குருளை யுருட்டுங்
குன்ற நாடன் கேண்மை."

(குறுந். ௩அ)

என்றாற்போல முசுவிற்குங் குருளைப்பெயர் கொடுக்க. (௬)

1. ஓரி—நரி.



[மேற்கூறிய ஐந்தற்கும் குட்டியும் பறழும் உரிய எனல்] ௫௬௫ **குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்.**

இ—ள்: மேற்கூறிய ஐந்திணையும் குட்டியென்றும் பறழென்றுங் கூறுதல்வரையார் என்றவாறு.

அவை, நாய்க்குட்டி பன்றிக்குட்டி புலிக்குட்டி முயற் குட்டி என வழக்கினுள் வந்தன.

"பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த

வுண்ணுப் பிணவி னுயக்கஞ் சொலிய
நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய்."

(அகம். ந௩௬) எனவும்,

"வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ
.....................................................
நறுகட் பன்றி."

(அகம். உ௪அ) எனவும்,

"புலிப்பற முன்ன பூஞ்சினை வேங்கை." எனவும்,

"பதவுமேயல் பற்றி முயற்பற ழோம்புஞ்
சீறூ ரோளே நன்னுதல்."

எனவும்,

"நரிப்பறழ் கவர நாய்முதல் சுரக்கும்."

எனவும் முறையானே வந்தன.

நாயெனச் செந்நாய் நீர்நாய் முதலாயினவும் அடங்குமென்பது. 'மூவரியணில்' என்றவழிச் சொல்லப்பட்டவாறும் உய்த்துணர்க. பிறவும் அன்ன.

(கο)

[மேற்கூறிய ஐந்தனுள் நாயொழித்
தேனைய பிள்ளைப் பெயர்க்குமுரிய எனல்]

௫௬௬. பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே.

இ—ள் : மேற்கூறிய ஐந்து சாதியுள்ளும் நாயொழித்து ஒழிந்த நான்கற்கும் பிள்ளையென்னும் பெயர்க்கொடையும் உரித்து என்றவாறு.

இவை செய்யுட்கண் வருவன கண்டுகொள்க. 'கொள்ளுங் காலே' என்றதனான், முற்கூறிய நாய் முதலாகிய நான்கும் விலக்கி [1] நரிப்பிள்ளையென்பதே கோடலும் ஒன்று. (கக)

1. இக்காலத்தும் வழக்கிலுள்ளது.



[மறி என்னும் பெயர் இவைக்குரியது என்ல்] ௫௬௨. யாடுங் குதிரையு நவ்வியு முழையு
மோடும் புல்வா யுளப்பட மறியே.

இ—ள் : இவ்வைந்து சாதியின் இளமைப்பெயர் மறியெனப் படும் என்றவாறு.

அவை,

"மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற விடையன்."

(அகம். ௯௪) எனவும்,

"உள்ளில வயிற்ற வெள்ளை வெண்மறி."

(அகம். க0௪)

எனவும் யாட்டின்மேல் வந்தன.

மறிக்குதிரையெனவும் மறிநாக் கிற்றெனவுஞ் சொல்லுதலின் இது குதிரைக்கும் உரித்தாயிற்று.

"நவ்வி நாண்மறி கவ்விக்கடன் கழிக்கும்."

(குறுந். உஅஉ) எனவும,

"மறியாடு மருங்கின் மடப்பிணை யருத்தித்
தெள்ளறல் தழீஇய."

(அகம். நஉ)

எனவும்,

"தெறித்துநடை மரபிற்றன் மறிக்குநிழ லாகி."

(குறு. ௨கந)

எனவும் இவை, நவ்வியும் உழையும் புல்வாயும் முறையானே மறி யென்னும்பெயர் எய்தியவாறு அவ்வச் செய்புளுட் கண்டுகொள்க.

நவ்வியும் உழையும் புல்வாயுள் அடங்குமன்றே, அவற்றை மூன்றாக ஓதியதென்னை? நாயென்றதுபோல அடங்காதோ வெனின்,—[1] மாவென்பது,

குதிரையும் யானையும் புலியுஞ் சிங்க மும் முதலாயவற்றுக்கெல்லாம் பெயராகலின் அவ்வாறு ஓதா னென்பது. 'ஓடும் புல்வாய்' என்றதனானே, [2] மடனுடையன நவ்வியெனவும், இடைநிகரன உழையெனவுங் கொள்க. எட்டாம் முறைமைக்கண் ஓதிய மறியினை ஐந்தாம்வழிக் கூறியவதனானே,

"செவ்வரைச் சேக்கை [3] வருடை மான்மறி."

(குறு. கஅஎ) என்றதுபோல்வன கொள்க.

(சஉ) 1. மா என்பது விலங்கு என்னும் பொருளவாகலின் அப் பொதுமைபற்றி அதனுள் வேறுபாட்டுச் சிறப்புடைய குதிரை முதலியனவற்றை அடக்குதல் முடியாதவாறுபோல, புல்வா யென்ற பொதுப்பெயருள் வேறுபாடுடைய நவ்வி முதலிய சிறப்புப் பெயர்களை அடக்குதல் முடியாதென்றபடி. புல்வாய் சிறப்புப் பெயராயும் வருமென்பதுபற்றி அதனையுஞ் சேர்த்துக் கூறினர் போலும்.

2. மடம்—மடப்பம். மடனடையன என்று மிருந்திருக்க லாம் போலும்.

3. வருடை—மலையாடு.

[குரங்கும் குட்டி என்னும் பெயர்பெறும் எனல்]

௫௬௮. கோடுவாழ் குரங்குங் குட்டி கூறுப.

இ—ள்: கோட்டினையே வாழ்க்கையாகவுடைய குரங்கும் குட்டியென்று கூறப்படும் என்றவாறு.'

'கோடுவாழ் குரங்கு' எனவே, குரங்கின் பிறப்புப்பகுதியெல்லாங் கொள்க. அவை, குரங்குக்குட்டி முசுக்குட்டி [1]ஊகக்குட்டியென்பன. உம்மை இறந்தது தழீஇயிற்றாதலான் மேற்கூறிய யாடு முதலாகிய ஐந்து சாதிக்குங் குட்டியென்னும் பெயர் கூறப்படுமென்பது; அவை, யாட்டுக்குட்டி குதிரைக்குட்டி நவ்விக்குட்டி உழைமான்குட்டி புல்வாய்க்குட்டி என வரும். (௧௩)

[குரங்கிற்கு மகவு முதலியனவும் உரியவெனல்] ௫௬௯. மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு

மவையு மன்ன வப்பா லான.

இ—ள்: மேலைச் சூத்திரத்து எடுத்தோதிய குரங்கிற்குக் குட்டியென்னும் பெயரேயன்றி மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்புமெனப்பட்ட இந்நான்கும் குட்டியென்னும் பெயர்போல அக்குரங்கின் பகுதிக்கு உரியவாம் என்றவாறு.

"உயர்கோட்டு
மகவுடை மந்திபோல." (குறுந். உகூ)

எனவும்,

"குரங்குப் பிள்ளை."

எனவும்,

"வரையாடு வன்பறழ்த் தந்தை."

(குறுந். உகூ)

எனவும்,

"ஏற்பன வேற்பன வுண்ணும்
பார்ப்புடை மந்திய மலையிறந் தோரே."

(குறுந். உஎஅ)

எனவும் வரும். 'அன்ன' என்பதனான், முன்னையவற்றோடொக்கும்; மிகுதி குறைவு இலவென்பதாம்.

"வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்."

(குறுந். நஅ)

என (நிசுச) இலேசினாற் கூறிப்போந்தமையின் ஈண்டு [2] அது கூறானாயினன்; அன்றி, அஃது இத்துணைப் பயிலாமையானு

1. ஊகம்—குரங்குள் ஒருசாதி.

2. அது—குருளை.

மென்க. ஏழாமுறை நின்ற மகவினை ஈண்டு வைத்தான்[1] அதிகாரப்பட்ட பெயர்க்குரிமையானென்பது. (கச)

[கன்றென்னும் பெயர்க்குரியன இவை எனல்]

ருஎ௦. யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு மானோ டைந்துங் கன்றெனற் குரிய.

இ—ள்: ஐந்தாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற கன்றென்னும் பெயர்க்கு இவை உரிய என்றவாறு.

அவை, யானைக்கன்று குதிரைக்கன்று கழுதைக்கன்று கட

மைக்கன்று ஆன்கன்று என வரும்.

"கன்றுஉகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவும்."

(அகம். சு அ)

என்பது, யானைக்கன்று.

"கன்றுபுகு மாலை நின்றோ ளெய்தி."

(அகம். சு)

என்பது, ஆன்கன்று: பிறவும் [3] அன்ன உளவேற் கொள்க.

இனி, 'உரிய' என்றதனானே, மான்கன்று குதிரைக்குட்டியென்

பனவுஞ் சொல்லுப.

(கரு).

[கன்றென்னும் பெயர் இவற்றிற்குமுரியதெனல்]

௫௭௧. எருமையு மரையும் வரையா ராண்டே.

இ—ள்: எருமையும் மரையும் கன்றெனப்படும் என்றவாறு. அவை, எருமைக்கன்று மரையான்கன்று என்பன வழக்கு.

[4] "கன்றுடை மரையா துஞ்சும்."

(குறுந். ககரு)

"கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறுஅர்

......................................................

குன்ற நாடற் கண்டவெங் கண்ணே."

(குறுந். உசக)

1. அதிகாரப்பட்ட பெயர்—குரங்கு.

2. கால் ஒய்யும்—காலை இழுக்கும்.

3. அன்ன.

உளவேல்—அவைபோல்வன உளவேல்.

4. இது 'மென்னடை மரையா' என்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதித்த குறுந்தொகையுரைப் பதிப்பிற் காணப் படுகின்றது. 'கன்றுடை' என்றும் பாடமோ வேறு நாலடியோ என்பது ஆராயத்தக்கது.

5. இவ்வடி முற்பதிப்புக்களில் விடப்பட்டது. கன்று—எருமைக்கன்று.



எனவும் வரும். 'வரையார்' எனவே,

அவையெல்லாம்போலாது சிறுவரவினவென்பது பெற்றாம். (கக)

[கன்றென்னும் பெயரை இவையும் பெறுமெனல்] ருஎஉ. **கவரியுங் கராமு நிகரவற் றுள்ளே.**

இஃது, அவற்றொடு மாட்டெறிந்தது.

**இ—ள்**: கவரியும் கராமும் கன்றெனப்படும் என்றவாறு.

கவரிமான்கன்று கராக்கன்று என வரும். 'அவற்றுள்ளே' என்பது, முற்கூறிய ஏழனுண் முதனின்ற (ருஎக) யானையோ டொக்குமென்றவாறு.

இதன் பயம்:

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை." (ருஎச) என வருகின்ற பெயரும் இவற்றுக்கு எய்துவித்தலாயிற்று.

அது முன்னர்ச் சொல்லும். [1] இவையெல்லாம் தம்மிஞெத்த வரவின அன்மையின் வேறு வேறு சூத்திரஞ் செய்கின்றவா றாயிற்று. (கஎ)

[கன்றெனற்கு ஒட்டகமுஞ் சிறுபான்மை உரியதெனல்] ௫௭௩. ஒட்டக மவற்றோ டொருவழி நிலையும்.

இ—ள்: சிறுபான்மை ஒட்டகமும் கன்றெனப்படும் என்றவாறு.

அஃது, ஒட்டகக்கன்று என வரும், 'ஒருவழி' என்றதனனே, எவற்றினும் இது சிறுபான்மையெனவுணர்க. (௧௮)

[குழவி என்னும் பெயர் யானைக்குரியதெனல்] ௫௭௪. குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை.

இ—ள்: ஒழிந்து நின்ற குழவிப் பெயர் குஞ்சரத்திற்கு உரிய என்றவாறு.

---

1. இவையெல்லாம் என்றது—இச்சூத்திரத்திற் கூறியவற்றையும் இதற்குமுன்னுள்ள சூத்திரங்களிற் கூறியவற்றையும். ஒத்த வரவினவல்லவென்றது எல்லாமொத்த வரவினவாகாது பயின்றும் பயிலாதும் வரும் என்றபடி. அதுபற்றியே வெவ்வேறு சூத்திரம் செய்தார் எனக. கராம்—முதலை.

80

அது,

"ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி."

(அகம். கசுரு)

என வரும். நிகரவற்றுள்ளென [1] மேற் குஞ்சரத்தோடொக்கு மெனப்பட்ட கராத்தின்குழவியுங் கவரிக்குழவியும் வந்தவழிக் கண்டுகொள்க.

(கசு)

[குழவி என்னும் பெயரை இவையும் பெறுமெனல்]

ருஎரு. ஆவு மெருமையு மவைசொலப் படுமே.

இ—ள்: ஆவும் எருமையும் அவைபோலக் குழவிப்பெயர்க் கொடைபெறும் என்றவாறு.

குஞ்சரம், ஆணும் பெண்ணுமென இருகூற்றனவாகலான் [2] 'அவை' என்றான். மக்கண்மேல் வருங்காலும் இஃதொக்கும்.

"மடக்கட் குழவி யணவந் தன்ன
நோயே மாகுத லறிந்துஞ்
சேயர் தோழி சேய்நாட் டோரே."

(குறுந். சுச) என்பது ஆன்குழவி.

"மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியும்."

(பட்டின. கச-ரு) என்றது, எருமைக்குழவி. (உ0)

[குழவிப் பெயரை இவையும் பெறுமெனல்] ருஎசு. **கடமையு மரையு முதனிலை யொன்றும்.**

இ—ள்: இவையும் அப்பெயர்க்கு உரிய என்றவாறு.

குஞ்சரம்போலக் குழவிப்பெயர் பெறுமென்பான் 'முத னிலையொன்றும்' என்றானென்பது. அவை வந்துழிக் கண்டுகொள்க. (உக)

[குழவி என்னும் பெயர் இவற்றிற்குமுரியதெனல்] ருஎஎ. **குரங்கு முசுவு மூகமு மூன்று
நிரம்ப நாடி னப்பெயர்க் குரிய.**

1. மேல் என்றது மரபியல் பதினேழாம் சூத்திரத்தை.

2. குஞ்சரமென்பது ஒருமையாக அவையெனப் பன்மையாற் சுட்டியது, ஆண் பெண் என்னும் வகைப் பன்மை நோக்கியென்பது கருத்து.



இ—ள்: இம்மூன்றுங் குழவியென்னும் பெயர்க்கு உரிய என்றவாறு.

'நிரம்ப நாடின்' என்பது, மூன்று பெயரும் ஒருபிறப்பின் பகுதியாகலின் அம்மூன்றற்கும் ஒப்ப வருமென்றவாறு.

இக்கருத்தானே,

"கோடுவாழ் குரங்கு." (ருகூஅ)

என்றவழி, இம்மூன்றுங் கொண்டாமென்பது. இவற்றுக்கு உதாரணங் காணாமையிற் காட்டாமாயினும், இலக்கணம் உண்மையின் அமையுமென்பது. (உஉ)

[மேற்கூறிய இளமைப் பெயர்களுள் மக்கட்குரியன இவை எனல்]

ருஎஅ. குழவியு மகவு மாயிரண் [1]டல்லவை
கிழவ வல்ல மக்கட் கண்ணே.

இ—ள் : குழவியும் மகவுமென்னும் இரண்டு [2] மல்லது மக்கட்கணின்ற இளமை தமக்கு வேறு பெயருடையவல்ல என்றவாறு.

ஆணிளமையும் பெண்ணிளமையுமென இரண்டாகலின் [3] 'அல்லவை' எனப் பன்மை கூறினன்.

> " காவல்,
> குழவிகொள் பவரி னோம்புமதி." (புறம். ரு)

எனவும்,

> " மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி." (பெரும்பாண். அக)

எனவும் வரும்.

" கிழவவல்ல " என்ற மிகையானே, ஆண்பிள்ளை பெண்பிள்ளையெனப் பிள்ளைப்பெயரும் மக்கட்பாற்படுவன கொள்க. (உரு)

---

1. அல்லவை அல்லது என்றிருத்தல் வேண்டும்.

2. அல்லது, உடையவல்லவென இயைக்க.

3. அல்லவை என்பது இவர் கருத்தின்படி அல்ல என்று இருத்தல் வேண்டும்.

[மேற்கூறிய இளமைப் பெயர்களுள் ஓரறிவுயிர்க்குரியன இவை எனல்]

ருஎகூ. பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே.

இ—ள்: பிள்ளை குழவி கன்று போத்தென்னும் நான்கும் ஓரறிவுயிரின் இளமைப்பெயர் என்றவாறு.

ஓரறிவுயிரென்பன, முன்னர்ச்(ருஅஉ)சொல்லப்படும். ஓரறிவுயிரென்பது, '[1] பண்புத்தொகை.

'கமுகம்பிள்ளை', 'தெங்கம்பிள்ளை' எனவும்,

"விழுி ரூழைக் குழவித் திநீர்."
(பெரும்பாண். ௩ருஎ) எனவும்,

'பூங்கன்று'
எனவும்,

'போத்துக்கால்'
எனவும் வரும்.

வீழிருழைபெனப்பட்டது, தெங்கு;
போத்துக்காலென்
பது கரும்பு.
ஓரறிவுயிர்க்குக் கொள்ளவும் அமையும்
என்னும் உம்மையை
எச்சப்படுத்துப் பிறவழியுங் கொள்ளப்படும்;
அவை,
"குழவிவேனில்"
(கலி. ௩௬)
எனவும்,
"குழவித்திங்கள்." (கலி. ௧0௩;
சிலப். ௨: ௩௮)
எனவும்,
"குழவிஞாயிறு." (பெருங்.
க—௩௩: ௨௯)
எனவும்,
"பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து."
(அகம். ௩௬)
எனவும்,

1. ஓரறிவுயிர்—ஓரறிவாகிய உயிர் என விரிதலின் பண்புத்தொகையென்றார். அவை மரம் முதலிய பரிச உணர்ச்சி மாத்திரம் உடையன.



"புலிப்போத் தன்ன புல்லணற் காளை."

(பெரும்பாண். ௧௩அ) எனவும் இவையும் இளமைக் குறிப்பினவாகலிற் காட்டப்பட்டன.

மற்று, ஓரறிவுயிர் ஈண்டுக் கூறியதென்னையெனின்,—குழவிப்பெயர் அதிகாரப்பட்டமையானென்பது. மற்றுப் புல்லும் மரனும் [1] உயிரெனப்படுமோவெனின்,—அவற்றை யுயிரென்றன் மரபுபட்ட வழக்காகலின் அம்மரபுங் கோடற்குக் 'மரம் [2] உய்ந்தது' என்பவாகலின்.

கூறினான்,

(உச)

[மேற் சூத்திரத்துட் கூறிய

பெயர்களை

நெல்லும் புல்லும் பெறா எனல்]

௫அ௦. நெல்லும் புல்லு நேரா ராண்டே.

இது, எய்தியது விலக்குகின்றது.

இ—ள்: அந்நான்கு

பெயரானும் நெல்லும் புல்லுஞ் சொல் லப்படா

என்றவாறு.

மற்று,

"புறக்காழ் னவே புல்லென மொழிப"

என்னுமாகலான் மேற்காட்டிய கமுகு முதலாகிய புல்லும் விலக்குண்ணும் பிறவெனின்,—அற்றன்று; புல்லென்பது பலபெயரொருசொல்லாகலான் நெல்லென்னும் இனத்தானே வேறுபடுத்துப் [3]புல்லென்பது(புறம். உச அ)உணவின்மேற் கொள்க. (உரு)

[இளமைப்பெயர் அவைஅன்றி இல எனல்]

ருஅக. சொல்லிய மரபி னிளமை தானே
சொல்லுங் காலை யவையல விலவே.

இது, புறனடைச் சூத்திரம்.

---

1. உயிரெனப்படுமோவெனின் என வினவினமையால் உயிரன்று எனக் கூறுவாருமுளர் என்பது பெறுதும்.

2. உய்தல்—பிழைத்தல். (உயிர் நிலைத்தல்.)

3. புல்—இது நெற்போன்றதொரு சாதிப் பெயர். அதன் தானியத்தைப் புற்ருனியமென்றும் அரிசியைப் புல்லரிசியென் றும் வழங்குதலாலறிக. வேறுபடுத்தென்றது புல்லென்னும் பொதுப்பெயரின் வேறுபடுத்துச் சிறப்புப்பெயராகக் கொள்க; அது நெல்லோடு இனம் சேர்த்தி எண்ணினமையாற் பெறப் படுமென்றபடி. உணவு—உணவுக்குரியது.



இ—ள்: சொல்லிய மரபின் இளமை—

"பாடலுட் பயின்றவை நாடுங் காலை."

(ரு)

எனவும்,

"பாடல் சான்ற புலனெறி வழக்கு."

(ருரு)

எனவும் அகத்திணையியலுட் கூறிய புலனெறி வழக்கிற்ருகிய

இளமை.

சொல்லுங்காலை அவையல

இல—அவற்றுக்கு இலக்கணங்

கூறுங்கால் வேறு பலவின்றி வரும்;

இங்ஙனம் வரையறைப்

பட்டன [1] இன்றி என்றவாறு.

'இளமையு மவையல வில' எனவே, அதற்கு மறுதலை யாகிய முதுமையாயின் அவையலவிலவென்பதோர் வரையறைப் படுத்து இலக்கணங் கூறப்படாவென்பது கருத்து.

'சொல்லுங்காலை' என்றதனால், சொல்லாத இளமைப்பெயருங் கொள்க; அவை,

"நன்றாட் பூத்த நாகிள வேங்கை."
(அகம். அரு)

எனவும்,

"நாகிளவளை"
(புறம். உசுசு)

எனவும்,

"கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு."
(குறு. கசுச)

எனவும்,

"எருமை நல்லான் கருநாகு பெறூஉம்."
(பெரும்பாண். கசுரு)

எனவும் வரும். இவற்றுள் ஓரறிவுயிர் முதலாக ஐந்தறிவுயிரளவும்

நாகென்னும் இளமைப்பெயர் வரையறையின்றிச் சென்றது;

[2]வண்டென்பதற்கும் ஒக்கும், [3] அது விரவுப்பெயராகலின். (உகூ)

---

1. இன்றி என்பது அன்றி என்றிருத்தல்வேண்டும்.

2. வண்டும் நாகு என்ற இளமைப்பெயர் பெறுமென்றபடி

3. அது விரவுப்பெயராகலின் என்றது நாகு என்றது ஐயறிவுயிர்க்கும் பொதுவாகலின் என்றபடி.



[ஓரறிவு முதலியன இவை எனல்].

ருஅஉ. ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே

யிரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
யைந்தறி வதுவே யவற்றொடு செவியே
யாறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

*இது, மேல் அதிகாரப்பட்ட ஓரறிவுயிர் உணர்த்தும்வழி அவ்வினத்தனவெல்லாங் கூறுதல் நுதலிற்று.*

*இ—ள்: ஒன்றறிவதென்பது, ஒன்றனையறிவது; அஃதாவது, உற்றறிவதென்பதும். இரண்டறிவதென்பது, அம்மெய்யுணர்வினோடு நாவுணர்வுடையதெனவும், மூன்[1]றறிவுடையது அவற்றோடு நாற்றவுணர்வுடையதெனவும், நான்கறிவுடையது அவற்றோடு கண்ணுணர்வுடையதெனவும், ஐந்தறிவுடையது அவற்றோடு செவியுணர்வுடையதெனவும், ஆறறிவுடையது அவற்றோடு மனவுணர்வுடையதெனவும், அம்முறையானே நுண்ணுணர்வுடையோர் நெறிப்படுத்தினர் என்றவாறு.*

*இது முறையாதற்குக் காரணமென்னையெனின்,—[2]எண்ணுமுறையாற் கூறினாரென்பது; அல்லதூஉம், எல்லாவுயிர்க்கும் [3] இம்முறையானே பிறக்கும் அவ்வவற்றுக்கோதிய அறிவுகளென்றற்கு அம்முறையாற் கூறினாரென்பது; என்னை? அது பெறுமாறெனின்,—'நேரிதி னுணர்ந்தோர் நெறிப் படுத்தினர்'*

என்பதனுற் பெறுதும்.

மற்று, ஒன்றுமுதல் ஐந்தீருகிய பொறியுணர்வு மனமின்றியும் பிறப்பனபோல வேறு கூறியதென்னையெனின், — ஓறி

1. அறிவுடையது என்பன அறிவது என்றும் பாடம்.

2. எண்ணுமுறை என்றது ஓரறிவுயிர் ஈரறிவுயிர் என எண்ணுமுறை. கூறினுனென்பது—கூறினமையான் என்றிருத்தல் வேண்டும்.

3. இம்முறை என்றது பரிசம், இரசம், கந்தம், உருவம், சத்தம் என்னுமிவைகள் இம்முறையே (அஃதாவது பரிச உணர்ச்சி பிறந்தபின் இரச உணர்ச்சி பிறக்கும் ஏனையவும் அம் முறையே) பிறக்கும் என்றபடி.



வுயிர்க்கு [1] மனமின்மையின் அங்ஙனங் கூறினுரென்பது. அதற்கு உயிருண்டாயின் மனமின்றுமோவெனின், — உயிருடையவாகிய நந்து முதலாகியவற்றுக்குச் செவிமுதலாய பொறியின்மை கண்டிலேயோவென்பது. அவ்வாறே

ஒழிந்தவற்றிற்கும் மனவுணர்
வில்லையென்பாரும்,
மனமுண்டென்பாருமென இரு பகுதியர்.
அவையெல்லாம் வல்லார்வாய்க்
கேட்டுணர்க.
அல்லதூஉம், பொறியுணர்வென்ப
தாமே உணரும் உணர்ச்சி;
அங்ஙனம் உணர்ந்தவழிப் பின்னர்
அவற்றை மனஞ்சென்று
கொள்ளுமென்பதேதன்னையெனின், —
மனம் ஒன்றினை நினையா
நிற்க மற்றொன்று கட்புலனாயக்கால்
அதனைப் பொறியுணர்வு
கொள்ள [2] அதன்வழியே
மனந்திரிந்து செல்லுமாகலின்; என்னை?
மனவுணர்வு மற்றோர் பொருட்கண்
நின்றகாலத்துப் பிற
பொருட்கட் சென்றதெனப்படாதன்றே?
பின்னர் அதனை அறி
வித்தது பொறியுணர்வாகலான் அவை
தம்மின் வேற்றுமையுடை
யனவென்பது. அல்லதூஉம், 3

தேனெய்யினை நாவின்பொறி
உணர்ந்தவழி இன்புற்றும், கண்ணுள் வார்த்து மெய்யுணர்
வுணர்ந்தவழித் துன்புற்றும் ; நறிதாயின மான்மதத்தினை மூக்
குணர்வுணர்ந்தவழி இன்புற்றும், கண்ணுணர்வுணர்ந்தவழி இன்
பங்கொள்ளாமையும் வருதலின் அவை பொறியுணர்வெனப்படும்.
மனவுணர்வும் [4] ஒரு தன்மைத்தாகல் வேண்டுமாலெனின், —
ஐயுணர்வின்றிக் கனூப்போலத் தானேயுணர்வது மனவுணர்வெனப்
படும். பொறியுணர்வு மனமின்றிப் பிறவாதெனின்,— [5] முற்பிறந்
தது மனவுணர்வாமாகவே பொறியுணர் [6] வென்பது ஓரறிவின்
ருகியே செல்லுமென்பது. அற்றன்றியும், ஒருவனுருப்பிரண்டு

---

1. ஓரறிவுயிர் முதலியவற்றிற்கும் சூக்குமமாக டென்பது ஆன்றோர் கருத்து.
மனமுண்

2. அதன்வழி—அக்கட்புலன்வழி.

## 3. தேனெய்—தேன்குழம்பு.

4. ஒருதன்மைத்தாதல்—ஐந்தின் தன்மையாதலன்றித் தனக்கென ஒருதன்மை உடையதாகல். கனுப்போல் என்றது கனுவில் பொறிகளின் அறிவின்றித் தானே உணர்தல்போல என்றபடி.

5. முன்—முதலில். முன் பொறியுணர்வும் பின் மனவுணர்வும் பிறக்கும். அன்றெனின் (முன் பிறந்ததும் மன உணர்

வெனின்) பொறியுணர்வென ஒருணர்ச்சி

படி. ஆக செல்லும் என இயைக்க.

இல்லையாம் என்ற

6. என்பது—என என்றிருப்பது

நலம்.



தீண்டியவழி அவ்விரண்டும்படினும் ஒருகணத்துள் ஒருமனமே இருமனப்பட்டு அவ்வுறுப்பிரண்டற்கும் ஊற்றுணர்வுகெடாது

கவர்ப்பவாங்கிக் கைக்கொண்டு மீளுமென்பது காட்டலாகாமையானும் அஃதமையாதென்பது. (உஎ)

### [ஓரறிவுடையன இவை எனல்]

ரு அங. புல்லு மரனு மோரறி வினவே

## பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது, முறையானே ஓரறிவுடையன வுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: புறக்காழனவாகிய புல்லும் அகக்காழனவாகிய மரனும் ஓரறிவுடைய; பிறவும் அக்கிளைப்பிறப்பு உள்ளன என்றவாறு.

'கிளைப்பிறப்பு' என்பது, கிளையும் பிறப்புமென்றவாறு. கிளையென்பன:—புறக்காழும் அகக்காழுமின்றிப் புதலுங் கொடியும் போல்வன. பிறப்பென்பன:— மக்களானும் விலங்கானும் ஈன்ற குழவி [1] ஓரறிவினவாகிய பருவமும், எஞ்ஞான்றும் ஓரறிவினவேயாகிய என்பில் புழுவுமென இவை. இவை வேறு பிறப்பெனக் கொள்க.

மற்றிவற்றுக்கு அறிவில்லை பிறவெனின்,—[2] பயிலத் தொடுங் காற் புலருமாகலின் ஓரறிவுடையனவென வழக்குநோக்கிக் கூறினான், இது வழக்குநூலாதலின். அஃதேல், இவை உணர்ச்சிய வாயின் இன்பதுன்பங்

கொள்ளுமோவெனின்,—அதற்கு [3]மன மின்மையின் அது கடாவன்றென்பது. (உஅ)

[ஈரறிவுடையன இவை எனல்]

ருஅச. நந்து முரளு மீரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது, முறையானே ஈருணர்வுடையன வுணர்த்துதல் நுதலிற்று.

---

1. ஓரறிவினவாகிய பருவம்—பரிச உணர்ச்சிமாத்திர முடைய பருவம.

2. தொட்டாற் சுருங்கி என்னுஞ் செடியாலறியலாம்.

3. மனஞ் சூக்குமமாக உண்டென்பதும் கொள்ளுமென்பதும் சிலர் கொள்கை. இன்பதுன்பங்

8 t



இ—ள்: நந்தும் முரளும்

ஈரறிவாகிய ஊற்றுணர்வும் நாவுணர்வுமுடையன; பிறவும் அக்கிளைப்பிறப்பு உள என்றவாறு.

இரைசுவைகோடலும், பிறிதொன்று தாக்கியவழி அறிதலுமுடைமையின் மெய்யுணர்வோடு நாவுணர்வுமுடையனவென்றவாறு. இவற்றுக்குக் கிளையென்பன கிளிஞ்சிலும்[1] முற்றிலும் முதலாகிய கடல்வாழ் சாதியும் பிறவுமெனக் கொள்க. பிறப்பென்பன முற்கூறியவாறே கொள்ளப்படும். (உகூ)

*[மூவறிவுடையன இவை எனல்]

௩அ௩. சிதலு மெறும்பு மூவறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது, மூவறிவின கூறுகின்றது.

இ—ள்: சிதலும் எறும்பும் ஊற்றுணர்வும் நாவுணர்வும் மூக்குணர்வுமுடைய ; அவற்றுக் கிளையும்

பிறப்பும் அவ்வாறே மூவறிவுடைய என்றவாறு.

இவை [2] உற்றுணர்ந்து மீடலும், நாச்சுவை கோடலும், நெய்புள்வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடையவாறு கண்டுகொள்க. இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றாலறிதுமெனின்,—ஒன்று தாக்கியவழியன்றி அறியாமையிற் கண்ணிலவென்பது அறிதும்; உரப்பியவழி ஓடாமையிற் செவியில வென்பது அறிதும். இவற்றின் கிளையென்பன [3] 'ஈயன் மூதாய்' (அகம். கச) போல்வன. பிறப்பென்பன, முற்கூறியவாறே மக்கட் குழவியும் விலங்கின் குழவியும் இம்மூன்றுணர்வாகிய பருவத்தனவும் அட்டை முதலாகியவுமெல்லாங் கொள்க. (௩௦)

*[நான்கறிவுடையன இவை எனல்]*

ருஅசு. [4] நண்டுந் தும்பியு நான்கறி வினவே

பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

1. முற்றில்—மட்டிச்சுண்ணும்பு என்பர்.

2. உற்றுணர்தல்—பரிசித்தறிதல்.

3. ஈயன்மூதாய்—இந்திரகோபம்.
இக்கால வழக்கு.
தம்பலப்பூச்சி என்பது

4. வண்டுந் தும்பியும் என்று பாடமிருந்திருக்கலாம் போலும். நன்னூலார் அவ்வாறு கொள்வர். நச்சினார்க்கினியரும் அவ்வாறு கொண்டனரென்பது பெரும்பாண்.—183-ம் அடியுரையா லறியலாம்.



நண்டுந் தும்பியும் நான்கறிவினவெனவும்,
அந்நாலறிவினை யுடைய கிளையும் பிறப்பும்
வேறுளவென்பதூஉங் கூறியவாறு.

இ—ள்: நண்டிற்கும் தும்பிக்கும் செவியுணர்[1]வொழித்து ஒழிந்த நான்கு உணர்வும் உள; அவற்றுக் கிளையும் பிறப்பும் பிறவும் உள என்றவாறு.

மெய்யுடைமையின் ஊற்றுணர்வும், இரைகோடலின் நாவுணர்வும், நாற்றங்கோடலின் மூக்குணர்வும், கண்ணுடைமையிற் கண்ணுணர்வுமுடையவாயின. நண்டிற்கு மூக்குண்டோ வெனின்,—அஃது ஆசிரியன் கூறலான் உண்டென்பது பெற்றாம். இவற்றுக்குக் கிளையென்பன :— வண்டுந் தேனீயுங் குளவியும் முதலாயின. பிறப்பென்பன :— நான்கறிவுடைய பிற சாதிகளென முற்கூறியவாறே கொள்க. (௩௧)

**[ ஐயறிவுடையன இவை எனல் ]**

௩௨. **மாவு [2] மாக்களு மையறி வினவே**
**பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.**

இஃது, ஐயறிவுடையன கூறுகின்றது.

**இ—ள் :** ஐயறிவுடையன விலங்கும் அவைபோல்வன ஒரு சார் மானிடங்களுமாம்; அக்கிளைப்பிறப்புப் பிறவும் உள என்றவாறு.

மாவென்பன—நாற்கால் விலங்கு. மாக்களெனப்படுவார்—

மனவுணர்ச்சியில்லாதார். கிளையென்பன—[3] எண்கால் வருடையும் குரங்கும்போல்வன. எண்காலவாயினும் [4] மாவெனப்படுதலின் வருடை கிளையாயிற்று. குரங்கு நாற்காலவாகலிற் கிளையாயிற்று. பிறப்பென்பன—கிளியும் பாம்பும் முதலாயின.

---

1. ஒழித்து என்பதே சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்பிற் பாடம். அது பொருத்தமாதல் காண்க. ஒத்து என்பது ஏனைய பதிப்புக்களிற் பாடம். அது பொருத்தமில்லை.

2. புள்ளும் எனப் பாடங்கொள்வர்

இளம்பூரணர். அது சிறப்பாதல் காண்க.

3. எண்கால் வருடை—செங்குத்தான மலையில் வசிக்கும் ஒரு விலங்கு. குறுந். 187-ம் செய்யுளுரையும், மலைபடுகடாம், 502 — 3-ம் அடியுரையும், ஐங்குறு. 287-ம் செய்யுளும்

பார்க்குக.

4. மாவெனப்படுதலின்—விலங்கு

எனப்படுதலின்.

மற்றுப் பாம்பிற்குச் செவியுங் கண்ணும் ஒன்றேயாகிக் கட்செவியெனப்படுமாகலின் ஐயறிவில்லை பிறவெனின்,—பொறியென்பன வடிவுநோக்கினவல்லவாகலின் ஒன்றே இரண்டுணர்விற்கும் பொறியாமென்பது.

கிளியென்பது பறவையாகலின், அதனை வேறோதுக வெனின்,—[1] முன்னையவற்றிற்கும் பறவையென்றோதியதிலனாகலான் அவ்வச் சூத்திரங்களானே எல்லாம் அடங்குமென்பது.

மற்றுப் புல்லும் மானும் முதலாக இவ்விரண்டு பிறப்பெடுத்தோதி, ஒழிந்தனவற்றையெல்லாம் 'பிறவுமுள' எனப் புறனடுத்ததென்னையெனின், — அவை வரையறையிலவாகலின், அங்ஙனங் கூறினான்; அல்லதூஉம், மக்களும் புள்ளும் விலங்கும் முதலாயின ஓரறிவினவென்றும், ஈரறிவினவென்றும் எண்ணி வரையறுக்கப்படாமையானும் அவ்வாறு கூறினானென்பது. (௩௨)

[ஆறறிவுடைய உயிர் மக்கள் எனல்]

௫அஅ. மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இஃது ஆறறிவுயிர் கூறுகின்றது.

இ—ள்: மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவும் உடையர்; அக்கிளைப்பிறப்பு வேறும் உள எனறவாறு.

முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும். அவ்வாறு உணர்வினுங் குறைவுபட்டாரைக் குறைந்தவகையறிந்து முற்கூறிய சூத்திரங்களானே அவ்வப் பிறப்பினுட் சேர்த்திக் கொள்ள வைத்தானென்பது. அவை, ஊமுஞ் செவிடுங் குருடும்போல்வன. கிளையெனப்படுவார்—தேவருந் தானவரும் முதலாயினர். பிறப்பென்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடை

1. முன்னைய—தும்பி வண்டு தேனீ முதலியன. கிளி பேசுப வாதலின் மாக்களுள் அடங்குமெனக் கருதினர்போலும். பாம்பு என்றது நாகர் சாதியை நோக்கிப்போலும். அன்றி இவை விலங்குள் அடங்குமென்றலுமாம். முன்னையவற்றிற்குப் பறவை வேறோதியதிலனாகலான் என்றும் இவ்வாக்கியம் இருந்திருக்கலாம்போலும். முன்னைய—முற்கூறிய பிறப்புக்கள்,



யனவெனப்படும் [1]மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்குமென்பது. 'தாமே' எனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவுடையாரென்றற்குச் சிறந்தாரென்பதுங் கொள்க. (௩௩)

[மேற்கூறிய ஆண்பாற் பெயருள் களிறு என்னும் பெயர் இதற்குரியது எனல்]

## ருஅசு. வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்
## கேழற் கண்ணுங் கடிவரை யின்றே.

[3] 'மக்கடாமே யாறறிவுயிர்' எனப் பிரித்துக் கூறினமையால், ஆண்பால் அதிகாரப்பட்டதுகண்டு மற்றை விலங்கினுள் ஆண்பாற்குரியன கூறிய தொடங்கியவாறு.

நிறுத்தமுறையாற் கூறுது களிற்றினை முற்கூறினான், அப் பெயர் விலங்கினுட் சிறந்தமையானென்பது. ஏறும் ஏற்றையும் பயின்றுவரவினவாகலின் முதற் சூத்திரத்துண் (ருருசு) முற் கூறினனென்பது.

**இ—ள்:** யானைக்கு விதந்து களிறென்றலுரித்து; கேழற் கண்ணுஞ் சிறுபான்மை வரும் என்றவாறு.

'விதந்து' என்ற விதப்பினால், களிறென்பது சாதிப்பெயர் போலவும் நிற்குமென்பது; அஃதாவது, யானையென்னுஞ்

---

1. வாலி சுக்கிரீவன் அநுமன் முதலிய குரங்குச் சாதிகள் ஆறறிவுடையனவாக இராமாயணத்துட் கூறப்படலின் இவ்வாறு கூறினர்போலும்.

2. இதன்முன் ஒரு சூத்திரம் இளம்பூரணத்திலுள்ளது.

3. மக்கடாமே ஆறறிவுயிர் என்று பிரித்துக் கூறினமை யானே, அது மக்களுள்ளும் தக்கது இன்னது தகாதது இன்னது என்று பகுத்துணரும் ஆண்பாலாரையே குறிக்கும் என்பது இவர் கருத்து. பிறரும் இவ்வாறு கருதுவாருமுளர். யானைக்கும் ஆறறிவுண்டென்பது சிலர் கருத்து. அதுபற்றி மக்களுக்கடுக்க வைத்தாரெனினு மமையும். இங்ஙனமன்றி உசஞ் சூத்திரத்தில் ஓரறிவுயிர் அதிகாரப்பட்டமையின் அதுமுதலாக ஓரறிவுயிர் முதலியவற்றை விளக்கி அதன்மேல் மீளவும் தலையில் வைத்த முறைப்படி ஆண்பாற்பெயர் எடுத்துக்கொண்டார் என்றல் பொருத்தமாம். இளம்பூரணருரை நோக்குக.



சாதிப் பெயரினைக் [1] களிறென்னும் பெயர்வந்து [2] குறிப்பித்தால்.

" கடுங்களிற் றொருத்தல்."

(கலி. உ)

என்றும் ஆகுமென்பது.

[3] " இரலைமா னேறு."

என்பதும் அதனாற் கொள்க.

பன்றிக்கும் அவ்வாறு வருவன உளவேற் கொள்க.

[4] " கேழற் பன்றி."

(புறம். கருஉ)

என்பதனைக் களிற்றுப்பன்றியென்றுஞ் சொல்லுப. (௬௪)

[ஒருத்தல் என்னும் பெயர்க்குரியன இவை எனல்]

௫௬௦. புல்வாய் புலியுழை மரையே கவரி
சொல்லிய கராமோ டொருத்த

லொன்றும். (௬௫)

௫௬௧. வார்கோட் டியானையும் பன்றியு மன்ன. (௬௬)

௫௬௨. ஏற்புடைத் தென்ப வெருமைக் கண்ணும்.

இவை, உரையிடைபு நோக்கி உடனெழுதப்பட்டன.

இ—ள்: இவை ஒன்பது பெயரும் ஒருத்தலென்னும் பெய ருக்கு ஒன்றும் என்றவாறு.

இவ்ற்றைப் பெரும்பான்மை

சிறுபான்மைபற்றி மூன்று

சூத்திரத்தான் ஓதினானென்பது. உதாரணம்:

" காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்."

(அகம். சுஙு). என, யானை

ஒருத்தலென்றாயிற்று. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

(கூஎ)

---

1. களிறு—யானையினுணையுணர்த்தலன்றி யுணர்த்தும் பெயராயும் நிற்கும் என்றபடி.

யானைச்சாதியை

2. குறிப்பித்தால் என்பது சிறப்பித்தால் என்றும் பாட மூள்ளது. அது பொருத்தமில்லை. களிற்றொருத்தல் என்பதில் ஒருத்தல் என்பது ஆணையுணர்த்தக் களிறு யானையை உணர்த்தி

வநதமை காணக எனறபடி.

3. இரலை என்பது ஆணை உணர்த்திற்று.

உணர்த்தாது மான்சாதியை

4. கேழற்பன்றி—பன்றியுளொருசாதி. எய்ப்பன்றியினீக்குதற்கு கேழற்பன்றி எனப்பட்டமையிற் பண்புத்தொகை என்பர் மயிலைநாதர்.



[ஏறென்னும் பெயர்க்குரியன இவை எனல்]

௫௯௩. பன்றி புல்வா யுழையே கவரி
யென்றிவை நான்கு மேறெனற் குரிய. (௬அ)

௫௯௪. எருமையு மரையும் [1] பெற்றமு மன்ன. (௬௯)

௫௯௫. கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே.

இம்மூன்று சூத்திரத்தான் ஓதிய எட்டுச் சாதியின் ஆண் பாலும் ஏறெனப்படும் என்றவாறு.

"காற்றுச்சுவ டொற்றுக் கடிபுனங் கவரு
மேற்றிளம் பன்றியி னிருளை வெரூஉம்."

எனவும்,

"வெருளேறு பயிரு மாங்கண்."

(அகம். ௩௨௧) எனவும்,

"பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்
திரிமருப் பேறொடு [2] தேரதேர்க் கோட."
(கலி. கரு) எனவும்,
"ஏற்றிளங் கவரி யெரியென வெருவப்
பூத்த விலவத்துப் பொங்க ரேறி."
எனவும்,

"ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டு."
(கலி. கoரு) எனவும்,
"வரிமரற் பாவை மரையேறு கறிக்கும்."
எனவும்,

"புலம்பயி ரருந்த வண்ணனல் லேறு."
(குறுந். ருசச) எனவும்,
"சுறவே றெழுதிய மோதிரந் தொட்டாள்."
(கலி. அச) எனவும் வரும். பிறவும் அன்ன.

(சo)

[போத்தென்னும் பெயர்க்குரியன இவை எனல்] ருகூகூ. பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே. (சக) ருகூஎ. நீர்வாழ் சாதியு
[3] ளறுபிறப் புரிய. (சஉ)

---

1. பெற்றம்—ஆ.

2. தேரல்தேர்—பேய்த்தேர் (கானற்சலம்).
3. "அது பெறற்குரிய" என்பது இளம்பூரணர் கொண்ட பாடம்.



ருகூஅ. மயிலு [1] மெழாலும் பயிலத் தோன்றும்.

இ—ள்: போத்தென்னும் பெயர் இப்பதின்மூன்று சாதியின் ஆண்பாற்குமுரியது என்றவாறு.

'மற்றிவையெல்லாம்' என்றதனுல், பன்றியும் ஓந்தியும் முதலாயினவுங் கொள்ளப்படும். நீர்வாழ் சாதியுள் அறுபிறப் பென்பன—சுறுவும் முதலேயும் இடங்கருங் கராமும் வராலும் வாளேயுமென இவை.

'பயிலத் தோன்றும்' என்றதனுனே,

நாரை முதலியன
வுங் கொள்க. மற்றிவை பயிலத்
தோன்றுமெனிற் சூத்திரம்
வேறுசெய்ததென்னை? முதற்
சூத்திரத்துள் எண்ணுக
பிறவெனின்,—இவை பறவையுட் பயிலத்
தோன்றுமாகலின்
வேறோதினனென்க.

2 "எறிபோத்து." 3 "உழுபோத்து." "எருமைப்போத்து."
எனவும்,

"புலிப்போத் தன்ன புல்லணற் காளை." (பெரும்பாண். கஅ)

எனவும்,

"மரைப்போத்து."

எனவும்,

4 "கவைத்தலை முதுபோத்து காலி னெற்றி
..........................................................................
தெறித்துநடை மரபிற்றன் மறிக்குநிழ லாகி."
(குறுந். உகஅ)

எனவும வரும.

'எல்லாம்' என்றதனால், 'பன்றிப்போத்து'

எனவும் வரும்.

"முதலைப் போத்து முழுமீ னாரும்."

(ஐங்குறு. ரு)

எனவும,

"பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து."

(அகம். ருசு)

எனவும,

---

1. எழாஅல் — வல் லூறு. (குறுந். கருக).

"எழாலுற வீழ்ந்தென"

2. எறிபோத்து—குத்தும்போத்து=ஆனேறு.

3. உழுபோத்து—ஆனேறு.

எருமைப்போத்தையு முணர்த் தும.

4. இப்பாடம் டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பில் வேறாகக் காணப்படுகிறது.



"வாளை வெண்போத் துணீஇய."

(அகம். உஎசு) எனவும், நீர்வாழ் சாதியுட் சில வரும்.

" மயிற்போத் தூர்ந்த வயிற்படை நெடுவேள்."

எனவும்,

[1] " போத்தொடு வழங்கா மயிலு மெழாலும்."

எனவும் வந்தவாறு.

'பயில' என்றதனுல்,

" நாரை நிரைபோத் தயிரை யாரும்."

(குறுந். கசுசு)

எனவும், ஒழிந்தனவும் இவ்வாறே கண்டுகொள்க. மற்று முதலையும் இடங்கரும் கராமும் தம்மின் வேறெனப்படுமோவெனின்,—

" கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
யிடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி."

என வேறெனக் கூறப்பட்டனவென்பது.

(புறம். கூஎ)

இனி, [2] செம்போத்தென்பதும் ஈண்டுக் கொள்ளாரோவெனின்,—அது பெண்பாற்கும் பெயராகலின் ஒருபெயரே; பண்புகொள் பெயரன்றென்பதுணர்க. (சகூ)

௫௯௯. இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய.
(௬௪)
௬௦௦.

௬௦௧.
கலையென் காட்சி யுழைக்கு முரித்தே.
நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்.
(௬௫)

இவை மூன்று சூத்திரமும் எண்ணிய மூன்று சாதிக்கும் இரலையுங் கலையுமென்னும் ஆண்பாற்பெயர் இன்னவாறுரியவென் கின்றன.

இ—ள்: இரலையும் கலையுமென்பன புல்வாய்க்குரிய; அவற் றுட் கலையென்பது உழைக்குரித்து; அக்கலையென்பது, முசு

1. போத்தொடு வழங்கா என்ற செய்யுள் எதிலுள்ள தென்பது தெரியவில்லை. வழங்கா என்பதனல் 'மயிலும் எழாலும் பயிலத் தோன்றும்' என்னுஞ் சூத்திரத்தோடு மாறுபடுவது ஆராயத்தக்கது.

2. செம்போத்து—சாதிப்பெயர். அது காலத்து வழங்கும்.

செம்பகம் என இக்

விற்கு வருங்கால் உழைக்குப்போலச்[1] சிறுவரவிற்றன்றி வரும் என்றவாறு.

"புல்வா யிரலை நெற்றி யன்ன." (புறம். ௩௭௪)

எனவும்,

"கவைத்தலை முதுகலை காலி னொற்றி." (குறுந். ௨௧௩)

எனவும்,

"கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை." (அகம். ௯௭)

எனவும்,

"மைபட் டன்ன மாமுக முசுக்கலை." (குறுந். ௧௨௧)

எனவும் வரும்.

முசுவிற்கு நிலைபெற்றதெனவே,
அத்துணை நிலைபேறின்
றிக் குரங்கிற்கு வருவனவுங் கொள்க.
அது,

"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென."
(குறுந். சுகூ)

என வருமாற்றான் அறிக.
(சகூ)

[மோத்தை முதலிய நான்குபெயரும்
யாட்டிற்குரிய எனல்]

கூ0உ. மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
யாத்த வென்ப யாட்டின் கண்ணே.

இ—ள்: இக்கூறப்பட்ட நான்கு
பெயரும் யாட்டிற்குரிய
என்றவாறு.

அவை,
"வெள்யாட்டு மோத்தை."
எனவும்,
"தகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த."

(அகம். கoக)

எனவும்,

" உதள,
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்."
(பெரும்பாண். கருக—உ)

எனவும் வரும்.

1.
சிறுவரவிற்றன்றி—பெருவரவிற்ருய்.



அப்பரென்பது இக்காலத்து வீழ்ந்ததுபோலும். 'யாத்த' என்றதனல், [1]கடாயென்பதும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க; அது,

" நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக்
கடாஅய்."
(அகம். கருசு)

என வரும்.

இனிக் குரங்கினை அப்பெயரொன்றலுங் கொள்க. (சஎ)

[சேவல் என்னும் பெயர்க்குரியன இவை எனல்]

சூ0ரு. சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு
மாயிருந் தூவி மயிலலங் கடையே.

இ—ள்: பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாஞ் சேவற் பெயர் உரித்து; அவற்றுண் மயிற்காயின் அஃதாகாது என்றவாறு.

"காமர் சேவ லேமஞ் செப்ப."
(அகம். க0ரு) எனவும்,

"வளைக்கட் சேவல் வாளாது மடியின்."
(அகம். கஉஉ) எனவும்,

"தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்."
(குறுந். க0எ) எனவும்,

"கானங் கோழிக் கவர்குரற் சேவல்."
(குறுந். ௨௪௨; புறம். ௩௯௫; மலைபடு. ௫௧௦)

எனவும்,

"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்."

(குறுந். ௮௫) எனவும் வரும். பிறவும் அன்ன.

'மாயிருந் தூவி மயில்' என்றதனான் அவை தோகையுடையவாகிப் பெண்பால்போலுஞ் சாயலவாகலான் ஆண்பாற்

1. கடா என்பது, சி. வை. தாமோதரம்பிள்ளை, பவானந் தம்பிள்ளை பதிப்புக்களிற் காணப்பட்ட பாடம், வழக்கிற் கிடாஅய் என வழங்குகின்றது. ஆயின் இது கடா எனவும் வழங்குகின்றது.



தன்மை இலவென்பது கொள்க; எனவே, [1] செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் [2] நேரவும்படுமென்பது. (௪௮)

[ஏற்றை என்னும் பெயர்க்குரியன இவை எனல்]

௬௦௪.

ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா
மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப.

இ—ள்: ஏற்றையென்னுஞ் சொல் ஆண்பாற்கெல்லாம் உரித்து என்றவாறு.

ஆற்றலொடு கூடிய

அவை,

"குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை."
எனவும்,
(நற். ௩௬; குறுந். ௧௪௧)

"செந்நா யேற்றை கம்மென வீர்ப்ப."

(அகம். ௧௧௧)

எனவும,

"கொடுந்தாண் முதலைக் கோள்வ

லேற்றை." (குறு. ௩௨௪)

எனவும் வரும்.

இக்கருத்தினானே,

" பிணர்மோட்டு நந்தின் பேழ்வா

யேற்றை." (அகம். உசசு)

எனவும,

" புன்றாள் வெள்ளெளி மோவா யேற்றை."

(அகம். கருரு)

எனவும் கூறினர்.

அவையும் அப்பெயரானே வழங்குதல் ஆற்றலுடையவாகத் தோன்றும். 'எல்லாம்' என்றதனால், சிறுபான்மை ஆற்றல் இல்லாதனவுங் கொள்க; அது,

" இடுகாட்டு ளேற்றைப் பனை."

(நாலடி. கூசு)

என்பதுபோன்று வருவன; பிறவும் அன்ன.

---

(சகூ)

1. "எழுந்து முன்னுறு மஞ்ஞையஞ் சேவன்மேலேறி" என்பர் கந்தபுராணகாரர். (தெய்வயானையம்மை திருமணப்படலம் ககஉ)

2. நேர்தல்—பொருந்தல்.

[ஆண் பெண் என்னும் பெயர்கள்
இவ்விவற்றிற்குரியவெனல்]

௬௦௫. ஆண்பா லெல்லா மாணெனற் குரிய
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய
காண்ப வவையவை யப்பா லான.

இது, மேற்கூறிய ஆண்பாற் பெயர்க்கும், இனிவரும் பெண்பாற் பெயர்க்கும் புறனடை.

இ—ள் : ஆணென்னுஞ் சொல் எல்லாச் சாதியுள் ஆண்பாற்கும் உரித்து; பெண்ணென்னுஞ் சொல் எல்லாச் சாதியுட் பெண்பாற்கும் உரித்து; வழக்கினுள் அவ்வாறு காணப்படும் அவை என்றவாறு.

அவை ஆண்யானை, பெண்யானை; ஆண்குரங்கு, பெண் குரங்கு; ஆண்குருவி, பெண்குருவி என்றாற்போல்வன. இவை காணப்படும் எனவே, இத்துணை விளங்கவாராது சிறுவரவினான் வருவனவுமுள இருபாலு மல்லாதன வென்பது. [1] ஆணலி பெண்ணலி எனவும், ஆண்பனை பெண்பனை எனவும் வரும்; பிறவும் அன்ன. (௫௦)

[மேற்கூறிய பெண்பாற் பெயர்களுள்
பிடியென்னும் பெயர் இதற்குரியது எனல்]

௬௦௬. பிடியென் பெண்பெயர் யானை மேற்றே.

இது, முறையானே மூன்றும் எண்ணு முறைமைக்கணின்ற

பெண்மைப்பெயர் கூறிய தொடங்கி ஆண்பாலிற் களிறு முற்கூறியவாறுபோலப் பிடியினை முற்கூறியது.

இ—ள் : பிடியென்னும் பெயர் யானைக்கண்ணது என்றவாறு.

"பிடிபடி முருக்கிய பெருமரப் பூசல்." (அகம். அ)

எனவரும். 'பெயர்' என்றதென்னையெனின்,—அவை தொடங்குகின்றதென்பது அறிவித்தற்கென்பது. (ருக)

1. ஆணலி—ஆண்மை திரிந்து அலியானது. பெண்ணலி—பெண்மை திரிந்து அலியானது. ஆணலி, பெண்ணலி என்பன இக்காலத்தும் உலகவழக்கிலுள்ளது. ஆண்பனை—காயாப்பனை: பெண்பனை—காய்க்கும்பனை.



[பெட்டை என்னும் பெயர்க்குரியன இவை எனல்]

சூ0எ. ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும்
[1]பெயர்க்கொடைக் குரிய.

இ—ள் : ஒட்டகமுங் குதிரையும் கழுதையும் மரையாவும்

பெட்டையென்னும் பெயர்பெறும்
என்றவாறு.

ஒட்டகப்பெட்டை குதிரைப்பெட்டை
கழுதைப்பெட்டை
மரையான்பெட்டை என வரும்.
(ருஉ)

[அப்பெயரைப் புள்ளும் பெறுமெனல்]

கூ0அ. புள்ளு முரிய வப்பெயர்க் கென்ப.

இ—ள்: எல்லாப் புள்ளும்
பெட்டையென்னும் பெயரான்
வழங்குதற்குரிய என்றவாறு.

அவை, கோழிப்பெட்டை
மயிற்பெட்டை என வரும். பிற
வும் அன்ன.
(ருங)

[பேடையும் பெடையும்
புள்ளுக்குரிய எனல்]

கூ0கூ. பேடையும் பெடையு நாடி
னென்றும்.

இ—ள்: பேடையும் பெடையு
மென்னும் இரண்டும் முன்
னர் நின்ற புள்ளிற்கு [2] ஒன்றும்
என்றவாறு.

அவை, குயிற்பேடை, அன்னப்பெடை
என வரும். 'நாடின்'
என்றதனாற் பெட்டையென்பது
வழக்கினுட் பயிலாவென்
பது.
(௫௪)

[அளகென்னும் பெயர்
இவைக்குரிய எனல்]

௬௬௦. கோழி கூகை யாயிரண் டல்லவை
௬௬௧.
சூழுங் காலை யளகென லமையா.
அப்பெயர்க் கிழமை மயிற்கு முரித்தே.

(௫௫)

இ—ள்: கோழியும் கூகையும் மயிலு

மென்பனவற்றுக்கு

அளகென்னும் பெயர் உரியது என்றவாறு.

1. பெயர்க்கொடைக்கு — பெயரைத் தமக்குக் கொடுத்

தற்கு=எனவே பெயரைப் பெறுதற்கு என்றபடி.

2. ஒன்றும்—பொருந்தும் என்றபடி.



"மனைவாழ் அளகின் வாட்டொடு பெறுகுவிர்."
(பெரும்பாண். உருசு)

என்பது கோழி; பிறவும் அன்ன.

(ருசு)

[பிணையென்னும் பெயர் இவைக்குரியது எனல்] சுகஉ. புல்வாய் நவ்வி யுழையே கவரி

சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே.

இ—ள்: பிணையென்னும்

பெண்பெயர்க்குரியன இவ்வ நான் கும் என்றவாறு.

"அலங்கல் வான்கழை யுதிர்நென் ஞெக்கிக்
கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண்."

(அகம். கஉ௯).

எனவும்,

"சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை."

(புறம். உ) எனவும்,

"சிறுதலை நவ்விப் பிணையிற் றீர்ந்த
நெறிகோட் டிரலை மான்.

(குறுந். க௮௩) எனவும்,

"கவரி மான்பிணை நரந்தங் கனவும்."

(பதிற். கக) எனவும் வரும்.

"சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே."

என்பது, பிணையென்னுஞ் சொற்பொருளினை உண்மை நோக்கிற் பிரியாது [1] பிணையும் பிற சாதிக்குஞ் [2] சேவற்குஞ் செல்லுமாயினும், மரபுநோக்கப் பிணையென்றற்குச் சிறப்புடையன இவையென்றவாறு. (௬எ)

[பிணவென்னும் பெயர் இவைக்குரியதெனல்]

௬௧௬. பன்றி புல்வாய் நாயென மூன்று
மொன்றிய வென்ப பிணவென்
பெயர்க்கொடை.

1. பிணையும் என்பது பிணைகின்ற என்னும் பொருள்பட நின்றது. பிணைதல்—சேர்தல். அஃதாவது, ஆணும் பெண்ணுமாகப் பிரியாது கூடித்திரிதல்.

2. சேவல் என்பது ஈண்டு வருதல் பொருத்தமாய்க் காணவில்லை. ஆண்பறவை பெண்பறவையோடு கூடித்திரிதலின் அவ்வாறு கூறினரெனினுமாம். ௬௫௬



இ—ள்: இவை மூன்றுசாதியும்
குரியன என்றவாறு.

பிணவென்னும் பெயர்க்

" நெடுந்தாட் செந்தினைக் கொழுந்த கேழல்
குறுந்தாட் பிணவொடு குறுகல்
செல்லாது."

எனவும்,

" குறியிறைக் குரம்பைக் குறத்தி யோம்பிய
மடநடைப் பிணவொடு கவர்கோட்
டிரலை."

எனவும்,

" நாய்ப்பிண வொடுங்கிய இழநரி
யேற்றை."

எனவும்,

" மென்புனிற் றம்பிணவு பசித்தெனப்
பைங்கட்
செந்நா யேற்றை கேழ ருக்க."

(அகம். உக)

எனவும் வரும்.

'ஒன்றிய' என்றதனன்,

" ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய."
(அகம். எஉ)

எனப் புலிக்குங் கொள்க; பிறவும் அன்ன.

(ருஅ)

[பிணவும் என்னும் பெயரும்

அவற்றிற்குரியதெனல்] ௬௧௪. பிணவ லெனினு

மவற்றின் மேற்றே.

இ—ள்: பிணவலென்பதூஉம்

அம்மூன்றற்கும் உரித்து

என்றவாறு.

"இரியற் பிணவ றீண்டலின்"

(அகம். ௨௧)

என்பது, பன்றி.

"நான்முலைப் பிணவல் சொலியக்கா னொழிந்து." (அகம். ௨௪௮)

என்பதும் அது; ஒழிந்தனவும் அன்ன.

(ருகூ)

[ஆ என்னும் பெயர்

இவற்றிற்குரியதெனல்]

௬௧௫. பெற்றமு மெருமையு மரையு மாவே.

இது, மேல் அந்தஞ்சான்ற (ருரு அ) என்னும் இலேசினனே ஆவென்பது தழீஇக்கொண்டமையின் அஃது [1] இன்னுழியாகாது என்கின்றது.

1. இன்னுழியல்லதாகாதென்றிருத்தல்வேண்டும். அன்றேல் ஆகும் என்றிருத்தல்வேண்டும்.



இ—ள்: ஆவென்னும் பெயர், பெற்றமும் மரையும் எருமையும் பெறும் என்றவாறு.

அவை,

"புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி." (அகம். ருசு)

எனவும்,

"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்." (அகம். சசு; குறுந். உசுக)

எனவும்,

"மரையா மரல்கவர மாரி வறப்ப." (கலி. சு)

எனவும் வரும். (சுo)

[பெண் என்பதும் பிணா என்பதும் மக்கட்குரிய எனல்].

சுசுக. பெண்ணும் பிணவு மக்கட் குரிய.

இ—ள்: பெண்ணும் பிணவும் உயர்திணைப் பெண்மைக் குரிய என்றவாறு.

பெண்ணென்பது,

"பெண்பா லெல்லாம் பெண்ணென் குரிய."

(தொல். மர. ௫௦)

என்றமையின், ஈண்டுக் கூறுதல் மிகையாம் பிறவெனின்,— அற்றன்று; அச்சூத்திரம் அஃறிணையதிகாரமாகலின், ஈண்டு விதந்தோதினனென்பது. ஒன்றென முடித்தல் (கூகூ) என்பதனான், உயர்திணை ஆணென்பதும் ஈண்டே கொள்ளப்படும்.

"பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி" (அகம். கக௨)

எனவும்,

"ஈன்பிண வொழியப் போகி." (பெரும்பாண். கூ௦)

எனவும் வரும்.

"ஆண்கட னுடைமையிற் பாண்கட னிறீஇய" (புறம். ௨௦௧)

என ஆணென்பது உயர்திணைக்கண் வந்தது. பிறவும் அன்ன. [1] பிணாவென்னும் ஆகாரவிறுதி வன்கணமன்மையிற் குறியதன்

1. பிணவும் என்பது பிண உம் எனப் பிரிந்து நிற்குங்கால் உம் என்னும் வருமொழி முதலெழுத்து உயிராகும். அதனால் பிணவு என ஆகாரம் அகரமாய் உகரம் பெறுதாயிற்று என்றார். "குறியத னிறுதிச் சினைகெட வுகரம்—அறிய வருதல் செய்யுளு ளுரித்தே." என்னும் உயிர்மயங்கியல் ௯௨-ம் சூத்திரம் பிணவு என வருதற்கு விதி. பிணவும் என்பது உடம்படுமெய் பெற்று வந்தது.

83

இறுதிச் சினைகெட்டு உகரம்பெறாது நின்றது. 'மக்கட்குரிய' எனவே, உரியவன்றித்

"நறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தென." (அகம். கசஎ) எனப் புலி முதலியவற்றிற்குங் கொள்க. (சுகூ)

[நாகு என்னும் பெயர் இவைக்குரியதெனல்] சுகஎ எருமையு மரையும் பெற்றமு நாகே. (சுஉ.)

சுகஅ. நீர்வாழ் சாதியு ளந்து நாகே.

இ—ள்: இந்நான்கற்கும் நாகெனும் பெயர் உரித்து என்றவாறு.

"எருமை நல்லான் கருநாகு பெறூஉம்" (பெரும்பாண். கசுரு)

எனவும்,

"உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
யூர்வயிற் பெயரும் பொழுதின்"

(அகம். சுஃ). எனவும்,

"நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்"

(புறம். உகூகூ)
எனவும் வரும்.
(கூரு)

[மூடும் கடமையும் யாட்டிற்குரிய எனல்]

கூகக. மூடுங் கடமையும் யாடல பெறு.

இ—ள்: இவ்விரு பெயரும் யாட்டிற்கேயுரிய பெண்மைப் பெயர் என்றவாறு.

இவை இப்பொழுது வழக்கினுள் அரிய. (கூச)

[பாட்டி என்னும் பெயர் இவற்றிற்குரியதெனல்]

கூ௨௦. பாட்டி என்பது பன்றியு நாயும்.
(கூரு) கூ௨க. நரியு மற்றே நாடினர் கொளினே.

இ—ள்: பாட்டியென்று சொல்லப்படுவன பன்றியும் நாயும் நரியும் என்றவாறு. [1] பிறவும் அன்ன. (கூகூ)

---

1. பிறவுமன்ன என்பது இவையுமன்ன என்றிருத்தல்வேண்டும். இவையும் அன்னவென்றது இவையும் வழக்கினுள் அரிய என்றபடி.



[மந்தி என்னும் பெயர் இவற்றிற்குரியதெனல்] ௬௨௨. குரங்கு முசுவு முகமு மந்தி.

இ—ள்: இம் மூன்றுசாதிப் பெண்பாலும் மந்தியென்னும் பெயர்பெறும் என்றவாறு.

"கைம்மை யுய்யாக் காமர் மந்தி."
(குறுந். ௬௬) எனவும்,

[1] "கருமுக மந்தி செம்பி னேற்றை."
எனவும் வரும்.

ஊகத்துக்கும் இஃதொக்கும்.

(௬எ)

[மரீஇவந்த மரபுப்பெயர்கள் இவை எனல்]

௯௨௩. குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலு
மரம்பயில் கூகையைக் கோட்டா
னென்றலுஞ்
செவ்வாய்க் கிளியைத் தத்தை
யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை
யென்றலும்
குதிரையு ளாணினைச் சேவ லென்றலு
மிருணிறப் பன்றியை யேன மென்றலு
மெருமையு ளாணினைக் கண்டி யென்றலு
முடிய வந்த வவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே.

*இது, மரீஇவந்து முடிந்த மரபுணர்த்துதல் நுதலிற்று.*

*இ—ள்: ஆண்குரங்கினைக் கடுவனென்றலும், மரப்பொதும் பினுள் வாழுங் கூகையைக் கோட்டானென்றலும், செவ்வாய்க் கிளியைத் தத்தையென்றலும், வெருகினைப் பூசையென்றலும், ஆண்குதிரையைச் சேவலென்றலும், இருணிறப்பன்றியை ஏன*

மென்றலும், எருமையேற்றினைக் கண்டியென்றலும், அவ்வாறு முடிந்த வழக்குண்மையிற் கடியப்படா கடப்பாடு அறிந்தோர்க்கு என்றவாறு.

1. கருமுகமந்தி, செம்பினேற்றை என்பன இடக்கரடக்கலுக்குத் தொல். சொல். சேனவரையருரை முதலியவற்றில் உதாரணமாக வருகின்றன. அதுநோக்கிக் 'கருமுகமந்தி' என்பதனோடு செம்பினேற்றை என்பதை யாரும் இடைச் செருகினர்களோ அல்லது இரண்டுஞ்சேர்ந்து ஒருசெய்யுளடியோ என்பது ஆராயத்தக்கது.



"கடுவனு மறியுமக் கொடியோ னவே."

(குறுந். உ௬)

ஆண்குரங்கு. இதனைக் கடியலாகாது எனப்பட்ட இழுக்கென்னையெனின்,— மக்கட்கும் [1] வெருகிற்கும் அக்காலத்துப் பயின்றனபோலுமாதலின். கூகையைக் கோட்டானென்றலும் வழக்காகலான் அமையும்; 'மரம்பயில் கூகை' யென்ற தென்னையெனின்,—மரக்கோடு விடாமையிற் கோட்டானென்னும் பெயர் பெற்றதென்றற்கு. தத்தையென்பது பெருங்கிளியாதலிற் சிறுகிளிக்கும் அப்பெயர் கொடுத்தலமையுமென்றவாறு. 'செவ்வாய்க் கிளி' என்பதனை, சிறுகிளிமேற் கொள்க.

'வெவ்வாய் வெருகு' என்றதனுல், 'படப்பை வேலியும் புதலும் பற்றி, [2] விடக்கிற்கு வேற்றுயிர் கொள்ளும் வெருகினை, இல்லுறைபூசை' யின் பெயர்கொடுத்துச் சொல்லலும்

(புறம். ககஎ—௩உ௯) அமையுமென்றவாறு.

[3] குதிரையைச் சேவலென்றல் இக்காலத்தரிதாயிற்று. அதுவுஞ் சிறகொடு சிவணுதாயினும் அதனைக் கடுவிசைபற்றிப் பறப்பதுபோலச் சொல்லுதல் அமையுமென்பது கருத்து.

எருமையேற்றினையுங் கண்டியென்பபோலும்; அது காணலாயிற்றில்லை; அதனை, இலக்கணவகையானுடைய பெயரென்றலுமாம்; இது பொழுதின்றென்பது.

'கடனறிந்தோர்' என்றதனுன், வழக்கினுஞ் செய்புளினும் அவை வந்தமையிற் கடப்பாடறிவோர்க்குக் கடியலாகாதென்றவாறு. இன்னும் [4] இப்பரிகாரத்தாலே கோழியை வாரணமென்றலும், வெருகினை விடையென்றலும் போல்வன பலவுங் கொள்க. அவை,

1. இக்காலத்தும் ஆண்பூனைக்குக் கடுவன் என்ற வழக்குண்டு.

2. விடக்கு—இறைச்சி.

3. குதிரையைச் சேவல் என்றது பறவைச் சேவல்போல விரைந்து செல்வதுபற்றி. "புள்ளியற் கலிமாவுடைமையான" என்பது நோக்குக. "புள்ளியன்மான்றேர்" (சிலப். கானல்வரி. ௩௦) என்பதுமது.

4. பரிகாரம்—பாதுகாப்பு. இச்சொல் சேனாவரையராலும் ஆளப்படும்.



"கான வாரண மீனுங்
காடாகி விளியு நாடுடை யோரே."

(புறம். ௫௨)

எனவும்,

"வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ."

(முருகு. ௨௧௯) எனவும்,

" வெருக்குவிடை

யன்ன வெருவேணுக்குக் கயந்தலை."
(புறம். கூஉச)

எனவும் வரும்.

(சுஅ)

[இவையும் மரீஇவந்த மரபுப்பெயர்
எனல்]

கூஉச. பெண்ணு மாணும் பிள்ளையு
மவையே.

இதுவுமது. பெண் ஆணென்பன இருதிணைப் பெண்மைக்கும் ஆண்மைக்கும் பொதுவென்பன முற்கூறினன்; மேல் ஒன்றற்குரியபெயர் மரீஇவந்து பிறிதொன்றற்காயவழியுங் கடியலாகாதென நின்ற அதிகாரத்தான் இவையும் அவ்வாறே திரியினுங் கடியலாகாதென்றவாறு.

இ—ள்: [1] பெண்ணும் ஆணும் பிள்ளையுமென வாளாது சொல்லியவழி உயர்திணைக்கேற்றன மரீஇவந்த மரபு என்றவாறு.

மக, குழவியென்பனவோவெனின், — அவை அத்துணைப் பயின்றில உயர்திணைக்கென்பது; எடுத்தோதிய மூன்றும் [2] ஆயின. வாளாதே 'பெண் வந்தது' என்றவழி, அஃறிணைப் பொருளென்பது உணரலாகாது; 'பெண்குரங்கு வந்தது' என விதந்தே கூறல்வேண்டுமென்பது. 'பெண் பிறந்தது', 'ஆண் பிறந்தது', 'பிள்ளை பிறந்தது' என அடையடாது சொல்லியவழி உயர்திணைக்கேயாம். அஃறிணைக்காயின் அற்றன்றென்பது. (சுசு)

[அந்தணர்க்குரியன இவை எனல்]

சுஉரு. நூலே கரக முக்கோல் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய.

1. பெண்பிறந்தது ஆண்பிறந்தது பிள்ளைபிறந்தது என அடையடாது சொல்லின் உயர்திணைக்கேயாம். அடையடுப் பின் அஃறிணைக்காம் என்றபடி. எனவே அஃறிணைக்குத் திரிந்து வந்தது என்பது கருத்து.

2. ஆயின் என்று கொண்டு சிலசொற் றவறியதாகக் கொள்வது நலம்.

இஃது, உயர்திணை நான்குசாதியும்பற்றிய மரபு உணர்த்து வான், முறையானே அந்தணர்க்குரிய மரபுபட்டுவருங் கலப்பை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : முந்நூலுங் [1] குண்டிகையும் முக்கோலும் [2] யாமை.

மணையும் போல்வன அந்தணர்க்கு உரிய என்றவாறு.

'ஆயுங்காலை' என்றதனால், குடையும் செருப்பும் முதலா யினவும் ஒப்பன அறிந்துகொள்க.

உதாரணம் :

" எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்."

(கலி. ௯)

எனவும்,

"தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே."

(குறுந். ௧௫௬)

எனவும் வரும்.

இன்னும், 'ஆயுங்காலை' என்றதனான், 3 ஒருகோலுடை

யார் இருவருளர், அவர் துறவறத்து நின்றாராகலின் உலகியலின் ஆராயப்படாரென்பது. 4 முக்கோலுடையார் இருவருட்

பிச்சைகொள்வானும் பிறுண்டிருந்து

தனதுண்பானும் உல கியலின் நீங்காமையின்

அவரையே வரைந்தோதினனென்பது.

மற்று, அரசர்க்கும் வணிகர்க்கும் உரிய நூலினை ஈண்டு

5 வரைந்தோதினதென்னையெனின்,—ஒருகோலுடையான் 6 நூல்

களைவானாகலின் அவனுஞ் சிறுபான்மை அந்தணனெனப்படுமென்பது கோடற்கும் கரகமும் மணையும் உடையனென்றற்கு

மென்பது. நூலினை முற்கூறினன், 7

பிறப்பு முறையானுஞ்

1. குண்டிகை—நீர்மொண்டுவைத்திருக்கும் பாத்திரம்.

2. யாமைமணை—யாமை வடிவாகச் செய்த ஆசனப்பலகை.

3. ஒருகோலுடையாரிருவர் என்றது : சன் என்னுஞ் சந்நியாசிகளிருவரையும். ஹம்சன், பரமஹம்

4. முக்கோலுடையாரிருவரென்றது : பகூதகன், குடீசகன் என்னுஞ் சந்நியாசிகளிருவரையும். இவர்களியல்பை அரும்பத வுரையுள் கூறுதும். ஆண்டுக் காண்க.

5. வரைந்து—நியமித்து.

6. நூல்கணவான்—பரமஹம்ச சந்நியாசி.

7. பிறப்புமுறை—துவிஜன் என்னும் பிறப்பைக் காட்டு

முறை.



[1] சிறப்புமுறையானுமென்பது. இனி, குடுமியுங் குசையும்போல் வன கூறிற்றிலன், அது [2] முன்னரும் பின்னரும் வருதலா னும், மன்னரும் வணிகரும் பெறுதலானுமென்பது. (எ௦)

[அரசர்க்குரியன இவை எனல்]

கூஉகூ. படையுங் கொடியுங் குடையு முரசு
நடைநவில் புரவியுங் களிறுந் தேருந்
தாரு முடியு நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய.

இது, முறையானே அரசர்க்குரியன கூறுகின்றது.

இ—ள்: [3] கொடிப்படையும் கொடியும் குடையும் முரசும் குதிரையும் யானையும் தேரும் தாரும் முடியும் பொருந்துவன பிறவும் அரசர்க்குரிய என்றவாறு.

'பிறவும்' என்றதனால், [4] கவரியும் அரியணையும் அரண் முதலாயினவுங் கொள்க. 'தெரிவுகொள் செங்கோ லரசர்' என்றதனானே, [5] செங்கோல் கொளப்பட்டது.

[6] 'தார்' எனவே, போர்ப்பூவும் தார்ப்பூவும் அடங்கின. 'படை' என்புழி, 'நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்' அடங்காதோவெனின்,—அடங்கும், அவை நோக்கிக் கூறினனல்லன்; [7] அவை பட்டஞ் சாத்தியவாதல் நோக்கிக் கூறப்பட்

1. சிறப்புமுறை — ஏனையவற்றிலும் நூல் சிறந்ததாகிய முறை. நூல் இட்டபின் கரகந் தாங்கல்பற்றிப் பிறப்புமுறை என்றார் எனினுமாம். (கூசஉ-ம் சூத்திர உரை நோக்குக).

2. முன்னர்—நூலிடுதற்குமுன். பின்—நூலிட்டபின். குடுமி முன்னும் குசை பின்னுமென்க.

3. கொடிப்படை—கொடி தாங்கும் படை=தார்ப்படை.

4. கவரி—சாமரை. அரியணை—சிங்காசனம். அரண்—மதில்: இக்காலத்துக் கோட்டை என்பர்.

5. செங்கோல்—உடம்பொடுபுணர்த்தலாற் கொள்ளப்பட்டது. உடம்படுபுணர்த்தல் என்பர் சங்கரநமச்சிவாயருரையுள் டாக்டர் சாமிநாதையரவர்கள்.

6. தார்—பூமாலை. போர்ப்பூ—வெட்சி, வஞ்சி போல்வன தார்ப்பூ—வேம்பு ஆர் போல்வன.

7. அவை—குதிரையும் யானையும். பட்டஞ்சூட்டல்பற்றியே பட்டத்துக் குதிரை பட்டத்து யானை என்பர்.



டன. அஃதேல், தேர் கூறியதென்னையெனின், — அதுவும் அவைபோல அரசர்க்கே உரியதென்றுளதென்றற்கும், அது பூண்ட குதிரையும் அவர்க்கே யுரியவென்றுளவென்றற்குங் கூறினானென்பது. இக்கருத்தினாற்போலும் 'நடைநவில் புரவி' எனச் சிறப்பித்து அதனை முற்கூறியதென்பது.

எல்லாவற்றினுஞ் சிறந்ததாதலான் [1] முடி பிற்கூறப்பட்டது. 'தெரிவுகொள் செங்கோலரசர்' என்பதனான், அரசரெல்லாந் தந்நாட்டு நன்றுந் தீதும் ஆராய்ந்து [2] அதற்குத்தக்க தண்டஞ்செய்தற்கு உரிமையும் [3] அதுவெனக் கொள்க. (எக)

[அந்தணர்க்குரியவற்றுட் சில
அரசர்க்குமுரியவாமெனல்]

கூஉஎ. அந்த ணாளர்க் குரியவு மரசர்க்
கொன்றிய வரூஉம் பொருளுமா
ருளவே.

இது, மேலதற்கோர் புறனடை.

இ—ள்: அந்தணாளர்க்கு உரியவென
மேல் ஓதப்பட்டன
வற்றுண் முந்நூலும் மணையும்போல்வன
அரசசாதிக்குரியவாகி
யும் வரும் என்றவாறு.

'பொருளுமாருள' என்றதனான்,
அந்தணாளர்க்குரியனவற்றுள் வேள்விக் [4] கலப்பை
யொன்றிவருதல் பெரும்பான்மை யென உணர்க;
ஈண்டு [5] அவற்றை விதந்தோதினன் ஒழிந்த
புலனெறி வழக்கினுட் பயிலாமையினென்பது.

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமு
மைவகை மரபி னரசர் பக்கமு
மிருமூன்று மரபி னேனோர் பக்கமும்."
(தொ. புற. உ௦)

1. எல்லாவற்றிலுஞ் சிறந்ததைப் பிற்கூறலும் வழக்கு. "சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்" என்பது பழைய சூத்திரம்.

2. அதற்குத்தக்க—அதற்குத்தக என்றிருப்பதே பொருத்தம். 'அதற்குத்தக வொறுத்தல்' என்பர் பரிமேலழகரும். அதற்கு—தீதிற்கு.

3. அது—செங்கோல்=முறை. செவ்விய கோல்போறலின் முறை செங்கோல் எனப்பட்டது. 'உரிமையும் அது' என்பது உரிமையுடையரென்றும் பாடமுள்ளது.

4. கலப்பை—உபகரணம்.

5. அவற்றை—வேள்விக் கலப்பையை.

பியல்] பொருளதிகாரம்

கூகூ௫ பற்றி வாகைப்பொருள் பிறத்தலின் அவற்றைப் புறத்திணை யியலுட் கூறினும், ஈண்டுத் தழீஇக் கொள்ளப்படும் மரபுவகையானென்பது; என்போலவெனின்,—

"அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு." (தொ.

எழு. ௩க) என நான்மரபினுள் ஓதிய மூவகைச் சுட்டினை இடைச்சொலோத்தினுள் ஓதானாயினன், அதுபோலவென்பது.

"கொன்று [1]களம் வேட்ட ஞான்றை."

(அகம். ௩௬) எனவும்,

"அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய."

(புறம். ௨௬) எனவும், அரசர்க்கு வேள்விகூறியவாறு; பிறவும் அன்ன, (எ௨)

[அந்தணர்க்குரித்தல்லாதன இவை எனல்]

௬௨அ. பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ மைப்பெயர்
நெடுந்தகை செம்ம லென்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுத லவர்க்குரித் தன்றே.

இஃது, ஐயம் அறுத்தது; அந்தணாளர்க்குரியன அரசர்க்குமுரியன உளவெனக் கேட்ட மாணாக்கன் 'அரசர்க்குரியனவும் அந்தணர்க்குரியகொல்' என்று ஐயுறுமற் காத்தமையின். இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதியெனினும் அமையும்; என்னை? ஈண்டு ஓதப்பட்டவை அரசர்க்குரியவென்பது கொள்ளப்பட வைத்தமையின்.

இ—ள்: பரிசில்—பரிசில் கடாநிலையும், பரிசில் விடையும் போல்வன;

பாடாண்டிணைத்துறைக் [2]
கிழமைப்பெயர்—பாடாண்

டிணைக்குரிய கைக்கிளைப் பொருள்பற்றியுங் கொடைத்தொழில் பற்றியும் பெறும்பெயர்; அவை, காளை இளையோன் என்பன போல்வன [அவையு]ம், நெடுந்தகை செம்மலென்பன முதலாயினவும், இவைபோல்வன பிறவும் புனைந்துரைவகையாற் சொல்லினல்லது சாதிவகையாற் கூறுதல் அந்தணர்க்குரித்தன்று என்றவாறு.

[3] பரிசில் கடாநிலையும் [4] பரிசில் விடையும்போல்வன கூறியும், கைக்கிளைப்பொருள் கூறியும்,

கொடைத்தொழில் கூறி

1. களம்வேட்டல்—களவேள்வி செய்தல்.
2. கிழமை—உரிமை.
3. பரிசில் கடாநிலை—பரிசில் வேண்டல்.
4. பரிசில் விடை—பரிசிலை கொடுத்து விடுத்தல்.





யும், அவற்றிற்கேற்ப எடுத்தோதிய பெயர்

கூறியும், அந்தண ரைத் [1] தன்மைவகையாற்
செய்யுள் செய்யப்பெறுமென்பது
கருத்து.

புனைந்துரை வகையான் அவையாமாறு :—

[2] "எண்ணுணப் பலவேட்டு
மண்ணுணப் புகழ் பரப்பியும்."

(புறம். கசுசு)

என வரும.

கொடுத்தற்றொழில்

வேள்விக்காலத்தல்லது வரையறுத்
தலிற் பொருந்தக் கூறுதல்
அவர்க்குரித்தன்றென்றனென்பது.

பாடாண்டிணைத் துறைப்பெயரென்னது, கிழமைப் பெய
ரென்றதென்னையெனின்,—அவை ஐந்திணைப் பெயராகி வருங்
காலும் அவர்க்குரியவல்லவென்றற்கு ;
எனவே, அரசர்க்காயின்
இவையெல்லாம் உரியவென்பவாயிற்று.

மற்றுப் பாடாண்டிணைக்குரியவல்லவென
மற்றைத்திணைக் கிழமைப்பெயர் உரியவாம்
பிறவெனின்,—அஃது,

" இடையிரு வகையோ ரல்லது நாடிற்

படைவகை பெறூஅர்.'' (தொ. மர. எசு) என மேற்கூறி விலக்குமென்பது. (எகூ)

[நான்கு வருணத்தாருக்கும் ஊர் முதலியவு முரியவெனல்]

கூஉகூ. ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்
[3] யாருஞ் [4] சார்த்தி யவையவை [5] பெறுமே.

இது, மேற்கூறிய அந்தணர்க்கும் அரசர்க்கும் உரியன வற்றோடு ஒழிந்த சாதியோர்க்கும் ஒப்பன உடன் கூறுகின்றது.

இ—ள் : நான்கு சாதியாரும் பிறந்த ஊரும், அவர்தம் பெயரும், அவர் சாதிக்கு உரித்தென்றற்கேற்ற கருவியும், யாருஞ் சார்த்தப்பட்டு அவை அவை பெறுப என்றவாறு.

1. தன்மை—இயற்கை.
2. எண்—அளவு.
3. யாரும்—எல்லாச் சாதியாரும்.

4. சார்த்தி—சார்த்திச் சொல்லப்பட்டு.

5. பெறும் என்பது உரையிற் கண்டபடி பெறுப என் றிருத்தல்வேண்டும். இளம்பூரணரும் 'பெறும்' என்றே பாடங் கோடலின் இது ஆராயத்தக்கது.



இம்மூன்றும் வரையறுத்துச் சொல்லப்படா, எல்லாச் சாதி யார்க்கும் ஒப்பச் செல்லுமென்பது கருத்து; எற்றுக்கு? இவை சாதிபற்றி வேறுபடாப் பொருளாகலின். ஊரும் பெயருமென் பன :—உறையூர்ஏணிச்சேரிமுடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூ ருருத்திரங்கண்ணன் என்பன அந் தணர்க்குரியன. உறையூர்ச் சோழன், மதுரைப் பாண்டியன் என்பன அரசர்க்குரியன; காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண் ணன், மதுரை அறுவைவாணிகன் இளவேட்டன் என்பன வணிகர்க்குரியன ; அம்பர்கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன் என்பன வேளாளர்க்குரியன.

இனி, 'உடைத்தொழிற் கருவி' என்பன :— அந்தணாளர்க்குச் [1] சுருவையும் [2] சமிதை குறைக்குங் கருவியும் முதலாயின ; [3] அரசர்க்கு, குடையும் கூழும் அமைச்சும் நட்பும் முதலாயின. வணிகர்க்கு, [4] நாவாயும் [5] மணியும் [6] மருந்தும் முதலாயின ; வேளாளர்க்கு, [7] நாஞ்சிலுஞ் [8] சகடமும் முதலாயின. பிறவும் அன்ன. அவையெல்லாம் அவரவர் செய்புட்குரியவென்பது. (எச)

[தலைமைக் குணச்சொல்லும் நான்கு வருணத்தாரும் பெறுவர் எனல்]

கூ௫௦.

தலைமைக் குணச்சொலுந் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்துக வென்ப.

இதுவும் அது.

இ—ள் : அந்நான்கு சாதியார் தலைமைக்குணம்படச் சொல்லுஞ் சொல்லும் அவரவர்க்குரிய நிலைமைக்கேற்ப நிகழ்த்தவும்படும் என்றவாறு.

---

1. சுருவை— நெய்ம்முகந்து ஓமஞ்செய்யுங் கருவி.

2. சமிதை—ஓமவிறகு.
3. இவை பவானந்தம்பிள்ளை பதிப்பிலில்லை.
4. நாவாய்—தோணி.
5. மணி—இரத்தினங்கள்.
6. மருந்து—மருந்துப் பொருள்கள்.
7. நாஞ்சில்—உழுங் கலப்பை.
8. சகடம்—பண்டி (வண்டி).



அந்தணர் தலைமைக்குணங் கூறுங்காற் பிரமனொடு கூறியும், அரசரை மாயனொடு கூறியும், வணிகரை [1] நிதியின் கிழவனொடு கூறியும், வேளாண்மாந்தரை வருணனொடு கூறியுந் தலைமைக் குணச்சொல் நிகழ்த்தப்படும். அவையெல்லாம் அவரவர் செய்யுளுட் கண்டுகொள்க. (௭௫)

[அரசரும் வணிகரும் படைவகையும் பெறுவர் எனல்]

௬௫௧. இடையிரு வகையோ ரல்லது நாடிற்
படைவகை பெறாஅ ரென்மனார் புலவர்.

மேல் நான்கு வருணத்தாரையும் உடன் கூறிவந்தான், இது முதலும் கடையும் ஒழித்து இடைநின்ற இரு வருணத்தார்க்கும் ஆவதோர் புறனடை கூறுகின்றது.

**இ—ள் : அரசரும் வணிகருமல்லது படைப்பகுதி பெறார் என்றவாறு.**

படைப்பகுதியென்பன : வேலும் வாளும் வில்லும் முதலாயின. 'நாடின்' என்பதனான், ஒருசாரந்தணரும் படைக்குரியாரென்பது கொள்க; அவர், [2] இயமதங்கியாரும் [3] துரோணனும் கிருபனும் முதலாயினாரெனக் கொள்க. வேளாண்மாந்தர்க்கும் இஃதொக்கும். இவை விகாரமெனவும் எடுத்தோதிய வருணங்கட்கே இஃது இயல்பெனவுங் கொள்க. (எசு)

## [ வணிகர்க்கு வாணிகமுரித்தெனல் ]

**கூ௩ உ. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.**

இது, வணிகர் மரபு கூறுகின்றது.

இ—ள் : வணிகர்க்குத் தொழிலாகிய வாணிக வாழ்க்கை உள்ளுறையாகச் செய்யுள்செய்தல் பெரும்பான்மையுமாம் என்றவாறு.

அவையும் அவர் செய்யுளிற் காணப்படுமாறு அறிந்து கொள்க. (எஎ)

---

1. நிதியின் கிழவன்—குபேரன்.

2. இயமதங்கி—பரசுராமன். இராமாயணத்தும் பாரதத்தும் இவன் படைக்குரியனுதல் கூறப்பட்டுளது காண்க.

3. துரோணனும் கிருபனும்—படைத்தொழிற் பகுதிக்குரியராதலைப் பாரதத்துட் காண்க.



[வணிகர் எண்வகைக் கூலமும் பெறுவர் எனல்] சுகூகூ. மெய்தெரி வகையி னெண்வகை யுணவின்
செய்தியும் வரையா ரப்பா லான.

இன்னும் வணிகர்க்கே உரிய தொழில் கூறுகின்றது.

இ—ள்: பொருள் தெரிந்தவகையான் எண்வகைக் [1] கூலமுஞ் செய்து விளைத்தலும் அவர் கடன் என்றவாறு.

அவையும் அவர் பண்டத்தொடு உபகாரப்படுமாகலின் வரை

யப்படாதென்றானென்பது.

எண்வகையுணவென்பன: பயறும் உழுந்தும் கடுகும் கடலையும் எள்ளும் கொள்ளும் அவரையும் துவரையுமாம். (எஅ)

[அவர் கண்ணியும் தாரும் பெறுவர் எனல்] கூகச. **கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே.**

இதுவும் அது.

இ—ள்: இவையும் வணிகர் திறத்தன என்றவாறு.

கண்ணியென்பது, சூடும்பூ. தாரென்பது ஒருகுடிப் பிறந்தார்க்குரித்தென வரையறுக்கப்படுவ[2]தாயிற்று. எண்ணப்படுமெனவே [3]அவரவர்க்குரியவாற்றாற் பலவாகி வரும்; அவை வந்தவழிக் கண்டுகொள்க. (எகூ)

[வேளாளர்க்கு உழவுதொழில் உரித்தெனல்]

கூகரு. **வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.**

இது, வேளாண்மாந்தர்க்குக் கூறப்படுந் தொழில் கூறுகின்றது.

இ—ள்: வேளாண்மாந்தர் பலவகைப்பட்ட தொழிலரேனும் உழுந்தொழிலே பெரும்பான்மைத்தாகலான் அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு என்றவாறு.

1. கூலம்—பண்டம்.

2. ஆயிற்று—ஈண்டு வேண்டியதில்லை.

3. அவரவர்க்கு உரிய என்றது—அவ்வக் குடிப்பிறந்தார்க்கு உரிய என்றபடி. குடி—இப்பர்குடி, கவிப்பர்குடி, பெருங்குடி என்பன.



'உழுதுண்டு வாழ்வார்' (குறள். ௧0௩௩) என்பது, இதன் பொருளாயிற்று. மற்றுப் [1] பார்ப்பியன் முதலாகிய நால்வகைத் தொழிலும் வாகையுட் (எ௫) கூறினமையின் இச்சூத்திரமும் மேலைச்சூத்திரங்களும் மிகையாம் பிறவெனின்,—அற்றன்று; பார்ப்பியலும் அரசியலும் வாணிகத் தொழிலுமாகிப் பொதுப்படநின்ற ஓதலும் வேட்டலும் ஈதலும் இவர்க்கு ஒத்த சிறப்பினவாகலானும், அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்த செய்தியனவாகிய உழவுத்தொழிலும் நிரை காத்தலும் வாணிகமுமென்பன அவற்றின் ஒத்த சிறப்பினவன்றி அவற்றுள்ளும் ஒரோவொன்று ஒரோவருணத்தார்க்கு உரியவாமாகலானும் ஈண்டு அவை விதந்து கூறினனென்பது. நிரை காவலும் உழவுத்தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந் தடுமாறுதல்போலாது வாணிக வாழ்க்கை வேளாண்மாந்

தர்க்குச் சிறுவரவிற்றெனவும், உழுதுண்டல் வணிகர்க்குஞ் சிறுவரவிற்றெனவும், எண்வகைக் கூலத்தொடுபட்டதே பெருவரவிற்றெனவுங் கூறினான் இச்சூத்திரங்களானென்பது. இதனது பயம்: புலனெறி வழக்கினுள் இவர்க்கு இவை சிறந்த மரபென்றலாயிற்று. (அ௦)

[வேளாளர் வேந்தர் கொடுப்பின்
படையுங் கண்ணியும்
பெறுவரெனல்]

௬௩௬.

வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப வவர்பெறும் பொருளே.

இது, நான்காம் வருணத்தார்க்கோர் புறனடை.

இ—ள்: வேந்தர் கொடுப்பின் வேளாண் மாந்தர்க்குப் படைக்கலமும் கண்ணியும் பெறும்பொருளாகச் சொல்லப்படும் என்றவாறு.

'வேந்துவிடு தொழில்' என்பது, வேந்தனாற் கொடுக்கப்படுங் [2] தண்டத்தலைமையாகிய சிறப்புக் காரணத்தானென்றவாறு; அகத்திணையியலுள்,

"உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான." (௩௧)

என்புழிக் கூறப்பட்டதெனின்,—வேளாளரையொழித்து ஒழிந்தோரை நோக்கிற்று அச்சூத்திரமென்பது. மேற்கூறியவற்றை

1. பார்ப்பியல்—பார்ப்பனச்

சாதியின் இயல்பு.

2. தண்டம்—சேனை.



யும் மரபுபற்றி ஈண்டு வரையறை கூறுகின்றவாறெனக் கொள்க. அவையும் அவரவர் பாட்டுக்களுட் கண்டுகொள்க. (அக)

[அந்தணாளர் அரசுத் தொழிலும் பெறுவரெனல்]

சுஅஎ. அந்த ணாளர்க் கரசுவரை வின்றே.

இஃது, எல்லாவற்றினுஞ் சிறுவரவிற்றாகி அரசர்க்குரிய தொழில் அந்தணர்க்குரியவாகலின் ஈண்டு போதந்து கூறுகின்றது.

இ—ள்: அரசர் இல்வழி அந்தணரே அவ்வரசியல் பூண்டொழுகலும் வரையப்படாது என்றவாறு.

மக்களைத்தின்ற மன்னவர்க்குப்பின்னை

மறையோரான் அரசு தோற்றப்பட்டாற்போலக் கொள்க. (அ௨)

[இது குறுநில மன்னர்க்குரியன கூறுகின்றது]

௬௩௮. வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந்
தாரு மாலையுந் தேரும் வாளு
மன்பெறு மரபி னேனோர்க்கு முரிய

இது, முடியுடை வேந்தரல்லாக் குறுநில மன்னர்க்குரியன கூறுகின்றது.

இ—ள்: இவ்வெண்ணப்பட்டனவெல்லாங் குறுநில மன்னர்க்கு உரியன என்றவாறு.

'மன்பெறு மரபினேனோர்' எனப்படுவார், அரசுபெறு மரபிற் [1] குறுநில மன்னர் எனக் கொள்க. அவை பெரும்பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காணப்படும். (அ௩)

[இழிந்தோர் வில் முதலியன பெறார் எனல்] ௬௩௯. அன்ன ராயினு மிழிந்தோர்க் கில்லை.

இஃது, எய்தியது இகந்துபடாமைக்

காத்தது.

இ—ள்: மன்னவர்போலுஞ் செல்வத்தாராகி இழிகுலத்தோர் நாடாண்டாராயினும் அவர்க்கு இவை கூறலமையாது என்றவாறு.

---

1. குறுநில மன்னராவார் பாரி முதலாயினோர். சூஎஉ



"மன்பெறு மரபி னேனோர்."

(சூ௩அ) எனவே, அரசர் வைசியரன்றிக் [1] கீழ் அமையாவாயிற்று. (அச)

[புறக்காழுடையன இன்ன பெயரான் வழங்கப்படுமெனலும்

அகக்காழுடையன இன்ன பெயரான் வழங்கப்படுமெனலும்]

சூ௯௦. புறக்கா ழனவே புல்லென மொழிப

வகக்கா ழனவே மரமென மொழிப.

இது, மக்களை வழங்குமாற்றுக்கண் மரபுகூறி, இனி ஓரறிவுயிர்க்கு இன்னவாறு சொல்லுதன் மரபென்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: புறத்துக்காழ்ப்புடையவற்றைப் புல்லெனவும் அகத்துக்காழ்ப்புடையனவற்றை மரமெனவுஞ் சொல்லுப என்றவாறு.

'புறக்காழன; எனவே, [2] அல்வழி வெளிறென்பது அறியப்படும்; [3] அவை பனையுந் தெங்கும் கமுகும் முதலாயின புல்லெனப்படும்; இருப்பையும் புளியும் ஆச்சாவும் முதலாயின மரமெனப்படும். இங்ஙனம் வரையறை கூறிப் பயந்ததென்னை?

புறத்தும் அகத்தும் கொடிமுதலாயின [4] காழ்ப்பின்றியும் அகின் மரம்போல்வன இடையிடை [5] பொய்பட்டும் புல்லும் மரனும் வருவன உளவாலெனின்,—இரண்டிடத்தும் ஏகாரம் பிரித்துக்

கூறினமையானும் 'எனமொழிப' என்று இருவழியுஞ் சிறப்பித்து விதந்தமையானுஞ் சிறுபான்மை அவையும் புல்லும் மரனு மென அடங்குமென்பது.

"இரும்பனம் புல்லின் பசுந்தோட்டுக் குடம்பை."

எனவும்,

"யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவின்." (குறுந். ௧௬௮)

எனவும வரும.

1. கீழ்—குறுநில மன்னரினும் வேளாளர் காணப்படலின் கீழ் என்பதற்கு ஐந்திணைத் தலைவர்போல்வாரைக் கூறல் நலம். இதற்கும் முதற் சூத்திரத்திற்கும் இளம்பூரணர் வேறு பொருள் கூறுவர்.

2. அல்வழி — புறமல்லாத இடம். எனவே அகமென்றாயிற்று.

3. அவை—என்பது வேண்டியதில்லை.

4. காழ்ப்பு—வயிரம்.

5. பொய்—உள்ளீடின்மை.



"நிலாவி னிலங்கு மணன்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை." (அகம். ௨௦௦)

எனப் புறக்காழும் அகக்காழும் அல்லன புல்லெனப்பட்டன வென்பது; [1] அது, பனையோலையுமாகலிற் புறக்காழுடைய பனையுமா மென்பது. [2] ஒ.கி மரக்கிளவியுமாமென்பது சிறு பான்மை. பிறவும் அன்ன. (அ௫)

[புல்லினுறுப்புகளை வழங்கும் வாய்பாடு இவை எனல்]

௬௪௪. தோடே மடலே யோலை யென்று
வேடே யிதழே பாளை யென்று
ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்.

இது, முறையானே புறக்காழனவற்றைச் சொன்மரபுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: எண்ணப்பட்ட வாய்பாடும் பிறவும் புல்லுறுப்பினைச் சொல்லும் வாய்பாடு என்றவாறு.

'பிறவும்' என்றதனால், குரும்பை நுங்கு [3] நுகும்பு போந்தை யென்றற்றொடக்கத்தனவுங் கொள்க.

" இரும்பனை வெண்டோடு

மிலைந்தோனு மல்லன்."

(புறம். சரு)

எனவும்,

" மாவென மடலு மூர்ப."

(குறுந். கஎ)

எனவும்,

" துகடபு காட்சி யவையத்தா ரோலை."

(கலி. கூச) எனவும் வரும். ஒழிந்தனவுங்

கொள்க.

---

1. அது என்றது 'புல்வேய் குரம்பை' என்பதிற் புல் என்பதை. புல் என்பதற்கு, குரம்பை பனையோலையானும் வேய் தலின் பனை என்றுங் கூறலாம் என்றபடி. புல் என்பது புற் சாதிக்கும் பெயர். அது : "நெல்லும் புல்லும் வரையா ராண்டே" என்பதனுலறிக, புறக்காழுடையவற்றிற்கும் பெயர்.

2. ஓதி—உ.ஓ. அது அகக்காழும் புறக்காழு மல்லாதது. அதனை மரமென்றல் சிறுபான்மை என்றபடி. 'உதிமரக் கிளவி' (தொ. எழு. உயிர். சக)

3. நுகும்பு—சுருண்ட குருத்து என்பர் டாக்டர் உ. வே. சாமிநாதையர். (குறுந்தொகை உரை—௩0அ). இளமடல் என்பர் நற்றிணை உரையாசிரியர். (நற்றிணை—கூஉ).

"வண்டோட்டு நெல்லின் வருகதிர் வணங்க." (நெடுநல். உஉ)

என்பதும் அது.

'நேர்ந்தன பிறவும்' என்பது, கேட்டாரை உடம்படுவிப்பன பிறவுமென்றவாறு.

"வண்கோட் பெண்ணை வளர்ந்த நுங்கின்." (சிறுபாண். உஎ) எனவும்,

"பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொடு." (புறம். உசகூ) எனவும் வரும். பிறவும் அன்ன. (அகூ)

[மரவுறுப்புக்களை வழங்கும் வாய்பாடு இவை எனல்]

கூசஉ. இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே யரும்பே
நனையுள் ளுறுத்த வனையவை யெல்லா

மரபொடு வருஉங் கிளவி யென்ப.

இஃது, அகக்காழனவற்றுறுப்பினைச் சொல்லும் மரபுணர்த் துதல் நுதலிற்று.

இ—ள்: எண்ணப்பட்டனவும் பிறவுமெல்லாம் மரத்துறுப் பினைச் சொல்லும் வாய்பாடு என்றவாறு.

'அனையவையெல்லாம்' என்ற புறநடையானே, [1] புல்லுந் தழையும் பொங்கரும் முதலாயின கொள்க. அவை,

"தெய்வ மடையிற் றேக்கிலை குவைஇ."
(பெரும்பாண். ௧0௪)

எனவும்,

"முறிமே யாக்கை." (நற். ௧௫௧; மலைபடு. ௩௧௩)

எனவும்,

"யாஅ வொண்டளி ரரக்குவிதிர்த் தன்ன."
(அகம். ௩௩௩)

எனவும்,

"தோடுதோய் மலிர்நிறை யாடி யோரே."
(அகம். ௧௬௬)

எனவும,

"மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை."

(குறுந். உகூ)

எனவும்,

1. புல்—புற்சாதியினிலையைப் புல் என்றல் வழக்கு. மரங்களுக்குக் காணப்படவில்லை.



"கொய்குழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர."

எனவும்,

(கலி. எச) "நனைத்த செருந்தி."

(அகம். கரு0) எனவும்,

"அண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல."

(அகம். ருகூ)

என்றாற்போல வருவனவெல்லாங் கொள்க.

மேலைச் சூத்திரத்து,

"புல்லொடு வருமெனச் சொல்லினர்."

(௬௪௧) எனவும்,

இச்சூத்திரத்து,

"மரனொடு வருஉங் கிளவி."

(௬௪௨)

எனவும் மிகைபடக் கூறியதென்னையெனின்,—அம்மிகையானே எடுத்தோதிய புறக்காழனவும் அகக்காழனவுமன்றி அவற்றொடு தழீஇக் கொள்ளப்படுவனவுமெல்லாம் இவற்றுக்குரியவென்பது கொள்க. அவை, ஊகம்புல்லும் சீழகம்புல்லும் பஞ்சாய் முதலி யனவும், [1] புழற்கால் ஆம்பல் முதலியனவும், புல்லெனப்பட் டடங்கி [2]யவற்றின் பெயரும் பெறுமென்பது. பிடாவும், காயா முதலிய புதலும், பிரம்பு முதலாகிய கொடியும் மரமெனப் பட்டவற்று உறுப்பின் பெயர்பெறுமென்பது; அவை, ஊகந் தோடு சீழகந்தோடு எனவும், பிடவிலை காயாம்பூ முல்லைப்பூ எனவும் வரும். பிறவும் அன்ன.

மற்றுப் பிறப்புமுறையால் தளிர் முற்கூறாது இலை முற் கூறியதென்னையெனின்,—புல்லினுள் ஒருசாரன இலையெனவும், பூவெனவும்படுமென [3] அதிகாரங் கோடற்கென்க. அவை,

"ஈய்த்திலை வேய்ந்த வெய்புறக் குரம்பை." (பெரும்பாண். ௮௮)

எனவும்,

'ஆம்பலிலை, தாமரையிலை.'

எனவும்,

'ஆம்பற்பூ, தாமரைப்பூ.'

எனவும் வரும். பிறவும் அன்ன கொள்க.

---

1. புறக்கால் — துளையுடைய தண்டு.
2. அவற்றின் பெயர் எனப் பிரிக்க.
3. முதற் சூத்திரத்து வந்த புல்லை

தாற் கோடற்கு என்றபடி.

இதற்கும் அதிகாரத்



இன்னும் இவ்விலேசானே புல்லிற்குரியன மரத்திற்கு வருவனவுங் கொள்க; அவை,

"ஈன்றவ டிதலைபோ [1] லீர்பெய்யுந் தளிரொடும்."

(கலி. ௩௨) என ஈர்க்கென்பது மாவிலைமேல் வந்தது. பிறவும் அன்ன. (அஎ)

[மேற்கூறிய இரண்டற்கும் பொதுவாகச் உறுப்புக்களிவை எனல்]

சொல்லப்படும்

௬௪௩. காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றுங் கவையு மன்ன.

இது மேற்கூறிய இரண்டற்கும் பொதுவுறுப்புணர்த்து

தல் நுதலிற்று.

இ—ள் : இவையும்
அவ்விருதிறத்தோடொக்கும் என்ற

வாறு.

உதாரணம் :— தெங்கங்காய்
கமுகங்காய் எனவும், வேப்

பங்காய் மருதங்காய் எனவும், காயென்பது அவ்விரண்டற்கும் வந்தது. பழமென்பதற்கும் இஃதொக்கும். பனந்தோல் வேப்பந்தோல், பனஞ்செதிள் வேப்பஞ்செதிள், தாழைவீழ் இத்தி

வீழ் என இவையும்
இருபாற்குமுரியவாயின.

மற்றிவையெல்லாம் வரையறையின்றிச்

செல்லுமாயிற் புறக்

காழன அகக்காழனவென வரையறுத்துப் பயந்ததென்னை யெனின்,—அவ்விருபகுதியுள் அடங்கக் கூறியவெல்லாம் புல்லெனவும் மரமெனவும்படாவென்றற்கும், [2] அவற்றுறுப்பு ஓதியவாற்றுற் புல்லின்கண்ணும் மரத்தின்கண்ணும் பெருவரவினவாமென்றற்குமென்பது. (அ௮)

[இருதிணை யைம்பாற்பொருள்களை மரபு பிறழாமற் சொல்லல்வேண்டுமெனல்]

௯௪௪. நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்க முலக மாதலி

னிருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்.

---

1. ஈர்—ஈர்க்கு என்றது மாவிலையின்

நடுவே செல்லும்

காம்பை.

2. அவற்றுறுப்பு என்றது புறக்காழுக்கும் அகக்காழுக்கும் ஓதிய உறுப்புக்கள். அவை, "தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்தானும், "இலையே தளிரே" என்னுஞ் சூத்திரத்தானும்

கூறியன.

இஃது, உலகியலெல்லாம் மரபிற்றிரியாமையின் அதன் சிறப்புணர்த்தி அதற்குக் காரணமுங் கூறுகின்றது.

இ—ள்: நிலனும் தீயும் நீரும் காற்றும் ஆகாயமு மென்

னும் ஐம்பெரும் பூதமுங் கலந்த கலவையல்லது உலகமென்பது பிறிதில்லாமையின் அவற்றைச் சொல்லுமாறு சொல்லாது இருதிணைப் பொருளென வேறுபடுத்தும் ஐம்பாலென வேறுபடுத்தும் வழங்குகின்ற வழக்கெல்லாம் மரபிற்றிரியாத சொல்லொடு தழீஇ வரல்வேண்டும் என்றவாறு.

இதன் கருத்து:— "நிலம்வலிது, தீவெய்து, நீர்தண்ணென்றது, வளியெறிந்தது, விசும்பு அகலியது" என அஃறிணை வழக்கினவாயினும் இவை கலந்தவழியும் அவ்வாய்பாட்டான் வழங்காது உயர்திணை வாய்பாடு வேறாகவும், அஃறிணை வாய்பாடு வேறாகவும் அவை தம்முட் பகுதியாகிய ஐந்து பாற்சொல்லும் வெவ்வேறாகவும் வழங்குகின்ற வழக்கிற்குக் காரணம் மரபல்லது பிறிதில்லையென்றவாறு; எனவே, மரபினை வலியுறுத்தவாறு.

மற்று, நிலம் நீர் தீ வளி ஆகாயமென ஒன்று ஒன்றனுள் அடங்குமுறையாற் கூறுதல்செய்யாது மயங்கக் கூறியதென்னையெனின்,—அவை கலக்குங்கால் ஒரோ பொருளின்கண்ணும் அம்முறையானே நிற்குங்கொலென்று கருதினுங் கருதற்க, மயங்கி நிற்குமென்றற்கு அவ்வாறு கூறினானென்பது. (அகூ)

[செய்யுள் மரபு பிறழாமற் செய்தல்வேண்டுமென்றற்குக் காரணங் கூறல்]

கூசரு. [1] மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான.

இது, மரபினையே வற்புறீஇயது.

இ—ள்: வழக்கினகத்து வரலாற்று முறைமை பிறழாது வருதலே தக்கது, மற்றுச் செய்யுள்செய்த சான்றோர் அதற்கேற்றவகையாற் செய்யப்பெறுவராகலின் என்றவாறு.

1. மரபுவழிப்பட்ட சொல்லாற் செய்யப்பெறுதலின் மரபுநிலைதிரிதல் செய்யுளுக்கில்லை எனவே செய்யுள் மரபுவழிப்பட்ட முறையாற் செய்யப்படுமென்பதாம்.

அவர்க்கு இம்மரபு
வேண்டுவதன்றிகொலென்று கருதி
னுங் கருதற்க.
" மரபே தானு,
நாற்சொல் லியலான் யாப்புவழிப்
பட்டன." (ந. கூஉ.)
என்றதனன்,
மரபுவழிப்படுங்காலென்பான்,
" மரபுவழிப் பட்ட சொல்லி னை."
என்றுனென்பது. ஆண்டுக் கூறிய மரபு
உலகியலாகலான் அவ்
வுலகியல் அவ்வாறுதற்குக் காரணம்
ஈண்டுக் கூறிச் செய்யுட்
கும் அதுவே காரணமெனக் கூறிஞனென்பது. இதனது பயன் :
'செஞ்ஞாயிறு' என்பது, வழக்கன்ருயினும் [1] உண்மைநோக்கி
அதனைச் [2] செய்யுள்செய்யுஞ் சான்ருேர்
அவ்வாறு வழங்
கினற்போல உயர்திணைப் பொருளையும்,
ஐம்பெரும் பூதங்

கள் அஃறிணையான் வழங்குதலுண்மை நோக்கி அவ்வாறுஞ்

சொல்லிப்பெறுவகொலென்று ஐயுற்றாரை ஐயம் அறுத்தவாறு.

அஃறிணைப்பாற்கும் இஃதொக்கும்; அல்லதூஉம், இன்ன செய்

யுட்கு இன்ன பொருளுரித்தெனவும், இனைப்பகுதியாற் பெயர்

பெறுமெனவும், மரபுபற்றியே சொல்லப்படுமென்றற்கும், இனி,

நிறைமொழி மாந்தர் மறைமொழிபோல்வன சில [3] மிறைக்கவி

பாடினாருளரென்பதேபற்றி [4] அல்லாதாரும் அவ்வாறு செய்

தன் [5] மரபன்றென்றற்கும் இது கூறினானென்பது; அவை:

சக்கரஞ், சுழிகுளம், கோமூத்திரிகை, ஏகபாதம், எழுகூற்

றிருக்கை, மாலைமாற்று என்றாற்போல்வன. இவை மந்திரவகையா

னன்றி வாளாது மக்களைச் செய்புள்செய்வார்க்கு அகனைங்

திணைக்கும் மாபன்றென்பது கருத்து.
அல்லாதார் இவற்றை
எல்லார்க்குஞ் செய்தற்குரியவென இழியக்
கருதி அன்னவகை
யான் [6] வேறு சில பெய்துகொண்டு
அவற்றிற்கும் இலக்கணஞ்

---

1. உண்மை—ஞாயிற்றுக்குச்
செம்மைக்குணம் உண்மை.
2. 'செஞ்ஞாயிற்று நிலவு
வேண்டினும்' என்பது செய்
யுள் (புறம்—நஅ).
3. மிறைக்கவி—சித்திரகவி. தேவார முதலியவற்றில் ஏக பாதம், எழுகூற்றிருக்கை, மாலைமாற்று முதலியன தேவரைப்
பற்றி அமைந்திருக்கின்றன.
4. அல்லாதார்—நிறைமொழி மாந்தர்
அல்லாதார்.
5. மரபன்றென்றற்கு என்ற பாடம்
பொருத்தம். சி. வை.
தாமோதரம்பிள்ளை பாடம் பொருத்தமில்லை.
6. வேறு சில—அதனோடு வேறு சில. அவை ஆசு, மதுரம்,
வித்தாரம் என்பன.

சொல்லுப. அவை இத்துணையென்று வரையறுக்கலாகா; என்னை? [1] 'ஒற்றை, [2] இரட்டை, [3] புத்தி, [4] வித்தாரம்' என்றாற்போல்வன பலவுங் கட்டிக்கொண்டு அவற்றானே செய்யுள் செய்யினுங் கடியலாகாமையின் அவற்றிற்கு வரையறைவகை யான் இல்க்கணங் கூறலாகாதென்பது.

> [5] "ஐயைதன் கையு ளிரண்டொழித்தெ ணைம்பான்மேற்
> பெய்தார் பிரிவுரைத்த வில்லையால்."

எனவும்,

> "கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை
> [6] யாடர வடகினுளுங் காணேன்." (திணைமாலைநூற். ச)

எனவும் சொல்லுவார் சொல்லுவனவற்றுக்கெல்லாம் வரையறையின்மையின் அவற்றுக்கு இலக்கணங் கூறார் பண்ணத்திப் பாற் (சகூஉ) படுப்பினல்லதென்பது. (கூ0)

[மரபுநிலை திரியிற் பொருள்

வேறுபடுமெனல்]

௬௪௬. மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்.

இது, மேற்போன வழக்கிற்கும் செய்யுட்கும் வருகின்ற இலக்கணத்திற்கும் பொது.

இ—ள் : மரபினை நிலைதிரித்துச் சொல்லுபவெனின்,—உலகத்துச் சொல்லெல்லாம் பொருளிழந்து பிறிதுபிறிதாகும் என்றவாறு.

செவிப்புலனாய ஓசைகேட்டுக் கட்புலனாய பொருளுணர்வ தெல்லாம் மரபுபற்றாக அல்லது மற்றில்லையென்றவாறு. (௬௬)

[வழக்காவது இதுவெனல்]

௬௪௭. வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.

---

1. ஒற்றை—தனிநின்று முடிவது.

2. இரட்டை—ஒருவினை கொண்டு முடியும் இரு செய்யுள்.

3. புத்தி—நுட்பபுத்தியினாற் செய்வது போலும்.

4. வித்தாரம்—அகலக் கவி. ஒற்றை, இரட்டை, புத்தி, வித்தாரம் என்பன பேராசிரியர் பிறரைப் பழித்துக் கட்டியது.

5. ஐயைதன்கை எட்டு. அதனுள்
இரண்டொழிக்க ஆறும்.
ஆறு என்றது அறுமீனை—கார்த்திகையை.
திகைப்பூ. என்றது காந்தட்பூவை.
கார்த்திகை—கார்த்

6. அடாவடகு—விளையாட்டு. ஈண்டு ஆயத்தைக் குறித்ததுபோலும். திணைமாலை நூற்றைம்பதின் உரை நோக்குக. உரைகாரர் ஆடாவடகு நீட்டல் விகாரமென்பர்.



[1] இது, வழக்கினுண் மாபினைப் பிழைத்துக் கூறுவனவும் உளவென்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே; என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின் என்றவாறு.

அவரையே நோக்குதலென்பது, அவராணையான் உலக நிகழ்ச்சி செல்கின்றதென்றவாறு; எனவே, உயர்ந்தோரெனப் படுவார் அந்தணரும் அவர்போலும் அறிவுடையோருமாயினு ரென்பது. (கஉ)

[நூல் இருவகையவெனல்]

௬௪அ. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறு மிருவகை யியல
முதலும் வழியுமென நுதலிய நெறியின.

இது, மேற்கூறப்பட்ட மரபு வழக்கிற்கேயன்றி இலக்கணஞ் செய்வார்க்கும் வேண்டுமெனவும், அவ்விலக்கணம் இனைப் பகுதித்தெனவுங் கூறுகின்றது.

இ—ள்: மரபுநிலையில் திரியாமை தமக்குக் குணமாக உடையவாகி எல்லாரானும் உரைக்கப்படும் நூல் இரண்டிலக்கணத்தவாகும்; முதனூலெனவும், வழிநூலெனவுங் கருதிக் கொள்ளும் அடிப்பாட்டான் என்றவாறு.

"மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்." (௬௪௬)

என்பதனை இதற்குமேல் எய்தவித்தானன்றே, அதனுன் மரபுநிலை திரியாமையே [2] தமக்குத் தகுதியாவதெனவும், இவ் [3]விருவாற்றானும் ஒன்றனைற் செய்தலே மரபெனவுங் கூறியவாறு.

‘ நுதலிய நெறி’ என்றதென்னையெனின்,
— இன்னதே

முதனூல் வழிநூலென்பதோர் யாப்புறவில்லை; ஒருநூல்
பற்றி ஒருவன் வழிநூல் செய்தவழி அவ்வழிநூல்பற்றிப் பின்
னொருகாலத்து ஒருநூல் பிறந்ததாயின் அது வழிநூலெனப்பட்டு

1. உயர்ந்தோர் வழக்கல்லாதன
பிழைத்துக் கூறுவன

என்பது கருத்து.

2. தமக்கு என்றது—இருவகை நூற்கும்
என்றவாறு.

3. இருவாறு—முதல், வழி என்ற
இருவாறு,

பியல்] பொருளதிகாரம்
கூஅக

முன்னை வழிநாலே

முதனூலெனப்படுமென்றற்கென்பது. இதனைச் சார்புநூலென்னுமோவெனின்.—[1] வழிநூலுஞ் சார்புநூலுமாகலின் அங்ஙனங் கூறுனாரினன். எற்றுக்கு? சார்பு நூலினைப் பற்றி ஒருநூல் பிறந்தவழிச் சார்பின் சார்பெனக் கூறல்வேண்டுவதாகலானும் அதனைச்சார்ந்து தோன்றிற் சார்பென்னுஞ் சொல்லை மும்முறை சொல்லியும் அதன்பின் தோன்றிய நூற்கு நான்முறை சொல்லியும் எண்ணிகந்தோடுதலானுமென்பது.

மற்று இரண்டாமென்று

முறைமைக்கணின்ற நூலினையே வழிநூலெனக்

கொண்டு மூன்றாவது தோன்றிய நூலே சார்பு

நூலாகவும் அதன்பின்னர் நூல் செய்யப்பெறுரெனவுங் கொள்ளாமோவெனின்,—முதனூலிற் கிடந்த பொருளை [2] ஓர் உபகாரப்பட, வழிநூல் செய்த ஆசிரியன் செய்தக்காற், சார்பு நூலெனப் பின்னர் ஓர் ஆசிரியன் நூல்செய்ததனாற் பயந்ததென்னையென்க. என்றார்க்கு, வழிநூலும் பிற்காலத்தரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்தலன்றே இதனாற் பயந்ததெனின்,— அதுதானும் பின்னொருகாலத்து [3] அரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்வானல்லனோவென்று மறுக்க. இவ்வாராய்ச்சி வேண்டாவென்றற்கன்றே இவ்விருவகையானும் வருதலே மரபென்பானுயிற்றென் றொழிக.

ஒன்றன்வழியே யன்றியுந் தாந்தாம்

அறிந்தவாற்றானும்

நூல் செய்யப்பெறுரோவெனின்,—அது

மரபன்று; அதுநோக்கி யன்றே,

"மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்."

(சுசசு) என்றவிதி நூலிற்கும் எய்துவித்துப் புகுந்தவிதென்பது; என்னை?

பிறிதுபிறிதாகுமாறெனின்,—ஒருபொருட்கண்ணே மாறுபட்ட இலக்கணங் கூறின் [4] அவ்விரண்டும் அதற்கிலக்கணமாகாது;

என்போல? மாணிக்கமணியினைச் செவ்வண்ணம் முதலாயின சில இலக்கணங் கூறிய நூல் கிடப்பக் கருவண்ண முதலாயின

---

1. வழிநூலுஞ் சார்புநூலு மாகலின்—மூன்றுவது நூல். வழிநூலும் சார்புநூலும் எனப்படுமாகலின் என்பது கருத்து. எனவே இரண்டுமெனப்படும். ஆதலின் அங்ஙனம் கூறார் என்க.

2. உபகாரப்படச் செய்தக்கால் என இயைக்க.

3. அரிது—உணர அரியது.

4. அவ்விரண்டும்—மாறுபட்ட இலக்கணம் இரண்டும்.

வும் அதற்கிலக்கணமென்று ஒருவன் எதிர்நூலென்பதோர் நூல் பிற்காலத்துச் செய்யுமாயின் அஃது அதன் இலக்கணமெனப் படாதாகலானென்பது.

மற்றுக் காலந்தோறும் வழக்கு வேறுபடுதலின் வழக்கு நூலும் வேறுபடவமையும் பிறவெனின்,—

"வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான"

(கூசஎ)

என்றமையானும், அங்ஙனங் காலந்தோறும் ஒரோர் நூல் செய்யின் [1] வழக்கல்லது எஞ்ஞான்றும் அவ்விலக்கணத்தாற் பயமின்றாகியே செல்லுமாகலானும் அது பொருந்ாதென்பது.

அல்லதூஉம், முற்காலத்து வழங்கிவந்ததனை வழூவென்று கடிபவாயினன்றே பிற்காலத்துப் பிறந்த வழக்கு இலக்கண

மெனத் தழீஇக்கொள்வதென்க. [2] இந்நூல் இலக்கணத்தினை

இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தான் வழக்குஞ் செய்யுளு

மென்று விதந்து புகுந்த இரண்டிலக்கணமும் முடித்தல்லது

அவற்றைக் கூறும் இலக்கணங் கூறலாகாமையினென்பது. [3] இக்

கருத்தறியாதார் செய்யுளியலினை ஒன்பதாம் ஓத்தென்ப.

அல்லதூஉம் இந்நூலிலக்கணம் வழக்கிற்குஞ் செய்யுட்குமே யன்றி அங்கனமாகப் பொருண்மேவும் [4] பண்டம் முதலாய வற்றிற்கு இலக்கணஞ் செய்யுங்காலும் [5] நியாயஞ் செய்யினுந் தமிழ்நூலதற்கிலக்கணம் எவ்வாற்றானும் இதுவேயென்றற்கும் ஈண்டுக் கூறினானென்பது. எனவே, பிறபாடை நூல்களாயின் இம்மரபு வேண்டுவதன்றாயிற்று. மற்று முதனூலினை இன்ன தென்பது துணிந்து உரையாரோவெனின்,—அதுவன்றே இனிக் கூறுகின்றதென்பது. (கூ௩)

---

1. வழக்கல்லது......செல்லும் என்றது—வழக்கே பயனுவ தல்லது அவ்விலக்கணத்தாற் பயமின்றாகியேசெல்லும் என்றபடி.

2. இந்நூலிலக்கணம்—நூல்செய்யு முறைமையைப்பற்றிய இவ்விலக்கணம். இவ்வோத்து—மரபியல்.

3. இக்கருத்து — இந்நூலிலக்கணத்தைப் பின்வைத்த கருத்து. செய்யுளிலக்கணத்தை ஒன்பதாக வைப்பின் நூலிலக்கணம் இறுதியிற் கூறப்படல்வேண்டும். ஆதலின் அது எட்டே என்றபடி.

4. பண்டம்முதலாய—திரவியம்முதலாய. இது தருக்கம்.

5. நியாயம்—நியாய இலக்கணம்.



[முதனூலாவது இதுவெனல்]

சூ௬௪௯. வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

மேல் ஒன்றற்கு முதனூலாகியும் ஒன்றற்கு வழிநூலாகியும் வந்து நடுமாறுமென்றான், இனி அவ்வாறன்றி ஒன்றே முதனூலாகலுஞ் சிறுபான்மை உண்டென்கின்றது.

இ—ள்: செய்வினையின் பயன் [1] துவ்வாது மெய்யுணர் வுடையனாகிய முன்னோற்

செய்யப்பட்டதே ஒருதலையாக முதனூலாவது என்றவாறு.

எனவே, மேலைச் சூத்திரத்து முதனூலும் வழிநூலு மெனப்பட்டன முதலுஞ் சினையும்போலத் தடுமாறுமென்பதூஉம் இதுவாயின் தடுமாறுது எஞ்ஞான்றும் முதனூலாமென்பதூஉம் பெற்றும்.

வினையென்பன, இருவினை ; இன் நீக்கத்துக்கண் வந்தது.

'விளங்கிய அறிவு' என்பது, முழுதும் உணரும் உணர்ச்சி.

'அறிவின்' என நின்ற இன் சாரியை. இன்ன அறிவினெடு கூடிய முனைவன் அறிவின் முனைவனெனப்படும். முன்னேனை

2 முனைவனென்பது ஒருசொல்விழுக்காடாம். முன்னென்பதனை முனையென்பவாகலின்.

மற்று 'வினையின்' என்ற வேற்றுமை 3

நிற்பதன் நிலையும் நீங்குவதன் நீக்கமும் கூறுமாகலின் ஒருகாலத்து வினையின்கணின்று ஒருகாலத்து நீங்கினான்போலக் கூறியதென்னை யெனின்,—அற்றன்று; வினைப்பயந் தொடர்ப்பாற் றுள்ளம் இலனென்பதன்றி அவர்க்குச் சில செய்கையுளவென்பது பல்லோர்க்கும் உடம்பாடாகலின், அவ்வினைக்கணின்றே, [4] போகமும் பாவமும் மெய்யுணர்வுபற்றித் தெறப்பட்ட வித்துப்போலப் பிறப்பில் பெற்றியனாகி நீங்குமாகலின் அவ்வாறு கூறல் அமையு—

1. துவ்வாது—அநுபவியாது. துவ்வாது உடையனாகிய என இயைக்க.

2. முனைவன் — முன்னோன். முனை — முன். விழுக்காடு—விழுகை; கோட்பாடு—கொள்கை என்பதுபோல.

3. நிற்பது—வினை ; நிலை—அதன்கண் நிற்றல்:

4. போகமும் பாவமும் நீங்குமாகலின் என இயைக்க.

மென்பது; என்னை? [1]'குற்றங் கெடுத்து முற்ற உணர்ந்
தோரும்', கெடுப்பதோர் [2] குற்றமின்றி முழுதுணர்ந்தோரும்,
எல்லாம் பிறர்க்குறுதியாகிய ஆகமஞ் செய்யினுந் துறக்கம்
முதலாகிய பயன்றுய்ப்பாரல்லராகலின்.
இனி முனைவனாற் செய்யப்படுவதோர் நூலில்லையென்பார்,
அவன்வழித் தோன்றிய நல்லுணர்வுடையார் அவன்பாற்
பொருள்கேட்டு முதனூல் செய்தாரெனவும், அம் முனைவன்
முன்னர் [3] ஆகமத்துப் பிறந்ததோர் மொழியைப்பற்றி அனைத்
துப் பொருளுங்கண்டு பின்னர் [4] அவற்றவற்றிற்கு நூல்செய்
தார் அவரெனவும், அவ்வாகமத்தினையே பிற்காலத்தாரும் ஒழுக்
கம் வேறுபடுந்தோறும் வேறுபடுத்து வழிநூலுஞ் சார்புநூலு
மெனப் பலவுஞ் செய்தாரெனவுங் கூறுப.

அவை எவ்வாற்
றானும் முற்ற உணர்ந்தோர் செய்த
நூலன்மையின் அவை
தேறப்படா; அல்லதூஉம், அவை
தமிழ்நூலன்மையின் ஈண்டு
ஆராய்ச்சியிலவென்பது.

மற்று, மேலைச்சூத்திரத்து நுதலிய
நெறியானே முத
லும் வழியுமாமெனவே, எல்லார்க்கும்
முதல்வனாயினான் செய்
தது முதனூலேயாமென்பது
பெறுதுமாகலின், ஈண்டு இச்சூத்
திரங் கூறியதென்னையெனின்,—தாமே
தலைவராவாரும் அத்தலை
வனை வழிப்பட்டுத் தலைவராயினாரும்
பலராகலின் தாமே தலைவ
ராயினார் நூல்செய்யின்
முதனூலாவதென்னின்,—அற்றன்று;
தாமே தலைவராயினார் முற்காலத்துந்
தமிழ்நூல் செய்திலராக லின் தலைவர்வழி

நின்று தலைவனாகிய அகத்தியனாற் செய்யப்பட்டதாம் முதனூலென்பது அறிவித்தற்கும், பிற்காலத்துப் [5] பெருமானடிகள் களவியல் செய்தாங்குச் செய்யினும் பிற்காலத்தானும் முதனூலாவதென்பது அறிவித்தற்கும், அங்ஙனம் 'வினையினீங்கி விளங்கிய [6] அறிவினன் முதனூல் செய்தான்' என்பது அறிவித்தற்கும் இது கூறினானென்பது.

1. குற்றங்கெடுத்து என்றது—போகமும் பாவமும் நீங்கலின், குற்றம் அவர்க்கு இல்லை என்றபடி.

2. குற்றமின்றி முழுதுணர்ந்தோர்—இறைவன் கூறுனோர்.

3. ஆகமம்—நூல்.

4. அவற்றவற்றிற்கு—அவ்வப் பொருளுக்கு.

5. பெருமானடிகள்—இறையனார்.

6. அறிவினன்—அறிவினையுடையான்.

எனவே, அகத்தியமே முற்காலத்து முதனூலென்பதூஉம், அதன் வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூலென் பதூஉம் பெற்ரும்.

என்ருர்க்கு முந்துநூலெனப்பட்டன முற்காலத்து வீழ்ந் தனவெனக் கூறித் தொல்காப்பியர் அகத்தியத்தோடு பிறவும் அவற்றுவழி நூல் செய்தாரென்றக்கால் இழுக்கென்னை யெனின்,—அது வேத வழக்கொடு மாறுகொள்வார் இக்காலத் துச் சொல்லினும் இறந்தகாலத்துப் பிற I பாசாண்டிகளும் மூன்றுவகைச் சங்கத்து நான்கு வருணத்தொடுபட்ட சான் ரேரும் அது கூருரென்பது. என்னை? கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள்கண்ட கணக்காயனர் மகனர் நக்கீரர் ' இடைச்

சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல் காப்பியம்' என்றாராகலானும், பிற்காலத்தார்க்கு உரையெழுதி னோரும் அது கூறிக்[2] கரிபோக்கினாராகலானும்,[3] அவர்[4] புலவுத் துறந்த நோன்புடையாராகலாற் பொய் கூறாராகலானுமென்பது. இங்ஙனங் கூறுக்கால் இதுவும் மரபு வழுவென்று அஞ்சி அகத்தி யர் வழித்தோன்றிய ஆசிரியரெல்லாருள்ளும் தொல்காப்பியனாரே தலைவரென்பது எல்லா ஆசிரியருங் கூறுபவென்பது; எங் ஙனமோவெனின்,—

'' கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்ந் தொல்காப் பியன்ற
னாணையிற் றமிழறிந் தோர்க்குக் கடனே.''

இது, பல்காப்பியப் புறனடைச் சூத்திரம்.

'' வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக
ழானாப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்.''

1. பாசாண்டிகள்—வேதவழக்கொடு மாறுபட்ட சமயிகள்.
பாசாண்டிகர் எனவும் வழங்கும். "அறுவகைப் பாசாண்டிகரும் இணைவிழைச்சு திதென்ப" என்பது களவியலுரை.

2. கரிபோக்கல்—சான்று கூறல்.
சிலப்பதிகார உரையா சிரியர்
அடியார்க்குநல்லாரைக் குறித்ததுபோலும்

3. அவர்—நக்கீரர்.

4. புலவுத்துறந்த நோன்பு—உடம்பை வெறுத்த விரதம்.



என்பதனால் அகத்தியர்செய்த அகத்தியத்தினை முதனூலெனவும், அவர் வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ் ஆனைப் பெருமைபுடையாரெனவும், அவராற் செய்யப்பட்ட முதனூல் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருள் தலைவராயினார் தொல்காப்பியனாரெனவும், பன்னிருபடலத்துப் [1] புனைந்துரை வகையாற் பாயிரச் சூத்திரத்துள்

உரைக்கப்பட்டது. இனி, பன்னிருபடலம் முதனூலாக வழிநூல் (வெண்பாமாலை) செய்த ஐயனரிதனாரும் இது கூறினார்; என்னை?

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த."

எனப் பாயிரஞ் செய்தற்கு [2] உடன்பட்டமையினென்பது.

இவற்றானெல்லாம் அகத்தியமே முற்காலத்து முதனூ லென்பதூஉம், தொல்காப்பியம் அதன் வழிநாலென்பதூஉம், அதுதானும் பனம்பாரனார்,

" வடவேங்கடம் தென்குமரி."

(பாயிரம்)

எனக் குமரியாற்றினை எல்லையாகக் கூறிப் பாயிரஞ் செய்தமை யிற் சகரர் வேள்விக்குதிரைநாடித் தொட்டகடலகத்துப் பட்டுக் [3] குமரியாறும் பனைநாட்டோடு கெடுவதற்கு முன்னைய தென்பதூஉம், அவ்

வழக்குநூல் 4 ஈண்டுப் பற்றியல்லது மூன்று வகைச் சங்கத்தாருஞ் செய்யுட் செய்திலரென்பதூஉம், ஆசிரியரும் அவர்போல்வாரும் அவர்வழி ஆசிரியருஞ் செய்யுள்செய்த சான்றோருஞ் சொல்லாதன சொல்லப்படாவென்பதூஉம் அவருடம்படாதன சொல் உளவென்று எதிர்நூலென ஒருவன் பிற்காலத்து நூல் செய்யுமாயின் தமிழ் வழக்கமாகிய மரபினொடுங்

---

1. புனைந்துரைத்தல்—புகழ்ந்து கூறல்.

2. உடன்படல்—சம்மதித்தல். தொல்காப்பியரை முதல்வரென்று கூறற்குச் சம்மதித்தல்.

3. செய்யுளியல் முதற்சூத்திர உரையுள்ளு மிவ்வாறு கூறுவர். பனைநாடு—ஏழ்குறும்பனைநாடு. அவை குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்கு மிடையிலிருந்து கடல்கொண்டன. "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்" என்ற அடியின் விரிவுரை நோக்குக. சிலப்பதிகாரம் வேனிற்காதை க-ம் அடி.

4. ஈண்டு என்பது இங்கு வேண்டியதில்லைப்போலும்.

தமிழ் நூலொடும் மாறுபட நூல் செய்தானாகுமென்பதூஉம், இனித் தமிழ் நூலுள்ளுந் தமது மதத்துக்கேற்பன முதனூல் உளவென்று இக்காலத்துச் [1] செய்துகாட்டினும் அவை முற்காலத்து இலவென்பது முற் கூறிவந்தவகையான் அறியப்படுமென்பதூஉம், [2] பாட்டுந் தொகையும் அல்லாதன சில காட்டிக்கொண்டு மற்றவையுஞ் சான்றோர் செய்யுளாயின; வழுவில் வழக்கமென்பார் உளராயின் இக்காலத்துள்ளும் ஒருசாரார்க் கல்லது அவர் சான்றோரெனப்படாரென்பதூஉம், இங்ஙனங் கட்டளைசெய்யவே காலந்தோறும் வேறுபடவந்த [3] அழிவழக்கும் இழிசனர் வழக்கும் முதலாயினவற்றுக்கெல்லாம் நூல் செய்யின் இலக்கணமெல்லாம் எல்லைப்படாது இகந்தோடுமென் பதூஉம், இறந்தகாலத்து நூலெல்லாம் பிறந்தபிறந்த வழக்குப்பற்றிக் குன்றக்கூறல் என்னுங் குற்றந் தங்குமென்பதூஉம், ஒன்றாகப் புறனடுத்து ஒருசூத்திரமே செய்துபோத [4] அமைவி னன்றி ஒழிந்த சூத்திரங்களெல்லாம் மிகையாமென்பதூஉமெல் லாம் படுமென்பது. (கூச)

[வழிநூலாவது இதுவெனல்]

கரு௦. வழியெனப் படுவ ததன்வழித் தாகும்.

இது, வழிநூலாமாறுணர்த்துகின்றது.

இ—ள் : முதலிய நெறியானன்றி வழிநூலென்றற்குச் சிறப்புடையது அம் முதனூல்வழிப் பிறந்த வழிநூல் என்ற

வாறு.

அது தொல்காப்பியம். மற்றுப் பல்காப்பியம் முதலியன வோவெனின்,—அவை வழிநூலே; தொல்காப்பியத்தின்வழித் தோன்றினவென்பது; என்னை?

1. செய்துகாட்டினும் என்பது யாப்பருங்கல விருத்தி போல்வனவற்றை.

2. பாட்டுந் தொகையும்—பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்.

3. அழிவழக்குப்பற்றிப் பிற்காலத்து நூல் செய்யின் புறனடைச் சூத்திரம் ஒன்றே செய்ய அமையும். "ஏனைய மிகையாம். ஏனெனிற் பின் அவ்வழக்குமழிதலின் என்றபடி.

4. அமையுமன்றி என்றிருப்பது நலம்.

"கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்ந் தொல்காப் பியன்ற
னாணையிற் றமிழறிந் தோர்க்குக் கடனே."

என்பவாகலானும், இவ்வாசிரியர் பல்காப்பியர், பல்காயனார் முதலாயினாரை அவ்வாறு கூறாராகலானுமென்பது; என்றார்க்குத் தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல் செய்ததெற்றுக்கெனின், — அவரும் அவர்செய்த எழுத்துஞ் சொல்லும் பொருளுமெல்லாஞ் செய்திலர்; செய்யுளிலக்கணம் அகத்தியத்துப் பரந்துகிடந்ததனை இவ்வாசிரியர் சுருங்கச்செய்தலின் அருமைநோக்கிப் பகுத்துக் கூறினாராகலானும் [1] அவர் தந்திரத்துக்கேற்ப [2] முதனூலோடு பொருந்த நூல்செய்தாராகலானும் அமையுமென்பது. பிற்காலத்துக் காக்கைபாடினியாரும் தொல்காப்பியரோடு பொருந்தவே

நூல்செய்தாரென்
பது; மற்று,

" வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு கரைபொருது கிடந்த
நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கண மறைகுவன் முறையே.''

எனத் தெற்குக் குமரியன்றிக் கடலெல்லையாகிய காலத்துச் சிறுகாக்கைபாடினியார்செய்த நூலினையும் அதன்வழிநூலென்று மோவெனின்,—ஈண்டுக் கூறிய பொருளெல்லாந் தழுவுமாற் றாற் [3] செய்தாராயின் அது வழிநூலாதற்கு இழுக்கென்னை யென்க. இனி, சில குன்றக்கூறினார் தொகுத்து நூல்செய்தாராகவினென்பாரும் உளர். [4] ஒழிபொருளவாயினது தொகை யெனப்படாமையின் அங்ஙனங் கூறுதல் நூலிலக்கணமன் றென்பது.

(கூரு)

---

1. அவர்—தொல்காப்பியர். தந்திரம்—நூல்.

2. முதனூல்—அகத்தியம்.

3. செய்தாராயின் என்னும் பாடமே பொருத்தம். (S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பு.)

4. ஒழிபொருளவாயின் அது எனப் பிரிக்க. ஒழிபொருள்—சில குறைவுபட்ட பொருள். அது—அந்நூல். தொகை—தொகுத்துச் செய்யப்பட்ட நூல்.



இனைத்துவகையெனல்]

சூருக. வழியி னெறியே நால்வகைத் தாகும்.

இது வழிநூல் இனைத்துவகைத்தென்கின்றது.

இ—ள்: மேல், வழிநூலெனப்பட்டது நான்குவகையாற் செய்யப்படும் என்றவாறு.

இதன் பயன்:— ஒருநூலுள் ஒன்றல்லது பல வாராவெனவும், அதனானே நான்குவகைய வழிநூலெனவும், முதனூலாயின் ஒன்றேயாமெனவுங் கூறியவாறாயிற்று.

அவையாவன மேற்கூறுப.

[வழிநூலின் வகைநான்கும் இவை எனல்]

கூ௫௨.

**தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்**
**ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே.**

*இந் நான்குவகையுங் காரணமாக மேற்கூறிய நால்வகை வழிநூலும் பெறலாம் என்றவாறு.*

தொகுத்தலென்பது, முதனூலுள் விரிந்ததனைச் சில்வாழ் நாட் சிற்றறிவின் மாக்கட்கு அறியத் தொகுத்துக் கூறல்; விரித்தலென்பது, முதனூலில் தொகுத்துக் கூறப்பட்டு விளங்காது நின்றதனை விளங்குமாற்றான் விரித்துக்கூறல்; தொகைவிரியென்பது, அவ்விருவாறும் பற்றித் தொகுத்து முன்னிறீஇ அந்நிறுத்தமுறையானே பின் விரிந்துக் கூறுதல். மொழி பெயர்த்தென்பது, பிறபாடையாற் செய்யப்பட்ட பொருளினைத் தமிழ்நூலாகச் செய்வது. அதுவுந் தமிழ்நூலுள் வழிநூற்கு மரபாமென்றவாறு. அதர்ப்படவென்பது, நெறிப்பட வென்றவாறு; நெறிப்படுதலென்பது, அவ்வாறு மொழிபெயர்த்துச் செய்யுங்கால் அது கிடந்தவாற்றானே செய்யப்படும்; தொகுத்தும் விரித்துந் தொகைவிரியாகவுஞ் செய்ததனாற் பயமில்லை, தமிழர்க்கும் ஆரியர்க்குமென்பது. மொழிபெயர்த்தெனவே, பொருள் பிறழாமை பெற்றாம். [1] வழக்குநூலுள்ளும் மொழிபெயர்த்து யாக்கப்படுவன உளவோவெனின்,—[2] அற்றன்று; அது வேண்டுமே?

---

1. இலக்கண நூலுளன்றி வழக்கு நூலுளுமென்க.

2. அற்றன்று—வேண்டியதில்லை.





1 வேதப் பொருண்மையும் ஆகமப் பொருண்மையும் நியாய நூற்

பொருண்மையும்பற்றித் தமிழ்ப்படுக்குங்கால் அவற்றிற் கும் இதுவே இலக்கணமென்றற்கு மொழிபெயர்த்தலும் இவற் றுக்கட் கூறினனென்பது.

இனி, படர்ந்துபட்ட பொருண்மையவாகிய மாபுராணம்,

பூதபுராணமென்பன சில்வாழ்நாட் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப்படாமையின், தொகுத்துச் செய்யப்பட்டு வழக்குநூலாகிய

தொல்காப்பியம் • இடைச்சங்கம் முதலாக இன்றுகாறும் உள

தாயிற்றெனக் கொள்க.

(கூஎ)

[நூலிலக்கணம் இதுவெனல்]

கூருரு. ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை

மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
யீரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு

புணரி

னூலெனா மொழிப
நுணங்குமொழிப் புலவர்.

இஃது, எல்லா நூற்கும் ஆவதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஒத்த சூத்திரத்தினை உரை நடாத்தல்வேண்டின

வழிப் பிறந்த காண்டிகையும், அக்காண்டிகையானும் விளங்காத காலத்து அதனையும் விளங்கக்கூறும் உரை விகற்பத்ததுமாகிப் பத்துவகைக் குற்றமுமின்றி நுண்பொருளவாகிய முப்பத்திரு வகை உத்தியொடு பொருந்திவரின் அதனை நூலென்று சொல்லுப நுண்ணிதின் உணர்ந்துரைக்கும் புலவர் என்றவாறு.

'ஒத்த சூத்திரம்' என்றதனுன், நூலின் வேறாகிய இரு வகைப் பாயிரமுஞ் சூத்திரத்தோடு ஒத்த இலக்கணத்தவென் பது கொள்க. 'உரைப்பின்' என்றதனுன்,

"உண்ணின் றகன்ற வுரையொடு பொருந்தி."
(சஎஅ)

வருதலை நூலிலக்கணமெனச் செய்யுளியலுட் கூறிப்போந்தாம்; அங்ஙனம் வேறாகிப் பொருந்தி வருமெனப்பட்ட உரை

1. வேதப் பொருண்மை முதலியன

வழக்குநூல்.

பியல்]
சூகூக

பொருளதிகாரம்

யின்றிச் [1] சூத்திரத்தானே பொருள்நிகழ்ந்த காலமும் உண்டென்

பதாம்.

இதனது பயம்: உரையுங் காண்டிகையுமின்றிச் சூத்திரத் தானே சொற்படுபொருள் உரைத்தலுமுண்டு, [2] அஃது [3] அவற்றை யொழிய ஆகா இக்காலத்தென்றலாயிற்று.

'உரைப்பின்' என்னும் வினையெச்சம், 'கிளத்தல்' என் பதனோடு முடியும். 'வகை' என்றதனுன் உரையெனப்பட்டது தானும் அக்காண்டிகையின் மெய்ப்படக் கிளந்ததேயாகலின் அவ் விரண்டுஞ் செய்யுளியலுட் கூறிவந்த உரை விகற்பமேயென்ப துணர்த்தியவாறு. அஃதேல், காண்டிகையென்றாற்போல இதற் குப் பெயர் வேறு கூறுதேனெனின்,—வேண்டியார் வேண்டிய

வாறு,

[4] "மறுதலைக் கடாஅ மாற்றமும்." (கூடுக)

எல்லையின்றி இகந்துவருவனவெல்லாம் [5] உரையுள் எழுதப்படா மையின், [6] அதுவுங் காண்டிகைப் பகுதியேயென்பது அறிவித் தற்கு வேறு பெயர் கூறாது 'மெய்ப்படக் கிளந்தவகை' என்றே போயினானென்பது.

மற்று இல்லதற்கும் இலக்கணஞ் சொல்லுவார்போல ஈரைங்குற்றமுமின்றி யென்றதென்னையெனின், — அவற்றை எதிர்மறுத்துக்கொள்ளும் பத்துவகைக் குணமுங் கோடற்குத் தந்து கூறினானென்பது. அவை,

"எதிர்மறுத் துணரின் திறத்தவு மவையே." (கூகூச)

என்புழிச் சொல்லுதும். அல்லதூஉம், [7] இவை கூறியவதனானே பிறிதொரு பொருள் கொள்ளப்படும் இடங்களும் உள; அவை நோக்கி அங்ஙனங் கொள்ளாதனவுந் தொகுத்து உடன் கூறினா னென்பது. [8] அவையும் அவற்று விரிச்சூத்திரத்துட் கூறுதும்.

---

1. உரைப்பினென்றதனான் உரையின்றி நிகழ்ந்த காலமு முண்டு என இயைக்க.
2. அஃது—அவ்வாறு சூத்திரத்தாற் பொருளுரைத்தல்.
3. அவற்றை—அவ்வுரைக்கப்பட்டவற்றை.
4. மறுதலைக்கடா—தடை: மாற்றம்—விடை.
5. உரை—காண்டிகையுரை
6. அதுவும்—அவ்வுரையும்.
7. இவை—இக்குற்றங்கள்.
8. அவை—பிறிதொரு பொருள்கொள்ளல்.

'ஈரைங் குற்றமும்' என்ற உம்மையை எச்சப்படுத்துப் பிறவுங் குற்றம் உளவென்பதுங் கொள்க. அவை முதனூலொடு மாறுகோடலும், யாப்பினுட் சிதைதலும்போல்வன. அவை முன்னர்ச் சொல்லும்.

'நேரிதின்' என்றதனுன், முதல்வன் செய்த நூலாயினும் வழிநூலாயினும் [1]அவ்வழிநூலின் முழுவதூஉந் தெரிந்துணரும் நுண்ணுணர்வினர்க்கே முப்பத்திருவகை யுத்தியும் புலனவதெனக் கொள்க. அவையும் முன்னர்ச் சொல்லும். 'வகையதாகி' என்பது, 'புணரின்' என்பதனோடு முடிந்தது. 'புணரின்' என்பது, 'மொழிப' என்பதனோடு முடிந்தது.

ஒத்த சூத்திரத்தினை உரை நடாத்தல்வேண்டிற் காண்டிகைப் பொருளினை விளங்கச்சொல்லும் உரை விகற்பத்ததாகி யெனவே, சூத்திரமுங் காண்டிகையும் உரையுமென மூன்றும் அவற்றோடு குற்றமின்மையும் உத்திவகையுங் கூட்ட நூலிலக்கணம் ஐந்தாயின.

இதனது பயம்:— இவற்றது

விரிச்சூத்திரங்களான் உய்த் துணர்வான் எடுத்தோதித் தொகுத்துக் காட்டலாயிற்று.

மற்றுக் குற்றத்தினை இடைவைத்து உத்திவகையினை ஈற்றுக்கண் வைத்ததென்னையெனின்,—ஈரைங்குற்றமு[2]மின்றிவரும் இலக்கணம் முதனூற்கண் இல்லையென்பது 'முதல்வன்கண்' (கூசுக) என்புழிச் சொல்லுமாகலின், அவைபோல முதனூற்கண் உத்திவகையும் வாரா, சிறுவரவினவென்றற்கென்பது.

இனி, 'ஒத்த' என்றதனாற் பொதுப்பாயிரமுஞ் சிறப்புப் பாயிரமும் சூத்திரமுந் தம்மின் வேறென்றலும், அவ்விரு வகைப் பாயிரவுரையுஞ் சூத்திர உரையும் வேறெழுதப்படு மென்றலும், சூத்திரவுரையுட் பாயிரவுரை மயங்கிவருவன உள வென்றலும், [3] அவ்விருவகையுரைக்கும் வேறாயினும் அவ்வுரை செய்தான் பெயர் கூறுதன் முதலாகிய பாயிரவுரை கூற அமையு

1. அவ்வழிநூலின்—அவ்வழிநூலின்கண்.

2. இன்றிவரும்—இன்றி வருதலாகிய

3. அவ்விருவகையுரை—சூத்திரவுரையும் பாயிரவுரையும். உரைசெய்தான் பெயர் கூறன் முதலாகிய பாயிரவுரை அதற்கு வேறென்க.

மென்றலும், [1] சூத்திரந்தானே
பாயிரமில்லாதவழிப் பாயிரம் போல நான்முகத்து
நிற்குமென்றலும், அங்ஙனம் நின்றவழிப்
பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமும்
உரைவகைத்தாற் பெய் துரைத்தலும்,
அவ்விருவகைப் பாயிரமுஞ் செய்தார் இன்னு
ரென்றலுமென் றின்னோரன்ன கோடலாயிற்று.
இவையெல் லாஞ் சூத்திரத்தொடு ஒத்த
இலக்கணமேயாதலின் ஒத்தவென் னும்
மாட்டேற்றானடங்கின.

அவை வருமாறு:

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்."

என்னும் பொதுப்பாயிரமும்,

"வடவேங்கடந் தென்குமரி."

(பாயிரம்) என்னுஞ் சிறப்புப்பாயிரமும்,
ஒழிந்த சூத்திரங்கள் போல நூற்பாவகவலாகி
நூலின் வேறாகி இன்றியமையாவாயின.

அவற்றிற்குச் சூத்திரவுரையொடு மயங்காமல் வேறு உரையும் ஆண்டெழுதப்பட்டன.

" எழுத்தெனப்படும் "
(தொ. எழு. க)
என்னுஞ் சூத்திரத்தினை [2] நிறீஇ, 'என்பது சூத்திரமெனவும், இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின்' எனவும், 'இவ் வதிகாரம் யாதனை நுதலியதெனவும், [3] அவற்றிற்கு விடை கூறலும், இவ்வதிகாரம் எனைப்பகுதியான் உணர்த்தினானோ வெனின்' எனவுங் கூறி ஒழிந்த ஒத்திற்கும் இவ்வாறே சூத் திரவுரையோடு பாயிரவுரை மயங்கச் சொல்லியவாறும் அவற் றவற்றுட் கண்டுகொள்க.

இனி, [4] இவ்வுரைசெய்தார் யாரோ (வெனின்),—என்ற வழி, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரரென உரையெழு தினான் பெயர் கூறுதலும் சூத்திரஞ் செய்தான் பெயர் கூறுத லோடு ஒத்த இல்க்கணத்ததாயிற்று.

---

1. சூத்திரந்தானே பாயிரம்போல் நிற்பதையும், பாயிரம் பெய்துரைத்தலையும் இறையனார் களவியலுட் காண்க.

2. -ஙிறீஇ எனவும் எனவியைக்க.

3. அவற்றிற்கு விடை கூறலும் என்பது பின்வரும் கூறி என்பதன்பின் வரல்வேண்டும். இவ்வாறே மாறியெழுதின பல.

4. இவ்வுரை—களவியலுரை. எனின் என்பது சிதைவுற் றதுபோலும்.



" அன்பி னைந்திணைக் களவெனப் படுவ
தந்தண ரருமறை மன்ற லெட்டனுட்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர்."

(இறை. சூ. க)

என்பது, பாயிரமின்றித் தானே நான்முகத்து நின்று இரு வகைப் பாயிரவுரையும் பெய்து உரைக்கப்பட்டது.

" வடவேங்கடந் தென்குமரி."

என்னுஞ் சிறப்புப்பாயிரஞ் செய்தார் பனம்பாரனாரெனவும்,

" வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்."

என்னும் பொதுப்பாயிரஞ் செய்தான் ஆத்திரையன் பேரா

சிரியனெனவும் பாயிரஞ்செய்தான்

பெயர் கூறியவாறு.

1 ' என்பது, பாயிரம்; என்னுதலிற்றோ (எனின்),— எனப் பாயிரவுரைக்கு முகவுரை வந்தவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. (கூஅ)

[ஐய மறுத்தல். இதுவு நூற்குரிய

இலக்கணமெனினுமாம்]

கூருச. [2] உரையெடுத் ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப வுடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விடுத்தலும் விலக்கலு முடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே.

இஃது, ஐயம் அறுத்தனுதலிற்று; என்னை? மேற்கூறிய சூத்திரம் உரைபெறுங்காற் காண்டிகையும் உரையும் வேறு வேறு பிறக்கக்கண்ட மாணாக்கன் ஒழிந்தனவும் ஒன்றொன்றனை ஒழித்துவருங்கொலென்று ஐயுற்றாற்குக் காண்டிகையும் உரையுமே கண்டாய் ஒன்று ஒன்றனை ஒழிந்து வருவனவென்று ஐயம்அறுத்தமையின். மேலதற்கே புறனடையெனவும் அமையும்.

இ—ள்: உரையெடுத்து அதன்முன் யாப்பினும் — காண்டிகையினை விளக்குங் கருத்தினாலும் அக்கருத்தின்றியும் அச் சூத்திரத்திற்கு [3] உரை தொடர்ந்தெழுதினும்; சூத்திரத்தினை அதுவென்று சுட்டினான்.

"முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்து."(தொ. சொ. ௩௧)
என்பதனானெனவுணர்க.

---

1. இங்கும் எனின் என்பது சிதைவுற்றதுபோலும்.
2. இதற்கு உரையாசிரியர் கூறுவதே பொருத்தம்.

3. உரை—விரிவுரை.

பியல்]





சூத்திரம் புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்— அச்சூத்திரத்திற்கு இடையின்றிக் காண்டிகை பொருந்தச்செய் யினும் 'புரைதப' என்பதனான், மேல் இடைபுகுமெனப்பட்ட பாயிரவுரையின்றிச் [1] செய்த காண்டிகைக்கும் பெரும்பான்மை யெனக் கொள்க. 'உடன்பட' என்பதனாற் காண்டிகையல்லாத

முகவுரைக்கண்ணே முன்னும் பின்னுங் காண்டிகை பெய்து உரைத்தலுங் கொள்க. கொள்ளவே [2] முற் கூறிய ஐந்தும் ஒருங்கு வருதலும் இவ்வாறே பெற்றாம்.

விடுத்தலும் விலக்கலும் உடையோர் வகையொடு — கடாவிற்கு விடை கூறுவாரும் போலி மறுப்பாருஞ் சொல்லுஞ் சொற்பகுதியோடு; 'வகை' என்றதனன், அவ்விருபகுதியுங் காண்டிகைக்கு வருங்காற் குறிப்பினாற் கொள்ள வருமெனவும் உரைக்கண் வருங்காற் கூற்றினாற் கொள்ள வருமெனவுங் கொள்க. அஃதேற் கூற்றினாற் கோடல்,

"மறுதலைக் கடாஅ மாற்றமு முடைத்தாய்"

(சூ ரு சு)

என வருகின்ற சூத்திரத்திற் பெறுதுமெனின், — அற்றன்று; அது பிறன்கோள்பற்றி மறுதலைக் கடாஅ மாற்றமுங் கூறுதற்குச் சொல்லினான்; இஃது அன்னதன்றி அறியாது வினவுந் துணையேயாகலின் வே [3] றென்பன, விடுத்தலெனவே, வினவினை விடுத்தல்பெற்றாம். விலக்கலெனவே, அஃதல்லாப் போலியை விலக்குதலென்பது பெற்றாம்.

புரைதப நாடிப் புணர்க்கவும்படுமே—காண்டிகையிரண்டும் உரையிரண்டுமென்று வருகின்ற நான்கன்கண்ணும் [4] இடை அந்தரமின்றிப் புணர்க்கவும்படும் [5] அவ்விருபகுதியும் என்றவாறு.

அஃதாவது, [6] காண்டிகைப்பகுதி இரண்டற்கும் 'விடுத்தலும் விலக்கலும் உடையோர்' குறிப்பினாற் கொள்ளவைத்

1. செய்த—செய்தல் என்றிருத்தல்வேண்டும்.

2. முற்கூறிய ஐந்து—சூத்திரம், உரை, காண்டிகை, குற்றமின்மை, உத்திவகை.

3. என்பன—எனப்படும் என்றிருத்தல் வேண்டும்.

4. இடை அந்தரம்—இடைவெளி.

5. அவ்விருபகுதி—விடுத்தலும், விலக்கலும்.

6. காண்டிகையுரைப்பகுதி இரண்டு—சூத்திரம்பட்ட பண்பிற் சொல்வதும் அஃதின்றி ஏதுவும் எடுத்துக்காட்டும் கூறுவதும். (க0க, க0உ-ம் சூத்திரம்.)



தலும், [1] ஒழிந்த உரையிரண்டன்கண்ணும் அவை கூற்றினாற் கொள்ளவைத்தலுமென உணர்க. [2] உம்மை, இறந்தது தழீஇயிற்று ; என்னை? காண்டிகையும் உரையும் ஒன்று ஒன்றனை ஒழித்தும் வருமென்றமையின். ஒழியாது வருதல் 'உடன்பட'

என்றதனுல் தழுவப்பட்டது. இவற்றிற்கு தத்தம் விரிச்சூத்திரத்துட் சொல்லுதும். உதாரணமாமாறு

(௬௯)

[சூத்திரமாவது இதுவெனல்]

௬௫௫. மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை யுரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
யளக்க லாகா வரும்பொருட் டாகிப்
பலவகை யானும் பயன்றெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்.

இது, நிறுத்தமுறையானே சூத்திரமாமாறுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற் கிளந்து எடுத்த யாப்பின் உட்பொருளொடு,

"சூத்திரந் தானே,
ஆடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே."

என மேற் செய்யுளியலுள் விதந்தோதிய இலக்கணமுடைத்தாய்;

எனவே, வழுவமைக்கின்ற கிளவியாக்கத்து முற்கண்ணே, வினையியலுட் கூறப்படும் இலக்கணத்தினை ஆண்டு ஓர் உப காரப்படக் கூறியதுபோல, அடிவரையின்மைக்கு ஆண்டுக் கூறியதல்லது இச் சொல்லப்பட்ட இலக்கணம், ஈண்டு இனிக் கூறுகின்ற இலக்கணத்தோடு கூடி மரபெனவேபடும் என்றுணும். ஆண்டுப் பொதுவகையாற் கூறிய நூலிற்கும் இஃதொக்கும்; என்னை? பல சூத்திரந் தொடர்ந்து நூலாகி ஈண்டே

---

1. ஒழிந்தவுரையிரண்டு—விரிவுரை இரண்டு. பின்வரும் சிறப்புச் சூத்திரங்களை நோக்குக, (சுருஅ, சுருகூம் சூத்திரம்)

2. உம்மை—புணர்க்கவும் என்ற உம்மை.

மரபு கூறப்படுதலின். உரையாயின் அன்னதன்றி [1] நால்வகையுரையுள் [2] ஏற்பது பகுதி வேறுபடும் மரபுகூறுகின்றமையின் அது செய்யுளியலுட் கூறியவாறுபோலாகாது வேறெனவேபடும் ஈண்டென்பது.

இனி, முற்கூறிய பாயிரவிலக்கணத்தினை இன்றியமையாதது [3] சூத்திரமென்றற்கும் இதுவே ஒத்தாகக் கொள்க; என்னை? [4] மேற் [5] புறத்துநின்று 'மேற்கிளந்தெடுத்த யாப்பு' எனவேபடுமாகலி னென்பது.

இதனது பயம்: பாயிரவிலக்கணங்களோடு பொருந்தச் சூத்திரஞ்செய்தலென்பதாயிற்று. இஃது ஒப்பக்கூறல் (௬௬) என்னும் உத்திவகை.

மேற்கிளந்தெடுத்த இலக்கணமாவது, ஆடிநிழற்போல் பொருளானுந் [6] தேர்தல் வேண்டாமற் பொருட்பெற்றி உணரின்றுங்குச் சூத்திரத்தொடருள் இலக்கியமின்றாயினும் [7] அதனை இதுகேட்டான் காணுமாற்றாற் செய்தலாயிற்று.

இனி, மேற் கிளந்தெடுத்த பாயிரவிலக்கணம் சூத்திரத்தோடு பொருந்துங்காற் பொதுப்பாயிரவிலக்கணம் பொருந்தா, சிறப்புப்பாயிரவிலக்கணம் எட்டுமே பொருந்துவனவெனக் கொள்க. அஃதென்னை பெறுமாறெனின்,—மேற்கிளந்த யாப்பென்னாது எடுத்த யாப்பென்றதனானே ஒரு நூற்குச் சிறப்பு வகையான் இன்றியமையாததாகி எடுத்துக்கொள்ளப்படுவது,

" வடவேங்கடம் தென்குமரி." (பாயிரம்)

என்றூற்போலுஞ் சிறப்புப்பாயிரமாகலானும்,
பொதுப்பாயிரம்

---

1. நால்வகையுரை என்றது—'பாட்டிடை வைத்த' என்னுஞ் (சசுரு-ம்) சூத்திரத்தாற் கூறப்படும் நால்வகையுரையை.

2. ஏற்பது என்றது அவற்றுள் 'பாவின்றெழுந்த கிளவியானும்' என்று கூறிய உரைப்பகுதியை. பகுதி வேறுபடுதல்—காண்டிகையும் உரையும் எனப் பகுதி வேறுபட்டுப் பின் அவையும் இவ்விரண்டாதல். சுருரு-ம் சூத்திர உரை நோக்குக.

3. சூத்திரம் இன்றியமையாதது என்றற்கும் இதுவே ஒத்து என்க.

4. மேல்—முன்.

5. புறம்—நூற்புறம்.

6. தேர்தல்வேண்டாது—வெளிப்பட என்றபடி.

7. அதனை—அவ்விலக்கியத்தை.
இது—இலக்கணம்.

88



எல்லா நூன்முகத்தும்
உரைக்கப்படுமென்றற்கும் அங்ஙனங்

கூறப்பட்டது.

சில்வகை எழுத்தின்
செய்யுட்டாகி—ஆடிநிழலின் அறியச் செய்யுங்கால் அதுபோல ஒருவழிப் பொருளடக்கி ஒருவழி வெள்ளிடை கிடப்பச் செய்யப்படாது பொருட்குவேண்டுஞ் சில சொல்லாற் செய்யுஞ் செய்கைத்தாகி; செய்யுளென்றூன் அடி வரைச் செய்யுளின் [1] வேறுபட்ட பொருட்பாட்டிற்றாகிய அடி வரைப் பாட்டினுட் சிறப்புடைய ஆசிரியத்தானும் வெண்பாவானுஞ் செய்யவும்படுஞ் சூத்திரமென்றற்கென்பது; என்னை? [2] மண்டிலப் பாட்டின் உடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய் தலையானும்,

"சின்மென் மொழியிற் றாய பனுவல்."
(ருசஎ)
வெண்பாட்டாகி வருமாதலானுமென்பது.

சொல்லுங்காலே உரையகத்து அடக்கி — பொருளானும் போலியானுஞ் சொல்லுவார் சொல்லுங்கால் அவ்வுரையெல்லாந் தன்னகத்தடக்கி,

நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத்தாகி—பருப்பொருட் டாகிய பாயிரம்போலாது நுண்பொருட்டாகிய பொருள் கேட் டார்க்கு வெள்ளிதன்றி உள்ளுடைத்தாகி,

துளக்கலாகாத் துணைமை எய்தி — முன்னும் பின்னுங்

கிடந்த சூத்திரங்களானே தன்னுட்பொருள் இன்றியமையா

தாகலெய்தி; எனவே, ஒன்றொன்றனை இன்றியமையாத உறுப்

புப்போலச்

செய்யல்வேண்டுமென்றவாறாயிற்று.

---

1. வேறுபட்ட பொருட்பாடு என்றது—பாட்டுக்கள் தம்

முள் வேறுபட்ட பொருட்டோற்றமுடைத்தாதலை. வேறுபட்ட இலக்கணமுடைத்தாதல் எனினுமமையும். அடிவரைச் செய்யு ளின்—அடிவரையறை கூறுஞ் செய்யுளின்கண். அடிவரைப் பாட்டு என்றது இன்னபாட்டு இத்துணை யடியுடையது என அளவியல் கூறும் ஆசிரிய முதலிய பாட்டுக்களை. அடிவரைச்

செய்யுள் என்பது அறுவகைச் செய்யுள் என்றும் பாடமிருந்

திருக்கலாமோ என்பது ஆராயத்தக்கது.

2.

மண்டிலப்பாட்டின் — மண்டிலப்பாட்டான்

என்றவாறு;

என்றது மண்டிலவாசிரியப்பாவான் சூத்திரஞ் செய்தமையானே சூத்திரங்கள் ஆசிரியப்பாவானுஞ் செய்யப்படுமென்பது உடம்பொடு புணர்த்திய இலக்கணத்தாற் பெறப்படுமென்றபடி.

பியல்]

# பொருளதிகாரம்

சூஃஃ

அளக்கலாகா அரும்பொருட்டு ஆகி — அளத்தற்கரிய பெரும் பொருட்டாகி.

பல்வகையானும் பயன் தெரிபுடையது — பலவாற்றானும் பொருள் விளங்க வருவது;

சூத்திரத்து இயல்பென யாத்தனர் புலவர் — இவையெல்லாஞ் சூத்திரத்திலக்கணமென்று முதனூல் செய்த ஆசிரியரால் சொல்லப்பட்டன என்றவாறு.

இஃதியல்பெனவே, இவற்றிற் சிறிய வேறுபட்டன விகார

மென்றுணும்.

"உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமு முயிரும் வருவழி யியற்கை."

(தொ. எழு. கஙஙு)

என்றவழி, யகரமும் உயிரும் வருவழியெனவே இது நிலைமொழித் தொழிலென்பது, ஆடிநிழலின் அறியத்தோன்றிற்று.

இனி, நிலைமொழித் தொழில் வேறு கூறினமையின், "மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி." (தொ. பாயிரம்) எனப் பாயிர இலக்கணத்துடன் பொருந்துவதாயிற்று.

இனி, [1] எண்வகையாற் பரந்துபட்ட புள்ளியீற்றுச் சொல் லீனயெல்லாம் 'உகரமொடு புணரும் புள்ளி' யென அடக்கினமையிற் சில்வகையெழுத்தின் செய்யுளுமாயிற்று. 'யகரமும் உயிரும் வருவழி இயற்கை' யென வருமொழிப் பரப்பெல்லாம் அடக்கினமையின் அதற்கும் இஃதொக்கும்; இதனைப்பற்றியெழுந்த பொய்ப்பொருளும் மெய்ப்பொருளும் பலவாகலின் உரையகத்தடக்கலும் உடைத்தாயிற்று.

தொகைமரபினுள்ளும் உயிர் மயங்கியலினுள்ளும் புள்ளி மயங்கியலினுள்ளுங் குற்றியலுகரப் புணரியலினுள்ளும் பரந்துபட்ட பொருளினை நுழைந்து வாங்கிக்கொள்ள வைத்தமையின் நுண்மையொடு புணர்ந்ததூஉமாயிற்று. இச்சூத்திரம் பொருளுரைத்தவழியும் வெள்ளிதன்றி [2] உள்ளுடைத்தாகலின் நுண்மையுடைத்தெனவும்பட்டது.

"குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்." (தொ. எ. கசு0)

என்பதூஉம்,

1. ஞ ண ந ம ல வ ள ன என்பன.

2. உள்—உட்பொருள் (சூக்குமம்).



" ஞகாரை யொற்றிய தொழிற்பெயர் முன்னர்."

(தொ. எழு. உகூசு)

என்பதூஉம் மூதலாயவற்றிற்கும் இஃது இன்றியமையாதாக லும் இதற்கு அவை இன்றியமையாவாகலும் உடைமையின், துளக்கலாகாத் துணைமையொப்பியதூஉமாயிற்று. இருபத்துநான் கீறும் இருபத்திரண்டு முதலும்பற்றி எழுந்த மொழிகளெல் லாம் வேற்றுமைக்கண்ணும்

அல்வழிக்கண்ணும் இருமொழிக்
தொழிலும் ஒருவகையால் தொகுத்துக் கூறினமையின் அளக்க
லாகா அரும்பொருட்டாதலும் பெற்றாம். இங்ஙனம் வருதல்
இயல்பெனவே சிறிய வேறுபட்டு வருவன உளவாயின் அவை
யும் அமையுமென்றானும்; அவை,

"அந்நா லைந்து மூன்றுதலை யிட்ட
மூன்றுறக் கிளந்த வுயர்திணை யவ்வே."

(தொ. எ. உ0சு)

என்றாற்போல்வனவும் [1] பிறவும் இலேசுச் சொல்லும் இயல்
பன்றி விகாரமெனப்படும். (க00)

[காண்டிகை உரை இதுவெனல்]

சுறுசு. பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்.

இது, முறையானே காண்டிகையாமாறுணர்த்துதல் நுத
லிற்று.

இ—ள் : குற்றமில்லாத சூத்திரந் தனதுட்பட்ட இலக் கணத்துள் ஒன்றுங் கரவாது முடியச்செய்வது காண்டிகையாம் என்றவாறு.

'பழிப்பில் சூத்திரம்' என்றதனால், காண்டிகை செய்யத் தகாதென்று இகழ்ச்சிப்படப் பாந்தன உளவாயின் மறுத்துச் செய்கவென்பதாம். இதனை வருகின்ற காண்டிகைக்கும் அகல வுரைக்கும் ஏற்பித்துக்கொள்க.

உதாரணம்: [2] "எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப் படுவன அகரமுத, னகரவிறுவாய் முப்பஃது என்று சொல்லு வார் ஆசிரியர், சார்ந்துவரலிலக்கணத்த மூன்றுமல்லாத இடத்து" (தொ. எழு. க) எனவரும்; பிறவும் அன்ன.

இனி, மறுத் துச் செய்யுங்கால்,

---

1. பிற இலேசுச் சொல்லும் எனவும் பாடம். அது சிறப்பு.

2. இது காண்டிகைஉரைக் குதாரணம்.

[1] "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்."

(சூ. ந.) என்பது தெய்வச் சிறப்பினை அறியுஞ் சிறப்போடு வெவ்வா யுடைய வேலனது வெறியாட்டினை ஆடிய காந்தளுமென்றாற் போல வருவன பலவுங் கொள்க. இங்ஙனங் கூறிய உதாரணங் காட்டல்வேண்டாமையை உணர்ந்து உரைநடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து நூல்களென்பது கருத்து. அஃதேல், உதாரணத்தோடு வருங் காண்டிகையிலவோவெனின்,—அது வருகின்ற சூத்திரத்துட் சொல்லுதும்.

காப்பில்லதென்னுது முடிவதென்றான், அதனாற் பரந்துபட்ட சூத்திரத்தினை அங் ஙனம் மறுத்துச்செய்யாது தொகுத்துக் காண்டிகையான் உரைக் குங்கால் உட்பொருளெல்லாம் விளங்காமற் கரந்துசெய்தலும் உண்டென்பது கொள்க; அது,

" வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்."

(சுரு)

என்பது முதலாக இக்கூறப்பட்ட
2 இருபத்தொரு துறையுங்
காந்தையெனப்படுமென்றாற்போல மாட்டென்னுஞ் செய்யுளுறுப் பினைத் தோற்றுவாய் செய்துவிடுதல். பிறவும் அன்ன. (கoக)

[காண்டிகையுரையின் பகுதி இவ்வாறு வருமெனல்] சூஎ. [3] விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச் சுட்டிய சூத்திர முடித்தற் பொருட்டா

வேது நடையினு மெடுத்துக் காட்டினு
மேவாங் கமைந்த மெய்ந்நெறித்

ததுவே.

இது, மேலதற்கோர் புறனடை; எய்தியதன்மேற் சிறப்பு விதியுமாம்; என்னை? காண்டிகையினை மேலதனோடு இருவகைய என்றமையின்.

1. 'வெறியறி சிறப்பின்' என்ற சூத்திரத்துள் (தொல். புற. ௫) சொல்லப்பட்ட இலக்கணம் பலவும் பரந்து சேறலின் அச்சூத்திரம் முழுவதற்கும் உரை கூறாது 'என்றாற் போல (இச் சூத்திரத்துள்) வருவன பலவும்' என்பதே மறுத்துச் செய்தலாம்.

2. இருபத்தொரு துறையுங் கரந்தையென்று கரந்தையை இருபத்தொன்றாக மாட்டியமை காண்க. இது மறுத்துச் செய்யாது தொகுத்துச் செய்தது.

3. இச்சூத்திரமும் காண்டிகை செய்யு மிலக்கணங் கூறிற் றென்றல் பொருத்தம். இளம்பூரணம் நோக்குக.



இ—ள்: [1] விட்டகல்வின்றி விரிவொடு பொருந்தி—சொற்படுபொருள் சொல்லுங்கால் தொடர்மொழிகளைத் [2] தொகைநிலை பயனிலை முதலாயவற்றாற் பகுத்துக்கூறாது பகுத்துக் கூறும் உரை விகற்பம்போன்று மற்றப் பொருள்தோன்றி; விடுத்த லென்பது, [3] கண்ணழிவு: அக்கண்ணழிவான் அகன்றுபடுதல் விட்டகல்வெனப்பட்டது. அங்ஙனம் அகன்றுபடுத [4] லின்றி யெனவே, 'இஃது இன்ன வேற்றுமைத் தொடர் இஃது இன்ன பயனிலைத்தொடர்' என்றாற்போலச் சொன்னிகழ்ச்சியுடைத்

தாயின் அஃது உரையெனப்படுமென்றாறும்.

சுட்டிய சூத்திரம் முடித்தற்பொருட்டா—இது நியமச்சூத்திரம் அதிகாரச் சூத்திரமென்றாற்போல முதற்கட் சொல்லிய சூத்திரப் பெயரினை அவ்வாறாகி முடிந்த முடிபு சொல்லுதற் பொருட்டாக; ஏது நடையினும்—நியமச் சூத்திரமென்றாலும் பிறிதொன்றென்றாலும் மேற்கொண்டக்கால் இன்னது காரணத்தினெனக் காரணங்கூறும் வழக்கினாலும்; எடுத்துக்காட்டினும்—அங்ஙனங் காரணங் கூறியக்கால் அதற்கேற்பது ஒன்றாயினும் உதாரணமாயினும் வழிநூற்காயின் முதனூல் எடுத்துக்காட்டுதலாயினும் ஒன்றுபற்றியும்; மேவாங்கமைந்த மெய்ந்நெறித்து அதுவே—சூத்திரஞ்செய்த ஆசிரியன் வேண்டியதே சொல்லிவிடும் பொருளிலக்கணத்திற்று மேற் கூறிவருகின்ற காண்டிகை என்றவாறு.

[5] இது, 'மெய்ந்நெறி' என்பது, சூத்திரத்துச் சொல்லிற் கருதிய பொருளிலக்கணம். அதனை அவன் வேண்டியாங்குச் சொல்லி முடிப்பினல்லது சூத்திரத்துச் சொற்கண் வந்த சொல்லாராய்ச்சியும் எழுத்தாராய்ச்சியும் அறியவேண்டுவனவெல்லாஞ்

1. விட்டகல்வு—பதம் பிரித்துப் பொருள்கூறலால் அகன்றுபடுதல்.

2. தொகைநிலை பயனிலை முதலாயவற்றால் என்றது தொகைநிலைத்தொடர், பயனிலைத்தொடர், எண்ணுநிலைத்தொடர் என்பவற்றை. உதாரணம் குடம் வனைந்தான், சாத்தன் வந்தான், நீநீர் என்பன. இவற்றை நன்னூல் விருத்தி ௩-ம் சூத்திர உரை நோக்கியறிக.

3. கண்ணழிவு—பதம் பிரித்தல் எனவே பதம் பிரித்துப் பொருள் கூறல் என்றபடி.

4. இன்றி—பதப்பொருள் இன்றி.

5. இது என்பது வேண்டியதில்லை. இனி என்று மிருக்கலாம்.

எ௦௩

சொல்லாரென்பது கருத்து.
இதனை ஈற்றுக்கண் வைத்ததனானே
வருகின்ற உரையும் இங்ஙனம் விட்டகல்வின்றி வருதலுடைத்தெனக் கொள்க.

உதாரணம்:
" இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்."
(தொ. சொ. கசு)
என்பது, [1] தன்றன்மையான் நிகழ்பொருளை இன்ன தன்மைத்தென்று சொல்லுகவென்றவாறு. அது,
[2] 'நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்து, வளியுளரும்'
என்றாற்போல்வன. இதற்குக் [3] கருத்தோதுதல் பாயிரவகையாற் பெறுமென்பது,
" உரைப்பிற் காண்டிகை."
என்புழிக் கூறிவந்தாம்.

மற்று, 4' உயர்திணையென்று
சொல்லுப ஆசிரியர் மக்கட்
சுட்டின்கண், அஃறிணையென்று சொல்லுப ஆசிரியர் அவரல பிறவற்றுக்கண், அவ்விருதிணைப் பொருண்மேலும் இசைக்குஞ் சொல்லினை' (தொ. சொ. க) என்றக்காலும்,
'வேற்றுமையெனப்பட்ட பொருள்
ஏழு' என்றக்காலும்
உதாரணங் காட்டுமாறென்னை?
அவற்றவற்றுப் பின் வேறு
சூத்திரங்களான்,
"ஆடூஉ வறிசொன் மகடூஉ வறிசொற்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு
சிவணி." (தொ. சொ. உ)
எனவும,
"ஒற்றறி சொல்லே பலவறி
சொல்லென்று." (தொ. சொ, ந)
எனவும,
"அவைதாம் பெயர்ஐ யொடுகு
இன் அது கண்."
(தொ. சொ. கூரு)
எனவும் உதாரணங்

கூறுமாலெனின்,—அவை துளக்கலாகாத்

[5] துணைமையெய்தி நின்றமையின்

அவ்வாறு உதாரணம் ஆண்டுக்

1.

'தன்றன்மையான் — தன்னியல்பான்.

2. இது சூத்திர முடித்தற் பொருட்டாக உதாரணங்காட்டி விளக்கியது. இச்சூத்திரம் நியமச் சூத்திரம்.

3. கருத்து—கருத்துரை. என்றது சொல்லுக'' என்ற கருத்துரையை.

'' தன்றன்மையான்......

4. இது பேராசிரியர் கொண்ட

பொருள்.

5. துணைமை—துணைச்சூத்திரங்கள். துணை-உதவி. கூருரு-ம் சூத்திர விரிவுரை நோக்குக.



காட்டாக்காலும் அமையும், அவற்றைப் பிற் கூறுமாகலினென்பது. அல்லதூஉம், எதிரது நோக்கி உயர்திணைச் சொன் மூன்றும் அஃறிணைச் சொல் இரண்டுங் காட்டியக்காலும் இழுக்கன் றென்பது. ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும். (கO௨)

[உரையாவது இதுவெனல்]

கூருஅ. சூத்திரத் துட்பொரு ளன்றியும்
யாப்புற
வின்றி யமையா தியைபவை
யெல்லா மொன்ற வுரைப்ப
துரையெனப் படுமே.

இது மேல்,

"ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி."
(கூருஉ)
என நிறுத்தமுறையானே காண்டிகையினை
மெய்ப்படக் கிளந்த
வகை யுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேல்,

"பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின்."
(கூருகூ)
வருதலும், அதுவே ஏதுவும்
எடுத்துக்காட்டும் உடைத்தாகி
வருதலுமென இருவகையும்
உடைத்தென்றான்; இனிச் சூத்

திரத்துட் பொருளன்றியும்
ஒருதலையாக அதற்கு இன்றியமை
யாது பொருந்துவனவெல்லாம் [1]
அதனோடு கூட்டிச் சொல்லு
தல் உரையெனப்படும் என்றவாறு.
அவை,
"இயற்கைப் பொருளை யிற்றெனக்
கிளத்தல்."
(தொ. சொ. கக)
என்றவழி, [2] எடுத்தோத்தின்றி
'நிலம் வலிதாயிற்று'. என்
னும் [3] வழுவமைதி கோடலும்,
'ஒத்தசூத்திரம்'
(சுருந)
என்றவழி,
பாயிரம் ஒத்தசூத்திரமென்று
கோடலும் இன்னோரன்ன
கொள்க.

---

1. அது—அச்சூத்திரம்.
2. எடுத்தோத்து—சூத்திரம்.
3. ஆயிற்றென்பது வழு. சேற்றுநில மிதித்துச் சென்றான் கூறியதாதலின் அமைதியாயிற்று. சேனாவரையருரை நோக்குக.

எல்லாமென்றதனுற் சூத்திரப் பொருளேயன்றி எழுத்துஞ் சொல்லும்பற்றி ஆராயும் பகுதியுடையவாதல்வேண்டும் அவ்வுரையென்பது கொள்க.

இனி, மேற் காண்டிகைக்கு ஓதிய இலக்கணங்களுள் இதற்கேற்பனவெல்லாம் அதிகாரத்தாற் கொள்ளப்படும். அவை ஏதுநடையும் எடுத்துக்காட்டுஞ் சூத்திரஞ் சுட்டுதலுமென்(கஙஎ) றின்னோரன்ன கொள்க. இவையெல்லாந் தழுவுதற்குப்போலும்,

"இன்றி யமையா தியைபவை யெல்லாம்."　　(கூ௫அ)

என்று எடுத்தோதுவானாயிற்றென்பது.　　(க௦௩)

[உரையின் பகுதி இவ்வாறு வரும் எனல்]

கூ௫கூ. [1] மறுதலைக் கடாஅ மாற்றமு முடைத்தாய்த்
தன்னு லானு முடிந்த நூலானு
மையமு மருட்கையுஞ் செவ்விதி னீக்கித்
தேற்றென வொருபொரு ளொற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்ற லென்மனுர் புலவர்.

இதுவுங் காண்டிகைபோல உரையும் இருவகைத்தென்பது அறியுமாற்றான் எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மறுதலைக்கடாஅ மாற்றமும் உடைத்தாய்—மறுதலை மாற்றத்தினை இடைசெறித்துக் கடாவுதலும் அதற்கு மறுமாற்றமாகிய விடை கூறுதலும் உடைத்தாய்; தன் நூலானும்—

உரையெழுதுவானுற் கூறப்படுகின்ற உரை தனக்கு முதனூலாகிய சூத்திரத்தானும், [2] இதனுனே உரையின்றிச் சூத்திரமே நூலெனப்படுவதூஉமாயிற்று; முடிந்த நூலானும்—அதன் முதனூலானும்; முடிந்த நூலென்பது இனைநூலென்பாரும் உளர்: [3] இனைவன கூறத் தான் கூருனாயின் அது குன்றக் கூறலென் மறுக்க. அங்ஙனங் கொள்ளும் பொருண்மையுளவாயின் அவை,

" சூத்திரத் துட்பொரு ளன்றியும்." (கூருஅ)

என்பதனுன் அடங்கும்.

1. இச்சூத்திரத்தையும் விரிவுரை யிலக்கண முணர்த்தியதாகவே இளம்பூரணர் கூறுவர். அது பொருத்தமாதல் காண்க.

2. இதனுன்—தன்னூலானுமென்றதனுன்.

3. இனைவன—இனை நூல்கள்.

89



மற்று, முதனூலாற் கூறிய பொருள் சில குன்றக் கூறிஞன்போல முடிந்தநூலாற் கொள்க என்றதென்னையெனின்,—அற்றன்று; இப்பொருண்மை [1] முடிந்தநூலினும் உண்டென்று எடுத்துக்காட்டப்படுமென்றுனென்பது; இது மேல்,

"ஏது நடையினு மெடுத்துக் காட்டினும்." (சூ௫ள)
என்றவழிப் பெறுதுமாயினும் முதனூலல்லது எடுத்துக்காட்டப்பெறுஅறொன்றற்கு ஈண்டு வரைந்து கூறினனென்பது; எனவே, இணைநூலும் அவற்று வழிநூலும் எடுத்துக்காட்டுங்கால் தனக்கு முதல்வராயினரை நாட்டி அவர் கருத்தேபற்றிப் பிறர் செய்தாரெனினல்லது பிறர்மேல் தலைமை நிறீஇ அவர் கருத்துப்பற்றி இவர் செய்தாரெனக் கூறார். அங்ஙனங் கூறின் அவர்நூற்கே உரையெழுதுவானல்லனோவென மறுக்க. இனி,

"வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவ" (சூசசூ)
னாற் செய்யப்பட்ட முதனூற்காயின் முடிந்தநூல் எடுத்துக்காட்டுதலென்னும் இவ்விலக்கணமின்றென்பது கொள்க;

2 ஒருதலையன்மையென்னும்

## உத்திவகைபற்றியென்பது.

ஐயமும் மருட்கையுஞ் செவ்விதின் நீக்கி — ஐயவுணர்வும் பொய்யுணர்வுஞ் செம்பொருளினான் நீக்கி; தெற்றென ஒருபொருள் ஒற்றுமை கொளீஇ—அச் செம்பொருள் கருவியாகக் கேட்பான் உணர்வு மருட்கை நீக்கி மெய்யுணர்ந்து தெற்றெனவும் இரட்டுறுத னீக்கி ஒற்றுமை கொளுத்தியும்; துணிவொடு நிற்றல் என்மனார் புலவர்—கவர்படச் சொல்லாது ஒருபொருள் துணிந்துரைத்து [3] மாறுதலும் அதிகாரத்தான் நின்ற உரையிலக்கணம் என்றவாறு.

மறுதலையும் மாற்றமுமென்பது, கடாவிடை; ஐயமும் மருட்கையுஞ் செவ்விதி னீக்கல் ஒருபுடை யொப்புமையுடைய போலியும் அதற்கு ஒன்றும் இயைபில்லாத பொய்ப்பொருளு மெனப்படும்.

" பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலும்."

(தொ. சொ. ௧0௫)

1. முடிந்த நூலினு முண்டென் றெடுத்துக்காட்டுவது வலியுறுத்துவதற்கு. அன்றிக் குறைவை நிறைவுசெய்தற்கன்றென்க.

2. ஒருதலையன்மை—நிச்சயமில்லாமை. சொன்னவிதி யாண்டும் ஒருதலையாக வாராமை.

3. மாறுதல்—நிற்றல்; ஒழிதல்.



என்றவழிப், பிறிதென்று ஒருகாற் சொல்ல ஆறுருபெனவும், பின்னொருகாற் பிறிதென ஒழிந்த உருபெல்லாந் தழுவுமெனவுஞ் சொல்லுதல் போலியெனப்படும்; என்னை? அவ்வாறுவதனொடு ஏழாமுருபும் பிறவுருபேற்கும் வழக்குள்வழி [1] ஒன்றனைக் கொண்டமையின், [2] அஃது ஒருபுடையொப்புமையுடைத்தாகி அப்பொருளன்றெனவும்படாது [3] மற்றொன்றனைக் கோடல் பொருளெனத் துணியவும்படாது ஐயவுணர்வு செய்தமையின் அது போலியாயிற்று.

இனிப்,

"பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலும்."

(தொ. சொல். ௧0௫)

என்னும் இரண்டும்மையும் [4] பொருளிலவென்று பிறிதுபிறிதேற்றல் உருபுதொக வருவதற்கண்ணென்று பொருள் கூறுதல் போல்வன, சூத்திரத்தின் கருத்தறியாது பொய்யை மெய்யென்று மயங்கிய மருட்கையெனப்படும். இவ்விரண்டனையும் நீக்கி உண்மை உணர்த்துதல் உரையெனப்படுவதாயிற்று. நிற்றலென்பது, நிற்க அவ்வுரையென்றவாறு. தன்நூலானும் முதனூலானும் ஐயமும் மருட்கையும் நீக்குங்கால் அவற்றுட் கிடந்த செம்பொருளானே நீக்கப்படு [5] மென்பது 'இரண்டு கண்ணானுங் கூர்மையாற் பார்த்தான்' என்பதுபோலக் கொள்க. (௧0௪)

[வழிநூல் முதனூலோடு மாறுபடச் செய்யிற் குற்றமாமெனல்]

௬௬0. சொல்லப் பட்டன வெல்லா மாண்பு
மறுதலை யாயினு மற்றது சிதைவே.

---

1. ஒன்றனைக்கொண்டு—ஆருவதையே கொண்டு.

2. அஃது ஒருபுடை ஒப்புமையுடைத்தாகி என்றது ஆருவதனையே கொண்ட அப்பொருள் ஒருபகுதியாகிய ஆருவதனோடு மாத்திரம் ஒப்புமையுடைத்தாய் என்றபடி.

3. மற்றொன்று—ஏழாவது. அது பெயராய் நின்று பிற வுருபேற்கும். ஏழாமுருபு பிறவுருபேற்றதற்கு உதாரணம்: தலைக்க ணின்றான் இடைக்கணின்றான் என்பன போல்வன. ஆறுவது தன்னுடைமைப் பொருளோடு பெயராய் நின்று ஏற்கின்றது; இஃதன்னதன்று. ஆதலின் அப்பொருளன்றெனவும்படாது என்றார்.

4. பொருளில என்றது அசைநிலையை. இவ்வாறு பொருள் கொள்பவர் எவர் என்பது புலப்படவில்லை.

5. என்பது—என்பதை என்றிருத்தல் வேண்டும்.



இது, வழிநூற்கே ஆவதோர் வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற்கூறிய சூத்திரமும் காண்டிகையும் உரையுமென்னும் மூன்றற்குஞ் சொல்லப்பட்ட இலக்கணமெல்லாஞ் சிதையாது மாட்சிமைப்படினும் முதனூலோடு மாறுகொள்ளின் அவற்றான் எல்லாஞ் சிதைந்தனவேபடும்

அந்நூல் என்ற
வாறு.
'மறுதலையாயினும்' என்ற உம்மை,
எதிரது தழீஇயிற்று;
மேற்கூறும் பத்துவகைக் குற்றமுமே (கூறுக)
யன்றி வழிநூற்கு
இதுவுங் குற்றமாமென்றமையின்.
'ஈரைங்குற்றமுமின்றி' என்
பதனை நோக்க இறந்தது தழீஇயிற்றுமாம்.
இதனானே பிற்
காலத்து நூல்செய்வார் நூலிலக்கணம்
பிறழாமற் செய்யினும்
முற்காலத்து நூலொடு பொருண் மாறுபடச்
செய்யின் அது
மரபன்று வழிநூற்கென விலக்கியவாறாயிற்று.
எனவே, முத
னூற்காயின் இவ்வாராய்ச்சியின்றென்பது
கருத்து; என்னை?
முதல்வனூன் மாறுபடுதற்கு அதன்
முன்னையதோர் நூல்
இன்மையினென்பது. அல்லதூஉம், 'மற்றது'
என்று ஒருமை
கூறினமையானும் இது வழிநூற்கே

விலக்கிற்றென்பது கொள்க.

மற்று மேல்,

"முதலும் வழியுமென நுதலிய நெறியின." (௬௪௮)

எனவே, முதனூலின் வழித்து வழிநூலென்பதூஉம் மறுதலையாயிற் சிதைவென்பதூஉம் பெறுதுமாகலின் இச்சூத்திரம் மிகையாம் பிறவெனின்,—அற்றன்று; முதல்வழியென்பன முன்னும் பின்னுங் காட்டினன்றி மாறுபடாமைக் கூறல்வேண்டுமென்பதூஉம் [1]பெறுதுமாகலின் [2]அது கூறல்வேண்டுமென்பது.

பெறுமாகலின் [3]இது கூறல்வேண்டுமென்பது. அல்லாக்கால்,

[4]"முன்னோர் நூலின் முடிபொருங் கொவ்வாமைப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறுவான்."

செல்லுமென்பது. (௧௦௫)

---

1. பெறுதுமாயின் என்றிருத்தல்வேண்டும்.

2. அது என்றது மிகையை,

3. இது—இச்சூத்திரம்.

4. முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப்—பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி என்ற நன்னூற் சூத்திரத்தின் அடிகளைச் சேர்த்து எழுதப்பட்டது இவ்வாக்கியம்.



[முதனூற்கண் குற்றம் இல எனல்]

௯௯௧. **சிதைவில வென்ப முதல்வன் கண்ணே.**

இது, மேற்கூறிய வழிநூற்குப்போல முதனூற்கே ஆவதோர் வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற் பொதுவகையாற் கூறப்பட்ட நூலிலக்கணம் ஐந்தனுள் ஈரைங்குற்றமுமின்றியென முன்னே ஓதிய இலக்கணம் ஒன்று; முதனூற்காயின் அம்மரபின இலக்கணம் வேண்டுவதன்று என்றவாறு.

சிதைவிலக்கணத்தைச் சிதைவென்று ஓதினான் ஆகுபெயரா னென உணர்க. மற்று,

“வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவற்கு”

சிதைவிலவென்பது அறிவானே உணர்வலெனின்,—எடுத்தோத்துக் களைந்து உய்த்துணர்தல் பயமின்றென்பது. அல்லதூஉம், முதனூற்கு முன்னையதோர் நூலினை இலக்கியமாகப் பெறினன்றே முதல்வன்றான் நூலிலக்கணஞ் செய்வது; மற்று [1] அன்னதோர் நூலின் அவன் செய்யாத [2] நூலிலக்கணம் யான் செய்தேனெனவும். [3] அவற்றுச் சிதைவினையே முதனூற்கண் இல்லை [4]யென்றதூஉம், [5] ஒழிந்தநான்கும் முதல்வனூற்கண்ணே உளவர்களின் அவற்றை இலக்கணங் [6] கூறினன் எனவும் இனிக் குற்றங்களும் பிற்றோன்றுங்கொலென்று அஞ்சி இங்ஙனம் அவற்றை வரையறுத்து யான் பாதுகாக்கின்றேனெனவும், அங்ஙனம் பாதுகாத்து இவ்விலக்கணங்கள் ஒகிற்றும் அவன் முத

---

1. அன்னதோர் நூலின் என்பது அன்னதோர் நூலின்மையின் என்றிருத்தல்வேண்டும். இதன் முதற் சூத்திர வுரையுள் 'முன்னையதோர் நூலின்மையின்' கூகூ௦ என வருதல் நோக்குக.

2. நூலிலக்கணம் என்றது நூல் செய்யுமுறையை. இது பாயிரத்துக்குரியது.

3. அவற்றுள்—அந் நூலிலக்கணங்களுள். அவற்று—அவற்றுள் என்றிருத்தல்வேண்டும்.

4. என்றதூஉம் என்பது என்றது எனவும் என்றிருப்பது நலம்.

5. ஒழிந்த நான்கு—சிதைவு(குற்றம்) ஒழிந்த சூத்திரம், காண்டிகை, விருத்தி, உத்தி என்பன.

6. கூறினேன் என்றிருத்தல்வேண்டும்.

னூலே இலக்கியமாகப் [1] பெற்றெனவும் ‘ கூறியது கூறல்(சுசுரு) போல்வன வேறோர் பொருள் விளக்குமாயிற் குற்றமன்று ’ என்பதனையும் யானே கூறியதன்றி முதல்வனூரிற் சில்வகை யெழுத்தின் செய்யுட்டாகவே அவற்றை வேறுவேறு விதித் துப் பாந்துபடச் செய்புமெனவும், இவையெல்லாம் அறிவித் தற்குச்

“ சிதைவில வென்ப முதல்வன் கண்.” (சுசுக)

என்றானென்பது.

மற்று, முதல்வன் [2] யாப்பே கூறுமாயின் அந்நூற்குத்

தந்திரவுத்தியும் வேண்டுவதன்றும்
பிறவெனின்,—அங்ஙனமே
முதனூற்காயின் முப்பத்திருவகையுத்தி
வாராது சிறுபான்மை
யான் வருமென்றற்கன்றே,
"ஈரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணர்ந்த."
(சூ௫௩)
என ஈண்டு விலக்கப்பட்ட
குற்றத்தின்பின்னர் அவ்வுத்தியை
வைத்த கருத்தென்பது [3] ஆண்டும்
கூறுவாமாயிற்றென்பது.

மற்று, முதனூலினுல் நூல் இலக்கணங் கூறுனோவெனின்,—
கூறினனேயன்றே? தான் ஒருவகையான்
நூல்செய்து மற்
றதுவே நூலிலக்கணமெனப்
பிற்காலத்தார்க்கு அறிய வைத்
தமையினென்பது.
மற்றுச் சிதைவிலவென்பார்
யாரோவெனின்,—நிகழ்காலத்
தாசிரியரும் எதிர்காலத்தாசிரியரும் என

உணர்க. (கOசு)

[வழிநூற்கே குற்றம் வருமெனல்]

சுசுஉ. முதல்வழி யாயினும் யாப்பினுட் சிதையும்
வல்லோன் புணரா வாரம் போன்றே.

இது, முதனூலொடு மறுதலைப்படுதல் வழிநூற்குக் குற்ற மென்கின்றது.

1. பெற்றனவும் என்ற பாடம் பெற்றெனவும் என்றிருப்பது நலமாதல்பற்றி அது திருத்தப்பட்டது. பெற்று ஓதிற்று என இயைக்க. ஓதிற்று—ஓதியது.

2. யாப்பு—செய்யுள்.

3. ஆண்டு—அச்சூத்திரத்து (சுருந).

இ—ள்: முதல்வழியாயினும் யாப்பினுட் சிதையும்—அதி காரத்தானே முதனூலினைக் குற்றமின்றி வருவதென்று ஈண்டு இலக்கணங் கூறல்வேண்டுவதன்றென்றான் இனி அம்முதனூலினை மாறுபடாமல் ஆண்டோதிய பொருண்மை கூறுமாயினும் நால் வகை யாப்பினுண் முதனின்ற மூன்றும்பற்றி வழிநூற்குக் குற்றம் பிறக்கும்; மற்று மொழிபெயர்த்தலொழியக் கொள் ளுமாறென்னையெனின்,—'யாப்பினுட் சிதையும்' என்று [1] இட மும் இடத்தியல்பொருளுமாக ஓதினமையின் அஃதொழிக்கப் படும். மற்றஃதொழிக்குமாறென்னையெனின், — [2] தமிழ்நாட்டு வழக்கிற்கு முதனூலாகிய அகத்தியத்துண் மொழிபெயர்த்துச் செய்யவேண்டும் பொருளிலவாகலானும், பிறபாடைக்கும் [3]பொது வாயின பொருளவாயின் அவையுந் தமிழ் வழக்கு நோக்கியே [4] இலக்கணஞ் செய்யப்படுமாகலானும், [5] அவர்க்கும் மொழி பெயர்த்தல் வேண்டுவதன்றாகலின் அதுவே ஒழிக்கப்படும். இக் கருத்தினானன்றே,

"வழியி னெறியே நால்வகைத் தாகும்." (கூருக)

என வழிநூலையே விரித்து நால்வகை யாப்பிற்கும் உரிமை கூறியதென்பது. அங்ஙனம் முதனூற்கு மொழிபெயர்த்த லின்மையின் [6]யாப்பொன்றும்பற்றிச் சிதைவு பிறவாது, ஒழிந் தனபற்றி வழிநூற்குச் சிதைவுண்டாமென்பது கருத்து.

வல்லோன் புணரா வாரம்போன்றே—வாரம் புணர்ப்பான் வேறொருவனுயவழி முதற்கூறு புணர்ந்தாற் புணர்ந்தவாற்றோடு பொருந்தச் செய்யாதவாறுபோல என்றவாறு.

1. இடம்— யாப்பு. இடத்தியல்பொருள் — சிதைவு. வழி நூல் செய்வோன் யாத்தற்கண் எனவே முதனூற்கண்ணுள்ள வற்றையே யாப்பதாயிற்று. முதனூல் தமிழ்நூலாதலின் அதன் கண் மொழிபெயர்ப்பு இல்லை.

2. தமிழ்நாட்டு வழக்கையே அகத்தியங் கூறுகிறபடியால் அதனுள் மொழிபெயர்த்துச் செய்யவேண்டும் பகுதியில்லை என்றபடி.

3. பொதுவாயினவாகிய பொருளவாயின் என்பது கருத்து.

4. இலக்கணம் என்றது யாத்தலை.

5. அவர்க்கும்—தமிழ் வழக்கு நோக்கி இலக்கணஞ் செய் வார்க்கும்.

6. யாப்பொன்றும் என்றது — மொழிபெயர்ப்பு யாப் பொன்றையும்.



வாரமென்பது, கூறு; என்னை? ஒரு பாட்டினைப் பிற் கூறு சொல்வாரை,

" வாரம் பாடுந் தோரிய மகளிரும்."

(சில. கச : கருரு)

என்பவாகலின்.

யாப்பினுட் சிதைதலென்பது, முதனூலும் வழக்குநூலா

யின் இழிந்தோர் வழக்கும்
வழக்கன்றேயெனக் கூட்டி விரித்து
யாத்துச் [1] செய்யினும், அழான் புழான்
(தொல். எழு. ௧௯௩)

என்பனபோல்வன இக்காலத்திலவென்று
களைந்து தொகுத்து
யாத்துச் [2] செய்யினும், [3]
தொகைவிரியும் மயங்குமாற்றான்
[4] விரிந்தது தொகுத்தலென்னும் [5] நாற்
புணர்ப்பினைத் தொகை
விரியெனும் யாப்பெனக்
கூறியதல்லாதவழித் தொகுத்து யாத்தே
செய்தலும் இம் மூவகை யாப்பினொடு [6]
மெய்த்திறங் கூறுவ
லென மொழிபெயர்த்தலை மயக்கிக்
கூறுதலுமெல்லாம் யாப்
பினுட் சிதைவேயாம். அது பண்ணும்
பாணியும் முதலாயின
ஒப்பினும் வல்லோன் புணர்த்த
இன்னிசையதன் நீர்மைப்படக்
காட்டா; வாரம் புணர்ப்பான் புறநீரதாகிய
இசைபடப் [7] புணர்த்

தல்போல்வதாயிற்று.
மற்று இழிந்தோர் வழக்கினைப்
பிற்காலத்து உயர்ந்தோருந்
8 தகுதிபற்றி வழங்குபவாகலான் அ
வையும் அமையாவோ
வெனின்,—அவை சான்றோர்
செய்யுட்குதவாது; 9 கற்றுணர்ந்
தாருங் கற்றுணராதாரும் மற்றவை
கேட்டே மனமகிழ்வாரைப்
பற்றி நிகழ்ந்தனவாயினும்
10 ஒற்றுமைப்பட்டு ஒருவகை நில்லா;

---

1—2. செய்யினும் என்பன செய்தலும் என்றிருப்பதுநலம்.

3. தொகையும் விரியும் என்றிருத்தல்வேண்டும்.

4. விரிந்தது தொகுத்தல் என்பது ஒருத்தி.

5. நூற்புணர்ப்பு — உத்தி. புணர்ப்பினைத் தொகுத்து யாத்தே செய்தலும் என முடிக்க. தொகுத்துக்கூறல் என்னும் உத்தி நோக்குக.

6. மெய்த்திறம்—உண்மைப்பகுதி.

7. புணர்த்தல்போல்வது காட்டா என முடிக்க.

8. தகுதி—இந்த இடத்தில் இது வழங்கத்தக்கது என்னும் தகுதி. இனி, இச்சொல்லால் வழங்கத்தக்கது என்னுந் தகுதி எனினுமாம்.

9. கற்றுணர்ந்தாரும் கற்றுணராதாருமாகிய மகிழ்வார் என்க.

10. ஒற்றுமைப்பட்டு ஒருவகை நில்லா என்றது இருவழக்கும் ஒற்றுமைப்பட்டு ஒருவகை நில்லா என்றபடி.



பெற்ற காலந்தோறும் பிறிதுபிறிதாகிக் கட்டளைப்படுத்து நூல் செய்வார்க்குங் கையிகந்து, வரையறையின்றாமாகலின் அஃது இலக்கணமெனப்படாதென்பது. (கOஎ)

[குற்றத்தின் விரி இவை எனல்]

கூகூரு. சிதைவெனப் படுபவை வசையற நாடிற்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்

குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதன் மயக்கங் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கங் கூற
றன்னா ளொருபொருள் கருதிக் கூற
லென்ன வகையினு மனங்கோ ளின்மை
யன்ன பிறவு மவற்றுவிரி யாகும்.

*இது, நிறுத்தமுறையானே 'ஈரைங்குற்றமும்' (கூருரு) உணர்த்துதல் நுதலிற்று.*

*இ—ள்: சிதைவு எனப்படுபவை வசையற நாடின்—குற்றமென்றற்குச் சிறப்புடையனவற்றைக் குற்றந்தீர ஆராயின்: இவற்றை எனப்படுபவென்பதென்? குற்றமாதற்குச் சிறந்தில வாம் பிறவெனின்,—இவ்வாசிரியர் எஞ்ஞான்றுங் குற்றத்திற்கு இலக்கணங் கூறாராகலான் இலக்கணத்தொடு [1] கூறுந்துணைப் பயம்படுதலும் ஒருவாற்றாற் சிறப்பெனவேபடுமென்பது; அல் லதூஉம் ஒழிந்த செய்யுட்காயின் இவையனைத்தும் ஆகாவென் பது ஈண்டே தழாஅல் வேண்டுமாகலானும், செய்யுட்காயின்*

அவை [2]அமையாச்சிறப்பு உடைமையானும் இது வழக்குஞ் செய்யுளுமேயன்றி அவற்றின் வேறுபட [3]வுஞ் செய்யப்படும் நூலிலக்கணமாகலானும் எழுவகை வழுப்போல அமைவனவே கூறாது நூலுள் வரப்பெறாதனவும் வரைந்து கூறினனென்பது. அமைவனவற்றினஞ்சார்த்தி [4]ஒழிந்தனவுங் கூறினான்; அல்லாக்கால், அவையே குற்றமாகி ஒழிந்தன புகுதப்பெறுவான் செல்லுமென்றஞ்சியென்பது.

---

1. கூறுந்துணைப் பயம்படல்—கூறுமளவிற்குப் பயன்படல்.

2. அமையா—வழு அமைக்கப்படாத.

3. உம்மை, எச்சம்; வேறுபடாமையேயன்றி வேறுபடவும் எனப் பொருடரலின். இல்லாமலு மிருக்கலாம்.

4. ஒழிந்தன—அமையாத குற்றங்கள்.

90



'வசையற நாடின்' என்றதனுன், இங்ஙனங் குற்றமென்று

வரையப்பட்டனவற்றைக்கொண்டு
புகுந்து மற்றொரு பொருள்

கொள்ளின் அவை வசையற்றனவாமென்பது. அவை, கூறியது
கூறல், மாறுகொளக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில

மொழிதல், மயங்கக் கூறல் என்னும்
ஐந்துமாயின.

கூறியது
கூறல், முன்னொருகாற் சொல்லிய பொருள் பின்னு
மொருகாற் சொல்லுதல்; அது,

"உட்குவரத் தோன்று மீரேழ்
துறைத்து." (ருசு)

எனவும்,

"வந்த வீரேழ் வகையிற் றாகும்."
(ருஅ)

எனவும் இருகாற் சொல்லி [1] ஒருகாற்
பயன்கொண்டவாறு.

மாறுகொளக் கூறல்,

"மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை."
(தொ. எழு. குற். ௬௦)

என்றவழி, [2] புல்லினையும் மரமெனஅடக்குதல். [3] இக்கருத்து
நோக்கி (யே) போலும்; [4] ஆண்டு,

"ஒன்றென முடித்தல் தன்னினமுடித்தல்."

என்பதனால், புல்லினையும் மரமென்று தழீஇயின [அக்] கருத்
தென்பது.

குன்றக் கூறல், சொல்லப்புகுந்த பொருளினை ஆசறக்
கூறாது ஒழியப்போதல்; இஃதோர் பயன்படாக் குற்றம்.

மிகைபடக் கூறல், சில்வகையெழுத்தின் செய்புட்டாகச்
செய்யாது சூத்திரத்துட் சிலசொன் மிகையாகச் செய்தல்போல்
வன; அவை,

---

1. ஒருகால் பயன்கொண்டது என்றது—முன் பதினான்கு துறை என்று கூறிப் பின் ஈரேழ்வகைத்து என்றதனால் கவர்தலும் மீட்டலும்பற்றி ஒன்றை இரண்டாக்கி இருபத்தெட்டாகக் கொண்டது என்றபடி.

2. புல்—புறக்காழ். ஆதலின் மரமெனல் முன்பின் மாறும்.

ஆயினும் உத்திபற்றி அமையும் என்றபடி.

3. இக்கருத்து—குற்றமும் அமைக்கப்படும் என்று இங்கே கூறிய கருத்து.

4. ஆண்டு—அச்சூத்திரத்துள்.



¹" ஆயீ ரியல புணர்நிலைச் சுட்டு." (தொ. எழு. புண. ரு) என்றாற்போல்வன. இங்ஙனம் மிகைபடச் செய்யுங்கால் முன் னின்ற சொல்லிற்கு ஒன்றும் இயைபில்லன கூறலாகா; என்னை?

" முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன."

(தொ. எழு. நூன். உ)

என்றவழி, 'அவைதாம் முப்பாற் புள்ளியும்' எனப் பயனிலை கொண்டு மாறிப் பின்னர் 'எழுத்தோரன்ன' என்றது, ஆண்டு

இயைபில்லதோர் சொல்லென்று [2] இலேசுபடாது தான் சொல்லுகின்ற பொருட்கும் இயைபுபடச் சொல்லியே மிகைப்படுத்தல் வேண்டுமென்பது ; என்னை ?

"எழுத்தெனப்படுப." (தொ. எழு. நூன். க) என்பதனுண் மூன்றுமே சிறப்புடையவென்பது கொண்டானாயிற் பின்னர் அம்மூன்றினையுஞ் சிறப்பில்லா முப்பதினோடும் ஒக்குமென உவமிக்கலாகாதெனவும், [3] மாட்டேற்றுச் சூத்திரங்களாலெல்லாம் ஒப்புமை பெறுவதல்லது சிறப்பின்மை காட்டப்படாவாகலானும், முப்பஃதுமே சிறந்தனவென்னுங் கருத்தினானாயின் மூன்றுஞ் சிறப்பிலவென்பது [4] முதற் சூத்திரத்துட் பெறப்படுமாகலின் பின்னர் [5] இவ்விலேசு கூறிச் சிறப்பழித்தல்வேண்டாவாகலானும் 'பலபொருட் கேற்பினல்லது கோடல்' அன்றி [6] ஐயுறற்றோறுஞ் சூத்திரஞ் செய்யானாகலானும்,

"எழுத்தோரன்ன." (தொல். எழு. நூன். உ) என்பது ஆண்டு இயைபில்லதோர் [7] சொல்லென்றதனை ஆண்டுப் பெய்து இலேசுகொண்டானெனல் ஆகாதென்பது.

---

1. ஆயீரியல என்பது மிகை. ஆயினும் வரையறைபற்றிக் கூறலின் குற்றமின்று.

2. இலேசுபடாது—இலேசுபடாமல். இது இயைபுபடச் சொல்லி என்பதனோடு முடியும்.

3. மாட்டுதல்—முன் சொன்ன சூத்திரத்தோடு கொளுவல்.

4. முதற் சூத்திரத்துள் பெறப்படல் எதனுலெனின்? மூன்றையும் வேறு பிரித்துச் சார்ந்துவரல் என்று கூறினமையின். அன்றியும் எழுத்தெனப் படுப என்று சிறப்பித்துக் கூறலானும் பெறப்படும்.

5. இலேசினுற் சிறப்பழிவு கூறுவார் இளம்பூரணர்.

6. ஐயுறற்ருேறும் என்றது, ஐயப்படக் கூறிப் பின் ஐயப் படுந்தோறும். அதனை நீக்கற்குச் சூத்திரஞ்செய்யான் என்றபடி.

7. சொல்லென்று அதனை எனப் பிரிக்க.



பொருளில மொழிதல்—நூனுதலிய பொருளன்றி

"என்மனூர் புலவர்."

என்றூற்போல, வழிநூல் வாய்பாட்டு

மாத்திரையே பயனாகச் செய்வன.

மயங்கக் கூறல்—நிறுத்தமுறையானன்றி,
"அத்தி னகர மகரமுனை யில்லை." (தொ. எழு. புண. ௨௩) என மயங்கக் கூறிப் [1] பிறிதொன்று கோடல்.

கேட்போர்க்கின்னா
யாப்பிற்றாதல் — சூத்திரச் செய்யுள்
கேட்போர்க்கு இன்னாதிசைப்பச் செய்தல்.

பழித்தமொழியான் இழுக்கங்
கூறல்—முடிவில்லாத சொல்
லானும் இழிந்த சொல்லானும்
எடுத்துமுடிப்பனவற்றை மறு
முடிபுபற்றி இழுக்கங் கூறலாயிற்று.

தன்னா னொருபொருள் கருதிக்
கூறல் — முன்னோரால்
கூறவும்படாது வழக்கினுள்ளதுமன்றித்
தன்னுள்ளே ஒரு
பொருள் படைத்துக் கூறுதல். [2] (தன்)
ஆனென்பது ஒரு சொல்

லெனத் தானெனப்படுவதோர் சொற்றாய்
மெய்யினுள் உணரநின்
றது. தன்னாற்றொரு
பொருள்படைத்துக் குறுகச்செய்தல்
மூன்றாவதெனினும் இழுக்காது; என்னை?
[3] நுதலிக் கூறலென்
னும் பயனிலக்குத் தானென்னும் [4]
பெயர் வெளிப்படாது
நின்றது வெளிப்படுத்துக்
கொளப்பெறுதுமாகலின்.
என்னவகையினு
மனங்கோளின்மை—எவ்வாற்றானும் பொரு
ளறிதற்கு அரிதாகச் செய்தல். இவை
நான்குங் குன்றக் கூற
லொடு கூட்ட ஐந்தும் எஞ்ஞான்றும்
பயன்படாதனவாயின.

அன்ன பிறவும் அவற்று விரியாகும் —
அவைபோல்வன
பிறவும் ஈரைங்குற்றமெனப்பட்ட தொகை
எண்ணிற்கு அவ்

1. பிறிதொன்று கோடல் என்றது '

விளவத்துக்கண் '
எனக் கெடாது நிற்றலைக் கோடலை.

2. தன்ஞன் என்பதில் தன் சிதைவுபட்டிருத்தல்வேண்டும். தன்ஞன் என்பதில் ஆனுஞ் சேர்ந்து தான் என்னும் பொருள்பட நின்றதென்றபடி.

3. நுதலிக் கூறல் என்று உரையுள் வருதலின் சூத்திரமுமப்படி இருந்திருக்கலாம்போலும்.

4. பெயர் என்றது—ஈண்டு எழுவாய்ப்பெயரை.



வாறு தொகுத்தற்கேற்ற விரியெண்ணும் இவையும் இவை போல்வன பிறவும் என்றவாறு.

'விரிந்தது தொகுத்தல்' என்பதனுன், [1] ஈதிரது நோக்கி [2] ஆண்டுத் தொகுத்தானுதலின் ஈண்டு அவற்றைத் தொகை கூறுது விரித்தெண்ணினனென்பது.

'பிறவும்' என்றதனுன், 'வெற்றெனத்

தொடுத்தன், மற் றொன்று விரித்தல், சென்று தேய்ந்திறுதல், நின்று பயனின்மை ' என்றாற்போல்வன கொள்க. இவை மேல் ' ஈரைங் குற்றமும் ' (கூடுரு) என உம்மையால் [3] தழுவியவற்று விரியாயின. [4] முத னூலொடு மாறுதலும் யாப்பினுட் சிதைதலும் இவைபோல ஓரோவழி வாரா; அந்நூலின் முழுவதூஉங் கொள்ளக் கிடந் தமையின் ஈண்டவை புறனடையால் தழுவப்பட்டவாறென்பது. இவையெல்லாங் குற்றமென்று களையப்படுவனவாயினும் ' ஈரைங் குற்றமுமின்றி ' என முதற் சூத்திரத்துள் ஓதிப்புகுந்தான், [5] அல்லாக்கால் இவற்றுட் சில நூலுட் புகுதுமாறும் அவற் றாற் பயன்கொள்ளுமாறும் [6] இன்மையினென்பது. பயன்கொள் ளப்படுவன ஐந்தென்பது மேற்காட்டினும்.

இனி, அப்பதினான்குங் குற்றமேயாகி வருமாறு :—

" தன்மை யுவமை யுருவகந் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே

வேற்றுப் பொருள்வைப்பு வேற்றுமை
யெனுஅ.''

எனவும்,

"உருவக முவமை வழிநிலை மடக்கே
விரிசுடர் விளக்கென மரீஇ வருவன.''

எனவும், சில சூத்திரங்களை முதனிறீஇப்,
பின்னரும் அவ்

வாய்பாட்டானே,

1. எதிரது நோக்கி—பின்வரும் இதனை
நோக்கி.

2. ஆண்டு—ஈரைங்குற்றமுமின்றி
என்றவிடத்து.

3. தழுவியவற்றுவிரி—தழுவி அவற்று
விரி எனப் பிரிக்க.

4. முதனூலொடு மாறுதலும் யாப்பினுட்
சிதைதலும்

சுசு0—க-ம் சூத்திரங்களிற் கூறப்பட்டன.

5. அல்லாக்கால்—புகுதராக்கால்.

6. இன்மையின்—இல்லாது
முடியுமாதலின்·

"தன்மை யுவமை யுருவகந் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப் பொருள்வைப்பு வேற்றுமை யென்றாங்
கெண்வகை யியல செய்யுட் கணியென
மையறு புலவர் வகுத்துரைத் தனரே."
என்றாற்போலப் பின்னரும் அவ்வாறே சூத்திரஞ்செய்தல் கூறியது கூறலாய்ப் பயன்படாதாயிற்று; என்னை? இவற்றது வேறுபாடு தொகைச் சூத்திரத்துத் [1]
துணிந்தெண்ணியதனானே பெற்றவழிப், பின்னும் அவ்வாறே மற்றோர் சூத்திரஞ் செய்ததனாற் பயத்ததின்மையினென்பது.

[2] "அன்றென வொருதலை துணிந்த குற்ற
நன்றறி புலவர் நாட்டுதற் குரிய."
என்றாற்போல்வன [3]வரையாது குற்றமென்றதனையே சான்றோர்க் காயிற் குற்றமாகாதென்றல் மாறுகொளக் கூறலாம். செய்யுட் கெல்லாம் அணியிலக்கணங் கூறுவான் குற்றங் கூறும்வழி [4] வரைந்து கூறுதலின்.

செய்யுட்குரிய பொருட்படையெல்லாவற்றானும் நல்லன வுங்

தீயனவும் இவையென்று சொல்லப்புகுந்தான், அவற்றுட் சில சொல்லியொழிதலும், வழக்கொடு [5] மெய்ப்பொருளும் ஆராய்வ லென்று புகுந்தான், அவற்றுள் வழக்கிற்கு வேண்டுவ கூறி மெய்ப்பொருள் ஆராய்ச்சி முழுவதூஉஞ் சொல்லாது நெகிழ்ந்து போதலும், எடுத்துக்கொண்ட நூலுட் காட்டும் இலக்கியங் களைச் சூத்திரத்தான் அடிவரை செய்வனென்று புகுந்து சில [6] மறுத்துச்செய்து, சிலவற்றுக்குச் செய்யாது போதல்போல் வனவும் குன்றக்கூறலாம். அவை முடிந்தநூலிற் கண்டுகொள்க.

> "இடையிடை நிரியா தியனெறி மரபி
> னுடைய கருப்பொரு ளோரோவழித் துவன்றவு
> மியற்கை மரபி னுரிப்பொரு டோன்றவும்

---

1. துணிந்து—துணித்து என்றிருப்பது நலம்.
2. அன்று என—பொருந்தாது என்று; ஒருதலை—நிச்சயம்.
3. வரையாது ஆகாதென்றலென இயைக்க.
4. வரைந்து—வரைவுசெய்து, வரைதல்—நியமித்தல். அது சான்றோர்க்காகுமென்றல்.
5. மெய்ப்பொருள்—தத்துவப் பொருள்.

6. மறுத்துச்செய்தல்—ஒன்றைக் கூறி என்று செய்தல். சுருசு·ம் சூத்திர உரை அது முதலாயின நோக்குக. இது அறுத்து என்றிருந்திருக்கலாமோ என்று ஆராயத்தக்கது, **அறுத்தல்—வரையறுத்தல்.**



" பன்னிரு காலமும் நால்வகை யிடத்தொடுந்
தொன்னெறி மரபிற் றோன்றினர் செயலே."

எனச் சூத்திரஞ்செய்து நாற்பத்தெட்டினும் நாற்பத்தெட்டு காலமுந் தொக்க சூத்திரத்தால்,

" துடைப்பன துடைந்துச் செயற்கை போல
வழியிட னொழித்துக் காலங் கூறுவல் "

என்று புகுந்து அக்காலத்துள்ளுஞ் சிறுபொழுது கூறாது இட விலக்கணமே கூறி இடத்திற்குச் சுருங்க வேறு சூத்திரஞ் செய்தவாறுபோலாது

[2] அதற்கு இன்றியமையாதனவெல்லாங் குன்றுமற் கூறுது சென்றுபட்ட பாப்பிற்றுகச் சூத்திரஞ்செய் தல்போல்வன மிகைபடக் கூறலாம். அஃதாவது இன்னிள வேனிலென்பது,

“தண்ணிழ லறல்யாற் றடைகரைந் துறைதொறு
மிலங்கு முலைக்க ணேய்ப்பக்கோங் கவிழ்ந்து
வண்டுதா தூதுந் தண்டளிர்க் காவிற்
பருமல ருதிர்ந்து முருகுகமழ் பரப்பின்
மண்வயிறு குளிர்க்குந் தண்ணறுங் கயத்து
நிழலிரு ணடுவ ணழலவிர் தாமரைத்
தாள்கறித் தருந்தும் வாளெயிற் றிளமீன்
புள்ளுக வெறிய வெள்ளென்று பிறழும்
பளிங்குநெகிழ்ந் தன்ன துளங்காத் தெண்ணீர்
தளிர்குடைந்து தெவிட்டிய குயில்குனிந்து
குடிப்ப
மரவந் தாழ்ந்த கரைமரச் சாரற்
றேறுது தேறல் வேனிற் கண்ணும்
வாரார் கொல்லென நீர்வார் கண்ணொடு
புலம்புடை மகடூஉக் கலங்களு ரெய்த
யாறுங் குளனுங் காவு மாடி
யோருயிர் மைந்தரு மகளிருங் களிப்பக்

காம விழவொடு கன்னியர் நோற்ப
நிலவுஞ் சாந்தும் பலவயிற் பயன்படத்
துன்பக் காலந் துடைத்தனர் பெறாஉ
மின்பக் கால மென்மனார் புலவர்.”

என்றாற்போலப் [3] பற்றிக் கூறிப்

பெருஞ்சூத்திரம் செய்தவழி

யும் பருவத்திற்கு வரையறையிலக்கணம்

போதுதலின்றி [4] விடுத

லாயிற்று.

---

1. பன்னிருகாலம்—பெரும்பொழுதாறு சிறுபொழுதாறு; இடம் நான்கோடும் காலம் பன்னிரண்டையும் உறழ சஅ காலமாகும். நால்வகை இடம்—குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்.

2. அதற்கு—அக்காலத்திற்கு.

3. காலம்பற்றிக் கூறி என்றிருப்பது நலம். பற்றி என்பது இல்லாமலு மிருக்கலாம்.

4. விடுதல்—தவறவிடல்.



இனி,

"அம்முன் றென்ப மன்னைச் சொல்லே." (தொ. சொ. உருச)

எனவும,

"அப்பா லெட்டே யும்மைச் சொல்லே." (தொ. சொ. உருஎ)

எனவும,

"ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன."

எனவும் இன்னோன்ன யாவும் மிகைபடச்செய்தார் இவ்வாசிரிய ராகலிற் பிற்காலத்து நூல் செய்தார்க்கும் மிகைபடச் செய் தல் அமையுமென்பாருமுளர்; அற்றன்று,

"யாவயின் வரினுந் தொகையின் றியலா."

(தொ. சொ. இடை. ௬௨)

எனப்பட்ட எண்ணுகலின் தொகை கூறினமையானும் வழக் காதலானும் [1]அதுமுதலாக அல்லது சூத்திரச் செய்யுளுஞ் செய்யாராகலானும், அங்ஙனந் தொகை தொடராக்கால் [2] இரண் டாகப்பட்டு [3]விகாரவகையால் தொகுத்தானுமெனவும் அவை பலசொல்லாகலால் தொகுக்கப்படுவனவல்லவெனவுஞ் சொல்லி மறுக்க; அல்லதூஉம், மன்னென்பது ஓரிடைச்சொல்; அது தானடைந்த சொற்பொருளன்றித் தனக்கு வேறுபொருளின்மை யிற் பொருள்பற்றி மூன்றெனலாகாது, [4] பலபொரு ளொரு சொல் எனப்படுவதன்றி; அதனுன் அதனை நோக்கி மூன் றென்றானல்லன், அஃது [5] அடுத்த சொல்லினை மன்னைச் சொல் லென்றான், அவை மூன்றன்றி எத்துணையும் பலவாயினும் [6] ஒன் றாயினும் மூன்று பகுதிப்படுமென்று கோடற்கென்பது. ஒழிந்த இடைச்சொல்லாயினும் அவற்றிற்கும் இஃதொக்கும். மன்னைச் சொல்லென்பது [7] வேற்றுமைத் தொகையே யன்றிப் பண்புத்

---

1. அதுமுதலாக—அவ்வழக்கு அடியாக.

2. இரண்டாகப்பட்டு—இடர்ப்பட்டு என்று பாடமுள்ளது. அதுவே பொருத்தம்.

3. விகாரம்—செய்யுள் விகாரம்.

4. பலபொருள் ஒருசொல் என்றது தானே மூன்றுபொரு ளுணர்த்திற் பலபொருளொருசொல்லாம் என்றபடி.

5. அடுத்தசொல்—மன் அடுத்துவருஞ் சொல்.

6. ஒன்ருயினும் மூன்றுபகுதிப்படும் — ஒன்ரு யிம்மூன்று பகுதிப்படும் என்றிருப்பதே பொருத்தம்.

7. வேற்றுமைத்தொகை—மன்னையுடைய சொல்; பண்புத் தொகை—மன்னடுத்த சொல்லாகிய சொல். மன்—ஆகுபெயர்.



தொகையாகலுமுடைத்து. மன்னடுத்த சொல்லினையும் மன்னென ஆகுபெயராற் கூறினனென்பது.

" வழக்கு வழிப்பட்ட சொல்லீறு திரியினும்
படைத்துக் கொண்ட சொல்லொடு சிவணித்
திரிசொல் லென்றே செப்பினர் புலவர்
1 வரிவளைப் பணைத்தோண் மடநல் லோயே."

என்றாற்போல இயைபில்லன கூறுதல் பொருளில மொழிதலாம்.

இவை ஒழிந்த செய்யுட்காயின் ' தடங்கண்ணாய் ' ( நாலடி. உகசு ) என்றாற்போல் வரப்பெறுமென்றற்கு ஒத்தென்னையெனின்,—

அது செய்யுள்செய்வார் வேண்டியவாறு செய்பவாகலின் ஈண்

டுச் ' சில்வகையெழுத்தின் ' (சுடுரு) செய்யுட்டாகச் செய்யுநூற்கே

இது விலக்கினமையின் அதன் திறத்துக் கடாவின்றென மறுக்க.

மயங்கக் கூறலென்பது,

" மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டுவல்." (பாயிரம்)

என்று புகுந்தாற்போல இன்னது சொல்லுவலென்று புகுந் தான் [2] மெய்ந்நூலும் வழக்குநூலும் உடனாய்தலும் ஆரிய

மும் தமிழும்போல்வன உடனாய்தலும் போல்வன.

கேட்போர்க்கின்னா யாப்பாவது,

" கதந பம." (தொ. எழு. சுக)

" சஞயவ."

" உயிர்முன் பின்வல்லினம்."

" லரயநதா மென."

என்றாற்போலச் சூத்திரச் சுருக்கமும்

மொழிக்கு முதலா

மெழுத்தும் ஈறுமெழுத்தும் பொதுவகையான் அடங்க ஓதுதற் பயனோக்கி இங்ஙனம் இன்னுவோசைத்தாகச் சூத்திரஞ் செய்தல்போல்வன.

பழித்தமொழியா னிழுக்கங் கூறல்.

3 "விளாவெ னிறுதி பழமொடு புணரிற்

றளாவியற் றன்றி யியற்கை யாகும்."

என்றாற்போல விளாவென்பதோர்

வழுச்சொல்லாற் சூத்திரஞ் செய்தல்.

ஒன்றற்கொன்றென்பதனை,

---

1. இவ்வடியே இயைபில்லன கூறல்.
2. மெய்ந்நூலும்—தத்துவ நூலும்.
3. விளா என்பது ஆகாரவீற்று மரப்பெயர்.

91



"ஒன்றினுக்கொன்று."

எனச் சூத்திரஞ் செய்தலும் அது.

தன்னா லொருபொருள் கருதிக் கூறலென்பது, மலைபடு கடாத்தினை [1] ஆனந்தக்குற்றமெனப் [2] பிற்காலத்தாரொருவன் ஒரு சூத்திரங் காட்டுதலும், [3] பதமுடிப்பென்பதோர் இலக் கணம் படைத்துக் கோடலும் போல்வன.

என்னவகையினி மனங்கோளின்மை வருமாறு.

"இருதிணைப் பிறந்த வைம்பாற் கிளவிக்கும்."
(தொ. சொ. பெ. எ)

என்னுஞ் சூத்திரத்திற்கும்,

"எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி."
(தொ. எழு. புண. உகூ)

என்பதற்கும் வேறு பொருள் உரைப்பாருரைக்குமாற்றான் அறி யப்படும்.

இனி, மற்றொன்று விரித்தலென்பது, [4] ஆறுறுப்பும் பாவினமுங் கூறுவலென்று புகுந்து பொருளாராய்ச்சி பலவுங் கூறுதல். இதுவும் இன்னோரன்ன மிகைபடக் கூறலாய் அடங்கு மெனினும் அமையும்.

நின்று பயனின்மையென்பது, பிற்காலத்துத் தோன்

றிய வழக்கேபற்றி அவற்றிற்கும் குற்றந்தீர இலக்கணங் காட்டியவழி, அது சான்றோர் செய்யுட்குப் பயன்படாது [5] தம்மோரன்ன செய்யுட்குப் பயன்பட்டொழியச்செய்தல். அவை வந்த

1. இக்குற்றம் யாப்பருங்கல விருத்தியுள்ளும் காட்டப்படுகின்றன.

2. பிற்காலத்தான் என்றது யாரை என்பது புலப்படவில்லை. யாப்பருங்கல விருத்தியுள் ஒழிபியல் 548-ம் பக்கத்தில் "உறுபுகழ் மரபி னுயர்ந்தோர் கூறிய அறுவகை மரபின வானந் தம்மே" என்பது முதலாகச் சில சூத்திரம் மேற்கோளாகக் காட்டி விளக்கவுரையும் எழுதப்பட்டுள்ளன. அதன்கண் மலைபடுகடாத்திலும் ஆனந்தக் குற்றங்களெனச் சில எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. ஆண்டு நோக்கி உணர்க.

3. பதமுடிபு காட்டினோர் நன்னூலார்.

4. ஆறுறுப்பு—எழுத்தும், அசையும், சீருந், தளையும், அடியும், தொடையும்.

5. தம்மோரன்ன—தம்மோரன்னோர் செய்யுட்கு என்றிருத்தல்வேண்டும்.



வழிக் கண்டுகொள்க. [1] பாட்டியன் மரபெனக் காட்டுவனவும் அவை;

இனி, வெற்றெனத் தொடுத்தலென்பது, கேட்போர்க்கின்னாயாப்பின்பாற்பட்டு அடங்கும்.

சென்று தேய்ந்திறுதலென்பது, சொல்லப்புகுந்ததொரு பொருள் எல்லாவிடத்துஞ் சொல்லப்படுவதாகவும் ஈற்றுக்கண் மாய்ந்து மாறுவது. அதுவுங் குன்றக்கூறலாய் அடங்கும். ஒழிந்தனவும் அன்ன.

மற்றுக் கூறியது கூறன் முன்வைத்ததென்னையெனின்,— அது நூலுட்போலச் செய்யுட்கண்ணும் பயன்படவரின் அமைபு மென்றற்கென்பது; அவை,

" வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்." (நாலடி. ௩௯)

எனவும்,

" வஞ்சியாய் வஞ்சியார் கோ." (யா. வி. ப. ௨௩௦)

எனவுஞ் சொல்வகையான் இரட்டித்தவாறு. இனியமைவனவற்றிடையே குன்றக்கூறல் வைத்தான் [2] அவற்றுத் துணைச்சிறப்பிலவென்பது ஐயுறுமையென்பது.

இவ்வாசிரியர் யாண்டும் இலக்கணமே கூறி இவ்விலக்கணத்திற் பிறழ வருதலைக் குற்றமென்று கொள்ளவைப்பினன்றி இல்லாத குற்றங்கட்கு இலக்கணங் கூறுதார் [3] இது கூறினர்,

" எதிர்மறுத் துணரின் றிறத்தவு மவை."

(தொ. பொ. மர. ௧௦௯)

என வருகின்ற சூத்திரத்தான் இவையும் இலக்கணத்திற்கு உபகாரப்படுதலினென்பது. (௧௦௮)

[குணம் இவை எனல்]

௬௬௪. எதிர்மறுத் துணரின் றிறத்தவு மவையே.

இது, மேற் குற்றம் பத்துங் கூறி இனிக் குணமும் பத்துளவென்கின்றது. மேலெல்லாம் இவ்வாசிரியன் இலக்கணவழக்

1. பாட்டியன்மரபு—இது ஒரு நூல். அது யாப்பருங்கல விருத்தி செய்யுளியல் 351-ம் பக்கத்தில் "என்பது பாட்டியன்

மரபு''என்பதனுலறிக. (கூ௩-சூ)

2. அவற்றுத்துணை—குற்றமென்று கூறப்பட்ட மற்றவற்றளவு.
3. இது—இக்குற்றங்கள் பத்து.



கிளையே விதந்தோதி

அதனிற் பிறழ்ந்தது குற்றமென்று கொள்ள வைத்தான்; இவ்வோத்தினுள் 'ஈரைங்குற்றமும்' என்பன சில குற்றங் கூறினுன், இது மாறுகொளக் கூறலாங்கொல்லோ வெனின்,—அற்றன்று; இவையும் இலக்கணமே கூறினனென் பான் இவற்றையெதிர்மறுத்துக் கொள்ளவென்ருனென்பது. இதனது பயன்: உள்ளது சொல்லுதலேயன்றி இல்லது சொல்லுதலும் நூலிலக்கணமென்றறிவித்தலாயிற்று; அவை,

[1] "பெயர்நிலைக் கிளவி காலந் தோன்ரு."
(தொ. சொ. எக) எனவும,

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது."
(தொ. சொ. ௨00)
எனவும் வரும். எனவே கூறியது கூறுமையும் '
மா றுகொளக்
கூறுமையும்', 'குன்றக் கூறுமையும்' போல்வனவும் பத்து
நூலிலக்கணமென்றானும். மேல்,
உள

"ஈரைங் குற்றமு மின்றி."
என்றதல்லது அவற்றை நாட்டிக்கொண்டு
எதிர்மறுத்துக் கோடல் பெருமையின் [2] இது
கூறினனென்பது. (கOகூ)

[உத்தியின் விரி இவை எனலும்,
நூற் புறனடையும்]
கூகூடு. ஒத்த காட்சி .யுத்திவகை
விரிப்பி
னுதலிய தறித லதிகார வகையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய்ந் நிறுத்தன்
மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்
வாரா ததனன் வந்தது

முடித்தல்

வந்தது கொண்டு வாராத துணர்த்தன்
முந்து மொழிந்ததன் றலைதடு மாற்றே
யொப்பக் கூற லொருதலை மொழிதல்
தன்கோட் கூறன் முறைபிற மாமை
பிறனுடம் பட்டது தானுடம் படுத
லிறந்தது காத்த லெதிரது போற்றன்

1. இதுமுதலிய உதாரணம் இரண்டும், இல்லது கூறலும் இலக்கணமென்றற்குக் காட்டிய உதாரணங்கள்.

2. இது—இச்சூத்திரம்,



மொழிவா மென்றல் கூறிற் றென்ற
ருன்குறி யிடுத லொருதலை யன்மை
முடிந்தது காட்ட லாணை கூறல்
பல்பொருட் கேற்பி னல்லது கோட
லெருத்த மொழியான் வகுத்தனர்

கோடன்

மறுதலை சிதைத்துத் தன்றுணி

புரைத்தல்

பிறன்கோட் கூற லறியா துடம்படல்
பொருளிடை யிடுத லெதிர்பொரு
ளுணர்த்தல்
சொல்லி னெச்சஞ் சொல்லியாங் குணர்த்த
றந்துபுணர்ந் துரைத்தன் ஞாபகங் கூற

லுய்த்துக்கொண் டுணர்த்தலொடு
மெய்ப்பட நாடிச்
சொல்லிய வல்ல பிறவவண் வரினுஞ்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத்
தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டு
துனித்தகு புலவர் கூறிய நூலே

*இது, முறையானே இறுதிக்கணின்ற முப்பத்திருவகை யுத்தியுங் கூறி மற்றும் இந்நூலுள் அதிகாரம் மூன்றற்கும் வேண்டும் புறனடையுங் கூறுதனுதலிற்று.*

*இ—ள் : ஒத்த [1]காட்சி யுத்திவகை விரிப்பின்—முற்கூறிய*

குற்றங்களோடு ஒப்பத் தோன்றுந் தோற்றத்தினை உடைய வாகிய உத்திக் கூற்றினை விரித்துச் சொல்லின்.

பத்துவகைக் குற்றத்தோடும் ஒத்துவருமெனவே இவை யும் நூற்கணன்றி ஒழிந்த செய்யுட்கு வருங்கால் விலக்கப்படு தலும், முற்கூறிய குற்றம்போல இவையும் வேறுசில பொருள் படைத்தலுமுடையவாயின. காட்சியுத்தியென்று இவற்றைக் கூறியவதனுன் நூலுட் காணப்படுமென்ற ஐந்து குற்றத்தோடும் ஒத்தல் கொள்ளப்படும்; அவ்வந் நூற்குப் பயம்பட வரும் பகுதியானென்பது.

---

1. காட்சி என்றதனுன் காணப்படுதலாகிய உத்தி என்பது பெறப்படும். அதனுல் வழிநூலுட் காணப்படுமென்று முன்னர்க் கூறிய (வேறொரு பொருள்படின் தழுவப்படுமென்ற) குற்றத்தோடு ஒத்த உத்தி என்பது கருத்தாம்.

[1] உத்தியென்பது, நூல் செய்புங்கால் இயல்புவகையாகிய வழக்குஞ் செய்யுளும்போலச் செவ்வனஞ் சொல்லுதல் ஒண்மை யுடைத்தன்றாம் பிறவெனின்,—அற்றன்று; அவ்வாறு [2] செய்தக்கால,

"நுண்மையொடு புணர்ந்த வொண்மைத்தாகல் வேண்டும்."

என்பது [3] முன்னர்ச் [4] சொல்லினும். ஈண்டுச் செவ்வனஞ் சொல்லாத தந்திரவுத்திவகையும் அவ்வாறே ஒண்மையுடையவாமென்பது கருத்து; என்றார்க்குச் செவ்வனஞ் செய்தலே உத்தியென்றோமெனின்,—அது சொல்லாமை [5] முடிந்ததாகலினன்றே உத்தியென்றது இவற்றை [6] உத்திவகையென்பானுமிற்றென்பது; அஃதேல், இவற்றை முன் தொகுத்தான்போல விரிப்பினென்ற தென்னையெனின்,—முன்னர் எதிரது நோக்கி முப்பத்திரண்டெனத் தொகை கூறிப் பின்னர்,

"மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்."

என்கின்றுணுகலான், அஙஙனம் இனம்பற்றி [7] அவற்றோடு அடங்குவனவெல்லாம் அவற்று விரியாகுமென்னுங் கருத்தினாற் கூறினனென்பது.

" அவனிவ னுவனென வரூஉம் பெயரு
மவளிவ ளுவளென வரூஉம் பெயரு
மவரிவ ருவரென வரூஉம் பெயரும்
யான்யா நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவ ரென்னு
மாவயின் மூன்றே டப்பதி னைந்தும்
பாலறி வந்த வுயர்திணைப் பெயரே." (தொ.
சொ. கசுச) என்பதனுள்,

" ஆவயின் மூன்றே டப்பதி னைந்தும்."

---

1. உத்தி என்பது—இது வேண்டியதில்லை.
2. செய்தக்கால்—நூல் செய்தக்கால்.
3. முன்னர்—கூறுரு-ம் சூத்திரம்.
4. சொல்லினும்—சொல்லினன்
என்றிருத்தல்வேண்டும்.
5. முடிந்தமை—முடிந்துகிடந்தமை.
6. இவற்றை உத்திவகை என்றமையானே
வனஞ் சொல்லல் என்றாயிற்று.
உத்தி செவ்
7. அம்முப்பத்திரண்டோடு.

எனத் தொகுத்துக் கூறியவழி அது மிகைபடக் கூறலாகாது; என்னை? [1] உம்மையெண்ணுகவின் தொகையின்றியுஞ் சில்வகை யெழுத்திற் செய்யுட்டாக வழக்கியலானே சுருங்கச்செய்வதோர் ஆறுளதாயினும் அப்பதினைந்துமென தொகுத்துக் கூறல் உத்தி வகையான் அமைபுமாகலினென்பது கருத்து. இங்ஙனந் தொகை கூறுதல் வெள்ளிதன்றி ஒள்ளிதாகல்; அவை, [2] பதினைந்து பெயருமே ஒருநிகரனவென்பது அறியலாகுமென்பது.

இனி,

"மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே."

(௪க௩)

என்னுஞ் சூத்திரம்போல்வன பிறிதொருபொருள் பயக்குமென் றலும் அச்சூத்திரத்துட் காட்டப்பட்டது. இவ்வாற்றான் இவ் வுத்திவகை எல்லா நூற்கும் இன்றியமையாவாயின.

மற்று, வகையெனப்படாது செவ்வனஞ் செய்யும் உத்தி யாவன யாவையெனின்....

"இயற்கைப் பொருளை [3]யிற்றெனக் கிளத்தல்."

(தொ. சொ. கூ)

என்றாற்போலச் சொல்லியொழிவன. பிறவும் அன்ன.

'விரிப்பின்' என்ற வினையெச்சம் 'சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்' என்ற முற்றுவினைகொண்டு முடிந்தது. 'மெய்ப்பட நாடி' என்பனபோல்வனவற்றுக்கும் இதுவே முடிபு; அதற்கு நூலென்னும் [4] பெயர்கொடுத்து முடிக்க. நூலையென்று ஐகாரம்

---

1. உம்மையெண் தொகையின்றியும் வருமென்பதனை, தொல் சொல். இடை. ௩கூ—ம் சூத்திரத்தாலறிக.

2. பதினைந்து ஒருங்கரல என்பதை உணர்த்துதற்குத் தொகை கொடுத்தார் என இவர் கூறியவாறுபோலவே, தருக்க சங்கிரகத்திலும், 'பதார்த்தத்தன்மை திரவிய முதலிய ஏழனுள் ஒன்றன்கண் வியாப்பியமாகாதெனவும் பொருள்படுமன்றே அவற்றை நீக்குதற்கு (எனவே ஏழன்கண்ணும் தனித்தனி வியாப்பியமாதலை உணர்த்தற்பொருட்டுத்) தொகை கொடுத்தார் எனத் தருக்கசங்கிரக தீபிகை என்னும் உரைகாரர் கூறுதல் காண்க.

3. இற்றெனக் கிளத்தல் என்பதனுல் இயற்கையை விளக்கினமையின் செவ்வனஞ் செய்தலாயிற்று,

4. பெயர்—எழுவாய்.



விரிப்பின், வேண்டுமென்பது 1
தன்பாலானும் பிறன்பாலானும்
பெற்றதோர் பெயர்கொண்டு முடியும்.
(க) நுதலியதறிதல் — சூத்திரத்துள் ஓதிய பொருளாற்
சொல்லப்படும் பயன் இல்லதுபோலச் சொல்லியதனுனே அதற்
கேற்றவகையாற் கருதி

யுணரப்படுபொருள் இன்னதென்று கொள்ளவைத்தல்; அது,

" வேறுவினைப் பொதுச்சொ [2] லொருவினை கிளவார்."

(தொ, சொ. கூ) எனவும்,

" சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கு
மியற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்."(தொ. சொ. சக)

எனவும் இவை வழுவற்க வழுவமைக்க என்னும் இருபகுதியுள்வழுவமைத்தற்கெழுந்தனவென்பது கருதினான் ஆசிரியனென்பது அறியவந்தன. இதனை முதற்கண் வைத்துப்போய் இறுதிக் கண்ணே உய்த்துக்கொண்டுணர்தலை வைத்தான் [3] இதுவும் அது போல் உய்த்துக்கொண்டுணர்தல் ஒருவகையானுடைத்தாயினும் [4] அதனாற் பெற்றபயன் பிறிதுமொன்று உளதாதல் வேற்றுமை யுடைமையினென்பது; அது முன்னர்ச் சொல்லுதும்.

இனி, மூவகைத் தமிழ்வழக்கமும்

நுதலியதும் அவற்றுள்
இயற்றமிழே நுதலியதும், அதிகாரம்
நுதலியதும், அதிகாரத்
துள் ஒத்து நுதலியதும், ஒத்தினுட்
சூத்திரம் நுதலியது
மென இவை நுதலியதறிதற்பகுதியாய்
அடங்குமென்பான்,

---

1. நூலை உணர்த்தல்வேண்டும் உணர்த்துவோன் தன்பால் ஆசிரியன்—பிறன்பால். ஆசிரியன் நூலை உணர்த்தலை வேண்டும் என்க.

2. பொதுவினையாற் கிளத்தல்வேண்டும் இது வழுவற்க என்றது என்றும், இயற்பெயரும் முன்வரல்வேண்டும். இதுவும் வழுவற்க என்றது என்றும் இளம்பூரணர் சேனவரையர் முதலியோர் கூறுவர். நன்னூல் விரிவுரையாளர் முன்னையதை வழுவற்க என்றது என்றும், பின்னையதை முற்படக் கிளப்பின் வழுவமைதி என்றுங் கூறுவர். இவரும் வழுவமைதி என்றலின் முன்னையதைக் 'கிளப்பின்' வழுவமைதி என்றும், பின்னையதை முற்படக் கிளப்பின் வழுவமைதியென்றும் கருதுகின்றனர் போலும்.

3. இதுவும் — இவ்வுத்தியும். இதுவும் உடைத்தாயினும் என்க.

4.

அதனால்—உய்த்துக்கொண்டுணர்தலால்.

ியல்] பொருளதிகாரம்
ள்உக்

" மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்."

[1] என்கின்றானென்பது; மேல் வருகின்றவற்றுக்குமொக்கும். அஃதேல், இதனை ஆண்டுவைத்து [2] மற்றதனை ஈண்டு வைப்பினும் இஃதொக்கும் பிறவெனின்,—அற்றன்று; நூலின் வேறாகிய பாயிரத்துள்ளாயினும் இந்நுதலியதறிதல் வருதலும் உத்தியென்றற்கு இதனை முன்வைத்தானென்பது.

(உ) அதிகாரமுறைமை — முன்னின்ற சூத்திரப் பொருண்மை பின்வருஞ் சூத்திரத்திற்கும் பெறற்பாலன பெற

வைத்தல்; அவை,

" இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்."
(தொ. சொ. கக)

என்றவழி இற்றெனக் கிளத்தல்
உரிமைபூண்டதன்றே, [3] அதனைச்,

" செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்."
(தொ. சொ. உ0)

என்புழியுங் கொள்ளவைத்தலும்,

" குற்றிய லிகர நிற்றல் வேண்டும்."
(தொ. எழு. ௩௪)

என்பதனை,

"குற்றிய லுகரம் வல்லா றூர்ந்து." (தொ. எழு. ௩௬)

நிற்றல்வேண்டும் என்று கொள்ளவைத்தலும்போல்வன.

இனி, வழக்கியலும் வழக்கியலாற் செய்யப்பட்ட செய்யுளியலும்பற்றி எழுந்த இலக்கணம் இயற்றமிழெனப்படும்; அச் செய்யுளின்றி அமையாத இசையிலக்கணம் இசைத்தமிழெனப் பெயரெய்தி அவ்வியற்றமிழ்ப் பின்னர் வைக்கப்பட்டதெனப் படும்; இவ்விரண்டன்வழி நிகழ்த்துங் கூத்திலக்கணங் கூறிய நாடகத்தமிழ் அவற்றுப்பின்னர்த்தாமென முறைமை கூறு தலும்; இனி இயற்றமிழுள்ளும் எழுத்ததிகாரத்தோடு சொல்லதிகாரத்திற்கும், சொல்லதிகாரத்தோடு பொருளதிகாரத்திற்

1. என்றுனென் றிருத்தல் நலம்.

2. அதனை — உய்த்துக்கொண்டுணர்தலென்னும் அவ்வுத் தியை.

3. அதனை—அவ்வுரிமையை; ஆக்கமொடு கூறல் என்ற வழியுங் கொள்ளவைத்தல் என்றது, ஆக்கமொடு கூறல் செயற்கைக்கு உரிமை எனக் கொள்ளவைத்தல்.

92



கும் இயைபு கூறுதலும்; அதிகாரத்துள் ஓத்துப் பலவாகலின்
அவை ஒன்றன்பினொன்று வைத்தற்கு இயைபு கூறுதலுமெல்
லாம் அதிகார முறைமைக்கு இனமென்று சேர்த்தியுணரப்
படும்; பிறவும் அன்ன.

அதிகாரமென்ற பொருண்மையென்னையெனின்,—முறைமை யெனவும், இடமெனவும்,
கிழமையெனவும் கொள்ளப்படும்.
அவற்றுள், ஈண்டு
அதிகாரமென்றொழியாது முறைமையென
வுங் கூறினமையின் அதிகாரமென்பது

முறைமைப்பொருட்
டன்றி முன் ஓரிடத்து நிறுத்தி அதன்வழி
முறையாற் பொருள்
கோடல் கொள்க; என்னை? முன்னும் பின்னும் நின்ற சூத்
திரம் இரண்டனையும் ஓரிடத்தனவாகக் கருதல்வேண்டும். அங்ங
னங் [1]கருத்தாத வியைபுகொண்டு அன்றி
ஒன்றன் பொருண்மை
ஒன்றற்கு வருவித்தல் அரிதாகலானும்,
அங்ஙனம் இடம் பற்
றுக்கால் ஒருவன் செய்த நூலோடு
பிறிதொரு நூற்கு இயைபு
கூறுதவாறுபோல எழுத்ததிகாரத்தோடு
சொல்லதிகாரத்திடை
இயைபு கூறல்வேண்டுவதன்றாவான்
செல்லுமாதலானுமென்பது.
எனவே, இடமெனப்பட்டது தானே
முறைமைப்பொருளும்
படுமாயினும் இச்சூத்திரத்துள்
அதிகாரமெனவும் முறைமை
யெனவுங் கூறினமையின் ஈண்டு [2]
இடமுறைமையென்பதே
கருத்தாயிற்று. இதனானே [3]

உடன்பிறந்தாருள் ஒருவற்குரியது
வழித்தோன்றினார்க்கும் ஒருவழி
உரியவாறுபோல முன்னர்
நின்ற விதி பின்னர் வந்ததற்கும்
வேண்டியவழிக் கொள்ளப்
படுமென்பது உத்திவகையாயிற்று.

இனியொருசாரார், இங்ஙனம்
வரைந்துகொண்ட இடத்
துள்ளே யாற்றொழுக்குப்போலவன்றி
இடையிடையும் பெறு
மென்பது நோக்கி அரிமா நோக்குந்,
தேரைப் பாய்த்துளும்,
பருந்து விழுக்காடும் ஆகி வருமெனவுஞ்
சொல்லுப; அவை
யும் [4] இனத்திற் சேர்த்தி
யுணர்த்தவேபடுமென்பது.

1. கருதலியைபு கொண்டன்றி
யன்றிருத்தல்வேண்டும்.

2. இடமுறைமை — இடவியைபு.

3. உடன்பிறந்தாருள் ஒருவனுக்குரியது உடன்பிறந்தானுக்கன்றி வழித்தோன்றினார்க்கும் உரித்தாயிற்று என்றபடி.

4. அதிகார முறைமை என்ற உத்தியின் இனமாகச் சேர்க்கப்படும் என்பது கருத்து.

(௬) தொகுத்துக் கூறல்—தொகுத்தியாத்த நூலுள்ளுந் தொகுத்துக் கூறுதல்.

அவையாவன :— எழுத்து முப்பத்துமூன்று, [1] சொல் லிரண்டு, பொருளிரண்டு என ஆசிரியன்றானே தொகை கூறுதல்போல்வன.

"இருதிணை மருங்கி னைம்பா லறிய
வீற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்." (தொ. சொ. ௧௦)

எனப் பல சூத்திரத்து விரிந்தன தொகுத்தலும்,

"ஆவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த வுயர்திணைப் பெயர்."

(தொ. சொ. ௧௬௪)

என ஒரு சூத்திரத்து விரித்துத் தொகுத்தலும் போல்வனவும் அதன் பகுதியாய் அடங்கும்.

(௪) வகுத்து மெய்ந்நிறுத்தல் — அங்ஙனந் தொகுத்துக் கூறியவழி எழுத்து முப்பத்துமூன்றென்ற தொகையினைக் குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் உயிரும் உயிர்மெய்யும் வல்லினமும் மெல்லினமும் இடையினமுமென்றாற்போலவும் உயர்திணை அஃறிணையென்ற தொகையினை ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பலவென்றாற்போலவும் வகுத்தல்.

"உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையும்." (தொ. சொ. ௧௬௨)

எனவும்,

"இயற்சொ றிரிசொ றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே." (தொ. சொ. ௩௯௭)

என வருவனவும் அவை. இவற்றுள் [2] இருதிணையெனக் கூறிப் பெயர் மூன்று, வினை மூன்றென்றலும்; இனி, அகத்திணை புறத்திணையெனக் கூறி, அகப்புறமெனக் கோடலும் இனமென்றது; அவை குற்றெழுத்து நெட்டெழுத்தென முற்கூறியனவே

1. சொல் இரண்டு—உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல். பொருள் இரண்டு—அகப்பொருள், புறப்பொருள்.

2. திணை இரண்டென்றதற்கேற்ப உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயரென்றது பொதுப்பெயர் கோடலும், உயர்திணை வினை அஃறிணைவினையென்றது பொதுவினை கோடலும் இன

மென்றதென்க.



[1] மற்றொரு பெயர் பெற்றாற்போலாது, சொல்வகையான் [2] மூன்றாவதோர் சொல் வேறுபெற்றமைபினென்பது. இங்ஙனங் கொள்ளாக்கால் இருதிணைப் பெயரும் வினையும் மும்மூன்றெனல் ஆகாதன்றேவென்பது.

"சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப வறிந்திசி னோரே." (தொல். சொ. கரு௦)

என்றவழி,

"இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப."
(தொல். சொ. கருக)

என வகுத்தலும், இனி ஆராய்ந்த இயற்சொல்லொடு [3] வேறு மூன்றுசொற் கூட்டி நான்கென்றலும் அவ்வாறே இனமெனப் படும்;
என்னை? ஒழிந்த மூன்று சொல்லும் இயற்சொல்லின்
வேறுபட்டமை கூறுமாகலினென்பது. அஃதேல், எழுத்து முப்
பத்துமூன்றெனக் கூறிப் பின்னர், இருநூற்றிருபத்தாறுயிர்
மெய் [4] குப்பைகோடலும் வேற்றெழுத்தாகி வருமென்பது வகுத்து மெய்ந்நிறுத்தல்' என் ப த ற் [5] கொள்ளாமோ
வெனின்,—கோடுமன்றே;

" புள்ளி யில்லா வெல்லா மெய்யும்."
(தொ, எழு. கஎ) என்புழி,
" உருவுரு வாகி யகரமொ டுயிர்த்தலும்."
என ஆசிரியன் இரண்டெழுத்தின்
கூட்டமாகச் சூத்திரஞ் [6] செய் திலனாயினென்பது.
'மெய்' என்றதனான், வகுத்தவற்றைப் பின்னும் வகுத்து நிறுத்தல் கொள்ளப்படும்;
என்னை? இயற்சீர் பத்தெனவும்
ஆசிரியவுரிச்சீராறெனவும் வகுத்தவற்றை,

1. மற்றொருபெயர்—சுட்டெழுத்து, வினாவெழுத்து என்று பெயர்பெறுதல்.

2. மூன்றாவதோர் சொல் என்றது பொதுப்பெயர், பொது வினை, அகப்புறம் என மூன்றாவதாய் வேறு நின்றவற்றை.

3. வேறுமூன்று—திரிசொல், திசைச்சொல், வடசொல். 4. குப்பை—கூட்டம்.

5. கொள்ளாமோ—கொள்ளுதல்செய்யாமோ.

6. செய்திலனாயிற் கோடுமன்றே என முடிக்க. எனவே இரண்டு எழுத்தின் கூட்டமாகச் செய்தமையின் கோடலாகாது எனறபடி.



"இயற்சீ ரிறுதி நேரவ ணிற்பி
னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப." (தொ. பொ. கூகூக)

என இயலசை மயக்கமாகிய நான்கனையே இயற்சீரெனவும்,

"வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ
ரின்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே." (தொ. பொ. கூகூ௫)

என்றவழி, ஆசிரியவுரிச்சீர் ஆறனுள் இரண்டனை ஒழித்து உரி யசை மயக்கமாகிய நான்கனையே ஆசிரியவுரிச்சீரெனவும் வகுத்து நின்றமையினென்பது.

'மெய்' என்றதனான், வகுத்தவற்றைப் பின்னும் வகுத்து திருத்துதல் கொள்ளப்படும்; என்னை?

"இயலசை மயக்க மியற்சீ ரேனை

யுரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்." (தொ. பொ. ௩௨௫)

என்று பகுத்தோதியவாற்றானென்பது; அக்கருத்தினானன்றே [1] ஒழிந்த இரண்டனையும்,

"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ." (தொ. பொ. ௩௩௬)

என இறந்தது தழீஇ உரைப்பானுயிற்றென்பது,

(௫) மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்—எடுத்தோதிய பொருண்மைக்கு ஏற்றவகையான் அப்பொருண்மைக்கட் சொல்லாததொன்று கொள்ளவைத்தல்.

'முட்டின்றி முடித்தல்' என்றதனான், எடுத்தோதாததும் எடுத்தோதியதனோடு ஒக்குஞ் சிறப்பிற்றென்றவாறாம். அது போல்வன அதற்கு இனமெனப்படும். [2] மற்றி [3] தனை [4] அருத்தாபத்தியென்னுமோமெனின், என்னுமன்றே;

"பிறசீ ருள்வழித் தன்றளை வேண்டுப." (தொ. பொ. ௩௬௭)

என்னும்பொருட்டன்றித் தன்சீரோடு இயற்சீர் வந்து தளை கொள்ளுமென மொழியாததோர் பொருள் கோடலினென்க; இனி,

---

1. ஒழிந்த இரண்டு — நீடுகொடி குளிறுபுலி என்னும் ஆசிரிய உரிச்சீரிரண்டு.

2. மற்று என்பதன்முன். 'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' என்னும் உதாரணம் தவறியதுபோலும்.

3. இதனை — இவ்வுத்தியை.

4. அருத்தாபத்தி—பொருட்பேறு. தன்சீருள்வழி என்னுஞ் சூத்திரத்தினால் 'பிறசீ ருள்வழித் தன்றளை வேண்டுப' என்று பொருள்கொண்டாற்றான் அருத்தாபத்தியாம்.

"ரஃகா ரொற்றும் பகர விறுதியும்." (தொ. எழு. ௪௯௦)

என்றவழி, [1] ஒழிந்த நான்கெழுத்தும் ஈற்றினிற்குமென்று கோடல் போல்வனவும் அதன் இனமெனப்படும்; என்னை?

'ஒன்றென முடித்த றன்னின முடித்தல்'

எனினும் இழுக்காது; இனி,

"சீரியை மருங்கி னோரசை யொப்பின்." (தொ. பொ. ௩௯௮) என்றவழி, ஒன்றாதது இயற்சீர் வெண்டளையென்று [2] கோடல் அருத்தாபத்தியாகி,

"எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்து." (தொ. சொ. ௬௧) என்ற வழக்கியலானே வழுவன்றி அடங்குமென்பது.

(கூ) வாராததனுன் வந்தது முடித்தல் — ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததோர் சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருண்மைக்கு வேண்டும் முடிபு கொள்ளச்செய்தல்; அது,

"தொடர விறுதி தம்முற் ரும்வரின்
லகரம் றகரவொற் ருகலு முரித்தே." (தொ. எழு. உகச)

என அகரத்திற்குக் கேடுவராத சூத்திரத்தானே, லகரம் றகர வொற்ருய் வருமெனப் பிரித்துத் திரிபு கூறியதே பற்ருக [8]அகரம் ஆண்டு நில்லாது கெடுமென்று கொள்ளவைத்ததனுனே, 'சிற்சில வித்திப் பற்பல கொண்டார்' என்று வந்த புணர்ச்சி முடித்தவாறு கண்டுகொள்க.

"எல்லா மென்னு மிறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்."
(ஷை கஅகூ)

என்றவழி, எல்லாமென்னும் விரவுப் பெயருள் உயர்திணை கூறி
வற்றுச்சாரியை பெருமையான் அது
பெற்றுவந்த அஃறிணைக்

கூறே முடித்தலும் அது; பிறவும் அன்ன.

1. ஒழிந்த நான்கு—னகரம், ளகரம், ளகரம், மார் என்பன. என்னை? என்று தொடங்கும் வாக்கியம் பொருத்தமில்லை.
அதன்முன் சில வாக்கியம்
தவறியிருத்தல்வேண்டும்.

2. கோடல்—கொள்ளுதல்.

3. சிலசில—சிற்சில, பலபல பற்பல.
இவற்றிலுள்ள அக
ரக்கேடுதான் இவ்வுத்தியாற்
கொள்ளப்பட்டது. பியல்]



இனி, இங்ஙனம் முடிபுகோடலன்றி [1] ஆண்டுக் [2] குறியீடு தலும், ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்ந்தது பின்னர் ஆட்சிக்கண் வாராமையும், வந்தவழிப் [3] பிறவற்றோடு கூறுதலும் அதற்கு இனமெனப்படும். அவை,

"அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி,"
(தொ. சொ. ௨௩௦)

என முடிந்ததனை மீண்டும்,

"தெரிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி." (தொ. சொ. ௪௩௦)

எனக் குறியிடுதல் எச்சவியலுள் வந்ததாயினும் முன்னர் அக் குறியீடு வந்ததின்மையின் அது வாராததொனப்படுமாகலின் [4] அஃது ஈண்டுக் குறியிடுதலாயிற்று. வினையியலுட் பெயரெச்ச

மென்று ஆளுதலும் அது.

'வண்ணச் சினைச்சொல்' 'முற்றுச்சொல்' என்பனவும், குற்றியலிகரத்தைப் 'புள்ளி'யென்றலும் ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்ந்தனவாகலின் அவையும் [5] இனி வாராமையான் வந்துழி வந்துழி [6] அவ்வாறு ஆண்டானென்பது.

இனி; [7] புள்ளியென மேல் ஆளவாராததனைப் புள்ளி யென்று ஆள்வனவற்றோடு மயக்கங் கூறுதலென்பது,

" அவைதாம்,

குற்றிய லிகரங் குற்றிய லுகர
மாய்த மென்ற
முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன."

(தொ. எழு. ௨)

என்புழி, குற்றியலிகரம் புள்ளியென்று யாண்டும் ஆளவாராமை யானும், அதுதான் அவ்வழி வரவேண்டுதலானும், அங்ஙனம் புள்ளியென்று ஆளவரும் குற்றுகரத்தோடும் ஆய்தத்தோடும்

---

1. ஆண்டு என்றது எழுத்தினும் சொல்லினும் என்றபடி.

2. குறி—பெயர்.

3. பிறவற்றோடு கூறுதல் என்றது குற்றியலுகரம் ஆய்தம் என்பவற்றோடு சேர்த்துப் புள்ளி என்று கூறுதல். பின் காட்டும் உதாரணத்தாலறிக.

4. அஃது—வினையெஞ்சு கிளவி. வாராததனுன் வந்தது குறி யிடுதலாயிற்று என்றபடி.

5. இனி—பின்.

6. அவ்வாறு—ஆட்சியுங் குறியீடுமாக.

7. புள்ளியென மேல் ஆளவாராதது என்றது குற்றியலிகரத்தைப புள்ளிபெறும் என்று மேல் ஆளவில்லை என்றபடி.



[மர உடன் கூறுதலாயிற்று; இங்ஙனம் உடன் கூறுக்காற் [1] புள்ளியுங் குற்றிகரமுமெனச் சூத்திரம் பெறுதல் வேண்டுவதாவான் செல்லுமென்பது; இனி,

“ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா.”

(ஷை ௩௨)

எனவும்,

“மாறுகொ ளெச்சமும் வினாவு மையமும்.” (ஷை ௨௯0)

எனக் கூறுவனவும் அவை; என்னை? இடைச்சொல்லோத்தினுள் வினாவென்றோதாத ஆகாரம் வாராததுடன் ஆண்டு வினா

வென்று ஓதிய ஏகார ஓகாரங்கள்,

“ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா.”

(சூ நஉ)

என்று உடன் கூறினமையானும்,
அவ்வாறு இடைச்சொல்லோத்

தினுள் எடுத்தோதாத
மாறுகொளெச்சத்தோடும் ஐயத்தோடும்

ஆண்டோதிய வினாவினையும்
எண்ணினையும் எழுத்தோத்தினுள்

வித்து உடன்
கூறினமையானுமென்பது; இது நோக்கிப்

போலும்,

"ஈற்றசை யிவ்வைந் [2] தேகாரம்."
(தொ. சொ. இடை. கூ)

என இடைச்சொல்லினை எழுத்துச்
சாரியை பெய்தோதிய கருத்

தானே இப்பொருண்மை
கொள்ளவைப்பானுயிற்றுமென்பது.

மற்றிவை எதிரது
போற்றலாகாவோதெனின், — [3] அது

பொருட்படைக்கண்ணதெனவும், [4]
இவை ஆட்சியுங் குறியீடும்
பற்றியதோர் பகுதியெனவுங் கூறி
விடுக்க. அஃதேல், [5] குறி
யீட்டால்
ஈண்டாராயானோவெனின்,—இவை
உத்திவகையாக
லானும் [6] அது தானே
உத்தியெனப்படுமாதலானும் அதனை
ஈண்டு ஆராயானென்பது.

---

1. குற்றிகரத்தோடு புள்ளிபெறுதலும் உடன் வைத்துச் சூத்திரஞ் செய்தல்வேண்டிவருமென்பது கருத்து.

2 எழுத்துச்சாரியை—காரம்; ஏகாரமென்று சாரியை பெய்தது என்க.

3. அது—அவ்வுத்தி. (எதிரது போற்றல்)

4. இவை—இனங் கூறியவை.

5. குறியீடு—பெயரிடுதல்.

6. அது — குறியீடு.

(எ) வந்ததுகொண்டு வாராததுணர்த்தல்—பின்னொருவழி வந்ததுகொண்டு முன் வாராததோர் பொருள் அறியவைத்தல்; அது,

"[1] ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகும்"

(தொ. எழு. உ0௪)

எனபது.

"எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு
மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப."

(தொ. சொ. ௪௩௯)

என வந்ததுகொண்டு மேற் கூறப்பட்ட ஏழெச்சத்திற்கும் மேல் வந்து முடிக்குஞ் சொல் வாராததனை வருமென்றுணர்ந்து கொள்ளவைத்தமையின் இதுவும் அதுவேயாயிற்று.

"ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே."

(தொ. சொ. கிள. க)

என்றவழி, [2] திணையென்னும் பெயர் எப்பொருட்கும் எய்துவித்தல் ஒரு சூத்திரத்துள்ளே கோடலின் அதனை அதற்கு இனமென்று கொள்ளப்படும்; பிறவும் அன்ன.

(அ) முந்து மொழிந்ததன் றலைதடுமாற்று—முன்னொருகாற் கூறிய முறையன்றிப் பின்னொருகால் தலைதடுமாறுகக் கூறுதல; அது,

"பன்னீ ருயிரு மொழிமுத லாகும்." (தொ. எழு. ருசு) எனவும,

"உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா." (தொ. எழு.சுo) எனவும், உயிரும் மெய்யும் நிறுத்த முறையானன்றிக்

"கதந பமவெனு மாவைந் தெழுத்து
மெல்லா வுயிரொடுஞ் செல்லு மார்." (தொ. எழு. சுக)

என மெய்பற்றி வரையறை கூறுதலும்.

---

1. 'ஞாங்கர்க் கிளந்த' என்றது முதற் சூத்திரத்துள் கூறிய என்றபடி. அதனுள் 'தத்தமொத்தவொற்று' என்றதை. இச்சூத்திரத்தினுல் வல்லெழுத்தென்று பெறவைத்தல்.

2. திணையென்னும் பெயர் எப்பொருட்கும் எய்துவித்தல்— ஆயிருதிணையின் எனத் தொகுத்ததனுல் உயர்திணைப்பொருள் அஃறிணைப்பொருள் என்னும் எல்லாவற்றிற்கும் அத்திணையென்னும்பெயரை எய்துவித்தல்.

'எல்லா மொழிக்கு மிறுதியு முதலு
மெய்யே யுயிரென் றாீ ரியல." (தொ. எழு. ௧0௩)

என [1]முற்கூறிய முறை பிறழக் கூறுதலுமாயின.

மெய்யும் உயிரும்பற்றி [2]விதந்து வரையறுப்பினும் அஃது

இரண்டற்குஞ் செல்லுமென்று கோடற்கும், இனி இயல்பு வகையான் ஈருக ஒருதலையாக உடையன மெய்யென்றற்கும், [3]அவ்வாறு கூறினுனென்னுமோவெனின்,—அங்ஙனமே; அக் கருத்தினனன்றே 'ஒத்தகாட்சி' எனக் குற்றத்தோடு ஒப்புமை கூறி [4]மற்றுப் பொருள் பயத்தலின் அமையுமென்று கொள்வா மாயிற்றென்பது.

இனி,

"மூன்றுதலை யிட்ட மூப்பதிற் றெழுத்தின்."
(தொ. எழு. ௧0௩)

என்றாற்போல்வன இனமெனப்படும்.

"புள்ளி யில்லா வெல்லா மெய்யும்."(தொ. எழு. நூன். ௧௭)

என்பது மெய் முற் கூறினமையின் இதுவும் இதற்கு உதா

ரணமெனப்படும்.

மற்று, [5] மயங்கக் கூறலொடு இதனிடை வேற்றுமை யென்னையெனின்,—அஃது,

"இன்னே வற்றே." (தொ. எழு. புண. கஎ)

என நிருத்தமுறையாற் கூறாது மற்றதுவே பற்றாக மற்றொரு பொருள் கொள்ளப்படும்; இஃது [6] அன்னதன்றி இங்ஙனம் மயங்கக் கூறல்வேண்டும் பொருண்மைத்தாகி வருமென்பது;

---

1. முற்கூறிய முறை—உயிர் முற்கூறல்.

2. விதந்துவரையறுத்தல் 'மெய்யேயுயிரென் றுயீரியல' என வரையறுத்தல். அஃது—அவ்வரையறை. இரண்டற்கும் சேறல் என்றது, நிரனிறையாகாது இறுதியு முதலுமாகிய இரண்டற்குஞ் சேறலே.

3. அவ்வாறு என்றது—'மெய்யே உயிரென் றுயீ ரியல' என்ற சூத்திர அடியுள் மெய்யை முற்கூறுதலே.

4. மற்றுப்பொருள் பயத்தலின் அமையும் என்றது, குற்றமாயினவும் பொருள் பயப்பின் அமையும் என்றபடி.

5. மயங்கக் கூறல் குற்றத்துளொன்று. கூகூடு-ம் சூத்திரம் நோக்குக.

6. 'அத்தினகர மகரமுனையில்லை' என்ற சூத்திரம் நிறுத்த முறையாற் கூறுது மயங்கக் கூறலை ஆண்டு நோக்கியுணர்க. (கூகூடம் சூத்திரம்).



அஃதேல், இது மாறுகொளக் கூறலென்னுங் குற்றமாகாதோ வெனின்,—ஆகாது ; என்னை ? இது முற் கூறிய பொருளினை மாறுபடாமையானும் நிறுத்தமுறை தலைதடுமாறவைக்குந் துணை யாகலானுமென்பது.

(கூ) ஒப்பக் கூறல் — ஒன்று கூறுங்கால் இருபொருட் குறித்ததென்று இரட்டுறச் செய்தல். அது,

" இன்னி னிகர ' மாவி னிறுதி
முன்னர்க் கெடுத லுரித்து மாகும்." (தொ. எழு. கஉ௦) என்றாற்போல்வன.

" வினையெஞ்சு கிளவியு முவமக் கிளவியும்."
(தொ. எழு. உ௦௪)

எனவும்,

"அன்ன வென்னு மூவமக் கிளவியும்." (தொ. எழு. உகஅ) எனவும் இனமல்லனவற்றை உடனெண்ணுதலும்,

"மாமரக் கிளவியு மாவு மாவும்." (தொ. எழு. உஙக) என மாட்டெறியுங்கால் [2] வேறுவேறு விதியுடையனவற்றை ஒருங்கு மாட்டெறிதலும், [3] ஆண்டு ஆறு வல்லெழுத்தினையும் உடன் கோடலும், நிலைமொழித் தொழிலொடு வருமொழித் தொழிலும் ஒப்புக்கொண்டு [4] மாட்டெறிதலும் போல்வன ஒப்பக் கூறலென்னும் பகுதியாய் அடங்குமென்பது.

(கஅ) ஒருதலை மொழிதல்—ஓர் அதிகாரத்தாற் சொல் லற்பாலதனை வேறு அதிகாரத்துச் சொல்லி அவ்விலக்கணமே [5] ஆண்டுங் கொள்ளவைத்தல். அது,

"அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு." (தொ எழு. ௩௧) எனவும,

"ஆணும் பெண்ணு மஃறிணை யியற்கை." (தொ. எழு. ௩௦௩) எனவும் இவை எழுத்ததிகாரத்துக்

கூறியவாற்றுனே சொல்

1. ஆ, மா என நிற்க இரட்டுற மொழிதல்.

2. வேறுவேறு விதி என்றது, மாமரக் கிளவிக்கு வேறு விதி, ஆவுக்கும் மாவுக்கும் வேறுவிதி என்றதை. (எழு. உயி. உகூ)

3. ஆண்டு—அச்சூத்திரத்து.

4. அவற்றோரன்ன என்று மாட்டியதை.

5. ஆண்டும்—சொல்லாத அதிகாரத்தும்.



லதிகாரத்துள்ளும் [1] அவ்விலக்கணங் கொள்ளவைத்தமையின் அப்பெயர்த்தாயிற்று.

உடம்பொடு புணர்த்துச் சொல்லுவன அதற்கு இனமெனப்படும்; என்னை? [2] விதியல்லாதது விதிபோல மற்றொருவழிச் சேறலின்.

(கக) தன்கோட் கூறல்—சொல்லாதன பிறவுளவாயினும் அந்நூற்கு வேண்டுவதே

கொள்வலென்றல்; அது,

> "அஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கு
> மெய்தெரி வளியிசை யளபுநுவன் றிசினே."
> (தொ. எழு. ௧0௨)

எனவும்,

> "சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
> அஐ ஔவெனு மூன்றலங் கடையே."

(தொ. எழு. ௬௨) எனவும்,

> "குற்றெழுத் தைந்து மொழிநிறை

பிலவே."(தொ. எழு. ௪௪) எனவும்,

> "பாடலுட் பயின்றவை நாடுங் காலை."

(தொ. பொ. ௩) எனவும் வரும்.

இவ்வாற்றானே,

> "அளபிற் கோட லந்தணர் மறைத்து."

(தொ. எழு. ௧0௨)

ஆயினும் அது [3] கூறினேனெனவும், இயற்சொல்லிற் [4] கல்லது நிலைமொழியாக்கங் கூறேனெனவும்,

---

1. அவ்விலக்கணம்—சுட்டிலக்கணமும்

ஆண் பெண் அஃ

றிலை முடியும்.

2. விதியல்லாதது விதிபோல மற்றொருவழிச் சேறல் என்றது — விதிக்கப்படாதது விதிக்கப்பட்டதுபோல ஓரிடத்துச் சேறல். அஃதாவது ஒன்றற்கு விதிக்கப்படாதது அதற்கு விதிக்கப்பட்டதுபோல அதன்கண்ணுஞ் சேறல். (உ+ம்) திருப்பரங்குன்ற முருகன் திருச்செந்தூரிலுமிருப்பன் ஆவினன் குடியிலுமிருப்பன் என்றால் மற்றிரண்டுக்கும் விதிக்கப்பட்ட இருப்பு விதிக்கப்படாத திருப்பரங்குன்றத்துக்கும் விதிக்கப்பட்டதுபோல அதன்கண்ணுஞ் சென்றது காண்க.

3. கூறினேன் என்பது கூறேன் என்றிருத்தல்வேண்டும். அதுவே பொருத்தம்.

4. அல்லது என்றதனால் ஏனைய மொழிக்கு என்பது பெறுதும். நிலைமொழியாக்கம்—நிலையும் மொழியாக்கமும். (உம்மைத்தொகை.) நிலை—முதனிலை, இறுதிநிலை. மொழியாக்கம்—இடைநிலைமயக்கம்.

பியல்]

# பொருளதிகாரம்

ஏசக

"வழக்குஞ் செய்யுளும் ஆராய்வல்." (பாயிரம்)

என்று புகுந்தான் பாடலுட் பயின்ற வழக்கே கூறுவலெனவுங் கூறுதலின் அவை தன்கோட் கூறுதலாம்.

இனி, ஒன்பது மயக்கத்துண் [1] மெய்ம்மயக்கங் கூறி ஒழிந்தன கூறுமையும், வினைத்தொகையும் பண்புத்தொகையும் [2] எடுத்

தோதி முடியாமையும்,

"நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்." (தொ. பொ. ருந)

பற்றிப் பொருளிலக்கணங் கூறுவலென்றலும், [3] பெரும்பான்மை இலக்கண வழக்கென்ப என்றலும், அதனானே சிறுபான்மையை மயக்கமென்றலும், அம் ஆம் எம் ஏம் என்பன முதலாயவற்றை அங்ஙனம் பகுத்தோதுதற் பயனும், [4] அவை வினையின்றி அவ்வினை செய்தான்மேல் நிகழ்கின்ற கூறுதலுமேபற்றி,

"வினைசெயன் மருங்கிற் [5] காலமொடு வருநவும்."
(தொ. சொ. உருஉ)

என்று இடைச்சொல்லோடு ஓதுதலும்போல்வன அதற்கு இனமெனப்படும். என்னை? இவைதாங் கூறுவலென்று புகுந்தவற்றுள்ளும் ஒரு பொருளானவற்றை வரைந்துகொண்டமையின் அவற்று விரியெனப்பட்டன.

(கஉ) முறைபிறழாமை — காரணமின்றித் தான் சில பொருள் எண்ணி நிறுத்தியபின்னர் அம்முறை பிறழ்ந்தாலுங்

---

1. ஒன்பது மயக்கம் என்று இவர் கருதியன எவை என்பது நன்கு புலப்படவில்லை. மெய்ம்மயக்கம் — இடைநிலை மெய்ம் மயக்கம்.

2. தொல்காப்பியர் புணர்ச்சியுள் எடுத்தோதிமுடித்திலர்.

நன்னூலார் முடிப்பர்.

3. ஒன்றற்கு இலக்கணங் கூறுங்கால் பெரும்பான்மைபற்றிச் சொல்லுமாயின் அப்பெரும்பான்மைபற்றி அதனை இலக்கணமாகக் கோடலைப் பெரும்பான்மை இலக்கண வழக்கென்ப என்பது குறித்து நின்றது. சிறுபான்மையாயின் இலக்கணமாகாது வழுவாம் என்றபடி. சிறுபான்மை வழக்கு வழுவமைதியாகக் கொள்ளப்படும்.

4. அவை—அம் ஆம் முதலிய விகுதிகள். வினைசெய்தான் கருத்தா. பயனுங் கூறுதலும்பற்றி ஓதுதலும் என இயைக்க.

5. காலமொடு வருநவும்—காலங்காட்டுவனவற்றோடு வருவனவும்.



குற்றமில்வழியும் அம்முறையினையே இலக்கணமாகச் சொல்லுதல்; அது,

"பெயர் ஐ ஒடு கு
இன் அது கண்விளி யென்னு
மீற்ற."(தொ. சொ. வே. ௩)

என [1] நிறுத்தமுறையாற் பற்றி எழுவாய் வேற்றுமை இரண்டாவது மூன்றாவதெனப் பெயர் கொடுத்தல்.

"அகரமுத னகர விறுவாய்."

(தொ. எழு. க)

எனவும,

" கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
"

(தொ. பொ. அக)

எனவும் வழக்கியலானும் இலக்கணவகையானும் உள்பொருளை [2] விதந்தே எண்ணி நிறுத்தாதவழியும்,

" அவற்றுள்,
அ இ உ எ ஒ."

(தொ. எழு. ந)

எனவும,

" அவற்றுள்,
நடுவணைந்திணை நடுவண

தொழிய."(தொ. பொ. அக. உ)

எனவும் முறைபிறழாமற் கோடல் அதற்கு இனமெனப்படும்.

(கரு) பிறனுடம்பட்டது தானுடம்படுதல்—[3] உள்பொருள் இன்றாயினும் வழக்கியலாற் கொள்பொருள் இதுவெனக் கூறுதல்; அது,

" பண்டியன் மருங்கின் மரீஇய பண்பே."

(தொ. சொ. வே. எ)

என்றாற்போல்வனவற்றான் அறிக. இனி,

"மீயென மரீஇய விடம்வரை இளவியும்."

(தொ. எழு. உயி. ௬௮)

என்புழி, மேலென்பது இலக்கணமென்று எடுத்தோதியதனை மரூஉவென்றமையின் அதுவும் அதன்பாற்படும்; என்னை? முத

1. நிறுத்தமுறைபற்றி என்றிருப்பது கருத்துப்போலும்.

நலம். இஃது இவர்

2. விதந்து எண்ணி நிறுத்தல்—உயிர் பன்னிரண்டையும் இவையென எண்ணி நிறுத்தலும் கைக்கிளை முதலிய எழு திணையையும் இவையென எண்ணி நிறுத்தலும் ஆகும்.

3. உள்பொருளின்றாயினும் என்பது உள் பொருளன்றாயினும் என்றிருப்பது நலம். இயற்கையான பொருளல்லவாயினும் எனவே திரிபான பொருளாயினும் என்றபடி.

பியல்]

# பொருளதிகாரம்

௭௬௩

னூலுட் கொண்டவாறறிந்து மற்றதனைத்தான் இச்சொல் இன்னவாறாயிற்றென்று இலக்கணங் கூறாது உடம்படுதலின். மற்றதனை இனமென்பதெற்றுக்கு? இதுதானே பிறனுடம்பட்டது தானுடம்பட்டதாகாதோ முதனூலாசிரியன் உடம்பட்டதாகலி னெனின்,—அற்றன்று; முதனூலாசிரியனைப் பிறனென்னுமை யானும், முதனூலின்வழித்தாகிய நூலுள் அவன் உடம்பட்ட தொன்று உடம்படுமென்று உத்திவகையாற் கொள்ளாது முழு வதூஉங் கொள்ளுமாகலானும், அவ்வாய்பாடு கூறலாகாதென்

பது.

இனி, முதனூன் மேலென்பது மீயென மரீஇயிற்றென்று விதந்தோதப்பட்டதனை அங்ஙனங் கூறுது மீயென மரீஇயிற்றென்று வாளாது கூறினமையின், அதனை இனமென்று கொண்டாமென்பது; எனவே ஈண்டுப் பிறனென்றது வழக்கினுள்ளோரை நோக்கியாயிற்று; என்றார்க்கு, ஒழிந்த வழிநூலாசிரியரைப் பிறனென்றுனென்னுமோவெனின், — அவருடம்பட்டது உடம்பட்டதனுற் பயந்ததென்னை? முதனூலிற் பிற

ழாமை நூல் செய்புமாயினென மறுக்க.

அல்லதூஉம் இசைநூலும் கூத்தநூலும்பற்றிப் பிறன் கோட் கூறலென்பதனுற் பிறனென்னினன்றி இயற்றமிழ்க் கண்ணே முதனூலாசிரியனைப் பிறனென்றுனென்பது; அஃதேல் வழக்குநூல் செய்வான் அவ்வழக்கினை வழங்குவாரைப் பிறனென்னுமோவெனின்,—இலக்கணமும் வழக்குமென இரண்டனுள் இஃது இலக்கணமாதலின் அவ்வழக்கினுள் வழங்குவாரைப் பிறனென்றல் அமைபுமன்றேவென்பது; என்றார்க்கு அவருடம்பட்டது உடம்படுதல் உத்திவகையென்பதெற்றுக்கு? அஃது இயல்பேயன்றேவெனின், — அங்ஙனம் [1] மரீஇயினும் இலக்கணமென்பது திரிபில்லாததாகலிற் றிரிபுபடும் வழக்கினை உடம்படுதல் இலக்கணமன்றாயினும் அது வழக்கினுள்ளார் வேண்டுமாற்றான் இலக்கணமேயாமென்பது கருத்து; அல்லாக்கால் 'எள்ளேபோல [2] எட்குப்பையுந் தன்தன்மையான் உள் பொருளாகலும்வேண்டும்' அன்றேவென்பது.

---

1. மரீஇயினும் இலக்கணமாமென்பது கருத்து எனமுடிக்க.

2. எட்குப்பை—எள்ளுக் கூடிக்
பெனரூர்.

குப்பையாதலின் திரி எசச



(கச) 1 இறந்ததுகாத்தல் — மூற்

கூறியவோர் சூத்திரப்

பொருண்மை பின்னொரு சூத்திரத்தான்

விலக்குதல்; அது,

"பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே." (தொ. பொ. ரு)
எனக் கூறியபின்னர்,

"நட்பி னடக்கை யாங்கலங் கடையே."
என்றூற்போல விலக்குதல்.
(தொ. பொ. சு)

நூற்புறனடையும் ஓத்துப்புறனடையும்
அதிகாரப்புற
னடையும்போல்வன அதற்கு
இனமெனப்படும்; அவை,
"ஈறியன் மருங்கி னிவையிவற் றியல்பெனக்

கூறிய கிளவிப் பல்லா றெல்லா

மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
யொத்தவை யுரிய புணர்மொழி நிலையே.''

(தொ. எழு. களத)

எனவும்,

"புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியுஞ்
சொல்லிய வல்ல வேனைய
வெல்லாம்.''(தொ. எழு. உ0உ)

எனவும் வருவனபோல்வன.

(கரு) எதிரது போற்றல் — வருகின்ற சூத்திரப் பொருண்மைக்கேற்ப வேறொரு பொருண் முற்கூறுதல்: அது,

"ஈருகு புள்ளி யகரமொடு நிலையும்.''(தொ. எழு. தொ. கசு)

என வருகின்றதனை நோக்கி,

"ஆற னுருபி னகரக் கிளவி
யீரு ககரமுனைக் கெடுதல் வேண்டும்.''

(தொ. எழு. ககரு)

எனக் கூறுதலும்,

"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை.''(தொ. சொ. உஉகூ)

என வருகின்றதனை நோக்கித்,

"தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல்

வரையார்."

என வழுவமைத்தலும் போல்வன.
(தொ. சொ. சரு)

இனி, ஒரு சூத்திரத்துள்ளே,

"ஈருகு புள்ளி யகரமொடு நிலையும்."
என வருவதனை நோக்கிக் கூறிய,
(தொ. எழு. கசுக)

"குற்றொற் றிரட்ட லில்லை." (தொ. எழு. தொகை. கக)
என்றல் அதற்கு இனமெனப்படும்.

1. இறந்தது—விதியைக் கடந்து வருவது. எனவே விதித்த சூத்திரப் பொருளைக் கடந்து வருவதைக் காப்பது என்றாயிற்று.



(கக) மொழிவாமென்றல்—ஒரு பயனோக்கி முற் கூறுது பொன்றல்: அவை,

" உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்,"
(தொ. எழு.
மொ. ௨) எனவும,
" கடப்பா டறிந்த புணரிய லான." (தொ.
எழு. மொ. ௪) எனவும்,
" அவ்வே,
இவ்வென வறிதற்கு மெய்பெறக் கிளப்ப."
எனவும் வரும்.
(தொ. சொ. ௧௨௧)

இங்ஙனங் கூறியதனாற் பயன்,
குற்றுகரவீற்றுக்க ணன்றிப் புணர்மொழிக் குற்றிகரமின்றென்பதூஉம், இனிப் புணர்மொழிக் குற்றிகரம் பெறுவரவிற்றென்பதூஉம் அறிவித்த லாயிற்று.

" அவ்வே,
இவ்வென வறிதற்கு மெய்பெறக் கிளப்ப."

என்பதூஉம்,
(தொ. சொ. ௧௨௧)

[1] " அவ்விளி யேலா." (தொ.
சொ. ௧௨௯) என்றதூஉம்

அவ்விளியிலக்கணமென்றற் பயம்பட வந்தது.

ஈற்றுப் பொதுவினால் விளியேற்குமென்று ஓதப்பட்ட பெயருள் இவை விளியேலாவென விளிவிலக்கல் வேண்டுதலானும், [2] நீ வாராயென்பது இயல்புவிளியன்றென விலக்குதலும் விளியிலக்கணமேயாதலானுமென்பது. இனி,

> "மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கு
> மைகார வேற்றுமைத் திரிபென மொழிப."
> (தொ. எழு.

தொகை. கரு) எனவும்,

> "மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
> ஙஞநம வென்னு மொற்று மாகும்மே."
> (தொ. எழு. தொகை. க)

---

1. விதியன்றி விலக்கும் இலக்கணமாம் என்றபடி, "அவ் விளி யேலா" என்று சூத்திரமில்லை. ஆதலால் "தாம் விளி கொள்ளா" என்றதை மாறி எழுதினர்போலும்.

2. நீ என்பது முன்னிலைப் பெயரேயன்றி இயல்பு விளி யன்று என்றபடி.

எனவும் வருவன அதன்பாற்படும்; என்னே? [1] அவைபும் முன் னர்ப்போய் மொழிவனவற்றை அவாவி நின்றமையினென்பது.

(கஎ) கூறிற்றென்றல்—முற்கூறியதோர் இலக்கணத்தினை மற்றொரு பொருட்கும் விதிக்கவேண்டியவழி, அவ்விலக்கணத் தினை மீட்டுங் கூறாது மேற்கூறியவாற்றானே கொள்கவென் பான் அவை கூறினுமென்று நெகிழ்ந்துபோதல்: அவை,

"கைக்கிளை முதலா வெழுபெருந் திணையு
முற்கிளந் தனவே முறைநெறி வகையின்."
(தொ. பொ. சகஎ)

எனவும்,

"என்வகை யியனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின ததுவே." (தொ. பொ. ருகஎ)

எனவும் வரும். இவை அகப்பொருட்கும் புறப்பொருட்கும் ஓதிய இலக்கணஞ் செய்யுளுள்ளும் அவ்வாறெய்துவித்தவா றுயிற்று.

"முதலெனப் படுவ தாயிரு
வகைத்தே." (தொ. பொ. கஎ)

எனவும்,

"மெய்பெறு மவையே கைகோள்

வகையே.''(தொ. பொ. ருoo)

எனவும்,

"மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு
மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.''(தொ. பொ. ௩கச)

எனவும் வருவன அதற்கு இனமெனப்படும்; என்னை? கைக்கிளை பெருந்திணைக்கும் இவையே முதலென்றலானும், திணையுங் கைகோளும்போல்வன புறப்பொருட்கும் கோடற் பயன்படவைத்தமையானும், முற்கூறிய [2] மாத்திரையும் [3] எழுத்தும்

1. அவையும் முன்னர்ப்போய் மொழிவனவற்றை அவாவிநின்றன என்றது அகத்தோத்துட் கூறுஞ் சிறப்பு விதிகளை அவாவிநின்றன என்றபடி. அகத்தோத்து என்றது அகச்செய்கை கூறும் உயிர்மயங்கியல் புள்ளிமயங்கியல்களை. அவற்றுள், "மரப் பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே'' என்னும் (உயிர் மய. கடு-ம்) சூத்திரத்தையும், "அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்'' என்னும் (புள்ளி. ககூ-ம்) சூத்திரத்தையும், "மெல் லெழுத் தியற்கை......கும்மே'' (தொ. கை. க) என்னும் சூத்திரம் அவாவி நின்றது. ஏனையதையும் அவ்வாறே அறிந்துகொள்க.

2. மாத்திரை வேறுபடுதல், செய்யுளியலில் வரும் "குறிலிணை யுகர மல்வழியான'' என்பதாலும் "எழுத்தள வெஞ்சினும்'' என்ற சூத்திரத்தாலும் பிறவற்றாலும் பெறப்படும்.

3. எழுத்து வேறுபடல்—செய்யுட்கேற்பப் பதினைந்தாக வகுத்துக் கோடல்.

பியல்]  பொருளதிகாரம்

எசஎ பிறவாற்றாற் செய்யுட்குப்

பயன்படுமாற்றான் வேறுபட்டதல் லது அவை

மேற்கூறிய மாத்திரையும் எழுத்துமே என்றமை

யானுமென்பது.

(கஅ) தான்குறியிடுதல்—உலகு குறியின்றித் தன்னா லுள்ளே வேறு குறியிட்டாளல்: அவை,

[1] உயர்திணை அஃறிணையெனவும், கைக்கிளை பெருந்திணை யெனவுஞ் சொல்லிற்கும் பொருளிற்கும் வழக்கியலானன்றி ஆசிரியன் தானே குறியிடுதல். வண்ணச் சினைச்சொல், முற்று வினைச்சொல்லென [2] ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்ந்தனவும், வினையெஞ்சுகிளவியும் பெயரெஞ்சுகிளவியுமென்று ஆண்டு,

"ஆயி ரைந்து
நெறிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி."
(தொ. சொ. சுகூ)

எனக் குறியிடுதலும் அது.

"இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி."
(தொ. சொ. எஉ)

எனவும்,

"மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய

வாக்கமொடு புணர்ந்த வேதுக் கிளவி." (தொ. சொ. கூக) எனவும் [3] பெயர்கொடுத்தல் அதற்கு இனமெனப்படும்.

(கக) ஒருதலையன்மை—

"வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகும்."

(தொ. எழு. உகரு)

என விரித்தாற்போலாது இலக்கணங் கூறி ஒழிதல்: அது,

1. உயர்திணை அஃறிணையென்று சொல்லிற்கும், கைக்கிளை பெருந்திணையெனப் பொருளுக்கும் நிரனிறையாகக் கொள்க.

2. ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்தல் என்றூர், அச் சூத்திரங்களிலன்றிப் பின் அக்குறியை எடுத்தாளாமையின். 'வாராததனுன் வந்தது முடித்தல்' என்பதனுரை பார்க்க.

3. இரண்டாவது என்றும் ஏதுக்கிளவி என்றும் பெயர் கொடுத்தல் குறியீடாம் இனமென்றது, வேற்றுமைப் பொதுச் சூத்திரத்துப் பெயர் கொடாது சிறப்புச் சூத்திரத்துப் பெயர் கொடுத்தமையானும் மயக்கச் சூத்திரத்து ஏதுக்கிளவி எனப் பெயர் கொடுத்தமையானும் இவை மாயின என்றபடி.



"குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
யுயிரொடு புணர்ந்த வல்லா றன் மிசைத்தே."

(தொ. எழு. ௩அ)

என்றக்கால் யாண்டும் [1] ஒருதலையாக வாராது, வருஞான்று வருவது ஆண்டென்று கொள்ளவைத்தல்.

இனிச் சொல்லோத்தினுள் வேற்றுமையென்று ஓதப்பட்ட எட்டனுள் எழுவாய் வேற்றுமையினையும் விளிவேற்றுமையினையும் வேற்றுமையென்னாது எழுத்தோத்தினுள் அல்வழியென் றல்போல்வன அதற்கு இனமெனப்படும்.

(உ௦) முடிந்தது காட்டல் — சொல்லுகின்ற பொருட்கு வேண்டுவனவெல்லாஞ் சொல்லாது தொல்லாசிரியர் கூறினா ரென்று சொல்லுதல்:

அஃது, 'ஒன்றறிவது உற்றறிவது' என்றற்கும், 'இரண் டறிவது உற்றுஞ் சுவைத்தும் அறிவது' என்றற்கும் முறைமை யாற் சூத்திரஞ் செய்வான் அவை அவ்வாறாதற்குக் காரணங் கூறாது,

"நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத்

தினரே."

(தொ. மர.

எஉ)

என முடிந்தது காட்டல்.

"நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட

வாறே."

(தொ. எழு. நூன். எ)

என்றாற்போல்வன அதற்கு இனமெனப்படும்.

(உக) ஆணை கூறல்—இவ்வாசிரியன் கருத்து இதுவெனக் கொள்ளவைத்தல். அது,

"அம்மி னிறுதி கசதக் காலை
தன்மெய் திரிந்து ஙஞந வாகும்." (தொ. எழு. கஉகூ)

எனக் கருவியோத்தினுட் சாரியை மகரம் பகரவருமொழிக்கண் திரியாதென்றுபோய்ச் செய்கையுள் வல்லெழுத்தினது [2] இயற்கைமெல்லெழுத்தாதல் அறிவித்தற்கு 'அல்வழியெல்லா

1. ஒருதலை—நிச்சயம். குறியதன் முன்னர் வரும் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்தாறன்மேலெல்லாம் ஆய்தம் வருதல் நிச்

சயமனறு எனறபடி.

2. இயற்கை மெல்லெழுத்து என்றது அம்மகரம் பகரத்தின் இயற்கை மெல்லெழுத்தாதலின் திரிபுவிதி வேண்டியதில்லை. அது "அல்வழியெல்லாம்—ஆகும்" என்றதனால் அமையும்.



மெல்லெழுத்தாகு' மெனச் சொல்லுதல்போல்வன. ஙஞந ஆதற் கும் இஃதொக்கும்.

"ஓம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்." (தொ. சொ, ௩ கூகூ) என்றாற்போல்வன அதற்கு இனமெனப்படும்.

மற்றுத் தன்கோட் கூறலொடு இதனிடை வேற்றுமை யென்னையெனின்,—[1] அது [2] தந்திரஞ் செய்யும் பகுதிக்கண்ணது ; இஃது அன்னதன்றிப் புணர்ச்சிக்கட் சிறப்புடைய நிலைமொழி [3] வருமொழிக்குத் திரிபுபோலாதென்று [4] கருவியாகிய இடைச்சொற்காயின் இத்துணையமைபுமென்று ஆணைசெய்தலின் அப்பெயர்த்தாயிற்று.

(உஉ.) பல்பொருட்கேற்பின் நல்லது கோடல்—ஒரு சூத் திரத்துட் பயந்த சொற்றொடர் பலபொருட்கு ஏற்றதாயினும் நல்லது கொள்கின்றானெனக் கருதி அவ்வாறு செய்தல்: அவை,

"ஒருவ ரென்னும் பெயர்நிலைக் கிளவி
யிருபாற்கு முரித்தே தெரியுங் காலை." (தொ. சொ. கசுரு)

என்றவழி, ஒருவரென்பதொருசொல் தன்கண்ணே [5] இருபா லாரையுந் தழீஇ நிற்குமெனவும், அது கருவியாக இருபாலாரை யும் சொல்லப்படுமெனவுங் கவர்த்தவழி,

"தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும்." (தொ. சொ. கசுச) என்பதனோடு படுத்துநோக்க, இருபாலாரையும் ஒருசொல் தன் கட்டழீஇ நிற்றலே நல்லதென்று கொள்ளவைத்தல்.

"தும்மெ னிறுதி யியற்கை யாகும்." (தொ. எழு. கஅஎ) என்புழி, எழுத்து விகாரமுடையதனைக் களைந்து சாரியைக் கண்ணே [6] இயற்கை கோடலும் அதன்பாற்படும். [7] இதனை

1. அது—தன்கோட் கூறல்.

2. தந்திரம்— நூல்.

3. வருமொழித் திரிபுபோலாதென்றிருப்பது நலம். அல்லது பிறவாறுமிருக்கலாம்.

4. கருவி என்றது அம் சாரியையை.

5. ஆண் பெண் என்னும் இருபாற்கும் பொதுவாய் இருபாலையுந் தழுவல்.

6. இயற்கைகோடல் என்றது, எழுத்து

விகாரப்படாது

இயல்பாம் என்று பொருள் கொள்ளாது சாரியை இயற்கையாம் என்று பொருள்கோடலை.

பெறுது

7. இதனை—இவ்வுத்தியை.



எற்புழிக் கோடலெனவும், ஒருபுடைச்

சேறலெனவுஞ் சொல் லுப.

(உரு) தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்—ஒரு வாய்பாடு எடுத்தோதப் பல வாய்பாடு அதற்கு வந்து [1] பூணு மென்று வகுத்துக் கொள்ளவைத்தல். அது,

"செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
வவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி."
(தொ. சொ. உருo) எனவும்,

"காப்பி னொப்பி னூர்தியி னிழையின்." (தொ. சொ. எரு) எனவும் ஒரு வாய்பாடு தொகுத்து ஓதியவாற்றானே பல வாய் பாடு வகுத்துக் கொள்ளவைப்பதென்பது. செய்தென்பதனை,

"நக்கு, வந்து, கண்டு, நின்று, பாடி, போய்"

எனப் பலவாக்குதலும், முற்று வாய்பாடு பலவுமாக்குதலும், இனிக் 'காப்பின்' என்றவழி,

"புரத்தல் புறந்தா லோம்புதல் போற்றல்."

எனப் பலவாக வகுத்தலுங் கண்டுகொள்க.

"உருவென மொழியினும்."
(தொ. சொ. உச)

என்றலும்,

"இதன இது விற்று." (தொ. சொ. கககு) என்றலும்போல்வன அதற்கு இனமெனப்படும்.

(உசு) [2] மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல்—ஒரு பொருளினை ஒருவன் வேறுபடக் கொள்வதோர் உணர்வு தோன்றியக்கால் அவ் வேறுபாட்டினை மாற்றித் தான் துணிந்தவாறு அவற்கும் அறிவுறுத்தல். இது மறுதலை சிதைத்தலுடைமையின் வாளாது தன்கோட் கூறலின் அடங்காதாயிற்று.

உதாரணம்:

"மூவள பிசைத்த லோரெழுத் தின்றே."

(தொ. எழு. ரு) எனவும்,

1. பூணல்—அகப்படல்.
2. மறுதலை—எதிர்க்கொள்கை,

" நீட்டம் வேண்டி னவ்வள புடைய "
(தொ. எழு. சு)

எனவும்,

" குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்."
(தொ. எழு. சக)

எனவும் [1] மூன்றுமாத்திரையான் ஓரெழுத்து உண்டென்பாரை விலக்கி வழக்கியலான் இல்லையென்று தன்றுணிபு உரைத்தவாறு.

உயிர்மெய் வேறெழுத்தன்றென்பான்,

" புள்ளி யில்லா வெல்லா மெய்யு
முருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும்."

(தொ. எழு. கள)

எனவும்,

" மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே." (தொ. எழு. கஅ)

எனவும் வேறுபடாது கூறுதலும் அது.

வழக்கினுள் அறியாதார்மாட்டு ஒன்றுபோல இசைப்பன வாயினும் அன்றென்று கூட்டமுணர்த்தினமையின்,

" மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினு
மெழுத்திய றிரியா." (தொ. எழு. ருங)

என்றலும் அதன்பாற் சார்த்தி யுணரப்படும்; பிறவும் அன்ன.

(உரு) பிறன்கோட் கூறல்—தன்னூலே பற்றாகப் பிற நூற்கு வருவதோர் இலக்கணங்கொள்ளுமாறு கூறுதல்: அது,

"அரையளபு குறுகன் மகர முடைத்தே
யிசையிட னருகுந் தெரியுங் காலை."

(தொ. எழு. கரு)

எனவும்,

"அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலும்

..............................................................................................
நரம்பின் மறைய வென்மனார் புலவர்." (தொ. எழு. ருரு)

எனவும்,

"பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளுங்
கண்ணிய புறனே நானான் கென்ப"

எனவும் [2] இவை அவ்வந் நூலுட் கொள்ளுமாற்றான் அமையு மென்றவாறாயின.

"அளபிற் கோட லந்தணர் மறைத்து." (தொ. எழு. ௧0௨)

---

1. ஒரெழுத்தே அளபெடுக்குமென்பார் தொல்காப்பியர் காலத்து முளர்போலும். பிற்காலத்து நேமிநாத நூலாரும் நன்னூலாரும் அவ்வாறு கூறுவர்.

2. இவை என்றது இசைத்தமிழையும் நாடகத்தமிழையும் குறித்தன.

என்பது அதற்கு இனமெனப்படும்; என்னை?
[1] அவர் மதம் பற்றி இவர் கொள்வதோர்
பயனின்றாகலினென்பது.

(உகூ) அறியாதுடம்படல் — தானோதிய இலக்கணத்தின் வேறுபட வருவன தான் அறிந்திலனாகக் கூறி அதன்புறத் துச் செய்வதோர் புறனடை; அவை,

"கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே"
(தொ. சொல். ககக) எனவும,

"வருவவுள வெனினும் வந்தவற் றியலாற்
றிரிவின்றி முடித்த றெள்ளியோர் கடனே"
(தொ. பொ. ௫௫௫) எனவும வரும.

இறந்தது காத்தலோடு இதனிடை

வேற்றுமை என்னை யெனின்,—இறந்ததென்பது தான் துணிந்து சொல்லப்பட்ட பொருளாகல்வேண்டும்; இஃது அன்னதன்றிச் சொல்லப் படாத பொருண்மேற்றாகி அதுவுந் தான் துணியப்படாத பொருளாகித் தான் நூல்செய்தகாலத்தே உள்ளவற்றுள் ஒழியப் போயின உளவாயினுங் கொள்கவென்பான், வேறு பிறதோன் றினும் எனவும்; வருபவுளவெனினும் எனவுந் தேறாது அதன் ஐயப்பாடு தோன்றச் சொல்லுதலின் இது வேறென்க. முழு துணர்ந்தார்க்கல்லது பழுதறச் சொல்லலாகாமையின் [2] இஃது அவையடக்கியல்போல்வதோர் உத்தியெனக் கொள்க.

"குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலு
மறியத் தோன்றிய நெறியிய லென்ப." (தொ. எழு. ௧௬0)

எனவும்,

" செல்வழி யறிதல் வழக்கத் தான."
(தொ. எழு. ௩கஉ)
எனவும் வருவன அதற்கு இனமெனவுணர்க.

(உஎ) பொருளிடையிடுதல்—[3]வேற்றுமைப் பொருளினைச் சொல்கின்ற பொருண்மைக்கிடையே பெய்து சொல்லுதலும், சொல்கின்ற பொருட்கு இயைபுடையதனை ஆண்டுச் சொல்லாது

1. அவர்—அந்தணர்.
2. இஃது—அறியாதுடம்படல்.
3. வேற்றுமைப்பொருள் — வேருன மில்லாதது.
பொருள். சம்பந்த



இடையிட்டுப் போய்ப் பிறிதொருவழிச் சொல்லுதலும்போல்

வன ; அவை,
" முறைப்பெயர்க் கிளவி யேயொடு வருமே."

(தொ. சொ. விளி. கசு)

என்றாற்போலச் சொல்கின்ற உயர்திணைப் பெயரிடை விரவுப் பெயர் பெய்துரைத்தலும், வழுவமைக்கின்ற கிளவியாக்கத்துள் ஓதாது எச்சவியலுட் போக்கி,

" அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்."
(தொ. சொ. எச். சசு)

எனச் சொல்லுதலும்போல்வன.

" தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரு
மன்றி யனைத்தும் விளிகோ ளிலவே." (தொ. சொ. கங.கசு)

என்றவழி, [1] தானென்னும் விரவுப் பெயரினை இடைப்பெய்து விலக்குதலும், வேற்றுமைக் கிளவியோத்தினுட் கூறாது எஞ்சி நின்ற வேற்றுமைத்தொகை முதலிய எச்சங்களை எச்சவியலுட் சொல்லுதலும்போல்வனவும் அதன்பாற் சார்த்தியுணர்க.

(உஅ) எதிர்பொருளுணர்த்தல்—தான் கூறிய இலக்கணத்திற் சில பிற்காலத்துத் திரிபுபடினும் படுமென்பது, முதற் கால முதனூலுங் கொண்டுணர்ந்த ஆசிரியன் எதிர்காலத்து வருவது நோக்கி அதற்கேற்றதோர் இலக்கணங் கூறிப்போதல்.

" மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப
புகரறக் கிளந்த வஃறிணை மேன." (தொ. எழு. அஉ) என்று ஓதிய இலக்கணத்துச் சில பிற்காலத்துக் குறையவருதல் எதிர்பொருளெனப்படும். அதனைத் தான் உணர்ந்து,

" கடிசொ லில்லைக் காலத்துப் படினே."

(தொ. சொ. எச். ருகூ)

என்று கூறவே, முற்கூறிய பொருளினை வற்புறுத்தலாம் அது வென்பது. இங்ஙனந் திரிபுபடுதல் அறிந்தே கூறுதலானும் எதிர்பொருளாகலானும் இஃதறியாது உடம்படுதலி னடங்கா தாயிற்று.

1. உயர்திணை விரவுப்பெயரை உயர்திணைப் பெயரோடு கூட்டி விளிக்குமாறு ஓதப்பட்டமையின் இதனையும் விலக்கினர் என்பர் சேனாவரையர்.

95



" பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம்."

என்பதூஉம் அதன்பாற்படும்.

(உசு) சொல்லி னெச்சஞ் சொல்லியாங் குணர்த்தல் — சொல்லினாற்றலாற் பெறப்படும் பொருளினையும் எடுத்தோதி யாங்குக் கொள்ளவைத்தல்; அஃது,

" எஞ்சிய வெல்லா மெஞ்சுத லில." (தொ. எழு. மொ. சச)

என்புழி, எல்லாமென்பதனை [1] எச்சப்படுத்தற்காகாதன இருபத்தாறு கொண்டவழியும் அதனை [2] எடுத்தோதிற் சிறப்பின்றென்று கொள்ளற்க என்பது இதன் கருத்து.

எச்சவியலுட் கூறிய பொருள் [3] அகத்தோத்துக் கூறிய பொருளோடு ஒப்பக் கூறுதலும் அதன்பாற்படும்.

'மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியா ததனை முட்டின்று முடித்த' லொடு இதனிடை வேற்றுமை யென்னையெனின்,—அஃது, எடுத்தோதப்பட்ட பொருட்கண்ண தெனவும், இஃது எடுத்தோத்தினோடு ஒக்கும் எச்சப்பட வைத் துக்கொள்ளும் இலக்கணங்களெனவும் அதனோடிதனிடை வேற் றுமையுணர்க.

(௩०) தந்து புணர்ந்துரைத்தல் — உள்பொருளல்லதனை உளபோலத்தந்து கூட உணர்த்தல்; அவை,

" அளபெடை யசைநிலை யாகலு

முரித்தே."(தொ. செ. ௬எ)

எனவும்,

" குறிலிணை யுகர மல்வழி யான."

(தொ. செ. ௫)

எனவுங் கூறுங்கால் அளபெடையினை எழுத்துப்போலவுங் குற் றுகரத்தினைக் குற்றெழுத்துப்போலவும் ஓதுதல்போல்வன.

---

1. எச்சப்படுத்ததற்காகாத என்பதில் தகரம் விடப்பட் டது. எச்சப்படுத்து—அதற்காகாத எனப் பிரிக்க. அதற்கு—ஈரு தற்கு. எச்சம்—எஞ்சிநிற்கும் பொருள். அதற்காகாதன இரு பத்தாறு என்றது, இருபத்தாறு எழுத்து ஈருய் வாரதன. அவையும் தம்பெயர் கூறின் ஈரும் என்பது எல்லாம் என்ப தாற் கொள்ளப்பட்டது. எச்சப்படுத்து ஈருகாதன எனவும் பாடம். அது நன்கு பொருந்தும்.

2. எடுத்தோதின்—தம்பெயர் கூறின்.

3. அகத்தோத்து—பெயர் வினை

முதலிய இயல்.

பியல்]

# பொருளதிகாரம்

எ௫௫

" மெய்யி னெல்லாம் புள்ளியொடு நிலையல்."

(தொ. எழு. புண. உ)

எனவும்,

" மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும்."

(தொ. எழு. புண. ௩எ)

எனவும் மேற்கூறிய புள்ளியினையே

ஒருபயனோக்கி மீட்டும் புள்ளிபெறுமெனக்

கூறுதல் அதற்கு இனமெனப்படும்.

" குறுமையு நெடுமையு மளவிற் கோடலிற்
றொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல."

(தொ. எழு. ௫0)

என்பதேபற்றி,

" நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதலும்."

(தொ. எழு. தொகை. கஅ)

என்புழித் [1] தொடர்மொழியையே

நெட்டெழுத்தாக்கிக் கோட லும் அது.

(நக) ஞாபகங் கூறல்—சூத்திரஞ் செய்யுங்கால் அதற்கு ஓதிய இலக்கணவகையானே சில்வகையெழுத்தின் செய்யுட்டாக வும் நாடுதலின்றிப் பொருணனி விளங்கவும் செய்யாது அரி தும் பெரிதுமாக நலிந்து செய்து மற்றதனானே வேறு பல பொருளுணர்த்தல்; அது,

"மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
..............................உணர்ந்திசி னோரே." (தொ.

செ. கoக) என வருதல். இதனாற் கொண்ட பொருண்மையெல்லாஞ் செய்யு ளியலுட் காட்டப்பட்டன.

"எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
யக்கி னிறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே."

என்றாற்போல்வன அதற்கு இனமெனப்படும்; பிறவும் அன்ன.

(௬உ) உய்த்துக்கொண்டுணர்தல்—ஒருவழி ஒரு பொருள் சொல்லியக்கால் அதன்கண்ணே மற்றொரு பொருளினையுங் கொணர்ந்து கொண்டறியுமாறு தோன்றச்செய்தல்: அவை,

"நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே." (தொ. எழு. ௩௬)

1, தொடர்மொழி—புகர் புகழ் போல்வன.



என இடனும் பற்றுக்கோடும் கூறி அதனான் ஈறு ஆக்கங் கோடலும்,

"குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி
னொற்றிய நகரமிசை நகரமொடு முதலும்." (தொ. எழு கூஎ)

என முதலாக்கங் கூறியதனானே இடனும் பற்றுக்கோடும் அதுவேயெனக் கோடலும்போல்வன.

பெயர் வினைக்கு ஓதிய இலக்கணம், ஒழிந்த சொற்குஞ் செல்வனஞ் செல்லுமென்று கோடல் அதற்கு இனமெனப் படும்; பிறவும் அன்ன.

மற்று நுதலியதறிதலொடு இதனிடை வேற்றுமையென்னை யெனின்,—அது [1] வாளாது பயமில கூறியதுபோலக் கூறிய வழி இவ்வாறு கூறியது இன்ன கருத்துப்போலுமென்று அறிய வைத்தலும், உரைவகையானும் நுதலியதறியச் சொல்லுதலு மாம்; இஃது, அன்னதன்றி அச்சூத்திரம் தன்னான் ஒரு பொருள் பயந்ததன்றலையும் பின்னொருபொருள் பெறவருதலின் இது வேறென்பது.

மற்று ஞாபகங் கூறலோடு இதனிடை வேற்றுமையென்னை யெனின், — பயமில்லதுபோலவும் அரிதும் பெரிதுமாகவும் இயற்றி எளிதுஞ் சிறிதுமாக இயற்றாது சூத்திரஞ் செய்தல் வேறுபாடே [2] நிமித்தமாகத் தோற்றிக்கொள்வதோர் பொருள் பெறவைத்தலின் இதுவும் வேறெனப்படுமென்பது.

மெய்ப்பட நாடிச் சொல்லிய அல்ல பிற அவண் வரினும்— உய்த்துக்கொண்டுணர்தலொடு மேற்கூறிய முப்பத்திரண்டும் இச் சூத்திரத்துள் எடுத்தோதிய பொருள்வகையான் ஆராய்ந்து சொல்லப்பட்டனவன்றே? அங்ஙனஞ் சொல்லாதன பிறவும்

இந்நூலுள் வரினும்; சொல்லியவகையாற் சுருங்க நாடி —உத்திவகையென வகுத்துக்கொண்டு ஓதிய முப்பத்திரண்டு பகுதியான் அடங்குமாறு ஆராய்ந்து; மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்துகொண்டு—ஓதப்பட்ட உத்தி பலவும் ஒருங்கு வரினும் உள்ளத்தால் தெள்ளிதின் ஆராய்ந்து மயக்கந்தீர

1. வாளாது—ஒருபயனுமின்றி.

2. நிமித்தம்—ஏது.

பியல்]

ஏறுள

பொருளதிகாரம்

வேறுவேறு தெரிந்து வாங்கிக்கொண்டு; இனத்திற் சேர்த்தி உணர்த்தல்வேண்டும் — முப்பத்திரண்டற்கும் ஏற்றவகையான் இனஞ் சார்த்தி மற்றவற்றை இன்னது இதுவெனப் பெயர் கூறல்வேண்டும், அங்ஙனந் தொகை நின்றவழியும் வேறுவேறு கொண்டு; நுனித்தகு புலவர் கூறிய நூலே—தலைமைசான்ற ஆசிரியராற் கூறப்பட்ட நூல் என்றவாறு.

எண்ணிய முப்பத்திரண்டுமல்லன தோன்றினும் அவற்றுள் அடக்கி, [1] அவைதாம் ஒருங்கு வரினும் வேறு தெரிந்து இனந்தொறுஞ் சேர்த்துதலே அவாவி நிற்கும் ஈண்டு ஓதிய

நூலென்பது கருத்து.

சொல்லியவல்ல பிற அவண் வருமாறும், அவை சொல்லியவகையாற் சுருங்கநாடி இனத்திற் சேர்த்துமாறும் மேற் காட்டப்பட்டன.

இனி, ஒருங்கு பலவுத்தி வந்தவழி உள்ளத்தால் தெள்ளிதினெண்ணித் தெரிந்துகொண்டு இனத்திற் சேர்த்துதல் வருமாறு;

"அன்ன பிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉ
முரிச்சொ லெல்லாம் பொருட்குறை கூட்ட
வியன்ற மருங்கி னெனைத்தென வறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்." (தொ. சொ. ௩௯௯)

என்றவழி,

"அன்ன பிறவும் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉ
முரிச்சொல்."

என்பது, இறந்தது காத்தலாம்; என்னை? இசையுங் குறிப்பும் பண்புமேயன்றிச் [2]சீர்த்தியும் [3]புனிறும்போல்வன வேறும் உள எடுத்தோதப்பட்டன எனவும், எடுத்தோதாது இசையுங் குறிப்பும் பண்புமன்றிச் சேணென்றுந் தொறுவென்றும் வருவன உளவென்றுங் கூறினமையின்.

1. அவைதாம்—அம்முப்பத்திரண்டு உத்திகடாம்.

2. சீர்த்தி—மிகுபுகழ்.
3. புனிறு—ஈன்றணிமை.
} இவை பண்புளடங்கும்.



'வரம்புதமக் கின்மையின்' என்பது, எதிர்பொருளுணர்த் தலும் அறியாதுடம்படலுமாம். 'ஓம்படை யாணை' என்பது ஆணை கூறலாம். இங்ஙனம் ஒரு சூத்திரத்துட் பல வந்தவழி ஒன்றே உத்தியென்றுணராது மனத்தினெண்ணி மாசறத் தெரிந்துகொண்டு இவ்வாற்றான் இனத்திற் சேர்த்துக என்றான் ஆசிரியனென்பது.

"மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறா மிருவகை நிலைய."

என்பது முதலாக இத்துணையும் வழக்குநூலிலக்கணங் கூறி னான், எழுநிலத்தெழுந்த செய்யுளின்[1] இதுவும் ஒன்றாகலின் இதனைச் செய்யுளியலிற்[2] கூறினான், ஈண்டு மரபு கூறும்வழி ஒழிந்த செய்யுட்குப்போலாது, நூலிற்குப் பொருட்படையாகிய யாப்புக்

குற்றங்களும் உத்திவகையுங் கூறல்வேண்டுதலிற் கூறினு னென்பது. அங்ஙனங் கூருக்காற் ‘பாட்டின் மரபு’ [3] கட்டுரை போலவும்,

" கட்டளை [4] அரங்கின்றி வட்டா டியது "

போலவும் வரம்பின்றி வேண்டியவாறு நூல்செய்தல் விலக்கின்றுவான் செல்லும்; செல்லவே எழுசீராகிய முடுகியலடியாலும், எத்துணையும் நீண்டதோர் வஞ்சிப்பாட்டானும் பிறவும் வேண்டியவாறுஞ் சூத்திரஞ் செய்தலும், ஒருவன் பெயரினை அவ்வச் சூத்திரச் செய்யுளுட் [5] சார்த்துவகையாற் பெய்து கூறலும், உணர்த்தப்படும் பொருளினை முதனூலுட் கிடந்தவாறுபோலாது மரபுநிலை திரியச்செய்தலும், நால்வகை யாப்பொடு மாறுபடச் செய்தலும், வேண்டியவர் வேண்டியவாற்ருற் சில பொருள்களை வேறு தோற்றிக்கொண்டு நூல்செய்தலும் விலக்கின்ருகல் படுமென்பது.

---

1. இதுவும்—நூலும்.

2. கூறினன்—பெயர்.

3. கட்டுரை—வாக்கியம்.

4. "அரங்கின்றி வட்டாடியற்றே" என்ற குறள் குக.

நோக்

5. சார்த்துவகையாற் கூறல் என்பது, முன் குற்றத்து (கசூரு) "வரிவளைப் பணைத்தோண் மடநல்லோயே" என்றாற் போல இயைபில்லன கூறல் என்று இவரே கூறலின் அதனைக் குறித்ததுபோலும்.

பியல்]

# பொருளதிகாரம்

எருகூ

இனி, உத்திவகையும் அவ்வாறே இன்றியமையாதனவெனப் படும். என்னை? உணர்த்தப்படும் பொருள் இதுவென்று அறிவித்தலும், எழுத்துச் சொற்பொருளெனப் பகுத்துக்கொண்டு அதிகாரஞ் செய்தலும், உணர்வு புலங்கொள்ளுமாற்றால் தொகுத்துக்காட்டலும், மற்றவற்றை வகுத்துக்காட்டியவழிப் பயமில கூறலென்று கருதாமல் அதுதன்னோர்பயம்படச் செய்தலும், முதனூலாயினவெல்லாம் நூற்பொருளுணர்தற்குக் கருவியுஞ் சூத்திரச் சுருக்கத்துக்கேதுவாகலும் உடைமையின் அவையும் வேண்டப்பட்டனவென்பது.

இனி, அவற்றை இத்துணையென வரையறுக்கால் எத்துணையும் பலவாகி இகந்தோடுதலும், வழிநூல் முதனூல்வழித் தன்றாகலும்படும். முப்பத்துமூன்றெழுத்தென்றாயினும் அப்பெற்றித்தன்றி [1] அறுபத்தாறாகக் கொள்ளவைத்தானென்று உத்தி கூறலும் உடம்படுவானாதல் செல்லுமென மறுக்க.

இனி, 'நுனித்தகு புலவர் கூறிய நூல்' என்றதனானே, பாயிரச்செய்யுளுஞ் சூத்திரச்செய்யுளும் ஆசிரியப்பாவும் வெண்பாவும் பெற்றுவருதலும் அவ்விருபாவும் பெற்றுவருதலும், பாட்டுப்போல எல்லாவுறுப்பும் பெறுதற்குச் செல்லாவென்பதூஉம், மாத்திரை முதலாகப் பாவீறாகவந்த பதினொன்றும் வண்ணங்களுள் ஏற்பனவும் கொள்ளினுங் கொள்ளுமெனவும் யாப்புறுப்புக் கொள்ளுங்கால் ஈண்டோதிய மரபுங் கொள்ளப்படுமெனவுங் கொள்க. உரைக்குங் காண்டிகைக்கும் இவற்றுள்ளும் ஏற்பன அறிந்துகொள்க.

இன்னும் 'நுனித்தகு புலவர்' என்றதனானே [2] தந்திரமும் சூத்திரமும் விருத்தியுமென மூன்றும் ஒருவரேயன்றி ஒன்று ஒருவர் செய்தலும், இரண்டு செய்தலும் பெறப்படுமென்றலும், ஒருசாலை மாணாக்கரும் தம்மாசிரியரும் தம்மிடை நூல்கேட்ட மாணாக்கரும் பாயிரஞ்செய்யப் பெறுபவென்றலும், பொதுப்பாயிரமும் சிறப்புப்பாயிரமுமென அப்பாயிரந்தாம்

---

1. அறுபத்தாறு—ஒலிவடிவு 33; வரிவடிவு 33;—ஆக 66 என்பது கருத்துப்போலும்.

2. தந்திரம்—நூல். "தந்திரம் சூத்திரம் விருத்தி மூன்றற்கும் — முந்துநூ லில்லது முதனூ லாகும்" என்பது சூத்திரம் (இறையனார் களவியல் க-ம் சூத்திர உரை).

இரண்டாமென்றலும், ஈவோன்றன்மையும் ஈதலியற்கையும் கொள்வோன்றன்மையும் கோடன்மரபு மென்ற நான்குறுப் புடையது பொதுப்பாயிரமென்றலும், அதன்வழியே கூறப்படுஞ் சிறப்புப்பாயிரந்தான் எட்டிலக்கணமுடைத்தென்றலும், அவை ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும் யாப்பும் நுதலியபொருளும் கேட்போரும் பயனுமெனப்படுமென்றலும், அவைதாம் நூற்கின்றியமையாவெனக் கொள்ளப்படுதலுங் கூறி முடிக்க.

சிறப்புப்பாயிரத்தானே நூலிலக்கணம் ஒருவகையான் உணரப்படும்; பொதுப்பாயிரத்தானே ஆசிரியரும் மாணுக்கரும் நூலுரைத்தலும் நூல்கேட்டலும் மாசறவறிந்து உரை நடாத்துவாராக. அதனானே இவை நான்முகத்தினின்று நிலாவுமென்பது.

" துண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று." (குறள் சூoள)

" ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனடி
பல்காற் பரவுது மெழுத்தொடு
சொல்கா மருபொருட் டொகைநிகழ்
பொருட்டே."

மரபியன் முற்றிற்று.

பொருளதிகார முற்றிற்று.

தொல்காப்பிய முற்றிற்று.



# சூத்திரமுதற்குறிப்பகராதி

எண் — பக்க எண்

### ஆ



### இ

## அ

அவையடக்கு-அவையை வாழ்த்தியடக்குதல் 442
அழுங்கல்-தவிர்தல் 61
அழுவம்-காடு 593
அள்ளல்-சேறு 130
அளபெடை-அளபெடுப்பது 213
அளவியல் - அளவிலக்கணம், பாவின் வரையறை 201
அளியர்-அளிக்கத்தக்கார்; இரங்கத்தக்கார் 17
அளை-புற்று 348
அளைஇ-அளவி; கலந்து 455
அற்றம் - இரகசியத்தானம்; சோர்வு 41
அறல் - கருமணல்; அற்றுச் சேறல்; நீர் 630
அறவை-அறமுடைய 466
அறை-பாறை 576
அறைதல்-துணித்தல் 530
அன்றில்-ஒரு பறவை 58
அனு-ஒத்த எழுத்து 391
ஹம்சன்-இவன் மோட்சத்தையே விரும்பி விரதங்களையநுட்டித்து மரத்தினடியிலாயினும் குகையிலாயினும் வசிப்பான்; ஏகதண்டம், கந்தை, கௌபீனம், கமண்டலந்தரிப்பவன். தேவபேதமின்றி பிரமத் தியானஞ் செய்பவன். 662



ஆகம்-மார்பு 579
ஆங்கு-அசைநிலையாய் வரும் ஓரிடைச்சொல் 476
ஆடல்-கூத்தாடல் 485
ஆடாவடகு - விளையாட்டு;
ஆரம்-முத்துவடம் 367; சந்தனம் 68
ஆரியம்-வடமொழி 569
ஆலி-நீர்த்துளி 175
ஆழி-சக்கரம் 495
ஆள்வினை-முயற்சி 480
ஆன்-பசு 20
ஆனந்தம்-ஒருகுற்றம் 184, 723 மரணம் 569
ஆனாமை-நீங்காமை 260
ஆனிழற் கடவுள்-சிவன் 490



இகந்துபடல்-அளவிற் கடத்தல் 325
இருத்தல்-வளைத்தல்; தாழ்த்தல் 36; நீங்கல் 456
இசை-ஓசை 236
இசைமை-புகழ் 24
இடங்கர்-முதலைச் சாதியிலொன்று 649
இடும்பை-துன்பம் 526
இணைநூல்-தம்மோடொருங்கு கற்றோர் செய்தநூல் 212
இதணம்-பரண் 426
இமிர்தல்-மொய்த்தல் 474
இமிழ்தல்-ஒலித்தல் 492
இயம்-வாச்சியம் 517
இயலசை-இயல்பாக நடக்கும் அசை 227
இயலல்-செல்லல் 120
இயவு-வழி 672
இயைபு-ஒருதொடை 404
இரட்டும்-ஒலிக்கும் 372
இரலை-மான் 646
இரியல் - புறங்கொடுத்தல்; ஓடல் 656
இரும்-இருமல் 17

22 அரும்பத முதலியவற்றின் அகராதி

26

அரும்பத முதலியவற்றின் அகராதி

**தூ**

**தூ**க்கு-பாக்களைத் துணித்து நிறுப்பது 201
தூங்கல்-தூங்குதல் 376
தூணி-அம்புக்கூடு 175
தூம்பு-துளை 73

**தெ**

**தெ**விட்டல்-நிறைதல் 719
தெருமரல்-சுழற்சி 420
தெருள்-தெளிவு 526
தெளித்தல்-சத்தியஞ்செய்து தெளிவித்தல் 475
தெறித்தல்-துள்ளல் 430, 630

**தே**

**தே**ரல்தேர்-பேய்த்தேர், கானல் 476
தேவபாணி-கடவுள் வாழ்த்துச் செய்யுள் 458, 491
தேறுதல்-தெளிதல் 525

**தை**

**தை**இ-செய்து 521, 551
தைவரல்-தடவல் 580

**தொ**

**தொ**டை-தொடுக்கப்படுஞ் செய்யுளுறுப்பு, மாலை 206, 426
தொண்டு-ஒன்பது 423
தொய்யில்-மகளிர் முலையிலும் தோளிலும் எழுதுங்கோலம் 521
தொழுனை-ஓராறு 29

**தோ**

**தோ**ரிய மகளிர்-பிற்கூறுபாடுவோர் 712
தோற்றுவாய்-தொடக்கம் 471

நயத்தல்-விரும்பல் 163
நரந்தம்-நாரத்தை, கத்தூரி 357
நலம்-இன்பம் 430
நலிதல்-வருத்துதல் 475
நலிபு-ஆயுதம் 606
நவ்வி-மானுள் ஒருசாதி 630
நவிலல்-பயிறல் 12, 470
நனவு-விழிப்பு 536

**நா**

**நா**கம்-பாம்பு 491
நாஞ்சில்-கலப்பை 667
நாட்டல்-நிறுத்தல், யாத்தல் 183
நாய்கன்-மீகாமன் 147
நாவல்-ஒருமரம் 369, 492
நாவாய்-தோணி 363
நாறல்-மணத்தல் 158
நான்மாடக்கூடல்-மதுரை 454

**நி**

**நி**ணம் 27
நிம்புரி-பொருமை 80
நிமித்தம்-காரணம் 756
நியிர்தல்-உயர்தல் 506
நிரணிறை-முறைநிறுத்தல் 179
நிலை-இயல்பு, தன்மை 43
நிவத்தல்-உயர்தல் 252

**நு**

**நு**கும்பு-இளங்குருத்து 973
நுசுப்பு-இடை 129
நுதல்-நெற்றி 34
நுதலுதல்-கருதுதல் 518
நுவ்வை-நுமது தங்கை 623

**நெ**

## அரும்பத முதலியவற்றின் அகராதி

அரும்பத முதலியவற்றின் அகராதி

## வீ

வெஃகாமை-விரும்பாமை

வெகுளி-கோபம்

வெண்மீன்-வெள்ளி

வெரிந்-முதுகு

வெரூஉதும்-அஞ்சுதும்

வெருவரல்-அஞ்சுதல்

வெருகு-பூனையுள் ஒருசாதி

வெளில்-தறி